கவிச் சக்கரவர்த்தி

சயங்கொண்டார் பாடிய

# கலிங்கத்துப் பரணி

மூலமும்




...டச் செய்யுட் கோவை, தமிழைப் பிழையின்றி யெழுதும் முறை,
...இலக்கணம், சங்க காலத்துப் புலவர்கள், மணிமேகலை சரிதை,
சீவகன் சரிதை, கர்ணன் சரிதை, அரிச்சந்திரன் சரிதை,
...று பெண்மணிகள் சரிதை, மூன்று பால பக்தர்கள் சரிதை,
நந்தனார் சரிதை, மாணவர் தமிழ் வாசகங்கள் முதலிய
பற்பல நூல்களின் ஆசிரியரும்

சென்னைப் பச்சையப்பன் உயர்தரக் கல்விச்சாலை
முன்னைத் தலைமைத் தமிழ்ப் புலவருமாகிய

## ஆ. வீ. கன்னைய நாயுடு

இயற்றிய உரையும்.



சென்னை,

சூளை - ஸ்ரீ பாரதி அச்சகம்.



மன்மத௵ - ஆவணி௴

௧௯௫௫.

விலை ரூபா ௫.

ஸ்ரீ

# முகவுரை

•••○○○•••

## சடகோபர் துதி

குறள் வெண்பா

ஆழ்வா ரடியிணையை யன்போ டகத்திருத்தி
வாழ்வார் வினைமாயு மால்.

பரணிகள் எல்லாவற்றுள்ளும் கலிங்கத்துப் பரணியே முதன்மை பெற்று விளங்குவ தென்பதைத் தமிழ்ப் புலவர் யாவரும் நன்கறிவர். நான் இந்நூலைப் பயிலத் தொடங்கியபோது இதற்கோர் உரை யியற்றல் நலமெனக் கருதினேன். ஆரம்பப் பாடசாலைகட்கும், உயர்தரப் பாடசாலைகட்கும் நான் பல நூல்களை எழுத நேர்ந்தமையால், இந்நூலுக்கு உரையெழுத வியலவில்லை. பின்னர், இத்தொழிலை முடிக்கக் கருதி என்னிடமுள்ள கலிங்கத்துப் பரணியின் பழைய பதிப்பு ஒன்றைப் பல முறை படித்து அவ்வவ் விடங்களில் எனக்குத் தோன்றிய எழுத்துப் பிழைகளை ஒருவாறு திருத்திக்கொண்டேன்.

அதன் பின்பு திரு. அ. கோபாலையரவர்கள் பதிப்பித்த நூலையும் திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், B. A., அவர்கள் பதிப்பித்த நூலையும் ஒப்பு நோக்கியபின், சென்னை அரசாங்கத்துப் புத்தகச் சாலை (Oriental Library) க்குச் சென்றேன். அங்கே பழைய ஏட்டுப் பிரதி ஒன்றும் கையெழுத்துப் பிரதி ஒன்றும் இருந்தன. அவைகளில் திரு. சாஸ்திரியார் அவர்கள் பதிப்புப் பெரும்பாலும் ஏட்டுப்பிரதியையும், திரு. ஐயரவர்கள் பதிப்புப் பெரும்பாலும் கையெழுத்துப் பிரதியையும் ஒத்திருந்தன. ஏட்டுப் பிரதியைவிடக் கையெழுத்துப் பிரதியே பெரிதும் திருத்தமுற்றிருந்தது. கையெழுத்துப் பிரதியில் வேறு சில செய்யுட்களும் காணப்பட்டன. அவை திருத்த முடியா வண்ணம் எழுத்துப் பிழைகள் மலிந்து சீருந் தளையுஞ் சிதைந்து கிடந்தமையால், அவைகளை விலக்கலானேன்.

சில செய்யுட்களுக்கு ஐயரவர்கள் பதிப்பித்த நூலில் கண்ட பாடம் மிகவும் பொருத்தமாய்த் தோன்றியது. அவர் பதிப்பிலும், ௧௯௨௨, ௧௯௨௮-ல் எஸ். எஸ். எல். ஸி. பாட புத்தகங்களில் வெளிவந்த கலிங்கத்துப் பரணியின் பகுதிகளிலுமுள்ள சிறந்த பாட பேதங்களை நான் இதில் தழுவியிருக்கிறேன்.

இவ்வுரை வரைவதற்குச் சென்னைப் பச்சையப்பன் உயர்தரப் பாடசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதராயிருந்து காலஞ்சென்ற வித்வான் பி. கிருஷ்ணசாமி முதலியார் அவர்கள் எஸ். எஸ். எல். ஸி. வகுப்

பிற்குப் பாடமாக வந்திருந்த இராச பாரம்பரியம், அவதாரம் என்னும் பகுதிகட்கு எழுதிய வுரையும், திரு. மு. இராகவையங்கார் அவர்கள் எழுதிய கலிங்கத்துப் பரணி யாராய்ச்சி, ஆராய்ச்சித் தொகுதி என்னு நூல்களும், ஐயரவர்கள் எழுதிய குறிப்புரையும் பேருதவியாயிருந்தன. காலஞ்சென்ற திரு. து. அ. கோபிநாத ராவ், M. A., அவர்கள் எழுதிய சோழவமிச சரித்திரமும், திரு. எல். ஸ்ரீநிவாச ஐயரவர்கள் எழுதிய முதற் குலோத்துங்கன் என்னு நூலும் இந் நூலிலுள்ள சோழர் வரலாறுகளை யெழுதப் பெரும் பயனளித்தன. இப் பெரியோர்கள் வரைந்து வைத்தவை யனைத்தும் என் தொழிலை மிகவும் எளிமையுறச் செய்தன. இதன் பொருட்டு நான் அவர்கள் மாட்டுப் பெரிதுங் கடமைப்பட்டுள்ளேன்.

இது நிற்க, என் வேண்டுகோளுக் கிசைந்து தமக்குரிய பஃறொழிலை விடுத்து இந்நூலின் முதற்பதிப்புக்கு முகவுரை எழுதி வழங்கிய திரு. ச. த. சற்குணர், B. A., அவர்கட்கும், மதிப்புரைகளை நல்கிய ஏனைய தமிழ்ப் பேரறிஞர்கட்கும் என் மனமார்ந்த வந்தனஞ் செலுத்துகிறேன்.

இவ்விரண்டாம் பதிப்பில் ஆங்காங்குச் சில விஷயங்களைத் திருத்திப் பலவற்றைச் சேர்த்திருத்தலன்றி, இராசபாரம்பரியத்திலும் மற்றுஞ் சில விடங்களிலுமுள்ள சோழ வேந்தர் வரலாறுகளைக் காலக் குறிப்புடன் விரிவாய் வரைந்திருக்கிறேன். இவற்றிற்குப் பேருதவியாய் இருந்தவை திருவாளர். ராபர்ட் சீவல் (Mr. Robert Sewell) அவர்கள் திரட்டி எழுதிய தென்னிந்தியா கல்வெட்டுச் சரித்திரங்கள் (The Historical Inscriptions of Southern India) என்னும் நூலும், கும்பகோணம் வாணாதுறை உயர்தரப் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதிய முதற் குலோத்துங்க சோழன் என்னும் நூலுமாம். இப் பெரியார்களுக்கும் என் வணக்கம் உரித்தாகுக. ஆயினும், கரிகாற் சோழனுக்கு முன்னுள்ளோர் காலம் விளங்கவில்லை.

இப்பதிப்பில் கலிங்கத்துப் பரணி நூலாராய்ச்சி, பலவகை அணிகள், ஒன்பது வகைச் சுவைகள், பல புறப்பொருள் துறைகள், பல பாட பேதங்கள், அரும்பத அகராதி முதலியன புதியனவாய்ச் சேர்க்கப்பட்டுள்ளன. இது நிற்க, பிரம்பூர் ராவ்பகதூர் C. C. C. உயர்தரப் பாடசாலைத் தலைமைத் தமிழ்ப் புலவராகிய திருவாளர். வே. த. அர்ச்சுன முதலியார் அவர்கள் இவ்வரிய நூலில் இதன் உரையாசிரியர் வரலாறு இருத்தல் மிகவும் இன்றியமையாததென என்னிடம் வற்புறுத்திக் கூறி, அதனை அவ்வாறே எழுதித் தந்ததன்றி, முந்திய பதிப்பைப் போலவே இப்பதிப்பின் அச்சுத் தாள்களையும் திருத்தி யருளினர். சென்னைக் கோவிந்தப்ப நாய்க்கர் பாடசாலைத் தமிழ்ப் புலவர் வித்வான் திரு. வே. இராமசாமி நாயகர் அவர்களும் இப்பதிப்பின் தாள்களைத் திருத்திப் பேருதவி புரிந்தருளினர். எனதாருயிர்த் தோழர்களாகிய இவ்விருவர்கட்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இது நிற்க, தமிழ் மொழியை வளர்ப்பதில் பேராவலும் கண்ணுங் கருத்துமுடையவராகிய சென்னைக் கிறிஸ்தவக் கல்விக் கழகத்தார் (The Madras Christian Literature Society) இந்நூல் முதற் பதிப்பின் உரையைப் பாராட்டி ரூபா கூரு பரிசு வழங்கினார்கள். அக்கழகத்தினர் புரிந்த பேருதவி ஒருபோதும் மறக்கற்பாற்றன்று. அவர்கட்கும் என் நன்றியறிதலை மிக்க பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலையும் இதன் உரையையும் நன்கு மதித்துச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் மிக்க விரைவில் இதனை வித்துவான் பரீட்சைக்குப் பாடமாக வமைத்தமைக்காய் அவர்கட்கும் என் அன்பு மிகுந்த வந்தனம் செலுத்துகின்றேன்.

இவ்விரண்டாம் பதிப்பிலும் பலவற்றை வரையவும் அச்சுத் தாள்களைத் திருத்தவும் இதனைப் பதிப்பிக்கவும் சென்னை நகராண்மைக் கழகப் பாடசாலை ஆசிரியனாகிய என் புதல்வன் திரு. ஆ. க. பாஷியம் நாயுடு எடுத்துக்கொண்ட முயற்சியும் பாராட்டத்தக்கதே.

இந் நூலுக்கு முதன் முதல் வெளிவந்த வுரை யிதுவே யாதலால், இதில் எனதறியாமையாலும் மறதியின் காரணமாகவும் சிற்சில தவறுகள் நேர்ந்திருக்கலாம். அவற்றை உலகம் பொறுக்குமாறு வேண்டுகிறேன்.

"எழுத்தின் றிறனறிந்தோ வின்சொற் பொருளின்
அழுத்தந் தனிலொன் றறிந்தோ—முழுத்தும்
பழுதற்ற முத்தமிழின் பாடற் குரையின்
றெழுதத் துணிவதே யான்" [சிலப் - உரைப்பாயிரம்]

"ஓரா தெழுதினே னேருரையை யொண்பொருளை
ஆராய்ந்து கொள்வ தறிவுடைமை—சீராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்" [வீரசோ - அந்தச் சிறப்பு]

ஆ. வீ. க.



# நான்காம் பதிப்பு

"பரணி இல்லம்"
60-A, ஸ்ட்ராஹான்ஸ் ரோட்,
சென்னை - 12.

என் தந்தையாரும் முதன் முதல் உரை கண்டவருமான திருவாளர். ஆ. வீ. கன்னைய நாயுடு அவர்கள் இயற்றிய கலிங்கத்துப் பரணி நூல் நான்காம் பதிப்பாக வெளிவருவதற்கு ஊக்கமூட்டிய தமிழகத்திற்கு என் உளமார்ந்த நன்றி உரித்தாகுக.

நான் ஒருவாறு தமிழ்ப்புலமை வாய்ந்தமைக்கும், புதிய நூல்களை அச்சிடுங்கால் அவற்றிலுள்ள பிழைகளைத் (Proof Reading) திருத்தப் பயின்றமைக்கும் என் தந்தையாரே காரணமாவர். இப் பதிப்பில் எல்லாத் தாழிசைகளுக்கும் தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன.

இந்நூலைப் பதிப்பிக்குங்கால், எனக்குச் சிறிதும் கவலையுண்டாகாத படி மிகக் கவனமாயிருந்து பிரதிகளை ஒப்புநோக்கியும், பிழை திருத்தியும், முதல் மூன்று பதிப்புக்களிலும் இல்லாத மேற்கோள்களைப் பிற நூல்களினின்று இடங் கண்டு தேடியெடுத்தும் உதவிபுரிந்த என் இளைய சகோதரனும், சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறையிலுள்ளவனுமான ஆ. க. பார்த்தசாரதி நாயுடு, M.A., எடுத்துக்கொண்ட முயற்சியும் பாராட்டத்தக்கதே.

இந்நூலின் முதல் மூன்று பதிப்புக்களைப்பற்றிய மற்றச் செய்திகளை அப் புத்தகங்களிலுள்ள முகவுரைகளால் அறிந்துகொள்ளலாம்.

தமிழன்பர்கள் இப் பதிப்பினையும், இதனையடுத்து விரைவில் வெளியிடவிருக்கும் ஏனைய நூல்களையும் வாங்கிப் போற்றி ஊக்கமளிப்பார்களாக.

இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த சூளை - ஸ்ரீ பாரதி அச்சகத்தாருக்கு என் அன்பு கலந்த நன்றி.

ஆ. க. பாஷியம் நாயுடு.

# தமிழ்ப் பேரறிஞர் மதிப்புரைகள்.

*சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரி முன்னாள் தமிழ் விரிவுரையாளர்*

**திரு. ச. த. சற்குணர், B.A., அவர்கள் முன்னுரை.**

கிறிஸ்தவக் கல்லூரிப் பேராசிரியர் நிலயம்.
*தாம்பரம்*, 25—1—1941.

அறிவு ஊட்டுவன, ஆற்றல் ஊட்டுவன என நூல்கள் இரு திறத்தன என்றும், அவற்றுள் ஆற்றல் ஊட்டுவனவே இலக்கியம் ஆகும் என்றும், ஜேர்மன் நாடு தன் ஆற்றலை இழந்து தாழ்வுற்றிருந்த காலத்தில் தன் பழைய இலக்கியங்களை ஓதியே ஆற்றல் பெற்று உயர்வுற்றது என்றும் பெரியார் பலர் கூறியுள்ளார்.

அதனால், நல் இலக்கியங்களும் ஆற்றலும் பெற்று ஒரு காலத்தில் உயர்வுற்றிருந்த ஒரு நாடு அவ்வாற்றலை இழந்து இழிவுற்றிருக்குமாயின், அது தன் பண்டை இலக்கியங்களை ஓதியே திரும்ப ஆற்றல் பெற்று உயர்வடையக்கூடும் என்பது பெறப்படும்.

அன்றியும், இக்காலத்திற் சிறந்தனவாகச் சொல்லப்படும் நாடுகள் எல்லாம் தோன்றுவதற்கு முன் பல துறைகளிலும் தனிச் சிறப்புற்றிருந்து, நாளடைவில் தன் ஆற்றலை இழந்து, இந் நாள் அந் நாடுகள் அனைத்திலும் தாழ்வுற்றிருக்கும் நம் நாடு தன் பண்டை இலக்கியங்களை நன்கு கற்றாலன்றித் திரும்பப் புதியதொரு நல்லாற்றல் உற்று உயர்வடையாது என்பது வெளிப்படை.

ஆகையால், நம் பழைய இலக்கியங்களை நாம் பெறுதற்கும், அவற்றை நாம் எளிதில் நன்கு கற்றற்கும் துணை செய்வார் எவரும் நம் நாடு முன்னேற்றம் உறுதற்குத் துணை செய்தாரே ஆவர். இது நிற்க,

ஆற்றலும் பல திறப்படும். அவற்றுள், நம் நாட்டை விரைவிற் பெற்று நாமே அதனைக் காக்கவும் ஆளவும் ஆக்கவும் விரும்பும் நமக்கு இந்நாள் பெரிதும் வேண்டுவது வீரம் என்னும் ஆற்றலே. இவ்வீரமே விதந்து 'புறம்' என்னப்படும். 'தன் உவாத்தி சொல்லால் புறங் கட்டப்பட்டுத் தன் சினந் தணிந்து' என்னும் சிந்தாமணியும் (1090) வீரத்தையே புறம் என்றது. அதனால், நமக்கு இக்காலத்தில் மற்ற எல்லாத் தமிழ் நூல்களிலும் பெரிதும் வேண்டுவன புறப்பொருள் பயின்ற பாடல்களும், நூற் பகுதிகளும், நூல்களுமேயாம். 'பரணி' என்பது புறப்பொருள் பயின்றதொரு நூல்வகை.

தன் கை, கொம்பு, முன்கால், பின்கால், வால் என்னும் ஐந்தாலும் போரிற் கொல்ல வல்ல களிறு ஒன்றனைக் களத்தில் எறிந்து பெயர்வோனே மிக்க வீரன் என நம் முன்னோர் மதித்தனராயின், ஆயிரம் களிறுகளைப் போரில் எறிந்து போந்தான் ஒருவனது வீரத்தினை அவர் எவ்வளவு மதித்திருத்தல் வேண்டும்! அத்தகைய வீரன் ஒருவன்மேற் பாடிய நூலே பரணியாம்.

பரணிகள் தமிழிற் பல உள. ஆயினும், 'கலிங்கத்துப் பரணி' என்னும் இந்நூலே அவை எல்லாவற்றிலும் எல்லா வாற்றாலும் தலை சிறந்தது. 'பாம்பு அறியும் பாம்பின் கால்', பரணி பாடுவதன் அருமையினைத் தாமே பாடியுணர்ந்த புலவர் பெருமானாகிய ஒட்டக் கூத்தர் இதனைத் 'தெய்வப் பரணி' எனப் பாராட்டி யுள்ளாரெனின், இதன் அருமை பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ?

பண்டைத் தமிழ் மக்களது கூரிய அறிவின் பெருமையை உணர்த்தும் இந்நூலின் அமைப்பும், இதன் எளிய செவ்விய நடையும், இதன் பாடல்களின் இனிய ஓசை விகற்பங்களும், வீரச்சுவையோடு ஆங்காங்கு விரவி நிற்கும் நகை, அழுகை, இழிப்பு, வியப்பு, அச்சம், வெகுளி, உவகை என்னும் பிற சுவைகளும் எவர் மனத்தையும் கொள்ளை கொள்ளும் தன்மையன.

இவ்வளவு பெருமை வாய்ந்த இந்நூல் பல பதிப்புக்கள் பெற்றும் பெரிதும் பிழைகள் மலிந்திருந்த காரணத்தால் பயன்படாதாயிற்று. இதனை அறிந்து, பண்டிதர் ஸ்ரீ. அ. கோபாலையரவர்கள் பல திருத்தங்களுடனும், குறிப்புக்களுடனும் ஒரு பதிப்பு வெளியிட்டார்கள். பின்னர், ஸ்ரீ. மு. இராகவையங்காரவர்கள் வேறு பல திருத்தங்களும், அரிய பெரிய ஆராய்ச்சிக் குறிப்புக்களும் தமிழ் உலகிற்குத் தந்து உதவினார்கள். இப்போது பண்டிதர் திரு. கன்னைய நாயுடவர்கள் இந்நூற்குப் பதவுரை எழுதியருளினார்கள். இவர்களது தெளிவான உரை தமிழ் மக்கள் அனைவருக்கும் பேரிதும் பயன்படும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. இவர்கள் ஆற்றிய இத் தமிழ்த் தொண்டிற்கு மிக மகிழ்ந்து பெரிதும் நன்றி கூறுகின்றேன்.

கலிங்கத்துப் பரணியின் பல சுவைகளையும் இவ்வுரையின் வாயிலாகப் பருகி மகிழுமாறும், பயனுறுமாறும் தமிழ் மக்கள் அனைவரையும் வேண்டுதலும் செய்கின்றேன்.

தமிழ்த் தொண்டர் வாழ்க ! தமிழ் வாழ்க !

(கை—ஒப்பம்) ச. த. சற்குணர்.

---

*தமிழ்ப் பெரும் புலவர்*

**திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்**

* * * * சிற்சில பகுதிகளைப் படித்துப் பார்த்தேன். அவைகள் எனது நெஞ்சைக் கவர்ந்தன. திரு. நாயுடு அவர்களின் கலைப் புலமையும், உழைப்பும், ஆராய்ச்சியும், அடைவும், திறமும், சால்பும், இன்ன பிறவும் "கலிங்கத்துப் பரணிப்" பேருரையாக வெளிவந்தன என்று கூறல் மிகையாகாது. தமிழாசிரியர் கன்னைய நாயுடு அவர்களது பதவுரையும், விளக்கக் குறிப்பும், எளிய நடையும், பிறவும் பொதுவாக எல்லாருக்கும் சிறப்பாக மாணுக்கர்க்கும் பல வழியிலும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. * *

---

**ராவ்சாஹிப் S. வையாபுரிப் பிள்ளை, B.A., B.L. அவர்கள்**

Reader in Tamil, Madras University.

(28 - 1 - 41)

* * * * இப்பதிப்புப் பல வகையினும் திருப்தி யளிப்பதாகவே அமைந்திருக்கிறது. * * * சிறந்த பாடங்களைத் தேர்ந்தெடுத்து இப்பதிப்பில் ஆசிரியர் வெளியிட்டிருக்கிறர்கள். * * * இவை யனைத்தும் கற்போருக்கு மிகவும் பயன்படுமென்று எண்ணுகிறேன். * *

---

**மோசூர்-திரு. கந்தசாமி முதலியார் அவர்கள், B.A., M.R.A.S.**

(Supdt. of Dravidic Studies, Pachaiyappa's College Member, Board of Studies of the Madras Andhra Universities. Chairman of the Board of Studies in Tamil and Kannada (Andhra University).

(29-1-41)

**** பொருளின் தெளிவும், இலக்கணக் குறிப்பும், அரசர் வரலாறும், கதைச் சுருக்கமும், அளவான மேற்கோளும் பிறவும் கண்டு மகிழ்ச்சியில் திளைத்தேன். *** திரு. ஆ. வி. கன்னைய நாயுடு அவர்கள் எழுதிய உரை பல்கலைக் கழகத்து வித்துவான் பரீட்சைக்குப் படிப்பவர்களுக்கும், நூல்களைப் பார்க்கும் பயிற்சி விடாத உத்தியோகஸ்தர்களுக்கும் பயன்படும் என்பது என் கருத்து.

---

### திரு. ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள், B.A., B.L.

*தலைமைத் தமிழ் விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக் கழகம்.*

**** *பல்லாண்டு தமிழாசிரியராக இருந்து பழுத்த தமிழ்ப் புலமை வாய்ந்த* நாயுடு அவர்கள் இயற்றியுள்ள உரை மிகத் தெளிவாகவும், சுருக்கமாகவும் இருக்கின்றது. ஒவ்வொரு தாழிசைக்கும் கருத்துச் சுருக்கமும் வினைமுடிபும் தந்திருத்தல் நல்ல முறையாகும். அரிய சொற்களுக்கும் கருத்துக்களுக்கும் பல மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. சங்க நூல் முதலாக அண்மையில் எழுந்த சமய நூல்கள் ஈறாக எல்லா நூல்களிலிருந்தும் மேற்கோள் காட்டி யிருத்தலால் உரையாசிரியரது பரந்த இலக்கியப் பயிற்சி விளங்குகின்றது. இயன்ற அளவு வரலாற்றுக் குறிப்பும் கூறப்பட்டுள்ளது. கவி நலம் சான்ற கலிங்கத்துப் பரணியை அறிந்து இன்புறக் கருதும் தமிழ் மாணவர்க்குத் திருவாளர் கன்னைய நாயுடு அவர்கள் உரை பெரிதும் பயன்படும் என்று எண்ணுகின்றேன்.

---

### திரு. T. P. மீனுக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்கள், M.A., B.L., M.O.L.

Alderman, Corporation of Madras.

(22 - 1 - 1941.)

**** *தமிழில் வழங்கும் உயிருள்ள நூல்களில் கலிங்கத்துப் பரணியும் ஒன்று. வரலாற்று நூலாராய்ச்சிக்குப் பெரிதும் உதவுவது;* இலக்கியச் *சுவை ததும்புவது;* ஆனல், *பழையதொரு நூலாகலின் உரையை அவாவி நிற்கின்றது.* இதுவரை நடந்துள்ள ஆராய்ச்சியின் முடிபுகளை உட்கொண்டு இவ்வுரை விளங்குகிறது. ஆதலின், இவ்வுரையாசிரியர் தமிழ்க்குப் பெரியதொரு தொண்டே செய்துள்ளார். **

---

### திரு. வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர் அவர்கள்

(1 - 2 - 1941)

**** படிப்போர்க்கு நூற்பொருள் விளங்குமாறும், தாம் கூறும் பொருள் மேற்கோள்களையுடையதென்று தெரியுமாறும் மிகவும் உழைத்து அன்னர் உரை யெழுதியுள்ளா ரென்பது தெளிவாயிற்று. **

---

*சென்னைப் பச்சையப்பன் உயர் கலாசாலை*

*முன்னாள் தலைமைத் தமிழாசிரியர்*

### திரு. கா. ர. கோவிந்தராஜ முதலியார் அவர்கள்

(22 - 1 - 1941)

**** இதன் பதவுரையில் பாட்டிலுள்ள தொடர் மொழிகளின் பொருள், பிறழாதபடி பாட்டின் பொருள் நன்கு விளங்கும்படி எழுதப்பட்

டிருக்கிறது. விளக்க வுரையில் பாட்டின் நுண் பொருள்களும், இலக்கணங்களும், சரித்திரக் குறிப்புக்களும், பிறவும் மேற்கோள்களோடு விளக்கப்பட்டிருக்கின்றன. இவர் இந்நூலைப் பல்கால் முயன்று ஆராய்ந்து இவ்வுரையை எழுதினர் என்பதை நான் நன்கு அறிவேன்.

---

*சென்னைப் பச்சையப்பன் உயர் கலாசாலைத் தமிழாசிரியர்*

**வித்துவான் பண்டித ரா. நடேச நாயகர் அவர்கள்**

* * * * *சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, நான் தமிழ் இலக்கண இலக்கிய நூற்களைப் பயில ஆரம்பித்தபோது*, இவர்தாம் எனக்கு முதல் தமிழாசிரியராக அமைந்தார். * * * இந்நூலிலுள்ள ஒவ்வொரு தாழிசைக்கும் பதவுரையும், விளக்கவுரையும், இலக்கணக்குறிப்பும் ஒப்புமைப் பகுதிகளும் சிறப்பாக அமைந்துள்ளன. இவ்வுரையை ஆழ்ந்து நோக்குபவரின் மனதில், இவ்வுரையாசிரியரின் பல நூல் ஆராய்ச்சித் திறனும் இவ்வுரைக்காக இவர் மேற்கொண்ட பேருழைப்பும் தெற்றெனை விளங்கும். * *



# செய்தித் தாள்களின் மதிப்புரை

## தினமணி—22-10-'50.

கலிங்கத்துப் பரணி *என்பது "பரணிக்கோர் சயங்கொண்டான்" என்று போற்றப்படும் பெரும் புலவரால் இயற்றப்பட்ட ஒரு சிறந்த இலக்கிய நூலாகும். இதற்குச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராய் இருந்த* ஸ்ரீ. ஆ. வீ. கன்னைய நாயுடு *அவர்களால் பத உரையும் விளக்க உரையும் தரப்பட்டுள்ளன. மூன்றாம் பதிப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது.* பழைய பதிப்புக்களை ஆராய்ந்து சிறந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்து உரையாசிரியர் வெளியிட்டிருக்கிறார். பதவுரையில் பாட்டின் பொருள் விளங்கும்படி எழுதப் பட்டுள்ளது. விளக்கவுரையில் பாட்டிலுள்ள கருத்துக்களும் இலக்கணங்களும் சரித்திரக் குறிப்புக்களும் விளக்கப்பட்டிருக்கின்றன. தவிரவும், பிற நூல்களிலிருந்து ஒப்புமைப் பகுதிகளும் கொடுக்கப்பட்டுள்ளன. *நூலின் இறுதியில் அரும் பதம் முதலியவற்றின் அகராதியும், தாழிசை முதற்குறிப் பகராதியும் சேர்க்கப்பட்டுள்ளன.* கலிங்கத்துப் பரணியின் பல சுவைகளையும் அனுபவிப்பதற்கு இந்நூல் பெரிதும் பயன்படும். *தமிழ் மக்கள் யாவரும் இந்நூலை ஆதரிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.*

---

## சுதேச மித்திரன்—23-10-'50.

*பரணி பிற்காலத்தெழுந்த பலவகைப் பிரபந்தங்களுள் ஒன்று.* போர்க் *களத்தில் ஆயிரம் யானைகளை வென்ற தலைவன்மேற் பாடப்படுவது. பேய் கூற்றாகப் பாட்டுடைத் தலைவனுடைய பெருமையும், போர் நிகழ்ச்சிகளும் விரிவாக இதில் கூறப்படும். இத்தகைய நூல்கள் பல தமிழில் உள்ளன. அவற்றுள் தலைசிறந்தது ஜயங்கொண்டார் என்னும்* கவிஞர்பெருமான் *முதற் குலோத்துங்க சோழன் தன் சேனதிபதியான கருணாகரத் தொண்டமானை* ஏவிக் கலிங்க நாட்டை *வென்ற செய்தியை அமைத்துப் பாடிய* கலிங்கத்துப் பரணி *இலக்கியச் சுவையில் நிகரற்றது. சரித்திரச் செய்தியைப் பற்றியது.* தக்கயாகப் *பரணியை இயற்றிய* கவிச்சக்கரவர்த்தியாகிய *ஒட்டக்கூத்தராலே*

‘தென்றமிழ்த் தெய்வப் பரணி’ என்றும், ‘பாடற்கரும் பரணி’ ‘தேடற்கருங் கவிச்சக்கரவர்த்தி பரணி’ என்றும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இத்துணைப் பெருமை வாய்ந்த நூலை சென்னைப் பச்சையப்பன் உயர்தரப் பாடசாலை முன்னைத் தமிழ்ப்புலவர் ஆ. வீ. கன்னைய நாயுடு இயற்றிய உரையுடன் மூன்றாம் பதிப்பாக அவர்களுடைய புதல்வர்கள் வெளியிட்டிருப்பது போற்றற்குரியது. இதன் முதற்பதிப்பு 1941-ம் வருஷத்தில் வெளிவந்தது. இவ்வளவு சீக்கிரத்தில் ஒரு தமிழ் நூல் மூன்றாம் பதிப்பைப் பெற்றிருப்பதே அதன் பெருமைக்கு ஓர் அடையாளமாகும். உரை பதவுரை விசேட உரை சொல்லிலக்கண அணியிலக்கணக் குறிப்புகளோடும், சரித்திர ஆராய்ச்சிக்கு வேண்டும் குறிப்புகளோடும் அமைந்து தமிழ் கற்கும் மாணவர்க்கும் ஏனையோர்க்கும் பயன்படும் முறையில் அமைந்திருக்கிறது. தமிழன்பர்களுக்கும் ஆராய்ச்சியாளருக்கும் உதவக்கூடியவாறு அரும்பத முதலியவற்றின் அகராதி, செய்யுள் முதற்குறிப்பகராதி முதலியன சேர்க்கப்பட்டுள்ளன. * * * கலிங்கத்துப் பரணியின் அச்சுப் பிரதிகளே கிடைக்காத இச்சமயத்தில் தம் தந்தையார் அச்சிட்ட நூலை அவர் புதல்வர்கள் வெளியிட்டிருப்பதற்குத் தமிழ் நாடு நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

வி. மு. சுப்பிரமணிய ஐயர்.

---

## THE HINDU—7-1-‘51.

Parani is a Tamil minor Kavya and belongs to the Prabhanda type of literature. It depicts the heroic deeds of a hero in battle and generally goes by the name of the defeated land or war lord. The author is Kavicchakravarti Jayankondar, a court-poet of Kulothunga Chola I (1070—1118). In poetic diction, imaginative power in the choice of words to suit sense, in the similies handled later poets have taken Jayankondar as their model.

The theme of the poem is the conquest of Kalinga by the Chola Chieftain, Karunagara Thondaiman. **The book has been of immense value to the historians in their attempt to reconstruct the history of later Cholas which may be said to have attained a final stage only recently.**

The text in the present edition has been compared with various available materials and finally settled. **Simple and easy Padavurai has been written for each stanza and scholarly explanations for difficult terms and passages have been given.** A masterly analysis of the contents of the book has been done under 27 heads in the introduction. Though the commentaries are written in the classical style, giving parallel quotations, etc, **the book is also useful to students of history as much data for historical research is also furnished.**



# முதற்குலோத்துங்கன் வரலாறு

நாம் வாழும் இந்தியா தேசம் வட இந்தியா, தென்னிந்தியா வென்னும் இரண்டு பிரிவுகளையுடையது. இந்தியாவின் வடக்கிலுள்ள இமயமலை முதல் அதன் இடையிலுள்ள விந்தியமலை யளவும் வட இந்தியா வெனவும், விந்தியமலை முதல் தெற்கு முனையிலுள்ள கன்னியாகுமரி யளவும் தென்னிந்தியா வெனவும் அறிஞர் வகுத்திருக்கின்றனர். இவைகளில் தென்னிந்தியாவானது முற்காலத்தில் சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அக்காலத்தில் தென்னிந்தியாவின் மேற்கிலுள்ள மலையாளம், கொச்சி, திருவாங்கூர் முதலியன சேர நாட்டிலும்; தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, தென்னுற்காடு முதலியன சோழ நாட்டிலும்; மதுரை, கோயம்புத்தூர், இராமநாதபுரம் முதலியன பாண்டி நாட்டிலும் அடங்கியிருந்தன. இவைகளை ஆண்டுவந்த அரசர் முறையே சேர, சோழ, பாண்டியராவார். இவர்கள் முற்கூறிய தமிழ் நாடுகளை யாண்டு வந்தமையால், இவர்களைத் தமிழ் நாட்டு மூவேந்தர் எனவும் அறிஞர் வழங்கலாயினர். இம் மூவேந்தர்களும் தமிழ் மொழியைப் பெரிதும் வளர்த்துப் பெரும் புகழ் பெற்று விளங்கினர்.

**முதற் குலோத்துங்கன் பிறப்பும், திக்கு விசயமும்:**—இம் மூவேந்தர்களில் இங்குச் சோழர்களைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். பெரும் புகழ் பெற்று விளங்கிய சோழர்களில் இராசேந்திர சோழனும் ஒருவனுவான். அவன் வட நாடு சென்று அங்குள்ள பல வேந்தரை வென்று கங்கை நீரைத் தன்னுட்டிற்குக் கொணர்ந்தனன். அதனுல் அம்மன்னவனுக்குக் கங்கைகொண்ட சோழன் என்னும் பேர் உண்டாயிற்று. அவ்விறையவன் தன் புதல்வியாகிய அம்மங்கை தேவியைச் சளுக்கிய வேந்தனுகிய இராச ராசனுக்குக் கடிமண மியற்றியருளினுன். அவ்விருவரும் உயிரும் உடலும்போல் மிகவும் ஒற்றுமையாய் வாழ்ந்து வந்தனர். சில்லாண்டு சென்றபின், அம்மங்கை தேவி கி. பி. கO௪௩-ம், ஆண்டில் முதற் குலோத்துங்கனைப் பயந்தனள். அவன் தன் இளமையிலேயே கல்வியை நன்கு கற்றதன்றி, படைப்பயிற்சியிலும் சிறந்து விளங்கினுன். கங்கைகொண்ட சோழன் மைந்தர்களில் ஒருவனுகிய வீரராசேந்திரன் என்பவனுக்கு அதிராசேந்திரன் என்னும் புதல்வ னெருவனிருந்தான். அவன் வீரராசேந்திரன் பட்டத்து மனைவியின் மகனல்லன். அன்றியும், அவனுக்குப் போதிய அறிவும் ஆற்றலும் இல்லை. அதனுல், வீரராசேந்திரன் தன்னுடன் பிறந்தாள் புதல்வனுகிய முதற் குலோத்துங்கனை இளவரசனுக்கினுன். அவ்வரசிளங்குமரன் தக்க பருவம் எய்தியபின், திக்குவிசயஞ் செய்யக் கருதி மத்திய மாகாணத்திலுள்ள சக்கரக்கோட்ட மணுகினுன். அங்கே தாராவர்ஷன் என்னும் அரையனெருவன் செங்கோல் செலுத்தி வந்தான். முதற் குலோத்துங்கன் அவ்வேந்தனை எதிர்த்துக் கடும்போர் புரிந்தான். அப்போரில் முதற் குலோத்துங்கன் வெற்றி யெய்தினுன். இவன் கன்னிப்போர் இதுவேயாம்.

**முடி புனைதல்:**—அக் கோமகன் வடநாடு சென்றிருந்த காலை, வீரராசேந்திரன் உயிர் துறந்தான். உடனே அதிராசேந்திரன் ஆறம் விக்கிரமாதித்தன் என்னும் மன்னவன் உதவியால், சோழநாட்டு அரசாட்சியைக் கைப்பற்றினுன். ஆயினும் அவனுக்குப் போதிய திறமையின்மையால், அந்நாட்டில் குழப்பமுண்டாயிற்று. இச்செய்தி யனைத்தும் முதற்குலோத்துங்கன் செவிக் கெட்டின. உடனே அவன் சோணுட்டை யணுகி அதிராசேந்திரனை எதிர்த்துக் கொன்றனன். அந்நாட்டுக் குடிமக்களே அவனைக் கொன்றதாகவும் கூறுப. அதன் பின்னர் முதற் குலோத்துங்கன் கி. பி. கOஎO-ல், முடிபுனைந்து அரசு கட்டிலில் வீற்றிருந்து சோழநாட்டை யாட்சி புரியலானுன். அவன் வேறு பல வேந்தரை

யும் வென்று தன்னாணைக்குட்படுத்திக்கொண்டான். அவன் ஆட்சியில் சோழ நாடு மிகவும் செழிப்புற்று விளங்கினது. குடிமக்களனைவரும் பசி, பிணி, பகை முதலிய இன்னல்களின்றி, இனிது வாழ்ந்து வந்தனர்.

**கலிங்க வேந்தனைக் கொண்டு வருமாறு கூறல்** :—பின்பு முதற் குலோத்துங்கன் காவிரிக்கரை மருங்கு வேட்டையாடி முடித்துப் பாலாற்றங்கரையில் பரிவேட்டையாடக் கருதிப் புறப்பட்டான். இடைவழியில் அவ்விறையவன் சிதம்பரத்திலுள்ள நடராசப் பெருமானைத் தொழுது பல்வகை வளங்கள் கெழுமிய **கச்சிமாநகரை** நணுகினன். அங்கே அழகிய அரண்மனை ஒன்றிருந்தது. அவ்வரண்மனையில் தென்மேற்குத் திசையில் சித்திர மண்டபம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதிலுள்ள அழகிய அரியணையில் முதற் குலோத்துங்கன் வீற்றிருந்தான். தியாகவல்லி, ஏழிசைவல்லபி என்னும் அவன் மனைவியரிருவரும் அவனுக்கிருபுறத்தும் உட்கார்ந்திருந்தனர். கருணாகரத் தொண்டைமான், பல்லவ வேந்தன் முதலிய பலர் அக்குரிசிலைச் சூழ்ந்திருந்தனர். பாணர் பலர் பலவகை இனிய பண்களை இன்னிசைக் கருவிகளுடன் பாடினர். பின்னர்த் திருமந்திர ஓலையாள் அக்கொற்றவனைக் குறுகி, "கழற்கால் காவலரே, திறைப்பொருளைச் செலுத்தப் பஃறேயத்தரசர் வாயிற் புறத்தே வந்திருக்கின்றனர். தங்கள் கருத்தியாதோ?" என வினவினான். அவ்விறையவன் அவர்களனைவரையும் உள்ளே விடுமாறு உத்தரவளித்தான். உடனே வேந்தரனைவரும் உட்சென்று தத்தம் பகுதிப்பொருளைச் செலுத்தி அக்காவலன் கழலிணைகளை யிறைஞ்சினர். அதன் பின்னர் அப்பார்த்திபன், "திறைப் பொருளைச் செலுத்தாத வேந்தர் யாரேனு முளரோ?" என வினவினான். அதற்குத் திருமந்திர வோலையாள், "வெண்குடை வேந்தரே, எல்லா அரசர்களும் தத்தம் திறைப்பொருளைச் செலுத்தினர். ஆனால், கலிங்க வேந்தராகிய அனந்த பத்மன் என்பவர் மாத்திரம் தந்திறைப் பொருளை இருமுறை செலுத்தவில்லை" என விடை பகர்ந்தனன். உடனே முதற் குலோத்துங்கன் கடுஞ்சீற்ற மெய்தி, "இப்போதே நமது சேனைகள் சென்று கலிங்க நாட்டை யழித்து அம்மன்னவனையும் பற்றிக் கொணர்க" எனப் பணித்தனன். அதுகாலை, தானைத் தலைவனாகிய கருணாகரன் எழுந்து, "நெடுமுடி வேந்தரே, இத்தொழிலை யானே செய்து முடிப்பல்" என வியம்பி அம்மன்னவன்பால் விடை பெற்றுக்கொண்டு நால்வகைச் சேனைகளோடும் துணைத் தலைவர்களோடும், 'இரை வேட்ட பெரும்புலிபோல் இகன்மேல்' சென்றான்.

**எங்கராயன் கூற்று** :—பின்னர் அப்பெருஞ் சேனை வயவர் பல நதிகளைக் கடந்து சென்று கலிங்கம் புக்கு அங்குள்ள பதிகளுக்கு எரிமூட்டிக் குடிமக்களின் பொருள்களைச் சூறையிடலாயினர். அத்துன்பத்திற் காற்றாத குடிமக்கள் பலர் விரைந்தோடிச் சென்று இச்செய்தியனைத்தும் தங் காவலனுக் குணர்த்தினர். அப்போது அக்கொற்றவன், "நான் அபயனாகிய முதற்குலோத்துங்கனுக் கன்றி, அவன் தானைக்கும் எளியனோ? நமது கலிங்நாடு வலிய அரண்களை யுடைய தென்பதை அச்சேனை அறியாது போலும்; நன்று, பார்ப்போம்" எனப் பெருஞ் சீற்றத்துடன் நவின்றனன். உடனே அவன் அமைச்சர்களில் ஒருவனாகிய **எங்கராயன்** எழுந்து, "வெற்றிவேல் வேந்தரே, நான் சொல்வதைக் கேளுங்கள். முதற் குலோத்துங்க மன்னர் மிகவும் வலியவர். அவர், முன்பு பாண்டியர் ஐவரையும் வென்றதன்றி நவிலை, விழிஞம், அளத்தி முதலிய ஊர்களையும் தம்முடைய ஆட்சிக்குட்படுத்திக் கொண்டனர். இவ்வளவேயோ! அவர் வேறு பல வேந்தர்களையும் வென்று வெற்றிமாலை புனைந்திருக்கின்றார். அவர் படைத் தலைவராகிய கருணாகரர் திருமாலின் சக்கரம் போன்றவர். திருமால் சக்கரம் அப்பெருமானுடைய பகைவர்களைத் தவறாமல் அழிக்கும்;

அதுபோல் கருணாகரரும் முதற்குலோத்துங்க வேந்தர் பகைவர்களை எளிதில் வெல்வார். அவரை எதிர்க்க எவராலும் இயலாது. இதுகாலை நீர் என்னைச் சீறினும், நாளை அச்சேனைகளை எதிர்த்து நிற்கும்போது என்னை நினைப்பீர்'' என்று கூறினன்.

**கருணாகரன் வாகை புனைதல்** :—அதற்கு அம்மன்னவன், "நீ என் திறமையறியாமல் இவ்வாறு கூறினாய்; இளஞ்சீயத்தை வலிய யானை வெல்லுமோ? எனக் கெதிர்மொழி யுரைக்க, இமையோரும் வெருவுவர்; இனி நீ இவ்வாறியம்பற்க'' எனக் கடிந்துரைத்து, உடனே போர் தொடங்குமாறு தன் படைத் தலைவர்கட்குப் பணித்தனன். பின்பு கலிங்கச் சேனைகள் பேராரவாரத்துடன் 'இரைபெறு புலிபோல்' போர்க்களம் அணுகின. இருதிறத்து வீரர்களும் பெரும்போருஞற்றினர். அப்போரில் அளவிறந்த மள்ளர்கள் உயிர் துறந்தனர். பல்லாயிரம் களிறுகளும் பரிகளும் வெட்டுண்டன. தேர்கள் பல உருளை வேறு, அச்சு வேறு, கொடிஞ்சி வேறாய்ச் சிதைந்தொழிந்தன. குருதிநீர் ஆறுபோல் பாய்ந்தோடினது. முடிவில் கலிங்கவீரர் தோற்றோடினர். கலிங்க வேந்தனாகிய அனந்த பத்மனும் ஓடியுய்ந்தனன். பின்பு கருணாகரன் கலிங்கநாட்டிலுள்ள பலவகைப் பொருள்களைக் கவர்ந்துகொண்டு தன்னாட்டையெய்தி முதற்குலோத்துங்க மன்னனை வணங்கினான். அவ்விறையவன் மட்டற்ற மகிழ்ச்சியுற்றுக் கருணாகரனுக்கும் படை வீரர்கட்கும் பலவகைப் பரிசுகளை வழங்கினான்.

**முதற்குலோத்துங்கன் மனைவியரும் மக்களும்** :—இவ்வேந்தனுக்குத் தியாகவல்லி, ஏழிசை வல்லபி என்னும் இருவரைத் தவிர, மதுராந்தகி என்பவளும் மனைவியாயிருந்தாள். மூத்த மனைவியாகிய மதுராந்தகியைப் பற்றிக் கலிங்கத்துப் பரணியில் யாதொன்றும் சொல்லப்படாமையால் அவள் கலிங்கப் போருக்கு முன்பே உயிர்துறந்திருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. இக்காவலனுக்கு எழு புதல்வர்களும் ஒரு புதல்வியும் இருந்தனர்.

**வேறு பெயர்கள்** :—விசயதரன், சயதுங்கன், சுங்கந் தவிர்த்தோன், இராசேந்திரன், இராச நாராயணன், விஷ்ணு வர்த்தனன், கரிகாலன், திருநீற்றுச் சோழன், விருதராச பயங்கரன், உலகுய்ய வந்தான், அநபாய சோழன் முதலியன.



# கருணாகரத் தொண்டைமான் வரலாறு.

கருணாகரத் தொண்டைமான் பல்லவர் மரபில் தோன்றிய சிறந்த வீரனாவான். இவன் தன்னிளமையிலேயே கல்வியை நன்கு பயின்றதன்றி, யானையேற்றம், குதிரையேற்றம், படைப்பயிற்சி முதலியவற்றிலும் வல்லவனானான். பின்பு இவன் முதற்குலோத்துங்க சோழன் அரசியல் ஊழியர்களில் ஒருவனாயமர்ந்து, நாளடைவில் அம்மன்னவனுக்கு அமைச்சர் தலைவனும் படைத்தலைவனுமாய்த் திகழ்ந்தனன். குலோத்துங்க மன்னன் உதவிப் படைத்தலைவர்களில் ஒருவனாகிய பல்லவ வேந்தன் இவனுக்குத் தமையனாம். கருணாகரன் தன் மன்னவன் கட்டளையின்படி கலிங்க நாட்டின்மேல் படையெடுத்துச் சென்று கலிங்க வேந்தனை வென்று வாகை மிலைந்தனன். பின்பு இவன் அந்நாட்டிலுள்ள பல்வகைப் பொருள்களைக் கவர்ந்து அபயன் அடியிணையை வணங்கினான். சயங்கொண்டார் என்னும் புலவர் கலிங்கத்துப் பரணியைப் பாடுதற்கு இவன் எய்திய கலிங்க வெற்றியே காரணமெனல் மிகையாகாது. அப்புலவர் இந்நூலையியற்றியதால், அக்கொற்றவன் புகழ், 'குன்றிலிட்ட விளக்கைப்போல்' முன்னையினும் பன்மடங்கு சிறந்து விளங்கலாயிற்று. கருணாகரன் வண்டை, தொண்டை என்னும் ஊர்களை ஆட்சி புரிந்த சிற்றரசனாவான். இவனைப்பற்றிச் சயங்

கொண்டார் தாமியற்றிய கலிங்கத்துப் பரணியில், 'கலிங்கமெறிந்த கருணாகரன்' [தா - கூச] எனவும், 'உலகுபுகழ் கருணாகரன்' [தா - சசஙு] எனவும், 'பல்லவர் தோன்றலைப் பாடீர்' [தா - ௩௩ச] எனவும், 'கலிங்கப் பரணிநங் காவலன்மேல், சூட்டிய தோன்றல்' [தா - ௩௩ரு] எனவும் சிறப்பித்துப் பாடியுள்ளமை காண்க. விக்கிரம சோழன் உலாவில், 'மானவரச ரிரிய வடகலிங்கத், தானை துணித்த வதிகனும்' [விக்கிர-உலா-கஎக, எஉ] என இவனைப் பற்றிக் கூறியுள்ளமையால், இவன் முதற் குலோத்துங்கன் புதல்வனாகிய விக்கிரம சோழன் காலத்தும் இருந்தானெனத் தெரிகிறது. இக்கருணாகரனைப் பற்றி,

"பண்டையொர் நாளையி லோரேழ் கலிங்கப் பரணிகொண்டு
செண்டைய மேருவில் தீட்டுவித் தோன்கழற் செம்பியன்செய்
தொண்டைநன் னாடுபு ரக்கின்ற கோனந்தித் தோன்ற லெங்கள்
வண்டையர் கோனங் கருணா கரன்தொண்டை மண்டலமே"
[தொண்டைம - சத - சஉ]

எனத் தொண்டைமண்டலச் சதகத்தும்,

"அவிக்கா தரங்கூர் புனிதர் மகிழ்ந் தருள்வன் னியரை யாம்புகழச்
செவிக்கா ரமுத மெனக்கேட்டுச் சிந்தை யுவந்து சீர்தூக்கிப்
புவிக்கா யிரம்பொன் னிறைநீக்கிப் பொற்றண் டிகைப்பூ டணத்தோடும்
கவிக்காயிரம்பொன்பரிசளித்தான் கருணாகரத்தொண்டைவன்னியனே"
[சிலையெ - ௩அ]

எனச் சிலையெழுபதினும் கூறியுள்ளமையும் ஈண்டுக் கவனிக்கற்பாற்றும். முதற் குலோத்துங்கன் கி. பி. கoஎo-ம் ஆண்டு முடிபுனைந்து கி. பி. ககக அ-ம், ஆண்டு வரை ஆட்சி புரிந்து வந்தமையால், இவன் காலமும் சற்றேறக்குறைய அதுவே யாமென்பது, 'உள்ளங்கை நெல்லிக்கனிபோல்' தெற்றென விளங்கும்.



# நூலாசிரியர் வரலாறு.

சயங்கொண்டார் பிறப்பும் சமயமும்:—கலிங்கத்துப் பரணி யென்னும் இந்நூலுக்கு ஆசிரியர் சயங்கொண்டார் என்னும் புலவராவார். இவர் சோழ நாட்டில் நன்னிலத்தை யடுத்த தீபங்குடியில் தோன்றினர். இவர் தம் மிளமையி லேயே தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ந்தார். இவர் ஒருநாள் குலோத்துங்கனைக் காண விழைந்து அவன் அவைக்களம் அணுகினர். அப்போது அவ்வரையன் இவரை நோக்கி, 'நும்மூர் யாது?' என வினவினன். உடனே அவர்,

"செய்யும் வினையு மிருளுண் பதுவும்
தேனும் நறவு மூனுங் களவும்
பொய்யுங் கொலையு மறமுந் தவிரப்
பொய்தீ ரறநூல் செய்தார் தமதூர்
கையும் முகமு மிதழும் விழியும்
காலும் நிறமும் போலுங் கமலம்
கொய்யும் மடவார் கனிவா யுதரம்
கோபங் கமழுந் தீபங் குடியே" [தமிழ்நா - சரி]

எனச் செய்யுளால் விடையிறுத்தனர். அதனைக் கேட்ட அக்காவலன் இவர் கல்விப் பெருக்கைக் கண்டு வியந்து, இவரைத் தன் அவைக்களப் புலவராய்

அமர்த்திக்கொண்டான். இவர் கூறிய செய்யுளில் இரவிலுண்ணுமை, உயிர்க் கொலை புரியாமை முதலிய சமண சமயக்கோட்பாடுகளை நன்கு விளக்கியிருத்த லால், அப்போது இவர் சமணரா யிருந்தனரென்பது தெள்ளிதிற் புலனும். ஆனல், இவரியற்றிய கலிங்கத்துப் பரணியில் முதலில் சிவபெருமானையும், பின்னர்த் திருமால் முதலிய தேவர்களையும் வழிபட்டிருக்கின்றனர். இதனல், இவர் முதலில் சமணராயிருந்து குலோத்துங்க வேந்தனை யடைந்தபின், சைவராய் மாறியிருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது.

**கலிங்கத்துப் பரணியைப் பாடினமைக்குக் காரணம் :—**கலிங்கப்போர் நிகழ்ந்தபின், ஒருநாள் சயங்கொண்டாரும் குலோத்துங்க வேந்தனும் பேசிக் கொண்டிருந்தனர். அதுகாலை அவ்விறையவன், "செந்தமிழ்ப் புலவீர், கலிங்க நாட்டைச் சயங்கொண்டமையால் நானுந் தங்களைப்போல் சயங்கொண்டான் ஆயினேன்" என வேடிக்கையாய் விளம்பினன். அதனைச் செவியுற்ற அப் புலவர் அங்ஙனமாயின், 'சயங்கொண்டானைச் சயங்கொண்டான் பாடுதல் சாலத் தகவுடைத்தாம்' என வியம்பி, உடனே கலிங்கத்துப் பரணியை விரைந்து பாடி முடித்தன ரென்ப.

**இவர் பெற்ற பரிசு :—**இவர் கலிங்கத்துப் பரணியைப் பாடி முடித்தபின், முதற் குலோத்துங்க மன்னன் அவைக்களத்தில் அதனை அரங்கேற்றஞ் செய்யத் தொடங்கினர். அதுகாலை அவ்வேந்தன் அப் பாடல்களின் சொற்சுவை, பொருட்சுவைகளைக் கண்டு வியந்து, ஒவ்வோர் பாடலுக்கும் ஒவ்வோர் பொற் றேங்காயை உருட்டி இவரையும் இவர்தம் நூலையுஞ் சிறப்புறச் செய்தன னென்ப. இஃதெவ்வாருயினும், சயங்கொண்டாருக்கு அக்கொற்றவன் பெரும் பரிசு அளித்திருத்தல் வேண்டுமென்பதில் அணுவளவும் ஐயமின்ரும். கவிச் சக்கரவர்த்தி என்ற பட்டமும் முதற் குலோத்துங்கனல் இவருக்கு வழங்கப் பட்டது போலும்.

**இவரியற்றிய நூலின் சிறப்பு :—**பாணிகளில் முதன் முதல் தோன்றியது கலிங்கத்துப் பரணியேயாம். தக்கயாகப் பரணி, இரணியவதைப் பரணி, அஞ்ஞவதைப் பரணி முதலியன இந்நூலைப் பின்பற்றித் தோன்றியனவாம். இந்நூலில் பலவகை அணிகள், ஒன்பது வகைச் சுவைகள், பிற நூல்களில் காண்டற்கரிய புதிய கற்பனைகள், புறப்பொருள் துறைகள் முதலியவற்றை ஆங்காங்குக் காணலாம். ஒட்டக்கூத்தப் புலவர் தாம் பாடிய தக்கயாகப் பரணியில் 'தென் தமிழ்த் தெய்வப் பரணி' [தக்கயா - எஎசு] என இந்நூலைச் சிறப்பித்துப் பாடியிருக்கிரூர். அடியார்க்கு நல்லார் தாமியற்றிய சிலப்பதிகார உரையில் இந்நூலிலுள்ள சில செய்யுட்களை மேற்கோளாகக் கொண்டிருக் கின்ரூர். இம்மட்டோ! பிற்காலத்துப் பேரறிஞரும், 'பரணிக்கோர் சயங் கொண்டான்' என இவரையும் இவர்தம் நூலையும் பெரிதும் பாராட்டியிருக் கின்றனர். இங்குக் கூறியவற்ருல், இந்நூல் ஏனைய பரணி நூல்கள் எல்லா வற்றிலும் முதன்மைபெற்று விளங்குவதென்பது இனிது புலப்படும்.

**இவர் காலம் :—**கலிங்கத்துப் பரணியின் பாட்டுடைத் தலைவனுகிய முதற் குலோத்துங்கன் கி. பி. க0எ0 முதல் ககஉஅ வரை ஆட்சிபுரிந்து வந்தானெனத் தெரிகின்றமையால், இவர் காலமும் அதுவேயா மென்பது தெளிவாம்.



# உரையாசிரியர் வரலாறு.

வீடு பேற்றை யளிக்கு மிடங்க ளேழனுள் கடிமதில் சூழ் காஞ்சியம் பதியைத் தலைநகராகக் கொண்டது சான்றோருடைத் தென்னுந் தொண்டை நன்னாடு. அதன்கண் ணமைந்த வூர்கள் பலவற்றுள் பாலூற்றின் பல் வளங்கெழுமிக் கோட்டை வலத்ததாய் மிளிர்வது ஆரணி யென்பதோர் அணி நகரமாம். பல்லாண்டுகட்கு முன்னர், திரு. ஆ. வீராசாமி நாயுடு அவர்களும் அவர் முன்னோர்களும் அதனைத் தமதுறைவிடமாய்க் கொண்டு அங்கே வாழ்ந்து வந்தனர். இவர்கள் அந்நாட்டுக் குடிமக்களுள் நாயகடு வகுப்பில் பலிஜ குலத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் திருமாலைக் கனவிலும் மறவாதவர்கள்.

**ஊரும் பேற்றோரும்**

திரு. ஆ. வீராசாமி நாயுடு அவர்கள் தம்மிருமுதுகுரவர் கருத்துக் கேற்ப, தங்குலத்து வந்தவளும், கொண்கன் நினைப்பறிந்தொழுகுநீராளுமான மங்கையம்மாள் என்னு நல்லாளை மணந்து இல்லறத்தை நல்லறமாகப் பேணி வந்தனர். இவ்விருவரும் மனமொத்த அன்பினராய்த் தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தானென்னும் ஐம்புலத்தினுந் தங்கள் கடமையைப் பிழையின்றி யாற்றி வந்தனர்.

முற்கூறிய நாயுடு அவர்கள் வாணிபத்தின் பொருட்டுத் தம் மனைவியோடு சென்னையை யடைந்து சூளைப் பட்டாளம் மேட்டுத்தெருவில் குடியிருந்தனர். 'தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள், தந்தம் வினையான் வரும்' என்பதற் கேற்ப, அவர்கள் தம் செய்தவப் பேற்றால் ஆண் மக்கள் நால்வரையும் பெண் மக்களறுவரையும் பெற்றனர். அவர்களில் இளையவரும் இந்நூலின் உரையாசிரியருமாகிய திரு. ஆ. வீ. கன்னைய நாயுடு அவர்கள் சென்னை மாநகரில் சுபானு வாண்டு மாசித் திங்கள் இருபத்தொன்பதா நாள் (௧௮௮௪) கூடிய நல்லோரையில் பிறந்தார்கள்.

**பிறப்பு**

கல்வி கற்கும் பருவம் வந்ததும், இவர் பெற்றோர் இவரைப் பள்ளிக் கனுப்பினர். 'விளையும் பயிர் முளையில் தெரியும்' என்றபடி, இவர் தம்மிளமையிலேயே கல்வியை மிக்க ஆர்வத்துடன் கற்று வரலானார். இவ்வுரையாசிரியர் ௧௯௦௭-ம் ஆண்டில் திருமதி கோதையம்மாள் என்னும் அருமந்த நங்கையாரைத் திருமணம் புரிந்து புதல்வர் நால்வரையும் புதல்விக ளறுவரையும் பெற்றனர். இவர் ௧௮௯௯-ம், ஆண்டில் அக்காலத்து லோயர் செகண்டரி (Lower Secondary) படிப்பிலும், ௧௯௦௧ ம், ஆண்டில் ஆரம்ப ஆசிரியர் உயர்தரக் கல்வியிலும், (Elementary Higher Grade) தேர்ச்சி பெற்றனர். பின்பு இவர் மக்கள் வாழ்க்கைக் கின்றியமையாத எஸ். எஸ். எல். ஸி. (S. S. L. C.) வரை ஆங்கில அறிவை வளர்த்துக் கொண்டார். தாய் மொழியாகிய தெலுங்கை இவர் ஒருவாறு பயின்றதன்றி, அதன் மூலமொழியாகிய தண்டமி ழிலக்கண விலக்கியங்களை முறையே திரு. கா. ர. கோவிந்தராஜ முதலியார் அவர்களிடமும், சூளை, திரு. வேலு முதலியார் அவர்களிடமும் வேட்கையுள்ளத்தராய்க் கற்று வந்தனர். இவர் தம்மாசிரியர் பால் கற்றுணர்ந்த இலக்கண விலக்கிய நூல்கள் மிகச் சிலவேயாகும். ஆயினும், இவர் தமதரிய முயற்சியால் தொன்மை கண்ட தொல்காப்பியத்தோடு பல்வகை யிலக்கணங்களையும், பழமை கண்ட சங்க நூற்களோடு பல்வகை இலக்கியங் களையுங் கற்று அவைகளில் தெளிந்த அறிவைப் பெற்றார். அன்றியும், தம் மதத்திற்கேற்ப, வைணவ நூற்களையு மாய்ந்து அத்துறையிலும் பேரறி வெய்தினர்.

**கல்வி கற்றல்**

இவ்வுரையாசிரியர் தம் முன்னோர்களைப் போல் வளர் பொருளீட்டும் வாணிகத்தைச் செய்யாது மக்களின் அறியாமையை யொழிக்கும் அரிய தொழிலி லீடுபட்டு, ககூகஉ-ஆம், ஆண்டு சென்னையை யடுத்த பிரம்பையில் இருந்த சிறுவள்ளூர் ஆங்கிலோ வேர்னகுலர் பாடசாலையில் ஆசிரியராக அமர்ந்தார். பின்பு அப்பள்ளி C. R. C- ஆகவும், தற்போது ராவ்பகதூர் C. C. C. உயர் தரப் பாடசாலை ஆகவும் மாறிவிட்டது. அப்பள்ளியில் இவர் சுமார் எட்டாண்டுக ளளவும் தமிழ் ஆசிரியராயிருந்து பின்பு சென்னைப் பச்சையப்பன் உயர்தரப் பாடசாலைக்குத் தமிழாசிரியராய் ககூககூ-ம் ஆண்டில் சென்று, சிலகாலம் பொறுத்துத் தலைமைத் தமிழாசிரியரானார். இவர் அப்பள்ளியில் இருபத் திரண்டாண்டுகள் ஊக்கத்துடனுழைத்து அரும்பணிக ளாற்றினர். ககூசக-ம் ஆண்டு முதல் இவர் தமது ஆசிரியர் தொழிலிலிருந்து விலகி ஓய்வு பெற்றிருக் கின்றார். இவர் பாடங் கற்பிக்கு முறையில் சிறந்து விளங்கினமையால், இவரை விரும்பாத மாணவர்கள் இல்லை.

தொழிலாற்றித் தொண்டுபுரிதல்

இவர் தமிழன்னைக்குத் தொண்டாற்றி அவ்வன்னைக்குச் சாற்றிய விலக் கண, உரை நடை மாலைகள் பின் வருவனவாம். அவை தமிழைப் பிழை யின்றி யெழுதும் முறை, இளைஞர் சிற்றிலக்கணம் என்னும் இலக்கண நூல்களும், சங்க காலத்துப் புலவர்கள், மணிமேகலை சரிதை, அரிச்சந்திரன் சரிதை, கர்ணன் சரிதை, நந்தனர் சரிதை, நீதிக் கதைக் கோத்து, செய்யுட் கோத்து முதல் பாகம் முதலிய பல உரைநடை நூல்களுமாம். அன்றியும், இவர் திருவேங்கடச் செய்யுட் கோவை என்னு நூலொன்றை யியற்றியருளினர். அந்நூல் நால்வகைப் பாக்களும் அவைகளின் இனங்களும் அகப்பொருள் துறை களும் தன்கண் செறியப்பெற்றுக் கற்பவர் மனத்தைப் பிணிப்பதாய்த் திகழ் கிறது. இவ்வாசிரியரின் உரைநடை வன்மையும் உரையின் பெருமையும் இப்பரணி நூலின் உரையைக் கொண்டே நன்கறியலாம்.

இயற்றிய நூல்கள்

முற்காலத்தில் பரிமேலழகர், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர் கள் பண்டைய விலக்கியங்களை உரையிட்டு விளக்கினாற் போல, தற்காலத்தில் இவ்வுரையாசிரியர் பண்டைய நூலான கலிங்கத்துப் பரணியை யுரையிட்டு விளக்கித் தமிழ் நாட்டிற் களித்தமை சாலப் புகழ்தற் குரியதாம். இவர் இந் நூலில் வரும் அணிகளையும் இலக்கணக் குறிப்புக்களையும் ஆங்காங்கு விளக்கி யிருக்கின்றார். அன்றியும், தற்கால வுரையாசிரியர்கள் எடுத்துக் காட்டாத ஒன்பது வகைச் சுவைகளையும், புறப்பொருள் துறைகளையும் தமதுரையின் கண் வரைந்திருக்கின்றார். இவையனைத்தும் இந்நூலைக் கற்போர்க்குப் பெரும் பயனளிக்கத் தக்கனவாம்.

இவர் இந்நூலைப் போலவே உரையற்ற வேறு பல வரிய நூல்களுக்கு உரை வரைந்து தமிழுலகிற் களிக்குமாறு, இவருக்கு நிறைந்த ஆயுளையும் குறைவற்ற செல்வத்தையும் தந்தருளும்படி எல்லாம் வல்ல தமிழன்னையை மனமொழி மெய்களால் இறைஞ்சுகின்றேன். நான் இந்நூலின் அச்சுத் தாள் களைத் திருத்துங்கால், இவ்வுரையின் அருமை பெருமைகளைக் கண்டமையானும், இவ்வுரையாசிரியர் மாட்டெனக்குள்ள அன்பின் பெருக்கானும் இவரது வரலாறு இந்நூலிலிருத்தல் மிக முக்கியமெனக் கருதிச் சுருங்கிய முறையில் வரைந்தனுப்பியதைப் பதிப்பிக்க, இவர் ஒருவாறு உடன்பட்டமைக் கெனது வணக்க முரியதாகுக.

கலவல கண்ணன் செட்டி
உயர்நிலைப்பள்ளி, பிரம்பை,
23—10—'44.

(கை-ஒ.) வே. த. அர்ச்சுன முதலியார்,
தலைமைத் தமிழாசிரியர்.

# கலிங்கத்துப் பரணி நூலின் ஆராய்ச்சிச் சுருக்கம்.

## இந்நூலிலும் உரையிலுங் கண்ட தேவர், முனிவர் முதலானோர் பேர்களும் பிறவும்.

[எண்—தாழிசை யெண்]

௧. **தேவர்கள் :**—*அசுவினி தேவர் - ௭௯; இந்திரன் - ௧௨௭, ௨௪௫; இராமர் - ௬௪, ௨௩௨, ௪௯௪; உமாதேவியார்-௧௫; கணபதி-௯, ௧௨௭, ௧௮௦; கண்ணபிரான்-௩, ௨௩௨, ௨௪௦, ௫௪௩, ௫௪௪; காளிதேவி-௭௫, ௮௮, ௧௨௧; சத்தமாதர்-௧௭; சந்திரன்-௮௭, ௧௨௩; சாயாதேவி ௭௯; சிவபிரான்-௧, ௧௨௫, ௧௨௮, ௨௧௯; சூரியன்-௭, ௭௯, ௧௨௩, ௩௧௫, ௪௬௩; திருமகள்-௨௪௨, ௩௨௦; திருமால் - ௪, ௧௮௨, ௧௮௪, ௧௮௫, ௨௩௨, ௨௩௪, ௨௪௩; நாமகள் - ௧௩; பிரமன் - ௫, ௧௨௭, ௧௮௬, ௩௦௬, ௫௮௦; முருகக் கடவுள் - ௧௧, ௧௨௭; வாமனன் - ௨௪௩; வீரமகள் - ௧௯௬, ௪௨௯, ௪௩௭.*

௨. **முனிவர்கள் :**—*காசிபர் - ௧௮௬; நாரதர் - ௧௭௯; பராசரர் - ௧௮௦; மரீசி - ௧௮௬; வியாசர் - ௧௮௦.*

௩. **அரசர்கள் வரலாறு :**—*அதிராசேந்திரன் கொலையுண்டமை - ௨௬௪; அனந்தபத்மன் தோல்வியுற்றமை - ௪௪௬; ஆறும் விக்கிரமாதித்தன் வீரராசேந்திரன்பால் தோல்வியுற்று அம்மன்னவன் மகளை மணந்தமை - ௨௦௬; இக்குவாகு அரங்கநாதரைக் கொணர்ந்தமை - ௧௮௭; இராசகேசரி, பரகேசரிகள் புலிக் கொடியை ஏற்படுத்தினமை - ௧௯௧; இராச மகேந்திரன் திருவரங்கத்திற் பணி செய்தமை - ௨௦௫; இராசராசன் அம்மங்கை தேவியை மணந்து முதற் குலோத்துங்கனைப் பயந்தமை - ௨௩௪; இராசேந்திர சோழன் கங்கை நீர் கொணர்ந்தமை-௨௦௨; இராசேந்திர தேவன் ஆகவமல்லனை வென்று தன் மகளை முதற் குலோத்துங்கனுக்கு மணமியற்றினமை - ௨௦௪; இராசேந்திர மிருத்யுசித் ஆட்சி புரிந்தமை - ௧௯௨; உபரிசரன் தன் விமானத்தை ஆகாயத்திற் செலுத்தினமை - ௧௯௪; ககுத்தன் அசுரரை வென்றமை - ௧௮௮: கரிகாலன் இமய மலையில் புலிக்கொடி பொறித்தமை - ௧௭௮; கரிகாலன் காவிரிக்குக் கரை கோலினமை - ௧௯௭; கரிகாலன் சேர பாண்டியரை வென்று அவர்கள் தலையில் எரிவிளக் கேற்றினமை - ௧௯௯; கரிகாலன் நெடுஞ்செழியனையும் பெருஞ் சேரலாதனையும் வென்றமை - ௧௯௬; கரிகாலன் பட்டினப் பாலை கொண்டமை-௧௯௮; கிள்ளி வளவன் நமனுக்கு நீதி யுரைத்தமை - ௧௯௨; கிள்ளி வளவன் நாகக் கன்னியை மணந்தமை-௧௯௫: சமுத்திரசித் கடல்களை ஒன்று சேர்த்தமை-௧௯௩; சயசிங்கன் தோல்வியுற்றமை - ௧௦௩, ௩௮௫, ௫௬௪; சித்திரன் இந்திரனைப் புலிக்கொடியாகக் கொண்டமை - ௧௯௩; சிபிச்சோழன் தன் உடலரிந்தமை - ௧௯௦; சுரகுரு தூது விட்டமை - ௧௫௭; சுராதி ராசன் சோழமண்டல மேற்படுத்தினமை - ௧௯௧; சூரவர்க்கன் நாகக்கன்னியை மணந்தமை - ௧௯௫; சேரமான் கணைக்காலிரும்பொறை தோல்வியுற்றமை - ௧௯௫; சோழன் செங்கணன் பொய்கையார் கவியைப் பெற்றமை - ௧௯௫; தருமன் படைக்கு உதவி செய்தவன்-௧௯௪; தாராவர்ஷன் தோல்வியுற்றமை - ௧௪௭, ௨௫௪, ௩௮௪; திரிசங்கு தன் விமானத்தை வானத்திற் செலுத்தினமை-௧௯௪; திரிலோசனன் நெற்றிக்கண் இழந்தமை - ௧௯௭; திலீபன் தன் குருதியைச் சிங்கத்திற் களித்தமை-௧௯௩; தூங்கெயிலெறிந்த சோழன் மூன்று அரண்களை யழித்தமை-௧௯௪; பஞ்சபன் இயக்கர்கட்குத் தன் குருதியை யளித்தமை - ௧௯௩; பிருதுலாட்சன் வானவர்க் கமுதளித்தமை - ௧௯௦; மனுநீதிச் சோழன் முறை புரிந்தமை-௧௮௭; மாந்காதா மறை பிறமாமல் அரசு புரிந்தமை - ௧௮௯; முசுகுந்தன் இந்திரனுக்*

குதவி புரிந்தமை-கஅகூ; முதலிராசராசன் சதயவிழா வேற்படுத்தினமை-உ0க; முதலிராசாதி ராசன் கம்பிலியில் வெற்றித் தூண் நட்டமை-உ0கூ; முதற் குலோத்துங்கன் இளவர செய்தினமை-உசகூ; முதற் குலோத்துங்கன் சக்கரக் கோட்டம் வென்றமை-உருச; முதற் குலோத்துங்கன் சேர பாண்டியரை வென்றமை-௩அக, ௩அஉ, ௩அ௩; முதற் குலோத்துங்கன் பிறப்பு-உ௩எ; முதற் சோமேசுவரன் உயிரிழந்தமை-உ0சு; முதற்பராந்தகன் தன் பகைவரை வென்றமை-உ00; வாதராசனைப் பணிகொண்டவன்-கக௩; விகுட்சி வேந்தன் இக்குவாகுவின் புதல்வனென்பது-கஅஅ; விசயாதித்தன் வேங்கி நாட்டிற் குப் பிரதிநிதியாயிருந்தமை-கசஎ; வீராசேந்திரன் தன் பகைவரை வென்றமை-உ0சு.

ச. அரச மகளிர்:—அம்மங்கை தேவி-உ௩ச; இராச சுந்தரி-௩எரு; ஏழிசை வல்லபி-உஅரு; குந்தவை-உ0க, உ௩ச; தியாகவல்லி, மது ராந்தகி-உஅசு.

ரு. அமைச்சரும் படைத்தலைவரும்:—எங்கராயன்-௩எஎ; கருணாகரத் தொண்டமான்-௩சு௩; பல்லவர்கோன்-௩சுச; முடிகொண்ட சோழன், வாணகோவரையன்-௩சுரு.

சு. புலவர்கள்:—கடியலூர் உருத்திரங்கண்ணனார், முடத்தாமக் கண்ணி யார்-கக௮; பொய்கையார்-ககரு.

எ. நூல்கள்:—இராமாயணம்-சஎக; களவழி நாற்பது-ககரு; பட்டினப் பாலை-கக௮; பாரதம்-க௮0, சஎக; மனுநூல்-உ0, உசக; வேதம்-க௮ச, உ0அ, உசரு, ருகசு.

அ. புராணவரலாறு:—இக்குவாகு அரங்கநாதரைக் கொணர்ந்தமை-கஅஎ; கண்ணபிரான் சிசுபாலனைக் கொன்றமை-ருககூ; கண்ணபிரான் தூது சென் றமை-ருசச; கவேரன் காவிரிப்புனல் கொணர்ந்தமை-ககஉ; காஞ்சியில் பொன் மாரி பொழிந்தமை-௩கச; குரங்குகள் கடலை யணைத்தமை-கூசு; சிவபெருமான் நஞ்சுண்டமை-கஉச; சூரவர்க்கன் நாகக் கன்னியை மணந்தமை-ககரு; சூரியன் சாயாதேவியைத் தேடினமை-எகூ; திரிசங்கு சுவர்க்கம் புக்கமை-கககூ; திருமால் புவி யிரந்தமை-உச௩; திலீபன் சிங்கத்திற்குத் தன் குருதி யளித்தமை-கக௩; தேவர்கள் பாற்கடல் கடைந்தமை-கஉஉ, ருசஉ.

கூ. ஊர்கள்:—அதிகைமாநகர்-உகூக; அளத்தி-௩அச; இலங்கை-சுச; உதகை-உஅக; எச்சி-௩00; கடாரம்-கருக; கம்பிலி-உ0௩; கலிங்கம்-சு௩, சுச, சஎக; சாலை (காந்தளூர்ச்சாலை)-௩சுஉ; குருமி-கக௮; கூடற் சங்கமம்-உ0சு; கொப்பை-உ0ச; கோட்டாறு-கூரு; சக்கரக் கோட்டம்-கசசு; சிங்களம்-கருஉ; திமிரி-கசகூ; தென்மதுராபுரி-கருஉ; நவிலை-௩அரு; பல்லவநாடு-௩சுச; மணலூர்-ருசுஉ; மண்ணை-உ0உ; மதுரை-க0எ; மயிலை-ரு௩௩; மலைநாடு-உகூஎ; மல்லை-ரு௩௩; மிதிலை-க0க; வண்டை நகர்-௩சக; வயிராகரம்-உருஉ; விழிஞம்-௩அஉ; வெள்ளாறு-கூரு.

க0. மலைகள்:—அத்தமன மலை-சசு௩; இமயமலை-கஎஅ; உதயமலை-உஅஉ; திகிரி வரை (சக்கரவாளமலை)-உ0எ; மந்தரமலை-கஉஉ; மேருமலை-௩கரு; விந்த மலை-உசச; வெள்ளிமலை-உகூக.

கக. நதிகள்:—கங்கை-உகூஉ; காவிரி-ருகூ; குசைத்தலை, கொல்லி-௩சுஎ; குன்றி-௩சுஅ; கோதமை, கோதாவரி, சந்தப்பேர் நதி, (காயத்திரி) பம்பை-௩சுக; துங்கபத்திரை-க0௩; பாலாறு-உஎஅ; பெண்ணை-௩சுஎ; பேராறு (கிருஷ்ணாநதி)-௩சுஅ; பொருநை (தாமிர பரணி)-ருகூஉ; பொன்முகரி-௩சுஎ; மண்ணாறு-௩சுஅ; யமுனை-உசுஉ.

கஉ. விலங்குகள்:—ஆ-கஅஎ; ஒட்டகம்-ஙசஉ; குதிரை-உருங; குரங்கு-கூசு; சிங்கம்-ஙகஅ; செந்நாய்-அங; நரி-கககூ; பகடு-உஎஉ; பூன்றி-கசுச; புலி, மான்-கஅகூ; மேதி-கஎ; யானை-சகூக; வெள்ளாடு-ருசுஅ.

கங. பறவைகள் :—அன்னம்-உகூசு; ஆண்டலைப்புள்-ககஉ; ஆந்தை-கச0; உவணம்-கஎ; ஊமன்-உஉங; கழுகு-சஎசு; காகம்-சஅரு; கிளி-சுஎ; கோழி-உகூங; துரிஞ்சில்-கச0; பருந்து-கஉ0; புறு-அஉ; மயில்-உங; வண்டு-சுசு.

கச. மரஞ் செடி கொடிகள் :—ஈகை-எஅ; ஓமை-எசு; கதலி, கமுகு-உகூரு; கள்ளி-எஎ; காரை-எசு; கூகை-எஅ; சூரை-எசு; துள்ளி-எஎ; தேறு-எஅ; நெல்லி-எஎ; பனை-கஙரு; பாரை, பாலை-எசு, புன்கு-எஅ; முள்ளி, வள்ளி-எஎ; வாகை-எஅ; வெள்ளில்-எஎ; வீரை, வேய்-எசு; வேல்-எஎ.

கரு. துகிற் கொடிகள் :—அலகை, உவணம், எறு-கஎ; கலை, கெண்டை, கேழல்-கஅ; கோழி-உகூங; சிலை-கஅ; தோகை-கஎ; புலி-கஅ, மாசுணம்-உகூங; மேதி-கஎ; மேழி, யாளி, வீணை-கஅ; வேழம்-கஎ.

கசு. இசைக் கருவிகள் :—காளம்-ஙஉச; குழல், தண்ணுமை-ஙஉங; தமருகம்-ககச; தாளம்-ஙஉச; துடி-உக; பணிலம்-உச0; முரசு-உஉங; முழவு-கககூ; யாழ்-ஙஉங; வயிர்-ஙசச; வலம்புரி-உஅங; வளை-ஙசச; வீணை-ஙஉங.

கஎ. போர்க் கருவிகள் :—அம்பு-ரு00; உலக்கை-சஉஎ; கவசம்-ஙங; குந்தம்-சகூகூ; கேடகம்-சங0; சக்கரம்-உசஎ; சவளம்-சஙஎ; சுரிகை-கூகூ; செண்டு-கஎஅ; தண்டு-உச0; பாராவளை-ருகக; மழு-சஙக; வாள்-கூரு; வில், வேல்-சசுச.

கஅ. ஆபரணங்கள் :—இரட்டைவாளி-ருகஉ; ஏகவடம்-ஙஙச; ஏகாவலி-ருகங; ஐம்படைத்தாலி-கசகூ; கலாபம்-உஎரு; காஞ்சி-சுங; குதம்பை-கஙஉ; குழை-ஙஉ; சிலம்பு-ருஅ; சூடகம்-ருக0; பட்டம்-ஙஙரு; பரிபுரம்-உங; பவள வடம்-ங0; பாகு வலயம்-ருகங; பாடகம்-ருக0; பொன்மாலை-உஅசு; மகரக்குழை-ஙஙரு; மணிவடம்-கஙஉ; முடி-உசுச; முத்து வடம்-ங0; மேகலை-ருங; வன்ன சரம்-ருகச; விடுகெம்பி-ருகக.

ககூ. தொகைப் பொருள்கள் :—அறுவகைத் தொழில், அறுவகை வாழ்த்து-உ0; உக நான்கு-ரு; எழுவகைப் பிறப்பு-கஅஉ; எழிசை-உஅரு; எழு கடல்-ஙருகூ; எழு தளை-உஎச; எழு மேகம்-ஙகச; எழுலகு-ககூக; ஐம்படை-உச0; ஐவகைக் கருவி-ஙஉங, ஙஉச; ஐவகைத் தாய்மார்-உசக; கடல் நான்கு-சு; கால மும்மை-கஎகூ; குல நான்கு, திசை நான்கு-சு; திசை மலை-சசஎ; திசை யானை-க0; நவநிதி-சருகூ; நவமணி-ஙஙச; நால்வகைப் பண்-ஙஉக; நால்வகை யரண்-ஙஎஎ; நான்மறை-கஅக; நில நான்கு-சு; பஞ்ச சயனம்-கருச; படை நான்கு-உஎகூ; பொருள் நான்கு-ரு.

உ0. அருஞ் சொற்களும் சொற்றொடர்களும் :—அங்குலி-உகூஅ; அடுக்களை-ருகசு; அட்டம்-கசஉ; அமுதவட்டம்-அஎ; அருவர்-சருஉ; அலக்கு-உஉகூ; அலதி குலதி-சரு0; அலந்தலை-ஙகக; அனுக்கை-ஙசுசு; இலைப்புரை தடவல்-சசுக; ஈச்சோப்பி-கருரு; உகிர் கொள்ளி-ரு0சு; உரிமையரிவையர்-ஙஙரு; உவட்டல்-ஙருரு; உளப்பு-எரு; ஒக்கலை-கசஉ; ஒடி-சஉச; ஒறுவாய்-உகஎ; கடைபோகல்-கஎச; கருஞ் சேவகம்-சகூ0; கருவிக்கட்டு-ரு0அ; காரண காரியங்கள்-கூ; காளை யம்-சகூஉ; கிழான்-ருககூ; கொட்டு-கசக; கொற்றலம்-கஙஎ; சல்லவட்டம்-ருசரு; சின்னம்-ருருஅ; திமில குமிலம்-சசஎ; தூசி-ஙசுரு; தெற்றல்-சகச; நித்த

காரார்-சஙஉ; பதம்-ருக0; பரிசை-ருகக; பரிவிருத்தி-க0அ; பவனபதம்-சகரு; பாரி போகம்-உருரு; புரவிப்படி-ருக0; புளகம்-ருருஅ; புளிதம்-ருககூ; புறக்கிடல்-ஙருங; மண்டை-ருருஅ; மறிபுறம்-கஙக; மிறைத்தல்-சகஎ; வட்டணங்கள்-சஉரு; விடவிகள்-ச00; விடைத்தல், விழித்தல்-ஙருச; வேளம்-ச0.

உக. வடமொழிச் சொற்களும் சொற்றொடர்களும் :—அகண்டம் - கஅரு; அகளங்கன்-உகஅ; அகிலம்-ஙசஎ; அட்டகம்-கஙஅ; அதர பானம்-ருச; அந்தம்-கஅங; அந்தரம்-உஙரு; அப்ரமேயம்-கஅஉ; அமல வேதம்-கஅச; அவதாரம்-உஙங; அனகதான தருமம்-உஅக; ஆதவம்-அக; ஆரணம்-கஅச; இந்த்ரசாலம்-கசுக; இரவி குலோத்தமன்-கஉ; இருக்கு-கஅங; உதயபானு-உ0க; உதாம்-ச; உத்தர பூமியர்-ருங0; உத்தரியம்-கஉஅ; உபய கரம்-உஎக; உபய குலோத்தமன்-உ; ஊபய பலம்-சஙஅ; ஏக வடம்-ஙஙச; கமல யோனி-கஅச; கர கமலம்-கஉக; கருணாகரன்-சுச; கவனம்-ருஉஎ; கவிகுலம்-சகங; கனக தானம்-உஅக; காந்தர்-சஎக; காரண காரியம்-கூ; கோகனதம்-உஙகூ, குலசேகரன்-உஅரு; குலதீபன் - சு; குலதுங்கன் - ஙகூங; குலோத்துங்கன் - ருஙங; சக்கு - கஅஅ; சங்கிதை-கஅங; சயதரன்-உ0; சயதுங்கன்-அ; சயத்தம்பம்-க0; சனபதி-ஙஎங; சாதன மந்திரம் கஎசு; சாதுரங்கம்-ரு00; சித்திர மண்டபம்-ஙகரு; தளம்-உருங; தவளம்-கஉரு; தனராசி-உருரு; திக்கயம்-கஉச; திக்கு விஜயம் உசஅ; திரிபுவனம்-உ0எ; திலகம், தினகரன்-கஉங; துரக கணம்-சகச; நவநிதி-சருஅ; நாபி கமலம்-கஅசு; பங்கயக் கரம்-ஙகச; பஞ்ச சயனம்-கருச; பத யுகளம்-கஉஉ; பதும முகம்-சககூ; பரிபுரம்-கஉஉ; பரிவிருத்தி-க0அ; பவதி பிட்சாந்தேகி-ருசுங; பாதவம்-அக; போகம், பார்த்திபர்-உருரு; பிரளயம்-ஙசங; பூதகணங்கள்-கரு0; போதம்-உசங; போதகம்-கசசு; ப்ரியம்-கஅஉ; மண்டலீகர்-ஙஉஎ; மதுபானம்-ருச; மேதினி-கஅஎ; வதனம்-கஉங; வருக்கம்-கஅங.

உஉ. (க) சிலேடை :—ஙஉ, ருக, எங.

(உ) திரிபு :—ருஉ, கஎங, உருச, சஎங, ரு0ங, ருசுக, ருஎரு.

(ங) யமகம் :—கூங; சருச; சகூக்—ரு0க.

(ச) இரட்டைக் கிளவி :—கலகல-ஙகூஅ; சடசட-சஉ0; மொகு மொகு-ககச; மொடு மொடு-ச00; வெடு வெடு-ஙருச.

உங. உவமைகள் :—கடலலைகள் குதிரைகட் குவமை-ஙருக; கடலொலி ஆயுதவொலிக் குவமை-ஙகூஅ; கடல் சேனைகட் குவமை-ஙஎக; கடல் நுரை குடைகட்கும் சாமரைகட்கு முவமை-ஙகூஎ; கரிய மேகம் கரிய பூதத்திற் குவமை-ரு0க; சிங்கம் அரசர்கட் குவமை-ச0அ; செப்புக் கிண்ணம் தனங்கட் குவமை-கஉரு; பேய்களின் கண்களுக்குக் கொள்ளி யுவமை-கஙஅ; பேய்களின் கை கால்களுக்குப் பனை யுவமை-கஙரு; பேய்களின் நகம் முறங்கட் குவமை-கஎஉ; பேய்களின் நாவிற்கும் உடல் மயிருக்கும் பாம்புகளுவமை-அகூ, க0ச; பேய்களின் பற்கள் மண் வெட்டி யிலைகளையும், மேழிகளையும் ஒத்தல்-கசக; பேய்களின் முதுகு மரக்கலத்தின் அடிப்புறமொத்தல் கஙக; மரக்கலந் தேருக் குவமை-ஙகூக; மரங்கள் பேய்கட் குவமை-அஅ; மயில் மகளிர்களுக் குவமை-உங; மலைகள் யானைகட் குவமை-ச0எ; முத்துக்கள் கண்ணீர்த்துளிகட் குவமை-கூஉ; முத்துக்கள் வியர்வைத் துளிகட்கும் கொப்புளங்கட்கு முவமை-கூங; மேகம் யானைகட் குவமை-சஙச; யானை முழக்கத்திற்கு இடியோசை யுவமை-ஙகூசு; வீரர்கட்குச் சுறுமீன் உவமை-ஙகூக; வீரர்கட்குப் புலி யுவமை-ச0அ; வீரர் துருத்தியாளரை யொத்தல்-சஙரு; வீரர் மாலுமிகளை யொத்தல்-சகூசு.

௨௪. **சுவைகள்** :—அச்சச்சுவை-௧௭௩, ௩௭௧; ௩௭௪, ௪௫௦-௪௫௪; அழுகைச் சுவை-௪௮௧, ௪௮௪; இழிவுச் சுவை-௩௭௭; உவகைச் சுவை-௨௭௬-௨௭௭; கருணைச் சுவை-௨௮௧; நகைச் சுவை-௫௬௯, ௫௭௪; வியப்புச்சுவை-௧௬௨-௧௬௭; ௩௪௭-௩௪௮; வீரச்சுவை-௧௦௯-௧௧௩; ௩௯௦-௩௯௪; ௪௧௬-௪௧௮; ௪௨௧-௪௨௪; ௪௩௬-௪௪௨; வெகுளிச்சுவை-௩௭௫, ௩௭௯.

௨௫. **புறப்பொருள் வகைகள்** :—அவிப்பலி-௪௯௦; ஆனந்தப்பையுள்-௪௮௧, ௪௮௪; இருவரும் தபுநிலை-௪௩௯; உழபுல வஞ்சி-௯௨, ௨௫௨, ௩௭௦; குற்றுழிஞை-௧௦௦; தலையொடு முடிதல்-௪௮௨, ௪௮௩; நாண்மங்கலம்-௫௩௩; நூழிலாட்டு-௪௩௯; பேய்நிலை-௪௭௮; பேராண்முல்லை-௯௪; மழபுலவஞ்சி-௩௭௦; மறப்பாசி-௪௯௨; வஞ்சித் தழிஞ்சி-௪௪௨; வஞ்சியரவம்-௩௫௮; வெருவருநிலை-௪௮௮.

௨௬. **புதிய கற்பனைகள்** :—கடலலைகள் வீசுதற்கும் திசை யானைகளின் காதுகளிலிருந்து காற்று வெளிப்படுதற்குங் காரணம்-௯௪; சூரியன் தேர் இரவிற் செல்லாமை-௮௫; தேவர்கள் ஆலவட்டம் பிடித்திருத்தல்-௮௭; தேவர்கள் நிலத்தில் அடியிடாமை-௮௪; பேய்களின் உடலமைப்பு-௧௩௫-௧௪௧; பேய்களின் உறுப்புக்கள் அழிவெய்தினமை-௧௪௫, ௧௫௨; மகளிர் கொங்கை வேதொற்றி வாய் மருந்தூட்டல்-௫௫; மகளிர் கொங்கை வேதொற்றிக் கையால் கட்டுதல்-௫௬; மழையும் பனியும் உண்டாதற்குக் காரணம்-௮௬; முதுபேயின் இந்திரசால வித்தை-௧௬௨, ௧௬௭; யானைகள் தம் துதிக்கைகளைப் பின்னிப் போர் புரிதல்-௪௧௪; யானைகள் மூன்று துதிக்கை யுடையனவாய்த் தோன்றல்-௪௧௩; வெட்டுண்ட யானைகளின் உடல் சம்மட்டியை யொத்தல்-௪௯௭.

௨௭. **பண்டைய வழக்கங்கள்** :—அரசர்களோடு அரசர்கள் போர் புரிதல்-௪௦௮; அரசர்கள் தம்மினும் வலிய அரசர்களின் அமைச்சர்பால் குறுகல்-௫௩௯; எருமைக்கடாவைத் தேவிக்குப் பலியிடல்-௧௧௪; ஐவகைத் தாய்மார்-௨௪௧; ஐவகைப் படுக்கைகள்-௧௫௪; குழவிகளைத் தேவிக்குப் பலியிடல்-௧௦௬; தமிழ்ப் புலவர்கள் பண்டை வேந்தரால் நன்கு மதிக்கப்பட்டமை-௧௯௫, ௧௯௮; தமிழ் வேந்தர் தேர்களின் அமைப்பு-௩௫௨; தோல்வியுற்ற மன்னர் மனைவியரை வெற்றியுற்றோர் சிறை செய்தல்-௪௦, ௪௫௯; தோல்வியுற்ற மன்னரும் அவர் தம் மனைவியரும் வெற்றியுற்றோர்க்குக் குற்றேவல் புரிதல்-௩௨௫, ௩௨௬; தோல்வியுற்ற வேந்தர் எரிவிளக் கேந்தல்-௧௯௯; நால்வகைப் படைகள்-௩௪௭; நால்வகைப் பண்கள்-௩௨௧; நால்வகை யரண்கள்-௩௭௭; நிமித்தம் பார்த்தல்-௨௨௨, ௨௨௪; பகை வேந்தர் ஊர்களைக் கொளுத்தலும் சூறையிடலும்-௩௭௦; பகை வேந்தர் மதில்களையும் சோலைகளையும் அழித்தல்-௩௭௨; பண்டைக் காலத்தும் நிலவறை யுண்டென்பது-௬௮; பாணர்கள் பரிசு பெறுதல்-௩௨௪; மகளிரைத் திறைப்பொருளாகச் செலுத்தல்-௪௧; மகளிர் உடன்கட்டை யேறும் வழக்க முண்மை-௪௮௦; மகளிர் கிள்ளைகளை வளர்த்தல்-௬௭; மகளிர் கூடலிழைத்தல்-௫௧; மகளிர் செங்கழுநீர் மலர் புனைதல்-௫௦; மகளிர் தேரிற் செல்லல்-௨௯௦; மகளிர் பிடிமேற் செல்லல்-௨௮௭; மகளிர் போர்க்கள மணுகல்-௪௮௧, ௪௮௪; யானை, குதிரை, ஒட்டகங்களையும் பலவகை யணிகளையும் சிற்றரசர் திறை செலுத்தல்-௩௩௪, ௩௩௬; வீரர்கள் போரில் அஞ்சினார்மேல் படை வழங்க நாணல்-௪௪௨; வெற்றித் தூண்களை நடுதல்-௧௦; வீரர் தம் முறுப்புக்களை யறுத்துத் தேவிக்குப் பலியிடல்-௧௦௯, ௧௧௧; வேதியர் வேந்தர்க்கு மகுடம் புனைதல்-௨௬௪.



# பரணி யிலக்கணம்

பரணி என்பது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் ஒன்றாகும். இந்நூலில் ஆயிரம் களிறுகளைப் போரில் வென்ற ஆண்மை வாய்ந்த தலைவ னொருவனைச் சிறப்பித்துப் பாடுதல் மரபாம். இதனை,

"ஆனை யாயிர மமரிடை வென்ற
மானவ னுக்கு வகுப்பது பரணி" [இலக்-வி-அ௩அ]

என்றதனு லறிக. அன்றியும், கடவுள் வாழ்த்து, கடை திறப்பு, காடு பாடுதல் முதலிய உறுப்புக்களை அமைத்துப் பாட்டுடைத் தலைவன் இயல்பு, சிறப்பு, வெற்றி மேம்பாடு முதலியவற்றை விளக்கி அளவடி முதலாக எனைத்துச் சீரானும் ஈரடித் தாழிசைகளால் புறப்பொருள் தோன்றப் பாடுவது இந்நூலின் இலக்கணமாம். இதனை,

கடவுள் வாழ்த்துக் கடைதிறப் புரைத்தல்
கடும்பாலை கூறல் கொடுங்காளி கோட்டம்
கடிகண முரைத்தல் காளிக் கதிசொலல்
ஆடுபேய்க் கவள்சொல லதனுல் தலைவன்
வண்புக முரைத்த லெண்புறத் திணையுற
வீட்ட லடுகளம் வேட்ட லிவைமேல்
அளவடி முதலா வடியிரண் டாக
உளமகிழ் பரணி யுரைக்கப் படுமே. [இலக்-வி-அ௩கூ]

என்றதனு லறிக. அன்றியும், "காடுகெழு செல்விக்குப் பரணிநாட் கூழுந் துணங்கையுங் கொடுத்து வழிபடுவதோர் வழக்குப்பற்றி" [தொல்-செய்யு-கசகூ] என நச்சினர்க்கினியர் வரைந்திருத்தலையு மிங்குக் கவனிக்க. பரணியி னிலக்கணத்தை வெண்பாப் பாட்டியல், பன்னிரு பாட்டியல், சிதம்பரப் பாட்டியல் என்னு நூல்களிலுங் காணலாம்.

கலிங்கப் போர்க்களத்தில் பேய்கள் பரணி நாளில் கூழ் சமைத்துத் தேவியை வழிபட்டு உண்டு மகிழ்தலால், இந்நூலுக்குப் பரணி யென்னும் பேர் வந்ததென அறிஞர் கூறுவர் [தா-ரு௬ஏ]. தினைப்புனங் காப்பவர், கிளி முதலிய பறவைகளைக் கடியத் தினைப்புனத்தில் பரண்மேலிருத்தல் போல், களப் போரினைச் சிறப்பித்துப் பாடும் புலவன், வெற்றி வேந்தனுல் வேல், வாள் முதலிய படைகளால் அமைக்கப்பட்ட பரண்மேலிருந்து பாடுதலால், இந்நூல் பரணி என்னும் பெயர் பெற்றதெனவுஞ் சிலர் கூறுப.

---

* தக்க யாகப் பரணியில் சிந்தடித் தாழிசைகள் வந்துள்ளமை யீண்டுக் கவனிக்கற்பாற்றும். (உ-ம்.) உகரு, ருகஉ-முதலிய தாழிசைகளைக் காண்க.



# மேற்கோள் நூல்களின் குறிப்பும் பெயரும்.

அகநா-அகநானூறு
அகப்பொ-அகப்பொருள் விளக்கம்
அஞ்ஞவ-அஞ்ஞவதைப் பரணி
அரிசம-அரிசமய தீபம்
அரிச்-அரிச்சந்திர புராணம்
அமலனு-அமலனுதிப் பிரான்
அழகரந்-அழக ரந்தாதி
ஆராய்ச்சி-ஆராய்ச்சித் தொகுதி
ஆரி-பாகவ-ஆரியப்பப் புலவர் [பாகவதம்
இரங்-வெ-இரங்கேச வெண்பா
இரத்தி-இரத்தினச் சுருக்கம்
இராச-உலா-இராச ராச சோழனுலா
இலக்-வி-இலக்கண விளக்கம்
இறை-அகப்-இறையனுர் அகப் [பொருள்
உத்தரகா-உத்தர காண்டம்
ஐங்கு-ஐங்குறு நூறு
கம்பரா-கம்பராமாயணம்
கலி-கலித்தொகை
கல்லா-கல்லாடம்
களவழி-களவழி நாற்பது
காஞ்சிப்பு-காஞ்சிப் புராணம்
காரைக்-மூத்த-காரைக்காலம்மையார் [மூத்த திருப்பதிகம்
கார்நா-கார்நாற்பது
குசேலோ-குசேலோபாக்கியானம்
குலோத்-உலா-குலோத்துங்க [சோழனுலா
குறுந்-குறுந்தொகை
கோயில்நான்-கோயில் நான்மணிமாலை
சகலகலா-சகலகலா வல்லி மாலை
சடகோ-அந்-சடகோபரந்தாதி
சிதம்ப-செய்-சிதம்பரச் செய்யுட் [கோவை
சிலப்-சிலப்பதிகாரம்
சிலேடை-சிலேடை வெண்பா
சிலேடை-யு-சிலேடை யுலா
சிலையெ-சிலை யெழுபது
சிறுபா-சிறுபாணுற்றுப் படை
சீகாள-பு-சீகாளத்திப் புராணம்
சீரங்கநா-ஊ-சீரங்கநாயகர் ஊசல்
சீவகசி-சீவக சிந்தாமணி
சூடாமணி-சூடாமணி நிகண்டு
சோழவமி-சோழவமிச சரித்திரம்
தக்கயா-தக்கயாகப் பரணி
தஞ்சை-கோ-தஞ்சைவாணன் [கோவை
தண்டி-தண்டியலங்காரம்
தமிழ்நா-சரி-தமிழ் நாவலர் சரிதை
தனிப்பா-தனிப்பாடல் திரட்டு
தா-தாழிசை
திணைமொழி-திணைமொழியைம்பது
திருக்கு-திருக்குறள்
திருக்குறுந்-திருக்குறுந்தாண்டகம்
திருக்கோ-திருக்கோவையார்
திருச்சித்-திருச்சித்திரகூட புராணம்
திருத்தொண்-திருத்தொண்டத் [தொகை
திருஞானசம்-தே-திருஞானசம்பந்தர் [தேவாரம்
திருநெடுந்-திருநெடுந்தாண்டகம்
திருப்பல்-திருப்பல்லாண்டு
திருப்பு-திருப்புகழ்
திருமா-திருமாலை
திருமுருகு-திருமுருகாற்றுப் படை
திருவரங்-க-திருவரங்கக்கலம்பகம்
திருவரங்-திருவரங்கத் தந்தாதி
திருவ-மா-திருவள்ளுவ மாலை
திருவாச-திருவாசகம்
திருவாத-பு-திருவாதவூரர் புராணம்
திருவாய்-திருவாய் மொழி
திருவாரூர் மும்-திருவாரூர் மும்மணிக் [கோவை
திருவால-திருவாலவாய்க் காண்டம்
திருவி-திருவிருத்தம்
திருவிளை-திருவிளையாடற் புராணம்
திருவேங்-அந்-திருவேங்கடத்தந்தாதி
திருவேங்-கலம்-திருவேங்கடக் கலம் [பகம்
† திருவேங்-செ-கோ-திருவேங்கடச் [செய்யுட்கோவை
திருவேங்-மா-திருவேங்கடமாலை

† உரையாசிரியர் இயற்றியது.

திவ்வியப்பி-திவ்வியப் பிரபந்தம்
திவ்விய-பெ-திரு-திவ்விய பெரிய [திருமொழி
தேசிகப்பி-தேசிகப் பிரபந்தம்
தொண்டைம-சத-தொண்டை [மண்டல சதகம்
தொல்கா-தொல்காப்பியம்
நளவெ-நளவெண்பா
நற்-நற்றிணை
நன்-நன்னூல்
நாச்சி-திரு-நாச்சியார் திருமொழி
நாலடி-நாலடியார்
நால்வர்நா-மா-நால்வர் நான்மணிமாலை
நான்மணி-நான்மணிக் கடிகை
நீதிநெ-நீதிநெறி விளக்கம்
நெடுநெல்-நெடுநெல் வாடை
நைட-நைடதம்
பக்-பக்கம்
பட்டி-பட்டினப்பாலை
பட்டினத்-பட்டினத்தார் பாடல்
பதிற்று-பதிற்றுப் பத்து
பரிபா-பரிபாடல்
பழமலை-அ-பழமலை அந்தாதி
பழமொ-பழமொழி
பா-பே-பாட பேதம்
பாண்-கோ-பாண்டிக் கோவை
பாரதவெ-பாரத வெண்பா
பிரபுலிங்-பிரபுலிங்க லீலை
புறநா-புறநானூறு
புறப்-வெ-மா-புறப்பொருள் வெண்பா [மாலை
பெரியபு-பெரிய புராணம்
பெரியாழ்-திரு-பெரியாழ்வார் திரு [மொழி
பெரும்பா-பெரும்பாணாற்றுப் படை
பொருநரா-பொருநராற்றுப்படை
பொன்வண்-பொன்வண்ணத் தந்தாதி
மணிமே-மணிமேகலை
மதுரைக் மதுரைக் காஞ்சி
மலைபடு மலைபடு கடாம்
மாறன-மாறனலங்காரம்
மீனாட்சி-பி-மீனாட்சியம்மன் பிள்ளைத் [தமிழ்
மு-கு-முதற் குலோத்துங்கன்
மு-கு-சோ-முதற் குலோத்துங்க [சோழன்
மேகவிடு-மேகவிடு தூது
மோகவ-மோகவதைப் பரணி
யாப்ப-கா-யாப்பருங்கலக் காரிகை
யாப்ப-வி-யாப்பருங்கல விருத்தி
விக்கி-உலா-விக்கிரம சோழனுலா
விநாயகபு-விநாயக புராணம்
வில்லி-பா-வில்லி பாரதம்
வீரசோ-வீரசோழியம்
வெற்றிவே-வெற்றி வேற்கை

H. I. S. I.—The Historical Inscriptions of Southern India.

T. T. E. H. Y. A.—Tamils Thousand Eight Hundred Years Ago.



ஸ்ரீ

# இந்நூலில் அடங்கியவை.

பக்கம்



## இவ்வுரையாசிரியர் இயற்றியுள்ள கையேட்டு உரை (Manuscripts) பிரதிகள்.

க. கலிங்கத்துப் பரணி நூலாராய்ச்சி
உ. அழகர் பிள்ளைத் தமிழ்
௩. மேகவிடு தூது
ச. திருவேங்கடச் செய்யுட் கோவை

# கலிங்கத்துப் பரணி

## (மூலமும் உரையும்)

**கலிங்கத்துப் பரணி** :—கலிங்கத்தில் நிகழ்ந்த போரை யுணர்த்தும் பரணியென்னும் நூல் என்பது இதன் பொருளாம். இஃதிரண்டனுருபும் பயனு முடன்தொக்க தொகை. கலிங்கம் என்பது இடவாகு பெயராய்க் கலிங்கப் போரை யுணர்த்தினது. பரணி யென்பது தொண்ணூற்ருறு வகைப் பிரபந்தங்களில் ஒன்ரும். கலிங்கநாடு வடசர்க்காரிலுள்ள கோதாவரி நதிக்கு அப்பால் வடக்கிலும் மகாநதிக்குத் தெற்கிலுமுள்ளதாம். விசயதரன் என்னும் **முதற் குலோத்துங்க சோழன்** தனது படைத் தலைவனும் மந்திரத் தலைவனுமாகிய **கருணுகரத் தொண்டைமானை** யேவி, கலிங்க நாட்டை யழித்து அந்நாட்டிற் கிறைவனுகிய **அனந்த பத்மனை** வென்ற செய்தியை இந்நூலில் விரித்துக் கூறும். இதில் ருகூசு தாழிசைகள் அடங்கியிருக்கின்றன.

## க. கடவுள் வாழ்த்து

**கடவுள் வாழ்த்து** :—கடவுளைப் பற்றிய வாழ்த்து எனின் இரண்டனுருபும் பயனு முடன் தொக்க தொகையும், கடவுளுக்கு வாழ்த்து எனின் நான்கன் தொகையும், கடவுளினது வாழ்த்து எனின் ஆறன் தொகையுமாம். கடவுளைப் பற்றிய வாழ்த்துதலை யுணர்த்துஞ் செய்யுட்களின் பகுதி என்பது இதன் பொருளாம். வாழ்த்து என்னும் முதனிலைத் தொழிற்பெயர் தொழிலாகு பெயராய்க் கடவுளை வாழ்த்துஞ் செய்யுட்களின் பகுதியை யுணர்த்தினது. இக்கடவுள் வாழ்த்தில் இந்நூலாசிரியர் உமாபதி, திருமால், பிரமன், சூரியன் முதலிய தேவர்களைத் துதித்து முடிவில் அந்தணர், மழை, பயிர், உயிர், வேந்தன் என்பவர் கட்கு வாழ்த்துக் கூறுகின்ருர். இதில் ஆசிரியர் போற்றும் ஒவ்வொரு கடவுளோடும் பாட்டுடைத் தலைவனைச் சம்பந்தப்படுத்திக் கூறியுள்ளமை கற்ருேர் மனத்தைக் கவரத்தக்கதாம். இதனை அவ்வச் செய்யுட்களின் விளக்கவுரையிற் காண்க.

### உமாபதி துதி

க. புயல்வண்ணன் புனல்வார்க்கப் பூமிசையோன்
*தொழில்காட்டப் புவன வாழ்க்கைச்
செயல்வண்ண நிலைநிறுத்த மலைமகளைப்
புணர்ந்தவனைச் சிந்தை செய்வாம்.

உ. †அருமறையி னெறிகாட்ட வயன் பயந்த
நிலமகளை யண்டங் காக்கும்
உரிமையினிற் கைப்பிடித்த வுபயகுலோத்
தமனபயன் வாழ்க வென்றே.

பதவுரை :—அரு மறையின் - உயர்ந்த வேதங்களில் கூறியுள்ள, நெறி - நல்லொழுக்கத்தை, காட்ட - (உலகத்திலுள்ளவர்களுக்கு) தெரிவிக்க, அண்டம் காக்கும் - உலகத்திலுள்ள உயிர்களைக் காப்பாற்றும், உரிமையினில் - உரிமையினாலே, அயன் பயந்த - பிரமன் படைத்த, நிலம் மகளை - பூமி தேவியை, கை பிடித்த - மணம் புரிந்து கொண்ட, உபய குலம் - இருவகைக் குலங்களிலும், உத்தமன் - சிறந்தவனாகிய, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழன், வாழ்க என்று - (நெடுங் காலம் சிறப்போடு) வாழ்வானாக வென்று,

புவனம் வாழ்க்கை - பூமியில் (இல்லற) வாழ்வினது, செயல் வண்ணம் - தொழிலின் முறையை, நிலை நிறுத்த - (உலகத்திலுள்ளவர்களுக்கு நடத்திக் காட்டி அதனை) நிலைபெறச் செய்ய, புயல் வண்ணன் - மேகம் போன்ற கரிய நிறமுடைய திருமால், புனல் வார்க்க - தாரை நீர் வார்க்கவும், பூ மிசையோன் - செந்தாமரை மலரிலுள்ள பிரமன், தொழில் காட்ட - (விவாகத்தின்) சடங்கு செய்விக்கவும், மலை மகளை - மலையரையன் மகளாகிய பார்வதி தேவியை, புணர்ந்தவனை - மணஞ்செய்து கொண்டவனாகிய சிவபெருமானை, சிந்தை செய்வாம் - துதிப்போம்.

விளக்கவுரை :—உலகத்தாருக்கு இல்லற வொழுக்கத்தை நடத்திக் காட்டச் சிவபெருமான் பார்வதி தேவியை மணந்ததுபோல், உயர்ந்த வேதவொழுக்கத்தை உலகினர்க் குணர்த்த முதற் குலோத்துங்கன் நிலமகளை மணந்தனனென்பதாம். நிலமகள் திருமாலுக்கு மனைவியாதலாலும், திருமாலே முதற் குலோத்துங்கனாய்த் தோன்றியுள்ளா னென்றமையாலும் [தாழிசை - உ௩உ] 'நிலமகளைக் கைப்பிடித்த' என்றார். சிவபெருமான் திருமணம் புரிந்துகொண்ட போது திருமால் தாரைநீர் வார்த்தமையும், பிரமன் வேள்விச்சடங்கு செய்வித்தமையும், 'அத்தலைநின்ற மாயோன்......கரகநீர் மாரி பெய்தான்' எனவும், 'கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்தவாற்றான்' எனவும் [திருவிளை-திருமணப்-கஎஅ, கஅ௬] பரஞ்சோதி முனிவர் முறையே கூறிய வாற்றானறிக. 'உபய குலம்' என்றது தாயின் குலமாகிய சூரிய குலத்தையும் தந்தையின் குலமாகிய சந்திரகுலத்தையுமாம். [தா-கஉ, கஉ௩] இதன் விரிவை உ௩ச-ம் தாழிசையிற் காண்க. குல + உத்தமன் = குலோத்தமன்; குணசந்தி. என்றே—ஏகாரம் ஈற்றசை; 'அபயன் வாழ்க வென்று, புணர்ந்தவனைச் சிந்தை செய்வாம்' என வினை முடிவு செய்க. பாடபேதம் :—* சடங்கியற்ற, † அருமறைகணெறி.

(க - உ)

## திருமால் துதி

௩. *ஒருவயிற்றிற் பிறவாது பிறந்தருளி யுலகொடுக்குந்
திருவயிற்றிற் றிருக்குழவி திருநாமம் பரவுதுமே.

௪. அந்நெடுமா லுதரம்போ லருளபயன் றனிக்கவிகை
இந்நெடுமா நிலமனைத்தும் பொதிந்தினிது வாழ்கவென்றே.

ப - ரை :—அருள் அபயன் - கருணையையுடைய முதற் குலோத்துங்க சோழனது, தனி கவிகை - ஒப்பற்ற குடையானது, அ நெடுமால் - அந்தத் திருமாலின், உதரம் போல் - வயிற்றைப்போல, நெடு

மா இ நிலம் - மிகப் பெரிய இந்த நிலவுலகத்தையும், அனைத்தும் - (இதிலுள்ள சராசரங்கள்) எல்லாவற்றையும், பொதிந்து - (தனக்குள்) அடக்கிக்கொண்டு, இனிது வாழ்க என்று - நன்றாய் வாழ்கவென்று,

ஒரு வயிற்றில் - (தாய்மார்) வயிறு ஒன்றிலும், பிறவாது - (வினை வயத்தால்) பிறவாமல், பிறந்தருளி - (தன்னிச்சையாய்) தோன்றி, உலகு ஒடுக்கும் - உலகங்களையும் (அவற்றிலுள்ள எல்லாப்) பொருள்களையும் (தனக்குள்) அடக்கிக்கொண்டிருக்கும், திரு வயிற்றிற்று - அழகிய வயிற்றை யுடையதாகிய, ஒரு குழவி - ஒப்பற்ற குழந்தை யாகிய கண்ணபிரானுடைய, திரு நாமம் - அழகிய பேர்களை, பரவுதும் - (சொல்லி) துதிப்போம்.

வி-ரை :—கண்ணபிரான் திருவயிறு எல்லா உலகங்களையுந் தனக்குள் அடக்கிக்கொண்டிருத்தல் போல, முதற் குலோத்துங்கன் கவிகையும் எல்லா வற்றையும் தனக்குள் அடக்கிக்கொண்டு வாழ்க வென்பதாம். 'பிறவாது பிறந்தருளி' என்றது திருமால் புரிந்த இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் முதலிய வற்றையாம். திருமால் வினைவயத்தால் ஒரு வயிற்றும் பிறவாது பிறந்தமையை, 'மனிசரு மற்று முற்றுமாய் மாயப் பிறவி பிறந்த, தனியன் பிறப்பிலி தன்னை' [திருவாய்-ரு-ரு-சு] என ஆழ்வாரும், 'மீனவ தார முதலாயினவினை யின்றி யிச்சை, ஆனவ தாரறி வாரவ ரேமுத்தர்' [அழகரந்-சுசு] என ஐயங்காரும், 'குறிபடு திங்க ளொருபதும் புகாது பொன்பெய ருடையோன் தன்பெயர் கடுப்ப, நாணம் பயந்த மாணமர் குழவி' [கல்லா-ரு] எனக் கல்லாடரும் கூறிய வற்றானுணர்க. எல்லா உலகங்களையுந் தன் திருவகட்டில் ஒடுக்கிக்கொண்டிருக் கும் சிறப்புவாய்ந்த கண்ணபிரானாகிய 'குழவி திருநாமம் பரவுதும்' எனவே பெரியோனாகிய திருமால் பெருமை பேசவியலா தென்பதாம். 'ஒரு வயிற்றிற் பிறவாது பிறந்து' என்றதனால், தாய்மார் வயிற்றிற் பிறத்தலால், ஏனையோர்க் குள்ள இழிவு இவனுக் கின்றென்பதாம். வயிற்றில்—இதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. வயிற்றிற்று - குறிப்புமுற்று, இங்குப் பெயரெச்சப் பொருளில் வந்தது. பரவுதும்- தன்மைப் பன்மை வினைமுற்று. அந்நெடுமால்— உலகங்களையெல்லாந் தன்னகட்டில் ஒடுக்கிய அந்நெடுமாலென்க. அம்—நெடு மால் எனப் பிரித்து அழகிய நெடுமாலெனினுமாம்; அ—அழகு எனினுமாம். 'பித்திகைத் தவ்வித ழவிழ்பதம்' [நெநெல்-சo, சக] எனவும், 'அம் மெல் லாக நிறைய' [குறுந்-கடுகூ] எனவும் வருமாறு காண்க. அகரம் பண்டறி சுட்டுமாம். நெடு மா—ஒருபொருட் பன்மொழி. 'அபயம் தனிக் கவிகை வாழ்கவென்று, குழவி திருநாமம் பரவுதும்' என முடிக்க. சூ-ம் தாழிசை உவமையணியாம். (உபமாலங்காரம்) பா - பே :—* ஒரு வயிற்றும். (ரு - ச)

## நான்முகன் துதி

ரு. உகநான்கும் பொருணான்கு முபநிடத மொருநான்கு
முகநான்கும் படைத்துடைய முதல்வனையாம் பரவுதுமே.

சு. நிலநான்குந் திசைநான்கு நெடுங்கடல்க ளொருநான்குங்
குலநான்குங் காத்தளிக்குங் குலதீபன் வாழ்கவென்றே.

ப-ரை :—நான்கு நிலம் உம் - நால்வகை நிலங்களையும், நான்கு திசை உம் - நான்கு திசைகளையும், ஒரு நான்கு நெடு கடல்கள் உம் - ஒப்பற்ற நான்கு பெரிய கடல்களையும், நான்கு குலம் உம் - நால்வகைக்

குலங்களையும், காத்து அளிக்கும் - காத்து அருள் புரியும், குல தீபன் - குலத்தை விளங்கச் செய்பவனாகிய முதற் குலோத்துங்கன், வாழ்க என்று——,

நான்கு உகம் உம் - நான்கு யுகங்களையும், நான்கு பொருள் உம் - நான்கு பொருள்களையும், ஒரு - ஒப்பற்ற, நான்கு உபநிடதம் உம் - நான்கு வேதங்களையும், நான்கு முகம் உம் - நான்கு தலைகளையும், படைத்து உடைய - படைத்திருக்கின்ற, முதல்வனை - (படைப்புத் தொழிலுக்கு) முதல்வனாகிய பிரமதேவனை, யாம் பரவுதும் - நாம் துதிப்போம்.

வி - ரை :—நான்கு யுகம் முதலியவற்றைப் படைத்துடைய பிரமனைப் போல், நான்கு நிலம் முதலியவற்றைக் காத்தளிக்குங் குலதீப னெனக. நான்கு யுகமாவன :—கிருத, திரேதா, துவாபர, கலி யென்பன; நான்கு யுகம் படைத்துடைமையாவது - நான்கு யுகங்களையுங்கடந்து பல்லூழிக்கால மழியா திருத்தல். நான்கு பொருளாவன: அறம், பொருள், இன்பம், வீடென்பன. நான்கு வேதமாவன: இருக்கு, யசுர், சாம, அதர்வண மென்பன. நான்கு நில மாவன: முல்லை, மருதம், நெய்தல், குறிஞ்சி யென்பன. நான்கு கடலாவன: கீழ்க்கடல், மேற்கடல், வடகடல், தென்கடலென்பன. நான்கு குலமாவன: பிராமண, க்ஷத்திரிய, வைசிய, வேளாள குலங்களாம். குலதீபன் - (தன் புகழால் தான் பிறந்த) குலத்தை விளங்கச் செய்பவன்; [தா-நகக] 'வலநேமி தனிகோலு குலதீபன்', 'அடலாழி தனியேவு குலதீபன்' [தக்கயா - உ - சு] என்றார் ஒட்டக் கூத்தரும். நான்கும் என்பவற்றிலுள்ள உம்மைகள் உகம் முதலியவற்றோடு கூட்டப்பட்டன; இவை முற்றுப்பொருளை யுணர்த்தின. குல தீபன்—வடமொழிப் புணர்ச்சி யாதலால் வலி யியல்பாயிற்று. 'குலதீபன் வாழ்க வென்று, முதல்வனை யாம் பரவுதும்' என வினை முடிக்க. (ரு - சு)

## சூரியன் துதி

எ. பேராழி யுலகனைத்தும் பிறங்கவள ரிருணீங்க
ஓராழி தனைநடத்து மொண்சுடரைப் பரவுதுமே.

அ. பனியாழி யுலகனைத்தும் பரந்தகலி யிருணீங்கத்
தனியாழி தனைநடத்துஞ் சயதுங்கன் வாழ்கவென்றே.

ப - ரை :—பனி ஆழி - குளிர்ச்சியாகிய கடலால் சூழப்பட்ட, உலகு அனைத்தும் - உலகங்கள் எல்லாவற்றிலும், பரந்த - பரவியுள்ள, கலி இருள் நீங்க - வறுமையாகிய இருளொழிய, தனி ஆழிதனை - ஒப்பற்ற (தனது) ஆணைச் சக்கரத்தை, நடத்தும் - செலுத்தும், சயதுங்கன் - முதற் குலோத்துங்கன், வாழ்க என்று——,

பேர் ஆழி - பெரிய கடலால் சூழப்பட்ட, உலகு அனைத்தும் - உலகங்களெல்லாம், பிறங்க - (தனது ஒளியால்) விளங்கவும், வளர் இருள் - மிக்க இருள், நீங்க - ஒழிபவும், ஓர் ஆழி தனை - ஒற்றைச் சக்க ரத்தையுடைய (தன்) தேரை, நடத்தும் - செலுத்தும், ஒண் சுடரை - ஒளி பொருந்திய சூரியனை, பரவுதும் - வணங்குவோம்.

வி - ரை :—ஞாயிறு உலகிருள் நீங்க ஓராழி நடத்துதல் போல், முதற் குலோத்துங்கன் கலியிருள் நீங்கத் தனியாழி நடத்துகிறனென்பதாம்.

[தா - உசுக] 'ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதும், காவிரி நாடன் திகிரி போற் பொற்கோட்டு, மேரு வலந்திரித லான்' [சிலப்-க-சு,சு] என இளங்கோ வடிகளும் ஞாயிற்றைத் துதித்துள்ளமை காண்க. சூரியன் தேர் ஒற்றைச் சக்கர முடைத்தென்பதை 'ஒற்றைநெடுந் திகிரியினன்' [வில்லிபா-கசு-ம் போர்-கஎங] எனவும், 'கொற்ற வெய்யோன், ஓராழித் தேர்மறைத்தானே' [அழகரந்-க] எனவும் வருவனவற்றாலறிக. சயதுங்கன்—வெற்றியா லுயர்ந்தவனென்பது. [தா-உகக, உகசு, ருசங] ஓராழி—இதில் ஆழியென்பது சினையாகு பெயராய்த் தேரை யுணர்த்திற்று. ஆழி யுலகு—மூன்றனுருபும் பயனு முடன்தொக்க தொகை. 'சயதுங்கன் வாழ்கவென்று, ஒண் சுடரைப் பரவுதும்' எனக் கூட்டுக. (எ - அ)

## கணபதி துதி

௯. காரணகா ரியங்களின்கட் டறுப்போர் யோகக்
 கருத்தென்னுந் தனித்தறியிற் கட்டக் கட்டுண்
டாரணமா நாற்கூடத் தணைந்து நிற்கும்
 ஐங்கரத்த தொருகளிற்றுக் கன்பு செய்வாம்.

௧௦. தனித்தனியே திசையானைத் தறிக ளாகச்
 சயத்தம்பம் பலநாட்டி யொருகூ டத்தே
அனைத்துலகுங் கவித்ததெனக் கவித்து நிற்கும்
 அருட்கவிகைக் கலிப்பகைஞன் வாழ்க வென்றே.

**ப - ரை :**—திசை யானை ஏ - (எட்டு) திக்கு யானைகளே, தனி தனி தறிகள் ஆக - தனித் தனித் தூண்களாக, சயம் தம்பம் பல நாட்டி - வெற்றித் தூண்கள் பலவற்றை நிலைநிறுத்தி, ஒரு கூடத்து - ஒப்பற்ற அண்டகோளகையை, கவித்தது என - போர்த்துக்கொண்டிருப்பது போல, உலகு அனைத்தும் - உலகங்களெல்லாவற்றையும், கவித்து நிற்கும் - மூடிக்கொண்டிருக்கும், அருள் கவிகை - அருளாகிய குடையை யுடைய, கலி பகைஞன் - (குடிகளின்) வறுமைக்குப் பகைவனாகிய முதற்குலோத்துங்கன், வாழ்க என்று——,

நால் ஆரணம் ஆம் - நான்கு வேதங்களாகிய, கூடத்து - யானைப் பந்தியில், அணைந்து - பொருந்தி, காரணம் காரியங்களின் - உயிரும் உடலுமாகியவற்றின், கட்டு அறுப்போர் - பந்தங்களை யொழிப்பவ ராகிய யோகிகள், யோகம் கருத்து என்னும் - தியானத்தையுடைய (தங்கள்) மனமென்னும், தனி தறியில் - ஒப்பற்ற தூணில், கட்ட - (தன்னை) பிணிக்க, கட்டுண்டு - கட்டப்பட்டு, நிற்கும் - (அங்கு நிலைத்து) நிற்கும், ஐந்து கரத்தது - ஐந்து கைகளை யுடையதாகிய, ஒரு களிற்றுக்கு - ஒப்பற்ற யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளினிடத்தில், அன்பு செய்வாம் - அன்பு செலுத்தித் துதிப்போம்.

வி - ரை :—விநாயகக் கடவுள் ஆரணமாங் கூடத்து யோகியருள்ள மென்னுந் தறியிலணைந்து நிற்றல் போல், அபயன் கவிகை அண்டகோளகை யைப் போர்த்தாற்போல உலகங்களெல்லாவற்றையும் கவித்து நின்றதென்க. 'ஆரணமா நாற்கூடத் தணைந்து, கருத்தென்னுந் தனித்தறியிற் கட்டக் கட்டுண்டு' எனக் கூட்டுக. காரணம்-உயிர், காரியம்-உடல்; இதனை, 'காரண நிற்க

வென்றுங் காரியங் கெடுதல் வீடு' [திருவாத-புத்தரை-௬௪] என்றதனுலறிக. காரணபந்தமாவது - அகப்பற்று; அதாவது தானல்லாத உடம்பைத் தானெனக் கருதி அதன்கண் செய்யும் பற்றும். காரிய பந்தமாவது - புறப்பற்று; அதாவது பெண்டு, பிள்ளை, பொருள் முதலியவற்றின்மேல் செலுத்தும் பற்றும். இவ் விருவகைப் பற்றுக்களையு மொழித்த யோகிய ரென்பதாம். முற்கால மன்னர் கள் தங்கள் மாற்றாரை வென்றபின், தம் வெற்றிக் குறிகுறியாகக் கல் தூண் நட்டு அவைகளில் தாம் பெற்ற வெற்றியைப் பொறித்த வியல்பு; அவை சயத்தம்பம் எனப்படும். [தா-௨0௬, ௪௭௧] 'திசையானைத் தறிகளாகச் சயத் தம்பம் பலநாட்டி' என்றதனால், முதற்குலோத்துங்கன் திசையுள்ள வளவுஞ் சென்று வெற்றி பெற்றன னென்பதாம். இஃதுயர்வு நவிற்சியணியாம். எட்டுத் திசை யானைகளாவன :—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்ரதீபம் என்பன. 'தண்ணிய வெழிலி தலையா தாயினும், வயிறுபசிகூர வீயலன்' [பதிற்று - ௨0] என்றபடி, வற்கடம் பரந்த காலத்தும் தன் குடிகளைக் காப்பவனாதலால், 'கலிப் பகைஞன்' என்றார். கலி—துன்ப மெனினுமாம்; அறுப்போர்—வினையாலணையும் பெயர், எழுவாய்; களிற்றுக்கு—உருபு மயக்கம்; கருத்தென்னுந் தறி, ஆரணமாங் கூடம்—உருவக வணிகள் (ரூபகாலங்காரம்). ௧0-ம் தாழிசையில் உவமையணி யுள்ளமை காண்க. 'கலிப்பகைஞன் வாழ்கவென்று, ஒரு களிற்றுக் கன்புசெய்வாம்' என முடிக்க. (௯ - ௧0)

## முருகவேள் துதி

௧௧. பொன்னிரண்டு வரைதோற்கும் பொருவரிய
நிறம்படைத்த புயமுங் கண்ணும்
பன்னிரண்டு மாறிரண்டும் படைத்துடையான்
அடித்தலங்கள் பணிதல் செய்வாம்.

௧௨. ஓரிரண்டு திருக்குலமு நிலைபெறவந்
தொருகுடைக்கீழ்க் கடலுந் திக்கும்
ஈரிரண்டு படைத்துடைய விரவிகுலோத்
தமனபயன் வாழ்க வென்றே.

ப - ரை.—ஓர் இரண்டு திரு குலமும் - ஒப்பற்ற இரண்டு மேன்மை யாகிய குலங்களும், நிலை பெற வந்து - (உலகத்தில்) நிலைத்து நிற்கும்படி தோன்றி, ஒரு குடை கீழ் - ஒப்பற்ற (தனது) குடை நிழலில், ஈர் இரண்டு கடலும் (ஈர் இரண்டு) திக்கும் - நான்கு கடல்களையும் (நான்கு) திக்குகளையும், படைத்துடைய - (தனக்கே உரிமையாய்) படைத்திருக் கின்ற, இரவி குல உத்தமன் - சூரிய குலத்திற் சிறந்தவனாகிய, அபயன் - முதற் குலோத்துங்க சோழன், வாழ்க என்று——,

இரண்டு பொன் வரை - இரண்டு மேரு மலைகள், தோற்கும் - (ஒப்பாகாமல்) தோல்வி யடையும், பொரு அரிய - (வேறு) ஒப்பில்லாத, நிறம் படைத்த - (சிறந்த) நிறம் பொருந்திய, பன்னிரண்டு புயமும் - பன்னிரண்டு தோள்களையும், ஆறு இரண்டு கண்ணும் - பன்னிரண்டு கண்களையும், படைத்துடையான் - படைத்திருப்பவராகிய முருகக் கட வுளின், அடி தலங்கள் - பாதங்களை, பணிதல் செய்வாம் - வணங்கு வோம்.

வி - ரை:—முருகக் கடவுள் ஆறிரண்டு புயமுங் கண்ணும் படைத்துள்ளமை போல், முதற் குலோத்துங்கனும் ஈரிரண்டு கடலுந்திக்கும் படைத்துள்ளா னென்பதாம். இருபுறத் தோள்களைக் கருதி, 'இரண்டு வரை' என்றார். பொன் மலைகளினும் நிறமும் அழகும் வலிமையும் படைத்த தோளென்பார், 'பொன் வரை தோற்கும் புயம்' என்றார். முருகக்கடவுள் ஆறு முகமும் பன்னிரண்டு தோளும் படைத்தவரென்பதை, 'மூவிரு முகனு முறைநவின் றொழுக லின்.........பன்னிரு கையும் பாற்பட வியற்றி' [திருமுரு-௧0௩-௧௧௮] என்றதனுலறிக. செய்வாம் - தன்மைப்பன்மை வினைமுற்று. 'பொன்னிரண்டு வரை தோற்கும்......புயம்' என்றது இல்பொருளுவமை யணியாம். (அபூதோ பமாலங்காரம்) 'அபயன் வாழ்கவென்று, படைத்துடையான் அடித்தலங்கள் பணிதல் செய்வாம்' என முடிக்க. (௧௧ - ௧௨)

## நாமகள் துதி

௧௩. பூமாதுஞ் *சயமாதும் பொலிந்து வாழும்
 புயத்திருப்ப மிகவுயரத் திருப்ப ளென்று
நாமாதுங் கலைமாது மென்னச் சென்னி
 நாவகத்து ளிருப்பாளை நவிலு வாமே.

௧௪. எண்மடங்கு †புகழ்மடந்தை நல்ல னெங்கோன்
 யானவன்பா லிருப்பதுநன் றென்பாள் போல
மண்மடந்தை தன்சீர்த்தி வெள்ளை சாத்தி
 மகிழ்ந்தபிரான் வளவர்பிரான் வாழ்க வென்றே.

ப - ரை:—புகழ் மடந்தை - புகழாகிய பெண், எம் கோன் - எமது தலைவனுகிய முதற் குலோத்துங்கன், எண் மடங்கு நல்லன் - (ஏனைய அரசர்களினும்) பல மடங்கு சிறந்தவனுவான், யான் அவன்பால் - (ஆதலால்) நான் அவனிடம், இருப்பது நன்று - இருத்தலே நல்லது, என்பாள் போல - என்று கருதி இருப்பவள் போல, மண் மடந்தை - நிலமகள், தன் - (அந்த) முதற் குலோத்துங்கனுடைய, சீர்த்தி - மிக்க புகழாகிய, வெள்ளை சாத்தி - வெள்ளாடையைப் புனைந்து (அவன்பா லிருத்தலால்), மகிழ்ந்த பிரான் - களிப்படைந்த தலைவனும், வளவர் பிரான் - சோழநாட்டிலுள்ளவர்களுக்கு அரசனுமாகிய அந்த முதற் குலோத்துங்கன், வாழ்க என்று——,

பொலிந்து வாழும் - (வெற்றியால்) சிறந்து விளங்கும், புயத்து - (முதற் குலோத்துங்கன்) தோள்களில், பூ மாதும் - செந்தாமரை மலரில் வசிக்கும் திருமகளும், சயம் மாதும் - வீரமகளும், இருப்ப - குடியிருத்தலால், மிக உயரத்து - (அவ்விருவரினும்) மிகவும் உயர்ந்த விடத்தில், இருப்பள் என்று - இருப்பவள் என்று (யாவரும்) சொல்ல, சென்னி நா அகத்துள் - (முதற்குலோத்துங்க) சோழன் நாவில், நா மாதும் - நாமகளும், கலை மாதும் - கலைமகளும், என்ன இருப்பாளை - என்று சொல்லும்படி வீற்றிருப்பவளாகிய சரசுவதி தேவியின் புகழை, நவிலுவாம் - சொல்லித் துதிப்போம்.

வி - ரை:—பூமாதினுஞ் சயமாதினும் கலைமகள் உயர்ந்த விடத்திலிருத்தல் போல, அரசர்களில் உயர்ந்தவனுகிய முதற் குலோத்துங்கனிடத்தில், மண் மகள் அவன் புகழாகிய வெள்ளாடை புனைந்து உறைபவளாயின ளென்க.

பிரமன் நாவிலும் புலவர் நாவிலும் வசித்தலால் நாமகளெனவும், கல்விக்குத் தலைவியாதலால் கலைமகளெனவும் சரசுவதி தேவியை அறிஞர் கூறுவர். 'சென்னி நாவகத்து ளிருப்பாள்' என்றதனால், முதற் குலோத்துங்கன் கல்வி கேள்விகளில் மிகவும் வல்லவனென்பது விளங்கும். புகழ் வெண்ணிற மாகக் கூறப்படுதலை, 'வேல்சி வந்தது கீர்த்திவெ ளுத்ததே' [தா-உருசு] எனவும், 'பேர்கறுப்ப னிறஞ்சிவப்பன் கீர்த்தியினால் வெளுப்பன்' [தனிப். க-ம் பா-சொக்கநா-க] எனவும் வருமாற்றா னுணர்க. மண் மடந்தை அவன்பாலிருத்த லாவது - நிலவுலக முற்றும் அவனுக்கே யுரிமையாதல்; வெள்ளை - பண்பாகு பெயர்; (அவன்பா லிருத்தலால்) என்றது அவாய்நிலையாய் வருவித்துரைக்கப் பட்டது. என்பாள் - வினையாலணையும் பெயர். கற்றோர் நாவில் இயல்பாய் அமைந்திருக்கும் கலைமகளானவள் பூமாதினும் சயமாதினும் உயர்ந்தவிடத்தில் வீற்றிருப்பதாய்க் கவி தன் கருத்தை யேற்றிக் கூறியிருத்தலால், இது தற்குறிப் பேற்ற வணியாம் (உத்பிரேக்ஷாலங்காரம்). கசு-ம் செய்யுளும் இவ்வணியே யாமென்பதை உய்த்துணர்க. 'வளவர்பிரான் வாழ்க வென்று, இருப்பாளை நவிலுவாம்' எனக் கூட்டுக. பா - பே:—* செயமாதும் பொருந்தி, † புகழ் மடங்கா. (கங - கச)

## உமையவள் துதி

கரு. செய்யதிரு மேனியொரு பாதிகரி தாகத்
தெய்வமுத னாயகனை யெய்தசிலை மாரன்
கையின்மலர் பாதமலர் *மீதுமணு காநங்
†கன்னிதன் மலர்க்கழல்கள் சென்னிமிசை வைப்பாம்.

கசு. கறுத்தசெழி யன்கழல்சி வப்பவரை யேறக்
கார்முகம்வ ளைத்துதியர் கோமகன்மு டிக்கட்
பொறுத்தமலர் பாதமலர் மீதணிய நல்கும்
பூழியர்பி ரானபயன் ‡வாழ்கவினி தென்றே.

ப-ரை :—கறுத்த செழியன் - கோபித்துப் பகைத்த பாண்டியன், கழல் சிவப்ப - (தன்) பாதங்கள் சிவக்குமாறு, வரை ஏற - மலைகளி லேறி யோடும்படி, கார் முகம் வளைத்து - வில்லை வளைத்து (அவனை) வென்று, உதியர் கோமகன் - சேர அரசன், முடி கண் - தலையில், பொறுத்த மலர் - அணிந்த மலரை, பாதம் மலர் மீது - (தன்) பாத மாகிய தாமரை மலரில், அணிய - அணிதலால், நல்கும் - (அவனுக்கு) அருள் புரியும், பூழியர் பிரான் - பாண்டி நாட்டிலுள்ளவர்களுக்குத் தலைவனாகிய, அபயன் - முதற் குலோத்துங்க சோழன், இனிது - நன்றாய், வாழ்க என்று——,

செய்ய திரு மேனி - சிவந்த (தனது) அழகிய உடம்பில், ஒரு பாதி கரிது ஆக - ஒரு பாதி யளவு கரிய நிறமுடையதாகும்படி, தெய்வம் முதல் நாயகனை - தெய்வங்களுக்கெல்லாம் முதற் கடவுளாகிய சிவபெரு மான் மேல், எய்த - தொடுத்த, சிலை மாரன் - (கரும்பு) வில்லையுடைய மன்மதனது, கையில் மலர் - கையிலுள்ள (கணையாகிய) மலர்கள், பாதம் மலர் மீதும் - (தமது) பாதமாகிய தாமரை மலர்களிலும், அணுகா - (சென்று) நெருங்காத, நம் கன்னி தன் - நமது உமாதேவியா

ருடைய, மலர் கழல்கள் - தாமரை மலர் போன்ற பாதங்களை, சென்னி மிசை வைப்பாம் - (நமது) தலையில் வைத்து வணங்குவோம்.

வி - ரை:—மன்மதன் அம்பாகிய மலர் உமாதேவியின் பாதத்திலணுகவில்லை யாயினும், சோவேந்தன் முடிமலர் முதல் குலோத்துங்கன் பாதத்தி லணுக லாயின தென்க. 'ஒரு பாதி கரிதாக' என்றது சிவபிரான் இடப்பாகத்தி லுள்ள உமாதேவியின் கூற்றை; அப்பெருமான் உடலிற்பட்ட மாரன் மலர்க் கணைகள் உமாதேவியின் பாதத்தின்மீதும் படவில்லை யென்பது முன் செய்யு ளின் பொருளாம். அதனால், அவ்வம்மையை, 'கன்னி' யென்றார். தன்னை யெதிர்த்த பாண்டியனை வென்று தன்னை வணங்கிய சேரனைக் குலோத்துங்கன் காத்தனனென்பது கீழ்ச்செய்யுளின் கருத்தாம்: [தா-உஎ0, ௩அ௨, ௩அ௩] பாண்டியனைத் துரத்தி அவன் நாட்டைத் தனக்குரிமையாக்கிக் கொண்டமை யால் சோழனை, 'பூழியர் பிரான்' என்றார். [தா-௩அக] 'மீனவன் மீனவ ரேக விடுபடை மானதன்' [தக்கயா-அ0டு] என ஒட்டக்கூத்தரும் சோழனை மீனவன் எனக் கூறியுள்ளமை காண்க. 'முள்ளாறுங் கல்லாறுந் தென்ன ரோட, [தா - கூடு] என்பர் பின்னும். ஏற, அணிய—இவ்வினை யெச்சங்கள் முறையே காரியப் பொருளிலும் காரணப் பொருளிலும் வந்தன. வளைத்து - காரணங் காரியமாக உபசரிக்கப்பட்டது. 'வாழ்க வினி தென்று, சென்னிமிசை வைப்பாம்' என முடிக்க. பா-பே :—*மீதுமணு காத, †கன்னிகம லக்கழல்கள், ‡வாழ்க வினி யென்றே, (கடு - கசு)

## சத்த மாதர்கள் துதி

கஎ. மேதி புள்ளலகை தோகை யேறுவணம்
 வேழ மென்றகொடி யேழுடைச்
சோதி மென்கொடிக ளேழி னேழிருது
 ணைப்ப தந்தொழநி னைத்துமே.

கஅ. கேழன் மேழிகலை யாளி வீணைசிலை
 கெண்டை யென்றினைய பல்கொடி
தாழ மேருவி லுயர்த்த செம்பியர்த
 னிப்பு லிக்கொடித ழைக்கவே.

ப - ரை :—கேழல் - பன்றி, மேழி - கலப்பை, கலை - மான், யாளி - சிங்கம், வீணை—, சிலை - வில், கெண்டை - கெண்டை மீன், என்ற இனைய - என்று சொல்லப்பட்ட இவை போன்ற, பல் கொடி - பலவகை யாகிய (துகில்) கொடிகள், தாழ - தாழ்வடையவும், மேருவில் - மேரு மலையின் மேல், உயர்த்த - உயர்த்து நிறுத்திய, செம்பியர் - சோழ மன்னரது, தனி புலி கொடி - ஒப்பற்ற புலி வடிவமெழுதிய துகிற் கொடி, தழைக்க - செழிப்புற்று விளங்கவும்,

மேதி - எருமை, புள் - அன்னப் பறவை, அலகை - பேய், தோகை- மயில், ஏறு - எருது, உவணம் - கருடப் பறவை, வேழம் - யானை, என்ற ஏழ் கொடி - என்று சொல்லப்பட்ட ஏழு துகில் கொடிகளையும், உடை - (தமக்கு உரிமையாக) உடைய, சோதி - ஒளியையுடைய, மெல் கொடிகள் ஏழின் - மெல்லிய பூங்கொடிகள் போன்றவராகிய சத்த மாதர்களினுடைய, துணை ஏழ் இரு பதம் - துணையாகிய பதினான்கு பாதங்களையும், தொழ நினைத்தும் - தொழக் கருதுவோம்.

வி - ரை :—சத்த மாதர்கள் மேதி முதலிய கொடிகளை உயர்த்திப் பிடித்திருத்தல்போல், சோழவேந்தர்கள் (தம் மாற்றர்களின் கேழல் முதலிய கொடிகளைத் தாழ்த்தி) தமது புலிக் கொடியை மேருவில் உயர்த்தியுள்ளா ரென்பதாம். சத்த மாதர்களும் அவர்தங் கொடிகளும் பின்வருமாறும் :—அவர்களில், சாமுண்டிக்கு எருமையும், அபிராமிக்கு அன்னமும், வராகிக்கு அலகையும், கௌமாரிக்கு மயிலும், மயேச்சுவரிக்கு எருதும், நாராயணிக்குக் கருடனும், இந்திராணிக்கு யானையுங் கொடிகளாம். கேழல், மேழி முதலியன அக்காலத்து மன்னர்களின் துகிற்கொடிகளாம் [தா-௧0௨,உ௬௯]. மென்கொடிகள்—அடை யடுத்த உவமையாகுபெயர்; ஏழின்—இதில் ஏழு என்பது எண்ணலளவை யாகுபெயராய்ச் சத்த மாதர்களை யுணர்த்தினது. என்றினைய—நிலை மொழியில் அகரந் தொக்கு நின்றது. தழைக்க—அகரவீற்று வினையெச்சம். 'கொடி தழைக்க, தொழ நினைத்தும்' என முடிக்க. (௧௭ - ௧௮)

## வாழி

௧௯. விதிமறை யவர்தொழில் விளைகவே
விளைதலின் முகில்மழை பொழிகவே
நிதிதரு பயிர்வள நிறைகவே
நிறைதலி னுயிர்நிலை பெறுகவே.

௨0. *தலமுத லுளமனு வளர்கவே
சயதர னுயர்புலி †வளர்கவே
நிலவுமிழ் கவிகையும் வளர்கவே
நிதிபொழி கவிகையும் வளர்கவே.

ப - ரை :—விதி மறையவர் - (பல) நூல்களை யுணர்ந்த வேதியர்களின், தொழில் - (வேள்வி) தொழில், விளைக - மிகுக, விளைதலின் - (வேள்வித் தொழில்) மிகுதலினால், முகில் - மேகங்கள், மழை பொழிக—, நிதி தரு - (மழை பொழிதலினால் பலவகை) செல்வங்களைத் தருகின்ற, வளம் பயிர் - வளப்பமாகிய பயிர் வகைகள், நிறைக - (நாடெங்கும்) நிரம்புக, நிறைதலின் - (பயிர் வகைகள்) நிறைதலால், உயிர் - (நாட்டிலுள்ள) உயிர்கள், நிலை பெறுக - (நீண்ட காலம்) நிலை பெற்று வாழ்க.

தலம் - உலகமும், முதல் உள - முதன்மையா யிருக்கின்ற, மனு வளர்க - மனுநீதியும் மிகுக, சயதரன் - முதற் குலோத்துங்க மன்னனுடைய, உயர் புலி - சிறந்த புலிக் கொடியானது, வளர்க - (நெடுங் காலம்) வாழ்க, நிலவு உமிழ் - ஒளியை வீசும், கவிகையும் - (முதற் குலோத்துங்கன்) வெண்கொற்றக் குடையும், வளர்க - சிறப்படைக, நிதி பொழி - (இரப்பவர்க்கு) பொருள் சொரியும், கவி கையும் - (கீழ் நோக்கி) கவிந்திருக்கும் (அவன்) கைகளும், வளர்க—.

வி-ரை :—இதுகாறுங் கடவுள் வணக்கங் கூறி, இச்செய்யுளில் அறுவகை வாழ்த்துக் கூறுகிறார். முனிவர், பசு, பார்ப்பார், அரசர், மழை, நாடு என்பவற்றை வாழ்த்தல் அறுவகை வாழ்த்தாம். இவற்றுட் சில குறைந்தும் வரும். இங்கே முனிவரும் பசுவு மொழிந்த ஏனைய நான்கு பொருள்களை வாழ்த்தினர். 'மறையவர் தொழில்' என்றதனால் பார்ப்பனரையும், 'மழை பொழிக' என்றதனால் மழையையும், 'தலம்' என்றதனால் நாட்டையும், 'புலி, கவிகை' என்றதனால் அரசனையும் வாழ்த்தியுள்ளமை காண்க. 'வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு

முரித்தே' [தொல்கா-செய்-௧0௬] என்றமை யீண்டுக் கவனிக்கற் பாற்றும். விதி = நூல்; இதனை 'விதியாற்று ளாக்கிய மெய்க் கலவைபோல' [பரிபா-எ, ௨0] என்றதனாலறிக. விதி - கட்டளை யெனினுமாம். தொழில்—அறுவகைத் தொழிலுமாம்; அவை ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. மறையவர் தொழிலால் வானம் வழங்கலை உளக, நிசo-ம்—தாழிசைகளிலுங் காண்க. 'தலமுத லுளமனு' என்றதற்கு உலகத்தில் முதன்மையா யிருக்கின்ற மனுநீதி எனப் பொருள் கோடலுமாம். விளைகவே—வியங்கோள் வினைமுற்று, இதிலுள்ள ஏகாரம் அசை; ஏனையவற்றிலும் இவ்வாறே கொள்க. கவிகை இரண்டனுள் முந்தினது தொழிலாகு பெயரும் பிந்தினது வினைத்தொகையுமாம். மனு—கருத்தா வாகுபெயர்; முன் தாழிசையில் காரண காரியங்கள் முறையா யமைந்துள்ளமையால், அது காரணமாலை யணியும், (காரணமாலாலங்காரம்). பின் தாழிசையில் வளர்க என்னுஞ் சொல் ஒரே பொருளில் வந்துள்ளமையால், இது சொற்பொருட் பின்வரு நிலையணியுமாம். (உபயாவ்ருத்தி தீபகாலங்காரம்) பா-பே:—* தலமுழுதினும், † தழைகவே. (௧௬ - ௨0)

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

---

# ௨. கடை திறப்பு

**கடை திறப்பு**:—இஃதிரண்டன் தொகை; திறப்பு - புவ் விகுதி பெற்ற தொழிற் பெயர்; கதவைத் திறக்குமாறு வேண்டுதலை யுணர்த்துஞ் செய்யுட்களின் பகுதி யென்பது இதன் பொருளாம்.

போர்மேற் சென்ற வேந்தனும், அவன் படைத்தலைவனும் குறித்த காலத்து வாராமல், காலந் தாழ்த்து வரக் கண்ட அவர்தம் மனைவியர் முனிவெய்திக் கதவைத் தாளிட்டுக் கொண்டனர். அதனைக் கண்ட புலவ ரொருவர் அம்மடந்தையரை யணுகி, அக்காவலன் முதலானோர் வீரச்செயல்களை விரித்துக் கூறித் தாளிட்ட கதவைத் திறக்குமாறும் அவர்தம் வெற்றியின் சிறப்பைக் கேட்டு மகிழ்வெய்துமாறும் அம் மகளிரை யின்மொழிகளால் வேண்டுதல் போல் புனைந்துரைத்தல் கடை திறப்பி னிலக்கணமாம். அதன்படி, பாட்டுடைத் தலைவனாகிய முதற் குலோத்துங்கனும், அவன் படைத்தலைவனாகிய கருணாகரனும், படை மள்ளரும் கலிங்க நாட்டை வென்று மீண்ட செய்தியைப் புலவர் ஒருவர் ஊடிய மகளிர்க் கெடுத்தோதிக் கதவைத் திறக்குமாறு வேண்டு கிறு ரென்க. இதில், 'ஊட லுணர்தல் புணர்த லிவைகாமம், கூடியார் பெற்ற பயன்' [திருக்கு - ௧௧0௯] என்றபடி, அம்மடவார் தங் கொழுநரோடு ஊடினமையும், அவ்வூடல் நீங்கினமையும் பின்னர் அவரோடு கூடினமையும் ஆசிரியர் ஆங்காங்கு எடுத்தோதி, அப்பெண்மணிகளின் மெல்லிய உறுப்புக்களையும் அழகு பெறக் கூறியுள்ளமை வியக்கற் பாலதாம்.

### மகளிர் வடிவழகு

உக. சூதள வளவெனு மிளமுலைத்
துடியள வளவெனு *நுண்ணிடைக்
காதள வளவெனு மதர்விழிக்
கடலமு தனையவர் திறமினோ.

ப - ரை :—சூது அளவு - சூதாடு கருவியின் அளவே, அளவு - அளவாகும், எனும் - என்று சொல்லத் தகும், இளம் முலை - இளமையாகிய கொங்கைகளையும், துடி அளவு - உடுக்கையின் அளவே, அளவு - அளவாகும், எனும் - என்று சொல்லத் தகும், நுண் இடை - நுட்பமாகிய இடுப்பினையும், காது அளவு - காதையளாவும், அளவு எனும் - அளவு என்று சொல்லத்தகும், மதர் விழி - செருக்கிய கண்களையுமுடைய, கடல் அமுது அனையவர் - திருப்பாற் கடலில் தோன்றிய அமுதம் போன்ற பெண்களே, திறமின் - (கதவை) திறவுங்கள்.

வி - ரை :—சூதாடு கருவியின் அளவாகிய கொங்கைகளையும், உடுக்கையின் அளவாகிய இடுப்பினையும் காதையளாவுங் கண்களையுமுடைய அமுதம் போன்ற பெண்களே, கடை திறமின் என்பதாம். சூது, துடி என்பன ஆகுபெயர்களாய் அவற்றின் வடிவங்களை யுணர்த்தின. நீண்டகன்ற கண்களென்பார் 'காதள வளவெனு மதர்விழி' என்றார். 'காதளவாய் நின்ற கயற்கண்ணாள் கலர்போல, சூதளவாய் நின்ற துணைமுலையாள்' [சிலேடையுலா - மங்கை-கக—உ0] என்றார் பிறரும். அமுது தன்னை யுண்டார்க் கின்பந் தருதல் போல் இம்மெல்லியலாருந் தம்மைப் புணரும் தங்கொழுநர்க் கின்பம் பயப்பவ ரென்பார், 'கடலமு தனையவர்' என்றார். மதர் விழி—வினைத்தொகை ; திறமினோ—ஏவற்பன்மை வினைமுற்று. இதிலுள்ள ஓகாரம் ஈற்றசை. இச்செய்யுளில் உவமையணி யுள்ளமை காண்க. பா - பே :—* நுணுகிடை. (௧)

### மகளிர் தனமழகு

உஉ. புடைபட விளமுலை வளர்தொறும்
பொறையறி வுடையரு நிலைதளர்ந்
திடைபடு வதுபட வருளுவீர்
இடுகத வுயர்கடை திறமினோ.

ப - ரை :—இளம் முலை - இளமையாகிய முலைகள், புடை பட - (மார்பாகிய) இடத்திற் பொருந்த, வளர் தொறும் - வளருந்தோறும், பொறை - (பிறர் செய்யுந் தீங்குகளை) பொறுத்தலும், அறிவு உடையரும் - மெய்பறிவு முடையவராகிய யோகியரும், நிலை தளர்ந்து (தங்கள் மன) நிலை குலைந்து, இடை படுவது - (உங்கள்) இடுப்புப் படுந் துன்பத்தை, பட அருளுவீர் - படும்படி செய்கின்ற பெண்களே, உயர் கடை - மேலாகிய வாசலில், இடு கதவு - தாளிட்ட கதவை, திறமின்——,

வி - ரை :—முற்றும் போந்திலா முலைகளென்பார், 'இள முலை' என்றார். இள முலைகளே யோகியரின் மனநிலையைக் குலைக்கு மெனின், முதிர்ந்த முலைகளின் செயலை மொழிய வியலா தென்பதாம். புடை - இடம்; 'புடைதலை முதல் வளாகம்', [சூடா-நிக-ரு-சுரு] என்றதனாலறிக; பக்கங்கள் எனினுமாம். இடை படுந் துன்பமாவது, கொங்கைகளின் பாரத்தைத் தாங்கவியலாமல் அது வருந்தல்; 'இற்றிடை மெலியச்செம்மாந் தெழுமுலைப் பாரம்' [நைட-மணம்-ருரு]

எனவும், 'நித்தமுலை, அறவே பருத்தன நீரோ குழலி லமர்ந்துமலர், நறவேயுண் டாடுகின் றீர்நடைப் போம்விண்டு நண்ணுவிரே' [திருவேங்-கலம்-சகூ] எனவும் வருமாறு காண்க. யோகியரும் நிலைகுலைவாரெனின், ஏனைய ஆடவர் செயலை யியம்பவேண்டுவ தின்றென்பதாம். பொறையறிவு—உம்மைத்தொகை; உடைய ரும்—உம்மை உயர்வு சிறப்பு; படுவது—வினையாலணையும் பெயர். (உ)

மகளிர் நடையழகு

உங. சுரிகுழ லசைவுற வசைவுறத்
துயிலெழு மயிலென மயிலெனப்
பரிபுர வொலியெழ வொலியெழப்
பனிமொழி யவர்கடை திறமினோ.

ப-ரை:—பனி மொழியவர் - குளிர்ச்சியாகிய சொற்களைப் பேசும் பெண்களே, துயில் எழும் - தூக்கத்தினின்று எழுகின்ற, மயில் என மயில் என - மயில்களின் கூட்டமென்று (கண்டோர்) சொல்லவும், சுரி குழல் - சுருண்ட கூந்தல், அசைவு உற அசைவு உற - மிகுதியாய் அசையவும், பரி புரம் - (பாதங்களில் அணிந்த) கிண்கிணிகளின், ஒலி எழ ஒலி எழ - ஓசை மிகுதியாய் உண்டாகவும், கடை திறமின் - (நடந்து வந்து வாயில்) கதவைத் திறவுங்கள்.

வி-ரை:—சாயலுக்கும் அழகுக்கும் மயில் மகளிர்க்குவமை; 'களிமயிற் சாயலும்' [சிலப்-அ-அள] எனவும், 'எரிமருள் வேங்கை யிருந்த தோகை, இழை யணி மடந்தையிற் றோன்று நாட' [ஐங்கு-உகூச] எனவும், 'மயிற்குழாம், ஒடி வளைக்கின்ற தொப்ப' [நளவெ-சுயம்-உரு] எனவும் வருமாறு காண்க. மகளிர் நடக்குங்கால், கூந்தலசைதலும் காலணி ஒலித்தலுமாகிய இயல்பாகிய தன் மையை ஆசிரியர் இதில் மொழிந்துள்ளமையால், இது தன்மை நவிற்சியணியாம் (ஸ்வபாவோக்தியலங்காரம்). 'துயிலெழு மயிலென' என்றது உவமையணியாம். அடுக்குகள் மூன்றும் மிகுதிப்பொருளில் வந்தன. (ங)

மகளிர் தம் நெஞ்சினோடூடுதல்

உச. கூடிய வின்கன வதனிலே
கொடைநர துங்கனொ டணைவுறு
தூடிய நெஞ்சினொ டூடுவீர்
உமது நெடுங்கடை திறமினோ.

ப-ரை:—இன் கனவு அதனிலே-இனிய கனவில், கூடிய (உம்மிடம் வந்து) சேர்ந்த, கொடை - (தன்னைக் கேட்பவர்க்கு வேண்டியவற்றை) கொடுத்தலையுடைய, நரதுங்கனொடு - மனிதர்களிற் சிறந்தவனாகிய முதற் குலோத்துங்கனை, அணைவு உறுது - தழுவாமல், ஊடிய - பிணங்கிய, நெஞ்சினொடு - (உங்கள்) மனத்தினோடு, ஊடுவீர் - பிணங்குகின்ற பெண் களே, உமது நெடு கடை - உமது உயர்வாகிய கதவை, திறமின்——,

வி-ரை:—முதற் குலோத்துங்கன் தன் காதற்கிழத்தியரைப் பிரிந்து சென்று குறித்த காலத்து வாராமையால், அவர்தம் நெஞ்சு அவனைக் கனவிற் கண்ட காலத்து அவனோடூடின தென்க. அவ்வேந்தனை நனவிற் காணாவிடினும் கனவி லாயினுங் காணப்பெற்றும், 'அந்தோ! அவனைத் தழுவா தொழிந்தனையே' என அத்தையலார் தம் நெஞ்சைத் தாமே வெறுத்தன ரென்பார், 'நெஞ்சினோடூடுவீர்' என்றார். பிரிந்து சென்ற கொழுநனைக் காணப்பெற்ற கனவாதலின் 'இன் கனவு' எனப்பட்டது. நரதுங்கனோடு—உருபு மயக்கம். (ச)

மகளிர் துகிலை மைந்தரீர்த்தல்

உரு. விடுமி னெங்கடுகில் விடுமி னென்றுமுனி
வெகுளி மென்குதலை துகிலினைப்
பிடிமி னென்றபொருள் *விளைய நின்றருள்செய்
பெடைந லீர்கடைக டிறமினோ.

ப - ரை:—முனி வெகுளி - வெறுக்குங் கோபத்தோடு, மென் குதலை - இனிய குதலைச் சொற்களால், எங்கள் துகில் விடுமின் விடுமின் - எம்முடைய ஆடையை விடுங்கள் விடுங்கள், என்று - என்று சொல்லி, துகிலினை பிடிமின் - (எம்முடைய) ஆடையைப் பிடியுங்கள், என்ற பொருள் விளைய - என்ற பொருள் தோன்றும்படி, நின்று - (அவ்விடம் விட்டகலாமல்) நின்று, அருள்செய் - (உங்கள் கணவரை நோக்கி) சொல்லுகின்ற, பெடை நலீர் - பெண் அன்னம் போன்ற அழகிய பெண்களே, கடைகள் திறமின்——,

வி - ரை:—பள்ளியறையிலுள்ள ஆடவர் ஊடல்கொண்ட தங்காதல் மடவார் துகிலினைக் காம வேட்கையால் பற்றி யீர்த்தனர். அஃதம் மடவார்க் கொருபுற மின்பமும் மற்றொரு புறம் நாணமும் விளைத்தலின் அவர்கள், 'எங்கள் துகில் பிடிமின்' என்ற பொருள் தோன்ற அவற்றை, 'விடுமின்' என்றன ரென்க. 'உண்ணிலாய வேட்கையா லூடினாரை யாடவர், வண்ணமே கலைகளைப் பற்ற' [சீவகசி-எஉ] என்றதனால், ஊடிய மகளிர் துகில் முதலியவற்றை ஆடவர் பற்றி யீர்க்குமா றறிக. கணவர்மாட் டன்புங் காமத்தால் நலிவு மெய்திய மகளிர்பால் தோன்றிய மொழியாகலின், 'மென் குதலை' எனப்பட்டது. குதலையை மழலை யென்பர் பரிமேலழகர். 'தம்மக்கள், மழலைச்சொல் கேளா தவர்' [திருக்கு-சுசு] என்றதிற் காண்க. குதலை யென்பது பொருள் தோன்றாச் சொல்லெனவும், மழலை யென்பது ஒருவாறு பொருள் தோன்றுஞ் சொல் லெனவுங் கூறுவாரு முளர். முனி வெகுளி - வினைத்தொகை; 'விடுமின்...... விடுமின்' என்றது விரைவையும், 'பிடிமின்' என்றது மகிழ்ச்சியையு முணர்த்தும். நல்லீர்—நற்குணமமைந்த பெண்களே யெனினுமாம். பா - பே:—* விளைய நின்றனும். (ரு)

மகளிர் நகக்குறி தடவல்

உசு. எனத டங்கவினி வளவ துங்கனருள்
எனம கிழ்ந்திரவு கனவிடைத்
தனத டங்கண்மிசை நகந டந்தகுறி
தடவு வீர்கடைக டிறமினோ

ப - ரை:—வளவர் துங்கன் - சோழர்களில் சிறந்தவனாகிய முதற் குலோத்துங்கனுடைய, அருள் அடங்க - அருள் முழுதும், இனி எனது - இனி என்னுடையதாம், என மகிழ்ந்து - என்று களிப்படைந்து, இரவு கனவு இடை - இரவிற் காணுங் கனவில், தனம் தடங்கள் மிசை - (உங்கள்) கொங்கைகளில், நகம் நடந்த - (அம்மன்னவனுடைய கை) நகங்களால் உண்டான, குறி - நகக் குறிகளை, தடவுவீர் - (நனவில்) தடவிப் பார்க்கும் பெண்களே, கடைகள் திறமின்——,

வி - ரை:—முதற் குலோத்துங்கன் காதற் கிழத்தியர் அவனை இடை விடாமற் சிந்தித்திருந்தமையே, அவன் அவர்கள் கனவில் தோன்றினமைக்குக் காரணமாம். கனவில் நிகழ்ந்த நகக் குறியை அப்பெண்மணிகள், 'நனவினுற் கண்டதூஉவு

மாங்கே கனவுந்தான், கண்ட பொழுதே யினிது' (திருக்கு-கஉகரு) என்றபடி, கனவிற்கும் நனவிற்கும் வேற்றுமையறியாமல், அவற்றை நனவில் தடவிப் பார்க்க லாயின ரென்க. 'நனவினாற் போலு நறுநுதா லல்கல், கனவினாற் சென்றேன்' (கலி-கூஉ) என்றமையும் இங்குக் கவனிக்க. கனவின்கண் அவன் அவர்களை முயங்கி யின்பம் பயந்தமையின், 'வளவதுங்க னருளடங்க வினியெனது' என அவர்களில் ஒவ்வொருத்தியும் தனித்தனிக் கருதி மகிழ்ந்தன ளென்க. வளவ துங்கன், 'சில விகாரமா முயர்திணை' [நன்-கருகூ] என்றதனால், நிலைமொழி யீற்றில் மெய்கெட்டது. இஃதேழன் தொகை; வளவனாகிய துங்கன் எனின் இருபெயரொட்டுப் பண்பாம். கனவில் நிகழ்ந்ததை நனவில் நிகழ்ந்ததாய் அம் மகளிர் மயங்கினமையால், இது மயக்கவணியாம். (ப்ராந்தி யலங்காரம்). (சு)

**மகளிர் ஊடல் நீங்கிக் கூடல்**

உஎ. முனிபவ ரொத்திலராய் முறுவல்கி ளைத்தலுமே
*முகிணகை பெற்றமெனு †மகிணர்ம ணித்துவர்வாய்
கனிபவ ளத்தருகே வருதலு முத்துதிருங்
கயல்களி ரண்டுடையீர் கடைதிற மின்றிறமின்.

ப - ரை :—முனிபவர் - (ஊடலினால் நுங் கணவரை) வெறுப்பவர், ஒத்திலர் ஆய் - (உம்மை) ஒப்பவர் (வேறு ஒருவரும்) இல்லாதவராய், முறுவல் கிளைத்தலும் - (அவ்வூடல் நீங்கி) புன்னகை புரிதலும், முகிழ் நகை - (முல்லை) அரும்பு போன்ற பற்களின் நகையை, பெற்றம் எனு - (நாம்) அடைந்தோம் என்று, மகிழ்நர் - (உங்கள்) கணவருடைய, மணி துவர் வாய் - அழகிய பவளம் போன்ற வாயானது, கனி பவளத்து அருகே - கனிந்த பவளம் போன்ற (உமது) வாயின் அருகில், வருதலும் - (முத்தமிட்டுத் தழுவ) வருதலும், முத்து உதிரும் - (களிப்பின் மிகுதி யால்) முத்துப் போன்ற நீர்த் துளிகளைச் சொரியும், இரண்டு கயல்கள் உடையீர் - இரண்டு கெண்டை மீன் போன்ற கண்களையுடைய பெண் களே, கடை திறமின் திறமின்——,

வி - ரை :—உங்கள் கொழுநரோடு ஊடி, அவ்வூடல் நீங்கிப் பின்பு கூடும் பெண்களே, கடை திறமின் என்பதாம். 'முனிபவ ரொத்திலராய்' என்றதனால், ஊடலும், 'முறுவல் கிளைத்தலும்' என்றதனால், அவ்வூடல் தணிதலும், 'மகிணர் மணித்துவர்வாய்......வருதலும்' என்றதனால், கூடலுங் கூறினார். 'ஊட லுணர்தல் புணர்த லிவைகாமம், கூடியார் பெற்ற பயன்' [திருக்கு - கக0கூ] என்றார் நாயனாரும். 'துவர் வாய்' என்பதற்குச் சிவந்த வாயெனப் பொருள் கொள்ளினு மமையும். பெற்றம்-அன்சாரியை பெறாது வந்த தன்மைப் பன்மை வினைமுற்று; முகிழ், பவளம், முத்து, கயல்கள்—இவை உவமையாகு பெயர்கள். திறமின் திறமின் - இவ்வடுக்கு விரைவின்கண் வந்தது. பா - பே :—* முகிழ் நகை, † மகிழ்நர். (எ)

**ஆடவர் கைத்தலத்தால் வருடல்**

உஅ. இத்துயின் மெய்த்துயிலே யென்றுகு றித்திளைஞோர்
இதுபுல விக்குமருந் தெனமனம் வைத்தடியிற்
கைத்தலம் வைத்தலுமே பொய்த்துயில் கூர்நயனக்
கடைதிற வாமடவீர் கடைதிற மின்றிறமின்.

ப - ரை :—இளைஞோர் - இளையவராகிய (உங்கள்) கணவர்கள், இ துயில் - (நீங்கள் புரியும்) இந்த (பொய்) தூக்கம், மெய் துயிலே -

உண்மையாகிய தூக்கமாம், என்று குறித்து - என்று நினைத்து, இது-(நாம் செய்யும்) இந்தத் தொழில், புலவிக்கு - (இவர்கள் கொண்ட) ஊடலாகிய நோயைப் போக்குதற்கு, மருந்து என - மருந்தாகுமென்று, மனம் வைத்து - மனத்தில் நினைத்து, அடியில் - (உங்கள்) அல்குலில், கை தலம் வைத்தலும் - (தங்கள்) கையை வைத்து வருடலும், பொய் துயில் கூர் - பொய்யுறக்கம் மிகவும் புரிகின்ற, கடை நயனம் - கடைக் கண்களையும், திறவா மடவீர் - திறவாத பெண்களே, கடை திறமின் திறமின் ——,

வி - ரை :—'இது' என்றது, அடியில் கைத்தலம் வைத்து வருடுதலை; 'பரந்து மின்னும் தூசலா மல்குல் தீண்ட' [சீவகசி-கசுஅஎ] எனத் திருத்தக்க தேவரும், 'அருக்கு மங்கையர்' என்னுஞ் செய்யுளில், 'கருத்தறிந்தபின் அரை தனி.லுடைதனை, யவிழ்த்து மங்குள வரசிலை தடவியும்' [திருப்பு] என அருணகிரி நாதரும், 'ஆடை நெகிழ்த்துப் புறம்போக்கி, பொங்கு நிதம்பத் தடம்வருடிப் புகலுங் காலீ லையும்புரிந்து' [விநாயகபு-இந்திரன்சாப-கஙு] எனக் கச்சியப்ப முனிவருங் கூறியுள்ளமை காண்க. அடியில் கைத்தலம் வைத்து வருடல் மகளிர்க்கு மின்பம் பயத்தலாலும், அவர்களும் ஆடவரைப்போல் புணர்ச்சி விழைதலாலும் நயனக்கடை திறவாமல் உறங்குவார் போல் கிடந்தன ரென்க. 'நயனக்கடை திறவா மடவீர், வாசற்கடை திறமின்' என இதில் ஒரு நயந் தோன்றுமாறு காண்க. இளைஞர் = இளையோர்; சிறுபான்மை அகரம் ஒகார மாய்த் திரிந்தது. கைத்தலம் வைத்தலை மருந்து என்றதற்கேற்ப, புலவியை நோ யென்னுமை ஏகதேச உருவகமாம். அடி - இடக்காடக்கல்; பாத மெனினுமாம். நயனக் கடை, கடை—இதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால்தொக்கது. (அ)

முதற் குலோத்துங்கனைக் கனவிற் கண்டு மகிழ்தல்

உகூ. இகலி ழந்தரசர் தொழவ ரும்பவனி
இரவு கந்தருளு கனவினிற்
பகலி ழந்தநிறை பெறமு யன்றுமொழி
பதறு வீர்கடைக டிறமினோ.

ப - ரை :—அரசர் - (பகை) அரசர்கள், இகல் இழந்து - (தங்கள்) வலி தொலைந்து, தொழ - (தன்னை) வணங்கும்படி, வரும் - (வீதியில்) வருகின்ற, பவனி - (முதற் குலோத்துங்கன்) உலாவை, இரவு - இராக் காலத்தில், உகந்தருளு கனவினில் - விரும்பிக் காணுங் கனவில், பகல் இழந்த நிறை - பகற்போதில் இழந்த அடக்கத்தை, பெற முயன்று - (மீண்டும்) பெற முயற்சி செய்து, மொழி பதறுவீர் - வாய் குழறப் பேசும் பெண்களே, கடைகள் திறமின் ——,

வி-ரை :—நிறையாவது: மனத்தில் அடக்கவேண்டியவற்றைப் பிறரறியாம லடக்கல்; இதனை, 'நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை' [கலி-கஙுஙு] என்றதனாலறிக. நிறை யிழத்தலாவது: அச்சம், நாண் முதலியவற்றைத் துறத்தல்; [தா-ஙுஙு]. மொழி பதறலாவது: சொற்கள் தடுமாறப் பேசுதல்; கனவில் தம்மாட்டணுகிய முதற் குலோத்துங்கனைத் தம்மைவிட்டுநீங்காவண்ணம் வேண்டக் கருதி, அம்மெல்லியலார் தஞ் சொற்கள் குழறப் பேசின ரென்பதாம். 'கள்ளூரும் பைந்துழாய் மாலை யானை, கனவிடத்தில் யான்காண்பன் கண்ட போது, புள்ளூருங் கள்வாநீ போகே லென்பன்' [திருநெடு-உங] என்றார் திருமங்கையாழ்வாரும். 'கனவினில் மொழிபதற' என்றதனால் வாய் குழற வெனப் பொருளுரைக்கப்பட்டது. இழந்தரசர்—இழந்த அரசர் எனப்பிரித்துப்

பெயரெச்சத்தின் ஈறு தொக்கதெனினுமாம். அருளு கனவு—வினைத்தொகை; அருளு—உகரம் சாரியை. (௯)

கொங்கைகளைச் சுவைத்தல்

௩௦. முத்து வடஞ்சேர் முகிழ்முலைமேன்
முயங்குங் கொழுநர் மணிச்செவ்வாய்
வைத்த பவள வடம்புனைவீர்
*மணிப்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—முயங்கும் கொழுநர் - (உம்மை) தழுவுங் கணவர்கள், முத்து வடம் சேர் - முத்து மாலை பொருந்திய, முகிழ் முலை மேல் - (கோங்கின்) அரும்பு போன்ற (உங்கள்) கொங்கைகளில், வைத்த - வைத்துச் சுவைத்த, மணி செம் வாய் - அழகிய சிவந்த இதழ்களாகிய, பவளம் வடம் புனைவீர் - பவள மாலையையு மணியும் பெண்களே, மணி பொன் கபாடம் - அழகிய பொன்னாலாகிய கதவை, திறமின்——,

வி - ரை :—இதனால் தனபானங் கூறப்பட்டது. முகிழ் - கோங்கரும்பு; 'கோங்கரும் பன்ன முலையாய்' [நாலடி - ௪௦௦] எனவும், 'கோங்கின், குவிமுகிழிளமுலை' [திருமுரு - ௩௪] எனவும், 'கோங்க முகையனைய கொங்கையாள்' [விக்கிரம - உலா - ௨அ௬] எனவும் ஆன்றோர் கூறியுள்ளமை காண்க. முகிழ் - தாமரை யரும்பு எனினுமாம். உண்ட சோறு என்பது உண்டு மிகுந்த சோறு எனப் பொருள்படுதல் போல், வைத்த செவ்வா யென்பது வைத்துச் சுவைத்த செவ்வா யென்னும் பொருள் பயந்து நின்றது. இதனை, 'மெய்யணி பசும்பொற் சுண்ண மேதகு நானம்' [சீவகசி - ககஎ] என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையாலறிக. 'செவ்வாய் வைத்த பவள வடம்' என்பதற்கு, சிவந்த வாயினுள்ள பற்களாலமைத்த (பற்குறிகளாகிய) பவள வடம் எனினுமாம். 'மணிப் பொற் கபாடம்'—இரத்தினங்களைப் பதித்த பொற்கத வெனினுமாம்; பொன்—அழகெனினுமாம். பவள வடம்—இதில் இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. வாய்—ஆகுபெயர். பா - பே :—* வனைபொற் கபாடம். (க0)

தங் கேள்வர்மாலையை விழைதல்

௩௧. தண்கொடை மானதன் மார்புதோய்
தாதகி மாலையின் மேல்விழுங்
கண்கொடு போம்வழி தேடுவீர்
கனகநெ டுங்கடை திறமினோ.

ப - ரை :—தண் கொடை - குளிர்ச்சியாகிய அருளால் (தன்னை இரப்பவர்க்கு) கொடுத்தலையுடைய, மானதன் - முதற் குலோத்துங்கனுடைய, மார்பு தோய் - மார்பில் பொருந்திய, தாதகி மாலையின் - ஆத்தி மாலையின், மேல் விழும் - மேலே படிகின்ற, கண்கொடு - கண்களால், போம் வழி - (அவன்) போன வழியை, தேடுவீர் - (மீண்டும் அவன் எப்போது வருவானென்று) தேடுகின்ற பெண்களே, கனகம் - பொன்னாலாகிய, நெடு கடை - உயர்வாகிய கதவை, திறமின்——,

வி - ரை :—மகளிர் தங் கொழுநர்களின் மார்பிலுள்ள மாலையை விழைதலுண்மையால், 'மார்புதோய்......கண்' என்றார். 'வரைபுரை திருமார்பில், தாரி னசையின் போயின நெஞ்சமுந் தாழ்ந்தது' [பெரிய திரு - அ - ௩ - ௨] எனவும், 'நேமியால், மாலை தந்தவர் பைந்து ழாய்மது மாலை தந்திலர்'

[திருவரங்-கலம்-உள] எனவும், 'கங்குல், வருவான்கொல் வந்தென் வனமுலை மேல் வைகி, தருவான்கொல் மார்பணிந்த தார்' [புறப்-வெ-மா-உஙங) எனவும் வருமாறு காண்க. மானதன்-மானத்தைக் காப்பவன்; [தா-ஙஉ, கூஅ, ருஅசு] 'மானதன் மான பராயணன்' [தக்கயா-அ0ரு] எனவும், 'மானதன் மூரிக்களிறு' [இராச-உலா-ஙஉங-ஙஉச] எனவும் ஒட்டக்கூத்தர் கூறியுள்ளமையும் இங்குக் கவனிக்க. தம்மை விட்டுப் பிரிந்த முதற் குலோத்துங்கன் தம்மிடம் வாராமை யால், அவன் வரும் வழியை மிக்க ஆவலோடு அப்பாவையர் எதிர் நோக்கி யிருத்தலைக் கருதி, 'போம் வழி தேடுவீர்' என்றார். தண்மை—பண்பாகு பெயராய் அருளை யுணர்த்திற்று; கண் கொடு—கொடு மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. (கக)

முதற் குலோத்துங்கன் படைக்கும் மடவார் கண்களுக்கும் சிலேடை

ஙஉ. அஞ்சியே கயல்கெடக் கூடலிற் பொருதுசென்
றணிகடைக் குழையிலே விழவடர்த் தெறிதலால்
வஞ்சிமா னதன்விடும் படையினிற் கொடியகண்
மடநலீர் †ரிடுமணிக் கடைதிறந் திடுமினோ.

படையின் மேல் கூறுங்கால் :—

ப - ரை :—கயல் - மீன் கொடியை யுடைய பாண்டியன், அஞ்சி கெட - பயந்து தோற்றோடும்படி, கூடலில் - மதுரையில், சென்று பொருது - போய்ப் போர் புரிந்து, அணி - (அவன்) படை வகுப்பு, கடை குழையிலே - இழிவாகிய சேற்றில், விழ அடர்த்து - (ஓடிப் போய்) விழும்படி நெருக்கி, எறிதலால் - (அப்படையை) வெட்டுதலால், வஞ்சி மானதன் விடும் - வஞ்சிப் பூமாலையை யணிந்த முதற் குலோத்துங்கன் ஏவிய, படையினில் - சேனை போல—எனவும்,

கண்களின் மேல் கூறுங்கால் :—

கடை - (உங்கள்) கடைக் கண்கள், கூடலில் - (நீர் உங்கள் கணவருடன்) புணருங் காலத்தில், கயல் - கெண்டை மீன்கள், அஞ்சி கெட - பயந்து தோற்றோடும்படி, அடர்த்து - (அவைகளை) நெருக்கி, பொருது - (அவற்றோடு) போர் புரிந்து வென்று, அணி குழையில் - அழகிய காதணிகளில், விழ சென்று - (மோதி) விழும்படி போய், எறிதலால் - (ஒளி) வீசுதலால், வஞ்சி மானதன் விடும் - வஞ்சிப் பூமாலையை யணிந்த முதற் குலோத்துங்கன் ஏவிய, படையினில் - வேற் படைபோல, கொடிய கண் - கொடிய கண்களையும், மடம் நல்லீர் - இளம் பருவத்தையு முடைய அழகிய பெண்களே, இடு மணி கடை - தாளிட்ட அழகிய கதவை, திறந்திடுமின்——,

எனவும் பொருள் கொள்க.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் சேனைகள் மதுரையிற் புக்குப் போர் புரிந்து பாண்டியனை வென்று, அவன் சேனைகள் சேற்றில் போய் விழும்படி யெறிந்தன. அம்மெல்லியலார் கண்கள் அவர் தங் கணவரோடு கலவிப்போர் புரியுங்கால், தமது பிறழ்ச்சியால் கெண்டை மீனை வென்று காதணிகளில் விழுந்து (அம் மன்னவன் படை பாண்டியனைத் துன்புறுத்தினது போல்) அவர்

தங் கொழுநரைத் துன்புறுத்தின வென்பதாம். இதில் மீனவன் துகிற் கயலை மொய் குழலார் கட்கயல் வென்றன வென்னும் நயம் தோன்றுமாறு காண்க. பகைவேந்தர் நாட்டைக் கவரக் கருதுங் காவலன் வஞ்சிமாலை மிலைந்து சேறல் மரபு. இதனை, 'வாடா வஞ்சி தலைமலைந்து, கூடார்மண் கொளல்குறித் தன்று' [புறப் - வெ - மா - ௩௪] என்றதனாலறிக. கயல்—மும்மடியாகு பெயராய்ப் பாண்டியனை யுணர்த்தினது. இச்செய்யுளில் ஒருவகையாய் நின்ற தொடரில் பல பொருள் அமைந்திருத்தலால், இது சிலேடை யணியாம். (சிலேஷாலங்காரம்). கூடல்—மதுரை, புணர்தல்; அணி—படைவகுப்பு, அழகு; கடை—இழிவு, கடைக்கண்; குழை—சேறு, காதணி; படை—சேனை, வேற்படை; எறிதல்—வெட்டுதல், ஒளி வீசுதல் எனச் சிலேடைப் பொருள் கொள்க. பா - பே :—†சுடர்மணி. (௩உ)

மகளிர்க்கு வாய் வெளுத்துக் கண் சிவத்தல்

௩௩. அவசமுற் றுளநெகத் *துயினெகப் பவளவாய்
அணிசிவப் பறவிழிக் கடைசிவப் புறநிறைக்
கவசமற் றிளநகைக் களிவரக் களிவருங்
கணவரைப் புணருவீர் கடைதிறந் திடுமினோ.

ப - ரை :—அவசம் உற்று - (புணர்ச்சிக் காலத்தில்) பரவசமடைந்து, உளம் நெக - (உங்கள்) மனமிளகவும், துயில் நெக - தூக்கந் தொலையவும், பவளம் வாய் - பவளம் போன்ற இதழ்களின், அணி சிவப்பு அற - அழகிய செந்நிறம் நீங்கவும், கடை விழி-கடைக் கண்கள், சிவப்பு உற - செந்நிறமடையவும், நிறை கவசம் அற்று - அடக்கமாகிய காவல் நீங்கி, களி - களிப்பால், இளம் நகை - புன்னகை, வர - உண்டாகவும், களி வரும் - (அவற்றைக் கண்டு) களிப்படையும், கணவரை புணருவீர் - (உங்கள்) கணவரைத் தழுவும் பெண்களே, கடை திறந்திடுமின் ——.

வி-ரை :—புணர்ச்சிக் காலத்தில் பரவசமடைதலும், வாய் வெளுத்துக் கண் சிவத்தலு மாதர்க் கியல்பு. [தா-௩௪, ௯௧] களி யென்பதற்கு இன்பமெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். நீவிர் களிப்புறுதலேயன்றி நுங் கொழுநருக்குங் களிப்பூட்டுவீ ரென்பார், 'இளநகைக் களிவரக் களிவருங் கணவரைப் புணருவீர்' என்றார். 'காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு, நாணுத்தாழ் வீழ்த்த கதவு' [திருக்கு-௧உ௫௧] என்றபடி, காமவேட்கை யுற்ற மகளிர் அச்சம், நாண் முதலியவற்றை யிழத்தலால், 'நிறைக் கவச மற்று' என்றார். [தா-உ௧] இதில் புணர்ச்சிக் காலத்தில் நிகழும் இயல்பாகிய தன்மைகளைக் கூறியுள்ளமையால், இது தன்மை நவிற்சி யணியாம். பா - பே :—*துகினெகப் பவளவாய். (௩௩)

நிலாக் கதிரைத் துகிலெனக் கருதல்

௩௪. கலவிக் களியின் மயக்கத்தாற்
கலைபோ †யகலக் கலைமதியின்
நிலவைத் துகிலென் றெடுத்துடுப்பீர்
நீள்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—கலவி (உங்கள் கணவரோடு) கூடுதலால் உண்டாகும், களியின் மயக்கத்தால் - இன்பமாகிய மயக்கத்தினால், கலை - (நீங்கள் உடுத்த) ஆடையானது, போய் அகல - (உங்கள் உடலை) விட்டு நீங்க, நிலவு மதியின் கலையை - ஒளியை யுடைய சந்திரனுடைய கிரணங்களை,

துகில் என்று - ஆடையென்று கருதி, எடுத்து உடுப்பீர் - (புணர்ச்சிக்குப் பின்) எடுத்து உடுக்க முயலும் பெண்களே, நீள் பொன் கபாடம் திறமின்——,

வி - ரை:—கலவிக் களியின் மயக்கம் - கலவியாகிய கள்ளுண்டு களித்தலாலுண்டாகு மயக்க மெனினுமாம். 'சான்றோர் முகத்துக் களி' [திருக்கு-உங] என்பதில், களி என்பதற்குப் பரிமேலழகர் இவ்வாறு பொருள் கூறியுள்ளமை காண்க. களி மயக்துற்றோர் ஒன்றை மற்றொன்றாகக் கருதுத லியல்பாதலால், கலவிக் களியுற்ற அம்மகளிர் வெண்ணிறமுள்ள தமது கலைக்தும் மதியின் கலைக்துமுள்ள வேற்றுமையறியாது, மதியின் கலையைத் துகிலாகக் கருதி அவற்றையுடுக்க முயன்றன ரென்பதாம். 'திங்கள் சொரி நிலவு,......காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரால், ஏந்திழையார் பூந்துகிலாமென்று' [வீரசோ-கசுரும்-செய்-மேற்கோள்] எனவும், 'நலம்வி ளைத்தனர் நாணிவெண் திங்களின், கலையை மெல்லக் கலையெனச் சேர்த்துவார்' [நைட-நகரப்-உஅ] எனவும் வருமாறு காண்க. நிலவை—இதிலுள்ள ஐகாரம் கலை என்பதனோடு கூட்டப்பட்டது. இதில் மகளிர் மதியின் கலையைத் துகிலென மயங்கினதாய் மொழிந்துள்ளமையால், இது மயக்கவணியாம். (ப்ராந்தியலங்காரம்) பா - பே:—† அகன்ற தறியாமல். (கச)

நனவைக் கனவாகக் கருதல்

நரு. நனவினிற் சயதரன் புணரவே பெறினுநீர்
நனவெனத் தெளிவுரு ததனையும் பழையவக்
கனவெனக் கூறுவீர் தோழிமார் நகைமுகங்
கண்டபின் றேறுவீர் கடைதிறந் திடுமினோ.

ப - ரை:—சயதரன் - முதற் குலோத்துங்கன், நனவினில் - (நீங்கள்) விழித்திருக்கும் காலத்தில், புணர பெறினும் - (உங்களை) முயங்கப் பெற்றாலும், நீர் - நீங்கள், நனவு என - (அது) விழிப்பில் நிகழ்ந்ததென்று, தெளிவு உருது - தெளிவு அடையாமல், அதனையும் - (நனவில் நிகழ்ந்த) அப்புணர்ச்சியையும், பழைய - முன்பு நிகழ்ந்த, அ கனவு என - அந்தக் கனவின் புணர்ச்சியென்று, கூறுவீர் - சொல்லுகின்றவர்களாய், தோழிமார் - தோழிப் பெண்களின், நகை முகம் - புன்னகையுடைய முகத்தை, கண்ட பின் - பார்த்த பிறகு, தேறுவீர் - தெளிவடையும் பெண்களே, கடை திறந்திடுமின் ——.

வி - ரை:—'இரவு கனவிடைத் தனத டங்கண்மிசை நகந டந்தகுறி' [தா - உசு] என்றபடி, முன்பு கனவை நனவாகக் கருதிய மடவார், ஈண்டு நனவைக் கனவாகக் கூறி மயங்கின ரென்பதாம். அவ்வாறு மயங்கிய அம்மங்கையர் மடமையை நோக்கிச் சேடியர் புன்னகை புரிய, அதனால் அவர்கள் உண்மை யுணர்ந்து நாணின ரென்க. கூறுவீர்—முற்றெச்சம்; திறந்திடுமின்—ஏவற் பன்மை வினைமுற்று. இதிலுள்ள ஓகாரம் ஈற்றசை. இதில் நங்கைமார் நனவுப் புணர்ச்சியைக் கனவுப் புணர்ச்சியாக மயங்கினமையால், இதுவும் மயக்கவணியாம். (கரு)

கேள்வர் பிரிவால் துயிலின்றிக் கிடத்தல்

நசு. மெய்யே கொழுநர் பிழைநலிய
வேட்கை நலிய விடியளவும்
பொய்யே யுறங்கு மடநல்லீர்
புனைபொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—கொழுநர் பிழை - (உங்கள்) கணவருடைய பிழைகள், மெய்யே நலிய - (ஒரு புறம் உம்மை) உண்மையாய் வருத்தவும், வேட்கை - (அவர்பாலுள்ள) விருப்பம், நலிய - (மற்றொரு புறம்) வருத்தவும், விடி அளவும் - (அதனால்) பொழுது விடியும் வரையிலும், பொய்யே உறங்கும் - பொய்த் துயில் கொள்ளும், மடம் நல்லீர் - இளம் பருவமுடைய அழகிய பெண்களே, புனை - அலங்கரிக்கப்பட்ட, பொன் கபாடம் - அழகிய கதவை, திறமின்——,

வி - ரை :—கொழுநர் பிழையாவது :—களவுப் புணர்ச்சியில், 'பெண் கொடி யேபிரி யேன்றரி யேனிற் பிரியினுமே' [தஞ்சை-கோ-உ௩] என்று மொழிந்த தங்காதலர் தம்மை விட்டுப் பிரிந்து குறித்த பருவத்தும் வாராமல் காலந் தாழ்த்தலாம். ஒரு புறந் தங்கள் தலைவர் பாலுள்ள முனிவும், மற்றொரு புறம் அவர்பாலுள்ள வேட்கையும் அவர்களை இடைவிடாமல் வருத்த அத்துன்ப மிகுதியால், 'மெல்லம் புலம்பன் பிரிந்தெனப் பல்லிதழுண்கண் பாடொல்லாவே' [குறுந்-௫] என்றபடி, அத்தோகையர் துயிலின்றிக் கண்களை மூடிக் கிடந்தன ரென்பார், 'பொய்யே யுறங்கு மடநல்லீர்' என்றார். 'தொன்னல மிழந்தகண் துயில்பெறல் வேண்டேன்மன்' [கலி—எஎ-க௩] 'கங்குலும் பகலும் கண்டுயி லறியாள்' [திருவாய்-எ-உ-க] என்பவற்றையுங் கவனிக்க. நலிய - இரண்டும் காரணப்பொருளில் வந்த வினையெச்சங்கள். விடியளவும்—உம்மை முற்றுப் பொருளது. மெய் நலிய—(உங்கள்) உடலை இளைப்பிக்க வெனினுமாம். இப் பொருளில் நலிய வென்பது பிறவினைப் பொருளில் வந்த தன்வினையாம். (க௬)

### கேள்வர் மார்பில் துயிலல்

௩எ. போக வமளிக் †களிமயக்கிற்
புலர்ந்த தறியா தேகொழுநர்
ஆக வமளி மிசைத்துயில்வீர்
அம்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—அமளி - படுக்கையில், போகம் - (கணவரைத் தழுவுத லால் விளைந்த) இன்பமாகிய, களி மயக்கின் - கள்ளுண்டு களித்தலால் விளைந்த மயக்கத்தால், புலர்ந்தது அறியாது - பொழுது விடிந்ததையு மறியாமல், கொழுநர் - (உங்கள்) கணவருடைய, ஆகம் அமளி மிசை - மார்பாகிய படுக்கையில், துயில்வீர் - தூங்குகின்ற பெண்களே, அம் - அழகிய, பொன் கபாடம் திறமின்——.

வி - ரை :—புணர்ச்சி யின்பத்தால் மயங்கிப் பொழுது புலர்ந்ததையு மறியாமல், உங்கள் கேள்வர் மார்பில் துயிலும் பெண்களே, கடைதிறமின் என்பதாம். கோதையர் தங்கேள்வர் மார்பின் மிசைத் துயிறலை, 'மகிழ்நன் மார்பிற் றுஞ்சி' [நற்-உ0] எனவும், 'மார்பின் பாயற் றுஞ்சிய வெய்யோள்' [ஐங்கு-உ0௫] எனவும் வருவதனாலறிக. களிமயக்கு—மூன்றனுருபும் பயனு முடன் தொக்க தொகை. அமளி மிசை—மிசை ஏழனுருபு, பா - பே :—
† மயக்கத்தே. (கஎ)

### கேள்வர் வரவைக் காணாது வருந்தல்

௩அ. ஆளுங் *கொழுநர் ‡வரவுபார்த்
§தவர்தம் வரவு காணாமல்
தாளு மனமும் புறம்பாகச்
சாத்துங் கபாடந் திறமினோ.

ப - ரை :—ஆளும் - (உம்மை அன்பால்) ஆட்கொள்ளும், கொழுநர் வரவு பார்த்து - (உங்கள்) கணவருடைய வருகையை எதிர் பார்த்து, அவர் தம் வரவு - அவருடைய வருகையை, காணுமல்-காணப் பெறுமல், தாளும் - (உங்கள்) பாதங்களும், மனமும்——, புறம்பு ஆக - வேறுபாடடையும்படி, சாத்தும் - (நீங்கள்) மூடும், கபாடம் திறமின்——.

வி - ரை :—தாள் புறம்பாத லாவது :—தங்கள் கணவர் குறித்துச் சென்ற பருவம் வந்தமையால், அவ்வரிவையர் அவர்கள் வருவார் வருவா ரெனத் தெரு வாசலில் வந்து பார்ப்பதும் உள்ளே போவதுமா யிருத்தலால், அவர்தஞ் சீறடி சிவந்து நடை தளர்தல் ; மனம் புறம்பாத லாவது - தங்கேள்வர் வரவைக் காணுமையால், அவர்கள் மனத்திற் சோர்வும் வெறுப்பு முண்டாதல். அவர் தம்— இதில் தம் சாரியை; தாளும் மனமும்—உம்மைகள் எண்ணுப்பொருளில் வந்தன. பா - பே :—*கொழுநன். $ அவன்றன். (கஅ)

மகளிர் கொங்கை யழகு

நகூ. உந்திச் சுழியின் முளைத்தெழுந்த
உரோமப் பசுந்தா ளொன்றிலிரண்
டந்திக் கமலங் கொடுவருவீர்
அம்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—உந்தி சுழியின் - உந்தியாகிய நீர்ச்சுழியில், முளைத்து - தோன்றி, எழுந்த - (மேல் நோக்கி) எழுந்த, உரோமம் - மயிரொழுங்காகிய, பசு தாள் ஒன்றில் - பசுமையாகிய ஒரு தண்டில், அந்தி - மாலைக் காலத்தில் காணப்படும், இரண்டு கமலம் - இரண்டு தாமரை அரும்பு போன்ற கொங்கைகளை, கொடு வருவீர் - (சுமந்து) கொண்டு வரும் பெண்களே, அம்பொன் - அழகிய பொன்னாலாகிய, கபாடம் திறமின்——.

வி . ரை :—இதில் உந்தியைச் சுழியாகவும் உரோம ஒழுங்கைப் பசுந் தாளாகவும் உருவகப்படுத்தியுள்ளமையால், இஃதுருவக வணியாம். 'உந்திச் சுழி'- இதனை, 'நீர்பெயற் சுழியி னிறைந்த கொப்பூழ்' [பொருநரா - நஎ] எனவும், 'ஆற்றிற், சுழியொன்றி நின்ற தன்ன வுந்தியாள்' [கம்பரா - உண்டாட்டு - கரு] எனவும் வருமாற்ருனறிக. 'குளனணி தாமரைப் பாசரும் பேய்க்கும், இளமுலை பாராட்டிணுய்' [கலி - உஉ] எனவும், 'தாமரை முற்ரு முகைநீ ரெழுதி முலை யென்றீர்' [பாண் - கோ - அகூ] எனவும் அறிஞர் கூறியுள்ளமையால், தாமரை அரும்பு கொங்கைகளுக்கு உவமையாமா றுணர்க. திரண்டு குவிந்த தனங்க ளென்பார் 'அந்திக் கமலம்' எனவும், உங்கள் மெல்லிய நுசுப்பு, கொங்கையாகிய சுமையைச் சுமக்கலாற்ரு தென்பார், 'கொடு வருவீர்' எனவுங் கூறினர். கமலம் - உவமை யாகுபெயர். (ககூ)

மகளிர் வேளம் புகுத்த தன்மை

சு0. மீனம்புகு கொடிமீனவர் விழியம்புக வோடிக்
கானம்புக வேளம்புகு மடவீர்கடை திறமின்.

ப - ரை :—மீனம் புகு - மீன் வடிவம் பொருந்திய, கொடி மீனவர் - கொடியையுடைய பாண்டியர், விழி அம்பு உக - (தங்கள்) கண்களிலிருந்து நீர் சொரியும்படி, ஓடி - (தங்கள் நாட்டைவிட்டு) ஓடி, கானம் புக-காட்டில் புகுதலால், வேளம் புகு மடவீர் - வேளத்திற் புகுந்த பெண்களே, கடை திறமின்——.

வி - ரை :—'விழி அம்பு' என்பதற்கு (மாதர்) விழி போன்ற கணைகளெனினுமாம். 'தோகையர் கண்ணெனச் சுடுசரந் தூரக்கும்' [கல்லா - ச] எனவும், 'அம்ம்பவள் வரிநெடுங்கண்' [யாப்ப - விருத்தி - கு - ந - மேற்கோள்] எனவும், 'பகழிபோ லுண்கண்ணுய்' [கார்நா - ஙு] எனவும் வருமாறு காண்க. வேளம்—வேந்தர்கள் தங்கள் மாற்றுரை வென்ற பின், தாம் சிறைப்பற்றிக் கொணர்ந்த அவர்தம் மகளிர் வாழ்தற்கென வமைக்கப்பட்ட தனியிடமாகிய மாளிகையாம். இவ்வாறு சிறைப்பற்றிக் கொணர்தல் பண்டைய வழக்காம். [தா-நஉசு-சடுகூ] இதனை, 'கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி' [பட்டி - உசசு] எனவும், 'உய்ம்மின் திறைகொணர்ந் தென்றுல காண்டவ ரிம்மையே, தம்மின் சுவைமட வாரைப் பிறர்கொளத் தாம்விட்டு, வெம்பி னெளிவெயில் கானகம் போய்க்குமை தின்பர்கள்' [திருவாய் : ச - க - உ] எனவும், 'மனையாளை மாற்றார் கொள' [நாலடி-ந] எனவும் வருமாற்றுனறிக. மீனம்—அம் சாரியை, விழியம்பு—முற்கூறிய பொருளில் நீக்கப் பொருளில் வந்த ஐந்தன் தொகையும், பிற் கூறிய பொருளில் உவமைத் தொகையுமாம். (உ0)

மகளிரைத் திறைப் பொருளாகச் செலுத்தல்

சக. அலைநாடிய புனனாடுடை யபயற்கிடு திறையா
மலைநாடியர் துளுநாடியர் மனையிற்கடை திறமின்.

ப - ரை :—அலை நாடிய - அலைகள் வீசுகின்ற, புனல் நாடு - நீர் வளப்பத்தையுடைய சோழநாட்டை, உடை - (தனக்கே உரிமையாக) உடைய, அபயன் கு - முதற் குலோத்துங்க சோழனுக்கு, இடு திறை ஆம் - செலுத்தும் பகுதிப் பொருளாகிய, மலை நாடியர் - மலை நாட்டுப் பெண்களே, துளு நாடியர் - துளு நாட்டுப் பெண்களே, மனையின் - (உங்கள்) வீடுகளின், கடை திறமின்.——.

வி - ரை :—'கங்கையிற் புனித மாய காவிரி' [திருமா - உரு] எனவும், 'பொன்னியைப் பொருவுங் கங்கை' [கம்பரா-அகலிகை-நஉ] எனவும், 'தரங்க வார்புனல் சானவி தன்னினும், வரங்க ளாலுயர் வானதி' [அரிசம-பதுமை - கூ] எனவும், ஆன்றோர் கூறியபடி, கங்கையினுஞ் சிறந்த காவிரி பாயும் நீர்வளமுடைய நாடாதலின் சோணாட்டை, 'புனல் நாடு' என்றார். 'திறையா மலை நாடியர்' என்றதனல், இளமகளிரைத் திறைப் பொருளாகச் செலுத்தல் பண்டைக்கால வழக்கென இதனல் தெரிகிறது. நாடியர்—இரண்டும் அண்மை விளிப்பெயர்கள். மலை நாடு - சேர நாடு. (உக)

கேள்வர் தோளைத் தழுவி வரல்

சஉ. விலையி லாதவட முலையி லாடவிழி
குழையி லாடவிழை கணவர்தோண்
மலையி லாடிவரு மயில்கள் போலவரு
மடந லீர்கடைக டிறமினோ.

ப - ரை :—விலை இலாத - விலைமதிக்க முடியாத, வடம் - (முத்து, பவளம், இரத்தினம் முதலிய) மாலைகள், முலையில் ஆட - (உங்கள்) கொங்கைகளில் அசையவும், விழி குழையில் ஆட - (உங்கள்) கண்கள் காதணிகளில் தாக்கவும், விழை கணவர் - (நீங்கள்) விரும்பும் (உங்கள்) கணவருடைய, தோள் மலையில் - தோளாகிய மலையை, ஆடி - தழுவி, வரும் - (அம்மலையில் விளையாடி) வரும், மயில்கள் போல வரும் - மயில்

களைப் போல் வருகின்ற, மடம் நல்லீர் - இளம் பருவமுடைய அழகிய பெண்களே; கடைகள் திறமின் ——.

வி - ரை:—நீண்டகன்ற கண்களாதலால், 'விழி குழையிலாட' என்றார். ஆடல்—தழுவல்; இதனை, 'தடங்கண்கள் குவளை பூப்பத் தையலோ டாடு மன்றே,' [சீவகசி - அருகூ] என்றதனாலறிக. மடவாரை மயிலென்றதனால், அவர் கணவர் தோளை மலையென்றார். மயில்கள் மலையிலாடுதல் போல், அம்மங்கையர் தங்கணவர் தோளைத் தழுவி விளையாடா நிற்பரென்பதாம். இல்லாத— இதிலுள்ள ஆகாரம் சாரியை; இதன் பகுதியே எதிர் மறைப்பொருளை யுணர்த்துதலா னென்க. 'தோண்மலை' என்றது உருவகவணியும் 'மயில்கள் போல வரு மடநலீர்' என்றது உவமையணியுமாம். (உஉ)

கன்னட மகளிர் திருமொழி

சங. மழலைத்திரு மொழியிற் *சில வடுகுஞ்சில தமிழுங்
குழறித்தரு கருநாடியர் குறுகிக்கடை திறமின்.

ப - ரை:—திரு மழலை மொழியில் - அழகிய மழலையாகிய சொற்களால், சில வடுகும் - சில தெலுங்கு சொற்களையும், சில தமிழும் - சில தமிழ்ச் சொற்களையும், குழறி தரு - குழறிப் பேசுகின்ற, கருநாடியர் - கன்னட நாட்டுப் பெண்களே, குறுகி - (உங்கள் வாசலை) அணுகி, கடை திறமின் ——.

வி - ரை:—கன்னட மொழியானது வடுகுந் தமிழுங் கலந்து பேசப்படும் மொழியாதலால், 'சில வடுகுஞ் சில தமிழும்' என்றார். அவ்வாறு பேசினும், அம்மடவார் மொழி செவிக்கின்பம் பயத்தலால், 'மழலைத் திருமொழி' என்றார். மழலை—இதனை உடும்-தாழிசையிற் காண்க. கருநாடியர்—அண்மை விளிப் பெயர்; கருநடம்—கன்னடம். பா - பே:—*பலவடுகும். (உங)

தம்மைத் தழுவிய தங்கேள்வர் கைவழுவ மயங்கல்

சச. தழுவுங் கொழுநர் பிழைநலியத்
தழுவே லென்னத் தழுவியகை
வழுவ வுடனே †மயங்கிடுவீர்
மணிப்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை:—தழுவும் - (உம்மைத் தங்கள் மார்போடு) அணைக்கும், கொழுநர் - (உங்கள்) கணவருடைய, பிழை நலிய - குற்றம் (உம்மை) வருத்துதலால், தழுவேல் - (எம்மை) அணைக்கவேண்டா, என்ன - என்று (நீங்கள்) பிணங்க, தழுவிய கை - (உம்மை) அணைத்த (உங்கள் கணவர்) கைகள், வழுவ - நழுவுதலால், உடனே மயங்கிடுவீர் - அப்போதே மயக்கமடையும் பெண்களே, மணி பொன் கபாடம் திறமின் ——.

வி - ரை:—கொழுநர் பிழையாவது—'பணையெழில் மென்றோ ளணை இயவந்நாள், பிழையா வஞ்சினஞ் செய்த, கள்வனுங் கடவனும் புணைவனுந்தானே' [குறுந்-ருகஅ] என்றபடி, களவுப் புணர்ச்சியின்போது செய்த வஞ்சினம் பொய்த்துப் போர்மேற் சென்ற வீரர் குறித்த பருவத்தும் வாராமையாம். அதனால் அம்மகளிர் ஊடல் கொள்ளினும், அவர்கள் தங்கணவர் மாட்டுப் பேரன்புடைமையானும் புணர்ச்சியை விழைதலானும் தம்மைத் தழுவியகை வழுவுதலும் மயங்கினரென்க. நலிய, வழுவ—இவை காரணப் பொருளில் வந்த வினையெச்சங்கள். தழுவேல்—எதிர்மறை யேவலொருமை வினைமுற்று. பா - பே:—†மனங்குழைவீர். (உச)

மகளிர்பால் சேறல்

சரு. வேகம் விளைய வருங்கொழுநர்
†மேனி சிவந்த படிநோக்கிப்
போகம் விளைய நகைசெய்வீர்
புனைபொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—வேகம் விளைய - மிகவும் விரைவாய், வரும் கொழுநர் - (உம்மைக் கருதி) வரும் (உங்கள்) கணவருடைய, மேனி சிவந்தபடி - உடல் சிவந்த தன்மையை, நோக்கி - பார்த்து, போகம் விளைய - (அவர்களுக்கு) இன்பந் தோன்றுமாறு, நகை செய்வீர் - புன்னகை புரியும் பெண்களே, புனை - அலங்கரிக்கப்பட்ட, பொன்கபாடம் திறமின்——.

வி - ரை :— மைந்தர் மகளிர்பால் விரைந்து வருதலை, 'கடியக் கடவுதி பாக, நெடிய நீடின நேரிழை மறந்தே' [ஐங்கு-சஅச] எனவும், 'பூண்கதில் பாகநின் தேரே பூண்டா, ழாக வனமுலைக் கரைவலந் தெறிப்ப, வழூதன ஞுறையு மம்மா வரிவை' [நற்றி-அக] எனவும், வருமாற்றானறிக. அம்மகளிர், தங்கேள்வர் தம்பால் விரைந்து வருதலைக் கண்டு அவர்களைப் பரிகசித்துப் புரிந்த புன்னகை அவ்வாடவர் வருத்தத்தைப் போக்கி அவர்களுக்குக் களிப்பூட்டுதலால், 'போகம் விளைய நகை செய்வீர்' என்றார். பா - பே :— † விழிகள். (உரு)

முகமலர்ச்சியுடன் துயிலல்

சசு. சொருகு கொந்தளக மொருகை மேலலைய
ஒருகை கீழலைசெய் துகிலொடே
திருவ னந்தலினு *முகம லர்ந்துவரு
தெரிவை மீர்கடைக டிறமினோ.

ப - ரை :—ஒரு கை கீழ் - ஒரு கையின் கீழே, அலை செய் - (காற்றால்) அசையும், துகிலொடு - (மெல்லிய) ஆடையோடு, ஒரு கை மேல் - மற்றொரு கையின் மேல், கொந்து - பூங் கொத்துக்களை, சொருகு அளகம் - முடிக்குங் கூந்தல், அலைய - அசையும்படி, அனந்தலினும் - (நீங்கள்) தூங்குங்காலத்தும், திரு முகம்—(உங்கள்) அழகிய முகம், மலர்ந்து வரு - மலர்ச்சியுற்றுத் தோன்றும், தெரிவைமீர் - பெண்களே, கடைகள் திறமின்——.

வி - ரை :—துயிலுங் காலத்தும் முகமலர்ச்சியுடன் திகழும் பெண்களே கடைதிறமின் என்பதாம். இத்தாழிசையின் முதலடியின் கருத்து; 'அகிலேந்து கூந்த லொருகையி லேந்தி யசைந்தொருகை, துகிலேந்தி' [தஞ்சை-கோ-கஎ] என்பதனோடு ஒருவாறு ஒத்திருத்தல் காண்க. உறங்குங் காலத்தும் அத்தெரிவையர் முகமலர்ச்சியுற்று விளங்குவாரெனின், விழித்திருக்குங்கால் அவர்தம் முகப் பொலிவைப் பற்றிக் கூறவேண்டுவ தின்றென்பதாம். கொத்து - இது கொந்தென மெலிந்து நின்றது. துகிலொடு—ஒடு—உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றனுருபு. அனந்தலினும்—உம்மை யிழிவு சிறப்பு. பா - பே :—* முகம லர்ந்தருளும். (உசு)

நகக் குறிகளைக்கண்டு மகளிர் மகிழ்தல்

சஎ. முலைமீது §கொழுநர்கைந் நகமேவு குறியை
முன்செல்வ மில்லாத வவர்பெற்ற பொருள்போல்
கலைநீவி யாரேனு மில்லாவி டத்தே
கண்ணுற்று நெஞ்சங்க ளிப்பீர்க டிறமின்.

ப - ரை :—கொழுநர் கை - (உங்கள்) கணவர் கை விரல்களிலுள்ள, நகம் - நகங்களால், முலை மீது - (உங்கள்) கொங்கைகளில், மேவு குறியை - பொருந்திய குறிகளை, முன் - முன்பு, செல்வம் இல்லாத - பொருளைப் படைத்தறியாத, அவர் பெற்ற - அவ்வறியவர் படைத்த, பொருள் போல் - செல்வத்தைப் போல், யார் ஏனும் - ஒருவரும், இல்லா இடத்து - இல்லாத தனியிடத்தில், கலை நீவி - கச்சை யவிழ்த்து, கண் உற்று - (அந்நகக் குறிகளை) பார்த்து, நெஞ்சம் களிப்பீர்கள் - மனத்தில் மகிழ்ச்சி யடையும் பெண்களே, திறமின்——.

வி - ரை :—நித்திய தரித்திரருக்கு நிதிக் குவியல் கிடைத்தால், அவர்கள் அச்சத்தின் மிகுதியால் பிறரறியாவண்ணம் அப்பொருட் குவியலைத் திறந்து பார்த்துப் பெருமகிழ்ச்சி யுறுதல் போல், அம்மடந்தையரும் தங்கள் கொங்கைகளில் புதியனவாய்த் தோன்றிய தங்கேள்வர் நகக் குறிகளை நாண மிகுதியால் பிறரறியாவண்ணம் தனியிடத்திற் கண்டு களிப்புற்றனரென்பதாம். 'புருவத்தை நெறித்து' என்னுஞ் செய்யுளில், 'சரசத்தை விளைத்து முலைக்கிரி, புளகிக்க வணைத்து நகக்குறி, தனைவைத்து முகத்தை முகத்துட னுறமேவி' [திருப்பு] என்றார் அருணகிரி நாதரும். நகக்குறி, பற்குறிகள் மகளிர்க்கேயன்றி யாடவர்க்கு முரியன வென்பதை, 'வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவும்' [கலி - அஅ] என்றதனாலறிக. கை, கலை—ஆகு பெயர்கள்; வறியவர் மகளிர்க்கும் பொருள் நகக் குறிக்கும் உவமையாகலின், இஃதுவமை யணியாம். பா - பே :— $ கொழுநன்றன். (உஎ)

தங்கேள்வ ருயிரையும் உணர்வையும் பிளத்தல்

சஅ. கடலில் விடமென வமுதென மதனவேள்
கருதி வழிபடு படையொடு கருதுவார்
உடலி னுயிரையு முணர்வையு நடுவுபோய்
உருவு மதர்விழி யுடையவர் திறமினோ.

ப - ரை :—கருதி - (உயர்வாக) நினைத்து, வழிபடு - (உம்மை) வணங்குகின்ற, மதனவேள் - மன்மதனுடைய, படை ஒடு - (மலர்) கணைகள் போலவும், கடலில் விடம் என - திருப்பாற்கடலில் தோன்றிய விடம் போலவும், அமுது என - அமுதம் போலவும், கருதுவார் - (உம்மை) நினைப்பவராகிய உங்கள் கணவருடைய, உடலின் உயிரையும் - உடம்பிலுள்ள உயிரையும், உணர்வையும் - (அவர்கள்) அறிவையும், நடுவு போய் உருவும் - நடுவில் ஊடுருவிச் செல்லும், மதர் விழி உடையவர் - செருக்கிய கண்களையுடைய பெண்களே, திறமின்——.

வி - ரை :—மன்மதன் கணைகள் ஆடவர் உயிரையும் உணர்வையும் பிளத்தல் போல், அம்மாதர்கண்களும் அவர்தங் கணவருயிரையு முணர்வையும் ஊடுருவிச் செல்லு மென்பதாம். அம் மெல்லியலார் கண்கள், அவர்தங் கேள்வர் அவர்களைத் தணக்குங்கால் அவர்கட்கு விடம்போல் துன்பத்தையும், மணக்குங்கால் அமுதம்போல் பேரின்பத்தையும் பயத்தலால், 'விடமென வமுதென' என்றார். 'நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னும், தீயாண்டுப் பெற்றாளிவள்' [திருக்கு - க0ச] என்னு மாறறிக. 'வேளை வென்ற முகத்தியர்' [கம்பரா - நாட்டுப் - உச] ஆகலின், 'மதனவேள் கருதி வழிபடு' என்றார். 'விடமென வமுதென' என்பதற்கு விடம்போல் கருமணியும், அமுதம் போல வெண்ணிறமுங் கலந்து உருவுமதர் விழி யெனினுமாம். 'நஞ்சிடை யமுதங் கூட்டி நாட்டங்களான' [கம்பரா - கோலங்காண் - கரு] எனக் கம்பரும், 'கடுவுமமிர்தமும் விரவிய

விழியினர்' [திருப்பு] என அருணகிரிநாதரும் கூறியுள்ளமை காண்க. மன்மதன் மலரம்புகளாவன:—தாமரை, முல்லை, அசோகு, மா, நீலம், என்பன. 'உயிரையு முருவு மதர்விழி' என்றதற்கேற்ப, 'கண்ணுலுயிருண்பீர்கடை திறமின் கடை திறமின்' [அஞ்ஞவதை - கடைதி - க] எனப் பிறருங் கூறியுள்ளமை காண்க. 'படையொடு......உருவு மதர் விழி' என்க. கடலில் என்பதை அமுது என்பதனோடுங் கூட்டுக. இது முதனிலை விளக்கணியாம். விடமென, அமுதென, படையொடு—இவற்றிலுள்ள என, ஒடு என்பவை உவம உருபிடைச் சொற்கள். மதனவேள்—இருபெய ரொட்டுப் பண்புத்தொகை. இத்தாழிசையில் உவமையணியு முள்ளமை காண்க. (உஅ)

மகளிர் தோற்றம்

சக. முறுவன் மாலையொடு தரள மாலைமுக
மலரின் மீதுமுலை முகிழினுஞ்
சிறுநி லாவுமதின் மிகுநி லாவுமென
வருந வீர்கடைக டிறமினோ.

ப - ரை :—முகம் மலரின் மீது - முகமாகிய தாமரை மலரில், முறுவல் மாலை - (தோன்றும்) புன்னகையின் தன்மை, சிறு நிலாவும் - இளநிலாவின் ஒளியையும், முலை முகிலின் (மீது) - முலைகளாகிய கோங் கரும்புகளில், தரளம் மாலை-(அணிந்த) முத்து மாலைகளி னொளி, அதின் - அதைக் காட்டிலும், மிகு நிலாவும் - சிறந்த நிலாவின் ஒளியையும், என - (ஒக்கும்) என்று (கண்டோர்) சொல்லும்படி, வரு நவீர் - (நடந்து) வரும் அழகிய பெண்களே, கடைகள் திறமின்——.

வி - ரை :—முகத்தில் தோன்றும் புன்னகை இளமதியி னொளியையும் கோங்கைகளி லணிந்த முத்துமாலை உவாமதியி னொளியையு மொக்குமென்பதாம். புன்னகை புரியுங்கால் பற்கள் சிறிது வெளியில் தோன்றுதலால், 'சிறு நிலா' எனப்பட்டது. அது - என்றது புன்னகையி னொளியை. முகிழ் - கோங்கரும்பு; கோங்கரும்பைக் கொங்கைகளுக் குவமையாகக் கூறுதலை, 'யாணர் கோங்கி னவிர்முகை யெள்ளி, பூணகத் தொடுங்கிய வெம்முலை' [சிறுபா - உடு - உசு] எனவும், 'யாணர் கோங்கின் மென்முகிழ் முலை' [ஆரிய - பாகவ - கோபியர்துகில் - கங] எனவும் வருவனவற்றாலறிக. முகிழென்பதற்குத் தாமரை யரும்பெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். [இந்நூல் ௬0, ௬௬; தாழிசைகளைப் பார்க்க.] முகமலர், முலைமுகிழ்—உருவகவணிகள்; மாலையொடு — ஒடு இசை நிறை; முகிழினும் — உம்மை அசைநிலை. ஒக்கும் என்பது இசையெச்சமாய் வருவித் துரைக்கப் பட்டது. இச்செய்யுளில் நிரனிறைப் பொருள்கோள் (யதாஸங்க்யா லங்காரம்) அமைந்துள்ளமை காண்க. (உகூ)

மகளிர் செங்கழு நீரும் இளைஞருயிரும் முடித்தல்

௩0. முருகிற் சிவந்த கழுநீரு
முதிரா விளைஞ ராருயிருந்
திருகிச் *செருகுங் குழன்மடவீர்
செம்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—முருகின் - தேனையுடைய, சிவந்த கழுநீரும் - செங்கழு நீர் மலர்களையும், முதிரா - (பருவம்) நிரம்பாத, இளைஞர் - இளையவராகிய (உங்கள்) கணவருடைய, ஆர் உயிரும் - சிறந்த உயிரையும், திருகி

செருகும் - முறுக்கி முடிக்கும், குழல் மடவீர் - கூந்தலையுடைய பெண்களே, செம் பொன் கபாடம் திறமின் ——.

வி - ரை:—காமுகராய விளைஞர் மாதர்களின் முகம், மார்பு, கூந்தல் முதலிய உறுப்புக்களைக் கண்டு மனமுருதுவ ராதலால், அவருயிரைத் திருகிச் செருகுங் குழல் எனப்பட்டது. 'உருகுஞ்சுர ருயிருண்டன வுணர்வுண்டன வொழுக, திருகுங்குழ லரமங்கையர் திறமின் கடை திறமின்' [தக்கயா - கங] என்னுந் தாழிசையின் பொருள் இங்குப் பெரிதும் ஒத்திருத்தலைக் காண்க. மகளிர் தங்கூந்தலில் குவளைமலரணிதலை, 'குவளை நாறுங் கூந்தல் தேமொழி,' [நற்றி-உசுஉ] என்றதனாலறிக. இந்நூல் சுஉ, எச-ம் தாழிசைகளையும் நோக்குக. முருகு—வாசனை யெனினுமாம். இதிலுள்ள இன்சாரியை; இளைஞர்—இதிலுள்ள ஞ்—பெயரிடை நிலை ; மடவீர்—விளிப்பெயர் ; இதன் முதல் வேற்றுமை மடவார். இத்தாழிசையில் பல பொருள்கள் பொதுவாகிய ஒரு தன்மையில் முடிந்துள்ளமையால், இஃதோப்புமைக் கூட்டவணியாம். (துல்ய யோகிதா லங்காரம்)
பா-பே:—*சொருகும். (ரு0)

மகளிர் கூடலிழைத்தல்

ருக. மெய்யில ணைத்துருகிப் பையவ கன்றவர்தா
மீள்வரெ னக்கருதிக் கூடல்வி ளைத்தறவே
கையில ணைத்தமணற் கண்பனி சோர்புனலிற்
கரைபவி ழுந்தழுவீர் கடைதிற மின்றிறமின்.

ப - ரை :—மெய்யில் அணைத்து - (உம்மை விட்டுப் பிரியுங்கால் உம்மைத் தங்கள்) மார்பில் அணைத்துக்கொண்டு, உருகி - (உங்கள் பிரிவிற்கு மனம்) குழைந்து, பைய - மெல்ல, அகன்றவர் தாம் - (உமக்குத் தேறுதல் கூறிப் போரின் பொருட்டு உம்மைவிட்டு) நீங்கிய (உங்கள்) கணவர்கள், மீள்வர் - (குறித்த பருவத்தில் உம்மிடம்) திரும்பி வருவார், என கருதி - என்று நினைத்து, கூடல் விளைத்து - (மணலில்) கூடல் சுழியை (வட்டமாய்) வரைந்து, அற - (அக்கூடல் சுழி கூடாமல்) நீங்க, கையில் அணைத்த மணல் - (அக்கூடலிழைக்க உங்கள்) கையால் சேர்த்த மணலானது, பனி கண்சோர் - குளிர்ந்த கண்களிலிருந்து சொரியும், புனலில் - நீரால், கரைய - கரைந்து போகும்படி, விழுந்து - (அம்மணல் மேல்) விழுந்து, அழுவீர் - அழுகின்ற பெண்களே, கடைதிறமின் திறமின்——.

வி - ரை:—தங்கொழுநரைப் பிரிந்த மகளிர் கூடலிழைக்க, அது கூடாமற் போகவே பெரிதும் வருந்தின ரென்பதாம். 'மெய்யி லணைத்துருகி' என்றதனால், தலைவர்கட்குத்தலைவியர் மாட்டுள்ள வன்பும், 'விழுந்தழுவீர்' என்றதனால், தலைவியர்கட்குத் தலைவர் மாட்டுள்ள வன்பும் நன்கு புலனும். கூடல் விளைத்தலாவது:—தலைவரைப் பிரிந்த தலைவியர் மணலில் வட்டமாக ஒரு கோட்டை வரைந்து அதனுட் புறத்தில் அக்கோட்டைச் சுற்றிப் பல சிறு கோடுகள் சுழித்து, இவ்விரண்டாய் எண்ணுங்கால் சுழிகள் ஒற்றையானல், பிரிந்த தலைவர் விரைவில் வாராரெனவும், இரட்டையானல் அவர் விரைவில் வந்து கூடுவாரெனவும் குறி பார்ப்பதாம். அவ்வாறியற்றி யெண்ணுங்கால், சுழிகள் ஒற்றையானமையால், அம்மகளிர் வருந்தலாயினரென்க. இதனை 'சிதைக்கின்ற தாழியென்ருழியைச் சீறித்தன் சீரடியால், உதைக்கின்ற நாயகம்' [திருவி-ருச] எனவும், 'ஓடை மாமதயானையுதைத்தவன், கூடுமாகில் நீ கூடிடு கூடலே' [நாச்சி - திரு-ச]

எனவும்; 'ஆழி திருத்திச் சுழிக்கணக் கோதிநை யாமலைய' [திருக்கோ-கஙசு] எனவும், 'குன்றூது கூடுகெனக் கூறிமுத்த வார்மணல்மேல், அன்றூங் கணி யிழையா ளாழி யிழைத்தாளே' [சீவகசி-ககஙஎ] எனவும், 'மைம்மறந்த நீல வொண்கண் வார்புனற்சொரிந்தியாழ், கைம்மறந்த கூடலெண்ணி மெல் விரல்கள் கன்றின' [நைட - கைக்கிளை - ச] எனவும் ஆன்றோர் கூறியவற்றா னுணர்க. கூடலாவது:-அரிவையர் தங் கண்களை மூடிக்கொண்டு மணலில் வட்டமாக ஒரு கோட்டை வரையின், அதன் முதலுங் கடையும் ஒன்று கூடின், தங்கேள்வர் தம்பால் விரைவின் வந்தெய்துவ ரென்பதையும் இல்லையேல், அவர்கள் வாராரென்பதையு முணர்த்துங் குறியெனவும் கூறுவர். அணைத்தல்—சேர்த்தல்; இதனை, 'இணைத்த கோதை யணைத்த கூந்தல்' [திருமுருகு-உ00] என்பதிற் காண்க. மெய்—பொருளாகு பெயராய் மார்பைக் குறித்தது; பொய்யாகிய உடலை மெய்யென்றது மங்கல வழக்கு; மணல்—எழுவாய்; கையில், புனலில்—இவ்விரண்டும் உருபு மயக்கம். (ருக)

கொங்கைகள் பசலை நிறமடைதல்

ருஉ. செருவிள நீர்பட வெம்முலைச்
செவ்விள நீர்படு சேயரிக்
கருவிள நீர்பட வூடுவீர்
கனகநெ டுங்கடை திறமினோ.

ப - ரை:—செரு - (கலவி) போர்க்குரிய, வெம் முலை - (கண்டோர்) விரும்பும் (உங்கள்) கொங்கைகளாகிய, செவ்விள நீர் - செவ்விள நீர்க் காய்களின், இள(மை) நீர்(மை) பட - இளந்தன்மை யழியவும், செம் அரி படு - சிவந்த கோடுகள் பொருந்திய, கருவிளம் - கருவிள மலர் போன்ற கண்களிலிருந்து, நீர்பட - நீர்பெருகவும், ஊடுவீர் - (உங்கள் கணவரோடு) பிணங்கும் பெண்களே, கனகம் நெடு கடை திறமின்——,

வி - ரை:—கொங்கைகளி னிளந்தன்மை யழிதலாவது:—அவை பசலை நிறமடைதல்; இளமகளிர் தங்கணவரைத் தணந்தால் கொங்கை, முகம் முதலிய உறுப்புக்கள் பசலை நிறமடைதலும், அவர்களைப் புணர்ந்தால் அப்பசலை நீங்கலு மியல்பு; இதனை, 'பொங்கார்மெல் விளங்கொங்கை பொன்னே பூப்ப, பொரு கயல்கண் ணீரரும்பப் புலவி தந்து' [திருநெடு-கஎ] எனவும், 'ஒரு நாள்நீ ரளிக் குங்கால் ஒளிசிறந் தொருநாள்நீர், பாராட்டாக் கால்பசக்கும் நுதல்' [கலி-உரு] எனவும் 'ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க, பாசியற்றே பசலை காதலர், தொடுவுழித் தொடுவழி நீங்கி, விடுவுழி விடுவுழிப் பசத்தலானே' [குறுந்-ருகூ] எனவும் வருமாற்றானறிக. முலைச் செவ்விளநீர் - உருவகவணி; வெம்மை—விரும் பல்; 'வெம்மை வேண்டல்' [தொல்கா - உரி - ருகஅ] என்றமை காண்க. கரு விளம்—உவமையாகு பெயராய்க் கண்களைக் குறித்தது. இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி யுள்ளமை காண்க. (ருஉ)

கலவிக் கால இயல்பு

ருங. அளக பாரமிசை யசைய மேகலைகள்
அவிழ வாபரண மிவையெலாம்
இளக மாமுலைக ளிணைய ருமல்வரும்
இயன லீர்கடைக டிறமினோ.

ப - ரை:—அளகம் பாரம் - கூந்தலாகிய சுமை, மிசை அசைய - (தலை)மேல் அசையவும், மேகலைகள் அவிழ - (இடுப்பிலணியும்) மேகலா

பரணங்கள் குலையவும், ஆபரணம் இவை எலாம் - (மற்றுமுள்ள) ஆபரணங்களோடு இவைகளெல்லாம், இளக - (ஒன்றுய்) அசையவும், மா இணை முலைகள் - பருத்த இரண்டு கொங்கைகளும், அருமல் வரும் - (உம்மைவிட்டு) நீங்காமல் வரும், இயல் நல்லீர் - தன்மையை யுடைய அழகிய பெண்களே, கடைகள் திறமின்——.

வி - ரை :—பெண்கள் நடக்குங்கால் கூந்தல் முதலியன அசைதலியல்பாதலால் இவ்வாறு கூறினர். இளகல்—அசைதல், இதனை, 'ஆறுசெல் வம்பலர் காய்பசி தீர, சோறடு குழிசி யிளக விழூஉம்' [பெரும்பா - ௬௧ - ௬௬] என்றதனுலறிக. மேகலை - மகளிர் தமது இடையிலணியும் ஒருவகை யணி ; 'எண்கோவை காஞ்சி யெழுகோவை மேகலை' எனவும், 'எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை' [திரு முருகு - அடி - ௧௧ - உரை] எனவும் மேகலையின் தன்மை வேறுபட்டு வழங்குமாறு காண்க. மா—அழகெனினுமாம். மகளிர் நடக்குங்கால், கூந்தல் முதலியன அசையும் இயல்பாகிய தன்மை இத்தாழிசையில் அமைந்துள்ளமையால், இது தன்மை நவிற்சி யணியாம். (௫௩)

வாய் வெளுத்துக் கண் சிவத்தல்

௫௪. மதுர மானமொழி பதற வாள்விழிசி
வப்ப வாயிதழ்வெ ளுப்பவே
அதர பான†மது பான மாகவறி
வழியு மாதர்கடை திறமினோ.

ப - ரை :—மதுரம் ஆன மொழி - இனிமையாகிய சொற்கள், பதற - தடுமாறவும், வாள் விழி சிவப்ப - வாள் போன்ற கண்கள் சிவக்கவும், வாய் இதழ் வெளுப்ப - வாயின் உதடுகள் வெளுக்கவும், அதரம் பானம் - (நீங்கள் உங்கள் கொழுநர்) இதழைச் சுவைத்தலால், மது பானம் ஆக - கள்ளைப் பருகினற்போல, அறிவு அழியும் மாதர் - அறிவு குலையும் பெண்களே, கடை திறமின்——.

வி - ரை :—புணர்ச்சிக் காலத்தில் மகளிர்க்கு வாய் வெளுத்தலும் கண் சிவத்தலு மியல்பு. 'செய்ய வாய்வெளுப் பக்கண் சிவப்புற......பொய்கை காதங்கொ ழுநரும் போன்றதே' [கம்பரா-நீர்விளை-௧௬] எனவும், 'தடங்கண் சிவப்ப விதழ்விளர்ப்ப.........முயங்கினள்' [விநாயகபு-இந்திரன் சாப-௬௭] எனவும், 'கலவியிலே தோய்ந்து சிவந்தது மின்னர் நெடுங்கண்' [தனிப்பா - ௧ - படிக்காசு - ௭] எனவும் வருமாறு காண்க. 'வாயிற் சிவப்பை விழிவாங்க, மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்க' [தா - ௬௧] என்பர் பின்னும் ; காமமிகுதியாலும் தங்கேள்வர்களின் அதரபானமாகிய மதுவை யுண்டமையாலும் அம்மாதர் மொழிபதறி அறிவிழந்தன ரென்க. மகளிர் மைந்தர்களின் அதரபான மருந்துதலை, 'சுரர்க ளுக்கமு தங்கொ டுத்தவர் சோதி வாயமு தங்கொடார்' [திருவரங்-கலம் - ௨௭] என்றதனுலறிக. வாள்விழி—ஒளியையுடைய கண்களெனினுமாம். அதரம்—கீழுதடு ; மேலுதட்டை ஒட்டமென்ப. மாதர்—அண்மைவிளி ; ஆக—உவம உருபு. பா - பே :—†மதுபானமாகி. (௫௪)

கொங்கை வேதொற்றி வாய் மருந்தூட்டல்

௫௫. தங்குகண் வேல்செய்த புண்களைத்
தடமுலை வேதுகொண் *டொற்றியுஞ்
செங்கனி வாய்மருந் தூட்டுவீர்
செம்பொ †னெடுங்கடை திறமினோ.

ப - ரை :—தங்கு கண் - (கேள்வர் மார்பிற் சென்று) படிந்த (உங்கள்) கண்களாகிய, வேல் செய்த புண்களை - வேலாயுதத்தால் உண்டாகிய (காமமாகிய) புண்களை, தட முலை - பருத்த கொங்கைகளிலிருந்து உண்டாகும், வேது கொண்டு ஒற்றியும் - வெப்பத்தாலழுத்தி, செம் கனி - சிவந்த கோவைக்கனி போன்ற, வாய் மருந்து - வாயிலிருந்து சுரக்கும் (நீராகிய) அமுதத்தை, ஊட்டுவீர் - உண்பிக்கும் பெண்களே, செம் பொன் - சிறந்த பொன்னாலாகிய, நெடு கடை திறமின்——.

வி - ரை :—புண்பட்டவர்க்கு வேதுகொண் டொற்றி மருந்தூட்டுதலியல்பாதலால், அம்மடந்தையருந் தங்கண்களாகிய வேல் தைத்தலால், தங்கொழுநர்க்குண்டாகிய காமநோயாகிய புண்களைத் தங்கொங்கை வேதினுலொற்றித் தங்கள் வாய் மருந்தூட்டி யாற்றின ரென்க. 'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி, வாலெயி றூறியநீர்' [திருக்கு - ககஉக] எனவும், 'ஊறுநீரமு தேய்க்கு மெயிற்றூய்' [கலி - உ0] எனவும், 'முள்ளெயிற்றமிழ்த மூறுஞ் செவ்வாய்' [குறுந்-உஅசு] எனவும் ஆன்றோர் கூறினமையின் 'வாய் மருந்து' என்றார். முன் செய்யுளில் அரிவையர் அதரபானம் நுகர்ந்தமை மொழிந்து, இச்செய்யுளில் அவர்கள் தங் கேள்வர்க்கதனை யூட்டினமை கூறினார். 'கூரெயிற்றார் குவிமுலைப் பூணொடு, மார னெப்பார் மார்பணி கலவி, அரிவைய ரமிர்த பானம், உரிமை மாக்களுவகையமிர் துய்ப்ப,' [பரிபா - அ - கக அ - கஉக] என்றமையு மிங்குக் கவனிக்கத் தக்கது. புண்களை — புண்களிலென உருபு மயக்கமாய்க் கொள்ளலுமாம்; முலை வேது, வாய் மருந்து — ஐந்தனுருபும் பயனு முடன் தொக்க தொகை; ஒற்றியும்—உம்மை அசைநிலை. பா - பே—*ஒத்தியும், †மணிக்கடை. (ருரு)

கொங்கை வேதொற்றிக் கையால் கட்டுதல்

ருசு. பொருங்கண் வேலிளைஞர் மார்பி னூடுருவு
புண்க டீரவிரு கொங்கையின்
கருங்கண் வேதுபட †வொற்றி மென்கைகொடு
கட்டு மாதர்கடை திறமினோ.

ப - ரை :—பொரும் - (ஒன்றோடொன்று) தாக்கும், கண் வேல் - (உங்கள்) கண்களாகிய வேல்கள், இளைஞர் மார்பின் - (உங்கள் கணவராகிய) இளையவர்களின் மார்பில், ஊடுருவு - ஊடுருவிச் செல்லுதலாலுண்டாகும், புண்கள் தீர - (காமமாகிய) புண்கள் நீங்கும்படி, கரு கண் - கரிய கண்களையுடைய, இரு கொங்கையின் - (உங்கள்) இரண்டு தனங்களின், வேது பட ஒற்றி - வெப்பம் பொருந்த அழுத்தி, மென் கை கொடு - (உங்கள்) மென்மையாகிய கைகளால், கட்டு மாதர் - தழுவும் பெண்களே, கடை திறமின்——.

வி - ரை :—புணர்ச்சிக் காலத்தில் ஆடவர்க்கு மகளிர்க்கு முடல் வெதும்பலுண்மையால், 'கொங்கை வேது' என்றார். புண்ணுற்றோர்க்கு வேது கொண்டொற்றிப் புண்ணின்மேல் கட்டுத லியல்பாதலால், அப்பேதையருந் தங் கொழுநர்க்குற்ற காமமாகிய புண்ணைப் போக்கத் தங்கொங்கையாகிய வேதினு லொற்றித் தங் கைகளால் கட்டின ரென்க. 'உறைமலி யுய்யாநோயூர் சுணங்கு மென்முலையே தீர்க்கும் போலும்' [சிலப் - எ - அ] எனவும், 'மணங் குழலிவள் வடிக்கண் செய்த மம்மர் வெந்நோய், சுணங்கணி வனமுலை யல்லது தீர்க்கலா' [பாண்-கோ - சஉ - ம் செய் - மேற்கோள்] எனவும் வருமாறு காண்க. 'தன்னோய்க்குத் தானே மருந்து' [திருக்கு - ககஅஉ] என்றபடி, அம்மடந்தையர் தங் கண

வர்க்குத் தந்த காம நோயைத் தாமே போக்கின ரென்பதை இவ்விரு செய்யுட்களிலுங் கூறியுள்ளமை காண்க. இவ்விரு செய்யுட்களும் காரண காரியந் தோன்ற வமைந்துள்ளமையால், இவை ஏதுவணியாம். (ஹேதுவலங்காரம்)
பா - பே :—†ஒத்தி. (௫௬)

மகளிர் கூந்தலியல்பு

௫௭. இடையி னிலையரி திறுமிறு மெனவெழா
எமது புகலிட மினியிலை யெனவிழா
அடைய மதுகர மெழுவது விழுவதாம்
அளக வனிதைய ரணிகடை திறமினோ.

ப - ரை :—மதுகரம் அடைய - வண்டுகளெல்லாம், இடையின் நிலை (உங்கள்) இடுப்பு (நிலை பெற்று) நிற்றல், அரிது - அருமையாம், இறும் இறும் - (அது) முறிந்து போகும், என எழா - என்று (மேலே) எழுந்தும், எமது புகல் இடம் - எமது அடைக்கலத்திற்குரிய விடம், இனி இலை - இனி (வேறு) இல்லை, என விழா - என்று (மீண்டு) விழுந்தும், எழுவது விழுவது ஆம் - (இவ்வாறு மேலே) எழுவதும் (மீண்டும்) விழுவது மாகிய, அளகம் வனிதையர் - கூந்தலையுடைய பெண்களே, அணி கடை திறமின்——.

வி - ரை :—மகளிர் கூந்தலில் வண்டுகள் மொய்த்தலை, 'வண்டுபடு கூந்தல் தண்டழைக் கொடிச்சி' [ஐங்கு - உ௫௬] என்றதனாலறிக. அந்நங்கையர் தங்கள் கூந்தலில் முடித்த மலரிலுள்ள தேனைப் பருக வந்த வண்டுகள் தனபாரத்தால் அவர்தஞ் சிற்றிடை வருந்தா நின்றமையால், அவர்கள் கூந்தலில் உட்கார்ந்தால் அவர்தம் மெல்லிய நுசுப்பு முறிந்துபோ மென்றெண்ணி அவை மேலே எழுவதும் அவைகளுக்குவேறு புகலிடமின்மையால், அவைகள் மீண்டும் அக்கூந்தலில் விழுவது மாயினவென்க. 'நூலொத்த நேரிடை நொய்மையெண் ணாதுநுண் டேனசையால், சாலத் தகாதுகண் டீர் வண்டுகாள் கொண்டை சார்வதுவே' [திருக்கோ - ௬௫] என்னுஞ் செய்யுளின் கருத்து இங்குப் பெரிதும் ஒத்திருத்தலைக் காண்க. நிலை - நிற்றல்; இஃதிப் பொருள் தருதலை, 'வெளிறி னோன் காழ்ப் பணைநிலை முனைஇ' [புறநா - உ௫] என்றதனாலறிக. இடையின்-இதில் இன் அல்வழிச் சாரியை. இச்செய்யுளில் வண்டுகள் இயல்பாய் எழுதல் விழுதலை, 'இடையினிலை......என விழா' எனக் கவி தன் கருத்தை யேற்றிக் கூறியிருத்தலால், இது தற்குறிப்பேற்ற வணியாம். (௫௭)

தனபாரத்தால் இடை துவளல்

௫௮. உபய தனமசையி லொடியு மிடைநடையை
ஒழியு மொழியுமென வொண்சிலம்
பபய மபயமென வலற நடைபயிலும்
அரிவை மீர்கடைக டிறமினோ.

ப - ரை :—உபய தனம் அசையில் - (உங்கள்) இரண்டு கொங்கைகள் அசைந்தால், இடை ஒடியும் - (உங்கள்) இடுப்பு முறிந்து போகும், நடையை - (ஆதலால் நீங்கள்) நடத்தலை, ஒழியும் ஒழியும் - விடுங்கள் விடுங்கள், என-என்று சொல்வதுபோலவும், அபயம் அபயம்——, என-என்று முறையிடுவது போலவும், ஒண் சிலம்பு - (உங்கள் கால்களிலணிந்த) ஒளி பொருந்திய சிலம்புகள், அலற - ஒலிக்கும் படி, நடை பயிலும்-நடைபுரியும், அரிவைமீர் -பெண்களே, கடைகள் திறமின்——.

வி - ரை :—தனபாரத்தைத் தாங்காமல் இடை முறியு மாதலால், மடவீர், நீர் நுமது நடையை யொழியு மெனச் சிலம்புகள் முறையிட லாயின வென்பதாம். 'வல்லெ னப்புடைக் குந்தன வன்பொறைக், கில்லெ னக்கரு தும்மருங் கிற்றி டும், மெல்லெ னப்பதம் வைத்துமி தித்துமின், செல்லெ னப்பொற்சி லம்புசி லம்புமால்' [அரிச் - பு - விவாக'கா - உ0௪] எனவும், 'இழையார் வனமுலை வீங்கி யிடையிறு கின்றது' [பொன்வண் - ௬௬] எனவும் வருவன இங்குக் கருதத் தக்கன. இதுவும் தற்குறிப்பேற்ற வணியாம். (ரு௮)

மாதர்களுக்குங் காவிரியாற்றுக்குஞ் சிலேடை

ருசு. பூவிரி மதுகர நுகரவும்
பொருகய லிருகரை புரளவுங்
காவிரி யெனவரு மடநலீர்
கனகநெ டுங்கடை திறமினோ.

மாதர்கள் மேல் கூறுங்கால் :—

ப - ரை :—கரம் - (உங்கள்) கைகளால், விரி பூ மது - மலர்ந்த மலரினுள்ள கள்ளை, நுகரவும் - (நீங்கள்) பருகவும், பொரு கயல் - (ஒன்றோடொன்று) போர் புரியும் கெண்டைமீன் போன்ற (உங்கள்) கண்கள், இரு கரை - இரண்டு கரை போன்ற கண்ணிதழ்களி னிடையில், புரளவும்——, எனவும்,

காவிரி யாற்றின் மேல் கூறுங்கால் :—

விரி பூ - மலர்ந்த மலரினுள்ள தேனை, மதுகரம் நுகரவும் - வண்டுகள் பருகவும், பொரு கயல் - போர் புரியும் கெண்டை மீன்கள், இரு கரை - இரண்டு கரைகளில், புரளவும்——, காவிரி என - காவிரி நதி போல், வரு மடம் நலீர் - வருகின்ற இளம் பருவமுடைய அழகிய பெண்களே, கனகம் நெடு கடை திறமின்——,

எனவும் பொருள் கொள்க.

வி - ரை :—மடவார் கண் பிறழ்ச்சி, காவிரியில் கெண்டை மீன்கள் புரளுதலை யொத்திருந்த தென்பதாம். கண்ணிதழ்களைத் தடாகத்தின் கரைகளாகவும் கண்விழிகளைக் கயல் மீன்களாகவும் இங்குக் கூறியதற்கேற்ப, 'செழு நீர்த் தடத்துக் கயல்மிளிர்ந் தாலொப்பச் சேயரிக்கண், அழுநீர் துளும்ப வலமருகின்றன' [திருவி - உ] என்றார் பெரியாரும். 'கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவிரி' [சிலப் - எ - உரு] என்றமையுங் காண்க. மதுகரம் = மதுவைப் பருவுங் கை, வண்டு; கயல் = கண்கள், கெண்டைமீன்கள்; இரு கரை = இரண்டு கரைபோன்ற கண்ணிதழ்கள்; (காவிரியின்) இருபுறக் கரைகள். மாதர் கண்கள்மேல் கூறுங்கால், கயல், கரை - யென்பன ஆகு பெயராய் முறையே கண்களையும் கண்ணிதழ்களையும் குறிக்கும். இச் செய்யுள் சிலேடையணியாம். (ருசு)

கூந்தலில் வண்டுகள் மொய்த்தல்

சு0. களப வண்டலிடு கலச கொங்கைகளின்
மதியெ ழுந்துகனல் சொரியுமென்
றளக பந்திமிசை யளிகள் பந்தரிடும்
அரிவை மீர்கடைக டிறமினோ.

ப - ரை :—களபம் வண்டல் இடு - கலவைச் சந்தனச் சேற்றைப் பூசுகின்ற, கலசம் கொங்கைகளில் - குடம் போன்ற தனங்களில், மதி

எழுந்து - சந்திரன் புறப்பட்டு, கனல் சொரியும் என்று - (தன் கதிர்களாகிய) நெருப்பைச் சொரிவான் என்று, பந்தி அளகம் மிசை - ஒழுங்காகிய கூந்தலின் மேல், அளிகள் பந்தர் இடும் - வண்டுகள் பந்தலையமைக்கும், அரிவைமீர் - பெண்களே, கடைகள் திறமின்——.

வி-ரை:—காமநோயால் வருந்துவோர்க்குத் தண்மதி வெம்மையை விளைக்குமாதலால், 'மதியெழுந்து கனல் சொரியும்' என்றார். 'சுடுதியோ கடல் தோன்றிய திங்களே' [கம்பரா - மிதிலைக்கா - எஎ] எனக் கம்பரும், 'விதுபுவனத்தே வருகொடுமைக்கோ வினையென்மேல், கதுவ வழற்றீ வடவை நிகர்த்தே கதிர்காலும்' [அரிச - பதுமை - சக] எனக் கீழையூர்—சடகோப தாசரும், 'குளிர் திங்கள் ஈட்டுமெணி, பூணிலா மென்முலைமேல் போரச் சொரிந்ததே, நீணிலா வென்னு நெருப்பு' [நளவெ - சுயம்வர - கக௨] எனப் புகழேந்தியாரும் கூறினமை காண்க. கலச கொங்கை — உவமைத் தொகை; பந்தர் — பந்தலென்பதன் போலி. இச்செய்யுளில் உவமையும், தற்குறிப்பேற்றமும் உள்ளமை காண்க. (௬0)

மகளிர் புணர்ச்சிநிலை இயல்பு

௬க. வாயிற் சிவப்பை விழிவாங்க
மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத்
தோயக் கலவி யமுதளிப்பீர்
துங்கக் கபாடந் திறமினோ.

ப - ரை:—வாயின் சிவப்பை - (பவளம் போன்ற உங்கள்) வாய் இதழ்களின் செந்நிறத்தை, விழி வாங்க - கண்கள் கவரவும், மலர் கண் வெளுப்பை - தாமரை மலர்போன்ற கண்களின் வெண்ணிறத்தை, வாய் வாங்க - (உங்கள்) வாய் இதழ்கள் கவரவும், தோயம் - கடல் போன்ற, கலவி அமுது - புணர்ச்சி யின்பமாகிய அமுதத்தை, அளிப்பீர் - (உங்கள் கணவர்க்கு) கொடுக்கும் பெண்களே, துங்கம் - உயர்வாகிய, கபாடம் திறமின்——.

வி - ரை:—மகளிர் தங்கொழுநரைப் புணருங்கால், வாய் வெளுத்தலுங் கண் சிவத்தலு மியல்பாதலால், 'வாயிற் சிவப்பை ........ வாய்வாங்க' என்றார். இந்நூல் ௲௲, ௫சம் - தாழிசைகளிலும் இக்கருத் தமைந்துள்ளமை காண்க. தோய்க் கலவி யமுது—இதனை, தோய் அ கலவி அமுது எனப் பிரித்து (உங்கள் கணவர் தோள்களை) தழுவும் புணர்ச்சியின்பமாகிய அவ்வமுதத்தை யெனினுமாம்; தோயம்—அமுது என வியைத்துத் திருப்பாற் கடலில் தோன்றிய வமுதம் எனினும் பொருந்தும். இதில் 'மலர்க்கண்' என்றது உவமையணி; 'கலவி யமுது' என்றது உருவகவணி; 'வாயிற் சிவப்பை ........ வாய்வாங்க' என்றது மாற்றுநிலையணி (பரிவர்த்தனை யலங்காரம்) இம்மூன்றும் விரவி வந்தமையால், இது சேர்வையணியாம், (சங்கீரண வலங்காரம்). (௬க)

இதுவுமது

௬௨. *கூடு மிளம்பிறையிற் குறுவெயர் முத்துருளக்
கொங்கை வடம்புரளச் செங்கழு நீரளகக்
காடு குலைந்தலையக் கைவளை பூசலிடக்
கலவி விடா†மடவீர் கடைதிற மின்றிறமின்.

ப - ரை:—கூடும் - (இரு நுனியும்) கூடும், இளம் பிறையில் - இளம் பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியிலிருந்து, குறு வெயர் - சிறு வேர்வையாகிய, முத்து உருள - முத்துப் போன்ற நீர்த் துளிகள்

உருண்டு (கன்னங்களில்) விழவும், கொங்கை வடம் - தனங்களிலுள்ள (முத்து, பவளம் முதலிய) மாலைகள், புரள - (தமது நிலைதடுமாறி) புரளவும், செங்கழுநீர் - செங்குவளை மலர்களை யணிந்த, அளகம் காடு - கூந்தலாகிய காடு, குலைந்து அலைய - குலைந்து அசையவும், கை வளை - கையிலணிந்த வளையல்கள், பூசல் இட - ஆரவாரஞ் செய்யவும், கலவி - (உங்கள் கணவரை) புணர்தலை, விடா மடவீர் - தவராத பெண்களே, கடை திறமின் திறமின்——.

வி - ரை :—இங்குக் கூறியதற் கேற்ப, 'அளக பாரம லைந்துகு லைந்திட வதன வேர்வுது லங்கிர லங்கிட, அவச மோகம்வ ளைந்துத ளைந்திட' [திருப்பு] என்றார் அருணகிரி நாதரும். மயிர்ச் செறிவை நோக்கிக் கூந்தலைக் காடென வியல்பு; 'முருகவி ழ்ளகக் காட்டை' [மாறன - பொருளணி - ககள] எனவும், 'அகளக் காடுஞ் சுமக்குங் கரும்பே' [சகல கலா - ] எனவும் தமிழறிஞர் கூறியுள்ளமை காண்க. மகளிர் குவளை மலர்களைத் தங்கூந்தலி லணிதல் பண்டைய வழக்காம். இதனை, 'குவளை நாறுங் குவையிருங் கூந்தல்', [குறுந்- ௩௦௦] எனவும், 'குவளை யுள்ளகங் கமழுங் கூந்தல்' [ஐங்கு - உஉ௯] எனவும் வருமாற்றானறிக. [தா - ௫0, எச] பிறை, முத்து — உவமையாகு பெயர்கள். புணர்ச்சிக் காலத்தில் மடமங்கையர்க்கு வேர்வை யரும்பல், வடம் புரளல் முதலிய இயல்பாகிய தன்மைகள் இச் செய்யுளில் அமைந்துள்ளமையால், இது தன்மை நவிற்சி யணியாம். பா - பே :—* கோடும், † மகளிர். (சஉ)

**கலிங்கப்போரைக் கேட்குமாறு விளித்தல்**

சங. காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
கலவி மடவீர் கழற்சென்னி
காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
களப்போர் பாடத் திறமினோ.

ப - ரை :—காஞ்சி இருக்க - (நீவிர் அணிந்த) காஞ்சியென்னும் இடையணி (குலையாமல்) இருக்க, கலிங்கம் குலைந்த - (உங்கள்) ஆடை குலைதற்குக் காரணமான, கலவி - (உங்கள் கொழுநரை) புணர்தலையுடைய, மடவீர் - பெண்களே, கழல் சென்னி - வீரகண்டையை யணிந்த பாதங்களையுடைய (முதற் குலோத்துங்க) சோழன், காஞ்சி இருக்க - காஞ்சி புரத்தில் (தங்கி) இருக்க, கலிங்கம் குலைந்த - (அவனுணையால்) கலிங்க நாடு அழிந்து போன, களம் போர் - களத்தில் நிகழ்ந்த போரை, பாட - (யாம் சிறப்பித்து) பாட, திறமின் - (அதனைக் கேட்டு மகிழுமாறு நீவிர் கதவை) திறவுங்கள்.

வி - ரை :—மடவீர் கலிங்கப் போரைக் கேட்குமாறு கதவைத் திறமின் என்பதாம். காஞ்சி-மகளிர் தமதிடையி லணியும் ஒருவகை யணி; இவ்வணியின் தன்மையை ௫௩-ம் தாழிசை உரையிற் காண்க. கலிங்கப் போர் நிகழ்ந்த கால முதற் குலோத்துங்கன் காஞ்சீபுரத்தி லிருந்தமையை இந்நூல் ௩௦௦, ௩௧௪-ம் தாழிசைகளாலும், அவன் கருணாகரனுக்குக் கட்டளை யிட்டமையை ௩௪உ-ம் தாழிசையாலு முணர்க. காஞ்சி — ஒரு வகை அணி, காஞ்சிபுரம்; கலிங்கம் — ஆடை, கலிங்கநாடு. கலவி - தொழிற் பெயர்; கழல் — தானியாகு பெயர்; களப்போர்—ஏழனுருபும் பயனு முடன்தொக்க தொகை. இச்செய்யுள் மடக்கு என்னுஞ் சொல்லணியாம். மடக்காவது :—ஓரடியிற் பலவிடங்களிலாயினும், பலவடிகளிலாயினும், முன் வந்த எழுத்துத் தொகுதிகளே மீண்டும் வந்து பொருள் வேறுபடுவதாம். மடக்கு எனினும் யமகம் எனினும் ஒக்கும். (சங)

கருணாகரன் களங்கொள் சிறப்பு

௫௪. இலங்கை யெறிந்த கருணா கரன்றன்
இகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்
கலிங்க மெறிந்த கருணா கரன்றன்
களப்போர் பாடத் திறமினோ

ப - ரை:—இலங்கை எறிந்த - இலங்கையிலுள்ள (இராவணன் முதலிய) அரக்கரைக் கொன்ற, கருணா ஆகரன் தன் - கருணைக்கிருப்பிட மாகிய ஸ்ரீராமபிரானுடைய, இகல் வெம் சிலையின் - வலிமையையுடைய கொடிய வில்லின், வலி கேட்பீர் - பராக்கிரமத்தைக் கேட்க விரும்பும் பெண்களே, கலிங்கம் எறிந்த - கலிங்கநாட்டை யழித்த, கருணாகரன் தன் - கருணாகரத் தொண்டைமானுடைய, களம் போர் - களத்தில் நிகழ்ந்த போரை, பாட - (யாம் புகழ்ந்து) பாட, திறமின் - (அதனைக் கேட்டுக் களிக்குமாறு நீவிர் நுமது வாயில் கதவை) திறவுங்கள்.

வி - ரை:—'இலங்கை யெறிந்த.........வலி கேட்பீர்,' என்றதனால், அம் மாதர்கள் சக்கரவர்த்தி திருமகன்பால் பேரன்பு பூண்டவர்களென்பது நன்கு விளங்கும். கருணாகரன் வெற்றியின் சிறப்பைக் கருதி 'கருணாகரன் றன் களம்' என்றார். 'களங்கொள் யானைக் கடுமான் பொறைய' [புறநா - ௫௩] என்றமை யும் 'தேன்மி டைந்த தாரினான் செய்க ளஞ்சி றந்ததே' [சீவகசி-௨௪௧] எனத் திருத்தக்க தேவர் மொழிந்தமையும், 'இத்துணையும் இவன் வெற்றியாகலின் இவன் களமென்றார்' என நச்சினார்க்கினியர் அதற்குப் பொருள் வரைந்துள் ளமையும், 'அமர்க்கள மரசன தாகத் துறந்து' [சிலப்-௨௮—௧0௪] என்றமையும் கவனிக்க. இவ்வாறு களங்கொள்ளுதலைப் பேராண்மையல்லை யென்ப. 'உடம் புகல மறவேந்தன், களங்கொண்ட சிறப்புரைத் தன்று' [புறப்-வெ-மா-௧௮0] என்றமை காண்க. இலங்கை - இடவாகு பெயர். இலங்கை யெறிந்த - இலங்கை நகரையழித்த வெனினுமாம். கருணாகரன்—தீர்க்க சந்தி, ஆகரம்—இருப்பிடம், கருணைக் கிருப்பிட மானவன் என்பதாம். 'சிலையின் வலிகேட்பீர்' என்றது, உடையான் வலியை உடைமையின்மேல் வைத்துக் கூறிய உபசார வழக்காம். (௫௪)

தங் கேள்வர் பிழைகளை நினைத்தலும் மறத்தலும்

௫௫. பேணுங் கொழுநர் பிழைகளெலாம்
பிரிந்த பொழுது நினைந்தவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர்
கனப்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை:—பேணும் - (நீர்) விரும்பும், கொழுநர் - (உங்கள்) கணவருடைய, பிழைகள் எலாம் - குற்றங்கள் எல்லாவற்றையும், பிரிந்த பொழுது - (அவர்கள் உம்மைவிட்டு) நீங்கிய காலத்தில், நினைந்து - எண்ணி வருந்தியும், அவரை காணும் பொழுது - அவர்களைக் கண்ட காலத்தில், மறந்து - (அவர் குற்றங்களை) மறந்தும், இருப்பீர் - (களிப்போடு) இருக்கும் பெண்களே, கனம் பொன் கபாடம் திறமின்——.

வி - ரை:—அம்மகளிர் தங்கொழுநர்பால் பேரன்பு பூண்டவராகலின், 'பேணுங் கொழுநர்' என்றார். அவ்வன்பின் பெருக்கால், அப்பேதையர் தங் காதலர் குற்றங்களைக் கருதா தவராயினும், அவர்கள் பிரிவுத் துன்பம் அவர்களை அவ்வாறு தூண்டியதென்க. தங்கொழுநரைக் கண்டவளவில் அக்குற்றங்களை

யெல்லாம் மறந்து மீண்டும் பேரன்பும் பெருங்களிப்பு மெய்துவ ரென்பார், 'மறந் திருப்பீர்' என்றார். 'காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால், காணேன் தவறல் லவை' [திருக் - கஉ௮சு] என்னுந் திருக்குறளின் கருத்து இச்செய்யுளி லமைந்துள்ளமை காண்க. 'ஊடுவே னென்பேன்ம னந்நிலையே யவற்காணில், கூடுவே னென்னுமிக் கொள்கையில் நெஞ்சே' [கலி - கூஎ] என்றமையு மிங்குக் கவனிக்க. எலாம்—இது எல்லாம் என்றதன் இடைக்குறை; இதில் முற் றும்மை விகாரத்தால் தொக்கது. (௬௫)

மகளிர் தம் கேள்வருடன் உறவாடுந் தன்மை

௬௬. வாச மார்முலைகண் மார்பி லாடமது
மாலை தாழ்குழலின் *வண்டெழுந்
தூச லாடவிழி பூச லாட†வுற
வாடு வீர்கடைக டிறமினோ.

ப - ரை:—வாசம் ஆர் - வாசனைச் சுண்ணம் பொருந்திய, முலைகள் - (உங்கள்) கொங்கைகள், மார்பில் ஆட - மார்பில் குலுங்கவும், மது மாலை தாழ் - தேனையுடைய மலர் மாலைகள் பொருந்திய, குழலின் - கூந்தலி லிருந்து, வண்டு எழுந்து - வண்டுகள் (மேலே) கிளம்பி, ஊசல் ஆட - ஊசலைப் போல் (இப்புற மப்புறம்) பறக்கவும், விழி பூசல் ஆட - (உங்கள்) கண்கள் (ஒன்றோடொன்று) போர் புரியவும், உறவு ஆடுவீர் - (உங்கள் கணவரோடு) உறவாடும் பெண்களே, கடைகள் திறமின்——.

வி - ரை:—'விழிபூசலாட' என்றது, கண்களின் பிறழ்ச்சியா லுண்டா கும் பேரழகை; 'போர்க்கெண்டை வல்லி யொன்றால், விலக்குண் டிலாகின்று' [திருவி - ௩எ] எனப் பெரியார் பணித்தமையும் அதன் வியாக்கியானமும் இங்குக் கருதத் தக்கவை. பா - பே:—* வண்டு சூழ்ந்து, † உறவாடு மாதர்கடை. (௬௬)

மகளிர் புணர்ச்சி மயக்க நிலைமை

௬எ. நேயக் கலவி மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக் கிளியுரைப்ப
வாயைப் புதைக்கு மடநல்லீர்
மணிப்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை:—நேயம் - அன்பை விளைவிக்கும், கலவி மயக்கத்து - புணர்ச்சியா லுண்டாகும் காம மயக்கத்தில், நிகழ்ந்த மொழியை - (உங்கள் கணவர்களுக்கும் உங்களுக்கு மிடையே) நடந்த சொற்களை, கிளி உரைப்ப - கிளிகள் சொல்ல, வாயை புதைக்கும் - (அவைகளின்) வாயை (உங்கள் கையால்) மூடும், மடம் நல்லீர் - இளம் பருவமுடைய அழகிய பெண்களே, மணி - இரத்தினங்களைப் பதித்த, பொன் கபாடம்- பொன்னாலாகிய கதவை, திறமின்——.

வி - ரை:—இரவில் மைந்தரும் மகளிரும் புணருங்கால், அவர்கள் காம மீதூர மனங்கனிந்து முறை பிறழ்ந்து பேசிய தகுதியற்ற சொற்களை, 'சொன்ன தைச் சொல்லுங் கிள்ளை' என்றபடி, பகலில் கிளிகள் சொல்லத் தொடங்கின. அவற்றைக் கேட்ட அப்பேதையர் பெரிதும் நாணி, அக்கிளிகளை மேல் பேச விடாமல் அவைகளின் வாயைப் புதைத்தன ரென்பதாம். 'கள்ளுலா நறிய கூந்தல் கலவியி னுரைத்த யாவும், கிள்ளைகள் மிழற்று மாறு கேட்டிள நிலவு காலும், முள்ளெயி றிலங்கச் செல்வி முகிழ்நகை கோட்டினாளே' [நைட - மணம் - ௫௪] என்றமை இங்குக் கவனிக்க. 'வாயைப் புதைக்கும்' என்பதற்கு,

'நாமும் நம் கணவரும் தனியாய்ப் பேசியவற்றை இக்கிளிகள் பலருமறிய வெளியிடுகின்றனவே, இப்படியு முண்டோ!' என வியந்து, அம்மடவார் தமது வாயைத் தாமே புதைத்துக் கொண்டன ரெனினுமாம். மணிப்பொன்—இரண்டனுருபும் பயனு முடன்தொக்க தொகை; மணி — அழகெனினுமாம். (௪எ)

**மகளிரைத் தண்மதி வருத்தல்**

௪அ. பொங்கு மதிக்கே தினநடுங்கிப்
புகுந்த வறையை நிலவறையென்
றங்கு மிருக்கப் பயப்படுவீர்
அம்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை :—தினம் - ஒவ்வொரு நாளும், பொங்கு மதிக்கு - (ஒளி) மிகுந்த சந்திரனுக்கு, நடுங்கி - (மிகவும்) பயந்து, புகுந்த அறையை - (நீர் உமக்குப் பாதுகாப்பாகக் கருதி) புகுந்த படுக்கை அறையை, நிலம் அறை என்று - புழுக்கறை யென்று நினைத்து, அங்கும் இருக்க - அவ் வறையினுந் தங்கி இருக்க, பயப்படுவீர் - பயப்படுகின்ற பெண்களே, அம் பொன் கபாடம் திறமின்——.

வி - ரை :—கணவரைப் பிரிந்த மகளிர் தண்கதிரின் வெப்பந் தாங்கி வெளியிலிருக்க வியலாது பள்ளியறையிற் புக, அங்குக் காமவெம்மை வருத்துதலால், அவர்கள் அதனை நிலவறை போல் கருதி வெருவின ரென்பதாம். காம நோயுற்றோரைத் திங்களின் தண்கதிர் வருத்து மென்பதை ௬0-ம் தாழிசையிற் காண்க. 'மேவுதண் மதியம்வெம் மதியமாலோ, மென்மலர்ப் பள்ளி வெம் பள்ளியாலோ' [திருவாய் - ௯-௯-௪] என்றார் பெரியாரும். நிலவறை-பூமிக்குள் அமைக்கப்பட்ட துவாரமில்லாத அறை; இதனைப் போதியறை அல்லது புழுக்கறை எனவும் வழங்குவர். 'ஓதிய வேதத்தொளியுறி னல்லது, போதார் பிறவிப் போதியறையோர்' [சிலப் - ௧0 - ௧௬0, ௧௬௧] எனவும், 'புழுக்கறை பட்டோர் போன்றுளம் வருந்தாது' [மணிமே - ௩ - ௬௫] எனவும் வருமாறு காண்க. இதிலடைக்கப் பட்டோர் உடல் வேர்த்து மூச்சுத் திணறித் துன்பெய்துவ ரென்பதாம். அங்கும்—இதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. நிலவறை—ஏழனுருபும் பயனு முடன்தொக்க தொகை. (௪அ)

**தங் கேள்வர் வரவை நோக்கி யிருத்தல்**

௪௯. வருவார் கொழுந ரெனத்திறந்தும்
வாரார் கொழுந ரெனவடைத்துந்
திருகுங் குடுமி விடியளவுந்
தேயுங் கபாடந் திறமினோ.

ப - ரை :—விடி அளவும் - பொழுது விடியும் வரையினும், கொழுநர் - (உங்கள்) கணவர்கள், வருவார் என - (உம்மிடம்) வருவாரென்று, திறந்தும் - (கதவை) திறத்தலாலும், கொழுநர் - உங்கள் கணவர்கள், வாரார் என - வரமாட்டாரென்று, அடைத்தும் - (அதனை) மூடுதலாலும், திருகும் - சுழலும், குடுமி தேயும் - குடுமியானது தேய்ந்து போகும், கபாடம் திறமின்——.

வி - ரை:—தங் கணவர் குறித்துச் சென்ற பருவம் வந்தமையால், அம் மடந்தையர் தங் கொழுநர் வரவை நாடி இரவு முற்றும் வீட்டிற்கும் வாசலுக்குமாய் அலைந்தன ரென்பதாம். அவர்கள் அடிக்கடி கதவைத் திறப்பதும் மூடுவதுமா யிருந்தமையால், கதவின் குடுமி தேயலாயின தென்க. குடுமிக் கபாடம்—ஒரு வகைக் கதவு; வருவார், வாரார்—முரண்தொடை. (௪௯)

மகளிர் ஊடலும் கூடலும்

ஸ0. ஊடு வீர்கொழுநர் தங்கள் பான்முனிவொ
ழிந்து கூடுதலி னுங்களைத்
தேடு வீர்கடைக டிறமி னேவினிய
தெரிவை மீர்கடைக டிறமினோ.

ப - ரை :—கொழுநர் தங்கள் பால் - (உங்கள்) கணவர்களிடத்தில், ஊடுவீர் - (நீங்கள் சிறிது போது) பிணங்குவீர்கள், முனிவு ஒழிந்து - (பின்பு) அப்பிணக்கு நீங்கி, கூடுதலின் - (உங்கள் கணவரை) புணர்தலால், உங்களை தேடுவீர் - உங்களை (நீங்களே) தேடுகின்ற பெண்களே, கடைகள் திறமின்——, இனிய தெரிவைமீர் - (காண்போர் கண்ணுக்கு) இனிய பெண்களே, கடைகள் திறமின்——.

வி - ரை :—நீண்ட ஆடல் கூடலின்பத்தைக் கெடுக்குமாதலின், 'சிறிது போது' என்னுஞ் சொற்கள் வருவிக்கப்பட்டன. 'உப்பமைந் தற்றாற் புலவியது சிறிது; மிக்கற்றா னீள விடல்' [திருக்கு-கங0உ] என்றார் நாயனார். அம்மடவார் தங்கொழுநரோடு புணருங்கால், சிற்றின்பக் களிமயக்கத்தின் மிகுதியால், தம்மைந் தாம் மறந்து தமது நிலைதலைந்தனரென்பார், 'உங்களைத் தேடுவீர்', என்றார். ஊடுவீர்—முன்னிலைப் பன்மை வினைமுற்று; ஊடுபவராய் எனப் பொருள் கொண்டு முற்றெச்ச மெனினுமாம். தேடுவீர்—வினையாலணையும் பெயர். (ருO)

மகளிர் கண்ணியல்பு

ஸக. பண்படு கிளவியை யமுதெனப்
பரவிய கொழுநனை நெறிசெயக்
கண்கொடு கொலைசெய வருளுவீர்
கனகநெ டுங்கடை திறமினோ.

ப - ரை :—பண் படு - இராகம் போன்ற, கிளவியை - (உங்கள்) இனிய சொற்களை, அமுது என - தேவாமுதம் போன்றதென்று, பரவிய - புகழ்ந்து பேசிய, கொழுநனை - (உங்கள்) கணவனை, நெறி செய - (உங்கள்) வழிப்படுத்த, கண்கொடு - கண்களால், கொலை செய - துன்பஞ் செய்தலை, அருளுவீர் - அருள் புரியும் பெண்களே, கனகம் நெடு கடை திறமின்—.

வி - ரை :—'காதலி சொல்லிற் பிறக்கு முயர்மதம்' [நான்மணி - ரு] என்றபடி, மனைவியர் அன்பு கனிந்து மொழியு மினிய சொற்கள் காமவேட்கையை மிகுவித்து இன்பம் விளைத்தலால், ஆடவர் அம்மகளிர் மொழியைப் புகழ்ந்தனரென்பார், 'கிளவியை அமுதெனப் பரவிய கொழுநன்' எனவும், அவர் தம் கண் பிறழ்ச்சி காமநோயை மிகுவித்துத் துன்புறுத்தலால், 'கண்கொடு கொலைசெய' எனவு மியம்பினார். 'இருகய விணைவிழியே யெனையிடர் செய்தவையே' [சிலப் - எ - கரு] என்றமை காண்க. தங்கண் பிறழ்ச்சியாலுண்டாகுந் துன்ப நெறியால் அம்மெல்லியலார் தங்கணவர்க் கின்பமே மூட்டுதலின், 'அருளுவீர்' என்றார். கொலை = துன்பம். இதனை, 'தன்னையே கொல்லும் சினம்' [திருக்கு-கூOரு] எனவும், 'கோல்லச் சுரப்பதாங்கீழ்' [நாலடி - உஎகூ] எனவும் வருவனவற்றிற் காண்க. நெறி செய்தலாவது:—தங்கணவர் பரத்தையர்பால் விழைந்து செல்லாமல், அவர்களைத் தம் வயமாக்கிக் கொள்ளல். படு—உவம வுருபிடைச் சொல். (ருக)

தங் கேள்வர் செலவைக் கண்டு திகைத்தல்

எஉ. பிழைநி னைந்துருகி யணைவு றுமகிழ்நர்
பிரித லஞ்சிவிடு கண்கணீர்
மழைத தும்பவிர றரையி லேயெழுது
மடந லீர்கடைக டிறமினோ.

ப - ரை :—மகிழ்நர் - (உங்கள்) கணவர், அணைவு உறு(து) - (உம்மோடு) கூடியிராமல், பிரிதல் அஞ்சி - (உம்மைவிட்டு) நீங்குதற்குப் பயந்து, பிழை நினைந்து - (அவர் செய்த) பிழையைக் கருதி, உருகி - (மனம்) தளர்ந்து, விடு - (நீங்கள்) சொரிகின்ற, கண்கள் நீர் மழை - (உங்கள்) கண்களிலிருந்து வரும் நீராகிய மழை, ததும்ப - மிகும்படி, விரல் தரையிலே எழுதும் - (கால்) விரலால் நிலத்தில் கீறும், மடம் நலீர் - இளம் பருவமுடைய அழகிய பெண்களே, கடைகள் திறமின்—.

வி - ரை :—மகிழ்நர் பிழையாவது : இயற்கைப் புணர்ச்சியில், 'மெல்லிய லரிவைநின் னல்லகம் புலம்ப, நிற்றுறந் தமைகுவ னாயினெற்றுறந், திரவலர் வாரா வைகல், பலவா குகயான் செலவுறு தகவே' [குறுந்—கஙஎ] எனச் சூளுரை மொழிந்த ஆடவர் அம்மொழியை மீறி, தம் மனைவியரைப் பிரிந்து போர்க்குச் செல்லக் கருதினமையாம். அவ்வாடவர் பிரிவைப் பொறுமல், 'நீரிதழ் புலராக்கண் ணிமைகூம்ப வியைபவால்' [கலி-எO] எனவும், 'பொங்கரி பரந்த வுண்கண் அங்கலிழ் மேனி யசைஇய வெமக்கே' [ஐங்கு-கஎச] எனவும் ஆன்றோர் கூறியபடி, அப்பேதையர் அழுதமை கருதி 'கண் கணீர் மழை ததும்ப' என்றார். விரல் தரையிலே யெழுதுதல் என்றது : தங்கேள்வர் செலவைத் தவிர்க்க வியலாமல், அம்மெல்லியலார் திகைப்படைந்து தங்கால் பெருவிரலால் நிலத்தைக் கீறிச் செயலற்று நின்றமையைக் குறிக்கும். முதல்நாட் போரில் இராமபிரானிடம் தோல்வியுற்ற இராவணன் செயலற்று நின்ற நிலையை, 'நிறங்க ரிந்திட நிலம்விரல் கிளைத்திட நின்றான்' [கம்பரா - முதற் போர் - உகுO] எனக் கம்பருங் கூறினர். அணைவுறு - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்; இதனை அவ்வகைப் பெயரெச்சமாய்க் கொண்டு பொருள் கூறினும் பொருந்தும். கண்கணீர்-ஐந்தனுருபும் பயனு முடன் தொக்க தொகை. (குஉ)

கருணாகரனுக்கும் மன்மதனுக்கும் சிலேடை

எங. நக்காஞ் சிக்கும் வடமலைக்கு
நடுவில் வெளிக்கே வேடனைவிட்
டக்கா னகத்தே யுயிர்பறிப்பீர்
அம்பொற் கபாடந் திறமினோ.

கருணாகரன் மேல் கூறுங்கால் :—

ப - ரை :—ந காஞ்சிக்கும் - சிறந்த காஞ்சிபுரத்திற்கும், வடக்கு மலைக்கும் - வடக்கிலுள்ள இமயமலைக்கும், நடுவில் - நடுவிலுள்ள, அக்கானகத்து - அந்தக் காட்டையடுத்த, வெளிக்கு - (கலிங்கநாட்டிலுள்ள) வெற்றிடமாகிய போர்க்களத்தில், வேடனை விட்டு - வேடனைப் போன்ற கருணாகரனை யேவி, உயிர் பறிப்பீர் - (பகைவர்) உயிரைக் கவரும் பெண்களே——, எனவும்,

மன்மதன் மேல் கூறுங்கால் :—

ந காஞ்சிக்கும் - சிறந்த காஞ்சி யென்னும் மேகலாபரணத்திற்கும், வடம் - (முத்து, பவளம் முதலிய) மாலைகளை யணிந்த, மலைக்கும் - மலை

போன்ற கொங்கைகளுக்கும், நடுவில் - நடுவிலுள்ள, வெளிக்கு - வெற்றிட மாகிய இடுப்பினழகாலும், கான் - (கலவைச் சந்தனத்தின்) மணத்தை யுடைய, அ நகத்து - அழகிய மலைபோன்ற கொங்கைகளின் அழகாலும், வேள்தனை விட்டு - மன்மதனை யேவி, உயிர் பறிப்பீர் - (உங்கள் கணவர்) உயிரைக் கவரும் பெண்களே, அம் பொன் கபாடம் திறமின்——,

எனவும் பொருள் கொள்க.

வி - ரை:—கருணாகரனை யேவிப் பகைவருயிரைப் பறிப்பது போல், மன்மதனை யேவித் தங்கணவருயிரைப் பறிக்கும் பெண்களேன்க. கணவருயிரைப் பறித்தலாவது:—மகளிர் தங்கள் இடையழகாலும் கொங்கையழகாலும் தங் கொழுநர்க்குக் காமவேதனை மிகுவித்து அவர்களைத் தம் வயமாக்கிக் கொள்ளுத லாம். வேடன் விலங்கு, பறவைகளின் உயிரைக் கவர்தல் போல், கருணாகரன் தன் பகைவர்களின் உயிரைக் கவர்தல் கருதி, அவனை 'வேடன்' என்றார். வெளி — ஆகாய மெனினுமாம்; வெளி இடுப்பிற் குவமையாதலை, 'வெளி யன்னதொ ரிடையாள்' [கம்பரா-கங்கைப்-உ] என்றதனாலறிக. அ—அழகு; [தா - ச] வடமலை—முற்கூறிய பொருளில் ஏழனுருபும் பயனு முடன் தொக்க தொகையும், பிற்கூறிய பொருளில் இரண்டனுருபும் பயனு முடன் தொக்க தொகையுமாம். வெளிக்கு—உருபுமயக்கம். வேடன், நகம்—உவமை யாகு பெயர்கள்; இச்செய்யுள் சிலேடையணியாம். (ருங)

**செங்கழுநீரும் இளைஞருயிரும் முடித்தல்**

எச. செக்கச் சிவந்த கழுநீருஞ்
செகத்தி லிளைஞ ராருயிரும்
ஒக்கச் செருகுங் குழன்மடவீர்
உம்பொற் கபாடந் திறமினோ.

ப - ரை:—செக்க சிவந்த - மிகவும் சிவந்த, கழுநீரும் - செங்கழுநீர் மலர்களையும், இளைஞர் ஆர் உயிரும் - இளைய மைந்தர்களாகிய (உங்கள்) கணவர்களின் சிறந்த உயிரையும், செகத்தில் - (இந்த) உலகத்தில், ஒக்க செருகும் - ஒன்றாக முடிக்கும், குழல் மடவீர் - கூந்தலையுடைய பெண் களே, உம் - உங்களுடைய, பொன் கபாடம் திறமின்——.

வி - ரை:—இளைய மைந்தர் மகளிர் எழிலைக் கண்டு காமுற்று, 'பெண்கள் பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்' [கம்பரா-நாட்டுப்-கo] என்றபடி, பெருங்காதல் நோயுறுதலன்றி 'தையலார் மயலிற் பட்டோர் தமக் கொரு மதியுண் டாமோ' [திருவிளை - இந்திரன்பழி - ச] என்றபடி, தமது மதியையு மிழப்பராதலின், 'இளைஞ ராருயிரும், திருகிச் செருகுங்குழல் மடவீர்' எனப்பட்டது. இதனை ருo-ம் தாழிசையிலும், மகளிர் கழுநீர்மலர் புனைதலை ருo, கூஉ-ம் தாழிசைகளிலுங் காண்க. உம்மைகள் இரண்டும் எண்ணின்கண் வந்தன; ஒக்க—இதில் ஒ-பகுதி. இச் செய்யுள் ஒப்புமைக் கூட்டவணி யாம். கடை திறப்புச் செய்யுட்கள் பலவற்றில் உவகைச் சுவை செறிந்துள் ளமை காண்க. ருo-ம் தாழிசையிலும் இத்தாழிசையிலும் சொற்கள் சிறிது வேறுபட்டுப் பொருள் ஒன்றாகவே அமைந்திருத்தலால், இவைகளில் ஒன்று இவ்வாசிரியர் இயற்றிய தன்றெனத் தெரிகிறது. இப்பகுதியிலுள்ள வேறு சில செய்யுட்களும் இவரியற்றிய தன்றென்ப. (ருச)

கடை திறப்பு முற்றிற்று.

---

# ௩. காடு பாடியது

**காடு பாடியது** :—இது காட்டைப் பாடியது என விரிதலால், இரண்டன் தொகையாம். காடு—இங்கே பாலை நிலம்; பாலை நிலத்தைப் பாடிய செய்யுட்களின் பகுதி யென்பது இதன் பொருளாம். காடென்பது சுடுகாட்டையு முணர்த்து மாகலின், பாலை நிலத்தின் பகுதியாகிய சுடலையையு மிங்கே கொள்க. இதில் இவ்வாசிரியர் பாலை நிலத்திலுள்ள பல்வகை மரங்களையும், விலங்குகளையும், பறவைகளையும் சிறப்பித்துக் கூறுகிறார்:

'மாயோன் மேய காடுறை யுலகமும்' [தொல்கா—அகத்திணை - ரு] என்னுஞ் சூத்திரவுரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர் சிறப்பு வகையால் பாலைக்குத் தெய்வங் கூறினாரல்லர். ஆனால், 'தொல்காப்பியனார் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர்; வேண்டாமையின் தெய்வமும் வேண்டிற்றிலர்; பிறர் பகவதியையும் ஆதித்தனையுந் தெய்வமென்று வேண்டுவர்' [இறை—அகப்-சூத்-க-உரை] என நக்கீரரும், 'தெய்வம்..............................பரிதியஞ் செல்வனும் திகிரியஞ் செல்வியு மெனக் கொள்க' [சிலப் - பதிகம் - க - உ, பக் - கஅ] என அடியார்க்கு நல்லாரும், 'கன்னி விடலை காளை மீளி' [அகப்பொ - உக] என்னுஞ் சூத்திரத்தில் பாலைக்குத் தெய்வம் துர்க்கை யென நாற்கவிராச நம்பியாரும் கூறியிருக்கின்றனர். இந்நூலாசிரியர், 'நிறைவித்தா ளுறையுங் காடு' [தா - எரு] எனவும், 'ஊடுபோ கரிதணங்கின் காடு' [தா-அரு] எனவும், 'அக்கொடிய கானகத்துறை யணங்கு' [தா-கூஎ] எனவும் கூறுதலால், அம்மூவர் கருத்தோடு இவர் கருத்து ஒத்திருத்தல் புலனும். இவ்வாசிரியர் கூறியுள்ள பாலைநில வருணனையும் இதிலமைந்துள்ள தற்குறிப்பேற்ற வணிகளும் கற்றோர் மனத்தைக் கவரத் தக்கனவாம்.

ஆசிரியர் கூற்று

எரு. களப்போர் விளைந்த கலிங்கத்துக்
கலிங்கர் நிணக்கூழ் களப்பேயின்
உளப்போ ரிரண்டு நிறைவித்தாள்
உறையுங் காடு பாடுவாம்.

ப - ரை :—போர் விளைந்த - (பெரும்) போர் நிகழ்ந்த, கலிங்கத்து களம் - கலிங்க நாட்டுப் போர்க்களத்தில், கலிங்கர் - (இறந்து பட்ட) கலிங்க வீரர்களின், நிணம் கூழ் - கொழுப்பாலாகிய கூழை, உளப்பு - (பசியால்) வருந்தும், ஓர் களம் பேயின் - ஒப்பற்ற போர்க்களத்திலுள்ள பேய்களின், இரண்டும் - (வயிற்றின்) இரு புறமும், நிறைவித்தாள் - நிரப்பினவளாகிய காளிதேவி, உறையும் காடு - வசிக்கும் பாலை நிலத்தை, பாடுவாம் - (இனிச் சிறப்பித்து) பாடுவோம்.

வி - ரை :—உளம்பு—வருத்தம்; இஃதிப்பொருள் தருதலை, 'இலங்கொளி மருப்பிற் கைம்மா வுளம்புநர்' [கலி - ௩உ] என்றதனலறிக. உளம்பு—உளப்பு;

எதுகை நோக்கி வலித்தல் விகாரமாயிற்று. நிணக் கூழ்—மூன்றனுருபும் பயனு முடன்தொக்க தொகை; இரண்டு—இச்சொல் எண்ணலளவை. யாகு பெய ராய் வயிற்றின் இருபுறத்தையு முணர்த்தி நின்றது. நிறைவித்தாள்—வினையா லணையும் பெயர். (க)

பாலை நில மரங்கள்

எசு. பொரிந்த காரைக ரிந்த சூரைபு
கைந்த வீரை*யெ ரிந்தவேய்
உரிந்த பாரையெ றிந்த பாலையு
லர்ந்த வோமைக லந்தவே.

ப - ரை:—பொரிந்த காரை - பொரிந்த காரைச் செடிகளும், கரிந்த சூரை - கரிந்த சூரை மரங்களும், புகைந்த வீரை - புகைந்தெரிந்த வீரை மரங்களும், எரிந்த வேய் - (தீப்பற்றி) எரிந்த மூங்கில்களும், உரிந்த பாரை - (மேல்பட்டை) உரிந்த பாரை மரங்களும், உலர்ந்த ஓமை - காய்ந்த ஓமை மரங்களும், கலந்த - (அப்பாலை நிலத்தில்) கலந்து கிடப்பனவாம்.

வி - ரை:—பொரிந்த, கரிந்த, புகைந்த முதலிய அடைமொழிகளால், அப் பாலை நிலத்தின் வெம்மையும் அந்தப் பசிய மரம் ஒன்றுமில்லை யென்பதும் விளங்கும். ஏனைய மரங்களைப் போல் காரை, சூரை, ஓமை முதலியன பாலைக் குரியன வென்பதை 'முட்காற் காரை' [புறநா-உருஅ] எனவும், 'தான்றியு மொடுவையு முழிஞ்சிலு மோங்கி, கான்றையுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து' [மணிமே - சு - அ0, அக] எனவும், 'ஓமை நீடிய கான்' [நற்றி - கககஅ] எனவும், 'அலறுதலை யோமை' [ஐங்கு - ௩உக] எனவும், 'புன்மு ளோமைய சுரன்' [குறுந்-உசு0] எனவும் வருமாற்றானறிக. பா-பே:—*பொடிந்த வேல். (உ)

இதுவுமது

எஎ. உதிர்ந்த வெள்ளி†லு ணங்கு நெல்லியொ
டுங்கு துள்ளியு லர்ந்தவேல்
பிதிர்ந்த முள்ளிசி தைந்த வள்ளிபி
ளந்த கள்ளிப ரந்தவே.

ப - ரை:—உதிர்ந்த வெள்ளில் - (கனிகள் உதிர்ந்த) விளா மரங் களும், உணங்கு நெல்லி - உலர்ந்த நெல்லிமரங்களும், ஒடுங்கு துள்ளி - (ஓங்கி வளராமல்) குறுகிய துள்ளிச் செடிகளும், உலர்ந்த வேல் - உலர்ந்த வேல மரங்களும், பிதிர்ந்த முள்ளி - பிளந்த முள்ளிச் செடி களும், சிதைந்த வள்ளி - (சுழல் காற்றால்) முரிந்த வள்ளிக் கொடிகளும், பிளந்த கள்ளி - பிளந்த கள்ளி மரங்களும், பரந்த - (அப்பாலை நிலத்தில்) பரவி யிருப்பனவாம்.

வி - ரை:—'செறிந்த' என்னாது 'பரந்த' என்றமையால், இம்மரஞ் செடி கள் அப்பாலை நிலத்தில் ஆங்காங்கு ஒரு சிலவே காணப்பட்டன வென்பதாம். பாலை நிலத்தில் 'பராரை நெல்லி' [அகநா-சுசு] என்றதனால் நெல்லியும், 'பேய் பிளந் தொக்கநின் றுலர்பெருங் கள்ளி' [கம்பரா - தாடகை - அ] என்றதனால் கள்ளி முதலிய மரங்களும் இருத்தலை யறிக. பா-பே:—†உணங்கு தும்பை. (௩)

எஅ. வற்றல் வாகைவ றந்த கூகைம
டிந்த தேறுபொ டிந்தவேன்
முற்ற வீகைமு ளிந்த விண்டுமு
ரிந்த புன்குநி ரைந்தவே.

ப - ரை :—வற்றல் வாகை - உலர்தலையுடைய வாகை மரங்களும், வறந்த கூகை - (நீர்) வற்றிய கூகைக் கொடிகளும், மடிந்த தேறு - உலர்ந்த தேற்று மரங்களும், பொடிந்த வேல் - சிதைந்த வேல மரங்களும், முற்றல் ஈகை - முதிர்தலையுடைய இண்டங்கொடிகளும், முளிந்த விண்டு - உலர்ந்த மூங்கில்களும், முரிந்த புன்கு - (சூறைவளியால்) முரிந்த புன்க மரங்களும், நிரைந்த - (அங்கு) வரிசையாய் இருப்பனவாம்.

வி - ரை :—வேய், வேல் - இவற்றை ஒருகாற் கிருகாற் கூறினர் : ஏனைய வற்றினு மிவை மிக்கிருத்தல் கருதிப் போலும். இச்செய்யுளிலுள்ள வாகை முதலியவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. எசு, எஎ - ம் தாழிசைகளிலும் உம்மைகளை விரித்துரைக்க. (எசு) கலந்த (எஎ) பரந்த (எஅ) நிரைந்த— இவை அன்சாரியை பெறாது வந்த பலவின் படர்க்கை வினை முற்றுக்கள். இவைகளிலுள்ள ஏகாரம் ஈற்றசை. இம் மூன்று செய்யுட்களிலும் பாலை நிலத்தி லுள்ள மரஞ் செடி கொடிகளைக் கூறினர். (ச)

பாலை நில வெம்மை

எகூ. தீய வக்கொடிய கான கத்தரைதி
றந்த வாய்தொறுநு ழைந்துதன்
சாயை புக்கவழி யாதெ னப்பரிதி
தன்க ரங்கொடுதி ளைக்குமே.

ப - ரை :—தீய கொடிய - மிகவுங் கொடிய, அ கானகம் தரை - அந்தப் பாலை நிலத்தில், திறந்த வாய் தொறும் - வெடித்த விடங்களி லெல்லாம், பரிதி - சூரியன், தன் சாயை - தனது (மனைவியாகிய) சாயா தேவி, புக்க வழி - புகுந்தவிடம், யாது என - எதுவென்று, தன் கரம் கொடு - தனது (கிரணங்களாகிய) கைகளால், நுழைந்து - புகுந்து, திளைக்கும் - இடைவிடாது தேடுதலை ஒக்கும்.

வி - ரை :—அப்பாலை நிலத்தின் வேடிப்புக்களில் வெய்யவன் கதிர்கள் நுழைதல், அவன் தன் மனைவியாகிய சாயாதேவியைத் தன் கரங்களால் தேடு தலை ஒத்திருந்த தென்பதாம். திளைத்தல்—(ஒரு தொழிலை) இடைவிடாது பயிலல் ; 'நகையா டாயத்து நன்மொழி திளைத்து' [சிலப்-ரு-கசுகூ] எனவும், 'கானகம் பெருந்துறைக் கவிதிரை திளைக்கும்' [ஐங்கு-ககூஅ] எனவும் வருமாறு காண்க. தீய—தீமை யென்றும் பண்படியாய்ப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்.

சூரியன் சாயா தேவியைத் தேடிய வரலாறு :—ஒரு காலத்தில் சூரிய னுடைய மனைவியாகிய சம்மியை என்பவள் அவன் ஒளியைப் பொறுக்க முடியா மல், தன் கண்களை மூடிக்கொண்டாள். அதனால் சூரியன் சினந்து, "பெண்ணே! உன் வயிற்றில் யாவர்க்கும் அச்சத்தை உண்டாக்கும் புதல்வனொருவன் தோன்று வான்" என அவளைச் சபித்தனன். அதன்படி இயமன் பிறந்தான். உடனே சம்மியை பயந்து தன் சாயையைச் சூரியனிடம் வைத்து அவனை விட்டு விலகிப் போனாள். பின்பு அவள் உத்தர குருநாட்டை யடைந்து பெண்குதிரை வடிவம் பூண்டு காலங்கழித்து வந்தாள். சூரியன் தன் மனைவியின் பிரிவைப் பொறாமல் பெரிதும் வருந்தி அவளைப் பலவிடங்களில் தேடி அலைந்தான். பின்பு அவன் பெண்குதிரை வடிவமா யிருப்பவள் சம்மியையே என்றறிந்து ஆண் குதிரை வடிவத்தோடு அவளைத் தழுவி அவள் கோபத்தைத் தணித்தான். அப்போது அவ்விருவருக்கும் அசுவினி தேவர்கள் தோன்றின ரென்ப. சம்மியைக்கும் சாயைக்கும் வேற்றுமை யின்மை கருதிச் சம்மியையைச் சாயை என்றனர் போலும். (ரு)

பாலை நிலத்தில் மரநிழலின்மை

அ0. ஆடு கின்றசிறை வெம்ப ருந்தினிழல்
அஞ்சி யக்கடுவ னத்தைவிட்
டோடு கின்ற*நிழ லொக்கு நிற்குநிழல்
ஓரி டத்துமுள †வல்லவே.

ப - ரை:—சிறை வெம் பருந்தின் - (ஆகாயத்தில் வட்டமிடும்) சிறகுகளையுடைய கொடிய பருந்துகளின், ஆடுகின்ற நிழல் - அசைந்து செல்லுகின்ற நிழலானது, அஞ்சி - (அப்பாலை நில வெம்மைக்கு) பயந்து, அ கடு வனத்தை விட்டு - அந்தக் கொடிய பாலைநிலத்தை விட்டு, ஓடுகின்ற நிழல் ஒக்கும் - ஓடுகின்ற நிழலை ஒத்திருக்கும், நிற்கும் நிழல் - நிலைபெற்றிருக்கும் நிழல், ஓர் இடத்தும் - (அங்கு) ஓரிடத்திலாயினும், உள அல்ல - உண்டாயிருப்பனவல்ல——.

வி - ரை:—அப்பாலை நிலத்தில் பறக்கும் பருந்தின் நிழல் அந்நிலத்தின் வெம்மையை யாற்றாது ஓடுவதை ஒத்திருந்த தென்பதாம். 'நிற்கு நிழல்' என்றதற்கு (ஓராள்) நிற்கும் நிழல் எனினுமாம். இப்பொருளில் நிழலென்பதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்க தென்க. பா - பே:—*நிழலன்றி, † அல்லவால். (சு).

இதுவுமது

அக. ஆத வம்பருகு மென்று நின்றநிழல்
அங்கு நின்றுகுடி போனதப்
பாத வம்புனல்பெ றாது ணங்குவன
பருகு நம்மையென வெருவியே.

ப - ரை:—ஆதவம் - (வெளியே இருப்பின் அப்பாலை நிலத்தின்) வெப்பம், பருகும் என்று - (நம்மை) உட்கொள்ளும் என்று, நின்ற நிழல் - (மரங்களின் கீழ்) நின்ற நிழலானது, புனல் பெறாது - (தமக்கு) தண்ணீர் கிடைக்காமல், உணங்குவன - உலர்வனவாகிய, அ பாதவம் - அந்த மரங்களும், நம்மை பருகும் என - நம்மை உட்கொள்ளுமென்று, வெருவி - பயந்து, அங்கு நின்று - அம்மரங்களின் கீழிருந்து, குடி போனது - நீங்கிப் போயினது.

வி - ரை:—அப்பாலை நிலத்திலுள்ள வெப்பம் மாத்திரமன்றித் தண்ணீரின்றி வாடுந் தருக்களும் தங்கள் நிழலைத் தாமே யுட்கொள்ளக் கூடுமெனக் கருதி அவைகளின் நிழல் அங்கு நின்றும் விலகிப் போயின தென்பதாம். எனவே, மரங்களினடியிலும் நிழலில்லையென்பது விளங்கும். 'நிழலுரு விழந்த வேனிற் குன்றத்து, பாலை சான்ற சுரஞ்சேர்ந் தொருசார்' [மதுரைக் - ௩௧௩ - ௩௧௪] எனவும், 'விடுசுடர் நடுவுநின் றடுதலி னிழலு, மடியகத தொளிக்கு மாரழற் கானத்து' [திருவாரூர் மும்-௧௩] எனவும் வருமாறு காண்க; பாதவம்—வேரால் நீரைப் பருகுவது. இம்மூன்று செய்யுட்களிலும் தற்குறிப் பேற்றவணியுள்ளமை காண்க. (எ)

பாலை நிலப் பறவை

அஉ. செங்நெ ருப்பினைத் தகடு செய்துபார்
செய்த தொக்குமச் செந்த ரைப்பரப்
பங்நெ ருப்பினிற் புகைதி ரண்டதொப்
பல்ல தொப்புரு வதனி டைப்புறு.

ப - ரை :—செம் அ தரை பரப்பு - செந்நிறமாகிய அந்தப் பாலை நிலத்தின் பரவிய‘விடமானது, செம் நெருப்பினை - சிவந்த நெருப்பால், தகடு செய்து - தகட்டைச் செய்து, பார் செய்தது ஒக்கும் - பூமியை அமைத்ததை ஒத்திருக்கும், அதன் இடை புரு - அப்பாலை நிலத்தி லுள்ள புருக்களானவை, அ நெருப்பினில் - அந்த நெருப்பிலிருந்து, திரண்டது—ஒன்று கூடினதாகிய, புகை ஒப்பு அல்லது - புகையை ஒப்பாவதல்லாமல், ஒப்பு உரு - (வேறு எவற்றிற்கும்) ஒப்பாகமாட்டா.

வி - ரை :—பாலை நிலம் செந்நிறமுடைய தென்பவாகலின், ‘செந் நெருப் பினைத் தகடு செய்து’ என்றார். ‘அரக்குருக் கன்ன செந்நிலன்’ [பொருநரா-சங] எனவும் ‘செந்நில முருநீர் போல’ [பிரபுலிங்-பிரபுதேவர்-கஎ] எனவும் கூறினர் பிறரும். புகையைப் புருக்களுக்கு ஒப்பாகக் கூறுதலை, ‘ஒள்ள கிற்பு கைதி ரண்ட தொக்கு மாம ணிப்புரு’ [சீவகசி-க-எ0] எனவும், ‘கபோத மொத் தன விடையிடை யெழுஞ்சுடர்த் தூமம்’ [வில்லிபா-காண்டவதக-நக] எனவும் வருவனவற்றானறிக. செந்நெருப்பினை-உருபு மயக்கம்; இதிலுள்ள அடை இன மில்லாத அடை; நெருப்பினில்-இன் சாரியை; இல் ஐந்தாம் வேற்றுமை நீக்கப் பொருள்; இச்செய்யுளின் முதலடியில் இல் பொருளுவமையணியும் இரண்டாம் அடியில் உவமையணியு முள்ளவா றறிக. இந்தத் தாழிசையிலும் அ0-ம் தாழிசை யிலும் பாலைநிலப் பறவைகளைக் கூறினர். (அ)

பாலைநில விலங்கு

அரு. தீயின் வாயினீர் பெறினு முண்பதோர்
சிந்தை கூரவாய் *வெந்து வந்துசெந்
நாயின் வாயினீர் தன்னை நீரெனு
நவ்வி நாவினு னக்கி விக்குமே.

ப - ரை :—நவ்வி - மான்கள், வாய் வெந்து - (அப்பாலை நிலத்தின் வெம்மையால்) வாயானவை வெந்து, தீயின் வாய் - நெருப்பில், இன் நீர் பெறினும் - இனிய நீரைப் பெற்றாலும், உண்பது - (அதனை) பருகுவ தாகிய, ஓர் சிந்தை கூர - ஒப்பற்ற எண்ணம் மிகுதலால், செந்நாயின் - செந்நாய்களின், வாயின் நீர் தன்னை - வாயிலிருந் தொழுகின நீரை, நீர் எனு - தண்ணீரென்று, உவந்து - மகிழ்ந்து, நாவினல் - (தமது) நாவினல், நக்கி விக்கும் - நக்கி விக்காநிற்கும்.

வி - ரை :—நெருப்பிலிருந்து நீர் பிறந்ததென்னுங் கொள்கை பற்றி, ‘தீயின் வாயினீர்’ என்றார். இதனை, ‘செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு, தண்பெய றலைஇய வூழியும்’ [பரிபா-உ] என்றதனாலும் அதன் உரையாலு மறிக. ‘செந்நாயின் வாயினீர்......நக்கி’ என்றதனல், பாலைநிலக் கருப்பொரு ளாகிய செந்நாய்களும் அந்நிலத்தின் வெம்மையை யாற்றாது தம் வாயைத் திறந்து நாவை நீட்டி நீரொழுகச் சென்றன வென்பது விளங்கும். அருந்தத் தகாத செந்நாயின் வாயினீரை மான்கள் நக்கினமையால், அளவ விக்கலாயின வென்க. முல்லைநிலக் கருப்பொருளாகிய மானைப் பாலையில் கூறினமை திணை மயக்கம் பற்றி யென்க. ‘திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே’ [தொல்கா-அகத்-கஉ] என்றதனாற் கொள்க. தீயின்—இதில் இன் சாரியை; பெறினும்— உம்மை எதிர்மறை; கூர—காரணப் பொருளில் வந்த வினையெச்சம்; எனு— செய்யா வென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். செந்நாயின் வாயி னீரை மான்கள் நீரெனக் கருதினமையால் இது மயக்கவணியாம். பா-பே :— வெந்துலர்ந்து. (கூ)

பாலநில வெம்மை

அச. இந்நி லத்துளோ ரேக லாவதற்
கெளிய *தானமோ வரிய வானுளோர்
அந்நி லத்தின்மேல் வெம்மை யைக்குறித்
தல்ல வோநிலத் தடியி டாததே.

ப - ரை :—மேல் - மேலேயிருக்கும், அரிய வான் உளோர் - சிறந்த தேவலோகத்திலுள்ள தேவர்கள், நிலத்து அடி இடாதது - பூமியில் (தங்கள்) பாதங்களை வைக்காமலிருப்பது, அ நிலத்தின் - அந்தப் பாலை வனத்தின், வெம்மையை குறித்து அல்லவோ - வெப்பத்தைக் கருதியே யாம், (அவ்வாறிருக்க) இ நிலத்து உளோர் - இந்த நிலத்திலுள்ள மனிதர்கள், ஏகல் ஆவதற்கு - (அதில்) செல்லுதற்கு, எளிய தானமோ - (அது) எளிய விடமாகுமோ ! (ஆகாது).

வி - ரை :—தேவர்களும் அப்பாலை நிலத்தின் வெம்மையைக் கருதி நிலத்தில் அடியிட அஞ்சுவரெனின், மனிதர் அதில் செல்ல வல்லவ ரல்லரென்பதாம். தானமோ—ஓகாரம் எதிர்மறை. மேல்—இதனை எழனுருபாய்க் கொள்ளினுமாம். அல்லவோ—இதிலுள்ள ஓகாரமும் எதிர்மறையே யாம்; இதில் இரண்டு எதிர்மறைகள் சேர்ந்து ஆம் என்னும் உடன் பாட்டுப் பொருளைப் பயந்து நின்றன. இயல்பாய் நிலத்தில் தோயாத தேவர்களின் பாதங்கள் அப்பாலையின் வெம்மையைப்பற்றியே அதில் பதியவில்லையென ஆசிரியர் காரணங் கற்பித்துக் கூறியுள்ளமை காண்க. பா - பே :—*கானமோ. (க0)

இதுவுமது

அரு. இருபொழுது மிரவிபசும் புரவிவிசும்
பியங்காத தியம்பக் †கேண்மின்
ஒருபொழுதுந் தரித்தன்றி யூடுபோ
கரிதணங்கின் காடென் றன்றே.

ப - ரை :—இரவி பசும் புரவி - சூரியனுடைய பச்சைக் குதிரைகள், இரு பொழுதும் - (பகல், இரவு என்னும்) இரண்டு வேளைகளிலும், விசும்பு இயங்காதது - ஆகாயத்தில் செல்லாத காரணத்தை, இயம்ப கேண்மின் - சொல்லக் கேளுங்கள், ஒரு பொழுதும் - (இரவாகிய) ஒரு வேளையாயினும், தரித்து அன்றி - தங்கி (இளைப்பாறி) அல்லாமல், அணங்கின் காடு ஊடு - காளி தேவியின் பாலைநிலத்தின் நடுவில், போகு அரிது - (மீண்டும்) போதல் அரிது, என்று அன்றே - என்று நினைத்தல்லவோ ! (அவ்வாறு நினைத்தே யாம்).

வி - ரை :—சூரியன் குதிரைகள் இரவில் செல்லாதிருத்தல், பகலில் அப்பாலை நிலத்தைக் கடக்கும்போது அதன் வெம்மையாலுண்டான களைப்பைத் தணித்துக் கொள்ளுதற் பொருட்டேயா மென்பதாம். ‘இருபொழுது...... இயங்காது’ என்றதனால், ஒருபொழுதே யியங்குமெனவும், அதற்குக் காரணங் கூறியுள்ளமையுங் காண்க. இரு பொழுதும் — உம்மை முற்றும்மை; ஒரு பொழுதும்—உம்மை இழிவு சிறப்பாம். பாலைக்குத் தெய்வம் தேவியாகலின், ‘அணங்கின் காடு’ என்றார். பா-பே:—† கேளிர். (கக)

இதுவுமது

அசு. *காடிதனைக் கடத்துமெனக் கருமுகிலும்
வெண்மதியுங் கடக்க வப்பால்
ஓடியிளைத் துடல்வியர்த்த வியர்வன்றே
உகுபுனலும் பனியு †மையோ.

ப - ரை :—கரு முகிலும் - கரிய மேகங்களும், வெண் மதியும் - வெண்மையாகிய சந்திரனும், காடு இதனை - பாலைநிலமாகிய இதனை, கடத்தும் என - கடந்து செல்வோமென்று, அப்பால் ஓடி கடக்க - அப்புறம் ஓடிக் கடந்து செல்கையில், உகு புனலும் பனியும் - (அவற்றினின்றும் முறையே) சொரிந்த மழை நீரும் பனி நீரும், உடல் இளைத்து - (அவைகளின்) உடல் இளைத்தலால், வியர்த்த வியர்வு அன்றே - வேர்த்தொழுகிய வேர்வை நீரே யல்லவோ! (வேர்வை நீரே யாமென்பது) ஐயோ——.

வி - ரை :—கருமுகிலும் வெண்மதியும் அப்பாலை நிலத்தின் வெம்மையைப் பொறுக்க லாற்றமையால், அவை மெல்லச் செல்லாமல் ஓடலாயின வென்க. கருமுகில் ஓடுகையில் அதன் வேர்வையே மழை நீராகவும், வெண்மதி ஓடுகையில் அதன் வேர்வையே பனி நீராகவும் பெய்யலாயின வென்பதாம். கடத்தும் — தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. உம்மைகள் எண்ணுப் பொருளன. கடக்க—உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த நிகழ்கால வினையெச்சம் ஐயோ—இரக்கத்தின்கண் வந்த இடைச்சொல். முகில், மதி என்பவற்றின் எளிய நிலையைக் கண்டு இரங்கிக் கூறியவாறும். அடியில் வருஞ் செய்யுளிலும் இவ்வாறே கொள்க. இதில் முறைநிரனிறை யமைந் துள்ளமை காண்க. பா - பே—* காடுதனை, † அம்மா. (கஉ)

**தேவர்கள் ஆலவட்டம் பிடித்திருத்தல்**

அஎ. விம்முகடு விசைவனத்தின் வெம்மையினைக்
குறித்தன்றே விண்ணோர் விண்ணின்
*மைம்முகடு முகிற்றிரையிட் டமுதவட்ட
வாலவட்ட மெடுப்ப †தையோ.

ப - ரை :—விண்ணோர் - தேவர்கள், விண்ணின் முகடு - ஆகாயத்தின் உச்சியில், மை முகில் திரை இட்டு - கரிய மேகங்களாகிய திரைச்சீலைகளை யமைத்து, அமுதவட்டம்-சந்திரனாகிய, ஆலவட்டம்-விசிறியை, எடுப்பது - பிடித்திருப்பது, கடு விசை விம்மு - கொடிய வேகம் மிகுந்த, வனத்தின் வெம்மையினை - அப்பாலை நிலத்தின் வெப்பத்தை, குறித்து அன்றே - (தணித்துக் கொள்ள) கருதியே யன்றே! (கருதியே யாம்) ஐயோ——.

வி - ரை :—தேவர்கள் அப்பாலை நிலத்தில் வெம்மையைப் பொறுக்க லாற்றமையால், அவர்கள் மேகமாகிய குளிர்ந்த திரைச் சீலையிட்டுச் சந்திரனாகிய ஆலவட்டத்தால் விசிறிக் கொள்வ ரென்பதாம். அசு-ம் தாழிசையில் தேவர்கள் அப்பாலை நிலத்தில் அடியிடவும் அஞ்சுவரெனக்கூறி, இதில் அவர்கள் தாமிருந்த விடத்திருந்தும் அதன் வெப்பத்தைப் பொறாராயின ரென்றார். சந்திரன் அமுதம்போல் வெண்மையாயும், வட்டமாயு மிருத்தல் கருதி அதனை 'அமுதவட்டம்' என்றார். முகில் திரை, அமுதவட்ட வாலவட்டம்—உருவகங்கள். இந் நான்கு செய்யுட்களிலும் தற்குறிப் பேற்றவணி யுள்ளமை காண்க. பா - பே :— * அம்முகடு, † அம்மா. (கஙு)

**பாலைநில மரங்கள் தோற்றம்**

அஅ. நிலம்புடைபேர்ந் தோடாமே
நெடுமோடி நிறுத்தியபேய்
புலம்பொடுநின் றுயிர்ப்பனபோல்
புகைந்துமரங் கரிந்துளவால்.

ப - ரை :—நெடு மோடி - சிறந்த காளி தேவி, நிலம் புடை பேர்ந்து ஓடாமே - (இந்த) பூமியானது மேல் கீழாக (நிலை மாறி) போகாமல், நிறுத்திய பேய் - (அப்பாலை நிலத்தில்) நிறுத்தி வைத்த பேய்களானவை, புலம்பொடு நின்று - தனித்தனி நின்று, உயிர்ப்பன போல் - (வெப்பமாக) பெருமூச்சு விடுவன போல், மரம் - (அதிலுள்ள) மரங்கள், புகைந்து கரிந்து உள - (எரிந்து) புகைசொரிந்து கரிந்து கிடப்பனவாம்.

வி - ரை :—'புகைந்து மரங் கரிந்துள' என்றதற்கேற்ப, 'வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலின்' [கலி-க0] என்றார் பிறரும். புடைபேர்தல்-கீழ் மேலாதல்; இடம் மாற லெனினுமாம். 'நிலம்புடை பெயர்வ தாயினும்' [புறநா-ருச; நற்-உஅரு] என்றதனாலறிக. பேய்கள் தனித்தனி நிற்றல்போல் அம்மரங்களும் ஆங்காங்கு ஒரு சிலவே காணப்பட்டன வென்க. புலம்பு-தனிமை; 'புலம்பே தனிமை' [தொல் கா-உரி-உ௫] என்றாராகலின்; இப்பொருளில் இதிலுள்ள ஒடு இசை நிறை; புலம்பொடு நின்று—வருத்தத்தோடு நின்று எனினுமாம். ஓடாமே—எதிர்மறை வினையெச்சம். பேய்கள் மரங்கட்கும் அவைகளின் வெப்பமாகிய மூச்சுப் புகைக்கும் உவமை. (கச)

**பேய்களின் நாக்கு**

அரு. வற்றியபேய் வாயுலர்ந்து *வறணுக்கை நீட்டுவபோல்
முற்றியநீண் மரப்பொதும்பின் †முதுப்பாம்பு புறப்படுமே.

ப - ரை :—வற்றிய பேய் - (பசியால் உடல்) மெலிந்த பேய்கள், வாய் உலர்ந்து - வாயிலுள்ள ஈரம் புலர்ந்து, வறள் நாக்கை - வறண்ட (தங்கள்) நாக்குகளை, நீட்டுவ போல் - (வெளியே) நீட்டுவன போல், முற்றிய - (நன்றாய்) முதிர்ந்த, நீள் மரம் பொதும்பின் - நீண்ட மரங்களின் பொந்துகளிலிருந்து, முது பாம்பு - பெரிய பாம்புகள், புறப்படும் - வெளிப்படும்.

வி - ரை :—நீர் வேட்கையால் பேய்கள் தங்கள் நாவை நீட்டுதல்போல், மரப் பொந்துகளிலிருந்து பெரிய பாம்புகள் வெளிப்படு மென்க. பேய்கள் மரங்கட்கும், அவைகளின் வாயும் நாவும் முறையே மரப்பொந்துக்கும் பாம்புக்கும் உவமையாம். முதுமை—பெருமை; அறிவில் முதியோர் என்பதிற்போல.
பா - பே :—* வறழ்நாக்கை, † முதுபாம்பு புறம்படுமே. (க௫)

**பேய்த் தேருஞ் சூறுவளியு மிக்கிருத்தல்**

ரு0. விழிசுழல வருபேய்த்தேர் மிதந்துவரு நீரந்நீர்ச்
சுழிசுழல ‡வருவதெனச் சூறைவளி சுழன்றிடுமால்.

ப - ரை :—விழி சுழல - (கண்டோர்) கண்கள் சுழலும்படி, வரு - (அப்பாலை நிலத்தில் தோன்றி) வருகின்ற, பேய்த்தேர் - கானலில், நீர் மிதந்து வரும் - தண்ணீர் மிதந்து வருவது போல் தோன்றும், அ நீர் - அந்தத் தண்ணீரில், சுழி சுழல - சுழிகள் சுழலும்படி, வருவது என - வருவது போல, சூறை வளி - சுழல் காற்று, சுழன்றிடும் - சுழன்று அடிக்கும்.

வி-ரை :—அப்பாலை நிலத்தில் பேய்த்தேரும் சூறவளியும் இருந்தன வென்பதாம். பரந்த மணல் வெளியில் பகலில் நின்று பார்த்தால், நெடுந் தூரத்தில் தண்ணீரிருப்பதுபோல் தோன்றும். இப்பொய்த் தோற்றத்தைப் பேய்த்தேர் எனவும், கானல்நீர் எனவுங் கூறுவர். 'வெந்தழ னிலத்து வெண்டேர் மென்புன லெனம யங்க, இந்திர சாலஞ்செய்தது' [சீகாள-பு-பொன்மு-ருக] என்றதனால்,

பேய்த்தேரின் தன்மை யறிக. மான், யானை முதலிய விலங்குகள் இப்பொய்த் தோற்றத்தை மெய்யெனக் கருதி, அங்குள்ள நீரைப் பருகச் செல்லும். 'பொரி மலர்ந் தன்ன பொறிய மடமான், திரிமருப் பேறொடு தேரநேர்க்கோட' எனவும், 'இடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு, நெடுமலை வெஞ்சுரம்' [கலி-௧௩,௨௪], எனவும், பிணையுங் கலையும் வன் பேய்த்தே ரினைப்பெரு நீர்நசையால், அணையு முரம்பு' (திருக்கோ-௨0௨] எனவும் வருமாறு காண்க. நீர்ச்சுழி சூறவளிக் குவமையாம். பா-பே:—$ சூறைமா ருதஞ்சுழலும். (௧௬)

மணிகள் கிடத்தல்

௬௧. சிதைந்தவுடற் சுடுசுடலைப் பொடியைச் சூறை
சீத்தடிப்பச் சிதறியவப் பொடியாற் செம்மை
புதைந்தமணி புகைபோர்த்த தழலே போலும்
போலாவேற் பொடிமூடு தணலே போலும்.

ப-ரை:—சிதைந்த உடல் - (உயிர்) அழிந்த உடலை, சுடு சுடலை - சுட்டெரித்த சுடலையிலுள்ள, பொடியை - சாம்பலை, சூறை - சுழல் காற்று, சீத்து அடிப்ப - கிளறி யடித்தலால், சிதறிய அ பொடியால் - (நாற்புற மும்) சிந்தி விழுந்த அந்தச் சாம்பலால், செம்மை புதைந்த மணி - செந்நிறம் மறைந்த இரத்தினங்கள், புகை போர்த்த - புகையால் மூடப் பட்ட, தழல் போலும் - நெருப்பை ஒத்திருக்கும், போலா ஏல் - (அவ் வாறு) ஒத்திரா வென்றால், பொடி மூடு - நீறால் மூடப்பட்ட, தணல் போலும் - நெருப்புத் தணலை ஒத்திருக்கும்.

வி-ரை:—சுடலையிலுள்ள சாம்பலால் மறைந்து கிடக்கும் இரத்தினங்கள் புகையாலும் நீறாலும் மூடுண்ட தணலை ஒத்திருந்தன வென்பதாம். பொடிமூடு தணல் - நீறு பூத்த நெருப்பென்பது; புகை சாம்பலுக்கும் தணல் மணிக்கும் உவமை; பொடி மூடு தணல் என்பதற்கும் இவ்வாறே கொள்க. சுடலையிலுள்ள மணிகள் பிணங்களின் ஆபரணங்களிலிருந்து உதிர்ந்து கிடப்பனவாம். பிணங் களுக் குரியோர் அவ்வாபரணங்களைக் கழற்றுமற் சென்றமை அவர்தஞ் செல்வ மிகுதியினு லென்க. சுடு சுடலை, மூடு தணல்,—வினைத் தொகைகள்; ஏல்— எனில் என்பதன் மரூஉ. இந்நான்கு செய்யுட்களிலும் உபமான உபமேயங்களை மாற்றிச் சொன்னமையால், இவை எதிர்நிலை யணியாம். (ப்ரதீபாலங்காரம்.) (௧௭)

மூங்கில்கள் முத்துக்களை உதிர்த்தல்

௬௨. மண்ணோடி யறவறந்து *துறந்தங் காந்த
வாய்வழியே வேய்பொழியி முத்த மவ்வேய்
கண்ணோடிச் சொரிகின்ற கண்ணீ ரன்றேற்
கண்டிரங்கிச் சொரிகின்ற கண்ணீர் போலும்.

ப-ரை:—மண் ஓடி - மண்ணளவும் ஓடி, துறந்து - (ஈரம்) நீங்கி, அற வறந்து - மிகவும் வறண்டு, அங்காந்த - (வெடிப்புக்களாய்) திறந்த, வாய் வழியே - இடங்களில், கண் ஓடி - கணுக்கள் வெடித்து, வேய் பொழியும் - மூங்கில்கள் சொரியும், முத்தம் - முத்துக்களானவை, அ வேய் - அந்த மூங்கில்கள், சொரிகின்ற கண் நீர் (போலும்) - (இயல்பாய்) பொழிகின்ற கண்ணீர்த் துளிகளை ஒத்திருக்கும், அன்று ஏல்-(அவ்வாறு) அன்றெனில், கண்டு இரங்கி - (அப்பாலை நிலத்தின் வெப்பத்தை) கண்டு மனமுருகி, சொரிகின்ற கண் நீர் போலும் - (அவை) பொழிகின்ற கண்ணீர்த் துளிகளை ஒத்திருக்கும்.

வி - ரை :—அப்பாலை நிலத்திலுள்ள மூங்கில்கள் முத்துக்களை உதிர்த்தல், அந்நிலத்தின் வெம்மையைக் கண்டு அவை மனமுருகிச் சொரிகின்ற கண்ணீரை ஒக்கு மென்பதாம். போலும் என்றதை முன்னுள்ள கண்ணீர்க்குங் கூட்டுக. வாய்—இடம்; இதனை, 'வாய்குழல் இடம்வாய் மைப்பேர்' [சூடா-ரி-யகர-கஉ] என்றதனலறிக. வாய்வழி—வழி, எழனுருபு. முத்தம்—அம் சாரியை; முத்துக்கள் கண்ணீர்த் துளிகளுக் குவமை. பா - பே :—* திறந்தங் காந்த. (கஅ)

இதுவுமது

கூகூ. வெடித்தகழை விசைதெறிப்பத் தரைமேன் முத்தம்
வீழ்ந்தனவத் தரைபுழுங்கி யழன்று *மேன்மேற்
பொடித்தவியர்ப் புள்ளிகளே போலும் போலும்
போலாவேற் கொப்புளங்கள் போலும் போலும்.

ப - ரை :—வெடித்த கழை - (சூரிய வெப்பத்தால் கணுக்கள்) வெடித்த மூங்கில்களிலிருந்து, விசை தெறிப்ப - வேகமாய்த் தெறிக்க, தரைமேல் வீழ்ந்தன முத்தம் - நிலத்தில் (உதிர்ந்து) விழுந்தனவாகிய முத்துக்கள், அ தரை புழுங்கி - அந்தப் பாலை நிலம் வருந்தி, அழன்று - வெதும்புதலால், மேல் மேல் - மேலும் மேலும், பொடித்த - (அதன் உடலில்) தோன்றிய, வியர் புள்ளிகளே போலும் - வேர்வை நீர்ப் புள்ளிகளை ஒத்திருக்கும், போலா ஏல் - (அவற்றை) ஒத்திராவென்றால், கொப்புளங்கள் போலும் - கொப்புளங்களை ஒத்திருக்கும்.

வி - ரை :—மூங்கிலிலிருந்து உதிரும் முத்துக்கள் அப்பாலை நிலத்தின் உடலில் தோன்றிய வியர்வைத் துளிகளை அல்லது கொப்புளங்களை ஒக்கு மென்பதாம். மூங்கில்கள் தமது கணுக்களிலிருந்து முத்தஞ் சொரிதலை, 'கதிர்சுடக் கண்ணுடைந்து முத்தஞ் சொரியும், வெதிர் பிணங்குசோலை வியன்கானம்' [திணைமொழி-கஅ] எனவும், 'வேய்க ளோங்கி வெண்முத்த துதிர' [காரைக்-மூத்த-அ] எனவும், 'நீ தந்த முத்தம் வேய்நந்த முத்தாகில், [திருவர-தலம்-கூக] எனவும் வருமாற்றானறிக. புழுங்கி அழன்று—ஒரு பொருட் பன்மொழி யெனினுமாம். முத்தம்—அம் சாரியை; இறுதியிலுள்ள போலும் இசை நிறை. இவ்விரு செய்யுட்களும் உவமை யணியாம். பா - பே :—* மெய்ம்மேல். (கக)

பாலைநிலக் காற்று

கூச. பல்காற்றிண் டிரைக்கரங்கள் கரையின் மேன்மேற்
பாய்கடல்க ‡ணூக்குமதப் படர்வெங் கானில்
செல்காற்று வாராமற் காக்க வன்றே
திசைக்கரியின் செவிக்காற்று மதற்கே யன்றே.

ப - ரை :—பாய் கடல்கள் - (தண்ணீர்) பரவிய கடல்கள், பல் கால் - பல முறை, திண் திரை கரங்கள் - வலிய அலைகளாகிய (தங்கள்) கைகளை, கரையில்——, மேல்மேல் - மேலும் மேலும், நூக்கும் அது - செலுத்திக் கொண்டிருக்கும் அத்தொழில், படர் வெம் அ கானில் - பரவிய வெப்பமாகிய அந்தப் பாலை நிலத்தில், செல் காற்று - (வீசி) செல்லுங் காற்று, வாராமல் - (தம்மிடம்) வாராமல், காக்க அன்றே - காத்துக் கொள்ளவே யன்றே, திசை கரியின் - (எட்டு) திக்கு யானைகளின், செவி காற்றும் - காதுகளிலிருந்து வரும் காற்றும், அதற்கே அன்றே - அதனைத் தடுப்பதற்கே யன்றே.

வி - ரை :—கடலின் அலைகள் ஓயாமல் வீசுவதும், திசைக் கரிகளின் செவிகளிலிருந்து காற்று வெளிப்படுவதும் அப்பாலை நிலத்திலிருந்து வரும் மிகவும் வெப்பமாகிய காற்றுத் தம்மிடம் வாராமல் தடுத்தற்கேயா மென்க. இதனால் அப்பாலை நிலக்காற்றின் கொடுமை விளங்கும். அலைகளைக் கைகளாகக் கூறுதல் மரபு; 'பொன்னி, திரைக்கையா லடிவருட' [திவ்ய - பெருமாள் திரு - க - க] எனவும், 'திரைக்கரத்தா லரைப்ப தேய்க்கு மணியாழி' [கம்பரா-கடல்காண்-க0] எனவும், 'பகிரதி யெனுமன்னை, சஞ்ச ரத்திரைக் கரங்களா லெடுத்தெடுத்து' [வில்லிபா - சம்பவச் - ௨0] எனவும் வருமாறு காண்க. செவிக் காற்று—ஐந்தனுருபும் பயனு முடன்தொக்க தொகை. திசைக் கரிகளை க0 - ம் தாழிசையிற் காண்க. இச்செய்யுள் ஏதுவுருவகவணி. இதுவும் ஏதுநுதலியபேற்ற வணியாம்.

பா - பே :—‡ தூக்குவதும். (௨0)

வெம்மை நிலைமை

௬௫. முள்ளாறுங் கல்லாறுந் தென்ன ரோட
முன்னொருநாள் வாளபயன் முனிந்த போரின்
வெள்ளாறுங் கோட்டாறும் புகையான் மூட
வெந்தவன மிந்தவன மொக்கி லொக்கும்.

ப - ரை :—வாள் அபயன் - வாளாயுதத்தையுடைய (முதற்குலோத்துங்க) சோழன், முன் ஒரு நாள் - முன்பு ஒரு சமயத்தில், முனிந்த போரின் - கோபித்துச் செய்த யுத்தத்தில், தென்னர் - பாண்டியர்கள், முள் ஆறும் - முட்களையுடைய வழிகளிலும், கல் ஆறும் - பரல் கற்களையுடைய வழிகளிலும், ஓட - ஓடிப் போகவும், வெள்ளாறும் - வெள்ளாறு என்னு மூரும், கோட்டாறும் - கோட்டாறு என்னு மூரும், புகையால் மூட - புகையினால் மூடிக் கொள்ளவும், வெந்த வனம் - (அவ்வூர்களுக் கருகில்) வெந்த காடுகளின் வெப்பம், இந்த வனம் - இந்தப் பாலை வனத்தின் வெப்பத்தை, ஒக்கில் - (ஒருவாறு) ஒப்பானால், ஒக்கும் - ஒப்பாகலாம்.

வி - ரை :—வெள்ளாறு என்னும் நதி சேலம் ஜில்லாவிலுள்ள பச்சைமலை, கொல்லி மலைகளில் உற்பத்தியாகித் தென்னாற்காட்டின் வழியாய்ப் பாய்ந்து வங்காளக் குடாக் கடலில் கலக்கிறது. வெள்ளாறு என்னும் ஊர் இந்த நதியைச் சார்ந்திருத்தல் வேண்டுமெனத் தோற்றுகிறது. கோட்டாறு என்னும் ஊர் கன்னியா குமரிக்கு வடக்கில் சுமார் பத்து மைல் தூரத்தில் உள்ள தென்ப. கோட்டாறு என்றதனால், இதுவும் ஒரு நதியின் பெயரென்பதும், இந்நதியை யடுத்த ஊரே கோட்டாறுயிருத்தல் வேண்டுமென்பதும் தெள்ளிதின் விளங்கும்.

முதற் குலோத்துங்க மன்னன் வட நாடுகளை வென்ற பின், தென்னாட்டை வெல்லக் கருதிப் பாண்டியரோடு போர் புரியலானான். அப்போர் கி-பி-க0அ௰-ல் நிகழ்ந்ததாம். அப்போரின் பாண்டியனொருவன் உயிர் துறந்தான். பின்பு அவ்விறையவன் முத்துக்கள் ஏராளமாய்க் கிடைக்கும் மன்னார்க் குடாக் கடலைச் சார்ந்த நாட்டையும், பொதியிற் கூற்றத்தையும், கன்னியா குமரியையும், கோட்டாற்றையும் தனக்குரிமையாக்கிக்கொண்டான். மீண்டும் பாண்டியர்கள் அவற்றைக் கவரா வண்ணம் கோட்டாற்றில் தக்க பாதுகாப்பமைத்தான். அதற்குக் கோட்டாற்று நிலைப்படை என்று பெயர். [H. I. S. I. பக்-அஅ; சோழ வமி-பக்-௩க; மு-கு-சோ-பக்-சஉ-சங] இக்கொற்றவன் கோட்டாற்றை வென்ற செய்தியை, 'குறுகலர் குலையக் கோட்டா றுட்பட, நெறிதொறு நிலைகளிட் டருளி'

என்ற அவன் மெய்க் கீர்த்தியாலு முணர்க. 'கொடியார் நெடுமதிற் கோட்டாற் றரண்கொண்ட கோன்' [பாண்-கோவை-கூ0] என்றதனால், ஒரு காலத்தில் பாண்டியரும் கோட்டாற்றை வென்றனரெனத் தெரிகிறது. 'கறுத்தசெழி யன்கழல்சி வப்பவரை யேற' [தா-கசு] எனப் பாண்டியர் புறமிட்டமையை முன்னுங் கூறினர். இவ்வரலாற்றை ந-அக-ம் தாழிசையிலுங் காண்க. பகைவர் நாட்டை எரிமூட்டி யழித்தலை உழபுலவஞ்சி யென்ப. [தா-உ௬உ-ஙஎ0] (உக)

மணலின் தன்மை

கூசு. அணிகொண்ட குரங்கினங்க ளலைகடலுக் கப்பாலை
மணலொன்று காணமல் வரையெடுத்து மயங்கினவே.

ப - ரை :—அணி கொண்ட - படை வகுப்புப் பொருந்திய, குரங்கு இனங்கள் - குரங்குகளின் கூட்டங்கள், அலை கடலுக்கு - (அலைகளால்) அசையும் கடலை யணைப்பதற்கு, அ பாலை - அந்தப் பாலை நிலத்திலுள்ள, ஒன்று மணல் - ஒரு மணலை, காணமல் - காணப் பெறாமல், வரை எடுத்து - மலைகளை (பேர்த்து) எடுத்து, மயங்கின - (வருந்தி) கலங்கின.

வி - ரை :—அப்பாலை நிலத்து மணலில் ஒன்றைக் கடலி லிட்டால் உடனே அதன் நீரெல்லாஞ் சுவறிப் போமாயினும், அம்மணல் கிடைக்காமையால், குரங்குகள் கடலை யணைக்க மலைகளைத் தூக்கி வருந்தின வென்பதாம். [தா-சகுச] 'குரங்கினங்கள் மணலொன்று காணமல் மயங்கின' என்றமையால், மணலைக் கண்டால் அவை மயங்க மாட்டா வென்க. 'இதிலோர், நுண்மணல் தெறித்து விழி னும்பிரள யப்புனலை நுங்கி விடுமால்' [அரிச் - விவாக - கக0] என்றமை காண்க. அணி - திரளெனினுமாம். 'அயமிழி யருவிய வணிமலை நன்னாட' [கலி - சசு] என்றதிற் காண்க. மயங்கல்—அறிவு கலங்கல். இதனை 'மயக்கு மென் பதுபோய் மாயை மயங்கும்' [பிரபுலிங் - பிரபு தேவர் - கஅ] என்றதனு லறிக. அலை கடல்—வினைத்தொகை. இதில் உயர்வு நவிற்சியணி யுள்ளமை காண்க.

கடலை யணைத்த வரலாறு :—ஸ்ரீராமர் மனைவியாகிய சீதாதேவியை இராவணன் இலங்கைக்குக் கவர்ந்து சென்ற பின்பு, அவர் தமது மனைவியை மீட்கக் கருதி வானரப் படைகளைக் கொண்டு கடலை யணைத்து இலங்கைக்குச் சென்று இராவணனைக் கொன்று அவ்வம்மையை மீட்ட செய்தி யாவரும் நன்கறிந்ததாம். (உஉ)

காடு பாடியது முற்றிற்று.



# ச. கோயில் பாடியது



**கோயில் பாடியது** :—இது கோயிலைப் பாடியது என விரிதலால், இரண்டன் தொகையாம். கோயில் என்றது - இங்கே பாலை நிலத்தை யடுத்த சுடலையிலுள்ள காளி தேவியின் கோயிலை யென்க. இக்கோயில் ஏனைய கோயில்களைப் போலன்றிப் போரிற் பட்ட மன்னர், மள்ளர் முதலியவர்களின் தசை, குருதி, என்பு முதலியவற்றா னியன்றதா மென்ப. இக்கோயிலுக்கு எதிரில் வீரர்கள் தங்கள் உறுப்புக்களை யரிந்து தேவியைப் பரவுதல், ஓமத்தீ வளர்த்தல் முதலியவற்றை இதில் புலவர் புனைந்துரை வகையாற் கூறியிருப்பது வியக்கற்பாலதாம்.

**தேவியின் பூதலம் பழங் கோயில்**

கூஎ. ஓதி வந்தவக் கொடிய கானகத்
துறைய ணங்கினுக் கயன்வ குத்தவிப்
பூத லம்பழங் கோயி லென்னினும்
*புதிய கோயிலுண் டதுவி ளம்புவாம்.

ப - ரை :—ஓதி வந்த - (இதுகாறும்) சொல்லி வந்த, அ கொடிய கானகத்து - அந்தக் கொடிய பாலை வனத்தில், உறை அணங்கினுக்கு - வசிக்கின்ற காளி தேவிக்கு, அயன் வகுத்த - பிரமனால் படைக்கப்பட்ட, இ பூதலம் - இந்த உலகம், பழமை கோயில் என்னினும் - பழமையாகிய கோயிலா யிருந்தாலும், புதிய கோயில் உண்டு - புதியதாகிய கோயில் (ஒன்று) இருக்கிறது, அது விளம்புவாம் - (இனி) அதைச் சொல்வோம்.

வி - ரை :—'பூதலம் பழங்கோயில்' என்றதனால், இவ்வுலக முற்றும் அந்தத் தேவிக்கே உரியதென்பது விளங்கும். 'அண்டமெலாந் தன்னுடைய வகத்தடக் குந் திருமேனி யம்மை' [தேவி உட்சோலை-கசு] என மோகவதைப் பரணியில் வருமாறு காண்க. பூ தலம்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை; ஆறன் தொகை யெனினுமாம். கோயில்—இலக்கணப் போலி; உண்டு—குறிப்பு வினைமுற்று.
பா - பே :—* புதிய கோயிலொன் றது. (க)

**புதிய கோயிலமைப்பு**

கூஅ. வட்ட வெண்குடைச் சென்னி மானதன்
வாளின் வாயினன் மறலி வாயிடைப்
பட்ட மன்னர்தம் பட்ட மங்கையர்
†பருமணிக்கருத் திருவி ருத்தியே.

ப - ரை :—வட்டம் - வட்டமாகிய, வெண் குடை - வெண் கொற்றக் குடையையுடைய, சென்னி மானதன் - சோழனாகிய முதற் குலோத் துங்கனுடைய, வாளின் வாயினால் - வாளாயுதத்தின் விளிம்பினால், மறலி வாய் இடை - யமன் வாயில், பட்ட மன்னர் தம் - (போர்க்களத்தில் இறந்து) பட்ட அரசர்களுடைய, பட்டம் மங்கையர் - பட்டத்துத் தேவி மார்களின், திரு பரு மணி - (ஆபரணங்களின்) அழகிய பெரிய இரத்தி னங்களால், கரு இருத்தி - (அக்கோயில் சுவருக்கு) அடித்தள மமைத்து,

வி - ரை :—முதற்குலோத்துங்கன் தன் மாற்றரசரைக் கொன்று அவர்தம் மனைவியர்களின் ஆபரணங்களிலுள்ள சிறந்த ரத்தினங்களை அப்புதிய கோயிலுக்கு அடித்தளமாக அமைத்தன னென்பதாம். அடித்தளத்தைக் கடைக்காலெனவும் வழங்குவர். மானதன்—மானத்தைக் காப்பவன்; [தா-ருக, ரு௨, ருஅகூ] கட்டடம் புதிதாகக் கட்டுவோர் கடைக்காலில் பொன், மணிகளைப் பெய்த லியல்பாதலால், 'பருமணிக்கருத் திருவி ருத்தி' என்றார். திருக் கருவென விசைத்துப் பொருள் கோடலுமாம். வாளின் வாய்—வாய் = விளிம்பு; இதனை, 'வாயருந் வந்தொசிந்து மறிய' [சீவகசி-ருகூரு] எனவும் 'வாளின் வாய்களை யீவளைக்கின்றன' [கம்பரா-கரன்வதை-எக] எனவும் வருமாற்றானறிக. வாயிடை—இடை - ஏழனுருபு. 'பட்ட மன்னர்தம் பட்ட மங்கையர்' என்னுந் தொடர், 'பட்ட மன்னர் பட்ட தெங்கள் பதிபு குந்து பாரடா' [திருவா-கலம்-ருங] என்பதனோடு ஒருவாறு ஒத்திருத்தல் காண்க. பட்ட மன்னர்—இறந்த காலப் பெயரெச்சத் தொடர்; பட்ட மங்கையர்—நான்கனுருபும் பயனு முடன் தொக்க தொகை, இரண்டனுருபும் பயனு முடன் தொக்க தொகை யெனினுமாம். இது முதல் கூ0எ-ம் தாழிசை யளவும் தேவியின் கோயிலமைப்பை ஆசிரியர் மொழிந்துள்ளமை காண்க. பா - பே :—† பணிமணி. (உ)

இதுவுமது

கூகூ. துவர்நி றக்களிற் றுதிய ரேவலிற்
சுரிகை போர்முகத் துருவி நேரெதிர்த்
தவர்நி ணத்தொடக் குருதி நீர்குழைத்
தவர்க ருந்தலைச் சுவர டுக்கியே.

ப - ரை :—துவர் நிறம் - செந்நிறத்தையுடைய, களிறு உதியர் - யானைப் படைகளையுடைய சேர வேந்தர்களின், ஏவலின் - கட்டளையினால், போர் முகத்து - போர்க் களத்தில், சுரிகை உருவி - (தமது) வாளாயுதத்தை உருவி, நேர் எதிர்த்தவர் - நேரில் எதிர்த்த அச்சேர வீரர்களின், நிணத்தொடு - கொழுப்பாகிய சேற்றை, குருதி - (அவர்கள் உடலிலிருந்து பெருகும்) இரத்தமாகிய, அ நீர் குழைத்து - அந்த நீரால் குழைத்து, அவர் - அந்தச் சேர வீரர்களின், கரும் தலை - பெரிய தலைகளாகிய கற்களால், சுவர் அடுக்கி - சுவரை யெழுப்பி,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் தன்னை யெதிர்த்த சேர வீரர்களைக் கொன்று அவர் கொழுப்பாகிய சேற்றை அவர் உதிரமாகிய நீரால் குழைத்து அவர் தலைகளாகிய கற்களால் சுவரை யெழுப்பி அக்கோயிலை அமைத்தன னென்க. அவன் சேரவேந்தரை வென்றமையை ருஅஉ, ருஅரு-ம் தாழிசைகளிற் காண்க. போர்க்களத்திலுள்ள யானைகளின் உடல் குருதி வெள்ளத்தில் மூழ்கிச் சிவத்தலால், 'துவர்நிறக் களிறு' என்றார். கருந்தலை — பசுந்தலை யெனினுமாம். 'சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குங் கருந்தலை' [சிலப்-ரு-அச] என்றமை காண்க. ஏவலின்—ஐந்தனுருபு ஏதுப்பொருளில் வந்தது. நிணத்தொடு—உருபு மயக்கம். நிணம், தலை, குருதி நீர்—உருவக வணிகள். (ரு)

இதுவுமது

௧00. அறிஞர் தம்பிரா னபயன் வாரணம்
அரசர் மண்டலத் தரண றப்பறித்
தெறித ரும்பெருங் *கணைம ரங்கள்கொண்
டெழுது தூணெடுத் திரமி யற்றியே.

ப - ரை :—அறிஞர் தம்பிரான் - (கல்வி கேள்விகளில் வல்ல) அறிவாளிகளுக்குத் தலைவனாகிய, அபயன் வாரணம் - (முதற்குலோத்துங்க) சோழனுடைய யானைகள், அரசர் மண்டலத்து - (பகை) அரசர் நாடுகளிலுள்ள, அரண் அற - காவற் காடுகள் அழியும்படி, பறித்து எறிதரும் - (தங் கொம்புகளால்) பிடுங்கி எறியும், பெரும் கணை மரங்கள் கொண்டு - பெரிய கணைய மரங்களால், எழுது தூணொடு - பதித்த தூண்களும், உத்திரம் இயற்றி - உத்திரங்களும் அமைத்து,

வி - ரை :—முதற்குலோத்துங்கன் தன் பகைவர் நாடுகளிலுள்ள காவற் காடுகளை அழித்து அவற்றிலுள்ள மரங்களால் அக்கோயிலுக்குத் தூண்களும் உத்திரங்களும் அமைத்தனனென்பதாம். கணைய மரம்—இரண்டு மதயானைகள் ஒன்றோடொன்று போர் புரியுங்கால், அவற்றைத் தடுப்பதற்கு அவைகளின் நடுவிலிடப்படும் வலிய மரமாம். கணையம் - கடைக் குறை. 'அரசர் மண்டலத்தரண்' என்பதற்கு—அரசர் கூட்டங்களின் கோட்டைகள் எனினுமாம். பகை வேந்தர்களின் அரணழித்தலைக் குற்றுழிஞை என்ப. இதனை, 'கருதாதார் மதிற்குமரிமேல், ஒருதானாகி யிகன்மிகுத்தன்று.' [புறப் - வெ - மா-கoஎ] என்றதனாலறிக. பா - பே :—* கணைய மம்பு. (சு)

இதுவுமது

கoக. கடித ழிந்துபோர் மிதிலை யிற்படுங்
கரிம ருப்பினைத் திரடு லாமெனும்
படிப ரப்பியப் †பரும யானையின்
பழுவெ லும்பினிற் பாவ டுக்கியே.

ப - ரை :—மிதிலையில்-மிதிலை யென்னும் நகரில், போர் - (நிகழ்ந்த) போரில், கடிது அழிந்து படும்-விரைவாய் இறந்துபடும், கரி மருப்பினை-யானைகளின் கொம்புகளை, திரள் துலாம் எனும்படி - திரண்ட துலாம் என்று சொல்லும்படி, பரப்பி - பரப்பி வைத்து, அ பருமம் யானையின்-அந்தப் பெரிய யானைகளின், பழு எலும்பினில் - விலா வெலும்புகளால், பா அடுக்கி - பாவை யடுக்கி,

வி - ரை :—மிதிலை நகரப் போரில் இறந்து பட்ட யானைகளின் கொம்புகளைத் துலாமாகவும் அவைகளின் விலா வெலும்புகளைப் பாவாகவும் அமைத்து அக்கோயில் கட்டப்பட்டதென்பதாம். 'பரும யானை'—அலங்கரித்தலையுடைய யானைகளெனினுமாம். 'அப்பரும யானை'—என்றது போரில் இறந்து பட்ட யானைகளை யென்க. கடிது—குறிப்பு முற்றெச்சம்.
பா - பே :—† பழுவயானையின். (ரு)

இதுவுமது

கoஉ. மீளி மாவுகைத் தபயன் முன்னொர்நாள்
விருத ராசரைப் பொருது கொண்டபோர்
ஆளி வாரணங் கேழல் சீயமென்
றவைநி ரைத்துநா சிகையி ருத்தியே.

ப - ரை :—அபயன் - (முதற் குலோத்துங்க) சோழன், முன் ஓர் நாள் - முன்பு ஒரு சமயத்தில், மீளி மா உகைத்து - (தனது) வலிய யானைகளைச் செலுத்தி, விருத ராசரை - வெற்றிச் சின்னங்களையுடைய அரசர்களோடு, பொருது - போர் புரிந்து, கொண்ட - (அவர்களிடமிருந்து கவர்ந்து) கொண்ட, போர் - போரைப் புரியும், ஆளி - யாளிக்

கொடியும், வாரணம் - யானைக் கொடியும், கேழல் - பன்றிக் கொடியும், சீயம் - சிங்கக் கொடியும், என்ற அவை - என்று சொல்லப்பட்ட அந்தக் கொடிகளை, நிரைத்து - வரிசையாக வைத்து, நாசிகை இருத்தி - மேல் முகடு அமைத்து,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் தன் பகை வேந்தரை வென்று அவர்கள் யாளி, யானை முதலிய துகிற் கொடிகளால் அக்கோயிலின் மேல்முகட்டை யமைத்தன னென்பதாம். துலாம், பா, நாசிகை—என்பன உத்திரத்தின்மேல் அமைக்கப்படும் ஒருவகை உறுப்புக்கள். விருத ராசர்—குறிப்புப் பெயரெச்சத்தொடர்; விருது—வெற்றிச் சின்னம்; விருது என்பது அகரச் சாரியை பெற்றதெனினுமாம். விருதராசரைப் பொருதமை அடுத்த செய்யுளிற் காண்க. ஆளி—இது யாளி என்பதன் மரூஉ. ஆளி, வாரணம் முதலியன ஆகுபெயர்கள். [தா-கஅ, உகூ] என்றவை—நிலை மொழியீற்றில் அகரந் தொக்கது; இதனை ஒரு சொல்லாய்க் கொண்டு வினையாலணையும் பெயரெனினுமாம். (சு)

**இதுவுமது**

கoஙூ. *துங்க பத்திரைச் செங்க ளத்திடைச்
சோளா சேகரன் வாளெ றிந்தபோர்
†வெங்க தக்களிற் றின்ப டத்தினால்
வெளிய டங்கவே மிசைக விக்கவே.

ப - ரை :—சோளர் சேகரன் - சோழவரசர்களுக்கு மகுடம்போன்றவனாகிய முதற்குலோத்துங்கன், துங்க பத்திரை - துங்கபத்திரை நதியைச் சார்ந்த, செம் களத்திடை - சிவந்த போர்க்களத்தில், வாள் எறிந்த - (தன் பகைவர்களை) வாளால் கொன்ற, போர் - போரில் கவர்ந்த, வெம் கதம் - கொடிய கோபத்தையுடைய, களிற்றின் படத்தினால் - யானைகளின் முகப் போர்வையால், வெளி அடங்க - வெற்றிடம் மறையும்படி, மிசை கவிக்க - (அம்முகட்டின்) மேலே போர்த்து,

வி - ரை:—முதற் குலோத்துங்கன் போரில் கவர்ந்த யானைகளின் முகப் போர்வையால் அக்கோயிலின் முகட்டை மூடின னென்பதாம். வெளி—ஆகாயமெனினுமாம். உதிரம் நிறைந்த களமாதலின் 'செங்களம்' என்றார். சோளசேகரன்—சோழ குலத்திற்கு மகுடம் போன்றவ னெனினுமாம். சோளர்—இது சோழர் என்பதன் போலி.

முதற்குலோத்துங்கன் ஆட்சிபுரிந்த காலத்தில் ஆறும்விக்கிரமாதித்தன் என்பவன் குந்தள நாட்டை யாண்டுவந்தான். குலோத்துங்கவேந்தன் அவன் மேல் படையெடுத்துச் சென்று, அவனையும் அவன் தம்பி சயசிங்கனையும் வென்று அவர்களைத் துங்கபத்திரை நதிக்கப்பால் துரத்தி, அவர்கள் தலை நகரமாகிய கலியாண புரத்தைத் தனக்குரிமையாக்கிக் கொண்டான். [தா-ஙஅடு-ஙகூச] அதனால், அவ்வேந்தனுக்கு விருதராச பயங்கரன் [தா - கசஎ, உஙகூ] என்னும் பேர் உண்டாயிற்று. [முதற்குலோ-பக்-உச] இப்போர் கி. பி. க0அக-ல் நிகழ்ந்த தென்ப. இவ்வரலாற்றால், முற்கூறிய வேந்தரிருவர்க்கு விருதராசர் என்னும் பேர் இருக்க வேண்டுமெனத் தெரிகிறது. க0உ-ம் தாழிசையில், 'விருத ராசரைப் பொருது' என்றமையுங் காண்க.

பா - பே :—* துங்கபத்திரி, † வெங்க டக்களிற் றின். (எ)

இதுவுமது

கα०ச. கொள்ளிவாய்ப் பேய்காக்குங்
கோபுரமு நெடுமதிலும்
வெள்ளியாற் சமைத்ததென
வெள்ளெலும்பி னாற்சமைத்தே.

ப - ரை :—கொள்ளி வாய் பேய் ——, காக்கும் - (காவல்) காக்கும், கோபுரமும் - கோபுரங்களையும், நெடு மதிலும் - பெரிய மதில் சுவர்களையும், வெள்ளியால் சமைத்தது என - வெள்ளியால் கட்டி முடித்தாற் போல, வெள் எலும்பினால் - (இறந்துபட்ட வீரர்களின்) வெண்ணிறமாகிய எலும்புகளால், சமைத்து - (அக்கோயிலை) கட்டி முடித்து,

வி - ரை :—அக்கோயிலின் கோபுரமும் மதில் சுவர்களும் எலும்பினால் சமைக்கப்பட்டன வென்பதாம். வெள்ளெலும்பு எனப் பொதுப்படக் கூறினமையால், போரில் இறந்துபட்ட யானை குதிரைகளின் எலும்புகளையுங் கொள்க. கொள்ளி வாய்ப் பேய்—ஒருவகைப் பேய்; கொள்ளி போல் சிவந்த வாயையுடைய பேய் என்பதாம். [தா - ககக] 'சுழலு மழல்விழிக் கொள்ளி வாய்ப் பேய்' [திருவாலங் - மூத்த திருப் - எ] எனவும்; 'கொள்ளிவாய் நெடும் பேய்' [தக்கயா-ருஉ] எனவும் வருமாறு காண்க. இச்செய்யுள் உவமையணியாம். (அ)

இதுவுமது

கα०ரு. காரிரும்பின் மகரதோ ரணமாகக் *கரும்பேய்கள்
ஓரிரண்டு கானட்டி யோரிரும்பே மிசைவளைத்தே.

ப - ரை :—கரும் பேய்கள் - கரிய நிறத்தையுடைய் பேய்களானவை, கார் இரும்பின் - கரிய இரும்பால், ஓர் இரண்டு கால் நாட்டி - ஒப்பற்ற இரண்டு தூண்களை நட்டு, ஓர் இரும்பு - ஓரிரும்பை, மிசை - (அத்தூண்களின்) மேல், மகரம் தோரணம் ஆக - சுறாமீன் வடிவம் போன்ற தோரணமாக, வளைத்து - வளைத்து வைத்து,

வி - ரை :— பேய்கள் அக்கோயிலின் வாசலுக்கு எதிரில் இரும்புத் தூண்களை நட்டு அவைகளின் மேல் ஓர் இரும்பை மகர தோரணமாக வளைத்து வைத்தன வென்பதாம். மகரம்—சுறாமீன். இது முதலாகு பெயராய் அதன் வடிவை யுணர்த்தினது. மகர தோரணம்—உவமைத் தொகை.

பா - பே :—* கதப் பேய்கள். (கூ)

இதுவுமது

கα०சு. மயிற்கழுத்துங் கழுத்தரிய மலர்ந்தமுகத்
தாமரையு மருங்கு சூழ்ந்த
எயிற்கழுத்து நிணக்கொடியு மிளங்குழவி
பசுந்தலையு மெங்குந் தூக்கி.

ப - ரை :—மயில் கழுத்தும் - மயில் தலைகளையும், கழுத்து அரிய - (வீரர்கள் தமது) கழுத்தை அரிகையில், மலர்ந்த முகம் தாமரையும் - (களிப்பின் மிகுதியால்) மலர்ந்த முகமாகிய தாமரை மலர்களையும், மருங்கு சூழ்ந்த - (அக்கோயிலின் நான்கு) பக்கங்களிலும் சூழ்ந்திருக்கின்ற, எயில் கு - மதில்களில், அழுத்து நிணம் கொடியும் - பதிக்கும் கொழுப்பாலாகிய கொடிச் சீலைகளையும், இளமை குழவி - மிக்க இளங் குழந்தைகளின், பசுமை தலையும் - பச்சிளந் தலைகளையும், எங்கும் தூக்கி - (அக்கோயிலின்) எல்லா விடங்களிலும் தொங்கவிட்டு,

வி - ரை :—அக்கோயிலில் மயில் தலைகள் முதலியன தொங்கவிட்டிருந்தன வென்பதாம். வீரர்கள் தங்கள் தலைகளை யரிதல் தேவிக்குப் பலியிடற் பொருட்டாம். இளங் குழவிகளின் பசுந்தலைகள் தேவிக்குப் பலிக்கடன் செலுத்துவோரால் தொங்கவிடப்பட்டவை. 'மாசில் கற்பின் மடவோள் குழவி, ஒய்ய வாங்கக் கைவிட் டாங்கு' [நற்றி-கரு] என்றார் பிறரும். தேவி கோயிலாதலின், நிணக்கொடிகளே துகிற் கொடிகளா யமைந்த வென்க. மயில் தலைகள் தொங்குதற்குக் காரணம் நன்கு விளங்கவில்லை. ஆடு, கோழிகளைத் தற்போது சிலர் தேவிக்குப் பலி யிடுதல் போல், மயில்களைப் பலியிடல் முற்கால வழக்குப் போலும். அரிய - உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த நிகழ்கால வினையெச்சம்; அரி—பகுதி; நிணக் கொடி—மூன்றனுருபும் பயனுமுடன்தொக்க தொகை—நிணமாகிய கொடியெனப் பொருள்கொள்ளின் பண்புத் தொகையாம். மயில் கழுத்து—இதிலுள்ள கழுத்து, சினையாகு பெயராய்த் தலையை யுணர்த்தினது. முகத்தாமரை—உருவகவணி. (கO)

இதுவுமது

கOஎ. பணியாத வழுதியர்தம் பாய்களிற்றின்
செவிச்சுளகு பலவுந் தூக்கி
மணியூச லெனமதுரை மகரதோ
ரணம்பறித்து மறித்து நாட்டி.

ப - ரை :—பணியாத - (தன்னை) வணங்காத, வழுதியர் தம் - பாண்டிய மன்னருடைய, பாய் களிற்றின் - (பகைவர்மேல் தாவி) பாயும் யானைகளின், சுளகு செவி - முறம் போன்ற காதுகள், பலவும் தூக்கி - பலவற்றை (மாலையாக) தொங்கவிட்டு, மதுரை மகரம் தோரணம் - மதுரையிலுள்ள சுறுமீன் வடிவம் போன்ற தோரணத்தை, பறித்து - (அங்கிருந்து) பிடுங்கி, மணி ஊசல் என - இரத்தினங்களைப் பதித்த ஊசலைப் போல், மறித்து நாட்டி - (அக்கோயிலுக்கு எதிரில்) மீண்டும் நட்டு,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் பாண்டிய மன்னரை வென்று [தா-கூ, கூரு, ௩அக] இறந்துபட்ட அவர்தம் யானைகளின் காதுகளை மாலையாகத் தொங்கவிட்டு, அவர்கள் தலைநகராகிய மதுரையிலுள்ள மகர தோரணத்தை ஊசலாக வமைத்தன னென்பதாம். மணியூசல்—அழகிய ஊசலெனினுமாம். இதுகாறும் ஆசிரியர் தேவியின் கோயிலமைப்பை யியம்பி, இனித் தேவியை வழிபடுவோர் தன்மையை மொழியத் தொடங்குகின்றார். (கக)

## தேவியை வழிபடுவோர் தன்மை

ஈமவிளக்கை எம்மருங்கு மேற்றல்

கOஅ. பரிவிருத்தி யலகிட்டுப் *பசுங்குருதி
நீர்தெளித்து நிணப்பூச் சிந்தி
எரிவிரித்த வீமவிளக் கெம்மருங்கும்
ஏற்றியதோ ரியல்பிற் றன்றோ.

ப - ரை :—பரிவிருத்தி - (அக்கோயில்) சுற்றும், அலகு இட்டு - பெருக்கிச் சுத்தஞ்செய்து, பசுமை குருதி - பச்சிரத்தமாகிய, நீர் தெளித்து - தண்ணீர் தெளித்து, நிணம் பூ சிந்தி - கொழுப்பாகிய மலர்கள் தூவி, எரி விரித்த - ஒளியைப் பரப்புகிற, ஈமம் விளக்கு - (சுடலையில் பிணங்களைச் சுடுவதால் எரியும்) விறகடுக்காகிய விளக்கை, எ மருங்கும் - எல்லாப் பக்கங்களிலும், ஏற்றியது - ஏற்றி வைக்கப்பட்டதாகிய, ஓர் இயல்பிற்று - ஒப்பற்ற தன்மை யுடையது.

வி - ரை :—தேவியை வழிபடுவோர் அக்கோயிலைப் பெருக்கி இரத்தமாகிய நீரைத் தெளித்துக் கொழுப்பாகிய மலரைத்தூவி யீமமாகிய விளக்கை யேற்றி வைத்தன ரென்க. 'ஈம விளக்கு எம்மருங்கும் ஏற்றியது' என்றதனால், தேவியின் கோயில் சுடலையின் நடுவிலுள்ள தென்பது விளங்கும். பரிவிருத்தி—இதனைப் பரிவு இருத்தி எனப் பிரித்து (தேவியை வழிபடுவோர் அவ்வம்மைபால்) அன்பு செலுத்தி யெனினுமாம். குருதி நீர், நிணப் பூ, ஈம விளக்கு ; உருவக வணிகள். ௯அ - ம் செய்யுள் முதல் இச்செய்யுள் வரையுமுள்ள பதினொரு செய்யுட்களும் ஒரு தொடர்.

(௯அ) இருத்தி (௯௯) அடுக்கி (௧௦௦) இயற்றி (௧௦௧) அடுக்கி (௧௦௨) இருத்தி (௧௦௩) கவிக்க (௧௦௪) சமைத்து (௧௦௫) வளைத்து (௧௦௬) தூக்கி (௧௦௭) நாட்டி (௧௦அ) அலகிட்டு, தெளித்து, சிந்தி ஏற்றியதோ ரியல்பிற்று என வினைமுடிவு செய்க. இவ்வாறு வருதலைக் குளகம் என்பர். 'குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்' [தண்டி-பொது-௩] என்பது விதி. இனி வருமிடந்தோறும் இவ்வாறே கொள்க. இயல்பிற்றுலோ-ஆல், ஓ-இரண்டும் அசைகள்.

பா-பே:—* பைங்குருதி. (௧௨)

**வீரர் தேவியைப் போற்றல்**

௧௦௯. சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக வுறுப்பரிந்து தருது மென்று
பரவுமொலி கடலொலிபோற் பரக்கு மாலோ.

ப - ரை :—சலியாத - (சிறிதும் மனம்) தளராத, தனி ஆண்மை - ஒப்பற்ற பராக்கிரமத்தையும், தறுகண் வீரர் - அஞ்சாமையையுமுடைய வீரர்கள், வரம் தருக - (தேவியே நாங்கள் விரும்பிய) வரத்தைத் தருவாயாக, வரத்தினுக்கு தக்கது ஆக - (நீ கொடுக்கும்) வரத்திற்குத் தகுதியுடையதாக, உறுப்பு அரிந்து - (எங்கள்) அவயவங்களை அறுத்து, பலி ஆக தருதும் - (உனக்கு) பலியாகக் கொடுப்போம், என்று பரவும் ஒலி - என்று (அந்த வீரர்கள்) துதிக்கும் ஓசை, கடல் ஒலி போல் பரக்கும் - கடலோசைபோல் (நான்கு திசைகளிலும்) பரவாநிற்கும்.

வி - ரை :—தேவியை வழிபடும் வீரர்கள் அவ்வம்மையைத் துதிக்கும் ஒலி கடலொலிபோல் முழங்கு மென்க. 'சூரனுக்கு, சேர்ந்த மரணஞ் சிறு துரும்பு' [தனிப் - ௧ - ஔவை - ௬௫] என்றபடி, தங்கள் உயிரைத் துரும்பென மதிக்கும் வீரராகையால், 'சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்' எனச் சிறப்பித்துக் கூறப்பட்டனரென்க. தருதும்—தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. இதில் தன்னிடத்துள்ள தொரு பொருளைக் கொடுத்துப் பிறிதொரு பொருளைக் கொள்வதாய் மொழிந்துள்ளமையால், இது மாற்றுநிலை யணியாம். இதனிற்றில் உவமையணியு முள்ளமை காண்க. (௧௩)

**இதுவுமது**

௧௧௦. சொல்லரிய வோமத்தீ வளர்ப்ப ராலோ
தொழுதிருந்து பழுவெலும்பு தொடர வாங்கி
வல்லெரியின் *மிசையெரிய விடுவ ராலோ
வழிகுருதி நெய்யாக வார்ப்ப ராலோ.

ப - ரை :—தொழுது இருந்து - (தேவியை) வணங்கி உட்கார்ந்து, சொல்ல அரிய - (ஒருவராலும் சிறப்பித்து) சொல்ல முடியாத, ஓமம் தீ - யாகத்திற்குரிய நெருப்பை, வளர்ப்பர் - மூட்டுவார்கள், பழு எலும்பு -

(பின்பு தங்கள்) விலா வெலும்பை, தொடர - (ஒன்றோடொன்று) தொடர்ந்திருக்கும்படி, வாங்கி - (தங்கள் உடலிலிருந்து) பிடுங்கி, வல் எரியின் மிசை - வலிய நெருப்பில், எரிய - (விறகாக) எரியும்படி, இடுவர் - வைப்பார், வழி குருதி - (தங்கள் உடலிலிருந்து பெருகி) வழியும் இரத்தத்தை, நெய் ஆக வார்ப்பர் - (அதில்) நெய்யாக ஊற்று வார்கள்.

வி - ரை :—தேவியை வழிபடுவோர் தங்கள் விலா வெலும்புகளை விறகாக இட்டும் இரத்தத்தை நெய்யாகச் சொரிந்தும் வேள்விபுரிவ ரென்பதாம். ஓமத் தீ—அக்கினி பூசைக்குரிய நெருப்பு எனினுமாம். ஊழி முடிவில் எல்லாப் பொருள்களையும் அழிக்க வல்ல தீயாதலால், 'வல்லெரி' என்றார்.

பா - பே :—* விறகாக. (கச)

**வீரர்களின் தலையும் உடலும் தேவியை வணங்கல்**

கககூ. *அடிக்கழுத்தி னெடுஞ்சிரத்தை யரிவ ராலோ
அரிந்தசிர மணங்கின்கைக் கொடுப்ப ராலோ
கொடுத்தசிரங் கொற்றவையைப் பரவு மாலோ
குறையுடலங் கும்பிட்டு நிற்கு மாலோ.

ப - ரை :—நெடும் சிரத்தை - (தங்கள்) பெரிய தலைகளை, அடி கழுத்தின் - கழுத்தினடியில், அரிவர் - (தேவியை வழிபடுவோர்) அறுப் பார்கள், அரிந்த சிரம் - (அவ்வாறு) அறுத்த தலைகளை, அணங்கின் கை கொடுப்பர் - தேவியின் கையில் கொடுப்பார்கள், கொடுத்த சிரம் - (அவ்வாறு) கொடுத்த தலைகள், கொற்றவையை - தேவியை, பரவும் - துதிக்கும், குறை உடலம் - (தலை) குறைந்த உடலானவை, கும்பிட்டு நிற்கும் - (தேவியை) வணங்கி நிற்கும்.

வி - ரை :—தேவியை வழிபடுவோர் தங்கள் தலைகளை யறுத்துத் தேவி கையிற் கொடுப்பார்; அவை அந்தத் தேவியைத் துதிக்க, தலை குறைந்த உடல்கள் அவ்வம்மையை வணங்கி நிற்குமென்க. 'அச்சம தறத்தம துயிர்க் கொடை யளித்தவ ரறுத்த தலை' [அரிச் - விவாக - கஉக] எனவும், 'தலை யரிந்து விடுவா ருயிர்விடார்' [தக்கயா-சுக] எனவும் வருமாறு காண்க. அடிக் கழுத்து—இலக் கணப்போலி; உடலம்—அம் சாரியை. பா-பே :-* அடிக்கழுத்தி னுடன். (கரு)

**வீரர் தலைகள் ஆண்டலைப் புட்களை யச்சுறுத்தல்**

கககஉ. நீண்டபலி பீடத்தி லரிந்து வைத்த
‡நெடுங்குஞ்சிச் சிரத்தைத்தன் னினமென் றெண்ணி
ஆண்டலைப்புள் ளருகணைந்து பார்க்கு மாலோ
அணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ.

ப - ரை :—பலி - பலிக்கடனைச் செலுத்தும், நீண்ட பீடத்தில்——, அரிந்து வைத்த - (தேவியை வழிபடுவோரால்) அறுத்து வைக்கப்பட்ட, நெடும் குஞ்சி - நீண்ட குடுமியையுடைய, சிரத்தை - தலைகளை, தன் இனம் என்று எண்ணி - தனது இனமென்று நினைத்து, ஆண்டலை புள் - ஆண்டலை யென்னும் ஒருவகைப் பறவை, அருகு அணைந்து பார்க்கும் - (அந்தத் தலைகளின்) அருகில் சேர்ந்து பார்க்கும், அணைதலும் - (அந்தப் பறவை) வந்து சேர்தலும், அ சிரம் - அந்த (அறுபட்ட) தலைகள், அச்சம் உறுத்தும் - (அந்தப் பறவையை) பயமுறுத்தும்.

வி - ரை :—பலி பீடத்தி லரிந்து வைத்த வீரர்களின் தலைகளை ஆண்டலைப் புட்கள் அணுக, அவை அப்பறவைகளை வெருட்டி யோட்டு மென்பதாம். ஆண்டலைப் புள்—இது பாலை நிலத்திற்குரிய ஒருவகைப் பறவை ; இது ஆண் மக்களின் தலை போன்ற வடிவ முடைய தென்பர். 'அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்' [பட்டி - உ௫அ] எனவும், 'தூண்டிலுந் தொடக்கு மாண் டலை யடுப்பும்' [சிலப் - ௧௫ - உ௧௧] எனவும் 'ஊண்டலை துற்றிய வாண்டலைக் குரலும்' [மணிமே-௬-௭௭] எனவும் 'ஆண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி' [பதிற்று-உ௫-அ] எனவும் வருமாறு காண்க. இவை நள்ளிரவில் கூட்டமாக வந்து பிராணிகளின் ஊனைக் கொத்தித் தின்னு மென்ப. வீரர்களின் உடலிழந்த தலைமாத்திர மிருந்தமையால், அத்தலைகளை அப்பறவைகள் தம்மின மெனக் கருதலாயின வென்க. அறுபட்ட தலைகள் அப் பறவைகளை அச்சுறுத்தி ஓட்டுதல் அவை தம்மைக் கொத்துமெனக் கருதியாம். இதனாலும் அவ்வீரர் களின் ஆண்மை விளங்கும். இவ்விரு தாழிசைகளையும் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் மேற்கோளாகக் காட்டி யிருக்கின்றனர். [சிலப்-௫-அ௪] முன்புள்ள தாழிசைகளிலும் இத்தாழிசையிலு முள்ள ஆல் - ஓ இரண்டும் அசைகள். ஆண்டலைப் புட்கள் வீரர் தலைகளைக் கண்டு தம்மின மென மயங்கி னமையால், இது மயக்க வணியாம். பா-பே :—‡ நெறிகுஞ்சித் தலையை. (௧௬)

வீரர் பலிக்கடன் செலுத்தல்

௧௧௩. கடன மைந்ததுக ருந்தலைய ரிந்த பொழுதே
கடவ தொன்றுமிலை யென்றுவிளை யாடு முடலே
உடல்வி ழுந்திடினு கர்ந்திட*வு வந்த சிலபேய்
உறுபெ ரும்பசியு டன்றிடவு டன்றி ரியுமே.

பு - ரை :—கரும் தலை - (தமது) பெரிய தலையையுடைய கழுத்தை, அரிந்த பொழுதே - அறுத்த அப்பொழுதே, கடன் அமைந்தது - (தேவிக்குச் செலுத்தவேண்டிய பலியின்) கடமை முடிந்தது, கடவது - (இனி) செய்ய வேண்டுவது, ஒன்றும் இலை என்று - யாதொன்று மில்லை யென்று, உடல் விளையாடும் - (வீரர்களின்) குறையுடல்கள் (களிப்பால் துள்ளி) விளையாடும், உடல் விழுந்திடின் - (அந்த) உடல்கள் (நிலத்தில்) விழுந்தால், நுகர்ந்திட உவந்த - (அவற்றை) புசிக்க விரும்பிய, சில பேய்——, உறு பெரும் பசி - (தமக்கு இயல்பாக) பொருந்திய பெரிய பசி, உடன்றிட - (தம்மை) வருத்த, உடன் திரியும் - (அக்குறை யுடல்க ளோடு) ஒக்கத் திரியும்.

வி - ரை :—பலிக்கடன் செலுத்துவோர் தங்கள் தலைகளை யரிந்த பின், களிப்பால் துள்ளும் உடல்களைப் பேய்கள் அணுகவஞ்சி அவை நிலத்தில் விழு மளவும் அவற்றைத் தொடரலாயின வென்பதாம். தலை - இது முதலாகுபெய ராய்க் கழுத்தை யுணர்த்தினது. உறு பெரும் பசி, உறுபசி—வினைத்தொகை, மிகவும் பெரிய பசி யெனினுமாம் ; இப்பொருளில் உரிச்சொற்றொடர். ஒன் றும்—இதிலுள்ள உம்மை இழிவு சிறப்பாம். ௧0௬-ம் தாழிசை முதல் இது காறு முள்ள ஐந்து தாழிசைகளிலும் வீரச்சுவை செறிந்துள்ளமை காண்க.

பா - பே :—* உவந்து சிலபேய். (௧௭)

தேவி பகடுபலி கொள்ளல்

௧௧௪. பகடி டந்துகொள்ப சுங்குருதி யின்று தலைவீ
பலிகொ ளென்றகுர லெண்டிசைபி ளந்துமிசைவான்
முகடி டந்துருமெ றிந்தெனமு ழங்க வுடனே
மொகுமொ கென்றொலிமி குந்தமரு கங்கள் பலவே.

ப - ரை:—தலைவீ - தேவியே, இன்று - இப்போது, பகடு இடந்து கொள் - எருமைக் கடாவைப் பிளந்து எடுத்துக் கொண்ட, பசும் குருதி - பச்சிரத்தத்தை, பலி கொள் - (நீ) பலியாக ஏற்றுக்கொள், என்ற குரல் - என்ற (வீரர்களின் ஆர்த்த) குரலொலிகள், உரும் எறிந்தென - பேரிடி யிடித்தாற் போல, எண் திசை பிளந்து - எட்டுத் திக்குகளையும் பிளந்து, மிசை - மேலேயுள்ள, வான் முகடு இடந்து - ஆகாயத்தின் உச்சியையும் பிளந்து, முழங்க - ஒலிக்க, உடனே - (அவ்வொலி) உடனே, மொகு மொகு என்ற ஒலி-மொகு மொகு என்ற ஓசையானது, மிகும் - அதிகமா யெழும், தமருகங்கள் பல - தோற்கருவிகள் மிகப் பலவாம்.

வி - ரை:—தேவியை வழிபடுவோர் குரலொலியும் பலவகை வாச்சியங் களின் ஒலியும் பேரிடி யிடித்தாற் போல முழங்கின வென்பதாம். எறிந்தென - எறிந்தாலென்ன வென்பதன் தொகுத்தல். என்ன - உவம உருபிடைச் சொல். என்றொலி - பெயரெச்சத்தின் ஈறு தொக்கது. தமருகம்—உடுக்கை; பம்பை யெனினுமாம். மொகுமொ கெனல் - இரட்டைக் கிளவி [தா-௪0௧] 'அடர்ந் தளிகள் மோதுமோ கேனும்' [வில்லிபா-௧௮-ம் போர்-௨௩௭] எனவும், 'கறுக்கு மஞ்சன விழியிணை' என்னுஞ் செய்யுளில், 'நிரைத்த தெண்டிரை மோத மோத மோதவென' [திருப்பு] எனவும் வருமாறு காண்க. இச்செய்யுளில் உயர்வு நவிற்சியணியும், உவமை யணியு முள்ளமை காண்க. (௧௮)

சாதகர் தன்மை

௧௧௫. தமரு கங்கடரு கின்றசதி யின்கண் வருவார்
அமரி யின்புறும நாதிவரு சாத கர்களே.

ப - ரை:—அமரி - தேவியால், இன்பு உறும் - விரும்பப்படும், அநாதி வரு - தொன்று தொட்டு வருகின்ற, சாதகர்கள் - சாதகர்கள் என்பவர்கள், தமருகங்கள் தருகின்ற - தோற்கருவிகளிலிருந்து உண் டாகின்ற, சதியின் கண் - தாள வொற்றின் ஒலியால், வருவார்-(தேவியை வணங்க) வருவார்கள்.

வி - ரை:—சாதக ரென்பார் தோற் கருவிகளின் ஒலியைக் கேட்டுத் தேவியை வணங்க வருவா ரென்பதாம். தோற் கருவிகளாவன:—பறை, பம்பை, முழவு முதலியன. சாதகர்—பேய்களில் ஒரு வகையினர்; இவர்கள் தேவியின் மெய் காப்பாளர்கள். [தா-௪௮௧] அமரி—போரை விரும்புகிறவள்; சதியின் கண்—உருபு மயக்கம். (௧௯)

யோகினியர் தன்மை

௧௧௬. படைவ லங்கொடுப சுந்தலையி டங்கொ டணைவார்
*இடைமொ ழிந்திடைநு டங்கவரு யோகி னிகளே.

ப - ரை:—இடை மொழிந்து - இடையிடையே பேசிக்கொண்டு, இடை நுடங்க - (தங்கள்) இடுப்புத் துவள, வரு யோகினிகள் - (தேவி யிடம்) வருகின்ற யோகினிப் பெண்கள், படை வலம் கொடு - வாளா யுதத்தை வலக்கையில் பிடித்துக்கொண்டு, பசும் தலை - பசுமையாகிய தலைகளை, இடம் கொடு - இடக்கையில் பிடித்துக்கொண்டு, அணைவார் - (வந்து) சேர்வார்கள்.

வி - ரை :—யோகினி மாதர்கள் [தா - கஎஉ] வாளாயுதத்தை வலக்கையிலும் (வீரர்களின்) பசிய தலைகளை இடக்கையிலும் கொண்டு தேவியிடம் வருவா ரென்பதாம். இம் மாதர்கள் தேவியின் பரிவார மகளிராம். இவர்கள் எழுவரெனவும் ஒன்பதின்மரெனவும் பன்னிருவரெனவுங் கூறப்படுவார். தேவியைச் சூழ்ந்திருக்கும் யோகினி கணத்தார் ௬௪ கோடி என்பர். இடையென்னுஞ் சொல் வெவ்வேறு பொருளில் வந்தமையால், இது சொற்பின் வருநிலையணியாம். (சப்தாவ்ருத்தி தீபகாலங்காரம்).

பா - பே :—* உடையொழிந்திடை. (௨௦)

பேய்களின் கண் சுழலல்

கக௭. வீங்குதலை †நெடுங்கழையின் மிசைதோறுந்
திசைதோறும் விழித்து நின்று
தூங்குதலை சிரிப்பனகண் டுறங்குதலை
மறந்திருக்குஞ் சுழல்கட் சூர்ப்பேய்.

ப-ரை :—வீங்கு நெடு கழையின் - பருத்த நீளமாகிய மூங்கில்களின், தலைமிசை தோறும் - நுனிகளிலெல்லாம், தூங்கு தலை - தொங்குகின்ற (வீரர்களின்) தலைகள், திசை தோறும் - ஒவ்வொரு திசையிலும், விழித்து நின்று - கண் இமையாமலிருந்து, சிரிப்பன கண்டு - சிரிப்பவற்றைப் பார்த்து, சுழல் கண் - சுழல்கின்ற கண்களையுடைய, சூர் பேய் - (கண்டோர்க்கு) அச்சத்தை யுண்டாக்கும் பேய்கள், உறங்குதலை - (பொழுது விடியுமளவும் தாம்) தூங்குதலை, மறந்து இருக்கும் - ஒழித்திருக்கும்.

வி - ரை :—மூங்கிலின் நுனியில் தொங்குகின்ற வீரர்களின் தலைகளைக் கண்டு, பேய்கள் பயந்து உறங்காமலிருந்த மென்பதாம். மூங்கிலுள்ள தலைகள் பலிக் கடன் செலுத்துவோரால் அறுத்துத் தொங்கவிடப்பட்டவை யென்க. 'உலையா வுள்ளமோ டுயிர்க்கட னிறுத்தோர், தலைதூங்கு நெடுமரம்' [மணிமே-௬-௫௦-௰௧] என்றார் பிறரும். இவ்வடியின் குறிப்புரையில், இவர்களை 'மயான வாசினியது மந்திர சாதகரான பைரவ வேஷதாரிகளென்றுங் காபாலிக மதத்தின ரென்றுங் கூறுவர்' என வரைந்திருத்தலைக் கவனிக்க. யாவருக்கும் அச்சத்தை விளைக்கும் பேய்களும் அத்தலைகளின் அருகிற் செல்ல வஞ்சித் துயிலொழிந் திருந்தமையின், அவைகளின் எளிய நிலைமையைக் கண்டு அத்தலைகள் சிரித்தன வென்க; அவை தங்கள் வெகுளி தோன்ற நகைத்தன வெனினுமாம். பேயின் கண்கள் சுழற்சியுடையன வென்பதை 'சுழல்கட் பேய்' [புறப்-வெ. மா-௧௪௪] என்வும், 'சுழலு மழல்விழிக் கொள்ளிவாய்ப் பேய்' [திருவால-மூத்த-௭] எனவும், 'துள்ளிய சுழலுகட் பேய்க டோள்புடைத் தார்ப்ப' [கம்பரா-அட்ச குமாரன்-௪௭] எனவும் வருமாற்றானறிக. பா - பே :—† நெடுங் கழியின். (௨௧)

பலியிட்ட தலை யியல்பு

கக௮. அரிந்ததலை யுடனமர்ந்த யாடுகழை
அலைகுருதிப் புனலின் மூழ்கி
இருந்தவுடல் கொளக்கால னிடுகின்ற
நெடுந்தூண்டி லென்னத் தோன்றும்.

ப - ரை :—அரிந்த தலை உடன் - (பலிக்கடன் செலுத்துவோரால்) அறுக்கப்பட்ட தலைகளோடு, அமர்ந்து - பொருந்தி, ஆடு கழை - (இரத்த வெள்ளத்தில் காற்றால்) அசையும் மூங்கில்களானவை, அலை குருதி புனலின் - அலையும் இரத்தமாகிய நீரில், மூழ்கி இருந்த - மூழ்கிக் கிடந்த,

உடல் கொள - உடல்களைக் கவர்ந்து கொள்ள, காலன், இடுகின்ற - யமனவன் போட்டிருக்கின்ற, நெடும் தூண்டில் என்ன தோன்றும் - பெரிய தூண்டிலைப் போலத் தோன்றும்.

வி - ரை:—வீரர்களின் தலைகளையுடைய மூங்கில்கள் சில, பாரத்தால் வளைந்து இரத்தப் பெருக்கில் மூழ்கியிருத்தல், யமன் இறந்துபட்ட வீரர்களின் உடல்களைக் கவர்தற்குப் போட்ட தூண்டிலைப் போல் தோன்று மென்பதாம். மூங்கில்களைத் தூண்டிலெனவே, அவற்றிலுள்ள தலைகளைத் தூண்டிலிலிட்ட உணவாகவும், வீரர்களின் நீண்ட வுடலை மீனாகவும், குருதிப் புனலை நதியாகவும், யமனைத் தூண்டிற்காரனாகவுங் கொள்க. 'கழைக்கோல், குரங்கின் வன்பறழ் பாய்ந்தென விலஞ்சி, மீனெறி தூண்டிலி னிவக்கு நாடன்' [ஐங்கு - உ௭அ] என மூங்கிலைத் தூண்டிலுக் குவமையாகப் பிறருங் கூறி யிருத்தலைக் காண்க. ஆடு கழை, அலை குருதி—வினைத் தொகைகள். (௨௨)

கொள்ளிவாய்ப்பேய் தன்மை

௧௧௯. கொல்வா யோரி முழவாகக்
கொள்ளி வாய்ப்பேய் குழவிக்கு
நல்வாய்ச் செய்ய தசைதேடி
நரிவாய்த் தசையைப் பறிக்குமால்.

ப - ரை:—கொள்ளி வாய் பேய் - கொள்ளி வாய்ப் பேய்களானவை, கொல் வாய் - (உயிர்களை) கொல்லும் வாயையுடைய, ஓரி - கிழ நரிகளின் ஒலி, முழவு ஆக - பறை யோசையாக, குழவிக்கு - (தமது) குட்டிகளினுடைய, வாய் - வாய்க்கு, நல் செய்ய தசை தேடி - இனிமையாகிய சிவந்த இறைச்சியைத் தேடித் திரிந்து, நரி வாய் தசையை - நரிகளின் வாயிலுள்ள இறைச்சியை, பறிக்கும் - பிடுங்கிக் கொள்ளும்.

வி - ரை:—கொள்ளிவாய்ப் பேய்கள் [தா - க௦௪] தம்முடைய குழந்தைகளுக்கு உணவை நாடி நரிகளின் வாயிலுள்ள இனிய தசையைப் பறித்துச் செல்லுமென்பதாம். தேவி வாழுஞ்சுடலையில் நரிகளின் ஒலி மிக்கிருந்த தென்பார், 'ஓரி முழவாக' என்றார். 'கொல்வா யோரி முழவாக' என்றதற் கேற்ப, 'வெவ்வா யோரி முழவாக' [சீவகசி-௩௦௧] எனக் கூறியுள்ளமை காண்க. ஓரி, முழவு—ஆகு பெயர்கள். (௨௩)

தேவியின் கோயிலைச் சூழ்ந்துள்ள சுடலை

௧௨௦. நிணமுந் தசையும் பருந்திசிப்ப
நெருப்பும் பருத்தி யும்பொன்று
பிணமும் பேயுஞ் சுடுகாடும்
பிணங்கு †நரியு முடைத்ததரோ.

ப - ரை:—நிணமும் - கொழுப்பையும், தசையும் - மாமிசத்தையும், பருந்து இசிப்ப - பருந்துகள் (கொத்தி) இழுக்கும்படி, பொன்று பிணமும் - இறந்த பிணங்களையும், நெருப்பும் - (பிணங்களைச் சுடும்) நெருப்பையும், பருத்தியும் - செம்பருத்திச் செடிகளையும், பேயும் - பேய்களையும், சுடு காடும் - சுடுகாட்டையும், பிணங்கு நரியும் - (ஒன்றோடொன்று) சண்டையிடும் நரிகளையும், உடைத்து - (அக்கோயில் தன்னைச் சுற்றும்) உடையது.

வி - ரை:—பிணங்களைப் பிடுங்கித் தின்னும் பருந்துகள், பேய்கள் முதலியன. அக்கோயில் சுற்றுமிருந்தன வென்பதாம். சுடலையானது பாலைநிலத்தின்

ஒரு பகுதி யாதலால், அதனையும் இங்குச் சேர்த்துக் கூறினர். நரிகள் சண்டையிடுதல் சுடலையிலுள்ள பிணங்களைத் தாந்தாங் கவர வேண்டுமென்னும் ஆசையின் மிகுதியாலென்க. சுடலையில் நரியுங்கழுகு மிக்கிருத்தலை 'அலத்தக மூட்டிய வடி நரி வாய்க்கொண்டு' எனவும், 'காய்ந்தபசி எருவை கவர்ந்தூணுதையும்' [மணிமே-௬-௧௧0-௧௧௧] எனவும், 'புலால்வெண் டலையைப் புறமே நரி கௌவ' எனவும், 'கழுதும் பேயுமா யிடுவெண் டலையும்' [காரைக்-மூத்ததிருப்-௩-௬] எனவும் வருமாற்றானறிக. உம்மைகள் எண்ணின்கண் வந்தன. அரோ—ஈற்றசை. இவ்விரு செய்யுட்களும் தேவியின் கோயிலைச் சூழ்ந்துள்ள சுடலையைக் குறித்தனவாம். பா-பே:—† நெறியும். (௨௪)

கோயில் பாடியது முற்றிற்று.

---

# ரு. தேவியைப் பாடியது

**தேவியைப் பாடியது**—(பாலை நிலத்தில் முற்கூறிய கோயிலில் வீற்றிருக்கும்) காளி தேவியைச் சிறப்பித்துப் பாடிய பாடல்களின் பகுதி யென்பது இதன் பொருளாம். இதில் அந்தத் தேவியின் அவயவங்களை அழகுபெற வருணித் துள்ளமை காண்க.

**காளிதேவியின் வடிவழகு**

௧௨௧. உவையுவை யுளவென் றெண்ணி
 உரைப்ப தெனுரைக்க வந்த
அவையவை மகிழ்ந்த மோடி
 அவயவம் விளம்பல் செய்வாம்,

ப-ரை:—உவை உவை-உவ்வுப் பொருள்கள், உள என்று எண்ணி-(தேவிக்கு வேறாய்) இருக்கின்றன வென்று நினைத்து, உரைப்பது என்-சொல்வதால் யாது பயன், உரைக்க வந்த-சொல்லத் தகுந்த, அவை அவை-அந்தந்தப் பொருள்களை (எல்லாம்), மகிழ்ந்த-(தனக்குள் அடக்கி) மகிழ்ச்சி கொண்ட, மோடி-காளி தேவியின், அவயவம்-உறுப்புக்களின் அழகை, விளம்பல் செய்வாம்-சொல்வோம்.

வி-ரை:—எல்லாப் பொருள்களையும் தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கும் காளி தேவியின் அவயவங்களின் அழகைச் சொல்லுவோம் என்பதாம். உவை-நடுவிடத்திலுள்ள பொருள்கள்; உவை யுவை யென நடுவிலுள்ள பொருள்களையும், அவையுவை யெனத் தூரத்திலுள்ள பொருள்களையும் கூறினமையால், அருகிலுள்ள பொருள்களாகிய இவையும் அவ்வம்மைக்குள் அடங்குமென்க; உள—பலவின் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. (௧)

**தேவியின் சிலம்பு**

௧௨௨. ஒருமலை †மத்துவலத் துலவுக யிற்றினுமற்
 றுலகுப ரித்தபணத் துரகவ டத்தினுமப்
பருமணி முத்துநிரைத் துடுமணி தைத்தவிணைப்
 பரிபுரம் வைத்ததளிர்ப் பதயுக ளத்தினளே.

ப - ரை :—மத்து ஒரு மலை - (தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைய அமைத்துக் கொண்ட) மத்தாகிய ஒப்பற்ற மந்தரமலையை, வலத்து - (தன்) வலிமையால், உலவு - சுழற்றிய, கயிற்றினும் - (வாசுகியாகிய) கடை கயிற்றினும், மற்று - பின்னும், உலகு பரித்த - உலகத்தைச் சுமக்கின்ற, பணைத்து உரகம் - (ஆயிரம்) படங்களையுடைய (ஆதிசேஷன் என்னும்) பாம்பாகிய, அ வடத்தினும் - அந்தக் கயிற்றினும், பரு மணி முத்து நிரைத்து - பெரிய பரற் கற்களாகிய முத்துக்களை வரிசையா யமைத்து, உடு மணி தைத்த - நட்சத்திரங்களாகிய இரத்தினங்களைப் பதித்த, இணை பரிபுரம் வைத்த - இரண்டு சிலம்புகளை யணிந்த, தளிர் உகளம் பதத்தினள் - இளந்தளிர் போன்ற இரண்டு பாதங்களை யுடையவளும்,

வி - ரை :—காளி தேவியானவள் வாசுகி, ஆதிசேஷ னென்னும் இரண்டு பாம்புகளாகிய கயிறுகளில் முத்துக்களாகிய பரற் கற்களை நிரப்பி நக்ஷத்திரங்களாகிய இரத்தினங்களைப் பதித்த இரண்டு சிலம்புகளைத் தன் பாதங்களில் அணிந்தவ ளென்பதாம். தேவர்கள் மந்தர மலையை மத்தாகவும் வாசுகியைக் கடைகயிறாகவுங் கொண்டு திருப்பாற் கடலைக் கடைந்தமையை, 'வரை யொன்று நிறுவி யரவொன்று பிணித்து, கடறட வாக மிடலொடும் வாங்கி, திண்டோ ளாண்ட தண்டா வமரர்க்கு' [கோயில் நான் - ௪௨] என்றதனாலறிக. தளிர்ப் பதம் - உவமைத் தொகை; உகளத்தினள்—இதிலுள்ள விகுதி பிரித்துப் பதம் என்பதனோடு கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. ஏகாரம்—ஈற்றசை. ஒரு மலை மத்து-உரக வடம்-பருமணி முத்து-உடு மணி—உருவக வணிகள்; தளிர்ப் பதம்—உவமையணி. பா - பே :—† மத்து வலித்து.

தேவர்கள் திருப்பாற் கடலைக் கடைந்த வரலாறு :—முன்னொரு காலத்தில் துருவாச முனிவர் சாபத்தின்படி இந்திரனுடைய செல்வ மனைத்தும் திருப்பாற் கடலில் புக்கு மறைந்தன. அதனால், இந்திரன் பெருந்துன்பமெய்தினன். பின்பு தேவர்கள் திருமாலை வேண்டினர். உடனே திருமாலானவர் மந்திர மலையை மத்தாகவும் வாசுகியை நாணாகவுங் கொண்டு திருப்பாற்கடலைக் கடையுமாறு தேவர்கட்குப் பணித்தனர். அவர்கள் அவ்வாறே கடையுங்கால், வாசுகி யென்னும் பாம்பு வலி பொறுக்க மாட்டாமல் விஷம் கக்கத் தொடங்கினது. உடனே சிவபெருமானார் தேவர்களைக் காக்கக் கருதி அக்கொடிய விஷத்தை யுட்கொண்டனர். அப்போது அவ்விஷம் அவர் கழுத்தில் தங்கினது. அதனால் அவர் கழுத்துக் கருநிற மடைந்தது. அதன் பின்பு தேவேந்திரன் முன்பு தான் இழந்த பொருள்களைப் பெற்றதன்றி அமுதமும் பெற்று இன்புற்றன னென்பதாம். (௨)

**தேவியின் திலகம்**

௧௨௩ அருமறை யொத்தகுலத் தருணெறி யொத்தகுணத்
தபயனு தித்தகுலத் துபயகு லத்துமுதல்
திருமதி யொக்குமெனத் தினகர னொக்குமெனத்
†திகழ்வத னத்தினிடைத் திலகவ னப்பினளே.

ப - ரை :—அரு மறை ஒத்த - சிறந்த வேதங்களைப் போன்ற, குலத்து - உயர் குடிப் பிறப்பையும், அருள் நெறி ஒத்த - அருளையும் நீதியையும் போன்ற, குணத்து - குணங்களையுமுடைய, அபயன் உதித்த - (முதற் குலோத்துங்க) சோழன் பிறந்த, குலத்து - சிறந்தனவாகிய உபயம் குலத்து - இருவகைக் குலங்களில், முதல் - முதலாகிய, திரு மதி ஒக்கும் - அமகிய சந்திரனுக்கு ஒப்பாகும், என (திகழ்) - என்று

சொல்லும்படி விளங்குகின்ற, வதனத்தின் இடை - முகத்தில், தினகரன் ஒக்கும் - இளஞ் சூரியனுக்கு ஒப்பாகும், என திகழ் - என்று சொல்லும் படி விளங்கும், திலகம் - சிந்தூரத்தை யணிந்த, வனப்பினள் - அழகை யுடையவளும்,

வி - ரை:—முதற் குலோத்துங்கன் தந்தையின் குலமாகிய சந்திரனைப் போன்ற நெற்றியில், அவன் தாயின் குலமாகிய சூரியனைப்போன்ற சிந்தூரப் பொட்டை யணிந்தவள் காளிதேவி யென்பதாம். 'உபயகுலம்' என்றது சூரிய சந்திர குலங்களையாம். [தா - உ, கஉ] முதற் குலோத்துங்கன் தந்தை சந்திர குலத்தின னாகையால், 'உபய குலத்து முதல்' எனச் சந்திரனைச் சிறப்பித்துக் கூறினர். அம்மன்னவன் குலத்தின் வரலாற்றை உக-ச-ம் தாழிசை யுரையிற் காண்க. வட்டவடிவமும் செந்நிறமும் பற்றி இளஞ்சூரியன் சிந்தூரத்திற்குவமை. அருணெறி—உம்மைத் தொகை. இதில் நிரனிறைப் பொருள் கோளும், உவமை யணியு முள்ளவா றறிக. பா - பே:—† திருவதனம். (ங)

தேவியின் நடனம்

கஉச. அரவொடு திக்கயமப் பொழுதுப ரித்தவிடத்
தடியிட வுட்குழிவுற் றசைவுறு மப்பொழுதில்
தரணித ரித்ததெனப் பரணிப ரித்தபுகழ்ச்
சயதர னைப்பரவிச் சதிகொண டத்தினளே.

ப - ரை:—அரவொடு திக்கு கயம் - ஆதிசேடனும் (எட்டு) திசை யானைகளும், பரித்த - தாங்கிய, அ பொழுது - அக்காலத்தில், இடத்து - பூமியில், அடி இட - (காளிதேவி தன்) பாதங்களை (பேர்த்து) வைக்க, உள் குழிவு உற்று - (பூமி) உள்ளே குழிந்து, அசைவு அறும் அ பொழுதில் - அசையத் தொடங்கிய அச்சமயத்தில், தரணி தரித்தது என - (முதற் குலோத்துங்கன் தோன்றி) பூமியைத் தாங்கினாற் போல, பரணி பரித்த புகழ் - பரணியையும் தாங்கிய புகழையுடைய, சயதரனை பரவி - முதற்குலோத்துங்க சோழனைப் புகழ்ந்து, சதி கொள் - தாளவொற்றைக் கொண்ட, நடத்தினள் - நடனத்தைப் புரிபவளும்,

வி - ரை:—ஆதிசேஷனும் எட்டுத் திசையானைகளும், தாங்க முடியாத பூமியை முதற் குலோத்துங்கன் தோன்றி எளிதில் தாங்கின னென்பதாம். [தா - ருஉஅ - ருசக] தேவி அடியிடப் பூமி குழிந்தமை, அவ்வம்மையின் பாதப் பொறையைத் தாங்கு மாற்றல் ஆதிசேஷனுக்கும் திசையானைகளுக்கும் இன் மையா லென்க. அவைகளால் தாங்க முடியாத பாரத்தை முதற் குலோத்துங் கன் எளிதில் தாங்கினமையால், தேவி அவனாற்றலைப் புகழ்ந்தன ளென்பதாம். திக்கயம்—[தா-க0, கூச]. பரணி—ஒரு வகைப் பிரபந்தம்; இதனிலக்கணத்தை இந்நூலின் முகவுரையில் பரணியி னிலக்கணம் என்னும் தலைப்பின் கீழ்க் காண்க. அரவொடு—ஒடு எண்ணுப் பொருளது; என—உவம உருபிடைச் சொல். இதில் உயர்வு நவிற்சியணியும், உவமையணியும் உள்ளமை காண்க. (ச)

தேவியின் கொங்கைகள்

கஉரு. தணிதவ ளப்பிறையைச் சடைமிசை வைத்தவிடைத்
தலைவர்வ னத்தினிடைத் தனிநுகர் தற்குநினைத்
தணிதவ ளப்பொடியிட் டடையவி லச்சினையிட்
டமுதமி ருத்தியசெப் பனையத னத்தினளே.

ப - ரை :—தணி-(உலகத்தின் வெம்மையை) தணிக்கின்ற, தவளம் பிறையை - வெண்மையாகிய பிறைச் சந்திரனை, சடை மிசை வைத்த - (தமது) சடையிலணிந்த, விடை தலைவர் - எருதை (வாகனமாகக் கொண்டு) செலுத்தும் தலைவராகிய சிவபெருமானார், வனத்தின் இடை - சுடலையில், தனி நுகர்தற்கு நினைத்து - தனிமையாய் அநுபவித்தற்கு எண்ணி, அணி தவளம் பொடி-அழகிய வெண்ணீற்றை, அடைய இட்டு-முழுவதும் பூசி, இலச்சினை இட்டு - முத்திரை யமைத்து, அமுதம் இருத்திய - அமுதத்தை (நிரப்பி) வைத்த, செப்பு அனைய - செப்புக் கிண்ணம் போன்ற, தனத்தினள் - கொங்கைகளை யுடையவளும்,

வி - ரை :—சிவபெருமான் சுடலையில் தனியாயிருந்து நுகர்தற்பொருட்டு அமைத்த செப்புக் கிண்ணம் போன்ற இரண்டு கொங்கைகளையுடையவர் அவ்வம்மையார் என்பதாம். பொருளைச் சேமித்து வைப்போர் அதற்கு முத்திரை இட்டுப் பாதுகாத்தல் போல், அவ்வம்மையாரும் தம் கொங்கைகளைச் சிவபெருமானுக் கென்றே பாதுகாப்பவ ரென்பார், 'இலச்சினை இட்டு' என்றார். அவ்வம்மையார் தமது தனங்களில் வெண்ணீற்றை மிகுதியாகப் பூசியிருத்தல் செப்புக் கிண்ணத்தில் பால் நிரப்பி வைத்தாற் போலுள்ள தென்பதாம். செப்புக் கிண்ணம் தனங்களுக்கும் பால் வெண்ணீற்றுக்கு முவமை. செப்புக் கிண்ணந் தனங்களுக்கு உவமை யாதலை, 'முலையும், சூழிமென்முகஞ் செப்பிட னெதிரின' [அகநா-௩உ௫-க-உ] எனவும், 'செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறுமருங்குல்' [திவ்ய-திருப்பாவை-௨0] எனவும், 'செப்போ தனஞ்செழுந் துப்போசெவ் வாய்' [அழகர - ௨0] எனவும், 'செப்பிளங் கொங்கைமீர்' [நளவெ - சுயம்வர - க0ச] எனவும், வருமாற்றானறிக. விடைத் தலைவர்—இரண்டனுருபும் பயனு முடன்தொக்க தொகை. இத்தாழிசையி னீற்றில் உவமையணி யுள்ளமை யுணர்க. (ரு)

தேவியின் துகிலும் கச்சும்

கஉசு. பரிவக லத்தழுவிப் புணர்கல விக்குருகிப்
படர்சடை முக்கணுடைப் பரமர்கொ டுத்தகளிற்
றுரிமிசை யக்கரியிற் குடரொடு கட்செவியிட்
டொருபுரி யிட்டிறுகப் புனையுமு டுக்கையளே.

ப - ரை :—படர் சடை - பரவிய சடையையும், முக்கண் உடை - மூன்று கண்களையுமுடைய, பரமர் - சிவபெருமானார், பரிவு அகல - (தமது காம நோயாகிய) துன்பம் நீங்கும்படி, தழுவி - (தம்மை) அணைத்து, புணர் கலவிக்கு - (அவ்வம்மையார்) புணர்ந்த கலவி யின்பத்துக்கு, உருகி - மனமிளகி, கொடுத்த - (அவ்வம்மையாருக்கு) கொடுத்த, களிறு உரி மிசை - யானைத் தோலாகிய ஆடையின் மேல், அ கரியின் குடரொடு - அந்த யானையின் குடலோடு, கட்செவி இட்டு - பாம்பைச் சேர்த்து, ஒரு புரி இட்டு - ஒரு புரியாக முறுக்கி, இறுக புனையும் - அழுந்த அணியும், உடுக்கையள் - இடைக் கச்சை யுடையவளும்,

வி - ரை :—காளிதேவி யானைத் தோலைப் புனைந்து, அதன் குடலோடு பாம்பைச் சேர்த்து முறுக்கிக் கச்சாக அணிந்தவ ளென்பதாம். 'ஆனைத்தோல் போர்த்து,' [சிலப் - கஉ] எனவும், 'வேங்கரி யுரித்திடை புனைந்தவள்' [அரிச்-விவாக-ககஉ] எனவும்; ஆன்றோர் கூறியுள்ளமை காண்க. குடல்—குடர், மொழியிறுதிப் போலி. (சு)

**தேவியின் மக்கள்**

கஉஎ. கலைவள ருத்தமனைக் கருமுகி லொப்பவனைக்
கரடத டக்கடவுட் கனகநி றத்தவனைச்
சிலைவளை வுற்றவுணத் தொகைகெக விட்டபரித்
திறலவ னைத்தருமத் திருவுத ரத்தினளே.

ப - ரை :—கலை வளர் உத்தமனை - (நான்கு வேதங்களையும் கற்ற) கல்வியால் மேன்மை யடைந்த பிரமனையும், கரு முகில் ஒப்பவனை - கரிய மேகத்திற்கு ஒப்பாகிய நிறமுடைய இந்திரனையும், தட கரடம் கடவுள் - பெரிய மதச்சுவட்டையுடைய கடவுளாகிய, கனகம் நிறத்தவனை - பொன் போன்ற நிறமுடைய விநாயகரையும், சிலை வளைவுற்று - வில்லை வளைத்து, அவுணர் தொகை - அரக்கர்களின் கூட்டம், கெக விட்ட - அழியும்படி (கணைகளை) தொடுத்த, பரி திறலவனை - மிக்க பராக்கிரம முடையவராகிய முருகக்கடவுளையும், தரும் அ திரு உதரத்தினள் - பெற்ற அத்தகைய அழகிய வயிற்றை யுடையவளும்,

வி - ரை :—தேவியானவள் பிரமன், இந்திரன், விநாயகர், முருகர் என்னும் நால்வரையும் பெற்ற வயிற்றை யுடையவ ளென்பதாம். இந்திரன் கருநிற முடையவ னென்பதை, 'பொருங்குலிசப் படைகமஞ்சூல் முகிலினிடை விளங்கு முன்னிற் பொலிவு காட்ட' [நைட - இந்திரப் - க0] எனவும், 'வில்லா லொளிர் மேகமெனப் பொலிவான்' [கம்பரா - சரபங்கர் - கக] எனவும் வருவனவற்றா லறிக. கருமுகி லொப்பவன்-திருமாலெனினுமாம். விநாயகர் யானைமுக முடையவ ராதலால், 'கரடதடக் கடவுள்' என்றார். பரி—மிகுதி; இதனை, 'பக்க நீங்குமின் பரிபுலம் பினர்' [சிலப் - க0 - உஉசு] எனவும், 'பரிபுலம் பினனிவன்' [மணிமே- கசு - ருஎ] எனவும் வருமாற்றா னுணர்க. பரி - தனிமை யெனினுமாம். 'பரிபுலம் பலைத்த நும் வருத்தம் வீட' [மலைபடு - சகூஎ] என்பதிற் காண்க. கலைவளர்— மூன்றன்தொகை; அவுணர் தொகை—அவுணத்தொகை; நிலைமொழியின் ஈற்று மெய் கெட்டு வலி மிக்கது. [நன் - கருகூ] (எ)

**தேவியின் உத்தரியம்**

கஉஅ கவளம தக்கரடக் கரியுரி வைக்கயிலைக்
களிறுவி ருப்புறுமக் கனகமு லைத்தரளத்
தவளவ டத்திடையிற் பவளமொ டொத்தெரியத்
தழலுமி ழுத்தரியத் தனியுர கத்தினளே.

ப - ரை :—கவளம் - கவளத்தை யுட்கொள்ளுதலையும், மதம் கரடம்- மதத்தைப் பொழியும் சுவடுகளையுமுடைய, கரி உரிவை - யானைத் தோலை யணிந்த, கயிலை களிறு - கயிலாய மலையில் வீற்றிருக்கும் யானை போன்றவராகிய சிவபெருமானார், விருப்பு உறும் - விரும்புதல் பொருந்தும், கனகம் - பொன்னுபரணங்களை யணிந்த, அ முலை - அழகிய கொங்கைகளில், தவளம் தரளம் வடத்து இடையில் - வெண்மையாகிய முத்து மாலைகளின் நடுவில், பவளம் ஒடு - பவள மாலைகளும், ஒத்து எரிய - ஒன்றாய் (ஒளி வீசி) விளங்க, தழல் உமிழ் - நெருப்புப் போன்ற (கொடிய) விஷத்தைச் சொரியும், உத்தரியம் - மேலாடையாகிய, தனி உரகத்தினள் - ஒப்பற்ற பாம்பை யணிந்தவளும்,

வி-ரை:—தேவி பொன்னணிகளும், முத்து மாலைகளும், பவள மாலைகளும், பாம்பாகிய உத்தரீயமும் அணிந்தவ ளென்பதாம். சிவபெருமானைக் 'கயிலைக் களிறு' என்றதற் கேற்பத் தேவியைப் பிடியாகக் கொள்க. 'பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிறு' [பெரியபு-அப்பூதி - ச] எனவும், 'பின்றாழ் நறுங்கூந்தல் பிடிதழீஇ மால்யானை, கன்றீனு முக்கட் களிறு' [சிதம்ப - செய்-கூஉ] எனவும் வருமாறு காண்க. கயிலைக் களிறு—அடையடுத்த உவமை யாகு பெயர். கனகம்—முதலாகு பெயர்; அ—அழகு; 'அலந்திலையு மவ்வளைத் தோளி' [புறப்-வெ-மா-உழிஞ] என ஆன்றோர் கூறினமை காண்க. அகரத்தைச் சுட்டாகக் கொள்ளினுமாம். (அ)

**தேவியின் கைகள் கறுத்தமை**

கஉகூ. அரியுமி டற்றலையிட் டலைகுரு திக்கெதிர்வைத்
தறவும டுத்தசிவப் பதனைமு ழுத்திசையிற்
கரிகர டத்தொளையிற் கலுழியி டைக்கழுவிக்
கருமைப டைத்தசுடர்க் கரகம லத்தினளே.

ப - ரை:—அரியும் மிடறு - (வீரர்கள் தேவிக்குப் பலியாக) அறுக்கும் கழுத்திலிருந்து (பெருகி), அலை இட்டு - அலைகளை வீசி, அலை குருதிக்கு - ததும்பும் இரத்தத்தில், எதிர்வைத்து - (தேவி தன் கையை) செவ்வையாக வைத்து, அறவும் மடுத்த - முற்றும் அள்ளிக் குடித்த, சிவப்பு அதனை - செந்நிறத்தை, முழு திசையின் கரி - எட்டுத் திசை யானைகளின், கரடம் தொளையின் - மதச் சுவடுகளின் தொளைகளிலிருந்து பாயும், கலுழி இடை - (மத நீராகிய) வெள்ளத்தில், கழுவி - கழுவுத லால், கருமை படைத்த - கருமை நிறமடைந்த, சுடர் - ஒளி வீசுகின்ற, கரம் கமலத்தினள் - கைகளாகிய தாமரை மலர்களை யுடையவளும்,

வி - ரை:—தேவி வீரர்களின் உதிரத்தை யள்ளிக் குடித்துச் சிவந்த தன் கைகளைத் திசையானைகளின் மத நீரிற் கழுவ, அவை கருமை நிறமடைந்தன வென்க. இதனால் யானை மதம் கருநிறமுடையதெனத் தெரிகிறது. [தா-சகரு] முழுமை—எல்லாம், முழுத் திசை—எல்லாத் திசைகளும்; எனவே எட்டுத் திசைகளாம். எட்டுத் திசை யானைகளை கo - ம் தாழிசையிற் காண்க. வீரர்கள் தங்கள் கழுத்து முதலிய உறுப்புகளைத் தாமே யரிதலை, 'என்னுறுப்பை யானே யறுத்திட் டிழிகுருதி, முன்னியற்ற வல்லேன் முகில்வண்ண' [பாரதவெ-சசஅ] எனப் பெருந்தேவனார் கூறியதனாலு மறிக. [தா - கoகூ - கககூ] (கூ)

**தேவியின் திருவதாரம்**

கஙo. சிமையவ ரைக்கனகத் திரளுரு கப்பரவைத்
திரைசுவ றிப்புகையத் திசைசுடு மப்பொழுதத்
திமையவ ரைத்தகைதற் கிருளுமி டற்றிறைவற்
கினியத ரத்தமுதக் கனியத ரத்தினளே.

ப - ரை:—சிமையம் கனகம் வரை - உச்சியையுடைய மேரு மலையும், திரள் உருக - (மற்றுமுள்ள மலைகளின்) கூட்டங்களும் உருகவும், திரை பரவை - அலைகளை வீசும் கடல் நீர், சுவறி புகைய - வற்றிப் புகை யெழவும், திசை சுடும் - (எட்டு) திசைகளிலுமுள்ள உயிர்களைச் சுட்டு வருத்தும், அ பொழுது - (ஆலகால விஷம் தோன்றிய) அக்

காலத்தில், இமையவரை - தேவர்களை, தகைதற்கு - (அந்தத் துன்பத்தி லிருந்து) காப்பதற்கு, இருளும் மிடறு இறைவற்கு - (அந்த நஞ்சை உண்டதனால்) கரிய கழுத்தையுடைய சிவபெருமானுக்கு, அமுதம் இனிய தரத்து - அமுதம் போல் இனிய தன்மையையுடைய, கனி அதரத்தினள் - கோவைப்பழம் போன்ற (சிவந்த தனது) அதரபானத்தைத் தருபவளும்,

வி - ரை :—சிவபெருமான் நஞ்சுண்ட கொடுமையைத் தேவி தனது அதர பானமாகிய அமுதத்தால் தணிப்பவளென்பதாம். தேவர்களைக் காக்கவேண்டிச் சிவபெருமானார் நஞ்சையுட்கொள்ள அதனால் அவர் கண்டங் கறுத்தமையை, 'விடமும்வந் தீசன்கோல மிடற்றினில் நீலவண்ண, வடிவு பெற்றணிய தாகி வயங்கிற்றுப் பெரிதும்' [ஆரியப் - பாக - கடல்கடைந் - உச] என்றதனாலறிக. சிமயம் — இமையம், மொழியிடைப் போலி; அப்பொழு தத்து — அத்துச் சாரியை; திசை—இடவாகு பெயர். சிவபெருமான் நஞ்சுண்ட வரலாற்றை கஉஉ-ம் தாழிசையிற் காண்க. (கo)

### தேவியின் வதனம்

கக-க உருகு*த லூற்றுலகத் துவமைய றச்சுழல்வுற்
றுலவுவி ழிக்கடைபட் டுடல்பகை யற்றொழியத்
திருகுத லைக் †கிளவிச் சிறுகுத லைப்பவளச்
சிறுமுறு வற்றரளத் திருவத னத்தினளே.

ப - ரை :—உலகத்து - உலகத்தில், உவமை அற - (தமக்கு) ஒப் பில்லாமல், சுழல்வு உற்று - சுழன்று, உலவு - உலாவுகின்ற, விழி கடை பட்டு - (தேவியின்) கடைக் கண்களின் பார்வை படுதலால், உருகுதல் உற்று - (சிவபெருமான் மனம்) இளகவும், உடல் பகை - (அவரை) வருத்தும் (காமமாகிய) பகை, அற்று ஒழிய - முற்றும் நீங்கவும், திருகு - மாறுபட்ட, தலை - முதன்மையாகிய, சிறு குதலை கிளவி - இனிய குதலைச் சொற்களைப் பேசும், பவளம் - பவளம் போன்ற இதழ்களையும், சிறு முறுவல் - புன்னகை புரியும், தரளம் - முத்துப்போன்ற பற்களையு முடைய, திரு வதனத்தினள் - அழகிய முகத்தை யுடையவளுமாகிய,

வி - ரை :—தன் கடைக்கண் பார்வை படுதலால், சிவபெருமானுக்குண் டாதும் காமமாகிய நோயைத் தேவி தன் இனிய சொற்களால் தணிப்பவ ளென்பதாம். தெய்வ மடந்தையர் அனைவர் சொற்களினும் தேவியின் சொற் கள் இன்பம் பயப்பன வென்பார், 'திருகு தலைக்கிளவிச் சிறுகுதலை' என்றார். உருகுத லுற்று—உற்று - எச்சத்திரிபு; உடல் பகை—வினைத்தொகை; பவளம், தரளம்—உவமையாகு பெயர்கள்.

பா - பே :—* தலைத் தொடையற்கு, † குரவை. (கக)

### காதணிகளும் மாலையும்

கக-உ அண்டமுறு குலகிரிக ளவளொருகா லிருகாதிற்
கொண்டணியிற் குதம்பையுமாங் கோத்தணியின்
[மணிவடமாம்.

ப - ரை :—அவள் - அந்தத் தேவி, இரு காதில் - (தனது) இரண்டு காதுகளில், ஒரு கால் - ஒரு சமயத்தில், கொண்டு அணியின் - (எடுத்து) கொண்டு அணிய விரும்பினால், அண்டம் உறு - உலகத்தில் பொருந்திய, குலம் கிரிகள் - உயர்வாகிய (எட்டு) மலைகளும், குதம்பை ஆம் - (அவ ளுக்கு) காதணிகளாகும், கோத்து அணியின் - (அவைகளை மாலையாக)

கோத்து அணிய விரும்பினால், மணி வடமும் ஆம் - (அவைகளை மற்றொரு சமயத்தில்) இரத்தின மாலைகளு மாகும்.

வி - ரை:—தேவி எட்டுக் குலமலைகளையே காதணிகளாகவும் மாலையாகவு மணிபவ ளென்பதாம். மணி வடம்—முத்து மாலை யெனினுமாம். எட்டு மலைகளாவன:—மாலியவான், கந்தமாதனம், நிசதம், எமகூடம், இமம், நீலம், சுவேதம், சிருங்கம் என்பன. இவற்றை வேறு வகையாகவுங் கூறுப. [தா-உ0ரு] குதம்பை என்பதிலுள்ள உம்மை மணி வடம் என்பதனோடு கூட்டப்பட்டது.

(கஉஉ) உகளத்தினள் (கஉங) வனப்பினள் (கஉச) நடத்தினள் (கஉரு) தனத்தினள் (கஉசு) உடுக்கையள் (கஉஎ) உதரத்தினள் (கஉஅ) உரகத்தினள் (கஉகூ) கமலத்தினள் (கங0) அதரத்தினள் (கஙக) வதனத்தினளு மாகிய (கஙஉ) அவள் என முடிக்க. (கஉ)

### தேவியின் விளையாட்டுக் கருவிகள்

கஙங கைம்மலர்மே லம்மனையாங் கந்துகமாங் கழங்குமாம்
அம்மலைக ளவள்வேண்டி னாகாத தொன்றுண்டோ.

ப - ரை:—அ மலைகள் - அந்தக் குலமலைகள், கை மலர் மேல் - (தேவியின்) கைகளாகிய தாமரை மலர்களில், அம்மனை ஆம் - (விளையாடுதற்கு) அம்மனையாகும், கந்துகம் ஆம் - பந்தாகும், கழங்கும் ஆம் - கழற்காயும் ஆகும், அவள் வேண்டின் - அந்தத் தேவி விரும்பினால், ஆகாதது - (அவளுக்கு) ஆகாத காரியம், ஒன்று உண்டோ - ஒன்றேனும் உண்டா! (இல்லை யென்பதாம்).

வி - ரை:—தேவிக்கு அம்மலைகள் பலவகை விளையாட்டுக் கருவிகளாது மென்க. அம்மனை—மகளிர் விளையாடும் ஒருவகை விளையாட்டுக் கருவி; இக்கருவியால் ஆடும் ஆட்டத்தை அம்மானை என்ப. [தா-சகக] 'மாட்டார்மா தரை விடத்தான் மாலானு ரம்மானை' [திருவேங் - கலம் - கக] எனவும் 'ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்த பெண் ணம்மானை யாடி யருளே' [மீனாட்சி - பி - அம்மானை - க] எனவும் வருமாறு காண்க. கலம்பகம்—பெண்பால் பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களில் இதன் விரிவை யறிக. கழங்கு—மகளிர் சில கழற்காய்களை மேலே யெறிந்து அவைகளை மாறி மாறிப் பிடித்து விளையாடும் ஒரு வகை விளையாட்டாம். இதனை, 'அல்லிமலர்க் காந்தளின்மே லாடுஞ் சுரும்பினங்கள், மெல்லியர்தங் கைக்கழங்காம் வேங்கடமே' [திருவேங்-மா-சச] என்றதனாலறிக. கழங்கும்—உம்மை இறந்தது தழுவியது. ஆகாதது—வினையாலணையும் பெயர். உண்டோ—ஓகாரம் எதிர்மறை. (கங)

தேவியைப் பாடியது முற்றிற்று.



# கூ. பேய்களைப் பாடியது

**பேய்களைப் பாடியது** :—பேய்களின் தன்மையைப் பாடிய பாடல்களின் பகுதி என்பது இதன் பொருளாம். இதில் தேவியை விட்டகலாமல், அவ்வம்மைக்குக் குற்றேவல் புரியும் பேய்களின் உருவம், செயல் முதலியவற்றை நன்கறியலாம். அன்றியும், அப்பேய்களின் அழிவெய்திய உறுப்புக்களைக் கூறுவது போல், முதற்குலோத்துங்கன் வெற்றி மேம்பாட்டை ஆசிரியர் இதில் சிறப்பித்துக் கூறியுள்ளமையுங் காண்க. பேய்களின் வடிவமைப்பை இவ்வளவு விரிவாய் ஏனைய நூல்களில் காண்ட லரிதாம்.

#### தேவியின் அணுக்கப் பேய்களின் தன்மை

கஙச. எவ்வணங்கு †மடிவணங்க விப்பெருமை படைத்துடைய
அவ்வணங்கை யகலாத வலகைகளை யினிப்பகர்வாம்.

ப - ரை :—எ அணங்கும் - எல்லாத் தெய்வ மகளிரும், அடிவணங்க - (தன்) பாதங்களை வணங்கும்படி, இ பெருமை - இத்தகைய பெருமையை, படைத்துடைய - படைத்திருக்கின்ற, அ அணங்கை - அந்தக் காளிதேவியை, அகலாத - (விட்டு) நீங்காத, அலகைகளை - பேய்களின் தன்மையை, இனி பகர்வாம் - இனிச் சொல்லுவோம்.

வி - ரை :—தெய்வ மகளிர் அனைவரும் தன்னை வணங்கத் தான் ஒருவரையும் வணங்காதவ ளென்பார், 'இப்பெருமை படைத்துடைய' என்றார். அத்தகைய சிறப்பு வாய்ந்த தேவியைத் தமக்குத் தலைவியாகப் பெற்ற களிப்பின் மிகுதியால், பேய்கள் அவளை விட்டகலாமல், அவளுக்குப் பணி செய்யலாயின வென்பார், 'அகலாத வலகை' என்றார். எவ்வணங்கும்—இதிலுள்ள உம்மை முற்றுப் பொருளில் வந்தமையால், எகர வினா எஞ்சாமைப் பொருட்டாம்.

பா - பே :—† அடிவருட. (க)

#### பேய்களின் கை, கால்கள்

கஙரு. பெருநெ டும்பசி பெய்கல மாவன
பிற்றை நாளின்முன் னாளின்மெ லிவன
கருநெ டும்பனங் காடுமு ழுமையுங்
காலுங் கையுமு டையன போல்வன.

ப - ரை :—பெரு நெடும் பசி - (அப்பேய்கள்) மிகவும் பெரிய பசியை, பெய் கலம் - அடைத்து வைத்த கலத்திற்கு, ஆவன - ஒப்பாவனவும், முன் நாளின் - முந்தின நாளைக் காட்டிலும், பிற்றை நாளில் - மறு நாளில், மெலிவான - (பசியால் உடல்) இளைப்பனவும், கரு நெடும் - கரிய நீளமாகிய, பனை காடு முழுமையும் - பனைமரங்களின் காடுகள் எல்லாவற்றையும், காலும் கையும் - (தங்கள்) கால்களும் கைகளுமாக, உடையன போல்வன - உடையவற்றை ஒத்திருப்பனவும்,

வி - ரை :—'ஈரல் சுருள முளிபேய்கள்' [தக்கயா - ருஅ] என்பதனாலும், பேய்களின் பசியின் கொடுமை நன்கு விளங்கும். பேய்கள் நாளுக்கு நாள் உணவின்றி மெலிவெய்தின வென்பார், 'பிற்றை நாளின் முன்னாளின் மெலிவன' என்றார். பேய்க் கூட்டத்தின் மிகுதியைக் கருதி 'பனங்காடு முழுமையும்'

என்றார். பேய்களின் கை கால்களின் கருமையும் நீட்சியும் கருதிப் பனை மரங்கள் உவமை கூறப்பட்டன. [தா-உஉஅ] முழுமையும்—இதிலுள்ள உம்மை முற்றுப் பொருளிலும், ஏனைய விரண்டும் எண்ணுப் பொருளிலும் வந்தன. இதில் உவமையணியுள்ளமை காண்க. இதுமுதல் கசருக-ம் தாழிசையளவும் பேய்களின் உறுப்புக்களையும், அவைகளின் தன்மைகளையும் ஆசிரியர் விளக்குகின்றார். (உ)

பேய்களின் வாய்களும் முழங்கால்களும்

கருசு. வன்பி லத்தொடு வாதுசெய் வாயின
வாயி னுனிறை யாதவ யிற்றின
முன்பி ருக்கின்மு கத்தினு மேற்செல
மும்மு ழம்படு மம்முழந் தாளின.

ப - ரை :—வன் பிலத்தொடு - வலிய குகைகளோடு, வாது செய் - வழக்காடுகிற, வாயின - வாயை யுடையனவும், வாயினால் - (அத்தகைய பெரிய) வாயால், நிறையாத - (எவ்வளவு உணவு உண்ட போதினும்) நிரம்பாத, வயிற்றின - வயிற்றை யுடையனவும், இருக்கின் - (அவை) உட்கார்ந்தால், முன்பு - (தமக்கு) எதிரில், முகத்தின் மேலும் செல - முகத்திற்கு மேலும் செல்லும்படி, மும்முழம் படு - மூன்று முழங்கள் பொருந்திய, அ முழந்தாளின - அப்படிப்பட்ட முழங்கால்களை யுடையனவும்,

வி - ரை :—வன்பிலத்தோடு வாது செய்தலாவது :—குகைகள் பேய்களின் வாய்களைப் பார்த்துத் தாம் பெரியவை யென்ன, அவ்வாய்கள் அவற்றைக் காட்டினுந் தாமே பெரியவை யென்று அவற்றோடு வழக்கிடுதலாம். 'வாயினு னிறை யாதவ யிற்றின' என்றதற் கேற்ப, 'உண்டு முண்டி லாதபோ லிருப் பவே' [தக்கயா-கஉஉ] என்றார் பிறரும். 'மும்மு ழம்படு மம்முழந் தாளின' என்றதனால், அப்பேய்களின் கால்கள் மிகவும் நீண்டு விகார வடிவமாயிருந்தன வென்பது விளங்கும். முகத்தினும்—இதிலுள்ள உம்மையைப் பிரித்து மேல் என்பதனோடு கூட்டுக. (௩)

பேய்களின் மெலிந்தவுடல்

கருஎ. வெற்றெ லும்பைந ரம்பின்வ லித்துமேல்
வெந்தி லாவிற கேய்ந்தவு டம்பின
கொற்ற லம்பெறு கூழில மெங்களைக்
கொள்வ தேபணி யென்றுகு ரைப்பன.

ப - ரை :—வெறு எலும்பை - (ஊன் மெலிந்த) வெறும் எலும்புகளாகிய விறகுகளை, நரம்பின் வலித்து - நரம்புகளாகிய கயிறுகளால் பிணித்து, மேல் வெந்து இலா - மேற்புறம் வேகாத, விறகு ஏய்ந்த - விறகு சுமையைப் போன்ற, உடம்பின - உடம்பை யுடையனவும், கொற்றலம் பெறு - போர்க்களத்தில் (நாங்கள்) பெறுதற்குரிய, கூழ் இலம் - உணவைப் பெற்றிலோம், எங்களை பணி கொள்வதே - எம்மிடம் தொழில் கொள்வது தகுமோ, என்று குரைப்பன - என்று ஒலித்து முறையிடுவனவும்,

வி - ரை :—'வெற்றெலும்பை நரம்பின் வலித்து' என்றமையால், அப் பேய்கள் மிகவு மெலிந்து எலும்பும் நரம்புமாய்க் கிடந்தன வென்பதும், 'மேல் வெந்திலா விறகு' என்றதனால், அவைகளின் உள்ளிடமாகிய வயிறு பசிப்பிணியால் வெந்திருந்த தென்பதும் விளங்கும். கொற்றலம் = கொல் + தலம்; (பகைவர்களை) கொல்லு மிடம்; போர்க்கள மென்பதாம். எலும்பு, நரம்பு—

உருவகங்கள்; இவ்வாறு வருவனவற்றை மாட்டேறில்லாத உருவகம் என்பர் [மாறன - பொருளணி - உருசு]. விறகு-காரணவாகு பெயராய் விறகு சுமையை யுணர்த்தினது. இலம்—தன்மைப் பன்மை எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று; கொள்வதே-ஏகாரம் வினா, தேவியை நோக்கிப் பேய்கள் வினவுதலின்; எதிர் மறை யெனினுமாம். விறகேய்ந்த வுடம்பின—என்றது உவமை யணியாம். பா - பே :—‡ வெய்ந்தி லாவிறப் பேய்ந்த. (ஏ)

கன்னங்களும் கண்களும்

கருஅ. உள்ளொ டுங்கியி ரண்டுமொன் றாகவே
ஒட்டி யொட்டுவி டாதகொ டிற்றின
கொள்ளி கொண்*டிரண் டேமுழை யுட்புகிற்
†குன்று தோன்றுவ போலவி ழிப்பன.

ப - ரை :—இரண்டும் - இரண்டு பக்கங்களும், உள் ஒடுங்கி - உள்ளே குழிந்து, ஒன்றாக ஒட்டி - ஒன்றாக ஒட்டிக்கொண்டு, ஒட்டு விடாத - (அந்த) ஒட்டு நீங்காத, கொடிற்றின - கன்னங்களை யுடையனவும், கொள்ளி - (இரண்டு) கொள்ளிக் கட்டைகள், கொண்டு - (தமக்கு இட மாக) கொண்டு, ஏம் - (விலங்குகளுக்கு) பாதுகாப்பாகிய, இரண்டு முழை உள் - இரண்டு குகைகளில், புகின் - புகுந்தால், குன்று தோன்றுவ போல - (குகைகளையுடைய அந்த) குன்றுகள் தோன்றுவன போல, விழிப்பன - (பேய்கள் தனித்தனி) விழித்துப் பார்ப்பனவும்,

வி - ரை — பேய்களின் கண்கள் குன்றுகளின் குகைகளில் தோன்றும் கொள்ளிக் கட்டைகளைப் போல் விளங்கின வென்பதாம். குன்று பேய்களுக் கும் முழை பேய்களின் கட்குழிக்கும் கொள்ளி அவைகளின் சிவந்த விழிக்கும் உவமை. பேய்களின் வாயில் சிறிதும் ஈரமில்லை யென்பார், 'ஒட்டு விடாத கொடிற்றின' என்றார். இரண்டு என்னுஞ் சொல்லைக் கொள்ளிக்குங் கூட்டுக. 'கொள்ளி......புகின்' என்றது அருமை தோன்ற நின்றது. குகையானது புலி, சிங்கம் முதலிய தீய விலங்குகளுக் குறைவிடமாதல் கருதி 'ஏமுழை' எனப் பட்டது. இரண்டும் — எண்ணலளவை யாகு பெயர். இதிலுள்ள உம்மை முற்றுப் பொருளது. கொள்ளி—எழுவாய்; ஏமம் என்றது ஏம் எனக் கடைக் குறையாய் நின்றது. 'ஏமாரார் கோங்கேறினார்' [பழமொ-உசஎ] என்றமை காண்க. இத்தாழிசை உவமை யணியாம். பா - பே :—* இரண்டே விடை, † குன்றி தோன்றுவ. (கு)

முதுகும் உந்தியும்

கருகூ. வற்ற லாகவு லர்ந்தமு துகுகண்
மரக்க லத்தின்ம றிபுற மொப்பன
ஒற்றை வான்றொளைப் புற்றெனப் பாம்புடன்
உடும்பு முட்புக்கு றங்கிடு முந்திய.

ப - ரை :—வற்றல் ஆக - வற்றல் போல, உலர்ந்த முதுகுகள் - (உணவின்றி) காய்ந்த (அப்பேய்களின்) முதுகுகள், மரக்கலத்தின் - படகுகளின், மறி புறம் ஒப்பன - திருப்பிவைத்த (பின்) பக்கத்தை ஒப்பாக வுடையனவும், பாம்புடன் உடும்பும் - பாம்புகளும் உடும்புகளும், ஒற்றை வான் தொளை - ஒரு பெரிய தொளையையுடைய, புற்று என - புற்றென்று நினைத்து, உள் புக்கு - உள்ளே புகுந்து, உறங்கிடும் - தூங்கும், உந்திய - கொப்பூழை யுடையனவும்,

வி - ரை :—அப்பேய்களின் முதுகு அடிப்புறம் பருத்து மேற்புறங் குவிந்து விகார வடிவாயிருந்தமையால், மரக்கலத்தின் மறிபுற முவமை கூறப்பட்டது. பாம்புப் புற்றுக்குப் பல தொளைகளிருப்பினும், அப்பேய்களுக்கிருக்கு முந்தித் தொளை ஒவ்வொன்றே யாதலின், 'ஒற்றை வான்தொளைப் புற்று' என்றார். மறித்தல்—திருப்பல்; 'பைமறியாப் பார்க்கப் படும்' [நாலடி - ௬௨], எனவும், 'மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்' [மணிமே - ௬ - ௧௨௧] எனவும் வருமாறு காண்க. ஆக—உவம வுருபிடைச் சொல். இதில் எதிர்நிலை யணியும், மயக்க வணியும் இருத்தலுணர்க. (௬)

உடல்மயிரும் மூக்கும் செவியும்

௧௪௦. பாந்த ணால்வன போலுமு டன்மயிர்
பாசி பட்டப ழந்தொளை மூக்கின
ஆந்தை பாந்தியி ருப்பத்து ரிஞ்சில்புக்
கங்கு மிங்குமு லாவுசெ வியன.

ப - ரை :—உடல் மயிர் - (அப்பேய்களின்) உடம்பிலுள்ள மயிர்கள், பாந்தள் போலும் - (கரிய) பாம்புகளைப்போல், நால்வன - தொங்குவனவும், பழம் பாசி பட்ட - பழமையாகிய பாசி படிந்த, தொளை மூக்கின - தொளைகளையுடைய மூக்குகளை யுடையனவும், ஆந்தை-ஆந்தைகள், பாந்தி இருப்ப -(முன்பே) பதுங்கி இருத்தலால், துரிஞ்சில் புக்கு- துரிஞ்சில்கள் புகுந்து, அங்கும் இங்கும் - (தமக்கிட மின்மையால்) அப்புறமும் இப்புறமும், உலாவு செவியன - உலாவித் திரியும் காதுகளை யுடையனவும்,

வி - ரை :—அப் பேய்களின் உடல் முழுதும், நீண்டு தடித்த கரிய மயிர் முடிக்கொண்டிருந்தன வென்பார், 'பாந்தள் நால்வன போலும்' என்றார். 'அங்கும் இங்கும்' என்றது வலப்புற இடப்புறச் செவிகளை; ஆந்தைகள் முன்பே சென்று அப்பேய்களின் செவிகளில் குடிபுகுந் திருந்தமையால், துரிஞ்சில்கள் தமக்கிடமின்றி வலப்புறம் இடப்புறச் செவிகளில் மாறி மாறிச் சென்ற வண்ண மிருந்தன வென்பார், 'உலாவு செவியன' என்றார். துரிஞ்சில்—வௌவால் இனத்தைச் சேர்ந்த ஒருவகைப் பறவை. 'ஓதியிற் செவித்துளை திளைக்குமுத் துடுப்பவே' [தக்கயா-௧௦௩] என்றார் பிறரும். இருப்ப—காரணப் பொருளில் வந்த வினையெச்சம்: போலும்—உம்மை அசைநிலை; இதனை 'களிறு சென்று கலன கற்றவும்' [புறநா-௨௩] என்பதன் விசேட வுரையாலறிக. இச்செய்யுளின் முதலடியில் உவமையணி யுள்ளமை காண்க.

பற்களும் தாலியும் தலையும் உதடும்

௧௪௧. கொட்டு மேழியுங் கோத்தன பல்லின
கோம்பி பாம்பிடைக் கோத்தணி தாலிய
தட்டி வானத்த கர்க்குந்த லையின
தாழ்ந்து மார்பிடைத் தட்டுமு தட்டின.

ப - ரை :—கொட்டும் - மண் வெட்டி யிலைகளையும், மேழியும் - கலப்பைகளையும், கோத்த(ன்)ன - (மாறி மாறி) கோத்து வைத்தாற் போன்ற, பல்லின - பற்களையுடையனவும், பாம்பு இடை - பாம்புகளில், கோம்பி கோத்து - ஓந்திகளைக் கோத்து, அணி தாலிய - அணிந்த தாலிகளை யுடையனவும், வானை தட்டி - ஆகாயத்தை மோதி, தகர்க்கும் தலையின - பேர்த்தெறியும் தலைகளை யுடையனவும், மார்பிடை தாழ்ந்து - மார்பில் தொங்கி, தட்டும் - (ஒன்றோடொன்று) மோதும், உதட்டின - உதடுகளை யுடையனவும்,

வி - ரை :—பேய்களின் பற்களில் சில அகன்று மெலிந்திருந்தமையால், 'கொட்டு' என்றும், வேறு சில நீண்டு தடித்திருந்தமையால் 'மேழி' என்றும் உவமை கூறினர். கோம்பியைத் தாலியாகவும் பாம்பைத் தாலிச் சரடாகவுங் கூறியுள்ளமை இங்குக் கவனிக்க. அப்பேய்கள் வானளாவிய வடிவ முடையன வென்பார், 'வானைத் தகர்க்குந் தலையின' என்றார். அவைகளின் உதடுகள் மிக வும் தடித்து நீண்டு மார்பளவுந் தொங்கலாயின வென ஈற்றில் கூறியவாறும். கோத்தன—கோத்தாலன்ன என்பதன் தொகுத்தல். இச்செய்யுளில் உவமை யணியும் உயர்வு நவிற்சியணியும் உள்ளமை கவனிக்க. (அ)

பேய்களின் குழவிகள்

கசஉ. அட்ட மிட்டநெ டுங்கழை காணிலென்
அன்னை யன்னையென் றாலுங்கு ழவிய
ஒட்ட வொட்டகங் காணிலென் பிள்ளையை
ஒக்கு மொக்குமென் றொக்கலை கொள்வன.

ப - ரை :—அட்டம் இட்ட - (தமக்கு) அருகில் பொருந்திய, நெடும் கழை காணில் - நீண்ட மூங்கில்களைக் கண்டால், என் அன்னை அன்னை என்று - என் தாயே (என்) தாயே என்று, ஆலும் - ஒலிக்கும், குழவிய- குழந்தைகளை யுடையனவும், ஒட்டகம் ஒட்ட - ஒட்டகங்கள் நெருங்கி வர, காணில் - கண்டால், என் பிள்ளையை ஒக்கும் ஒக்கும் என்று - (இவை) என் குழந்தைகளை மிகவும் ஒத்திருக்கும் என்று சொல்லி, ஒக்கலை கொள்வன - (தம்முடைய) இடுப்பில் (தூக்கி) கொள்வனவும்,

வி - ரை :—பேய்கள் நீண்டு வளர்ந்து மெலிந்திருந்தமையால், அவைகளின் குழவிகள் தாய் பேய்களுக்கும் மூங்கில்களுக்குமுள்ள வேறுபாட்டை யுணரா மல், மூங்கில்களையே தமது தாய் பேய்களாகக் கருதின வென்பதும், அந்தாய் பேய்களின் குழவிகள் ஒட்டகங்களைப்போல் உயர்ந்து விகார வடிவமா யிருந் தமையால், அந்தாய் பேய்கள் தம் அன்பின் மிகுதியால், அவ்வொட்டகங்களையே தங்கள் குழவிகளாகக் கருதின வென்பதும் விளங்கும். அன்னை—அண்மை விளி; அன்னை அன்னை—என்ற அடுக்கு விரைவின் கண்ணும், ஒக்கும் ஒக்கும் என்றது மிகுதிக் கண்ணும் வந்தன. இதன் முதலடி மயக்க வணியும் இரண் டாம் அடி உவமை யணியுமாம். (௯)

பேய்களின் பசித்தழல்

கசரு. புயல ளிப்பன மேலும ளித்திடும்
பொற்க ரத்தப யன்புலி பின்செலக்
கயலொ ளித்தக டுஞ்சுரம் போலகங்
காந்து வெம்பசி யிற்புறந் தீந்தவும்.

ப - ரை :—புயல் அளிப்பன - மேகங்கள் (உயிர்களுக்கு உணவு முதலியவற்றை) கொடுப்பவற்றைக் காட்டினும், மேலும் பொன் அளித் திடும் - (இரவலர்க்கு) மிகவும் அதிகமாகப் பொன்னைக் கொடுக்கும், கரத்து - கைகளையுடைய, அபயன் புலி - (முதற்குலோத்துங்க) சோழனது புலிக் கொடியானது, பின் செல - பின்னே (துரத்தி) செல்ல, கயல் ஒளித்த - (பாண்டியருடைய) மீன் கொடி (ஓடி) ஒளித்த, கடும் சுரம் போல் - கொடிய பாலைநிலத்தைப் போல, அகம் - (அப்பேய்களின் வயிற்றின்) உட்பக்கத்தில், காந்து வெம் பசியின் - வருத்துகின்ற கொடிய பசியின் வெம்மையால், புறம் - வெளிப் பக்கம், தீந்தவும் - தீந்து கரிந் தனவுமாகிப்,

வி - ரை:—மழை உயிர்களுக்கு உணவு வழங்குதலே யன்றித் தானும் நீராயுதவுதலால் 'அளிப்பன' எனப் பன்மையாற் கூறினர். இதனை, 'துப்பார்க் குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு, துப்பாய தூஉ மழை' [திருக்கு-௧௨] என்றதனுலறிக. பாண்டியர் முதற்குலோத்துங்கனேடு போர் புரிந்து தோற் ரோடினமையை, அவர்தம் கொடிகளின் மேலேற்றி, 'புலி பின்செலக் கய லொளித்த கடுஞ் சுரம்' என்ருர். [தா-௩அக] பாண்டியர் ஒளித்த பாலைநிலம் மிகவும் வெம்மையா யிருத்தல் போல், அப்பேய்களின் வயிறு பசியின் வெம்மை யால் வெந்து, உடல் தீந்து கரிந்திருந்தன வென்பது ஈற்றடியின் கருத்தாம். பொற் கரம் என்பதற்கு அழகிய கை எனப் பொருள் கோடலுமாம். அளிப்பன— வினையாலணையும் பெயர்; புலி, கயல்—ஆகு பெயர்கள். இதில் உவமையணி யுள்ளமை காண்க. (௧0)

### தேவியை விட்டகலாமை

௧௪௪. துஞ்ச லுக்கணித் தாமென முன்னமே
சொன்ன சொன்னது றைதொறும் பேயெலாம்
அஞ்ச லித்தொரு காலக லாமலவ்
வணங்கி னுக்கரு காகவி ருக்கவே.

ப - ரை:—பேய் எலாம் - பேய்களெல்லாம், முன்னமே சொன்ன சொன்ன - முன்பு பலவாறு சொல்லிய, துறை தொறும் - இடங்களி லெல்லாம், துஞ்சலுக்கு - (உணவின்மையால் தாம்) உயிர் விடுவதற்கு, அணித்து ஆம் - (காலம்) நெருங்கி விட்டது, என - என்று (தேவி யிடம்) சொல்லி, ஒரு கால் அகலாமல் - ஒருபோதும் (அவ்வம்மையை விட்டு) பிரியாமல், அஞ்சலித்து - (தங்கள்) கைகளைக் கூப்பி வணங்கிக் கொண்டு, அ அணங்கினுக்கு - அந்தக் காளிதேவிக்கு, அருகு ஆக இருக்க - சமீபமாக இருக்கவும்,

வி - ரை:—பேய்கள் தமது துறையிரந்து தேவிக்கு அருகில் நின்றிருந்தன வென்பதாம். 'முன்னமே சொன்ன சொன்ன துறை' என்றது—கோபுரம், நெடுமதில் முதலிய இடங்களை [தா-௧0௪]. அணித்தாம்—ஆம் அசைச் சொல். இதுகாறுங் கூறினவை தேவிக்கு அருகிலிருந்து குற்றேவல் புரியும் அணுக்கப் பேய்களை யென்க.

(௧௩௫) மெலிவன, போல்வன (௧௩௬) தாளின (௧௩௭) குரைப்பன (௧௩௮) விழிப்பன (௧௩௯) உந்திய (௧௪0) செவியன (௧௪௧) உதட்டின (௧௪௨) கொள் வன (௧௪௩) புறந் தீந்தவுமாகிய (௧௪௪) பேயெலாம், அருகாக விருக்க என வினை முடிவு செய்க. (௧௧)

### பேய்களின் கால் முடமாதல்

௧௪௫. ஆளைச் சீறுக ளிற்றப யன்பொரூஉம்
அக்க ளத்தில ரசர்சி ரஞ்சொரி
மூளைச் சேற்றில்வ ழுக்கிவி ழுந்திட
மொழிபெ யர்ந்தொரு கான்முட மானவும்.

ப - ரை:—ஆளை - போர் வீரர்களை, சீறு - கோபித்துக் கொல்லும், களிறு அபயன் - யானைப் படையையுடைய (முதற் குலோத்துங்க) சோழன், பொரூஉம் - போர் புரியும், அ களத்து இடை - அந்தப் போர்க் களங்களில், அரசர் சிரம் சொரி - (பகை) அரசர்களின் தலைகளி லிருந்து சொரிகின்ற, மூளை சேற்றில் - மூளையாகிய சேற்றிலே, வழுக்கி

விழுந்திட - (கால்) வழுவி விழுந்ததனால், மொழி பெயர்ந்து - (அப் பேய்களில் சிலவற்றின் காலிலுள்ள) கணுக்கள் புரண்டு, ஒரு கால் முடம் ஆனவும் - ஒரு கால் நொண்டி யாயினவும்,

வி - ரை :—இத்தாழிசையில் 'ஆளைச் சேறாக விற்றபயன்' என்றதற்கேற்ப, 'ஆளைய முகெளிற் றுளி மன்னவன்' [வில்லி - பா - கசு-ம் போர்-உசச] என வருதலைக் காண்க. பொருஉம்—இன்னிசை யளபெடை. மூளைச் சேறு—உருவக வணி; இது முதல் கருஉ-ம் தாழிசை வரையில் பேய்களின் குறை யுறுப்புக்களைக் கூறுவது போல் ஆசிரியர் முதற் குலோத்துங்கன் வெற்றிச் சிறப்பை விளம்புகிறார். பா - பே :—ஜீ மூளைச் சேற்றுவ முக்கலில் வீழ்ந்தற. (கஉ)

பேய்களின் கை முடமாதல்

கசசு. அந்த நாளக்க ளத்தடு கூழினுக்
காய்ந்த வெண்பல்ல ரிசியு ரற்புக
உந்து போதினிற் போதகக் *கொம்பெனும்
உலக்கை பட்டுவ லக்கை‡சொற் றனவும்.

ப - ரை :—அந்த நாள் - (முதற்குலோத்துங்கன் போர் புரிந்த) அக்காலத்தில், அ களத்து - அந்தப் போர்க் களங்களில், அடு கூழினுக்கு- சமைக்கும் கூழின் பொருட்டு, ஆய்ந்த - (மணல், கல் முதலியன வின்றி) ஆராய்ந்தெடுத்த, வெண் பல் அரிசி - வெண்மையாகிய பற்களாகிய அரிசியை, உரல் புக - உரலில் புகும்படி, உந்து போதினில் - (பேய்கள்) தள்ளிக் குற்றுங் காலத்தில், போதகம் கொம்பு எனும் - யானையின் கொம்புகளென்னும், உலக்கை பட்டு——, வலக்கை சொற்று ஆனவும் - வலக்கைகள் குறைந்து முடமாயினவும்,

வி - ரை :—பற்களை அரிசியாகக் கூறுதலை, 'பல்லைத் தகர்த்துப் பழவரிசி யாகப் பண்ணிக் கொள்ளீரே' எனவும், 'பல்லரிசி யாவுமிகப் பழவரிசி தாமாக' [தா-டுஉச, டுசடு] எனவும், 'மோகர்தம் பல்லெலா முறியக் குத்தி' [மோகவ-ப-எகூரு] எனவும், நீளெயி றுதிர்செய் அரிசி புடைத்திடித்து' [அந்துவ-ப-ஶகூக] எனவும் வருவனவற்றா னறிக. யானைக்கொம்பை உலக்கையாகக் கொள்ளுதலை டுஉகூ-ம் தாழிசையிற் காண்க. வெண்பல்லரிசி, கொம்பெனு முலக்கை—உருவக வணிகள்; 'அக்களத் தடுகூழ்' என்றது பேய்கள் சக்கரக் கோட்டம் [தா-கசஎ] மதுராபுரி [தா-கடுஉ] மணலூர் [தா-டுகூச] முதலிய களங்களில் அட்ட கூழை யென்க. பா - பே :—* கோட்டுநீள், ‡ சொட்டானவும், சொத்தானவும். (கசு)

பேய்களின் கண் குருடாதல்

கசஎ. விருத ராசப யங்கரன் முன்னொர்நாள்
வென்ற சக்கரக் கோட்டத்தி டைக்கொழுங்
குருதி யுங்குட ருங்கலந் தட்டவெங்
கூழ்தெ றித்தொரு கண்குரு டானவும்.

ப - ரை :—முன் ஓர் நாள் - முன்பு ஒரு காலத்தில், விருத ராசர் - வெற்றிச் சின்னங்களையுடைய அரசர்களுக்கு, பயங்கரன் - பயத்தை யுண்டாக்கினவனாகிய முதற்குலோத்துங்க சோழன், வென்ற சக்கரக் கோட்டத்து இடை - (தன்னை எதிர்த்த பகை யரசர்களை) வென்ற சக்கரக் கோட்டம் என்னும் ஊரிலுள்ள போர்க்களத்தில், குருதியும் - இரத்தத்தையும், கொழும் குடரும் - கொழுப்பையுடைய குடல்களையும்,

கலந்து அட்ட - சேர்த்துச் சமைத்த, வெம் கூழ் தெறித்து - வெப்பமாகிய கூழ் தெறித்தலால், ஒரு கண் குருடு ஆனவும்——,

வி - ரை :—விருது—வெற்றிச் சின்னம்; 'விருத ராசர்' என்றதனால், பல போர்களில் வெற்றியுற்ற வேந்தர் என்பது விளங்கும். அத்தகையினராகிய ஆறும் விக்கிரமாதித்தன், சயசிங்கன் என்னும் இரண்டு வேந்தர்களையும் முதற் குலோத்துங்கன் வென்றமையால், [தா-க0ரு, ௫௬௪] அவ்விறையவன் 'விருதராச பயங்கரன்' [தா-௨௫௬] என்னும் பெயர் பெற்றனன் போலும். இவ்வரலாற்றை க0ரு-ம் தாழிசையிற் காண்க. வெங்கூழ்—கொதிக்குங் கூழ்; வெங்கூழ் படுதலால், பேய்களின் ஒவ்வொரு கண்ணும் குருடாயின தென்க.

வீரராசேந்திரன் என்னும் வேந்தன் முதற் குலோத்துங்கனை இளவரசனாக்கியபின், முதற்குலோத்துங்கன் கிருஷ்ணை, கோதாவரி என்னும் இரண்டு நதிகளுக்கும் இடையிலுள்ள வேங்கி நாட்டை ஆட்சி புரிந்து வந்தான். சில காலஞ் சென்றபின், அம்மன்னவன் திக்கு விசயஞ் செய்யக் கருதி, தன்னாட்டைத் தன் சிற்றப்பனாகிய விசயாதித்தன் என்பவனிடம் ஒப்புவித்து வடதிசை நோக்கிச் சென்று மத்திய மாகாணத்தைச் சார்ந்த சக்கரகோட்டத்தை யடைந்தான். அங்கே தாராவர்ஷன் என்னும் வேந்தன் குலோத்துங்கனை எதிர்த்தான். அவ்விருவரும் கடும்போர் புரிந்தனர். இறுதியில் குலோத்துங்கன் வெற்றி யெய்தினான். அதுகாலை, அக்கொற்றவன் வயிராகரம் என்னும் ஊரில் பல களிறுகளைக் கவர்ந்ததன்றி, அவ்வூரையும் எரிமூட்டி யழித்தான் [தா - ௨௫௪, ௯அ௪]. அவனது கன்னிப்போர் இதுவேயாம் [மு-கு-சோ-பக்-௨௪, ௨௫; மு-கு-பக்-௨0]. வீரராசேந்திரன் கி. பி. க0எ0-ம் ஆண்டில் உயிர் துறந்தமையாலும், அதுகாலை முதற் குலோத்துங்கன் வடநாட்டில் போர் புரிந்துகொண்டிருந்தான் என்றமையாலும், [தா-௨௫எ] இப்போரும் அவ்வாண்டிலேயே நிகழ்ந்ததெனக் கொள்க. (க௪)

பேய்கள் ஊமையாதல்

கசஅ. வண்டல் பாய்பொன்னி நாடனை வாழ்த்திமா
மதுரை வெங்களத் தேமது ரிக்கவட்
டுண்ட கூழொடு நாவுஞ்சு ருண்டுபுக்
குள்வி ழுந்தற வூமைக ளானவும்.

ப - ரை :—வண்டல்-சேற்றினை, பாய் - (விளை வயல்களில்) பாய்விக்கின்ற, பொன்னி நாடனை - காவிரி நதியையுடைய சோழநாட்டிற்குத் தலைவனாகிய முதற்குலோத்துங்கனை, மா மதுரை - சிறந்த மதுரையிலுள்ள, வெம் களத்தே - கொடிய போர்க்களத்தில், வாழ்த்தி -(பேய்கள்) வாழ்த்தி, மதுரிக்க - இனிக்கும்படி, அட்டு உண்ட - (அவை) சமைத்து உண்ட, கூழொடு - (கொதிக்கும்) கூழுடன், நாவும் சுருண்டு - (அவைகளின்) நாக்கும் சுருண்டு, உள் புக்கு விழுந்து - உள்ளே புகுந்து விழுதலால், அற ஊமைகள் ஆனவும் - முற்றும் ஊமைகள் ஆயினவும்,

வி - ரை :—புது நீர்ப் பெருக்கால் ஆற்றங் கரைகளிலுள்ள வயல்களில் வண்டல் தங்குத லியல்பு. வண்டல்—சேறு; 'வித்திடுபுல மேடாயிற்று' என்றமைக்கு 'நாற்றங்கால் வண்டலிட்டு மேடாயிற்று' [பரிபா - எ - ௬௫] என உரை வரைந்திருத்தலை இங்குக் கவனிக்க. கூழ் உள்புக்கு விழுதலாவது:—அது கழுத்தின் வழியாய் உள்ளே புகுந்து வயிற்றில் விழுதல்; நா உள்புக்கு விழுதலாவது:—நாக்குச் சுருங்கிக் கழுத்துக்குள்ளே இழுத்துக் கொள்ளுதல். பேய்கள்

தம் பசியின் கொடுமையாலும் உணவின்மேலுள்ள விருப்பத்தாலும் வெங்கூழை யுட்கொண்டமையால், அவைகளின் நாக்குச் சுருங்கி உள்ளே யிழுத்துக்கொள்ள லாயினவாம். பாண்டி நாட்டின் தலைநகரமாகிய மதுரைப் போரை ௬அகஎ-ம் தாழிசையிற் காண்க. (கஞ)

பேய்களின் காது செவிடானமை

கசசகூ. ஆனை சாயவ டுபரி யொன்றுகைத்
$ஐம்ப டைப்பரு வத்தப யன்பொருஞ்
சேனை வீரர்நின் றார்த்திடு மார்ப்பினில்
திமிரி வெங்களத் திற்செவி டானவும்.

ப - ரை :—ஐம் படை பருவத்து - ஐம்படைத் தாலியை யணிந் திருந்த இளமைப் பருவத்திலேயே, ஆனை சாய - யானைப் படைகள் அழியும்படி, அடு பரி ஒன்று - (பகைவரை) கொல்லும் குதிரை ஒன்றை, உகைத்து - செலுத்தி, அபயன் - (முதற்குலோத்துங்க) சோழன், பொரும் - போர் புரியும், திமிரி வெம் களத்தில் - திமிரியிலுள்ள கொடிய போர்க் களத்தில், சேனை வீரர் - (அவன்) படையிலுள்ள வீரர்கள், நின்று - (பகைவர்க்கு முதுகு காட்டி ஓடாமல்) நின்று, ஆர்த்திடும் - ஒலிக்கும், ஆர்ப்பினில் - பேரிரைச்சலால், செவிடு ஆனவும் - (காதுகள்) செவிடு பட்டனவும்,

வி - ரை :—இளங் குழந்தைகள் எவ்விதத் தீங்குமின்றி வளருமாறு திரு மாலின் ஐம்படைகளாகிய சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்பவற்றின் வடிவங்களைப் பொன்னாற் செய்து அவர்கள் கழுத்தில் கட்டுதல் பண்டைய வழக்கமாம். இதனை ஐம்படைத்தாலி என்ப. இதன் விரிவை உ௬௦-ம் தாழிசை யிற் காண்க. உகைத்த என்னும் பெயரெச்சத்தின் ஈறு கெட்டதெனக் கொண்டு, அபயன் சேனைவீரர் ஆர்ப்பினில் திமிரி வெங்களத்தில் செவிடான வும் என்றியைத்துப் பொருள் கோடலுமாம். பா - பே :—$ அப்படை. (கசு)

பேய்களின் குழவிகள் குறளாயின

கரு௦. பண்டு தென்னவர் சாயவ தற்குமுன்
பணிசெய் பூதக ணங்கள னைத்தையுங்
கொண்டு வந்தபேய் கூடிய போதிலக்
குமரி மாதர்பெ றக்குற ளானவும்.

ப - ரை :—பண்டு - முன்பு ஒரு சமயத்தில், தென்னவர் சாய - (முதற்குலோத்துங்கனோடு போர் புரிந்து) பாண்டியர் அழிய, அதற்கு முன் - (அவர்கள்) அழிவதற்கு முன், பணி செய் - (அவர்களுக்கு) குற்றேவல் செய்து வந்த, பூத கணங்கள் அனைத்தையும் - (பெண்) பூதங்களின் கூட்டங்கள் எல்லாவற்றையும், கொண்டு வந்த பேய் - (பிடித்து) கொண்டு வந்த (ஆண்) பேய்கள், கூடிய போதில் - (அந்தப் பெண் பூதங்களை) புணர்ந்த காலத்தில், குமரி - இளம் பருவமுடைய, அ மாதர் பெற - அந்தப் பெண் பூதங்கள் (குழந்தைகளை) பெற, குறள் ஆனவும் - (அவை) குறுகிய வடிவமுடைய பூதங்களாயினவும்,

வி - ரை :—பெண் பூதங்களை ஆண் பேய்கள் பற்றிப் புணர்ந்தன வென்பதாம். பூதங்களின் கால்களும் கைகளும் உடலும் பருத்துக் குறுகி யிருக்கும். இதனை, 'குறியதாட் குறள்' எனவும், 'பருஉக் குறுங்கையால் வாரித்தன்

பெருவயிற்றிடை வைப்ப' [திருவிளை-பு-குண்டோ-கக, கரு] எனவும் வருமாற்று ணறிக; பேய்களுக்கு அவை நீண்டு மெலிந்திருக்கும் [தா-சுகூடு, கசுக, கஎ0]. மிசைபெ றுதுதற ளான கூளிகளும் விம்மி யுள்ளதிசை செம்மியே, திசைபெ றதுதடி யாத பாரிடமும்' [தக்கயா-கசு௫] என்றதையும் இங்குக் கவனிக்க. நறுகிய வடிவமுடைய பெண் பூதங்களின் வயிற்றிற்பிறந்தமையால், அவைகளின் நழவிகள் துறளாயின வென்க. தென்னவர் சாய்ந்தமையை கூஅக-ம் தாழிசையிற் காண்க. (கஎ)

பேய்களின் உடல் கூனியானமை

கருக. பரக்கு மோதக்க டாரம ழித்தநாள்
பாய்ந்த செம்புன லாடியு நீந்தியுங்
குரக்கு வாதம்பி டித்தவி தத்தினிற்
குடிய டங்கலுங் கூன்முது கானவும்.

ப - ரை :—பரக்கும் - (அலைகள்) பரவும், ஓதம் - கடற்கரையை படுத்த, கடாரம் - கடாரம் என்னும் ஊரை, அழித்த நாள் - (கங்கை கொண்ட சோழன் வென்று) அழித்த காலத்தில், பாய்ந்த - (தன்னை எதிர்த்த வீரர்களின் உடலிலிருந்து) பெருகிய, செம் புனல் - இரத்தத்தில், ஆடியும் - விளையாடுதலினாலும், நீந்தியும்-நீந்திச் சென்றதனாலும், குரக்கு வாதம் - குரங்கு வாதம் என்னும் நோய், பிடித்த விதத்தினில் - பிடித்த விதம் போல, குடி அடங்கலும் - (சில பேய்களின்) கூட்டம் முழுதும், முதுகு கூன் ஆனவும் - முதுகு வளைந்தனவும்,

வி - ரை :—கடாரப் போரில் பெருகி யோடிய உதிர வெள்ளத்தில் சில பேய்கள் விளையாடினமையாலும் நீந்தினமையாலும், அவைகளின் முதுகு கூனு பின வென்க. கடாரம்—அது பர்மா தேயத்தின் கடற்கரையை யடுத்தோர் ஊராம். அதனைச் சங்கிராம விசயோத்துங்க வர்மன் ஆட்சி புரிந்து வந்தான். முதற்குலோத்துங்கன் பாட்டனாகிய கங்கை கொண்ட சோழன் அம்மன்னனை வென்று அவன் நாட்டைக் கைப்பற்றிக்கொண்டான். [சோழவமி - பக் - கஅ] இவன் வரலாற்றை உ0உ - ம் தாழிசையிற் காண்க. முதற்குலோத்துங்கன் கடாரதேசத்தில் போர் புரிந்ததாய்த் தெரியவில்லை. இவன் முன்னோரும் இவனைப்போலவே பேராண்மை படைத்தவரென்பதை விளக்க, இங்கே கங்கை கொண்ட சோழன் வரலாற்றை ஆசிரியர் கூறினர் போலும். குரக்கு வாதம்—ஒருவகை நோய்; இந்நோயின் தன்மை முதுகு கூனுதலாம். குரங்கு + வாதம் = குரக்கு வாதம் [நன் - கஅச]; எதுகை நோக்கி வலிந்து நின்றதெனினுமாம். இதில் உவமையணி யுள்ளமை கவனிக்க. (கஅ)

பேய்கள் கடலில் நீந்தல்

கருஉ. †சிங்க ளத்தொடு தென்மது ராபுரி
செற்ற ‡கொற்றவன் வெற்றிகொள் காலையே
வெங்க ளத்தில டுமடைப் பேய்க்குலம்
வேலை புக்குவி ரல்கடி றந்தவும்.

ப - ரை :—சிங்களத்தொடு - சிங்கள நாட்டையும், தென் மதுராபுரி - (வடமதுரையே யன்றி) தென்திசையிலுள்ள மதுரைமா நகரையும்,

† மைசூரில் சிங்கணம் என ஒரு சிறு நாடு உண்டெனவும், அதனையே முதற்குலோத்துங்கன் வென்றனனெனவும் திரு. L. ஸ்ரீநிவாச ஐயரவர்கள் கூறுவர். [மு. கு. - பக் - உடு.]

செற்ற கொற்றவன் - அழித்த அரசனாகிய முதற்குலோத்துங்கன், வெற்றி கொள் காலை - (அவைகளை) வென்ற காலத்தில், வெம் களத்தில் - (அவ்வூர்களிலுள்ள) கொடிய போர்க் களங்களில், அடு - (களக் கூழை) சமைத்துக்கொண்டிருந்த, மடை பேய்க் குலம் - சமையல் செய்யும் (சில) பேய்களின் கூட்டம், வேலை புக்கு - கடலில் புகுந்து, விரல்கள் திறந்தவும் - (நீந்துதற்குத் தங்கள்) கை விரல்களைத் திறந்து கொண்டனவுமாகிய,

வி - ரை:—முதற்குலோத்துங்கன் தன் பகைவர் மேல் வழங்கும் கொடிய படைகள் தம்மேல் படுமென்றஞ்சிப் பேய்கள் கூழடுதலை விட்டுக் கடலில் புக்கன வென்க. நீரில் நீந்துவோர் தங்கள் கைவிரல்களைத் திறந்த வண்ணம் நீந்துத லியல்பாதலால் 'விரல்கள் திறந்த' என்றார். 'தும்பை தானே நெய்தலது புறனே' [தொல்கா-புறத்தி-கசு] என்னுஞ் சூத்திர வுரையில் நச்சினார்க்கினியர், 'நெய்தற்குரிய பெருமண லுலகம் போலக் காடு மலையுங் கழனியு மல்லாத களரும் மணலும் பொருகளமாக வேண்டுதலானும்' என்றமையால், நெய்தல் நிலத்தில் களக்கூழ் சமைத்துக்கொண்டிருந்த பேய்கள் தமக்கருகிலுள்ள கடலில் புக்கன வென்க. நெய்தல்—கடலும் கடல் சார்ந்த விடமுமாம்; சிங்களத்தொடு — ஒடு எண்ணுப் பொருளில் வந்தது. தென்மதுராபுரி — இதில் எண்ணுப் பொருளை உணர்த்தும் உம்மை விகாரத்தால் தொக்கது. காலையே— ஏகாரம் அசை நிலை; பேய்க் குலம்—ஒன்றன் கூட்டத் தற்கிழமைப் பொருளில் வந்த ஆறன் தொகை. தென் மதுராபுரிப் போரை ௩அகம்-ம் தாழிசையிற் காண்க.

(கசடு) முடமானவும் (கசசு) சொற்றூனவும் (கசஎ) குருடானவும் (கசஅ) ஊமைகளானவும் (கசகூ) செவிடானவும் (கடு0) குறளானவும் (கடுக) மூதுகானவும் (கடுஉ) திறந்தவுமாகிய (கடுங) இவ்வண்ணத்த—என அடுத்த செய்யுளுடன் கூட்டி முடிக்க.

'தென் மதுராபுரி' என்றதனால், முதற்குலோத்துங்கன் பாண்டி நாட்டின் வட பகுதியிலும் போர் புரிந்தானெனத் தெரிகிறது. இம்மன்னவன் ஆட்சி புரிந்த காலத்தில் பாண்டி நாட்டின் வடபகுதியை நுளம்பப் பாடிப் பாண்டியன் என்னும் வேந்தனொருவன் ஆட்சி புரிந்து வந்தான். குலோத்துங்க சோழன் அம்மன்னவனோடும் பொருது வெற்றி யெய்தினன். இப்போர் கி. பி. க0எசு-ல் நிகழ்ந்ததாம். [மு-கு-சோ-பக்-௬0] பா - பே:—ஶ்ரீ மானதன். (கசு)

பேய்களைப் பாடியது முற்றிற்று.

---

# எ. இந்திர சாலம்

**இந்திர சாலம்** என்பது கண்டோர் வியப்புறுமாறு செய்யும் ஒரு வகை மாய வித்தையாம். இந்திரசால வித்தையை யுணர்த்தும் பாடல்களின் பகுதி என்பது இதன் பொருளாம். காளிதேவியின் சீற்றத்துக் கஞ்சிய முதுபேயொன்று இமயமலைக்குச் சென்று அங்கே சிலகாலம் தங்கியிருந்தது. பின்பு அது மீண்டும் தேவியை யணுகி, அவ்வம்மையின் கட்டளையின்படி அங்குத் தான் கற்ற மாய வித்தையைக் காட்டுதல் இதில் கூறப்படும்.

### தேவியின் தீபக்கால் கட்டில்

கருங. இவ்வண்ணத் *இருதிறமுந் தொழுதிருப்ப
எலும்பின்மிசைக் குடர்மென் கச்சிற்
செவ்வண்ணக் குருதிதோய் சிறுபூதத்
†தீபக்கால் கட்டி லிட்டே.

ப - ரை :—இ வண்ணத்த - இத்தன்மையனவாகிய பேய்கள், இரு திறமும் - (தேவியின்) இரண்டு பக்கங்களிலும், தொழுது இருப்ப - வணங்கிக் கொண்டிருக்க, எலும்பின் மிசை - எலும்புக் குவியலின் மேல்; மெல் குடர் - மென்மையாகிய குடல்களாகிய, கச்சின் - கச்சினல் கட்டப்பட்ட, செவ்வண்ணம் - செந்நிறமாகிய, குருதி தோய் - இரத்தம் படிந்த, சிறு பூதம் - சிறு பூதமாகிய, தீபக்கால் கட்டில் இட்டு - தீபக்கால் என்னும் ஒருவகைக் கட்டில் அமைத்து,

வி - ரை :—தேவிக்கு எலும்புக் குவியலின் மேல் குடல்களாகிய கச்சினல் கட்டப்பட்ட தீபக்கால் கட்டில் அமைத்தேன்க. திறம்—பக்கம்; 'பெண்ணுருவொருதிற ளுகின்று' [புறநா - க] என்றதிற்போலக் கொள்க. 'குருதி தோய் கட்டில்', 'சிறுபூதக் கட்டில்', 'தீபக்கால் கட்டில்' என்க; இது ஒருவகைக் கட்டிலாம். இருதிறமும்—உம்மை முற்றுப்பொருளில் வந்தது. எலும்பு—காரணவாகுபெயர்; வண்ணத்த—குறிப்பு வினையாலணையும் பெயர். இதனீற்றிலுள்ள அகரந் தொக்கு நின்றது. பா-பே :-* இருபுறமும், † தூபக்கால் தொட்டில். (க)

### கட்டிலின் மேலணை

கருச. பிணமெத்தை யஞ்சடுக்கிப் பேயணையை
முறித்திட்டுத் தூய வெள்ளை
நிணமெத்தை விரித்துயர்ந்த நிலாத்திகழும்
பஞ்சசய னத்தின் மேலே.

ப- ரை :—அஞ்சு பிணம் மெத்தை - ஐந்து பிணங்களாகிய மெத்தைகளை, அடுக்கி - (ஒன்றன்மேல் ஒன்றாய்) அடுக்கி, பேய் அணையை - பேய்களாகிய தலையணையை, முறித்திட்டு - முறித்து வைத்து, வெள்ளை நிணம் - வெண்ணிறமுள்ள கொழுப்பாகிய, தூய மெத்தை - பரிசுத்தமாகிய மெத்தையை, விரித்து - (பிண மெத்தையின் மேல்) பரப்புதலால், உயர்ந்த நிலா - சிறந்த நிலா வொளிபோல், திகழும் - விளங்கும், பஞ்ச சயனத்தின் மேலே - ஐந்து வகையாகிய படுக்கையின் மேல்,

வி - ரை :—பிணங்களாகிய ஐந்து மெத்தையை யடுக்கி, பேயாகிய அணையையிட்டு, கொழுப்பாகிய மெத்தையை விரித்த பஞ்சசயன மென்பதாம். பஞ்சசயனம்—ஐவகைப் படுக்கைகள்; அவை இலவம் பஞ்சு, செம்பஞ்சு, வெண் பஞ்சு, மயிர், அன்னத்தூவி என்பவற்ருல் அமைக்கப்படுவனவாம். 'ஐந்துழன்றடுத்த செல்வத் தமளி' [சீவகசி-அருஅ] என்ருர் திருத்தக்க தேவரும். 'மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி' [திவ்விய - திருப்பாவை - கக] என்பதற்கு, 'பஞ்ச விதமான படுக்கையின் மேலேறி-அதாவது அழகு, குளிர்ச்சி, மார்த்தவம், பரிமளம், தாவள்யம் ஆக விவை........அஞ்சு உருவிட்டுச் செய்த படுக்கையெனினுமாம்; பஞ்சாலே செய்த படுக்கை என்னவுமாம்' என ஆன்ருேர் வியாக்கியானம் செய்திருத்தல் இங்குக் கவனிக்கத்தக்கது. 'மூவைந் தடுக்கிய வமளி'

[நைட-மணம்-உசு] என்றமையுங் காண்க. தேவியின் சயனமாதலால், பிணங்களே பஞ்ச சயனமாக வமைக்கப்பட்டன வென்க. நிலாத் திகழும்—(வெண்மையாகிய) ஒளியால் விளங்கும் எனினுமாம். பிணமெத்தை, பேயணை, நிணமெத்தை—உருவக வணிகள்; அஞ்சு—இது ஐந்து என்பதன் போலி. (உ)

**கோயிலில் ஈ எறும்புகள் அணுகாமை**

கருரு கெடாதபடி கெடுஞ்செழியர் கெடும்பொழுதின்
இடும்பிண்டி பால மேந்தி
இடாகினிக ளிருமருங்கு மீச்சோப்பிப்
பணிமாற விருந்த போழ்தின்.

ப - ரை:—கெடாதபடி கெடும் - அழியாமலே அழிவடையும், செழியர் - பாண்டியர்கள், கெடும் பொழுதின் - அழிவடையுங் காலத்தில், இடும் - அணியும், பிண்டிபாலம் - பிண்டிபாலம் என்னும் ஒருவகை ஆயுதத்தை, ஏந்தி - (தேவியானவள் தன் கையில்) பிடித்துக்கொண்டு, இரு மருங்கும் (தனது) இருபுறங்களிலும், இடாகினிகள்———, ஈச்சோப்பி - ஈச்சோப்பி என்னுங் கருவியால், பணி மாற - வீசிக்கொண்டிருக்கும்படி, இருந்த போழ்தின் - (அவ்வம்மை கொலு) வீற்றிருந்த காலத்தில்,

வி - ரை:—கேடாதபடி கெடுதலாவது:—பின் வருந் தீங்கை யுணராமல் தமக்குத் தாமே அழிவு தேடிக் கொள்ளுதலாம். இங்கே தம்மினும் வலியவனாகிய முதற்குலோத்துங்கனை யெதிர்த்துப் பாண்டியர் அழி வெய்தினமையை யுணர்த்தும் [தா - கடு, க0எ, கருஉ, ருஅக]. தேவி பிண்டிபால மேந்துதல், சோழர்களுக்கு நன்னிமித்தமும் பாண்டியர்களுக்குத் தீயநிமித்தமுமாம். இடாகினி—சுடலையிலுள்ள பிணங்களைத் தின்னும் ஒருவகைப் பேய் [தா - சஅக]. ஈச்சோப்பி யென்பது—கவரி, ஆலவட்டம் போன்ற ஒருவகைக் கருவியாம். அகராதியிலுள்ளபடி இங்கே ஈக்களைத் துரத்துங் கருவி யன்று. தேவி கோயிலில் குடர், கொழுப்பு, குருதி முதலியன நிறைந்திருப்பினும், 'அரும்பெறற் பிண்டம், கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க, நெய்த்தோர் தூஉய் நிறைமகி ழிரும்பலி, எறும்பு மூசா' [பதிற்று-ரு-ரு0] என்றபடி, அவளாணையால் அங்கு ஈ, எறும்பு, பேய் முதலியன அவற்றை யுண்ண வணுகாவென்க. (ரு)

**நெடும்பேய் தடியைப் பிடித்திருத்தல்**

கருசு. அடனாக வெலும்பெடுத்து நரம்பிற் கட்டி
*அடிக்கடியும் பிடித்தமரின் மடிந்த வீரர்
†குடர்சூடி நிணச்சட்டை யிட்டு நின்ற
கோயினா யகிநெடும்பேய் கும்பிட் டாங்கே.

ப - ரை:—அமரில் மடிந்த வீரர்-போரில் இறந்துபட்ட வீரருடைய, நிணம் சட்டை இட்டு - கொழுப்பாகிய சட்டையை யணிந்து, குடர் சூடி - (அச்சட்டை மேல் அவர்கள்) குடலாகிய மாலையைப் புனைந்து, அடல் நாகம் - (போரில் மடிந்த) வலிய யானைகளின், எலும்பு எடுத்து - எலும்புகளைப் பிரித்தெடுத்து, நரம்பில் - அந்த யானைகளின்) நரம்பால், கட்டி - (அவற்றை ஒன்றாக) கட்டி, அடிக்கடியும் - இடைவிடாமல், பிடித்து நின்ற - (அவற்றை ஓர் தடியாகத் தன் கையில்) பிடித்துக் கொண்டு நின்ற, கோயில் நாயகி - கோயிலில் எழுந்தருளியிருக்கும்

காளி தேவியினது, நெடும் பேய் - பெரிய பேயானது, ஆங்கு கும்பிட்டு - அப்பொழுது (அந்தத் தேவியை) வணங்கி,

வி - ரை :—பேய்க ளெல்லாவற்றிற்கும் தலைமைப் பேயாதலால், 'நெடும் பேய்' என்றார், 'நின்ற நெடும் பேய்' எனக் கூட்டுக. கோயில் நாயகி—இடைப் பிறவரல். 'வேத்திரத் திருக்கைச் சேனை நாயகன்' [அரிசம - பதுமை - க0சு] என்றபடி, திருமால் சந்நிதியில் சேனை முதலியாரும், 'வேத்திரப் படையால் தாக்கி.........நந்திஎம் பெருமான்' [திருவிளை - பு - பாயிரம் - கஎ] என்றபடி, சிவபெருமான் சந்நிதியில் நந்தி தேவரும் பிரம்பைப் பிடித்திருத்தல்போல், தேவி சந்நிதியில் நெடும்பேய் தடியைப் பிடித்திருந்ததென்க. ஆங்கே—அக்கோயிலில் எனினுமாம். 'அடஞகம்' என்றதை எலும்புக்கேயன்றி, 'நரம்பு' என்றதனோடும், 'அமரின் மடிந்த' என்றதை வீரர்க்கேயன்றி, 'அடஞகம்' என்றதனோடுங் கூட்டிப் பொருள் கொள்க. இவை முறையே முதனிலை விளக்கு (ஆதி தீபகம்), இடைநிலை விளக்கு (மத்திய தீபகம்) என்னும் அணிகளாம்; நிணச்சட்டை—உருவகவணி; இச்செய்யுளில் இம் மூன்றணிகளும் விரவி வந்தமையால், இது சங்கீரண வணியாம். பா - பே :—† அடித்தடியும், * குடர்மாலை சூடிநிணச் சட்டையிட்ட. (சு)

நெடும்பேய் தேவிக்குக் கூறல்

கருஎ. சுரகுருவின் தூதாகி யமன்பாற் செல்வோன்
துணித்துவைத்த சிரமன்று தின்றபேயைச்
சிரமரிய வதற்குறவா யொளித்துப் போந்த
சிலபேயைத் திருவுள்ளத் தறிதி யன்றே.

ப - ரை :—சுரகுருவின் - சுரகுரு என்னுஞ் சோழனால் அனுப்பப் பட்ட, தூது ஆகி - தூதுவனாய், யமன்பால் செல்வோன் - யமனிடம் செல்பவனாகிய ஒரு பேய் மகன், துணித்து வைத்த - (தான் உண்ணு தற்கு) அறுத்து வைத்த, சிரம் - தலையை, அன்று - (அவன் தூது சென்ற) அப்போது, தின்ற பேயை - (களவாடி) தின்ற பேயினுடைய, சிரம் அரிய - தலையை (நீ) அறுத்தலால், அதற்கு - (களவாடிய) அந்தப் பேய்க்கு, உறவு ஆய் - சம்பந்தமாயிருந்து, ஒளித்து போந்த - (உனக்கும் சுரகுருவுக்கும் பயந்து) ஒளித்துச் சென்ற, சில பேயை - (வேறு) சில பேய்களை, திரு உள்ளத்து அறிதி - (நீ உன்) சிறந்த மனத்தில் அறிவாய்.

வி - ரை :—சோழர்களுக்குப் பேய்கள் பணிசெய்து வந்தன வென இத் தாழிசையால் தெரிகிறது. போந்த—சென்ற; இதனை 'யாப்புற வில்லை யென முன் போந்து' [சிலப் - கசு - கஉஉ] என்றதனாலறிக. தூது—பண்பாகுபெயர்; செல்வோன்—வினையாலணையும் பெயர். இச்செய்யுளின் இறுதியிலுள்ள அன்று, ஏ—இரண்டும் அசைகள். (ரு)

முதுபேயின் வருகை

கருஅ. அப்பேயி னொருமுதுபேய் வந்து நின்றிங்
கடியேனை விண்ணப்பஞ் செய்க வென்ற
திப்பேயிங் கொருதீங்குஞ் செய்த தில்லை
என்கொலோ திருவுள்ள மென்னக் கேட்டே.

ப - ரை :—அ பேயின் - (ஒளித்துச் சென்ற) அந்தப் பேய்களில், ஒரு முது பேய் - ஒரு கிழப் பேயானது, இங்கு வந்து நின்று——, அடியேனை - (உனது) அடிமையாகிய என்னிடத்தில், விண்ணப்பம்

செய்க - (நான் வந்த செய்தியை நீ தேவிக்கு) தெரிவிப்பாயாக, என்றது- என்று சொன்னது, இ பேய் - (இப்போது திரும்பி வந்த) இந்தப் பேய், இங்கு - (உன் சந்நிதியர்கிய) இவ்விடத்தில், ஒரு தீங்கும் செய்தது இல்லை - ஒரு குற்றமும் செய்யவில்லை, திரு உள்ளம் என் கொல் - (உனது) சிறந்த கருத்து யாது, என்ன - என்று (நெடும்பேய்) சொல்ல, கேட்டு - (அதனைக் காளிதேவி) கேட்டு,

வி - ரை :—சுரகுருவின் காலத்தில் இமய மலையிலோடி யொளித்த பேய் முதற்குலோத்துங்கன் காலத்தில் திரும்பி வந்தமை கருதி 'முதுபேய்' எனப் பட்டது. 'என்கொலோ திருவுள்ளம்' என்றது, அப்பேயை உன்னிட மழைத்து வரலாமா வேண்டாவா என்னும் பொருளைப் பயந்து நின்றது. அடியேனை— குறிப்பு வினையாலணையும் பெயர். தீங்கும்—உம்மை இழிவு சிறப்பு; என் கொலோ—கொல், ஓ—இரண்டும் அசைநிலைகள். (சு)

தேவியை யணுகல்

கடுகூ. அழைக்க வென்றலும ழைக்க வந்தணுகி
அஞ்சி யஞ்சியுன தாணையிற்
பிழைக்க வந்தனம்பொ றுத்தெ மக்கருள்செய்
பெண்ண ணங்கெனவ ணங்கவே.

ப - ரை :—அழைக்க - (தேவியானவள் அப்பேயை) அழைத்து வருக, என்றலும் - என்று கட்டளை இட்டதும், அழைக்க - (நெடும் பேய் முதுபேயை) அழைத்துச் செல்ல, வந்து அணுகி - (அது அத் தேவியின் அருகில்) வந்து சேர்ந்து, பெண் அணங்கு - பெண் தெய்வமே, உனது ஆணையின் அஞ்சி அஞ்சி - உனது கட்டளைக்கு (இதுகாறும்) மிகவும் பயந்து, பிழைக்க வந்தனம் - (மீண்டும் உன்னை யணுகி) பிழைக்க வந்தோம், பொறுத்து - (நாங்கள் செய்த பிழைகளை) மன்னித்து, எமக்கு அருள் செய் - எங்களுக்குக் கருணை புரிவாயாக, என வணங்க - என்று (முதுபேய் தேவியை) வணங்க,

வி - ரை:—முதுபேய் தான் செய்த பிழையைப் பொறுக்குமாறு தேவியை வணங்கின தென்க. அழைக்க—இரண்டினுள் முந்தினது வியங்கோள் வினை முற்றும், பிந்தினது செயவெனெச்சமுமாம். என்றலும் — வினையெச்சம்; வந்தனம்—உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று; தன்னுடன் ஒளித் திருந்த மற்றப் பேய்களையுங் கருதிச் சொல்லுதலின், அணங்கு—அண்மை விளியாதலின் இயல்பாயிற்று. (எ)

தேவி முதுபேயின் பிழை பொறுத்தல்

கசு௦. அருத்தி யிற்பிழைநி னைத்த கூளியைய
றுத்த வன்றலைய வன்பெறப்
பொருத்தி யப்பிழைபொ றுத்த னம்பிழைபொ
றுத தில்லையினி யென்னவே.

ப - ரை :—அருத்தியின் - (தலையைக் களவாடும்) விருப்பத்தால், பிழை நினைத்த கூளியை - குற்றமான காரியத்தை நினைத்துச் செய்த பேயின் தலையை, அறுத்து——, அ வன் தலை - அந்த வலிய தலையை, அவன் பெற - (தூது சென்ற) அந்தப் பேய்மகன் பெறும்படி, பொருத்தி - அமைத்து, அ பிழை பொறுத்தனம் - அந்தப் பிழையைப்

பொறுத்தோம், இனி பொறுதது பிழை - இப்போது பொறுக்கத் தகாத தாகிய குற்றம், இல்லை என்ன -(ஒன்றும்) இல்லை என்று (தேவி) சொல்ல,

வி - ரை :—களவாடிய பேயின் தலையைக் கொய்தமையை, 'மீளி தலை கொண்ட தண்டத்தான் மீளிக்கு, கூளி தலைபண்டு கொண்டகோன்' [குலோத்-உலா-உக, உஉ] என்றதனாலறிக. அ + வன் + தலை = அவ்வன் தலை; [நன்-கசூங] இதிலுள்ள வகரமெய் சந்தவின்பப் பொருட்டுத் தொக்கது. கூளி முதலாகு பெயராய் அதன் தலையை யுணர்த்தினது. அறுத்தவன் தலை—அறுத்து அவன் தலை என இதனைப் பிரித்துப் பொருள் கோடலுமாம். (அ)

முதுபேய் விடை கூறல்

கசூக. உய்ந்து போயினமு வந்தெ மக்கருள
ஒன்றொ டொப்பனவொ ராயிரம்
இந்த்ர சாலமுள கற்று வந்தனெனி
†ருந்து காணெனவி றைஞ்சியே.

ப - ரை :—எமக்கு உவந்து அருள - (தேவியே நீ) எங்களுக்குக் களிப்பாய் அருள் புரிதலால், உய்ந்து போயினம் - (நாங்கள் அனைவரும்) பிழைத்தோம், ஒன்றொடு ஒப்பன - ஒன்று போல்வனவாகிய, ஒர் ஆயிரம் இந்த்ர சாலம் உள - பலவகையாகிய இந்திரசால வித்தைகளிருக்கின்றன, கற்று வந்தனென் - (அவைகளை நான் இமயச்சாரலில்) கற்று வந்தேன், இருந்து காண் - (நீ அவைகளை) வீற்றிருந்து பார்ப்பாயாக, என இறைஞ்சி - என்று (அந்த முதுபேய் தேவியை) வணங்கி,

வி - ரை :—'ஒன்றொ டொப்பன வொராயிரம்' இந்திரசாலம் உள—ஒன்று போலவே அதிசயிக்கத்தக்க பல இந்திர சால வித்தைகள் உள என்பதாம். இந்திர சாலம்—கண்டோரை வியப்பிக்கும் ஒருவகை மாயவித்தை. 'ஒராயிரம்' என்றது மிகப்பல வென்னும் பொருளில் வந்தது. ஆயிர மாறுகளுஞ் சுனைகள் பல வாயிரமும்' [திவ்விய - பெரியாழ்வார் - ச - ங - க0] எனவும், பேராயிரந்திண் பெரும்புய மாயிரம் பெய்துளவத், தாரார் முடியாயிரம்' [சடகோ - அந் - சுகு] எனவும், 'காலா யிரமுடி யாயிரம்' [திருவரங்-கலம்-ங] எனவும், 'ஆயிரம்பொன் மாமுடியா யாயிரமா திரத்தோளாய்' [திருவேங்-செய்-கோ-எகு] எனவும் வரு மாறு காண்க. அருள—காரணப் பொருளில் வந்த வினையெச்சம்.

பா - பே :—† இயம்பியே. (கூ)

முதுபேயின் மாய வித்தை

கசூஉ. ஏற நின்னிருதி ருக்கண் வைத்தருள்செய்
இக்கை யிற்சிலது திக்கைபார்
மாறி யிக்கையில ழைக்க மற்றவைம
தக்க ரித்தலைக ளானபார்.

ப - ரை :—ஏற - (நாங்கள்) கடைத்தேறும்படி, நின் திரு இரு கண் வைத்து - உனது அழகிய இரண்டு கண் பார்வையைச் செலுத்தி, அருள் செய் - (எனது இந்திர சால வித்தையைக் காண) அருள் புரிவாயாக, இ கையில் - இந்தக் கையில், சில துதிக்கை பார்——, இ கையில் அழைக்க - (அவற்றை) இந்தக் கையில் அழைத்த வளவில், அவை - அந்தத் துதிக்கைகள், மாறி - (உடனே தம் உருவம்) மாறி, மதம் கரி - மதத்தைப் பொழியும் யானைகளின், தலைகள் ஆன - தலைகள் ஆயின, பார் - (தேவியே நீ) பார்ப்பாயாக,

வி - ரை :—கை யிரண்டினுள் முந்தினது வலக்கையும் பிந்தினது இடக் கையுமாம். 'அருள் செய்' என்றது பெரியோரைச் சிறியோர் வேண்டிக் கொள்ளும் முறையில் தேவியைப் பேய் வேண்டிக் கொண்ட தென்க. 'எற வருள்செய்' என்றியைத்து மிகுதியாய் அருள்செய் எனினுமாம். ஆன-பலவின் படர்க்கை வினைமுற்று; இது முதல் ஆறு செய்யுட்கள் முதுபேயின் இந்திரசால வித்தையை யுணர்த்தும். (௧0)

**பேய்கள் கொக்கரித்தல்**

௧௬௩. இக்க ரித்தலையின் வாயி னின்றுதிர
நீர்கு டித்துருமி டித்தெனக்
கொக்க ரித்தலகை சுற்ற மற்றிவைகு
றைத்த லைப்பிணமி தப்பபார்.

ப - ரை :—இ கரி தலையின் - (என் இடக்கையிலுள்ள) இந்த யானைத் தலைகளின், வாயில் நின்று - வாயிலிருந்து பெருகும், உதிரம் நீர் - இரத்தமாகிய நீரை, அலகை குடித்து - பேய்கள் குடித்து, உரும் இடித்தென - இடி யிடித்தாற் போல, கொக்கரித்து சுற்ற - ஆரவாரித்துச் சுற்றும்படி, மற்று - அந்தத் தலைகளை யல்லாமல், குறை தலை பிணம் இவை - தலை குறைந்த (யானைகளின்) பிணங்களாகிய இவை, மிதப்ப பார் - மிதக்கலைப் பார்.

வி - ரை :—தலையறுப்புண்ட யானைகளின் உடல்களைக் கண்டும் உதிர வெள்ளத்தைப் பருகியும் பேய்கள் களிப்பின் மிகுதியால் ஆரவாரிக்கலாயின வென்பார், 'கொக்கரித்து' என்றார். கொக்கரித்து-என்பதற்கு (பேய்கள் ஒன்றை யொன்று) விளித்து எனினுமாம். இடித்தென — இடித்தாலென என்பதன் தொகுத்தல்; மிதப்ப—தொழிற் பெயர்ப் பொருளில் வந்தது. இதில் உருவக வணியும், உவமையணியும் உள்ளமை காண்க. (௧௧)

**முதுபேய் பரணி காட்டத் தொடங்கல்**

௧௬௪. அடக்க மன்றிதுகி டக்க வெம்முடைய
அம்மை வாழ்கவென வெம்மைபார்
கடக்க மென்றபயன் வென்றி வென்றிகொள்க
ளப்பெ ரும்பரணி யின்றுபார்.

ப - ரை :—அடக்கம் அன்று - (இந்த வித்தை செய்து) அடங்குவது அன்று, இது கிடக்க - (ஆதலால்) இது கிடக்கட்டும், எம்முடைய அம்மை - எம்முடைய தாயே, வாழ்க என - (நீவிர்) வாழ்வீராக என்று, எம்மை பார் - எங்களை (கடைக் கண்ணால்) பார்ப்பாயாக, வென்றி அபயன் - வெற்றியையுடைய (முதற் குலோத்துங்க) சோழன், கடக்கம் என்று - (நாமே) வெல்வோமென்று சொல்லி, வென்றி கொள் - (அவ்வாறே) வெற்றி கொண்ட, களம் பெரும் பரணி - போர்க் களத்தில் பெரிய பரணியை, இன்று பார் - இப்போது பார்ப்பாயாக.

வி - ரை :—முதுபேய் தன் பணிவும் தேவியின் பெருமையும் தோன்ற, 'எம்மை பார்' என்றது. கடக்கம்-என்றது 'என்னொடு பொருது மென்பவரை, ஆரம ரலறத் தாக்கித் தேரோ, டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த, பேரம ருண்க ணிவளினும் பிரிக' [புறநா - ௭௧] என்றபடி, தம்மை யெதிர்த்தோரை வஞ்சியாது எதிர்நின்று வஞ்சினங்கூறிப் பொருதலை யுணர்த்தினது. பரணி -

இதன் இலக்கணத்தை இந்நூலின் முகவுரையிற் காண்க. அம்மை—அண்மை விளி; கடக்கம்—தன்மைப் பன்மை வினைமுற்று; இதனை, கட+க்+கு+அம் எனப் பிரிக்க; இதில் கு—சாரியை; க்—இடைநிலை எதிர்கால முணர்த்தினது. அபயன் கடக்கம்—இடவழுவமைதி. இத்தாழிசை முதல் நான்கு தாழிசை வரையில், ஆசிரியர் முதுபேயின் மாய வித்தையைச் சிறப்பிப்பது போல், முதற் குலோத்துங்கன் வெற்றி மேம்பாட்டை மொழிந்துள்ளமை காண்க. (௧௨)

முதுபேயின் மாய வித்தை

௧௩௫. துஞ்சி வீழ்துரக ராசி பாருடறு
ணிந்து வீழ்குறைது டிப்பபார்
அஞ்சி யோடுமத யானை பாருதிர
ஆறு மோடுவன நூறுபார்.

ப - ரை:—துஞ்சி வீழ் - (போர்க் களத்தில்) இறந்து விழுகின்ற, துரகம் ராசி பார் - குதிரைகளின் கூட்டங்களைப் பார், துணிந்து வீழ் - அறுப்புண்டு விழுகின்ற, குறை உடல் - (வீரர்களின் தலை) குறைந்த உடல்கள், துடிப்ப பார் - துடித்தலைப் பார், அஞ்சி ஓடு - (போரில்) பயந்து ஓடுகின்ற, மதம் - மதத்தைப் பொழியும், யானை பார்——, ஓடுவன - விரைந்தோடுவனவாகிய, நூறு உதிரம் ஆறும் பார் - பல இரத்த ஆறுகளையும் பார்.

வி - ரை:—தன் மாய வித்தையால் போரில் இறந்துபட்ட குதிரைகளையும், வெட்டுண்டு துடிக்கும் வீரருடல்களையும், பயந்தோடும் யானைகளையும், பெருகியோடும் உதிரவெள்ளத்தையும் காணுமாறு முதுபேய் தேவியை வேண்டினதென்பதாம். நூறு—இங்குப் பல வென்னும் பொருளைப் பயந்து நின்றது [தா-௧௩௧]. துஞ்சி—மங்கலவழக்கு; ஆறும்—உம்மை இறந்தது தழுவியது. (௧௩)

முதுபேய் தேவியை வேண்டல்

௧௩௬. அற்ற தோளிவைய லைப்ப பாருவைய
றுத நீள்குடர்மி தப்பபார்
இற்ற தாணரியி ழுப்ப பாரடியி
ழுக்கு மூளையில்வ ழுக்கல்பார்.

ப - ரை:—அற்ற - (உடலிலிருந்து அறுப்புண்டு) நீங்கிய, தோள் இவை - தோள்களாகிய இவற்றை, அலைப்ப பார் - (இரத்த வெள்ளம்) அலைத்துச் செல்லுதலைப் பார், அறுத - அறுபடாத, நீள் குடர் உவை - நீண்ட குடல்களாகிய உவை, மிதப்ப பார் - (இரத்த வெள்ளத்தில்) மிதத்தலைப் பார், இற்ற தாள் - முறிந்து விழுந்த கால்களை, நரி இழுப்ப பார் - நரிகள் (தம் வாயில் கௌவி) இழுத்தலைப் பார், இழுக்கும் மூளையில் - வழுக்கும் மூளைச் சேற்றில், அடி வழுக்கல் பார் - (வீரர்கள்) பாதங்கள் வழுக்குதலைப் பார்.

வி - ரை:—மாயப் போரில் யானை, குதிரைகளின் வயிறு பிளப்புண்டு குடல் சரிந்து விழுதலால், 'அறுத நீள் குடர்' என்றார். யானைகளோடு யானைகளும், குதிரைகளோடு குதிரைகளும், வீரர்களோடு வீரர்களும் சீறிப் போர் புரிந்து கால்கள் முறிந்து வீழ்தலால், 'இற்ற தாள்' என்றார்; விரைந்தோடும் தேர்க்காலி லகப்பட்டுக் கால்கள் முறிந்தன வெனினுமாம். இவை, உவை—இச்சுட்டுப் பெயர்கள் முறையே அருகிலுள்ளவற்றையும் நடுவிலுள்ளவற்றையு முணர்த்தின. அலைப்ப, மிதப்ப, இழுப்ப—இம்மூன்றும் தொழிற் பெயர்ப் பொருளில் வந்தன. (௧௪)

மாயப்போரின் கொடுமை

கசுஎ. நிணங்கள் பார்நிணம ணங்க னிந்தனநி
லங்கள் பார்நிலம டங்கலும்
பிணங்கள் பாரிவைகி டக்க நம்முடைய
பேய லாதசில பேய்கள் பார்.

ப - ரை:—நிணங்கள் பார் - (இறந்து பட்ட பிணங்களின்) கொழுப்புக்களைப் பார், நிணம் மணம் கனிந்தன - கொழுப்பின் வாசனை மிகுந்தனவாகிய, நிலங்கள் பார் - இடங்களைப் பார், நிலம் அடங்கலும் - போர்க்களம் முழுவதும், பிணங்கள் பார்——, இவை கிடக்க - இவை (ஒருபுறம்) கிடக்கட்டும், நம்முடைய பேய் அலாத——, சில பேய்கள் பார் - (வேறு) சில (புதிய) பேய்களைப் பார்.

வி - ரை:—'நிணங்கள் பார்', 'பிணங்கள் பார்' எனப் பொதுப்படக் கூறினமையால், மாயப் போரில் இறந்துபட்ட யானை, குதிரை, வீரர்களின் நிணங்களையும் பிணங்களையுங் கொள்க. 'பேயலாத சில பேய்கள் பார்' என்றது, மாயப் போரின் கொடுமையை விளக்கும். அடங்கலும்—உம்மை முற்றுப் பொருளில் வந்தது. இந்த ஆறு தாழிசைகளிலும் வியப்புச்சுவை செறிந்துள்ளமை காண்க. பின்னுள்ள மூன்று தாழிசைகளில் முதற்குலோத்துங்கன் போர்க்களச் சிறப்பை முதுபேய் தன் மாய வித்தையால் காட்டுவதுபோல் ஆசிரியர் இயம்பியுள்ளமையுங் கவனிக்க. (கூ)

பேய்கள் ஒன்றன்மேலொன்று விழுதல்

கசுஅ. என்ற போதிலிவை மெய்யெ னாவுடனி
ருந்த பேய்பதறி யொன்றன்மேல்
ஒன்று கான்முறிய மேல்வி ழுந்தடிசில்
உண்ண வெண்ணிவெறு மண்ணின்மேல்.

ப - ரை:—என்ற போதில் - என்று (அந்த முதுபேய்) சொன்ன வளவில், இவை மெய் எனா - இந்த வித்தைகளெல்லாம் மெய்யென்று, உடன் இருந்த பேய் - அதனோடு இருந்த (மற்ற) பேய்கள், அடிசில் உண்ண எண்ணி - (பிணக்குவியலாகிய) உணவை உண்ண நினைத்து, வெறும் மண்ணின் மேல் - (ஒன்றுமில்லாத) வெறுந் தரையில், ஒன்றன் மேல் ஒன்று - ஒரு பேயின் மேல் மற்றொரு பேய், கால் முறிய - (தங்கள்) கால்கள் முறிந்து போகும்படி, பதறி மேல் விழுந்து - விரைவாய் மேலே விழுந்து,

வி - ரை:—அம் முதுபேயின் சாலவித்தை மற்றப் பேய்களை யெல்லாம் மயக்கினமையால் அவ் வித்தையின் அருமை தோன்றும். 'கால் முறிய மேல் விழுந்து' என்றது, பிணங்களைப் புசிப்பதில் அவைகளுக்குள்ள ஆவலின் மிகுதியை யுணர்த்தினது. எனா—செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்; ஒன்று, கால்—எண்ணலளவை ஆகு பெயர்கள்; இது முதல் நான்கு செய்யுட்கள் மாயவித்தையைக் கண்டு ஏமாந்த பேய்களின் செய்கையை யுணர்த்தும். (கசு)

மாய வித்தையைக் கண்டு ஏமாந்த பேய்களின் செய்கை

கசுகூ. விழுந்துகொ ழுங்குரு திப்புன
லென் றுவெ றுங்கைமு கந்துமுகந்
தெழுந்துவி ழுந்தசை யென்றுநி
லத்தையி ருந்துது ழாவிடுமே.

ப - ரை :—விழுந்து எழுந்து - (பேய்கள் அவ்வாறு ஒன்றன்மேல் ஒன்று) விழுந்து (பின்பு) எழுந்து, கொழுமை குருதி புனல் என்று - செழுமையாகிய இரத்த வெள்ளமென்று நினைத்து, வெறும் கை - (தங்கள்) வெறுமையாகிய கைகளால், முகந்து முகந்து - (பலமுறை) அள்ளிப் பருகி, விழுமம் தசை என்று - (பிணங்களின்) சிறந்த மாமிச மென்று, இருந்து - (அவ்விடம் விட்டகலாமல்) இருந்து, நிலத்தை துழாவிடும் - பூமியைத் தடவும்,

வி - ரை :—'கொழுங் குருதிப் புனல்' என்றது புதிய விரத்தத்தை யென்க. விழும்—சிறப்பு, இது விழுமம் என்றதன் கடைக்குறை. 'பேருடைய விழுக் கழஞ்சில்' [புறநா—கக—உ] என்றமை காண்க; விழும் என்றதை முற்றுக்கிப் பொருள் கொள்ளினுமாம். மாயப்போரில் வெட்டுண்டு விழுந்த பிணங்களின் குருதியும் தசையும் பேய்களின் கண்களுக்குத் தோன்றிக் கைக்கெட்டாமையால், அவை வெறுங்கை முகந்து நிலத்தைத் துழாவலாயின வென்க. (கஎ)

இதுவுமது

கஎ௦. சுற்றநி ணத்துகில் பெற்றன
மென்றுசு லாவுவெ றுங்கையவே
அற்றகு றைத்தலை யென்றுவி
சும்பைய துக்குமெ யிற்றினவே.

ப - ரை :—சுற்ற - (சில பேய்கள் தம் உடம்பில்) சுற்றிக்கொள்ள, நிணம் துகில் - கொழுப்பாகிய துணியை, பெற்றனம் என்று - (கிடைக்க) பெற்றோம் என்று, சுலாவு வெறும் கைய - சுற்றிக்கொள்ளும் வெறுமை யாகிய கைகளை யுடையனவும், அற்ற - (வேறு சில பேய்கள்) அறுப் புண்ட, குறை தலை என்று - தலை குறைந்த பிணமென்று, விசும்பை அதுக்கும் - ஆகாயத்தைக் கடிக்கும், எயிற்றின - பற்களை யுடையனவும்,

வி - ரை :—மாயத்தால் தோன்றிய நிணத்தையும் குறைத்தலைகளையும் பேய்கள் மெய்யென்று கருதலாயின வென்க. 'அதுக்கல்' மெல்லுத லெனினும் பொருந்தும். 'நிணப்போர்வை மூடிக்கொள' [தா - சஅசு] 'நிணக்க லிங்கம் விரித்து விரித்துப் புனையீரே' [தா-டு0க] 'நிணந்து கிலால் வடித்து' [தா-டுசுசு] என இவ்வாசிரியரும், 'ஒண்ணிண மீக்கொ டாணை' [சீவகசி—க0அ0] எனத் திருத்தக்க தேவரும் நிணத்தை ஆடையாகக் கூறியுள்ளமை காண்க. இதில் உருவக வணியும், மயக்க வணியு முள்ளமை கவனிக்க. (கஅ)

இதுவுமது

கஎக. கயிற்றுறி யொப்பதொர் பேய்வறி
தேயுடல் *கௌவின தொக்கவிரைந்
தெயிற்றைய துக்கிநி லத்திடை
†பேய்கணி ரைத்தன மேல்விழவே.

ப - ரை :—உறி கயிறு ஒப்பது - உறியின் கயிற்றைப்போன்ற நரம்புகளை யுடையதாகிய, ஓர் பேய்——, உடல் - (பிணத்தின்) உடலை, கௌவினது ஒக்க - (தன் வாயால்) கௌவினதுபோல, விரைந்து - விரை வாய், எயிற்றை வறிது அதுக்கி - (தன்) பற்களை வீணாய்க் கடிக்க, பேய்கள் - (மற்ற) பேய்கள், நிலத்திடை - பூமியில், நிரைத்தன - இடை விடாதனவாய், மேல் விழ - (விரைந்து ஒன்றன்) மேல் (ஒன்று) விழவும்,

வி - ரை :—பேய்களினுடல் நீண்டு நரம்புகள் வெளித்தோன்றும்படி மெலிந்திருத்தல் கருதி உறிக்கயிறு உவமை கூறப்பட்டது. 'உறிகள் போல் மெய்ந் நரம்பெழுந்தான் தளர்ந்து' [பெரிய திரு - க - ௩ - ௩] என்றார் பெரியாரும். *கயிற்றுறி*—கயிறுகளாலாகிய உறி யெனினுமாம். பேய்கள் ஒன்றன்மேல் ஒன்று விழுந்தமை தங்கள் பசியின் கொடுமையாலும் உணவின் மேலுள்ள விருப்பத்தாலுமென்க. *நிரைத்த*—இடைவிடாத; 'நிரைத்த தீவினை நீங்க' [சீவகசி-கசுா௩] என்றமை காண்க. *அதுக்கி*—எச்சத் திரிபு. *கயிறு*—உவமையாகு பெயர்; *வறிது, நிரைத்தன*—முற்றெச்சங்கள்.

பா - பே :—* கௌவின தொப்ப, † பேய்களிரைத்தன. (கக)

பேய்களின் நகங்கள்

கஎஉ. முறம்பல போலந கங்கண்மு
றிந்துமு கஞ்சித ருமுதுகுந்
திறம்பலி லாவிறல் யோகினி
மாதர்$சி ரித்துவி லாவிறவே.

ப - ரை :—*முறம் போல* - முறங்களைப் போல, *பல நகங்கள் முறிந்து* - (அப்பேய்களின்) பலவாகிய நகங்கள் முறிந்து, *முகமும் சிதற* - முகமும் சிதைய, *முதுகு திறம்பல் இலா* - (போரில்) முதுகு திரும்புதலில்லாத, *விறல்* - வலிமையையுடைய, *யோகினி மாதர்* - யோகினிப் பெண்கள், *சிரித்து* - (அப்பேய்களின் நிலைமையைக் கண்டு) நகைத்தலால், *விலா இற* - (அம்மாதர்களின்) விலா வெலும்புகள் முறியவும்,

வி - ரை :—பேய்களின் நகங்கள் நீண்டு அகன்றிருத்தல் கருதி முறம் உவமை கூறப்பட்டது. *முதுகு திறம்பல்*—புறங்காட்டி யோடல்; யோகினி மாதர்கள் தேவியின் பரிவார மகளிராதலால், 'திறம்ப லிலா விறல்' எனச் சிறப்பித்துக் கூறப்பட்டனர். *விலாவிறச் சிரித்த*லென்றது—மிகவும் அதிகமாய்ச் சிரித்தலை; 'வெள்கிப்போ யென்னு ளேநான் விலவறச் சிரித்திட்டேனே' [திருமா - ௩௪] என்றார் பெரியாரும். யோகினி மாதர்களைப்பற்றி ககக-ம் தாழிசையிற் காண்க. முதுகும் என்பதிலுள்ள உம்மை முகம் என்பதனோடு கூட்டப்பட்டது. இவ்விரு செய்யுட்களிலும் உவமையணி யுள்ளமை காண்க.

பா - பே :—$ சிரித்துமு லாவுவரே. (உ0)

மாய வித்தையை நிறுத்துமாறு தேவியை வேண்டல்

கஎ௩. அக்கண மாளுமண ணங்கினை
வந்தனை செய்துக ணங்களெலாம்
இக்கண மாளுமி னித்தவிர்
விச்சையெ னக்கைவி திர்த்தலுமே.

ப - ரை :—*அ கணம்* - அந்த (பேய்) கூட்டங்கள், *ஆளும் அணங்கினை* - (தம்மை) ஆட்கொள்ளும் தேவியை, *வந்தனை செய்து* - வணங்கி, *இ கணம்* - இந்த நிமிடமே, *கணங்கள் எலாம் மாளும்* - (நம் பேய்) கூட்டங்களெல்லாம் அழிந்தொழியும், *இனி விச்சை தவிர்* - (ஆதலால் தேவியே) இப்போது (இந்த) வித்தையை நிறுத்துவாய், *என கை விதிர்த்தலும்* - என்று சொல்லி (அப்பேய்கள் தங்கள்) கை (முதலிய அவயவங்கள்) நடுங்குதலும்,

வி - ரை:—முதுபேயின் மாய வித்தையைக் கண்டு வெருவிய மற்றப் பேய்கள் அவ்வித்தையை நிறுத்துமாறு தேவியை வேண்டினவென்பதாம். இக்கணம்—இதிலுள்ள கணம்—க்ஷணம் என்பதன் திரிபு; விச்சை—வித்தை என்பதன் போலி; கை உபலக்கணத்தால் மற்றைய உறுப்புக்களையுங் குறித்தது. இச்செய்யுளில் அச்சச் சுவையும், திரிபு என்னுஞ் சொல்லணியும் உள்ளமை காண்க. திரிபாவது:—ஒவ்வோரடியிலும் முதலெழுத்துத்தவிர வேறு பல எழுத்துக்கள் பொருந்தி நின்று பொருள் வேறு படுவதாம். (உக)

தேவியை நோக்கி இயம்பினமை

களசு. கொற்றவர்கோன் வாளபய னறிய வாழுங்
குவலயத்தோர் கலையனைத்துங் கூற வாங்கே
கற்றுவந்தார் கற்றவவன் காணு மாபோல்
கடைபோகக் கண்டருளென் கல்வி யென்றே.

ப - ரை:—கொற்றவர் கோன் - அரசர்களுக் கரசனாகிய, வாள் அபயன்-வாளாயுதத்தையுடைய (முதற் குலோத்துங்க) சோழன், அறிய-அறியும்படி, வாழும் - (பெரும் புகழோடு) வாழும், குவலயத்தோர் - உலகத்திலுள்ள பெரியோர், கலை அனைத்தும் கூற - (பலவகை) நூற்பொருள்கள் எல்லாவற்றையும் கற்பிக்க, ஆங்கே - அவரிடத்தில், கற்று வந்தார் - கற்று வந்தவர்கள், கற்ற - கற்ற நூற்பொருளை, அவன் காணும் ஆ(று) போல் - அந்த முதற்குலோத்துங்கன் (பரிசோதித்து) பார்க்கும் தன்மை போல, என் கல்வி - என்னுடைய இந்திரசால வித்தையை, கடை போக - முற்றும், கண்டருள் என்று - (நீ) காண்பாயாக வென்று,

வி - ரை:—பலவகை நூல்களில் வல்ல பெரியார்பால் பலவகைக் கல்விகளைக் கற்று வந்தவர்களின் அரிய வித்தைகளை முதற் குலோத்துங்கன் காண்பது போல், என் அரிய மாயவித்தைகளைத் தேவியே, நீ இன்னுங் காண்க வென முதுபேய் தேவியை நோக்கி யியம்பின தென்பதாம். அரசனறியும்படி சிறந்த கல்வியும் பரந்த புகழும் படைத்தவரென்பார், 'அபயன் அறிய வாழும்' என்றார். கலை அனைத்தும் என்றது—அறுபத்து நான்கு கலைகளையுமா மென்க. 'அவன் காணு மாபோல்' என்றதனால், முதற் குலோத்துங்கனும் இவற்றை நன்குணர்ந்தவனென்பது விளங்கும். 'கல்வி யிற்பிழை கண்டனன் கேட்கவே' [தா-கூஉச] என்பர் பின்னும். அனைத்தும்—உம்மை முற்றுப் பொருளில் வந்தது. கற்ற—வினையாலணையும் பெயர்; காணுமாறு என்பது காணுமாவெனக் கடை குறைந்து நின்றது. முதற் குலோத்துங்கன் தேவிக்கும், உருத்திர யோகினி குவலயத்தோர்க்கும், கலை இந்திரசால வித்தைக்கும், கற்றுவந்தார் முதுபேய்க்கும் உவமையாதலால், இச்செய்யுள் உவமையணியாம். (உஉ)

தேவி முதுபேயின் இந்திரசாலத்தைத் தடுத்தமை

களரு. வணங்குதலுங் கணங்களெலா மாயப் பாவி
மறித்தெம்மை மறுகூடு சுடுவை யாகில்
அணங்கரசி ருணையென வணங்கு மிப்போ
தவைதவிரெங் கிவைகற்ற யென்ன வாங்கே.

ப - ரை:—வணங்குதலும் - (முதுபேய் என் வித்தையை முற்றும் பார் என்று தேவியை) வணங்கின வளவில், கணங்கள் எல்லாம் - (பேய்) கூட்டங்களெல்லாம், மறித்து - (அம்முது பேயை) தடுத்து, மாயம் பாவி - மாய வித்தைகளைக் கற்ற பாவியே, எம்மை - எங்களை, மறுகூடு

சுடுவை ஆகில் - இரண்டாம் முறையும் வருத்துவாயானால், அணங்கு அரசின் ஆணை - தெய்வ மாதர்களுக்கெல்லாம் தலைவியாகிய தேவியின் மேல் ஆணையாம், என - என்று சொல்ல, அணங்கும் - தேவியும், இப்போது——, அவை தவிர் - (நீ) அந்த வித்தைகளைச் செய்வதை ஒழிப்பாயாக, இவை எங்கு கற்றாய் - இந்த வித்தைகளை (நீ) எங்கே கற்றுக்கொண்டாய், என்ன - என்று (அம்முது பேயைத் தேவி) கேட்க, ஆங்கு - அப்பொழுது,

வி-ரை:—முதுபேய் தன் அரிய வித்தைகளை மேலுங் காட்ட முயல, மற்றப் பேய்கள் விரும்பியபடி, தேவி அவற்றைச் செய்ய வொட்டாமல், அம் முது பேயைத் தடுத்தனளென்பதாம். முதுபேய் தன் வித்தையால் மற்றப் பேய்களை வருத்தினதன்றி, மீண்டும் வருத்த முயன்றமையால் அவை அதனை, 'மாயப் பாவி' என வெறுத்துரைத்தன வென்க. சுடு—முதனிலை திரிந்த தொழிற் பெயர். (௨௩)

### முதுபேய் வரலாறு

௧௭௬. நின்முனிவுஞ் சுரகுருவின் முனிவு மஞ்சி
நிலையரிதென் றிமகிரிபுக் கிருந்தேற் கௌவை
தன்முனிவு மவன்முனிவுந் தவிர்க வென்று
சாதனமந் திரவிச்சை பலவுந் தந்தே.

ப-ரை:—நின் முனிவும் - உன் கோபத்திற்கும், சுரகுருவின் முனிவும் - சுரகுரு சோழன் கோபத்திற்கும், அஞ்சி - பயந்து, நிலை அரிது - (இனி இங்கு) நிலை பெற்றிருத்தல் முடியாது, என்று - என்று நினைத்து, இம கிரி புக்கு - இமயமலைச் சாரலில் புகுந்து, இருந்தேன் கு - இருந்த எனக்கு, ஔவை தன் முனிவும் - தாயாகிய உனது கோபமும், அவன் முனிவும் - அந்தச் சுரகுரு சோழனது கோபமும், தவிர்க என்று - நீங்குக வென்று, சாதனம் மந்திரம் - (நினைத்த காரியங்கள்) சித்தியாதற்குரிய மந்திரங்களையும், விச்சை பலவும் - (வேறு) பல வித்தைகளையும், தந்து - (எனக்குக் கற்பித்து) கொடுத்து,

வி-ரை:—சாதனம்—சித்தியாதல்; நிறைவேற லென்பதாம். அரிது—முடியாது; 'மனக் கவலை மாற்றலரிது' [திருக்கு-௭] என்றதிற் காண்க. ஔவை தன்—இதில் தன் சாரியை; உம்மைகள் நான்கும் எண்ணுப் பொருளில் வந்தன. மந்திர விச்சை—உம்மைத் தொகை; மந்திரமாகிய விச்சை யெனப் பண்புத் தொகையாய்க் கொள்ளலுமாம். (௨௪)

### இதுவுமது

௧௭௭. உன்னுடைய பழவடியா ரடியா டெய்வ
உருத்திரயோ கினியென்பா *ளுனக்கு நன்மை
இன்னமுள கிடைப்பனவிங் கிருக்க வென்ன
யானிருந்தேன் சிலகால மிருந்த நாளில்.

ப-ரை:—பழமை உன்னுடைய அடியார் - தொன்றுதொட்டு வரும் உன்னுடைய அடியார்களுக்கு, அடியாள் - அடியவளாகிய, தெய்வம் - தெய்வத்தன்மையையுடைய, உருத்திர யோகினி என்பாள்——, உனக்கு நன்மை கிடைப்பன - உனக்கு நன்மை தருவனவாகிய மந்திரங்கள், இன்னம் உள - இன்னும் (பல) இருக்கின்றன, இங்கு இருக்க - (ஆகையால்) நீ இங்கேயே இருப்பாயாக, என்ன - என்று

(அந்த போகினி மாது) சொல்ல, யான் சில காலம் இருந்தேன் - நான் சில காலம் (அங்கே தங்கி) இருந்தேன், இருந்த நாளில் - (அவ்வாறு அங்குத் தங்கி) இருந்த காலத்தில்,

வி - ரை :—'பழவடியா ரடியாள்' என்றதற் கேற்ப, 'நானு முனக்குப் பழவடி யேன்' [திருப்பல்-கக] எனவும், 'பழவடி யேற்கருள் செய்ய வெழுந்திரு' [திருவரங்-அந்-க] எனவும் வருமாறு காண்க. 'தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்' என்றார் சுந்தரமூர்த்திசுவாமிகளும் [திருத்தொண்-க]. கிடைப்பன— வினையாலணையும் பெயர். பா - பே :—* எனக்கு.

(கருங) கட்டிவிட்டு (கருச) சயனத்தின்மேல் (கருரு) இருந்தபோழ்தின் (கருசு) நெடும்பேய் கும்பிட்டு (கருஎ) அறிதி (கருஅ) என்னக்கேட்டு (கருகூ) (முதுபேய்) அணுகி, வணங்க (கசூ0) என்ன (கசூக) இறைஞ்சி (கசூஉ) ஆன பார் (கசூங) மிதப்ப பார் (கசூச) இன்று பார் (கசூரு) நூறு பார் (கசூசு) வழுக்கல் பார் (கசூஎ) பேய்கள் பார் (கசூஅ) என்ற போதில், உண்ண வெண்ணி, மண்ணின்மேல் (கசூகூ) விழுந்து, துழாவிடும் (கஎ0) கைய, எயிற்றின (கஎக) பேய்கள், மேல் விழ (கஎஉ) சிரித்து விலாவிற (கஎங) கணங்களெலாம், கைவிதிர்த்தலும் (கஎச) (முதுபேய்) கண்டருளென்று (கஎரு) வணங்குதலும், அணங்கும், என்ன வாங்கே (கஎசு) பலவுந் தந்து (கஎஎ) இருக்க வென்ன, இருந்த நாளில் என முடிக்க. (உரு)

இந்திரசாலம் முற்றிற்று.

---

# அ. இராச பாரம்பரியம்*

**இராச பாரம்பரியம்** :—இது இராசரது பாரம்பரியம் என விரிதலால், ஆறன் தொகையாம். பாரம்பரியம் - இடைவிடாமல் வரும் முறைமை; சோழ வேந்தர்களின் இடைவிடாமல் வரும் குல முறைமை வரலாற்றை யுணர்த்தும் செய்யுட்களின் பகுதி யென்பது இதன் பொருளாம்.

முன்பு கூறிய முதுபேய் இமயமலையி லுறைந்தபோது, நாரத முனிவர் ஆங்கெழுந்தருளிக் கரிகாற் சோழனை நோக்கி, 'வெற்றிவேல் வேந்தே, முன்பு வியாச முனிவர் மொழிந்தபடி பாரதக் கதையை விநாயகக் கடவுள் மேருமலையி லெழுதினர்; அதுபோல, இப்போது நான் சோழர் வரலாற்றைச் சொல்கிறேன்; நீ அதனை இமயமலையி லெழுதுக' என்ன, அம்மன்னவன் அதனை அவ்வாறே வரைந்தனன். முதுபேய் அதனைக் கற்று வந்து தேவிக்குக் கூறுவதுபோல், ஆசிரியர் இதில் சோழர் வரலாற்றை விரித்துக் கூறுகிறார்.

---

* திருமுடி அடைபு-இத் தலைப்புச் சென்னை அரசாங்கத்துக் கையெழுத்துப் பிரதியில் உள்ளது.

கரிகாலன் புலிக்கொடி பதித்தமை

களஅ. செண்டு கொண்டுகரி காலன்$னொரு காலி னிமயச்
சிமய மால்வரைதி ரித்தருளி மீள வதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்
‡பாய்பு லிக்குறிபொ றித்ததும றித்த பொழுதே.

ப - ரை:—கரிகாலன் - கரிகாற் சோழன், ஒரு காலின் - (வடதிசை நோக்கிச் சென்ற) ஒரு சமயத்தில், சிமயம் - சிகரங்களையுடைய, இமயம் மால் வரை - இமயமாகிய பெரிய மலையை, செண்டு கொண்டு - செண்டால், திரித்தருளி - (கீழும் மேலுமாய்) திருப்பி, மீள - மறுபடியும், அதனை - அம்மலையை, பண்டு நின்றபடி - முன்பு நின்றது போலவே, இது நிற்க என்று - இம்மலை நிற்பதாக வென்று, பாய் புலி குறி - (விரைந்து) பாயும் புலியின் வடிவமெழுதிய (தன்) கொடியை, முதுகில் பொறித்து - (அம்மலையின்) நடுவில் பதித்து, அது - அம்மலையை, மறித்த பொழுது - (மீண்டும் முன்போல்) திருப்பி நிலை நிறுத்திய காலத்தில்,

வி - ரை:—கரிகாலன் தமிழ்நாட்டில் தன்னோடெதிர்த்துப் போரும் பகைவரைப் பெறாமல், வடநாட்டெல்லை நோக்கிச் செல்லலுற்றனன். அதுகாலை இமயமலை தறுக்கிட்டு அவனை அப்புறஞ் செல்லவொட்டாமல் தடுத்தது. அதனால் அவன் கடுஞ் சினமெய்தி, அம்மலையைத் தன் கைச் செண்டால் திரித்து அதன்மேல் தன் புலிக் கொடியைப் பொறித்தனனென்ப. இதனை, 'செருவெங் காதலிற் றிருமா வளவன்.........சிமயப் பிடர்த்தலைக் கொடுவரி யொற்றி' [சிலப்-ரு-கO-கஅ] எனவும், 'இலங்குவேல் கரிகாற் பெருவளத்தோன், வன்றிறற்புலி இமயமால் வரைமேல் வைக்க வேகுவோன்' [பெரியபு-திருக்குறிப்புத்-அரு] எனவும் வருமாற்றா னறிக. சோழர்களைப் போலவே சேரபாண்டியர்களும் ஒவ்வோர் காலத்தில் தலைசிறந்து விளங்கினரென்றும் அவ்வுக்காலத்தில் அவர்களும் இமயமலை யளவுஞ் சென்று அதில் தங்கள் கொடிகளைப் பதித்தன ரென்றுங் கூறுப. 'அமைவர லருவி யிமையம்விற் பொறித்து' [பதிற்றுப்-உம்-பதி-ச] எனவும், 'பொன்படு நெடுங்கோட் டிமயஞ் சூட்டிய வேம விற்பொறி, மாண்வினை நெடுந்தேர் வானவன்' [புறநா-கூக] எனவும் வருவனவற்றால் சேரரும், 'பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதி' [பெரியாழ்-ரு-ச-எ] எனவும், 'பண்டு கேண்டை வடவரைமேல் வைத்த வானவன் மாறன்' [பாண்டி-கோ-உOஉ] எனவும், 'சென்றடி னல்வசு கிரிதி ரித்திடு செழியன்' [வில்லி பா-க-ம் போர்-சஙு] எனவும், 'பொற்றடங் கிரியின்மீது பொருகயல் பொறித்து மீண்ட, வெற்றிகொள் மன்னர்கோன்' [திருவாதவூ-பு-குதிரையிட்ட-ச-ஙு] எனவும் வருவனவற்றால் பாண்டியரும் அம்மலையில் தங்கள் கொடிகளைப் பதித்தமை யுணர்க. செண்டு—ஒருவகையாயுதம்; இதனைச் சாத்தனருளால் கரிகால் மன்னவ னெய்தின னென்ப. 'மால்வரை............முதுகில்' இதனைத் தாழிசை உOஅ-ல் காண்க. இச் செய்யுளை அடியார்க்கு நல்லார் மேற்கோளாகக் கொண்டிருக்கின்றனர் [சிலப்-ரு-கூரு-கஅ].

பா - பே:—$ ஒரு நாளில், ‡ பாய் புலிக்கொடி. (க)

நாரதர் கரிகாலனைக் காணல்

களகூ. கால முப்மையுமு ணர்ந்தருளு நார தனெனுங்
கடவுள் வேதமுனி வந்துகடல் சூழ்பு வியினின்
போலு மன்னருள ரல்லரென வாசி புகலாப்
புகல்வ தொன்றுளது கேளரச வென்று புகல்வான்.

ப - ரை :—மும்மை காலமும் - மூன்று காலங்களையும், உணர்ந்தருளும் - அறிந்தருளும், நாரதன் எனும் - நாரதர் என்று சொல்லப் படும், வேதம் - வேதங்களை யுணர்ந்த, கடவுள் முனி - தெய்வத் தன்மையையுடைய முனிவர், வந்து - (கரிகாலன் எதிரில்) வந்து, அரச கரிகால் வேந்தே, கடல் சூழ் புவியில் - கடலால் சூழப்பட்ட (இந்த) உலகத்தில், நின் போலும் மன்னர் - உன்னைப்போன்ற அரசர்கள், உளர் அல்லர் - (ஒருவரும்) இலர், என ஆசி புகலா - என்று ஆசி மொழிகள் சொல்லி, புகல்வது - (நான் உனக்கு) சொல்வதாகிய, ஒன்று உளது - ஒரு விஷயம் இருக்கிறது, கேள் என்று புகல்வான் - (அதனை நீ) கேட்பாயாக வென்று சொல்லத் தொடங்கினர்.

வி - ரை :—(கரிகாலன் இமயமலையில் தன் புலிக் கொடியைப் பதித்ததும்) நாரதமுனிவர் அம் மன்னவனுக் கெதிரில் வந்து தோன்றின ரென்பதாம். காலமும்மையாவன:—இறப்பு, நிகழ்வு, எதிர் வென்பன: முக்காலங்களையு முணரு மாற்றலுடையராதலால், நாரதரைக் கடவுள் முனி யென்றார். நாரதன்—நாரம்= அஞ்ஞானத்தை, த= அழிப்பவன். 'நின்போலு மன்ன ருளரல்லர்' என்றது கல்வி, அறிவு, ஆண்மை முதலியவற்றில் நின்னை யொப்பவரிலர் என்றவாறும். மும்மையும்—உம்மை முற்றுப் பொருளது. (கஎஎ) இருந்த நாளில் (கஎஅ) மறித்த பொழுது (கஎகூ) முனிவந்து, புகல்வான் என முடிக்க. (உ)

இதுவுமது

கஅ0. பண்டு பாரதமெ னுங்கதைப ராச ரன்மகன்
பகர வெங்கரிமு கன்பரும ருப்பை யொருகைக்
கொண்டு மேருசிக ரத்தொருபு றத்தி லெழுதிக்
குவல யம்பெறுத வப்பயனு ரைப்ப வரிதால்.

ப - ரை :—பண்டு - முன்பு, பராசரன் மகன் - பராசர முனிவருக்குப் புதல்வராகிய வியாச முனிவர், பாரதம் எனும் கதை - பாரதம் என்னுங் கதையை, பகர - சொல்லி வர, வெம் கரி முகன் - (யாவரும் வணங்க) விரும்பும் யானை முகத்தையுடைய விநாயகக்கடவுள், பரு மருப்பை - (தனது) பெரிய தந்தத்தை, ஒரு கை கொண்டு - ஒப்பற்ற (தன்) வலக்கையால் பிடித்து, மேரு சிகரத்து - மேருமலை யுச்சியின், ஒரு புறத்தில் எழுதி - ஒரு பக்கத்தில் எழுதுதலால், குவலயம் - உல கத்திலுள்ளோர், பெறு தவம் பயன் - அடைந்த தவத்தின் பயனை, உரைப்ப - (எம்மால் அளவிட்டு) சொல்ல, அரிது - முடியாததாகும்.

வி - ரை :—வியாசர் பாரதக் கதையைக் கூற விநாயகர் தமது கோட் டால் அதனை மேருமலையில் எழுதின ரென்பதை, 'முனிராசன் மாபா ரதஞ் சொன்னநாள், ஏடாக மாமேரு வெற்பாக வங்கூ ரெழுத்தாணிதன், கோடாக வெழுதும் பிரான்' [வில்லிபா - காப்பு - க] எனவும், 'பனிக்கோட்டு மால்வரை மேல் பாரதப்போர் தீட்டும், தனிக்கோட்டு வாரணம்' [பாரதவெ - காப்பு - க எனவும், 'பாரதங் கோட்டு நுதியா லெழுதிய பண்ணவனே' [பழமலை அந்-அ-க எனவும் வருமாற்றானறிக. பாரதம் கற்போர் பலவகைப் பயன்களை யெய்துவ ரென்பார், 'தவப்பய னுரைப்ப வரிது' என்றார். பகர—இவ்வகரவீற்று வினை யெச்சம் நிகழ்காலப் பொருளை யுணர்த்தினது. எழுதி—எச்சத்திரிபு; குவலயம்- இடவாகு பெயர். (ந

சோழர் வரலாற்றை யெழுதுமாறு கூறல்

கஅக. பார தத்தினுள வாகியப வித்ர கதையெம்
பரம னற்சரிதை மெய்ப்பழைய நான்ம றைகளே
நேர தற்கிதனை நான்மொழிய நீயு மெழுதி
நெடிய குன்றின்மிசை யேயிசைவ தான கதையே.

ப - ரை:—பாரதத்தின் - மகா பாரதத்தில், உளவாகிய - (கூறி) இருப்பனவாகிய, பவித்ர கதை - பரிசுத்தமான கதைகள், எம் பரமன் - எமது மேலான கடவுளாகிய கண்ணபிரானது, நல் சரிதை - சிறந்த கதைகளும், மெய் - உண்மையாகிய, பழைய நால் மறைகளே - பழைமை யாகிய நான்கு வேதங்களின் பொருள்களுமேயாம், அதற்கு - அந்தப் பாரதத்திற்கு, நேர் - ஒப்பாக, இசைவது ஆன கதை - பொருந்துதலான கதையாகிய, இதனை - (சோழ அரசர் பரம்பரையாகிய) இவ்வரலாற்றை, நான் மொழிய - நான் சொல்ல, நெடிய குன்றின் மிசை - உயர்ந்த (இமய) மலையின்மேல், நீயும் எழுதி - நீயும் எழுதுவாயாக.

வி - ரை:—(வியாசர் கூறிய பாரதக் கதையை விநாயகர் மேருமலையில் எழுதினற்போல்) நான் மொழியுஞ் சோழர் வரலாற்றை நீ இமயமலையி லெழுதுக வென நாரதர் கரிகாலனுக் குரைத்தன ரென்க. பாரதம் ஐந்தாம் வேதமாகலான், 'பழைய நான்மறைகள்' என்றார். 'பாரதத்தினுள.........நற்சரிதை' என்றமைக் கேற்ப,'மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கும்' [வில்லிபா-தற்சிறப்பு-கூ] என வில்லிபுத்தூராருங் கூறியுள்ளமை காண்க. உள—குறிப்பு வினையாலணை யும் பெயர்; இதில், உண்மை—பகுதி; நீயும்—உம்மை இறந்தது தழுவியது; எழுதி—முன்னிலையொருமை வினைமுற்று; இசைவது—எதிர்காலத் தொழிற் பெயர். (சு)

மறையின் உட்பிரிவுகள்

கஅஉ. அதன் முதற்கண்வரு மாதிமுதன் மாய னிவனே
அப்ர மேயமெனு மெய்ப்ரியம தாக வுடனே
பதமு மிப்பதம்வ குக்கவரு பாத மதுவும்
பாத மானசில பார்புகழ வந்த †வவையும்.

ப - ரை:—அதன் முதல் கண் - அந்தப் பாரதக் கதையின் முதலில், ஆதி முதல் - முதன்மைக் கடவுளாகிய, மாயன் - அதிசயிக்கத்தக்க கண்ணபிரானாகிய திருமால், வரும் - (சொல்லப்பட்டு) வருவான், இவனே - இந்தத் திருமாலே, அப்ரமேயம் எனும் - (இத்தன்மைத்து என்று) அளவிடப்படாதது என்று சொல்லப்படும், மெய் - உண்மைப் பொருளாகிய கடவுளாம், ப்ரியம் அது ஆக - (படைப்புத் தொழிலில் அவனுக்கு) இச்சை யுண்டாக, உடனே——, பதமும் - உலகங்களையும், இ பதம் - இந்த வுலகங்களில், வகுக்க வரு - வகை செய்யும்படி (தோன்றி) வரும், பாதம் அதுவும் - (ஏழுவகைப் பிறப்பின்) பிரிவுகளையும், பாதம் ஆன சில - அந்தப் பிரிவுகளான சிலவற்றுள், பார் புகழ வந்த அவையும்- உலகத்தார் புகழ வந்த அந்தப் பிறவிகளையும்,

வி - ரை:—திருமால் படைப்புத் தொழில் புரிய விரும்பிய வளவில் உலகங் களும், உலகங்களிலுள்ள உயிர்களும் தோன்றின வென்பதாம். இச்செய்யுளில் திருமாலின் பெருமையையும் உலகத் தோற்றத்தையும் ஆசிரியர் கூறியுள்ளமை

காண்க. ப்ரமேயம்—அளவிடப்படுவது; அப்ரமேயம்—அளவிடப் படாதது. பதம்—பதவி; இங்கே உலகங்களை யுணர்த்தினது. பாதம்—பிரிவு; எழுவகைப் பிறப்பாவன:- தேவர், மனிதர், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவர மென்பன; 'பார்புகழ வந்த அவை' என்றது—தேவரையும் மக்களி லுயர்ந் தோரையு மென்க. பதம், பாதம் என்பவற்றை வேதங்களின் பிரிவுகளாகக் கொண்டு பொருள் கோடலுமாம். வரும்—செய்யு மென்னும் வாய்பாட்டு வினை முற்று; இங்கே ஆண்பாலில் வந்தது. பா - பே:—† கதையும். (௫)

இதுவுமது

கஅ௩. அந்த முட்படவி ருக்குமவ்வி ருக்கின் வழியே
ஆகி வந்தவவ்வ ருக்கமும்வ ருக்க முழுதும்
வந்த வட்டகமு மொட்டரிய சங்கி தைகளும்
வாய்மை வேதியர்க டாம்விதியெ னும்வ கையுமே.

ப - ரை:—அந்தம் உட்படு அ இருக்கும் - (வேதத்தின்) உறுப்புக்கள் அடங்கிய இந்த இருக்கையும், அ இருக்கின் வழியே - அந்த இருக்கின் வழியே, ஆகி வந்த - உண்டாகி வந்த, வருக்கமும் - வருக்கங்களையும், அ வருக்கம் முழுதும் - அந்த வருக்கங்கள் முழுதும், வந்த அட்டகமும் - வந்த அஷ்டகங்களையும், ஒட்டு - (அந்த அஷ்டகங்களோடு) சம்பந்தப்பட்ட, அரிய சங்கிதைகளும் - சிறந்த சங்கிதைகளையும், வாய்மை வேதியர்கள் தாம் - உண்மையைப் பேசும் பிராமணர்களின், விதி எனும் வகையும் - (வேள்வி) தொழில்களின் வகைகளையும் (சொல்லி),

வி - ரை:—செய்யுள் வடிவமானது இருக்காம்; சில இருக்குகள் சேர்ந்தால் வர்க்கமாம்; (சில வர்க்கங்கள் சேர்ந்தால் சூக்தமாம்; சில சூக்தங்கள் சேர்ந்தால் அத்தியாயமாம்); சில அத்தியாயங்கள் சேர்ந்தால் அஷ்டகமாம்; எட்டு அஷ்டகம் சேர்ந்தால் சம்ஹிதையாம்; இதனை இருக்குவேத சம்ஹிதை என்பர். (சம்ஹிதை—சங்கிதை) இவை யனைத்தும் வேதத்தின் உட்பிரிவுகள். இவை மந்திரங்களின் பகுதிகளாம். அரிய—அருமை யென்னும் பண்படியாய்ப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; விதி—விதிக்கப்பட்ட தொழில்; 'சேயல்விதி கருமங் கன்மஞ் செய்தொழில்' [சூடாம-நி-கூ-உ.] என்றமை காண்க. (௬)

திருமாலே முதற்குலோத்துங்க னெனல்

கஅச. கமல யோனிமுத லாகவரு முங்கண் மரபிற்
காவன் மன்னவர்க ளாகிவரு கின்ற முறையால்
அமல வேதமிது காணுமிதி லார ணநிலத்
தமல னேயபய னாகிவரு கென்ற ருளியே.

ப - ரை:—கமலம் யோனி - செந்தாமரை மலரைப் பிறப்பிடமாக வுடைய பிரமன், முதல் ஆக - முதல்வனாக, வரு - தோன்றி வருகின்ற, உங்கள் மரபில் - உங்கள் குலத்தில், காவல் மன்னவர்கள் ஆகி - (நீதி தவறாமல்) காக்குந் தொழிலையுடைய அரசர்களாய், வருகின்ற முறையால் - (பரம்பரையாய்ப் பலர்) வருகின்ற தன்மையால், இது - (நான் சொல்லும்) இந்தச் சரித்திரம், அமல வேதம் - பரிசுத்தமாகிய வேதமாம், இதில் - இந்தச் சரித்திரத்தில், ஆரணம் நிலத்து அமலனே - வேதத்தில் சொல்லப்பட்ட திருமாலே, அபயன் ஆகி - (முதற் குலோத்துங்க) சோழனாகி, வருக என்று - (வந்து) பிறப்பான் என்று, அருளி - (நாரதர் கரிகாலனுக்குப் பின்னும்) சொல்லி,

வி - ரை :—நீதி தவருத சோழவேந்தர் பலர் வரலாறு இதில் கூறப்படுதலால், 'அமல வேதமிது' எனவும், அவர்க ளனைவரினும் முதற் குலோத்துங்கன் மேன்மை யுற்றவனுதலால், 'அமலனே யபய ஞகிவரும்' எனவும் கூறினுர். [தா-உ௩உ] அமலன்—பரிசுத்தமானவன். கமலம்—நீரையலங்கரிப்பது, தாமரையென்பதாம்; யோனி—பிறப்பிடம்; கமல யோனி—தாமரை மலரைப் பிறப்பிடமாக வுடையவ னென்பதாம். திருமால் உந்தியில் தாமரை பிறந்ததெனவும், பிரமன் அம்மலரிலிருந்து தோன்றினனெனவும் நூல்கள் கூறும். காணும்—முன்னிலை யசைச்சொல்; அமலனே—ஏகாரம் பிரிநிலை; தோற்றமெனினுமாம். வருகென்று நிலைமொழியில் அகரந்தொக்கது. அருளியே—ஏகாரம் ஈற்றசை. (எ)

**நாரதர் தம் மிருப்பிட மேகல்**

கஅ௫. அரணி வேள்வியில கப்படும கண்ட வுருவாய்
அரவ ணைத்துயிலு மாதிமுத லாக வபயன்
தரணி காவலள வுஞ்செலமொ ழிந்து முனிவன்
தானெ ழுந்தருள மாமுனிமொ ழிந்த படியே.

ப - ரை :—அரணி - தீக்கடை கோலிலிருந்து உண்டாகும் நெருப்பினுல் செய்யப்படும், வேள்வியில் - யாகத்தில், அகப்படும் - பொருந்தியிருக்கும், அகண்ட உருவு ஆய் - எங்கும் நிறைந்த வடிவாய், அரவு அணை - (ஆதிசேஷ னென்னும்) பாம்பாகிய படுக்கையில், துயிலும் - அறிதுயில் கொள்ளும், ஆதி முதல் ஆக - திருமால் முதலாக, தரணி - உலகத்திலுள்ளவர்களை, காவல் - காக்குந் தொழிலைப் புரியும், அபயன் அளவும் - (முதற் குலோத்துங்க) சோழன் வரையினும், செல - (முறையால்) வர, முனிவன் மொழிந்து - நாரத முனிவர் சொல்லி, எழுந்தருள - (தமதிருப்பிடம்) போக, மா முனி - சிறந்த (அந்த) முனிவர், மொழிந்த படி - சொன்னபடி,

வி - ரை :—நாரதர் திருமால் முதல் முதற் குலோத்துங்க னளவுஞ் சோழர் வரலாற்றைச் சொல்லி முடித்துத் தம்மிருப்பிடஞ் சென்றன ரென்பதாம். திருமால் யாகத்திற்குத் தலைவராதல் கருதி, 'அரணி வேள்வியில்.........ஆதி' என்ருர். அரணி—தீக்கடைகோல்: அரசங்கட்டையிலிருந்து நெருப்பை உண்டாக்கி யாகமியற்றப் படுதலால், 'அரணி வேள்வி' என்ருர். வேள்வி= வேள்—பகுதி, வி—தொழிற் பெயர் விகுதி; விரும்பியவற்றைத் தரவல்லதென்பது. அகண்டம்-இதனை, அ + கண்டம் எனப் பிரிக்க. கண்டம்—துண்டு; அகண்டம்—துண்டு படாதது, பூரணமானது; (எங்கும்) நிரம்பின தென்பதாம். தரணி—இடவாகுபெயர். கஅஉ-ம் செய்யுள் முதல் இந்நான்கு செய்யுட்களும் ஒரு தொடர்.

(கஅஉ) மாயனிவனே......மெய், பதமும், பதமும், பாதமதுவும், அவையும் (கஅ௩) இருக்கும், வருக்கமும், அட்டகமும், சங்கிதைகளும், வகையும் சொல்லி (கஅச) வருகின்ற முறையால், அமல வேதமிது காணும் என்றருளி (கஅ௫) முனிவன் எழுந்தருள மாமுனி மொழிந்தபடி,........(உ0அ) எழுதினுன் என முடிக்க. (அ)

**திருமால், பிரமன், மரீசி, காசிபன், சூரியன் வழிமுறை**

கஅசு. ஆதி மாலமல நாபிகம லத்த யனுதித்
தயன்ம ரீசியெனு மண்ணலைய ளித்த பரிசுங்
காதல் கூர்தரும ரீசிமக ஞகி வளருங்
காசி பன்கதிர ருக்கனைய ளித்த பரிசும்.

ப - ரை :—ஆதி - (எல்லாவற்றிற்கும்) முதன்மையாகிய, மால் - திருமாலினது, அமலம் - பரிசுத்தமாகிய, நாபி கமலத்து - உந்தியில் தோன்றிய தாமரை மலரிலிருந்து, அயன் உதித்து - பிரமன் பிறந்து, அயன் - (அந்த) பிரமன், மரீசி எனும் - மரீசி என்று சொல்லப்படும், அண்ணலை - பெருமையிற் சிறந்தோனை, அளித்த பரிசும் - பெற்ற விதத்தையும், காதல் கூர் தரு - (உயிர்களிடத்தில்) அன்பு மிகுந்த, மரீசி மகன் ஆகி - (அந்த) மரீசி முனிவன் மகனாய், வளரும் காசிபன்-வளர்ந்த காசிப முனிவன், கதிர் அருக்கனை - கிரணங்களையுடைய சூரியனை, அளித்த பரிசும் - பெற்ற விதத்தையும்,

வி - ரை :—திருமால் பிரமனையும், பிரமன் மரீசியையும், மரீசி காசிபனையும், காசிபன் சூரியனையும் பெற்றன ரென்பதாம். மால்—அன்பு; தன்னையடைந்த அடியாரிடத்தில் அன்புடையவ னென்பதாம். அயன்—அஜன் என்பதன் திரிபு, பிறப்பில்லாதவ னென்பதாம். அகரம் திருமாலைக் குறிக்குமாகையால், அந்தத் திருமாலினிடமிருந்து தோன்றினவன் எனப் பொருள் கோடலுமாம். இது முதல் உ௦௭-ம் தாழிசை வரையில் சோழர் வரலாற்றை நாரதர் கரிகாலனுக்குக் கூறுவதுபோல் ஆசிரியர் அதனை விரித்துரைக்கிறர். (௬)

மனு, இக்குவாகு வரலாறு

க௮௭. அவ்வ ருக்கன்மக னாகி *மனு மேதி னிபுரந்
தரிய காதலனை யாவினது கன்று நிகரென்
றெவ்வ ருக்கமும்வி யப்பமுறை செய்த கதையும்
இக்கு வாகுவிவன் மைந்தனென வந்த பரிசும்.

ப - ரை :—மனு - மனு என்னும் வேந்தன், அ அருக்கன் - அந்தச் சூரியனுக்கு, மகன் ஆகி - மகனாய்ப் பிறந்து, மேதினி புரந்து - உலகத்தி லுள்ளவர்களைப் பாதுகாத்து, அரிய காதலனை - (தனது) சிறந்த மகனை, ஆவினது கன்று - (ஒரு) பசுவின் கன்றுக்கு, நிகர் என்று - ஒப்பென்று நினைத்து, எ வருக்கமும் - (தேவர், மனிதர் முதலிய) எல்லாக் கூட்டத்தினரும், வியப்ப - அதிசயிக்கும்படி, முறை செய்த - (கொலை புரிந்து) நீதி செலுத்திய, கதையும் - வரலாற்றையும், இக்குவாகு - இக்ஷுவாகு என்னும் அரசன், இவன் மைந்தன் - இந்த மனு வென்னும் வேந்தனுக்கு மகன், என - என்று சொல்லும்படி, வந்த பரிசும் - பிறந்த விதத்தையும்,

வி - ரை :—மனுச் சோழன் முறைபுரிந்த வரலாறு :—சூரியன் புதல்வனாகிய மனுச்சோழன் அரசு புரியுங்கால், அவன் புதல்வன் வீதி விடங்கன் ஒருநாள் மாலை தேர்மீதிவர்ந்து வீதியுலாவச் சென்றான். அப்போது ஒரு பசுவின் கன்று குதித்தோடி வந்து தேர்க்காலி லகப்பட் டுயிர் துறந்தது. அவ்வேந்தன்இதனை யறிந்து அக்கன்றுக்குப் பதில் தன் மகனைத் தேர்க்காலிலிட்டுக் கொலைசெய்யுமாறு தன் அமைச்சனுக்குக் கட்டளையிட்டான். அவன் அவ்வாறு செய்யத் துணியாது தன் உயிரைத் தானே மாய்த்துக்கொண்டான். பின்பு அவ்வேந்தன் தன் மகனைத் தரைமேல் கிடத்தி அவன்மேல் தேரைச்செலுத்தினான். உடனே சிவபெருமானார் தோன்றி, பசுவின் கன்றையும், மந்திரியையும், அரசன் மைந்தனையும் எழுப்பித் தந்தன ரென்பதாம். இதனை 'அரும்பெறற் புதல்வனை

* மனு, இக்குவாகு, ககுத்தன் முதலானோரை வடநாட்டு வேந்தர்க ளென்ப. தென்னாட்டை யாட்சிபுரிந்த சோழ வேந்தர்களைப் போல், அவர்களும் சூரிய குலத்தினராதல் கருதி அவ்வேந்தர்களும் இங்குக் கூறப்பட்டனர் போலும். இது ஆராய்ச்சிக் குரியதாம்.

யாழியின் மடித்தோன்' [சிலப்-உ0-ருரு] எனவும், 'மகனை முறைசெய்த மன்னன்' [மணிமே-உஉ-உக0] எனவும், 'கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையு மூர்ந்தான்' [பழமொ-உசஉ] எனவும், 'சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரின், மைந்தனை யூர்ந்த மனுவேனும்' [விக்கிர - உலா - எ - அ] எனவும், 'மருளும் பசுவொன்றின் மம்மர்நோய் தீர, உருளும் திருத்தே ருரவோன்' [குலோத்-உலா-ங-ச] எனவும், 'அறவாழி மைந்தன்மே லூர்ந்தோன்' [இராச-உலா-ரு] எனவும், 'மகவிரதத் துருளியிஞேர் சுரபிதுயர் தணித்திடுவோன் மகிழ்வுற் றூர்ந்து' [அரிசமய-அ-க] எனவும் வருமாற்றானறிக. 'ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான், தருமந்தன் வழிச்செல்கைக் கடனென்று தன் மைந்தன், மருமந்தன் தேராழி யுறவூர்ந்தான்' [பெரியபு - திருவாரூர்-சச] என்பதும் இங்குக் கவனிக்கத்தக்கது. இதில் ஒரு மைந்தன் உள்ளான் என்றதனுல், மனுச் சோழனுக்குரிய புதல்வன் ஒருவனே யெனத் தெரிகிறது. இம் மனுச்சோழனையே மனுமுறை கண்ட சோழன் எனவும், மனுநீதிச் சோழன் எனவுங் கூறுவார். மனுச் சோழனை விவஸ்வான் புதல்வனுகிய வைவஸ்வத மனு எனக் கூறுவாருமுளர்.

இக்ஷ்வாகுவின் வரலாறு :- மனுச்சோழன் புதல்வனுகிய இக்குவாகு வேந்தன் நெடுங்காலமளவும் நான்முகக் கடவுளை நோக்கிக் கடுந்தவ மியற்றினன். பின்பு அக்கடவுள் தோன்றி 'நீ விழைந்த வரம் யாது?' என அம் மன்னவனை வினவினர். அதற்கு அவ்விறையவன், 'சுவாமி, தாங்கள் திருவாராதனைசெய்து வரும் அரவணைச்செல்வராகிய அரங்கநாதரை அடியேனுக்குத் தந்தருளல் வேண்டும்,' என அவரை வணங்கி நின்றனன். பிரமதேவர் அம்மன்னவன் பக்திக்கு வியந்து அவன் விரும்பியபடி அரங்கநாதரை அவர் எழுந்தருளியிருக்கும் அரங்கவிமானத்தோடு வழங்கினர். பின்பு அவ்விறையவன் தனது அயோத்தி நகரை யணுகி, அங்கே அப்பகவானுக்கு ஒரு கோயிலமைத்து அவரை நாள்தோறும் வணங்கி வந்தான். இக்குவாகு மன்னன் முதல் இராமபிரா னளவுமுள்ள சூரியகுல வேந்தரனைவரும் அந்த அரங்கநாதரையே தமது குலதெய்வமாகக்கொண்டு தொழுது வரலாயினர். இராமபிரான் இராவணனைக் கொன்று திருவயோத்தியில் முடி புனைந்துகொண்டபின், அரங்கநாதரை விபீஷணனுக்களித்தனன். அவ்வரக்கர் வேந்தன் அந்தப் பகவானை இலங்கைக்குக் கொண்டு செல்லுங்கால், அவ்வெம்பெருமான் இரு காவிரி யாறுகளின் நடுவின் நிலைபெற்று நின்றனன். அவ்விடமே திருவரங்கமென்னுந் திருப்பதியாம். இது திருமால் எழுந்தருளியிருக்கும் நூற்றெட்டுத் திவ்விய தேசங்களில் முதன்மை பெற்றது. பெருமாள் என்னும் ஸ்ரீ ராமபிரான் அரங்கநாதரைத் தொழுது வந்தமையால், அவருக்குப் பெரியபெருமாள் என்னும் பெயர் உண்டாயிற்று. இக்குவாகு வேந்தன் பிரமதேவரை வணங்கி அரங்கநாதரைக் கொணர்ந்தமையை, 'பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி, மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டு, பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண, அணியரங்கந் தந்தானை யறியாதா ரறியாதார்' [கம்பரா-குலமுறை-உ] என்றதனு லறிக. (க0)

கருத்த வேந்தன் மேன்மை

கஅஅ. இக்கு வாகு †வின்மக ன்புதல்வ னுன வுரவோன்
இகலு வோனிகலு ரஞ்செய்துபு ரந்த ரனெனுஞ்
சக்கு வாயிரமு டைக்களிறு வாக னமெனத்
தானி ருந்துபொரு தானவரை வென்ற சயமும்.

ப - ரை :—இக்குவாகுவின் - இக்ஷ்வாகு என்னும் அரசனுக்கு, மகன் - மகனுகிய விகுக்ஷி வேந்தனுக்கு, புதல்வன் ஆன - மகனுகிய,

உரவோன் - வலிமை யுடையவனும், இகலுவோன் - (தன் பகைவரை வெல்லுமாறு) போர் புரிபவனுமாகிய ககுஸ்தன் என்னும் மன்னன், இகல் உரம் செய்து - மிக்க பராக்கிரமச் செயல்களைப் புரிந்து, ஆயிரம் சக்கு உடை - ஆயிரம் கண்களையுடைய, புரந்தரன் எனும் களிறு - தேவேந்திரனாகிய ஆண் யானையை, வாகனம் என - வாகனமாகக்கொண்டு, தான் - அந்தக் ககுஸ்த மன்னன், இருந்து - (அதன்மேல் ஏறி) இருந்து, பொரு - (தன்னை எதிர்த்து) போர் புரிந்த, தானவரை - அசுரர்களை, வென்ற சயமும் - வென்ற வெற்றியையும்,

வி - ரை :—இக்ஷ்வாகுவின் பேரனும் விகுக்ஷி வேந்தன் புதல்வனுமாகிய ககுத்தமன்னன் இந்திரனை யானையாகக்கொண்டு அதன்மே லேறியிருந்து அசுரர் களை வென்றன னென்பதாம். விகுட்சி வேந்தனைச் சசாதனன் எனவுங் கூறுப.

இந்திரனை வாகனமாகக் கொண்டவன் ககுத்தவேந்தன் :—இவன் முறை தவறாமல் ஆட்சி புரியுங்கால், தேவேந்திரன் அவனை அணுகி, 'வெற்றிவேல் வேந்தே, அசுரர்கள் என் விண்ணுலகத்தை அபகரித்துக்கொண்டனர்; அருள் கூர்ந்து அதனை மீட்டுத்தரல் வேண்டும்' என அம் மன்னவனை வேண்டிக் கொண்டான். உடனே அவன் இந்திரனையே வாகனமாகக் கொண்டு அசுரரை வென்று அவன் நாட்டை அவனுக்கு வழங்கினன் என்ப. இதனை, 'தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்தென், வான்றரக்கிற் றிகொலென்று குறை யிரப்ப வரங்கொடுத்தாங், கேன்றெடுத்த சிலையினனொ யிகல்புரிந்த விவர்குலத் தோர், தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேறாச் சுமந்தானும்' [கம்பரா-குலமுறை-ந] எனவும், 'பேராப் பெரும்பகை பேரப் பிறவேந்தர், ஊராக் குலிச விடை யூர்ந்தோன்' [குலோத் - உலா - ௫ - கூ] எனவும் வருவனவற்றானறிக. ககுத்தன்—(இந்திரனாகிய) எருதின் முசுப்பின்மேல் இருந்தவன். இவனைப் புரஞ்சயன் எனவும், பகைவர் பட்டணங்களை அழித்தலால், இவனுக்கு இப்பெயர் வந்ததெனவுங் கூறுப. பா - பே :—† உதவும் புதல்வனென. (கக)

மாந்தாதா, முசுகுந்தன் புகழ்

கஅகூ. ஒருது றைப்புனல்சி னப்புலியு மானு முடனே
உண்ண வைத்தவுர வோனுலகில் வைத்த வருளும்
பொருது றைத்தலைபு குந்துமுசு குந்த னிமையோர்
புரம டங்கலும ரண்செய்துபு ரந்த புகழும்.

ப - ரை :—சினம் புலியும் - கோபத்தையுடைய (கொடிய) புலியும், மானும் - (சாதுவான) மானும், ஒரு துறை - (நீர் நிலையின்) ஒரே துறையில், உடன் - ஒன்றாக, புனல் உண்ண வைத்த - நீரைக் குடிக்கும் படி செய்த, உரவோன் - வலியவனாகிய (ஒரு) சோழன், உலகில் வைத்த- உலகிலுள்ள உயிர்களிடத்தில் செலுத்திய, அருளும் - அருளின் தன்மை யையும், முசுகுந்தன்——, பொரு - போர் செய்யும், துறை தலை - களத்தில், புகுந்து - (சென்று) அடைந்து, இமையோர் புரம் - தேவ லோகம், அடங்கலும் - முழுவதும், அரண் செய்து - (ஒருவிதத் தீங்கும் நேராமல்) காவல் செய்து, புரந்த - (அதனை) பாதுகாத்த, புகழும் - புகழின் தன்மையையும்,

வி - ரை :—புலியும் மானும் ஒரு துறையில் நீருண்ண வைத்தவன் மாந்தாதா என்னும் வேந்தனும். இவன் வலியோர் எளியோரை நலியாமல் அரசாண்டான்

என்பதாம். இவனைப்பற்றி இவ்வாசிரியர் கூறிய கருத்திற்கேற்ப, 'புலிப்போத் தும் புல்வாயும், ஒரு துறையில் நீருண்ண உலகாண்டோ னுளனொருவன்' [கம்பரா-குலமுறை-ரு] எனவும், 'ஆடு துறையி லடுபுலியும் புல்வாயும், கூடநீ ரூட்டிய கொற்றவனும்' [விக்கி-உலா, க-கO] எனவும், புலியுடனே புல்வா யொரு துறைநீர், மாந்த வுலகாண்ட மாந்தாதா' [குலோத்-உலா—கரு-கச] எனவும், 'புக்க துறையில் பகைப்புலியும் புல்வாயும், ஒக்க வொருகாலத் தூட்டினேன்' [இராச-உலா-கூ-கO] எனவும் பிறருங் கூறியுள்ளமை காண்க.

இமையோரைப் புரந்தவன் முசுகுந்த வேந்தனும். இவ்விறையவன் இந்திரன் வேண்டுகோளுக் கிணங்கி அவன் நகரைக் காத்து அசுரரை எதிர்த்துப் போர் புரிந்தான். அதுகாலை அசுரர்கள் தொடுத்த கொடிய கணையொன்று அவன் கண்ணையும் மனத்தையும் புதைத்தது. உடனே இந்திரனேவிய பூதமொன்று தோன்றி அக்கணையை அழித்தது. பின்பு அவன் அசுரரை வென்றன னென்ப தாம். இதனை, 'கடுவிசை யவுணர் கணங்கொண் டீண்டி, கொடுவரி யூக்கத்துக் கோநகர் காத்த, தொடுகழல் மன்னற்குத் தொலைந்தன ராகி, [சிலப்-எ-கூ-க] என்றதனாலும் அதன் உரையாலும் அறிக. அன்றியும், 'வானவரும் தானவரும் பொருமொருநாள்..........அறமென்ன வொருதனியே திரிந்தமரா பதிகாத் தோன்' [கம்பரா-குலமுறை-சு] எனவும், 'போக புவிபுரந்த பூபதியும்' [விக்கி-உலா-கஉ] எனவும் வருவனவற்றையும் இங்குக் கவனிக்க. பொருதுறை—போர் புரியும் இடம், துறை—இடம்; 'வான்வண் டுறைதரு வாய்மையன்' [திருக்கோ-ரு அO] என்றமை காண்க. துறைத்தலை—தலை ஏழனுருபு. (கஉ)

பிருதுலாட்சன், சிபிச்சோழன் சிறப்பு

ககூO. கடல்க லக்கவெழு மின்னமுது தன்னை யொருவன்
கடவுள் வானவர்க ளுண்ணவருள் செய்த கதையும்
உடல்க லக்கறவ ரிந்துதசை யிட்டு மொருவன்
ஒருது லைப்புறவொ டொக்கநிறை ‡புக்க புகழும்.

ப-ரை:—கடல் கலக்க - திருப்பாற்கடலை (மந்தர மலையால்) கலக்குதலால், எழும் - (அதிலிருந்து) தோன்றிய, இன் அமுது தன்னை - இனிய அமுதத்தை, கடவுள் வானவர்கள் - தெய்வத்தன்மையையுடைய தேவர்கள், உண்ண - உண்ணும்படி, அருள் செய்த - அருள் புரிந்த, ஒருவன் கதையும் - ஒரு சோழன் கதையையும், கலக்கு அற - (புறாவின்) வருத்தம் நீங்க, ஒரு துலை - ஒப்பற்ற துலாத்தட்டில், உடல் அரிந்து - (தன்) உடம்பை அறுத்து, தசை இட்டும் - மாமிசத்தை வைத்தும், புற வொடு ஒக்க - (அது போதாமையால்) அப்புறாவுக்கு ஒப்பாக, நிறை புக்க - துலாவின் (மற்றொரு தட்டில்) ஏறி நின்ற, ஒருவன் புகழும் - மற்றொரு சோழன் புகழின் தன்மையையும்,

வி-ரை:—வானவர் உண்ண அமுது தந்தவன் பிருதுலாட்சன் என்ப. தேவர் கள் அமுதத்தின் பொருட்டுத் திருப்பாற்கடலைக் கடையுங்கால், அம்மன்ன வனைத் தமக்குதவிபுரியுமாறு வேண்டினர். அவன் அவர்கள் வேண்டுகோளுக் கிணங்கி அக்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதம் வழங்கினனென்பதாம். திருப்பாற்கடலைக் கடைந்த வரலாற்றை கஉஉ-ம் தாழிசையிற் காண்க. 'குரை கடலை நெடுவரையாற் கடைந்தமுது கொடுத்தானும்' [கம்பரா-குலமுறை-ச] என்றார் கம்பரும்.

புறவின் பொருட்டுத் துலையிற் புக்கவன் சிபிச்சோழனும். அவன் நீதி முறை பிறழாது செங்கோல் செலுத்துங்கால், அம்மன்னவன் குணத்தைப் பரி சோதிக்க, இந்திரன் பருந்தாகவும் அக்கினி புறுவாகவும் உருவங்கொண்டனர். பின்னர்ப் பருந்து புறுவைக் குத்தித் தின்ன முயல, அது சிபிச்சோழனைச் சரணடைந்தது. பின்பு அம்மன்னன் பருந்து விழைந்தபடி, அதன் எடைக்குச் சரியாய்த் தன் மாமிசத்தை யளிக்கக் கருதித் துலாக்கோலின் ஒரு தட்டில் அப் புறுவையும் மற்றொரு தட்டில் தன் தொடையிலுள்ள மாமிசத்தையும் அரிந்து வைத்தான். அது அப்புறுவின் எடைக்குச் சரியாகவில்லை. இவ்வாறு பலமுறை செய்தும் எடைக்குச் சரியாகாமையால், கடைசியில் அவனே அத்துலாத்தட்டில் ஏறி நின்றான். அதனால் அந்தத் தேவரிருவரும் மகிழ்ந்து அவனுக்கு வேண்டிய வரங்களை வழங்கிச் சென்றன ரென்பதாம்.

சிபி புறுவைக் காத்தமையை 'சேர்ந்த புறவி னிறைதன் திருமேனி, ஈர்ந் திட் டியர்துலைதா னேறினன்' [வீரசோ-கசுஅ-ம் செய்-மேற்கோள்] எனவும், 'கூருகிர்ப் பருந்தி னேறுகுறித் தொரீஇ, தன்னகம் புக்க குறு நடைப் புறவின், தபுதி யஞ்சிச் சீரை புக்க, வரையா வீகை யரவோன் மருக' [புறநா-சங] எனவும், 'குறுநடைப் புறவின் நெடுந்துயர் தீர, எறிதரு பருந்தி னிடும்பை நீங்க, அரிந்துடம் பிட்டோன்' [சிலப்-உஎ, கஉசு, சுஅ] எனவும், 'புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை' [கம்பரா-திருவவ-சுடு] எனவும், 'சிறு புறவுக் காகக் களிகூர்ந்து, தூக்குந் துலைபுக்க தூயோன்' [விக்கி-உலா—உக-உஉ] எனவும், 'உடம்படையக் கொய்தாலு மெய்தா, துலையேறி வீற்றிருந்த சோழன்' [குலோத்-உலா-ங௩-ங௪] எனவும் 'சரணடைந்த, வஞ்சப் புறுநிமை புக்க புகழோன்' [இராச-உலா-கக-கஉ] எனவும் வருமாற்றானறிக. நிறை ஒக்க என்றியைத்து, நிறைக்குச் சமானமாய் எனினுமாம். ஒருவன்—இவற்றை எழுவாயாகக்கொண்டு பொருள் கோடலுமாம். பா-பே:—‡ புக்கவவனும். (கங)

சுராதிராசன், இராசகேசரி, பரகேசரி மேன்மை

ககசுக. சுராதி ராசன்முத லாகவரு சோழன் முனநாள்
சோழ மண்டலம மைத்தபிற கேழு லகையும்
இராச கேசரிபு ரந்துபர கேச ரிகளாம்
இருவ ராணைபுலி யாணையென நின்ற $விதுவும்.

ப-ரை:—முன நாள் - முற்காலத்தில், முதல் சோழன் ஆக வரு - முதற் சோழனாகப் பிறந்த, சுராதி ராசன் - சுராதிராச னென்பவன், சோழ மண்டலம் அமைத்த பிறகு - சோழ மண்டலத்தை ஏற்படுத்திய பின், இராசகேசரி பரகேசரிகள் ஆம் இருவர் - இராசகேசரி பரகேசரி கள் ஆகிய இருவரும், ஆணை - (தமது) கட்டளையால், ஏழ் உலகையும் புரந்து - ஏழு வகையாகிய தீவுகளையுடைய (இந்த) உலகம் முழுதும் பாதுகாத்து, புலி - புலிக் கொடியால் செலுத்தும், ஆணை என - (ஆளுகையே) ஆளுகை என்று (கண்டோர்) சொல்லும்படி, நின்ற இதுவும் - நிலைபெற்று நின்ற இந்த வரலாற்றையும்,

வி-ரை:—சோழமண்டலம் ஏற்படுத்தியவன் முதற் சோழனாகிய சுராதிராசன் என்பதும், புலிக்கொடியை ஏற்படுத்தியவர் இராசகேசரி, பரகேசரிகள் என்ப தும் இத்தாழிசையால் விளங்கும். ஏழுலகு என்றது—பூமியின்கண்ணுள்ள ஏழு தீவுகளை [உஅ௫] யாம். அவை நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கழகு என்பன [சூடா-நிக-கஉ-கக]. பா-பே:—$ புகழும். (கச)

கிள்ளிவளவன், சித்திரதவன், மிருத்யுஜித் மேன்மை

ககூஉ. கால னுக்கிது வழக்கெனவு ரைத்த வவனும்
காவி ரிப்புனல்கொ ணர்ந்தவவ னும்பு வனியின்
†மேல னைத்துயிரும் வீவதிலை யாக நமன்மேல்
வென்றி கொண்டவனு மென்றிவர்கள் கொண்டவிறலும்.

ப - ரை:—வழக்கு இது என - முறைமை இதுவாகுமென்று, காலனுக்கு உரைத்த அவனும் - யமனுக்குச் சொன்ன அந்தச் சோழனும், காவிரி புனல் - காவிரியாற்று நீரை, கொணர்ந்த அவனும் - (சோழ நாட்டிற்கு) கொண்டுவந்த அந்தச் சோழனும், புவனியின் மேல் - இந்தப் பூமியிலுள்ள, அனைத்து உயிரும் - எல்லா உயிர்களும், வீவது இலை ஆக - இறவாதபடி, நமன் மேல் வென்றி கொண்ட - நமனை வென்ற, அவனும் - அந்தச் சோழனும், என்ற இவர்கள் - என்று சொல்லப்பட்ட இந்தச் சோழர்கள், கொண்ட விறலும் - அடைந்த வெற்றியையும்,

வி - ரை:—காலனுக்கு வழக்குரைத்தவன் கிள்ளி வளவனும். இதனை, 'இருங்கூற்றுக் கேற, வழக்குரைத்த கிள்ளி வளவன்' [குலோ - உலா - கக-கஉ] எனவும், 'கூற்றுக்கு, தேற வழக்குரைத்த செம்பியனும்' [விக்கி-உலா-கங-கச] எனவும் வருமாற்றானறிக. கொண்டவனும், என்றிவர்கள்—இவைகளின் ஈற்றிலுள்ள அகரந் தொக்கு நின்றது.

முசுகுந்தன் மனைவியாகிய சித்திரவல்லி என்பவள் அழகிய கிளி ஒன்றை வளர்த்து வந்தாள். காலன் மனைவி விருப்பத்திற்கிணங்கிக் காலதூதர் அதனைக் கவர்ந்து சென்று அவளுக்களித்தனர். உடனே சித்திரவல்லி அதனைத் தன் கணவனுக்குணர்த்த, அவன் தன் பெரும் படையை யேவி யமனை வென்று அக் கிளியைப் பெற்றுத் தன் மனைவிக்களித்தனன். பின்பு அவன் காலனுக்குப் பல நீதிகளை எடுத்தியம்பினன் எனவுங் கூறுப. முசுகுந்தனைப்பற்றி கஅகூ - ம் தாழிசையில் கூறியிருத்தலால், இவன் வேறு முசுகுந்தனெனத் தோற்றுகிறது.

காவிரிப்புனல் கொணர்ந்தவன் கவேரன் என்னும் மன்னவனும். அவன் திருமாலை அன்புடன் வணங்கி வந்தான். அவன் பகைஞனொருவன் அவன்மேல் போர் தொடுத்தான். அதுகாலை அவ்வேந்தன் திருமாலைத் தொழுது ஓர் வாளாயுதம் பெற்று அதனால் தன் மாற்றானை வென்று சிலகாலம் செங்கோல் செலுத்தி வந்தான். பின்பு அவன் முத்தி பெறத் திருமாலை வேண்ட அவர், "வேந்தே, என் மாயை உன்பால் புதல்வியாய்த் தோன்றுவாள்; பின்புதான் நீ முத்தி பெறுவாய்" என்றனர். அதன்படி சிலகாலங் கழித்துக் கவேரன் ஓர் பெண்மகவைப் பயந்தான். பின்னர் அவள் அகத்தியரை மணந்து நதி வடிவாய்ப் பெருகினள். கவேர மன்னனிடம் தோன்றினமையால், அந்நதிக்குக் காவிரி யென்னும் பெயருண்டாயிற்று. பின்பு கவேரன் முத்தி பெற்றன னென்ப. [திருச்சித்-பு-உக-ம்-படலம்]. இக்காவலனைப் பற்றி, 'குடகக் குவடூ டறுத்திழிய, தள்ளுந் திரைப்பொன்னி தந்தோனும்' [விக்கி - உலா - உங - உச] எனவும், 'காவேரியாற்றுப் படைக்கு, மலையெறியு மன்னர்க்கு மன்னன்' [குலோத்-உலா-உகூ-ஙo] எனவும், 'பொன்னி கடலேழுங் கோப்ப, வரையெறிந்த மன்னர்க்கு மன்னன்' [இராச-உகூ-ஙo] எனவும் வருமாறு காண்க. இவனைச் சித்திரதன்வன் எனவுங் கூறுவர்.

நமன்மேல் வென்றி கொண்டவன் மிருத்யுஜித்:—இவன் தன் நாட்டில் அகால மரண முண்டாகாமல் ஆட்சிபுரிந்து வந்தான் என்ப. இவனை இராஜேந்திர

மிருத்யுஜித் எனவுங் கூறுவர். பா - பே:—† மேல வனைத்துலகு மிவ்வகில லோக முமெலாம். (கடு)

**சித்திரன், சமுத்திரஜித், பஞ்சபன், திலீபன் முதலானோர் புகழ்**

கசசு. புலியெ னக்கொடியி லிந்திரனை வைத்த வவனும்
புணரி யொன்றினிடை யொன்றுபுக விட்ட வவனும்
வலியி னிற்குருதி யுண்கெனவ ளித்த வவனும்
நீவாத ராசனைவ் லிந்துபணி கொண்ட வவனும்.

ப - ரை:—கொடியில் - (தன்) துகில் கொடியில், இந்திரனை - தேவேந்திரனை, புலி என - புலியின் வடிவமாக, வைத்த அவனும் - வைத்துக்கொண்ட அந்தச் சோழன் வரலாற்றையும், ஒன்று புணரி இடை - ஒரு கடலில், ஒன்று - மற்றொரு கடலை, புக விட்ட அவனும் - (கலந்து) புகும்படி விட்ட அந்தச் சோழன் வரலாற்றையும், குருதி உண்க என - (என) இரத்தத்தைக் குடிப்பாயாக வென்று, வலியினில் அளித்த - (தன்) வலிமையால் கொடுத்த, அவனும் - அந்தச் சோழன் வரலாற்றையும், வாத ராசனை - வாயுதேவனை, வலிதினில் - பலவந்தமாய், பணி கொண்ட - ஏவல் கொண்ட, அவனும் - அந்தச் சோழன் வரலாற்றையும்,

வி - ரை:—கோடியில் இந்திரனை வைத்தவன் சித்திரன் என்னும் சோழனும். இவன் இந்திரனைப் புலிக்கொடியாகக் கொண்டமையால், இவனுக்கு வியாக்கிர கேது என்னும் பெயர் உண்டாயிற்றென்ப. (வியாக்கிரம்—புலி, கேது—கொடி).

புணரி புகவிட்டவன் சமுத்திரஜித் என்னும் சோழனும். இவன் கப்பல் போக்கு வரவைக் கருதிப் பூசந்தியை வெட்டி மேல் கடலையும் கீழ் கடலையும் ஒன்று சேர்த்துச் சலசந்தி யாக்கினனெனத் தெரிகிறது. இம்மன்னவனைப் பற்றி, 'மேல்கடலில் வீங்குநீர் கீழ்கடலில் விட்டோனும்' [விக்கி-உலா-கஎ-கஅ] 'மேல்கடல் கீழ்கடற்கு விட்டகோன்' [குலோத் - உலா - உஅ] 'குடகடற்குச் சார்பு குணகடலே யாக்கும், வடகடற்குந் தென்கடற்கு மன்னன்' [இராச-உலா-உஎ-உஅ] என மூவருலாக்கள் கூறும்.

குருதியுண்கென அளித்தவன் பஞ்சபன் என்னும் சோழனும். நீர் வேட்கை யால் வருந்திய ஐந்து இயக்கர்கள் அச் சோழவேந்தனிடம் சென்று தண்ணீர் வேண்ட, அவன் தன் உடம்பிலுள்ள ஐந்து இரத்தக் குழாய்களை அறுத்துத் தன் உதிரத்தை வழங்கினான். அவர்கள் அதனைப் பருகித் தமது வேட்கை தணிந்தனர். அதனால் அம்மன்னனுக்கு அப்பெயர் உண்டாயிற்று என்பர்.

திலீபன் என்னும் மன்னன் தனது குருவாகிய வசிட்ட முனிவருடைய காமதேனுவை மேய்த்துக்கொண்டிருந்தான். அப்போது கும்போதரனென்பவன் அவன் குரு பக்தியைப் பரிசோதிக்க விரும்பிச் சிங்கவுருவாய் அக் காமதேனு வைப் பற்றிக்கொண்டான். உடனே திலீபன் அதனை மீட்கத் தன் உதிரத்தை அச்சிங்கத்திற் களித்தான். அதனால் குருவின்பால் அவனுக்குள்ள அன்பைக் கண்டு கும்போதரன் வியந்தனன் எனவுங் கூறுவர்.

வாத ராசனைப் பணிகொண்டவன்:—இவன் பெயர் இன்னதென விளங்க வில்லை. ஆயினும், 'நாளியிரு முந்நீர் நாவா யோட்டி, வளிதொழி லாண்ட வுரவோன் மருக' [புறநா-சுசு] என்பதற்கு, 'நீர் செறிந்த பெரிய கடலின் கண்ணே மரக்கலத்தை யோட்டிப் போர் செய்தற்குக் காற்றின்றி நாவாய்

ஒடா தாக ஆண்டு வளிச்செல்வனை யழைத்து ஏவல் கொண்ட வலியோன் மரபி லுள்ளானே' என வரைந்திருக்கும் அதன் வுரையால் இவ்வரலாறு ஒருவாறு விளங்குகிறது. அவன் என்றது..............அந்தந்தச் சோழர் வரலாற்றை யுணர்த்தினது. இனி வருஞ் செய்யுட்களிலும் இவ்வாறே கொள்க.

பா - பே :—§ வரத ராசனே. (கசரு)

தூங்கெயி லெறிந்தவன், உபரிசரன் மேன்மை

கசுசு. தேங்கு தூங்கெயிலெ றிந்தவவ னுந்*தி ரண்மணிச்
§சுடர்வி மானமது வான்மிசையு யர்த்த வவனும்
தாங்கள் பாரதமு டிப்பளவு நின்று தருமன்
தன்க டற்படை†த னக்குதவி செய்த வவனும்.

ப - ரை :—தேங்கு - (பகைவர்க்கு) அச்சத்தை யுண்டாக்கும், தூங்கு - (ஆகாயத்தில்) சஞ்சரிக்கும், எயில் எறிந்த - மதில்களை அழித்த, அவனும் - அந்தச் சோழன் வரலாற்றையும், திரள் - வட்ட வடிவமாகிய, மணி - இரத்தினங்களைப் பதித்த, சுடர் விமானம் அது - ஒளியை வீசும் (தனது) விமானத்தை, வான் மிசை - ஆகாயத்தில், உயர்த்த அவனும் - உயரும்படி செய்த அந்தச் சோழன் வரலாற்றையும், தாங்கள் பாரதம் - (பாண்டவர்கள்) தங்களுடைய பாரதப்போரை, முடிப்பு அளவும் - முடித்தலைச் செய்யும் வரையிலும், நின்று - (தளராமல்) நின்று, தருமன் தன் - தருமராசனுடைய, கடல் படை தனக்கு - கடல் போன்ற சேனை களுக்கு, உதவி செய்த——, அவனும் - அந்தச் சோழன் வரலாற்றையும்,

வி - ரை :—தூங்கெயி லெறிந்தவன் :—இவன் இயற்பெயர் விளங்கவில்லை. இவன் ஆட்சிபுரியுங்கால், சில அசுரர்கள் திரிபுராதிகளைப்போல் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் மூன்று மதில்களைத் தமக்குப் பாதுகாப்பாகக்கொண்டு அவைகளின் உதவியால் பலர்க்குத் துன்பியற்றலாயினர். அதைக் கண்ட அச்சோழன் அம் மதில்களை அழித்து அவர்களை வென்றன னென்பதாம். இவனைப்பற்றி 'தூங் கெயில் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை' [சிலப்-உகூ-அம்மானை வரி-க] எனவும், 'தூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்' [புறநா-நகூ] எனவும், 'தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்' [மணிமே-க-ச] எனவும், 'வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல் விசும்பில், தூங்கு மெயிலும் தொலைத்தலால்' [பழமொ - கஙரு] எனவும், 'தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்' [சிறுபா - அக-அஉ] எனவும், 'தூங்கெயி லெறிந்த சோழனும்' [விக்கி-உலா-கஎ] எனவும், 'தூங்கெயில் கொண்ட சுடர் வாளோன்' [குலோத்-உலா-உசு] எனவும், 'தூங்கு புரிசை துணித்தகோன்' [இராச-உலா-உசு] எனவும் அறிஞர் கூறியுள்ளமை காண்க. விமானமது— அது பகுதிப் பொருள் விகுதி. தங்கள் என்பது எதுகை நோக்கித் தாங்கள் என நீண்டது. கடற்படை—உவமைத் தொகை.

விமானம் வான்மிசை உயர்த்தவன் உபரிசரன் என்னுஞ் சோழனும். இவன் இந்திரன்பால் சிறந்த தேரொன்றைப் பெற்று ஆகாயத்திற் சென்று, தேவர் களுக்குத் தீங்கிழைத்த அசுரரை அழித்தனன் எனவும், அதனால் அப்பெயர் பெற்றன னெனவுங் கூறுவர். (உபரி—மேலே, சரன்—சஞ்சரிப்பவன்.)

சூரியகுலத் தோன்றலாகிய திரிசங்கு மன்னன் வசிஷ்டர்பால் சாபமெய்தி விசுவாமித்திரரை யணுகினன். அம்முனிவர் அவ்வேந்தன் விரும்பியபடி தமது தவ வன்மையால், அவனை விமானத்தி லேற்றுவித்து விண்ணுலகத்திற்

கனுப்பினர். அப்போதவன் தானேறிய விமானத்தை வானத்திற் செலுத்தினன் எனவு மியம்புவர். 'மாக விமானந் தனியூர்ந்த மன்னவனும்' [விக்கி-உலா-கக] என்றார் ஒட்டக்கூத்தரும்.

**தருமன் படைக்கு உதவி செய்தவன் :**—பாரத யுத்தத்தில் சோழனொருவன் பாண்டவர் பக்கம் நின்று துரியோதனன் படையை எதிர்த்துப் போர் புரிந்தான். [வில்லிபா - கஎ-ம் போர்-கூஎ-கூஅ] இவன் பெயர் விளங்கவில்லை. தேங்கல்—அஞ்சல்; 'நிலைபெறு தோடல் தேங்கல்.........அச்சக் குறிப்பு' [சூடாம-நிக-அ-நிகூ] என்றமை காண்க. (கஎ)

பா-பே :—* சுடர்மணி, $ திரள் விமானமது, ‡ தனக்குணவு தந்த.

**கிள்ளிவளவன், செங்கணான் சிறப்பியல்புகள்**

கசூரு. தளவ ழிக்கு *நகை வேல்விழிபி லத்தின் வழியே
தனிந டந்துரகர் †தங்கண்மணி கொண்ட வவனும்
களவ ழிக்கவிதை பொய்கையுரை செய்ய வுதியன்
கால்வ ழித்தளையை வெட்டியர சிட்ட வவனும்

ப - ரை :—பிலத்தின் வழியே - (ஒரு) குகையின் வழியாய், தனி நடந்து - (பிறர் உதவியின்றி) தனிமையாய் நடந்து சென்று, தளவு அழிக்கும் - முல்லை யரும்பின் அழகைக் கெடுக்கும், நகை - பற்களையும், வேல் விழி - வேல் போன்ற கண்களையு முடையவளாகிய, உரகர் தம் - நாகர்களுடைய, கண்மணி கொண்ட - கண்மணி போன்ற நாக கன்னி கையை (மணம் புரிந்து) கொண்ட, அவனும் - அந்தச் சோழன் வர லாற்றையும், பொய்கை - பொய்கையார் என்னும் புலவர், களவழி கவிதை - களவழி நாற்பது என்னும் நூலை, உரை செய்ய - பாடி யருள, உதியன் - (கணைக்கா லிரும்பொறை என்னும்) சேரவேந்தனுடைய, கால்வழி - காலில், தளையை வெட்டி - (பூட்டிய) விலங்கை வெட்டி யெறிந்து, அரசு இட்ட - (முன் போல் அவனை) அரசாட்சியில் வைத்த, அவனும் - அந்தச் சோழன் வரலாற்றையும்,

**வி - ரை :—உரகர்தங் கண்மணி கொண்டவன் கிள்ளி வளவ னென்ப.** 'அந்நீர், திரைதரு மரபின்...........பல்வேல் திரையன்' [பெரும்பா-நூ0-நூஎ] என்றதனாலும், 'நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாக கன்னிகையைப் புணர்ந்த காலத்து' என நச்சினார்க்கினியர் கூறிய அதன் உரையாலும் இவ்வரலாறு ஒருவாறு புலப்படுகிறது. 'பணம் புணர்ந்த மௌலியான் கோமகளைப் பண்டு, மணம் புணர்ந்த கிள்ளி வளவன்' [குலோத்-உலா-நூஎ-நூஅ] என்றதனால், இவன் கிள்ளி வளவனெனத் தெரிகிறது. 'பிலமதனிற் புக்குத்தன் பேரொளியால் நாகர், குலமகளைக் கைப் பிடித்த கோவும்' [விக்கி-உலா-ககூ-உ0] எனவும், 'சேடன், திருமகளைக் கல்யாணஞ் செய்தோன்' [இராச-உலா-நூக, நூஉ] எனவுங் கூறியுள்ளவற்றையும் இங்குக் கவனிக்க. ககஉ-ம் தாழிசையில் கிள்ளி வளவனைப்பற்றிக் கூறியிருத்த லால், இவன் இரண்டாம் கிள்ளி வளவன் போலும்.

**சூரவர்க்கன்** என்னுஞ் சோழனொருவன் திரிசிராமலையை யடுத்த கந்த மாவனத்தில் வேட்டையாடச் சென்று நள்ளிரவில் அங்கே திரிந்துகொண்டிருந் தான். அப்போது நாக கன்னிகையர் எழுவர் சிவபிரானை வழிபடக் கருதி அங்குள்ள தடாகமொன்றில் நீராடிக்கொண் டிருந்தனர். அதுகாலை அவ்வேந்தன் அப்பெண்மணிகளின் ஆடைகளைக் கவர்ந்து கொண்டான். பின்பு அவன் அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி, அவர்கள் ஆடையை யளித்துப் பிலத்தின்

வழியே அவர்களுடன் நாகலோகஞ் சென்று, அங்கு ஆதிசேடன் மகளாகிய காந்திமதியை மணம் புணர்ந்து தன்னகரமடைந்தனன் எனவுங் கூறுப.

காலிவழித் தளையை வெட்டி யரசிட்டவன் சோழன் செங்கணான் என்ப. இவனைக் கோச் செங்கணான் எனவும், கோச்செங்கட் சோழன் எனவுங் கூறுவர். இவன் கழுமலமென்னு மூரில் சேரவேந்தனாகிய சேரமான் கணைக்காலிரும் பொறையோடு போர் புரிந்து அவனை வென்று சிறைப்படுத்தினன். பின்னர், சேரவேந்தன் அவைக்களத்துப் புலவராகிய பொய்கையார் என்பவர் கோச் செங்கணான் வீரத்தைச்சிறப்பித்து 'களவழி நாற்பது' என்னும் நூலையியற்றி அச் சோழன் முன் பாடினர். அதைக்கேட்டு அவன் களிப்புற்றுச் சேரன் கால் தளை நீக்கி அவனைச் சிறையினின்று விடுவித்து அவன் நாட்டை அவனுக்கு வழங்கின னென்ப. இவனைப்பற்றி 'மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனை, பாதத் தளைவிட்ட பார்த்திபனும்' [விக்கி-உலா-உஎ-உஅ] எனவும், 'அணங்கு, படுத்தும் பொறையனைப் பொய்கைக்குப் பண்டு கொடுத்துக் களவழிப்பாக் கொண் டோன்' [குலோத்-உலா-௩அ-௨0] எனவும், 'நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு, வில்லவன் கால்தளையை விட்டகோன்' [இராச-உலா-௩௫-௩௬] எனவும், மூவருலாக்கள் கூறும். 'சோழன் செங்கணானும் சேரமான் கணைக்கா லிரும்பொறையுந் தமது திருப்பெயர் பொறித்துப் பொருதுழிச் சேரமான் கணைக்கா லிரும்பொறையைப் பற்றிச் சோழன் செங்கணான் சிறை வைத்துழிக் களம்பாடிப் பொய்கையார் வீடு கொண்டமையான் என்க' [களவழி நா-முன் னுரை] என்றதனுலும், புறநானூற்றின் எச-ம் செய்யுளின் அடிக் குறிப்பாலும் இவன் வரலாறு ஒருவாறு புலப்படுகிறது. 'செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்த கோயில்' [திவ்ய-பெரிய திரு-௬-௬-க] எனத் திருமங்கையாழ்வாரும் இவனைச் சிறப்பித்துள்ளமை காண்க. தளவு—பொருளாகு பெயராய் முல்லையரும்பை யுணர்த்தினது; கண்மணி—உவமையாகு பெயர்; கவிதை—காரணவாகு பெயராய் நூலுக்காயிற்று. உரகர் தங்கள் மணி எனப் பிரித்துப் பொருள் கோடலுமாம்; இதுகாறுங் கரிகாலன் முன்னோர் வரலாற்றைக் கூறினர்.

பா - பே:—* நகையாளிழி, † தங்கள் பதி. [கஅ]

## கரிகாலன் வரலாறு

### கரிகாலன் சேர பாண்டியரை வென்றமை

ககூ. என்று மற்றவர்க டங்கள்சரி தங்கள் பலவும்
எழுதி மீளவிதன் மேல்வழுதி சேரன்*மடியத்
தன்ற னிக்களிற ணைந்தருளி வீர மகடன்
தனத டங்களொடு தன்புயம ணைந்த பரிசும்.

ப - ரை:—என்று - என்றிவ்வாருக, மற்றவர்கள் தங்கள் - மற்றச் சோழர்களுடைய, சரிதங்கள் பலவும் - வரலாறுகள் பலவற்றையும், எழுதி - (கரிகாலன் இமயமலையில்) எழுதி, இதன் மேல் - இதற்கு மேல், மீள - மீண்டும், வழுதி - பாண்டிய மன்னனும், சேரன் - சேர வேந்தனும், மடிய - சாகும்படி, தன் தனி களிறு - தன் ஒப்பற்ற ஆண் யானையோடு, அணைந்தருளி - (போர்க்களத்தில்) சென்று (பொருது), வீர மகள் தன் - வீரமாதினுடைய, தட தனங்களொடு - பருத்த கொங்கைகளை, தன் புயம் - தனது தோள்களால், அணைந்த பரிசும் - (கரிகாலன்) தழுவிய தன்மையையும்,

வி - ரை:—இச் செய்யுளிற் கூறப்பட்டவன் கரிகாற் சோழனும். இம் மன்னவன் முதற் பெருநற் கிள்ளியின் பேரனும், இளஞ்சேட் சென்னியின்

புதல்வனுமாவான். பெருநற்கிள்ளி, கரிகாலன் என்னு மிருவரும் கி. பி. கரு0-ம் ஆண்டில் முதற் குடக்கோ நெடுஞ் சேரலாதனை எதிர்த்துப் போர் புரிந்தனர். அப்போரில் பெருநற் கிள்ளியும் நெடுஞ் சேரலாதனும் உயிர் துறந்தனர். கரிகாலன் தந்தையாகிய இளஞ்சேட் சென்னி இப்போர் நிகழு முன்பே விண்ணுல கடைந்தனன். அதனால், அக் கொற்றவன் சோழ நாட்டின் அரசுரிமை யெய்தினன். பின்பு அவன் தன் புதல்வியை இரண்டாம் பெருஞ்சேரலாதன் என்னும் சேரவேந்தனுக்கு மணமியற்றி யருளினன். சில வாண்டுகள் சென்றபின், கரிகாலன் மருமகனாகிய பெருஞ் சேரலாதனும், நெடுஞ்செழியன் என்னும் பாண்டியனும் கரிகால் வேந்தனை யெதிர்த்துக் கடும் போர் புரிந்தனர். அப் போர் கஎரு-ம், ஆண்டில் வெண்ணி யென்னும் ஊர்ப்புறத்தே நிகழ்ந்ததாம். அதில் அவ்விரு பெரு வேந்தரும் தோல்வி யெய்தினர். அவர்களில் பெருஞ் சேரலாதன் தானுற்ற புறப் புண்ணுக்குப் பெரிதும் நாணி வடக்கிருந்து உயிர் துறந்தான். கரிகால் வேந்தன் கி. பி. கரு0 முதல் கஅ0 வரை ஆட்சி புரிந்தான். கரிகாலனுக்குப் பின், அவன் புதல்வன் நெடுமுடிக் கிள்ளியும், பெருஞ் சேரலாதனுக்குப் பின் அவன் மைந்தன் சேரன் செங்குட்டுவனும் முறையே சோழ நாட்டிற்கும் சேர நாட்டிற்கும் வேந்தர்களாய் விளங்கினர் [H. I. S. I. பக்-கச, கரு]. சேரலாதனுக்குச் சேரன் செங்குட்டுவனன்றி, இளங்கோவடிகள் என்னும் புதல்வரு மிருந்தனர். இவர் சிலப்பதிகாரம் என்னும் அரிய நூலை யியற்றியருளினர். இவர் தம்மிளமையிலேயே துறவு பூண்டனர். கரிகால்வேந்தனோடு பெருஞ் சேரலாதனும் பாண்டியன் நெடுஞ்செழியனும் வெண்ணியிற் பொருது தோல்வி யுற்றமையை, 'இருபெரு வேந்தரு மொருகளத் தவிய, வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாள், கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்' [பொருந-கசசு-கசஅ] என்றதனா லறிக. அன்றியும், புறநானூற்றில் சுரு-ம் செய்யுளில், 'தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த, புறப்புண் ணாணி மறத்தகை மன்னன், வாள்வடக் கிருந்தனன்' எனவும் அதன் அடிக் குறிப்பில், 'சேரமான் பெருஞ்சேரலாதன் கரிகாற் பெருவளத்தானோடு பொருது புறப்புண் ணாணி வடக்கிருந்தானைக் கழாத்தலையார் பாடியது' எனவும் வருதலால், கரிகாலனோடு பொருது தோல்வியுற்றவன் பெருஞ் சேரலாதனெனத் தெரிகிறது. 'கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலை, பொருதுபுண் ணாணிய சேரலாதன், அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென' [அகநா-ருரு] என்றமையு மிங்குக் கவனிக்க. கரிகாலன் கி.பி. ருரு-ல் தோன்றி, கி.பி. ரு0 முதல் சுரு வரை ஆட்சிபுரிந்தான் எனவு மியம்புவர் [T. T. E. H. Y. A. பக்-சுரு-கஎ]. இது முதல் நான்கு செய்யுட்கள் கரிகாலன் வரலாற்றை யுணர்த்தும். பா - பே :—* முடியில். (ககசு)

**காவிரிக்குக் கரை கட்டுவித்தமை**

ககஎ. தொழுது மன்னரே கரைசெய் பொன்னியில்
தொடர வந்திலா முகரி யைப்படத்
தெழுது கென்றுகண் டிதுமி கைக்கணென்
றிங்க ழிக்கவே யங்க ழிந்ததும்.

ப - ரை :—மன்னர் - (பல) அரசர்கள், தொழுது - (தன்னை) வணங்கி, கரை செய் - கரையை அமைக்கும், பொன்னியில் - காவிரி நதியில், தொடர - (அவ்வரசர்களோடு) தொடரும்படி, வந்திலா - (கரை கட்ட) வராத, முகரியை - ஆரவாரத்தையுடைய திரிலோசனன் என்னும் அரசன் வடிவை, படத்து எழுதுக - படத்தில் எழுதுவாயாக, என்று - என்று (சித்திரம் வரைவோனுக்கு) சொல்லி, கண்டு - (அவன் வடிவை அந்தப் படத்தில்) பார்த்து, இது மிகை கண் என்று - இது அதிகமாகிய

கண் என்று, இங்கு - இந்தப் படத்தில், அழிக்க - அழித்த வளவில், அங்கு - (திரிலோசனன் நெற்றிக் கண்) அங்கே, அழிந்ததும் - அழிந்த தன்மையையும்,

வி - ரை :—காவிரிக்குக் கரை கட்டுவித்தவன் கரிகாற் சோழனும். இவன் காவிரிக்குக் கரைகோலக் கருதிப் பல சிற்றசர்கட்குக் கட்டளையிட்டான். அவர்களில் திரிலோசனன் தவிர, ஏனைய வேந்தரனைவரும் கரிகாலன் கட்டளையை நிறைவேற்றினர். அதனால் அவ்வேந்தன் திரிலோசனன் வடிவைப் படத்தி லெழுதுவித்து, அப்படத்தில் அவனுக்கு மிகையாயிருந்த நெற்றிக் கண்ணைத் தன் பாதத்தால் மிதித்து அழித்தனன். உடனே திரிலோசனன் தன் நெற்றிக் கண்ணை யிழந்தான். அதனால் அவன் தன் செருக்கழிந்து கரிகாலன் ஆணையை நிறைவேற்றினன் என்பதாம். 'மண்கொண்ட பொன்னிக் கரைகட்ட வாராதான், கண்கொண்ட சென்னி கரிகாலன் [குலோத்-உலா-௩௫-௩௬] என்றதனால், காவிரிக்குக் கரை கட்டுவித்தவன் கரிகாலனே யெனத் தெரிகிறது. 'சென்னிப் புலியே நிருத்திக் கிரிதிரித்து, பொன்னிக் கரைகண்ட பூபதியும்' [விக்கி-உலா-உ௫-உ௬] என்றமையுங் கவனிக்க. ஆயினும், 'கண்கொண்டான் பொன்னிக் கரைகட்ட வாரானை, எண்கொண்ட சோழ னிரங்கேசா' [இரங்-வெ-௫௫] என்னுஞ் செய்யுளின் உரையில் ஒரு சோழன் கட்டளையின்படி, காவிரிக்குக் கரைகோல மூன்று கண்களையுடைய பிரதாப ருத்திரன் வாராமையால், அச்சோழன் அவன் உருவைப் படத்தி லெழுதுவித்து, அவன் நெற்றிக் கண்ணைத் தன் கை வேலால் குத்தி அழித்தனன் என்னும் வரலாறு புலப்படுகிறது. முகரம்—ஆரவாரம்; முகரி—வீண் ஆரவாரமுடையவன்; இது முதலாகு பெயராய் அவன் வடிவை யுணர்த்தினது. (உ0)

பரிசளித்தமை

கக௲அ. தத்து நீர்வரால் குருமி வென்றதுந்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றுயி ரம்பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்.

ப - ரை :—வரால் - வரால் மீன்கள், தத்து - தாவிப் பாய்கின்ற, நீர் - தடாகங்களையுடைய, குருமி வென்றதும் - குருமி என்னும் நாட்டை வெற்றி கொண்ட தன்மையையும், தழுவு - (இனிமை) பொருந்திய, செம் தமிழ் - செம்மையாகிய தமிழ்ச் செய்யுளைப் பாடும், வாணர் - கவிவாணராகிய உருத்திரங் கண்ணனார், பத்தொடு ஆறு நூறாயிரம் பொன் - பதினாறு லட்சம் பொன்னை, பரிசில் பெற - வெகுமதி பெறும்படி, பண்டு - முன்பு, பட்டினப்பாலை - பட்டினப்பாலை என்னும் நூலை, கொண்டதும் - (தனக்கு உரிமையாக) கொண்ட தன்மையையும்,

வி - ரை :—பட்டினப்பாலை யென்பது பத்துப் பாட்டில் ஒன்றாம். இதில் சோழநாட்டையும் கரிகால் வேந்தன் வீரம், கொடை, நீதி முதலியவற்றையும் கடியலூர் உருத்திரங் கண்ணனார் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். அதனால் அக்காவலன் அவருக்குப் பதினாறு லட்சம் பொன் பரிசளித்தனனென இச்செய்யுளால் தெரிகிறது. பெரும்பாணாற்றுப் படையும் இப்புலவர் பாடியதேயாம். முடத்தாமக் கண்ணியார் பாடிய பொருநராற்றுப் படைக்கும் பாட்டுடைத் தலைவன் இவனேயாம். குருமி—இது கடப்பையில் உள்ளதோர் ஊராம்; கரிகாலன் குருமியை வென்ற வரலாறு விளங்கவில்லை. பத்தொடு ஆறு=பதினாறு; நூறாயிரம்=இலட்சம்; பதினாறு லட்சம் என்பதாம். வாணர்=வாழ்+நர்;

கவியால் வாழ்பவர்; வாள்+நர் எனப் பிரித்தால் (ஒளியாகிய) புகழால் விளங்குவோ ரென்பதாம். (உக)

**சேர பாண்டியர் தலையில் விளக்கேற்றினமை**

கசுகூ. ஒருவர் முன்னொர்நாள் $தந்து பின்செலா
உதியர் மன்னரே மதுரை மன்னரென்
றிருவர் தம்மையுங் கிழிகள் சுற்றுவித்
தெரிவி ளக்குவைத் †திகல்வி ளைத்ததும்.

ப - ரை:—ஓர் நாள் - ஒரு காலத்திலும், ஒருவர் முன் - (தம் பகைவர்) ஒருவ ரெதிரிலும், பின் தந்து செலா - முதுகு காட்டி ஓடாத, உதியர் மன்னரே - சேர வேந்தரும், மதுரை மன்னர் - பாண்டிய வரசர்களும், என்ற இருவர் தம்மையும் - என்று சொல்லப்பட்ட இரண்டு அரசர்களையும் (வென்று), கிழிகள் சுற்றுவித்து - (அவர்களை) கந்தைத் துணிகளைச் சுற்றிக்கொள்ளச் செய்து, எரி விளக்கு - எரிகின்ற விளக்குகளை, வைத்து - (அவர்கள் தலையில்) வைத்து, இகல் விளைத்ததும் - (தனது) வல்லமையைத் தோற்றுவித்த தன்மையையும்,

வி - ரை:—கரிகாலன் சேர பாண்டியரை வென்று அவர்களுக்குக் கந்தைத் துணிகளைச் சுற்றுவித்து அவர்கள் தலையில் எரிவிளக்கை வைத்து அவர்களை அவமானப் படுத்தின னென்பதாம். போரில் தோல்வியுற்றோரை இவ்வாறியற்றல் பண்டைய வழக்கம் போலும். 'தந்து பின்செலா......இருவர்' என்றதனால், சேர பாண்டியர் பேராற்றல் படைத்தவ ரென்பதும், அத்தகைய இருபெரு வேந்தரையும் கரிகாலன் வென்றன னென்பதும் விளங்கும். 'வழுதி சேரன் மடிய' [தா-கசுகூ] என முன்பு பாண்டியனையும் சேரனையும் கரிகாலன் வென்றதாய்க் கூறியிருத்தலால், அதன்பின் அரசுரிமை பூண்ட அவர்தம் மரபினர் பழம் பகை கருதி இவனுடன் போர் புரிய, இவன் அவர்களையும் வென்று அவமானப் படுத்தினமையை இங்குக் கூறினரெனத் தெரிகிறது. 'தொல்லரு வாளர் தொழில் கேட்ப, வடவர் வாடக் குடவர் கூம்ப, தென்னவன் திறல்கெடச் சீறி' [பட்டி-உஎ௫-உஎஎ] என்றதனால், இவன் சேர பாண்டிய மன்னரை மாத்திரமன்றி, வேறு பல வேந்தரையும் வென்றமை விளங்கும். மன்னரே—ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தது. இருவர் தம்மையும்—இதிலுள்ள தம் சாரியை; உம்மை முற்றுப் பொருளது; கிழி—முதனிலைத் தொழிற் பெயர்; இது தொழிலாகு பெயராய் ஆடையை யுணர்த்தினது.

பா-பே:—$ தனது பின்னர்வந்துக்கை மன்னரே, †இசைவிளைத்ததும். (உஉ)

**முதல் பராந்தகன் மேன்மை**

உ00. ‡வேழ மொன்றுகைத் தாலி விண்ணின்வாய்
விசைய டங்கவு மசைய வென்றதும்
ஈழ முந்தமிழ்க் கூட லுஞ்சிதைத்
திகல்க டந்ததோ ரிசைப ரந்ததும்.

ப - ரை:—ஆலி - நீர்த் துளிகளையுடைய, விண்ணின் வாய் - (மேகங்கள் பொருந்திய) ஆகாயத்தில், ஒன்று வேழம் உகைத்து - ஒப்பற்ற தனது யானையைச் செலுத்தி, விசை அடங்கவும் - (பகைவர்கள் புரியும் போரின்) வேகம் முற்றும், அசைய - தொலையும்படி, வென்றதும் - (ஒரு சோழன்) வென்ற செய்தியையும், ஈழமும் - இலங்கையையும், தமிழ் கூடலும் - தமிழ் நாடாகிய மதுரையையும், சிதைத்து - அழித்து, இகல்-

(தன்) பகைவரை, கடந்தது - வென்றதாகிய, ஓர் இசை - ஒப்பற்ற (அவன்) புகழ், பரந்ததும் - (எங்கும்) பரவின செய்தியையும்,

வி - ரை:—இதில் கூறப்பட்டவன் முதல் பராந்தகனும். இவனை வீர நாராயணன் எனவுங் கூறுவர். இவன் விசயாலயனுக்குப் பேரனும் முதலாதித்த னுக்குப் புதல்வனுமாவான். இவ்வேந்தன் மூன்றாம் இராசசிம்மன் என்னும் பாண்டிய மன்னனை கி. பி. கூ0க-ம் ஆண்டில் வென்று அவன் நாட்டைக் கவர்ந்துகொண்டான். பின்பு இராசசிம்மன் இலங்கை வேந்தனாகிய ஐந்தாங் காசிபன் உதவியை விழைந்தான். அம்மன்னவன் அவனுக்குதவியாய்த் தன் சேனைகளை யனுப்பினான். பராந்தக சோழன் அச்சேனைகளை முறியடித்து மீண்டும் இராசசிம்மனை வென்றான். ஐந்தாங் காசிபன் கி. பி. கூககூ அல்லது கூகஎ-ல், உயிர் துறந்தான். பின்பு ஐந்தாம் தப்புலா என்பவன் கி. பி. கூகஎ-ல், இலங்கைக் கிறைவனானான். இராசசிம்மன் ஐந்தாம் தப்புலாவை யணுகி அவன் உதவியை நாடினான். இவ்விருவரும் பராந்தகனோடு போர் புரிவதற்கு வேண்டிய முயற்சிகள் செய்து வந்தனர். ஆனால், உள் நாட்டில் நிகழ்ந்த பெருங் குழப்பத் தால், இராச சிம்மனுக் குதவிசெய்ய அம்மன்னவனால் இயலவில்லை. அதனால், இராசசிம்மன் இம்முறையும் தோல்வியுற்றுத் தன் மகுடத்தையும் விலையுயர்ந்த ஏனைய ஆடையணிகளையும் இலங்கையிலேயே வைத்துச் சேரநாட்டிற்கு ஓடி யுய்ந்தான். இலங்கை வீரர்களுடன் பராந்தகன் புரிந்த இரண்டாம் போர் இதுவேயாம். இப்போர் கி. பி. கூகஎ-கஅ-ல், நிகழ்ந்ததாம். இராமபிரானைப் போல் இலங்கையை வென்றமையால், இம்மன்னவன் சங்கிராமராகவன் என்னும் பட்டம் புனைந்து கொண்டான். இது நிற்க, கி. பி. கூசக-ம் ஆண்டில் மூன்றாம் உதயன் என்பவன் இலங்கைக் கிறைவனானான். அவன் கட்குடியனாய் அரசாளுந் திறமையற்றிருத்தலைப் பராந்தகன் செவியுற்றான். அதனால் அக்காவலன் கி. பி. கூகஅ-ல், மூன்றாம் இராசசிம்மன் இலங்கையில் வைத்துப்போன ஆடையணிகளைத் தனக்களிக்குமாறு உதயனை வினவினான். அவ்வேந்தன் அதற்கிணங்கவில்லை. உடனே பராந்தகன் தன் சேனைகளை யேவி உதயனை வென்று இராசசிம்மன் ஆடையணிகளைக் கவர்ந்துகொண்டான். மீண்டும் உதயன் சோழநாட்டின்மேல் ஒரு பெரும்படை யேவி அவற்றைப் பெற்றுக்கொண்டான். அதுகாலை, பராந் தகன் இராட்டிர கூடர்களுடன் போரில் முனைந்திருந்தமையால், அவ்வேந்தன் அவ் வாடையணிகளை உதயனுக்கு வழங்க நேர்ந்தது. இவன் கி. பி. கூகரு-ல், வைதும்ப வேந்தனாகிய சாந்தயனை வென்றான். [H. I. S. I. பக்-சக-சஉ-சங-சகூ]. பராந்தகன் வித்தியாதரன் என்னும் வாணர் வேந்தனையும், அவன் புதல்வன் நான்காம் விசயாதித்தனையும் வென்றான். பின்பு அவர்கள் ஆண்டு வந்த வாணகப்பாடியை இரண்டாம் பிருதிவிபதிக் களித்தான். அவன் பராந்தக வேந்தனுக்குக் கீழ்ப்படிந்து திறைப்பொருள் செலுத்தி வந்தான். வாணகப்பாடி யென்பது வடஆற்காடு, தென்னாற்காடு ஜில்லாக்களின் பகுதிகளாம். பராந்தக னுக்கு இராசாதித்தன், கண்டராதித்தன், அரிஞ்சயன், கோதண்டராமன் என்னும் நால்வர் புதல்வர்கள் இருந்தனர். இவன் கி. பி. கூ0எ முதல் கூசஎ வரை ஆட்சி புரிந்தான் [சோழவமி-பக்-கூ]. இவ்வேந்தனைப்பற்றி, 'மதுரைத் தமிழ்ப் பதியும், ஈழமுங் கொண்ட விகலாளி' [குலோத்-உலா-சரு-சகூ] என்றதனால், இவன் பாண்டி நாட்டையும் இலங்கையையும் வென்றமை விளங்கும். இவன் தன் யானையை விண்ணிற் செலுத்தி அங்குள்ள பகைவரை வென்றான் என்பது 'முதலடியின் கருத்தாம். அடங்கவும்—இதிலுள்ள உம்மை முற்றுப் பொருளிலும் ஏனைய நான்கும் எண்ணுப் பொருளிலும் வந்தன. இச்செய்யுள் முதல் கரிகாற் சோழன் பின்னோர் வரலாறு கூறப்படுகிறது.

பா - பே:—‡ வேழ மொன்றுகைத் தாவின். (உரு)

முதற் பராந்தகனுக்குப் பின் ஆட்சிபுரிந்த சோழ வேந்தர்களின் பெயருங் காலமும் வருமாறு: (க) கண்டராதித்த சோழன், கி. பி. கூ௪அ-கூ௫௬. (உ) இரண்டாம் பராந்தகன், கி. பி. கூ௫௬-கூ௭௦. (௩) உத்தம சோழன், கி.பி. கூ௭௦-கூ௮௫ [மு. கு. சோ-பக்-க௦-க௨]. பராந்தக சோழனுக்குப் பின் அவன் மூத்த புதல்வன் இராசாதித்தன் சுமார் இரண்டாண்டளவும் ஆட்சிபுரிந்தான் எனவும், பின்பு அவன் புரிந்த ஒரு போரில் கொலையுண்டானெனவுங் கூறுவர் [H. I. S. I. பக்-௬௭]. இவ்வேந்தர்கள் காலத்தில் அரிய செயல் நிகழாமை கருதி இந் நூலாசிரியர் இவர்களை இங்குக் கூறுதொழித்தனர் போலும். (௨௩)

இராசராச சோழன் சிறப்பியல்பு

௨௦க. சதய நாள்விழா வுதியர் மண்டலந்
தன்னில் வைத்தவன் றனியொர் மாவின்மேல்
உதய பானுவொத் *துதகை வென்றகோன்
ஒருகை வாரணம் பலக வர்ந்ததும்.

ப - ரை:—உதியர் மண்டலம் தன்னில் - சேர நாட்டில், சதயம் நாள் விழா வைத்தவன் - சதய நட்சத்திரத்தின் விழாவை ஏற்படுத்தின வனும், தனி ஓர் மாவின் மேல் - ஒப்பற்ற ஒரு யானையின்மேல், உதயம் பானு ஒத்து - காலையில் தோன்றும் இளஞ் சூரியனைப்போல் இருந்து, உதகை வென்ற கோன் - உதகை என்னும் ஊரை வென்றவனுமாகிய (ஒரு) சோழ வரசன், ஒரு கை வாரணம் - ஒப்பற்ற துதிக்கையையுடைய யானைகள், பல கவர்ந்ததும்-பலவற்றைக் கவர்ந்துகொண்ட செய்தியையும்,

வி - ரை:—சேரநாட்டில் சதய விழாவை யேற்படுத்தி அந்த நாட்டிலுள்ள உதகை யென்னு நகரை வென்றவன் முதலிராசராசனும். இவன் இரண்டாம் பராந்தகன் புதல்வனும். இவன் தன் இளமையிலேயே காந்தளூர்ச் சாலைத் துறைமுகத்திலுள்ள சேரர் மரக்கலங்களைச் சிதைத்துச் சேரவேந்தர்களை வென்றான். இவன் கி. பி. கூகூஅ-ம் ஆண்டில், அமரபுயங்கன் என்னும் பாண்டியனை வென்றதன்றி, கங்கை நாடு, நுளம்ப நாடு, வேங்கி நாடு முதலியவற்றையும் கவர்ந்தான். இவன் சேர சோழ பாண்டி நாடுகளாகிய மூன்றுக்குந் தலைமை பெற்றிருந்தமையால், இவனுக்கு மும்முடிச் சோழன் என்னும் பேர் உண்டாயிற்று. இவன் ஐந்தாம் மகிந்தனை வென்று இலங்கையையும் தனக்குரிமை யாக்கிக்கொண்டான். இம் மன்னவன் மேலைச் சளுக்கிய வேந்தனாகிய இரண்டாம் சத்தியாசிரயன்மேல் போர் தொடங்கினான். அப் போரில் அவன் தன் பகைஞன் நாடாகிய கன்னடத்திற் புக்கு அங்குள்ள பெண்களையும், சிறுர்களையும், வேதியர்களையுங் கொன்று இளமகளிரைத் தன் நாட்டிற்குக் கவர்ந்து சென்றான். பின்பு சத்தியாசிரயன் வெற்றி பெற்று இராசராசனைத் தன் நாட்டினின்று துரத்தி யடித்தா னென்ப. இப்போரிலும் இராசராசனே வெற்றியுற்றானெனவுங் கூறுவர். இப்போர் கி.பி. க௦௦௬-ம், ஆண்டில் நிகழ்ந்ததாம். இவன் கி. பி. க௦௦அ-ம் ஆண்டில் தன் மகள் குந்தவையைக் கீழைச் சளுக்கிய வேந்தனாகிய விமலாதித்தன் என்பவனுக்கு மணமியற்றி யருளினான் [H. I. S. I.-பக்-௫௬, ௫அ, ௫௯]. இம் மணத்தின் விரிவை உ௩௪-ம், தாழிசையிற் காண்க. பின்பு இராசராசன் கலியூரில் போர்புரியத் தொடங்கினான். அப்போரில் இம் மன்னவன் படைத்தலைவர்களில் ஒருவனாகிய அப்பிரமேயன் என்பவன் போசளரை வென்று தானும் உயிர் துறந்தான். இப் போரும் கி. பி. க௦௦௬-ம், ஆண்டில் நிகழ்ந்ததாம். பின்பு இவன் குடகு நாட்டின்மேல் படையெடுத்துச் சென்றான். அப்போது பஞ்சவ மாராயன் என்பவன் மிக்க ஆண்மையோடு இராசராசனை யெதிர்த்துப் போர் புரியலானான். அதனால் அம்மன்னவன் களிப்பெய்தி

வேங்கை மண்டலம், கங்கை மண்டலம் என்னும் நாடுகளைப் பஞ்சவ மாராய னுக்கு வழங்கித் தனக்குத் திறை செலுத்தும்படி கட்டளை யிட்டான். இவ் விறையவன் தஞ்சாவூரிலுள்ள பிரகதீசுவரர் கோயிலைக் கட்டினன். சைவ சமயக் குரவர்களருளிய பதிகங்களை நம்பியாண்டார் நம்பி என்னும் பெரியாரைக் கொண்டு திருமுறைகளாகத் தொகுப்பித்துச் செம்மையுறச் செய்தவன் இக் காவலனேயாம். இவனுக்கு ஐந்து மனைவியரிருந்தனர். இவன் கி. பி. கூ௮டு முதல் க0க௨-ம், ஆண்டு வரை ஆட்சி புரிந்தான் [சோழவமி - கூ - ம் - அதி]. சேரநாட்டில் திருநந்திக் கரையிலுள்ள சிவாலயத்தில் தான் பிறந்த ஐப்பசித் திங்கள் சதய நாள் திருவிழாவைக் கொண்டாட இக் கொற்றவன் ஏற்பாடு செய்தானென்ப. பா - பே :—* உக்கை. (௨௪)

இராசேந்திர சோழன் மேன்மை

௨0௨. களிறு கங்கைநீ ருண்ண மண்ணையிற்
காய்சி னத்தொடே கலவு செம்பியன்
குளிறு தெண்டிரைக் குரை‡க டாரமுங்
கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும்.

ப - ரை :—காய் சினத்தொடு - மூண்டெரியும் கோபத்தோடு, கலவு செம்பியன் - கலத்தலையுடைய ஒரு சோழன், மண்ணையில் - மண்ணை என்னும் ஊரில், கங்கை நீர் - கங்காநதியின் நீரை, களிறு உண்ண - (தன்) யானைகள் பருகும்படி, குளிறு - ஒலிக்கின்ற, தெள் திரை - தெளி வாகிய அலைகளையுடைய நதிகளையும், குரை - (பலவகை) ஆரவாரத்தை யுடைய, கடாரமும் - கடாரம் என்னும் நாட்டையும், கொண்டு - தனக்கு (உரிமையாக) கொண்டு, மண் தலம் - இவ்வுலகத்தை, குடையுள் வைத்த தும் - (தன்) குடை நிழலில் வைத்து அரசாண்ட செய்தியையும்,

வி - ரை :—தன் யானைகளுக்குக் கங்கையில் நீரூட்டிக் கடாரத்தைக் கைப் பற்றினவன் முதல் இராசேந்திர சோழனும். இவன் முதல் இராசராசன் புதல்வ னும். இவன் வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக் கடகம் முதலிய பல நாடு களைக் கைப்பற்றினன். இவன் வடநாடு நோக்கிச் சென்று இந்திரரதன், இரண சூரன், மகிபாலன் முதலிய வேந்தர்களை வென்றான். பின்பு அவ்விறையவன் மகிபாலன் தலையில் கங்கைநீர் நிரம்பிய குட மொன்றை யேற்றிக் கொணர்ந்து அந்நீரைத் திருச்சிராப்பள்ளியில் உள்ளதோர் ஏரியில் ஊற்றுவித்தான். அதனல், அவனுக்குக் கங்கைகொண்ட சோழன் என்னும் பேர் உண்டாயிற்று [சோழவமி- பக்-அ]. இவன் தந்தை முதல் இராசராசன் இலங்கையை அரசாண்ட ஐந்தாம் மகிந்தனை வென்றது போலவே, இவன் கி. பி. க0க௭-ம் ஆண்டில் மீண்டும் அம் மன்னவனை வென்று சிறைப்படுத்திய தன்றி, அவன் மனைவியையும் விலையுயர்ந்த அணிகளையுங் கவர்ந்தான். பன்னிரண்டாண்டு கழிந்தபின் மகிந்தன் அச்சிறையி லேயே உயிர் துறந்தான். இராசேந்திரசோழன் மூன்றாம் சயசிங்கனையும் சேர பாண்டியரையும் வென்றான். பின்பு அக்கொற்றவன் கி. பி. க0௨௪ அல்லது க0௨டு-ம், ஆண்டில் கடார தேசஞ்சென்று அதனை யரசாண்டு வந்த சங்கிராம விசயோத்துங்கனை வென்று சிறைப்படுத்தி அவன் நாட்டையும் கருவூலத்தையும் கவர்ந்து கொண்டான். அன்றியும், விலையுயர்ந்த அரதனங்களைப் பதித்த அவன் அரண்மனை வாயிற் கதவுகளையும் இராசேந்திரன் தன் நகரத்திற்குக் கொண்டு

‡ கடாரம் பர்மா தேசத்தைச் சார்ந்த தென்ப [சோழ வமி - பக் - க௮]. இது மலேயா தீபகற்பத்தின் மேற்குக் கரையைச் சேர்ந்துள்ள தெனவுங் கூறுப. [H. I. S. I. பக் - கூடு.]

சென்றான். இவன் கி. பி. ௧0௨௫-ம், ஆண்டில் சிதம்பரத்துக்கருகில் தன் பேரால் கங்கைகொண்ட சோழபுரம் என்னும் நகரமொன்றை யமைத்தான். பின்பு அந்நகரம் சோழர்களின் தலைநகரமாய்ச் சிறந்து விளங்கியது. இது நிற்க, காசிபன் என்பவன் கி. பி. ௧0௨௪-ம், ஆண்டில் இலங்கைக் கிறைவனாய் மணி முடி புனைந்து கொண்டான். அதுகாலை அவ்விறைவனுக்குப் பன்னிரண்டு வயதாம். அவன் அரசுகட்டிலில் வீற்றிருக்கு முன்பே இராசேந்திர சோழன் அவனைப் பற்றிக் கொணருமாறு ௯௫000-போர் வீரர்களை இலங்கைக் கேவினன். ஆனால் இம்முயற்சியில் அம்மன்னவன் வெற்றியுறவில்லை. இவன் கி. பி. ௧0௧௨-ம், ஆண்டு மே மாதம் ௩0-ம், நாள் அரசு கட்டிலேறி கி. பி. ௧0௩௩ வரை ஆட்சி புரிந்தான் [H. I. S. I. பக்-௬0, ௬௨, ௬௩, ௬௬, ௬௧]. இவன் வடநாட்டிற் சென்று அங்குள்ள வேந்தரை வென்றபோது தன் யானைகளுக்குக் கங்கையில் நீரூட்டியிருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. இவன் கங்கையில் தன் யானைகளுக்கு நீரூட்டினமையை வில்லி பாரதம், கன்னபர்வம் ௬௬-ம் செய்யுளாலுமறிக. 'கங்கா நதியுங் கடாரமுங் கைக்கொண்டு, கங்கா புரிபுரந்த கற்பகமும்' [விக்கி - உலா - ௩௫ - ௩௬] எனவும், 'கங்கா நதியுங் கடாரமும் கைக்கொண்டு, சிங்கா தனத்திருந்த செம்பியர்கோன்' [குலோத் - உலா-௪௯-௫0] எனவும், 'கங்கையு நன்மதையுங் கௌதமியுங் காவிரியு, மங்கை யுடனாடு மரபினோன்' [இராச-இராச-உலா-௪௩-௪௪] எனவும் இவனைப் பற்றி மூவருலாக்கள் கூறும். கலவு-தொழிற்பெயர்; திரை - சினையாகு பெயர்; துளிறு என்றது நதியின் சிறப்பையும் துறை யென்றது நகரின் சிறப்பையும் விளக்கி நின்றன. (௨௫)

**கம்பிலியில் சயத்தம்பம் நட்டமை**

௨0௩. கம்பி லிச்சயத் தம்ப நட்டதுங்
கடிய ரண்கொள்கல் யாணர் கட்டறக்
கிம்பு ரிப்பணைக் கிரியு கைத்தவன்
$கிரிக ளெட்டினும் புலிபொ றித்ததும்.

ப - ரை:—கிம்புரி பணை - பூணையணிந்த கொம்புகளையுடைய, கிரி - மலைபோன்ற யானையை, உகைத்தவன் - செலுத்தினவனாகிய ஒரு சோழன், கம்பிலி - கம்பிலி என்னும் நகரில், சயம் தம்பம் நட்டதும் - (தனது) வெற்றித் தூணை நிலை நிறுத்திய விதத்தையும், கடி - காவலாகிய, அரண் கொள் - மதில்களைக் கொண்ட, கல்யாணர் - கலியாணபுரத்திலுள்ள வீரர்கள், கட்டு அற - (தமது) வலிமை குலையும்படி, எட்டு கிரிகளிலும் - எட்டு மலைகளிலும், புலி பொறித்ததும் - (தனது) புலிக் கொடியைப் பதித்த விதத்தையும்,

வி - ரை:—சோழவேந்த னொருவன் கம்பிலியில் வெற்றித் தூண் நட்டதன்றி, கலியாணரையும் வென்றன னென்பதாம். கலியாணர் என்றது கலியாண புரத்திலுள்ள சளுக்கிய வீரர்களை யென்க. இச் செய்யுளில் குறிக்கப்பட்டவன் முதலிராசாதிராசன் என்பவன். இவன் பாண்டிய வேந்தர்களாகிய மானாபரணன், சுந்தர பாண்டியன் என்னும் இருவரையும் வென்றான். அவர்களில் மானாபரணன் இம்மன்னவன் கூரிய வாளுக்கிரையானான். சுந்தர பாண்டியன் புறங்காட்டி யோடி முல்லையூரை யடைந்துய்ந்தான். பின்பு இவ்வேந்தன் சேரர்களுடன் போர் புரிந்து அவர்கட் கிறைவனாகிய வீரகேரளனை வென்று, தன் வேழத்தை விட்டு மிதிப்பித்துக் கொன்றான்; அன்றியும், காந்தளூர்ச் சாலையிலுள்ள சேரர் மரக்கலங்களையும் சிதைத்தழித்தான். அதன் பிறகு மேலைச் சளுக்கியருடன் போர் புரிந்து முதல் சோமேசுவரன் என்னும் ஆகவமல்லன் புதல்வர்களாகிய ஆறம்

விக்கிரமாதித்தன், விசயாதித்தன் என்னும் இருவரையும் துரத்தி யடித்ததன்றி, அவர் தம் நகரமாகிய கோளிப் பாக்கையையும் எரியூட்டி யழித்தான். அந் நகரம் கிருஷ்ண நதியின் தென்கரையில் உள்ள தென்ப. இவ்விறையவன் இலங்கை வேந்தர்களுடன் சமருஞற்றி விக்கிரமபாது, விக்கிரம பாண்டியன், வீரசலாமேகன், சீவல்லவ மதனன் என்னும் நால்வரையும் வென்று அவர்கள் மணிமுடிகளைக் கவர்ந்து கொண்டான். இம்மட்டோ! மீண்டும் இவன் சளுக்கிய ருடன் போர் புரிந்து துங்கபத்திரை நதிக்கரையிலுள்ள கம்பிலி என்னும் நகரத்தையும் அதிலிருந்த அரண்மனையையும் அழித்தொழித்தான். இப் போர்க ளனைத்தும் கி. பி. க0சகூ-ம், ஆண்டில் நிகழ்ந்தனவாம். இவன் அசுவமேத மகமொன் றியற்றினன். மீண்டும் இக்குரிசில் கிருஷ்ண நதிக் கரையிலுள்ள கொப்பம் என்னும் ஊரில் க0ருஉ-ம், ஆண்டில் மேலைச் சளுக்கியருடன் கடும் போர் புரிய நேர்ந்தது. அப் போரில் மேற்படி யாண்டு மே மாதம் உஅ-ம், நாள் இம் மன்னவன் உயிர் துறந்தான். இவன் கி. பி. க0சங முதல் க0ருஉ வரை ஆட்சி புரிந்தான் [H. I. S I. பக்-எக-எஉ]. இம்மன்னவன் இலங்கைக் கிறைவனாகிய வீரசலாமேகனைப் பலவாறு துன்புறுத்தினன். அவன் மனைவியை யும் தமக்கையையும் சிறைப்படுத்தியதன்றி அவன் அன்னையின் மூக்கையும் அறுத் தான். இறுதியில் அக்கொற்றவன் உயிரையுங் கவர்ந்தான் [சோழ-வமி-பக்-உ0-உக]. இம் மன்னவனைப்பற்றி, 'கலியாணஞ், செற்ற தனியாண்மைச் சேவக னும்' [விக்கி-உலா-ருஎ-ருஅ] எனக் கூறியுள்ளமை காண்க. இவன் கம்பிலியைக் கைப்பற்றிய பின், அதில் வெற்றித்தூணை நிலைநாட்டினனெனஇச் செய்யுளால் தெரிகிறது. எட்டுக் கிரிகளாவன:—இமயம், மந்தரம், கயிலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமானதம் என்பன. இவற்றை வேறுவிதமாகவுங் கூறுப [தா-கருஉ]. பா - பே:—$ கிரியனைத்தினும். (உகூ)

### இராசேந்திர தேவன் மேன்மை

உ0ச. ஒருக ளிற்றின்மேல் வருக ளிற்றையொத்
துலகு யக்கொளப் பொருது கொப்பையிற்
பொருக ளத்திலே முடிக வித்தவன்
புவிக விப்பதோர் குடைக வித்ததும்.

ப - ரை:—ஒரு களிற்றின் மேல் - ஒப்பற்ற யானையின் மேல், வரு களிற்றை ஒத்து - (ஏறி) வருகின்ற (மற்றொரு) யானையைப் போல, உலகு உய கொள - உலகத்திலுள்ளவர்கள் பிழைக்கும்படி, கொப்பையில் பொருது - கொப்பை என்னும் ஊரிலே சண்டை செய்து, பொரு களத்திலே - (அந்த) போர்க் களத்திலேயே, முடி கவித்தவன் - மகுடம் தரித்துக்கொண்டவனாகிய ஒரு சோழன், புவி கவிப்பது - உலகம் முழு வதும் போர்க்கத் தக்கதாகிய, ஓர் குடை - ஒப்பற்ற குடையை, கவித் ததும் - (தன்மேல்) கவித்துக்கொண்ட செய்தியையும்,

வி - ரை:—இச் செய்யுளில் குறிக்கப்பட்டவன் இராசேந்திர தேவனும். இவன் முற்கூறிய இராசாதிராசனுக் கிளையவன். இவன் தன் தமையனுக் குதவியாய்க் கிருஷ்ண நதிக் கரையிலுள்ள கொப்பத்தில் மேலைச் சளுக்கிய ருடன் கடும் போர் புரிந்தான். அப் போரில் இராசாதிராசன் உயிர் துறந் ததும், இவன் அப் போர்க்களத்தில் கி. பி. க0ருஉ-ம், ஆண்டு மே மாதம் உஅ-ம், நாளிலேயே முடிபுனைந்து கொண்டான். உடனே இம் மன்னவன் சளுக்கியரை வென்று கொல்லாபுரத்தில் வெற்றித்தூணை நிலைநாட்டினன். இவன் மீண்டும் ஆகவமல்லனுடன் போர் புரிய நேர்ந்தது. அப்போரில் ஆகவமல்லன் படைத்

தலைவர்களாகிய சயசிங்கன், புலிகேசி, நன்னிநுளம்பன் முதலானோர் கொலை யுண்டனர். அதுகாலை அவ்விறைவனுடைய களிறுகள் பலவற்றையும் வேறு பல நாடுகளையும் இராசேந்திரதேவன் கவர்ந்துகொண்டான். இப்போர் கி. பி. க0ருரு-ல், நிகழ்ந்ததென்ப. பின்பு இவன் கலிங்க வேந்தனாகிய வீரசலா மேகனை வென்று அவன் தலையைக் கொய்தான். அன்றியும் இலங்கைக் கிறைவனாகிய மானாபரணனை வென்று அவன் மக்களிருவரையும் கைப்பற்றினான். இராசாதிராசனும் இப்பெயருடைய இருவரைக் கொலை புரிந்திருக்கிறான். அவர்களில் வீரசலாமேகன் இலங்கைக்கிறைவனும், மானாபரணன் பாண்டி நாட்டிற்கிறைவனுமாகலின், இராசேந்திரதேவன் அப்பெயருடைய வேறு இருவரை வென்றானென்பதை இங்குக் கவனிக்க. இவன் தன் மகள் மதுராந்தகியை முதற் குலோத்துங்கனுக்கு மணமியற்றி யருளினான். இம்மன்னவன் கி. பி. க0சுங-ம், ஆண்டுவரை ஆட்சிபுரிந்தான் [H. I. S. I. பக்-எஉ, எங, எரு, எஎ; சோழவமி - அதி - சு]. இவ் வேந்தனைப்பற்றி, 'வேழங்க ளாயிரமும், கொப்பத் தொருகளிற்றாற் கொண்டோனும்' [விக்கிர - உலா - ங்க, ச0] எனவும், 'ஒரு பரணி, கொப்பத் தொருகளிற்றாற் கொண்ட கோன்' [இரா - உலா - சஎ, சஅ] எனவும் கூறியுள்ளமை காண்க. 'ஒரு களிற்றின்மேல் வருகளிறு' என்றது இல்பொருளுவமை யணியாம். (உஎ)

இராச மகேந்திரன் சிறப்பு

உ0ரு. பனுவலுக்கு முதலாய வேத நான்கிற்
பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழையர் தங்கண்
மனுவினுக்கு மும்மடிநான் மடியாஞ் சோழன்
‡மதிக்குடைக்கீ ழறந்தளிர்ப்ப வளர்ந்த வாறும்.

ப - ரை:—பனுவலுக்கு - (எல்லா) நூல்களுக்கும், முதல் ஆய - முதன்மையாகிய, வேதம் நான்கின் - நான்கு வேதங்களினும், பண்டு உரைத்த - முன்பு சொல்லிய, நெறி - நல்லொழுக்கங்களை, புதுக்கி - புதுப்பித்து, பழையர் தங்கள் - பழையவராகிய தம் முன்னோர்களில், மனுவினுக்கு - (நீதியில்) மனுச் சக்கரவர்த்தியைக் காட்டிலும், மும்மடி - மூன்று மடங்கும், நால் மடி - நான்கு மடங்கும், ஆம் - சிறந்தவனாகிய, சோழன் - ஒரு சோழனது, மதி குடை கீழ் - சந்திரனைப்போன்ற குடை நிழலில், அறம் தளிர்ப்ப - தருமம் தழைக்கும்படி, வளர்ந்த ஆறும் - வளர்ந்த விதத்தையும்,

வி - ரை:—இச் செய்யுளில் சொல்லப்பட்டவன் இராச மகேந்திரன் என்பவனாம். இவன் திருவரங்கத்துக் கோயிலில் ஒரு பிராகாரம் (சுற்று மதில்) அமைத்தான். அந்தப் பிராகாரமமைந்த தெருவிற்கு இராச மகேந்திரன் திரு வீதி என்ற பெயர் வழங்குகிறது. அன்றியும் இவன் திருவரங்கநாதர் படுக்கையாகிய அரவணையை விலையுயர்ந்த பல இரத்தினங்களால் அலங்காரப்படுத்தினான் [மு. கு. பக்-கஉ, கங; சோழவமி-பக்-உங]. 'பாடரவத் தென்னரங்க மேயாற் குப் பன்மணியால், ஆடரவப் பாய லமைத்தோன்' [விக்கி-உலா-சஉ-சங] என்றதனால், இவன் திருமாலிடம் பேரன்பு பூண்டவனென்பது நன்கு விளங்கும். இச்செய்யுளால் இராச மகேந்திரன் மிக்க நீதிமானெனத் தெரிகிறது. இவன் இராசேந்திர தேவனுக்கும் வீரராசேந்திரனுக்கும் இடையில் சிறிது காலமே ஆட்சி புரிந்தான். குடை—ஆகுபெயர்; குடைக்கீழ்—எழனுருபு. (உஅ)

பா - பே:—‡ வளங்குடைக்கீ ழறங்களிக்க.

முதற் குலோத்துங்கன் பிறப்பு

உ0சு. குந்தளரைக் கூடற்சங் கமத்து வென்ற
கோனபயன் குவலயங்காத் தளித்த பின்னை
இந்தநிலக் குலப்பாவை யிவன்பாற் சேர
என்னதவஞ் செய்திருந்தா ளென்னத் தோன்றி.

ப - ரை:—கூடல் சங்கமத்து - கூடல் சங்கம மென்னு மிடத்தில், குந்தளரை வென்ற - குந்தள நாட்டு வீரரை வெற்றி கொண்ட, கோன் அபயன் - அரசனாகிய சோழனொருவன், குவலயம் - (இந்த) உலகத்தை, காத்து அளித்த பின்னை - பாதுகாத்து அருள் செய்த பின்பு, இந்த நிலம் - இந்தப் பூமியாகிய, குலம் பாவை - சிறந்த பெண்ணானவள், இவன் பால் சேர - இந்த முதற் குலோத்துங்கனிடம் வந்து அடைய, என்ன தவம் செய்திருந்தாள் - எப்படிப்பட்ட தவத்தைச் செய்தாளோ, என்ன - என்று (யாவரும்) சொல்லும்படி, தோன்றி - (முதற் குலோத் துங்கன்) பிறந்து,

வி - ரை:—நிலக்குலப்பாவை இவன்பால் சேரலாவது:—நிலவுலக முற்றும் இவனுக்கே உரிமையாதல் [தா-கசு]. குந்தளரைக் கூடற் சங்கமத்தில் வென்ற வன் வீரராசேந்திரனும். இவன் இராசேந்திர தேவனுக்குப் பின் பிறந்தவன். இம்மன்னவனும் ஏனைய சோழ வேந்தர்களைப்போல் சிறந்த வீரனாவான். இவன் மேலைச் சளுக்கிய வேந்தனாகிய முதல் சோமேசுவரன் என்னும் ஆகவமல்லனை யும், அவன் புதல்வர்களாகிய ஆறாம் விக்கிரமாதித்தன், நான்காம் சயசிங்கன் என்ப வர்களையும், கூடற் சங்கமத்தில் வென்றான். கூடற் சங்கமமென்பது கிருஷ்ண நதியும், துங்கபத்திரை நதியும் ஒன்று சேருமிட மென்ப. இப்போர் சுமார் கி. பி. க0சுசு-ம், ஆண்டில் நிகழ்ந்ததாம். சிலகாலங் கழிந்தபின் ஆகவமல்லன் தானெய் திய தோல்வியால் கடுஞ்சினமுற்று, மீண்டும் கூடற்சங்கமத்திலேயே, தன்னோடு போர்க்கு வருமாறு ஒரு கடிதம் வரைந்து அதனை வீரராசேந்திரனுக் கனுப்பி னான். அவ்விறையவன் அவ்வாறே அவன் குறிப்பிட்ட நாளில் தன் படைகளைத் திரட்டிச் சென்று அவ்விட மணுகினான். சுமார் ஒரு மாதங் கழிந்தும் ஆகவ மல்லன் போர்க்கு வரவில்லை. அதனால் வீரராசேந்திரன் அங்குப் பல விடங் களில் தீ மூட்டி யழித்துத் துங்கபத்திரை நதிக்கரையில் ஒரு வெற்றித் தூணை நிலைநாட்டினான். ஆனால் சிறந்த வீரனாகிய ஆகவமல்லன் தானெய்திய தோல்விக ளால் பெரிதும் நாணி கி. பி. க0சுஅ-ம், ஆண்டு மார்ச்சு மாதம் ௨0-ம், நாள் துங்கபத்திரை நதியில் விழுந்து உயிர் துறந்தான். பின்பு வீரராசேந்திரன் பொத்தப்பி நாட்டு வேந்தனை வென்று அவன் தலையை வெட்டி வீழ்த்தினான். பொத்தப்பி நாடு சித்தூர் ஜில்லாவிலுள்ள காளத்தியைச் சார்ந்த தென்ப. இக் கொற்றவன் கி. பி. க0சுஎ-ம், ஆண்டில் தன்னை யெதிர்த்துப் போர் புரிந்த கங்கன், நுளம்பன், பல்லவன், வைதும்பன் என்னும் வேந்தர்களின் தலைகளை யறுத்துத் தள்ளினான். அவ்வாண்டிலேயே இவன் வேங்கி நாட்டை வென்று அதனைக் கீழைச் சளுக்கிய வேந்தனாகிய ஏழாம் விசயாதித்தனுக் களித்தான். இம் மன்னவன் கி. பி. க0சுரு-ம், ஆண்டு மார்ச்சு மாதம் கரு-ம், நாள் அரசு கட்டி லேறி கி. பி. க0எ0-ம், ஆண்டு வரை ஆட்சி புரிந்தான் [H. I. S. I. பக்-எஎ, எகூ, அ0, அக.] இவன் கேரளவரசனையும், தாராதேசத்து மன்னனாகிய சனநாதனையும், அவன் இளவலையும் வென்றான். வீரராசேந்திரனோடு போர்புரிந்து தோல்வியுற்ற ஆறாம் விக்கிரமாதித்தன், அம்மன்னவனிடம் அடைக்கலம் புகுந்தான். அக்கொற் றவன் அவனை இரட்டைப்பாடி நாட்டிற் கிறைவனாக்கினதன்றி, தன் மகளையும்

அவனுக்கு மணமியற்றி யருளினன். வீரசோழியம் என்னும் இலக்கண நூல் வீரராசேந்திரன் என்னும் இம் மன்னவன் பேரால் இயற்றப்பட்டதாம். [சோழ வமி-பக்-உடு, உசு]. இந்நூலை யியற்றியவர் வடமொழி, தென்மொழி யென்னும் இரு மொழிகளினும் வல்லவராகிய புத்தமித்திரனர் என்னும் பேரறிஞராவார். இவ்வேந்தனைப்பற்றி, 'கூடலூர், சங்கமத்துக் கொள்ளுந் தனிப் பரணிக் கெண்ணிறந்த, துங்க மதயானை துணித்தோனும்' [விக்கி-உலா-சங, சச] எனவும், 'பாட வரிய பரணி பகட்டணிவீழ், கூடலூர் சங்கமத்துக் கொண்ட கோன்' [இராச-உலா-சகூ, ௫0] எனவுங் கூறியிருத்தல் காண்க. (உகூ)

குலோத்துங்கன் வெற்றியின் சிறப்பு

உ0எ எவ்வளவு திரிபுவன முளவாய்த் *தோன்றும்
எவ்வளவு குலமறைக ளுளவாய் †நிற்கும்
அவ்வளவு திகிரிவரை யளவுஞ் செங்கோல்
ஆணைசெல்ல வபயன்காத் தளிக்கு மாறும்.

ப - ரை :—திரி புவனம் - மூன்று உலகங்களும், எவ்வளவு உளவாய் தோன்றும் (அவ்வளவு) - எவ்வளவு தூரம் இருப்பனவாய்த் தோன்றுமோ (அவ்வளவு தூரமும்), குலம் மறைகள் - உயர்வாகிய வேதங்கள், எவ்வளவு - எவ்வளவு தூரம், உளவாய் நிற்கும் - உள்ளனவாய் (நிலை பெற்று) நிற்குமோ, அவ்வளவு - அவ்வளவு தூரமும், திகிரி வரை அளவும் - சக்கரவாள மலையளவும், செங்கோல் ஆணை - (தனது) செங்கோலாகிய கட்டளை, செல்ல - நிறைவேறும்படி, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழன், காத்து அளிக்கும் ஆறும் - (தன் குடிகளை) காப்பாற்றி அருள் புரிந்த விதத்தையும்,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் மூன்றுலகங்களையும் ஆண்டான் என்பதாம். திரிபுவனம் :—சேர சோழ பாண்டி மண்டலங்கள்; சுவர்க்க மத்திய பாதாள லோகங்கள் எனினுமாம். திகிரி வரை—சக்கரவாள மலை; இது வட்ட வடிவமாய்க் கடல்களைச் சூழ்ந்துள்ள தென்பர். இதுகாறும் சோழவரசர் பலர் வரலாறுகளை யுணர்த்தி இதில் முதற் குலோத்துங்கனைப்பற்றிக் கூறினர். இவனுக்கு விசயதரன் முதலிய பல பேர்கள் உண்டு. அவற்றை இந்நூலின் முகவுரையிற் காண்க. இந்நூலின் பாட்டுடைத் தலைவன் இவனே யாவான்.

பா - பே :—* நிற்கும், † தோன்றும். (௩0)

கரிகாலன் சோழர் வரலாற்றை எழுதி முடித்தமை

உ0அ. இப்பு றத்திமய மால்வரையின் மார்பி னகலத்
தெழுதி னெழுது தற்கரிய வேத மெழுதி
ஒப்பு றத்தனது தொன்மரபு மம்ம ரபின்மேல்
உரைசெய் பல்புகழு மொன்றுமொழி யாத பரிசே.

ப - ரை:—தனது தொல் மரபும் - தனது பழமையாகிய வம்சத்தினுள்ளவர்கள் பெயர்களையும், அ மரபின் மேல் - அந்த வம்சத்தில், உரைசெய் - சொல்லப்பட்ட, பல் புகழும் - (பல அரசர்களின்) பல வகையாகிய புகழுக்குரிய செயல்களையும், ஒன்றும் ஒழியாத பரிசு - ஒரு சிறிதும் தவருத வகையில், எழுதுதற்கு அரிய வேதம் - (ஏட்டில்) எழுதுவதற்கு முடியாத வேதத்தை, எழுதி ஒப்புற - எழுதினற்போல, மால் இமயம் வரையின் - பெரிய இமய மலையின், மார்பின் அகலத்து -

நடுவாகிய பரவிய இடத்தில், இ புறத்து - (தென் திசையாகிய) இந்தப் பக்கத்தில், எழுதினன் - (கரிகாலன்) எழுதி முடித்தான்.

வி - ரை :—'இப்புறம்' என்றது—இங்கே தென்திசையை யுணர்த்தி நின்றது. மால்—மேக மெனினுமாம்; 'ஆற்ற லழியுமென் றந்தணர்கள் நான் மறையைப், போற்றி யுரைத்தேட்டின் புறத்தெழுதார்' [திருவ-மா-கடு] என்றபடி, வேதம் எழுதாக் கிளவியாதலால், 'எழுதுதற்கரிய வேதம்' என்றார். 'மால் வரையின் மார்பி னகலம்' என்றது இலக்கணை; 'கள்ளி வயிற்றி னகில் பிறக்கும்' [நான்மணி—ச] 'கடல் வயிறு கலக்கினே' [சிலப்-கஎ-முன்னிலை-க] 'குன்றின் நெஞ்சுபக லெறிந்த வஞ்சுடர் நெடுவேல்' [குறுந்-கடவுள் வாழ்த்து] 'கிழை, மகரக் கடல் வயிறு' [மேகவிடு-உகடு] என வருமாறு காண்க. மார்பின்—இன் சாரியை; மார்பினகலம்—ஒருபொருட் பன்மொழி யெனினுமாம். மரபு, புகழ் என்பன ஆகு பெயர்களாய் முறையே மரபினர் பெயரையும், புகழுக்குரிய செயல்களையு முணர்த்தின. இவற்றிலுள்ள உம்மைகள் எண்ணுப் பொருளி லும், ஒன்றும் என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்புப் பொருளிலும் வந்தன. எழுதி—எழுதினல் என்பதன் விகாரம்.

(கஅடு) முனி மொழிந்தபடி (கஅசு) அளித்த பரிசும் (கஅஎ) வந்த பரிசும் (கஅஅ) வென்ற சயமும் (கஅகூ) பரந்த புகழும் (ககூ0) புக்க புகழும் (ககூக) நின்ற விதுவும் (ககூஉ) கொண்ட விறலும் (ககூங) கொண்ட வவனும் (ககூச) செய்த வவனும் (ககூடு) அரசிட்ட வவனும் (ககூசு) அணைந்த பரிசும் (ககூஎ) அழிந்ததும் (ககூஅ) கொண்டதும் (ககூகூ) விளைத்ததும் (உ00) பரந்ததும் (உ0க) கவர்ந்ததும் (உ0உ) வைத்ததும் (உ0ங) பொறித்ததும் (உ0ச) கவித்த தும் (உ0டு) வளர்ந்தவாறும் (உ0சு) அபயன், அளித்த பின்னை, தோன்றி (உ0எ) அளிக்குமாறும் (உ0அ) ஒழியாத பரிசு, எழுதினன் என முடிக்க. (ஙக)

சோழ மரபினர் பிறர் பிழைகளைப் பொறுத்தல்

உ0கூ. எழுதி மற்றுரைசெய் தவரவர்கள் செய் பிழையெலாம்
எமர்பொ றுக்கவென விப்படிமு டித்த விதனைத்
தொழுது கற்றனமெ னத்தொழுது சொல்லு மளவிற்
சோழ வம்சமிது சொன்ன*வறி வென்னவழகோ.

ப - ரை :—எழுதி - (கரிகாலன் சோழர் வரலாற்றை இமய மலையில்) எழுதி, மற்று - பின்பு, உரை செய்தவர் - (இராச பாரம்பரியத்தை) சொல்பவராகிய, அவர்கள் செய் பிழை எலாம் - அவர்கள் செய்த குற்றங்களை எல்லாம், எமர் - (சோழர்களாகிய) எமது மரபில் தோன்றிய வர்கள், பொறுக்க என - பொறுத்துக்கொள்வாராக என்று, இப்படி முடித்த - இவ்வாறு (இமய மலையில் எழுதி) முடித்த, இதனை - இந்தச் சோழர் வரலாற்றை, தொழுது - (உருத்திர யோகினியை) வணங்கி, கற்றனம் என - (அவள்பால்) கற்றறிந்தோமென்று, தொழுது - (முது பேய் தேவியை) வணங்கி, சொல்லும் அளவில் - சொன்ன மாத்திரத்தில், சோழர் வம்சம் இது - சோழ பரம்பரையாகிய இதனை, சொன்ன அறிவு - (விரித்து) சொல்லிய (இந்த முதுபேயின்) அறிவு, என்ன அழகோ - என்ன அழகாயிருக்கிறதென்று (தேவி) வியந்து,

வி - ரை :—சோழர் வரலாற்றைச் சொன்ன முதுபேயினறிவைத் தேவி வியந்தன ளென்பதாம். 'உரைசெய் தவர்கள் செய்பிழை எலாம், எமர் பொறுக்க' எனக் கரிகாலன் எழுதி வைத்தமையால், அம் முதுபேய் தன் பிழை

யையும் சோழர் மரபினர் பொறுப்பாரெனக் கருதி அவர்தம் வரலாற்றைக் கற்றுவந்த தென்க. கற்றனம் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. சோழர் வம்சம்—'சில விகாரமாம் உயர்திணை' [நன்-கருகூ] என்றதனால், நிலை மொழியீற்று மெய் கெட்டது. அழகோ—ஓகாரம் வியப்பின்கண் வந்தது.
பா - பே :—* பரிசென்ன. (௩உ)

சோழ மன்னர் புகழைக் கேட்டுத் தேவி களிப்பெய்தல்

உகo. வையகமாங் குலமடந்தை மன்னபயன்
தன்னுடைய மரபு கேட்டே
ஐயனையான் பெற்றெடுத்த வப்பொழுதும்
இப்பொழுதொத் திருந்த தில்லை.

ப - ரை :—வையகம் ஆம் - நிலமகளாகிய, குலம் மடந்தை - உயர்வாகிய பெண்ணுக்கு, மன் - தலைவனாகிய, அபயன் தன்னுடைய - (முதற் குலோத்துங்க) சோழனுடைய, மரபு கேட்டு - பரம்பரையோர் வரலாற்றை (தேவி) கேட்டு, ஐயனை - மகனாகிய முதற் குலோத்துங்கனை, யான் பெற்றெடுத்த——, அ பொழுதும் - அந்தச் சமயமும், இ பொழுது ஒத்து - இந்தச் சமயத்தைப் போல, இருந்தது இல்லை——,

வி - ரை :—சோழர் புகழையும் நீதியையும் கேட்டுக் களிப்படைந்த தேவி, அத்தகைய சிறந்த குலத்தில் தோன்றிய முதற் குலோத்துங்கனைத் தன் மகனாகக் கருதி, 'ஐயனை யான்......இல்லை' என மொழிந்து களிப்பெய்தின ளென்க. 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனை, சான்றோ னெனக் கேட்ட தாய்' [திருக்கு-கூகூ] எனவும், 'ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே' [புறநா-உ௭அ] எனவும் அறிஞர் கூறியுள்ளமை காண்க. (௩௩)

தேவி சயத்துங்கனைப் புகழ்தல்

உகக. உலகையெலாங் $கவிக்கின்ற வொருகவிகைச்
†சயத்துங்கன் மரபு கீர்த்தி
அலகையெலாங் காக்கின்ற வம்மைபூ
தலங்காப்பா னவனே யென்ன.

ப - ரை :—அலகை எலாம்-பேய்களை எல்லாம், காக்கின்ற அம்மை-காப்பாற்றுகின்ற காளி தேவி, உலகை எலாம் - உலகங்கள் எல்லாவற்றையும், கவிக்கின்ற - போர்த்திருக்கின்ற, ஒரு கவிகை - ஒப்பற்ற குடையையுடைய, சய துங்கன் - முதற் குலோத்துங்கனுடைய, மரபு கீர்த்தி - பரம்பரையோர் புகழை (கேட்டு), அவனே - அந்த முதற் குலோத்துங்கனே, பூதலம் காப்பான் - உலகங்களை (எல்லாம்) காப்பாற்றுவான், என்ன - என்று (தேவி) சொல்ல,

வி - ரை :—முதுபேய் சோழர் வரலாற்றைக் கூறக் கேட்டு இனி முதற் குலோத்துங்கனே உலகமுற்றுங் காப்பானெனத் தேவி கூறின ளென்பதாம். சயதுங்கன் [தா-அ, உகூகூ, ௩௪௩]. உoகூ (தேவி) என்ன வழகோ (உகo) இருந்ததில்லை (உகக) அவனே காப்பான் என்ன, என்று முடிக்க.
பா - பே :—$ காக்கின்ற, † சயதரன்றன் மரபின். (௩௪)

இராச பாரம்பரியம் முற்றிற்று.

---

# கூ. பேய் முறைப்பாடு

**பேய் முறைப்பாடு** :—இது பேயினது முறைப்பாடு என விரிதலின் ஆறன் தொகையாம். பேய்களின் முறைப்பாட்டை யுணர்த்துஞ் செய்யுட்களின் பகுதி யென்பது இதன் பொருளாம். பேய்கள் ஒன்று திரண்டு தமது பசிப்பிணியின் கொடுமையைத் தேவியிடம் கூறி, அதனைப் போக்குமாறு அவ்வம்மையை வேண்டின. அவ்வமயம் இமயமலையிலிருந்து வந்த முதுபேயானது கலிங்க நாட்டில் நிகழும் தீய நிமித்தங்களைத் தேவிக்குரைத்தது. அதனைக் கேட்ட அவ்வம்மை, "மிக்க விரைவில் கலிங்க நாட்டில் பெரும் போர் நிகழும்; அதனால் நும் பசி முற்றுந் தொலையும்" என வியம்பினள். உடனே அப் பேய்கள் பெருங் களிப்பெய்தின வென்னுஞ் செய்தி இதில் கூறப்படும்.

**பேய்கள் தம் பசியின் கொடுமையைத் தேவியிடம் முறையிடல்**

உகஉ. ஆறுடைய †திருமுடியா னருளுடைய
பெருந்தேவி யபயன் காக்கும்
பேறுடைய பூதமாப் பிறவாமற்
பேய்களாப் பிறந்து கெட்டேம்.

ப - ரை :—ஆறு உடைய - கங்கா நதியை யணிந்த, திரு முடியான் - அழகிய (சடை) தலையை யுடையவராகிய சிவபெருமானது, அருள் உடைய - திருவருளைப் படைத்த, பெருந்தேவி - காளி தேவியே, அபயன் காக்கும் - முதற் குலோத்துங்க சோழனால் காப்பாற்றப்படும், பேறு உடைய - பாக்கியம் படைத்த, பூதம் ஆ(க) பிறவாமல் - பூதங்களாகப் பிறவாமல், பேய்கள் ஆ(க) பிறந்து - பேய்களாகப் பிறப்பெடுத்து, கெட்டேம் - (நாங்கள்) கேட்டை யடைந்தோம்.

வி - ரை :—காளிதேவி பார்வதி தேவியின் கூறுகையால், 'ஆறுடைய ............பெருந்தேவி' என்றார். முதற் குலோத்துங்கன் தன் பகைவருடைய யானை, குதிரை, காலாட்களைக் கொன்று, தன் பூதங்களுக்கு உணவூட்டி வருதலினால், 'அபயன் காக்கும் பேறுடைய பூதம்' எனவும், அப்பூதங்கள் தின்று மிகுந்த சிறிதளவே தமக்கு உணவாகக் கிடைப்பதனால் 'பேய்களாப் பிறந்து கெட்டேம்' எனவும் பேய்கள் முறையிடலாயின வென்க. உடைய—மூன்றும் குறிப்புப் பெயரெச்சங்கள்; பூதமா, பேய்களா—இவ்விரண்டிலும் ககரங்கள் தொக்கு நின்றன. பா - பே :—† சடை முடியான். (க)

**இதுவுமது**

உகஙு. ஆர்காப்பா ரெங்களைநீ யறிந்தருளிக்
காப்பதல்லா லடையப் ‡பாழாம்
ஊர்காக்க மதில்வேண்டா வுயிர்காத்த
உடம்பினைவிட் டோடிப் போதும்.

ப - ரை :—அறிந்து - (எங்கள் பசியின் வருத்தத்தை) தெரிந்து, அருளி - (எமக்கு) அருள் புரிந்து, நீ காப்பது அல்லால் - நீ காப்பாற்றுவதைத் தவிர, எங்களை காப்பார் ஆர் - எங்களைக் காப்பாற்றுகிறவர் (வேறு) யார் இருக்கின்றார் (ஒருவருமிலர்), அடைய பாழ் ஆம் - முற்றும்

பாழாகிய, ஊர் காக்க - ஊரைக் காத்தற்கு, மதில் வேண்டா - மதில் சுவர்கள் வேண்டுவதில்லை, (அதுபோல்) உயிர் காத்த - (பயனின்றி எங்கள்) உயிரைக் காத்து வந்த, உடம்பினை விட்டு - (எங்கள்) உடலை விட்டு, ஓடி போதும் - (நாங்கள் இப்போதே) இறந்து போவோம்.

வி - ரை :—பாழாகிய ஊரைக் காக்க மதில் வேண்டாதது போல், பய னற்ற எங்கள் உயிரைக் காக்க உடம்பு வேண்டாவெனப் பேய்கள் மொழிந்தன வென்க. 'உயிர்காத்த உடம்பினைவிட் டோடிப் போதும்,' என்றது இறந்து படுவோம் என்னும் பொருளைப் பயந்து நின்றது. அவை பசியின் கொடுமைக் காற்றாது தங்கள் உயிர் மேலுள்ள வெறுப்பால் இவ்வாறு கூறின வென்க. பாழ்த்த ஊர் பேய்களின் உயிருக்கும், மதில் அவைகளின் உடம்புக்கும் உவமை யாம். பேய்கள் பசையற்ற மன முடையனவாதல் கருதிப் பாழ்த்த ஊர் உவமை கூறப்பட்டது. ஆர்—யார் என்பதன் மரூஉ; இஃதிங்கே யின்மைப் பொருளைப் பயந்து நின்றது. அல்லால்—குறிப்பு வினையெச்சம்; இச்செய்யுளில் உபமான உபமேயங்கள் தனித்தனி வாக்கியங்களாக நின்று அவைகளின் நடுவில் உவம உருபின்றி வந்தமையால், இஃதெடுத்துக் காட்டுவமை யணியாம். இது முதல் உகககூ-ம், செய்யுள் வரையில் பேய்கள் தம் பசியின் கோடுமையைத் தேவி யிடம் முறையிடுதலை உணர்த்தும். பா - பே :—¦ பாழ்த்த. (உ)

இதுவுமது

உகச. ஓய்கின்றே மோய்வுக்கு மினியாற்றேம்
ஒருநாளைக் கொருநா ளுங்கள்
தேய்கின்ற படிதேய்ந்து மிடுக்கற்றேஞ்
செற்றாலு முய்ய மாட்டேம்.

ப - ரை :—நாங்கள்——, ஒரு நாளைக்கு ஒரு நாள் - நாளுக்கு நாள், தேய்கின்றபடி தேய்ந்து - (பசியின் மிகுதியால்) மெலியும் வகையால் மெலிந்து, ஓய்கின்றேம் - தளர்ச்சி யடைகின்றோம், ஓய்வுக்கும் - (மேலும்) தளர்ச்சி யடையவும், இனி ஆற்றேம் - இனிச் சகிக்கமாட்டாதவராய், மிடுக்கு அற்றேம் - வலியில்லாதவரானோம், செற்றாலும் - (இனி நீ) கோபித்தாலும், உய்ய மாட்டேம் - (நாங்கள்) பிழைக்கமாட்டோம்.

வி - ரை :—நாங்கள் நாளுக்கு நாள் உணவின்றி மெலியலானோம் என்பதாம். 'ஓய்கின்றேம்' என்றது நடக்க வலியின்மையையும், 'தேய்கின்றபடி தேய்ந்து' என்றது, உடலின் மிக்க மெலிவையும் உணர்த்தின; நாளுக்கு நாள் அப் பேய்களின் உடல் சிறிது சிறிதாய் மெலிதலால் அவை தேய்கின்றபடி தேய்ந்து எனக் கூறின வென்க. ஆற்றேம்—முற்றெச்சம்; செற்றாலும்— உம்மை எதிர்மறை. (ங)

இதுவுமது

உகரு. வேகைக்கு விறகானே மெலியா நின்றே
*மெலிந்தவுட றடிப்பதற்கு விரகுங் காணேஞ்
சாகைக்குத் தனையாசை போதும் பாழிற்
சாக்காடு மரிதாகத் தந்து வைத்தாய்.

ப - ரை :—வேகைக்கு - (பசியாகிய தீப்பற்றி) எரிவதற்கு, விறகு ஆனேம் - விறகு போன்றவராய், மெலியா நின்றேம் - (உடல்) இளைக்க

லானேம், மெலிந்த உடல் - (அவ்வாறு) மெலிவடைந்த (எங்கள்) உடம்பு, தடிப்பதற்கு - பருத்து வளர்வதற்கு, விரகும் காணேம் - (ஓர்) உபாயத்தையும் அறியமாட்டோம், சாகைக்கு - (நாங்கள் எங்கள்) உயிரைத் துறப்பதற்கு, இத்தனை ஆசை - (உணவின் மேலுள்ள) இவ்வளவு ஆசையே, போதும்——, பாழின்-வீணாய், தந்து - (எங்களைப்) படைத்து, சாக்காடும் - மரணத்தையும், அரிது ஆக - (மிகவும்) அருமையாய், வைத்தாய் - (செய்து) வைத்தாய்.

வி - ரை :—'வேகைக்கு விரகானேம்' என்றது, அப் பேய்களின் பசியின் கொடுமையையும் 'சாகைக் கித்தனை ஆசை போதும்' என்றது, அவைகளுக்கு உணவின் மேலுள்ள பேரவாவையும் விளக்கின. ஆனேம்—முற்றெச்சம்; ஆசை—இதில் பிரிநிலை ஏகாரம் விகாரத்தால் தொக்கு நின்றது. சாக்காடு—தொழிற் பெயர். இதிலுள்ள உம்மை இழிவு சிறப்பு.

பா - பே :—* மெலிந்தவுடனீப்பதற்கு விரகும். (ச)

இதுவுமது

உகசு. சாவத்தாற் பெறுதுமோ †சதுமுகன்றுன்
கீழ்நாங்கண் மேனுட் செய்த
பாவத்தா லெம்வயிற்றிற் பசியை$வைத்தான்
பாவியேம் ‡பசிக்கொன் றில்லேம்.

ப - ரை :—கீழ் நாங்கள் - கீழோராகிய நாங்கள், மேல் நாள் செய்த-முற்பிறப்பில் செய்த, பாவத்தால்——, சதுமுகன் தான் - நான்கு தலைகளையுடைய பிரமன், எம் வயிற்றில் - எங்கள் வயிற்றிலே, பசியை வைத்தான் - பசியை உண்டாக்கினன், பாவியேம்-பாவிகளாகிய நாங்கள், பசிக்கு - பசியைப் போக்குவதற்கு, ஒன்று இல்லேம் - ஒருவித உணவும் இல்லாதவராய் இருக்கிறோம், சாவத்தால் - (பெரியோரைப் பிழைத்த) சாபத்தால், பெறுதுமோ - (இனியும் என்னென்ன தீங்குகள்) அடைவோமோ?

வி - ரை :—'பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாரால், பேரா விடும்பை தரும்' [திருக்கு-அ0உ] எனவும், 'பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும், வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபின், ஆர்க்கு மருவி யணிமலை நன்னுட, பேர்க்குதல் யார்க்கு மரிது' [நாலடி-கசுக] எனவும், 'தூயவர்க் கிடரிழைத் துழலுந் தோமுடை, ஆயவர் வீழ்கதி யதனில் வீழ்க யான்' [கம்பரா-பள்ளியடை-கககூ] எனவும் சான்றோர் கூறியுள்ளமையான், 'சாவத்தாற் பெறுதுமோ' எனப் பேய்கள் அஞ்சின வென்க. 'ஊழ்வினை யுருத்துவந் தூட்டும்' [சிலப்-பதிகம் ருஎ] எனவும், 'கடப்பா ரெவரே கடுவினையை' [நளவெ-கலி-ருச] எனவும், 'காலத்தினை ஞாலத் தெவரே கடப்பவர் தாம்' [உத்தரகா-திக்குவிசய-சக] எனவும், 'பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே' [பட்டினத்-பொது-கரு] எனவும், கூறுபவாகலின், 'கீழ் நாங்கள் மேனுட் செய்த பாவத்தால்' என அப்பேய்கள் வருந்தி முறையிட்டன. பெறுதுமோ—தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று; ஓகாரம் ஐயத்தின் கண் வந்தது. கீழ்—பண்பாகு பெயர்; இல்லேம்—தன்மைப் பன்மை எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று. ஒன்று—எண்ணலளவை யாகு பெயர்; இதனீற்றில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

பா - பே :—† சதுமுகனூர், $ வைத்தார், ‡ பசிக்க வில்லேம். (ரு)

இதுவுமது

உகஎ. *பதடிகளாய்க் காற்றடிப்ப நிலைநி லாமற்
பறக்கின்றேம் பசிக்கலைந்து பாதி நாக்கும்
உதடுகளிற் பாதியுந்தின் றொறுவா யானேம்
உனக்கடிமை யடியேமை யோடப் பாராய்.

ப - ரை :—பதடிகள் ஆய் - பதர்கள் போல, காற்று அடிப்ப - காற்றடித்த வளவில், நிலை நிலாமல் - (நாங்கள் ஓரிடத்தும்) நிலை பெறாமல், பறக்கின்றேம் - பறக்கின்றோம், பசிக்கு அலைந்து - பசியால் வருந்தி, பாதி நாக்கும் - நாவில் பாதியும், உதடுகளில் பாதியும் தின்று——, ஒறுவாய் ஆனேம் - குறைந்த வாயை யுடையவரானோம், உனக்கு அடிமை - உனக்குக் குற்றேவல்களைப் புரியும், அடியேமை - அடியவர்களாகிய எங்களை, ஓட - (உன்னை நீங்கி) ஓடும்படி, பாராய் - (நீ) பார்க்கமாட்டாய்.

வி - ரை :—பேய்களின் பசியின் கொடுமையால் சிறிதும் வலியின்றி மெலிந்து கிடந்தமையால், பதடிகளாய்..........பறக்கின்றேம்' என அவை முறையிட்டன வென்க. 'பாதி நாக்கும் உதடுகளிற் பாதியுந் தின்று' என்றதனால் அவைகளுக்கு உணவு கிடைக்காமையால், அவை பசியின் கொடுமைக் காற்றது தம் முறுப்புகளைத்தாமே தின்னலாயினவென்பது விளங்கும். அடிமை—தாழ்ந்து நின்றேவல் கேட்டல்; இதனை 'ஒன்னார்க் கடிமை புகுத்தி விடும்' [திருக்கு-கூ0அ] என்றதிற் காண்க. 'அடியேமை யோடப் பாராய்' என்றது, எங்கள் குறைகளைப் போக்கி யாட்கொள்வதன்றி, எம்மைக் கைவிடமாட்டா யென்பதாம். ஆய்—உவம உருபிடைச் சொல். பா - பே :— *பதடுகளாய். (கூ)

இதுவுமது

உகஅ. அகளங்க னமக்கிரங்கா னரசரிடுந்
திறைக்கருள்வா னவன்றன் யானை
நிகளம்பூண் டனவடியே நெடும்பசியான்
அறவுலர்ந்து நெற்றா யற்றேம்.

ப - ரை :—அகளங்கன் - (முதற் குலோத்துங்க) சோழன், நமக்கு இரங்கான் - நமக்கு அருள் புரியாதவனும், அரசர் இடும் திறைக்கு - அரசர்கள் செலுத்தும் பகுதிப் பொருளுக்கு, அருள்வான் - அருள் புரியலானன், அவன் தன் யானை - (அதனால்) அவனுடைய யானைகள், நிகளம் பூண்டன - விலங்குகளை யணிந்தன, அடியேம் - (உங்கள்) அடியவர்களாகிய நாங்கள், நெடும் பசியான் - மிக்க பசியால், அற உலர்ந்து - மிகவும் வாடி, நெற்று ஆய் - உலர்ந்த நெற்றுக்களைப் போல், அற்றேம் - (வலி) தொலைந்தோம்.

வி - ரை :—யானைகள் நிகளம் பூணலாவது :—போரின்மையால் அவை தமது கூடத்தில் கட்டுண்டு கிடத்தல்; போர் விளையுங்கால் அவைகளின் விலங்கு அவிழ்க்கப்படு மென்பதை, 'இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ, தென்னன் தமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி, அகளங்கா வுன்றனயிரா வதத்தின், நிகளங்கால் விட்ட நினைவு' [தனிப்-க-ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்-கூ] என்றதனா லறிக. நெற்று—முதிர்ந்து உலர்ந்த வற்றல் கனிகள்; அவை சாரமின்றி உலர்ந்து கிடத்தல் போல், பேய்கள் தமது உடம்பிலுள்ள உதிரங்குன்றி வலியிழந்து கிடந்தன வென்பதாம். அகளங்கன் = அ + களங்கன்;

களங்கம்—குற்றம்; குற்ற மில்லாதவ னென்பதாம். இரங்கான்—முற்றெச்சம், அடியேம்—தன்மைப் பன்மைக் குறிப்பு வினையாலணையும் பெயர். (எ)

**பேய்கள் நன்னிமித்தம் காணல்**

உகசு. மூக்கருகே வழுநாறி முடைநாறி
உதடுகளுந் துடிப்ப வாயை
ஈக்கதுவுங் குறியா லுய்ந் திருக்கின்றேம்
அன்றாகி லின்றே சாதும்.

ப - ரை :—— மூக்கு அருகே - (எங்கள்) மூக்குகளுக்கு அருகில், வழு நாறி - ஒருவகை நீர் தோன்றி, முடை நாறி - புலால் நாற்றம் வீசி, உதடுகளும் துடிப்ப - உதடுகளுந் துடிக்கும்படி, வாயை ஈ கதுவும் - (எங்கள்) வாய்களில் ஈக்கள் மொய்க்கும், குறியால் - நன்னிமித்தத்தால், உய்ந்து இருக்கின்றேம் - (நாங்கள்) பிழைத்திருக்கிறோம், அன்று ஆகில் - (அவ்வாறு) அல்லாவிட்டால், இன்றே சாதும் - (நாங்கள்) இப்பொழுதே உயிர் விடுவோம்.

வி - ரை :—வழு நாறல், முடை நாறல், ஈக்கதுவல் முதலியன பேய்களுக்கு நன்னிமித்தமாம். நாறு இரண்டினுள் முந்தினது தோன்றலென்னும் பொருளிலும், பிந்தினது நாற்றம் என்னும் பொருளிலும் வந்தன. 'நாறல்' தோன்றலென்னும் பொருள் தருதலை 'அருமணி மரகதத் தங்க ணூறிய' [சீவக-கஅரு] என்றதனு லறிக. சாதும்—தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று. (அ)

**முதுபேய் தேவியை வணங்கல்**

உஉ0. என்றுபல கூளிகளி ரைத்துரைசெய் போதத்
தன்றிமய வெற்பினிடை நின்றுவரு மப்பேய்.

ப - ரை :—பல கூளிகள் - பல பேய்கள், இரைத்து - ஆரவாரஞ் செய்து, என்று உரைசெய் போதத்து - என்று சொல்லிய சமயத்தில், அன்று - அப்போது, இமய வெற்பின் இடை நின்று - இமயமலையிலிருந்து, வரும் அ பேய் - வந்து சேர்ந்த அந்த முதுபேயானது,

வி - ரை :—பல பேய்கள் தங்கள் குறைகளைத் தேவியிடம் சொல்லி முறையிட்டபோது முதுபேய் சொல்லத் தொடங்கின தென்க. போதத்து—அத்துச் சாரியை பெற்று வந்தது. (கூ)

**கலிங்கத்துக் கண்ட நிமித்தம் கூறல்**

உஉக. கைதொழுதி றைஞ்சியடி யேன்வடக லிங்கத்
தெய்தியவி டத்துளநி மித்தமிவை கேண்மோ.

ப - ரை :—கை தொழுது - (அம் முதுபேய் தேவியைத் தன்) கையால் தொழுது, இறைஞ்சி - (தலையால்) வணங்கி, அடியேன் - அடிமையாகிய நான், வடக்கு கலிங்கத்து - வடக்கிலுள்ள கலிங்க நாட்டில், எய்திய இடத்து - சென்றிருந்த காலத்தில், உள நிமித்தம் - (அங்குத் தோன்றி) உள்ள சகுனங்களாகிய, இவை கேண்மோ - இவற்றைக் கேட்பாயாக,

வி - ரை :—தேவியின் பெருமையும் தன் பணிவுந் தோன்ற அப் பேய் தேவியைக் கையால் தொழுது தலையால் வணங்கினதாம். இடம்—இங்குக் காலமென்னும் பொருளில் வந்தது. 'கைகொல்லுங் காழ்த்த விடத்து' [திருக்கு-அஎகூ] என்றமை காண்க. அடியேன்—தன்மை யொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். கேண்மோ—ஏவலொருமை வினைமுற்று; மோ—முன்னிலையசைச் சொல். (க0)

இதுவுமது

உஉஉ. மதக்கரிம ருப்புறம தம்புலரு மாலோ
மடப்பிடம ருப்பெழும தம்பொழியு மாலோ
கதிர்சுடர்வி ளக்கொளிக றுத்தெரியு மாலோ
‡காலமுகில் செங்குருதி காலவரு மாலோ.

ப - ரை :—மதம் கரி - மதத்தைப் பொழியும் ஆண் யானைகளின், மருப்பு இற - கொம்புகள் முறிந்து, மதம் புலரும் - (அவைகளின்) மதநீர் வற்றிப் போம், மடம் பிடி - இளமையாகிய பெண் யானைகளுக்கு, மருப்பு எழ - கொம்புகள் முளைத்து, மதம் பொழியும் - மதநீர் (மிகுதியும்) தங்கும், கதிர் சுடர் விளக்கு - கிரணங்களையுடைய ஒளியை வீசும் விளக்குகள், ஒளி கறுத்து எரியும் - (தமது) பிரகாசம் குன்றி எரியும், காலம் முகில் - பருவ காலத்தில் பெய்யும் மேகங்கள், செம் குருதி - செந்நிறமாகிய இரத்தத்தை, கால வரும் - பெய்யும்.

வி - ரை:—ஆண் யானைகளுக்குக் கொம்பு முறிதல், பெண் யானைகளுக்கு அவை முளைத்தல் முதலியன இயற்கைக்கு மாறுபட்டவையாதலால், தீய நிமித்தங்களாம். 'பிடிமதம் பிறந்தன' எனவும், 'விரியுமால் விளக்கினை விழுங்குமா லிருள்' எனவும், 'சூழிமால் வாரண முறியுமால் வலத்தவாண் மருப்பு' எனவும், 'புண்டொடர் குருதியிற் பொழியும் போர் மழை' [காட்சிப்-சங, சடு, சசு, சஎ] எனவும், 'பிடியேலா மதம் பெய்திடப் பெருங்கவுள் வேழம், ஒடியு மான் மருப்பு' [கரன் வதை-எஉ] எனவும் கம்பரும் கூறியுள்ளமை காண்க. பொழிதல்—தங்கல்; இதனை 'தளிமழை பொழியுந் தண்பரங் குன்றில்' [மதுரைக்கா-உசுங] என்றதனு லறிக. கதிர்ச் சுடர் விளக்கு—சந்திரனைப் போல் ஒளி வீசும் விளக்கு எனினுமாம். இது முதல் மூன்று செய்யுட்கள் முதுபேய் கலிங்க நாட்டில் கண்ட தீ நிமித்தத்தை யுணர்த்தும். பா - பே :—‡ கறுத்த முகில். (கக)

இதுவுமது

உஉங. வார்முரசி ருந்துவறி தேயதிரு மாலோ
வந்திரவி லிந்திரவில் வானிலிடு மாலோ
*ஊர்மனையி லூமனெழ வோரியழு மாலோ
ஓமவெரி யீமவெரி †போல்கமழு மாலோ.

ப - ரை :—வார் முரசு - (தோல்) வாரால் பிணிக்கப்பட்ட முரச வாத்தியங்கள், இருந்து - (அவை இருந்த விடத்தே) இருந்து, வறிதே - பயனின்றி, அதிரும் - (தமக்குத் தாமே) ஒலிக்கும், இரவில் - இராக் காலத்தில், இந்திர வில் - வான வில்லானது, வானில் வந்து இடும் - ஆகாயத்தில் வந்து தோன்றும், ஊர் மனையில் - ஊரிலுள்ள வீடுகளில், ஊமன் எழ - பேராந்தைகள் (வந்து) தோன்ற, ஓரி அழும் - நரிகள் ஊளையிடும், ஓமம் எரி - வேள்விக்குரிய நெருப்பு, ஈமம் எரி போல் - சுடலையில் எரியும் நெருப்புப் போல், கமழும் - (தீ நாற்றம்) வீசும்.

வி - ரை :—வார் முரசு — பெரிய முரசு எனினுமாம். முரசங்கள் அறைவாரின்றித் தாமே முழங்குதலை 'பேரியும், இடியென முழங்குமா லிரட்டலின்றியே' எனவும், இரவில் வானவில் தோன்றுதலை, 'விற்பக லின்றியே யிரவு விண்டற, எற்பக வெரிந்துள தென்னத் தோன்றுமால்' [காட்சிப்-சங, சச] எனவும் கம்பர் கூறினமையானு முணர்க. பேராந்தைகள் ஒலித்தலும் நரிகள் ஊளையிடுதலும் தீ நிமித்த மென்பதை, 'நீண்முக நரியின் தீவிளிக் கூவும், சாவோர்ச்

பயிருங் கூகையின் குரலும்' [மணிமே-சு, எச, எரு] என்றதனு லறிக. பேராந்தைகள் சாவோரை யழைக்கு மென்பதும் இதனல் விளங்குகிறது. ஒளி வீசி நறுமணங் கமழும் வேள்வித் தீ தீங்கு நேருங்கால், புகைந்து முடை நாற்றம் வீசு மென்க. வார் முரசு—முற்கூறிய பொருளில் மூன்றனுருபும் பயனும் உடன்தொக்க தொகையும், பிற்கூறிய பொருளில் உரிச்சொற் றொடருமாம். வறிது—குறிப்பு முற்றெச்சம்; இதிலுள்ள ஏகாரம் அசை.

பா - பே :—* ஓர் மனை, † போலெரியு மாலோ. (கஉ)

**தேவி பேய்கட்கு விடை கூறல்**

உஉச. †பூவிரியு மாலைகள்பு லால்கமழு மாலோ
பொன்செய்மணி மாலையொளி போயொழியு மாலோ
ஓவியமெ லாமுடல்வி யர்ப்பவரு மாலோ
ஊறுபுனல் செங்குருதி நாறவரு மாலோ.

ப - ரை :—விரியும் பூ மாலைகள் - (மக்கள் சூடும்) மலர்ந்த பூ மாலைகள், புலால் கமழும் - புலால் நாற்றம் வீசும், பொன் செய் - பொன்னல் செய்யப்பட்ட, மணி மாலை - இரத்தின மாலைகளின், ஒளி போய் ஒழியும் - ஒளி முற்றும் அழியும், ஓவியம் எலாம் - சித்திரங்கள் எல்லாம், உடல் வியர்ப்ப - (தமது) உடல் வேர்க்கும்படி, வரும் - தோன்றும், ஊறு புனல் - (தடாகங்களில்) சுரக்கும் நீர், செம் குருதி நாற வரும் - சிவந்த இரத்தம் போல் தோன்றச் சுரக்கும்.

வி - ரை :—பூ மாலைகள் புலால் நாற்றம் வீசுதல் முதலியன தீய நிமித்தங்க ளென்க. 'மைந்தர் சூடிய, கற்பக மாலையும் புலவு காலுமால்' [காட்சிப்-சுச] எனவும், 'பூவின் மாலைபு லால்வெறி பூத்தலால்' [இராவணன் வதை-உ0] எனவுங் கூறினர் கம்பரும். ஓவியம்—மாடங்களிலுள்ள சுவர்களில் வரைந்த சித்திரங்கள். 'குருதி நாற' என்பதற்குக் குருதி நாற்றம் வீச எனினுமாம். இம்மூன்று செய்யுட்களிலுமுள்ள ஆல், ஓ—இரண்டும் அசைகள்.

பா - பே :—† பூவியலு மாலைகள். (கங)

**இதுவுமது**

உஉரு. எனுவுரைமு டித்ததனை யென்கொல்வினை வென்றே
வினுவுரைத னக்கெதிர்வி ளம்பினள ணங்கே.

ப - ரை :—எனு - என்று, உரை முடித்து - (தன்) சொற்களை (சொல்லி) முடித்து, அதனை வினைவு என் கொல் - அதனல் நிகழ்வது யாது, என்ற வினு உரை தனக்கு - என்று (அம்முதுபேய்) கேட்டதற்கு, அணங்கு - தேவியானவள், எதிர் விளம்பினள் - எதிர் சொல்லத் தொடங்கினள்,

வி - ரை :—கலிங்கத்தில் நிகழ்ந்த தீய நிமித்தங்களின் பயன் யாதோ வென்று முதுபேய் கேட்கத் தேவி விடை கூறத் தொடங்கின ளென்க. எனு—செய்யா வென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம்; அதனை—உருபு மயக்கம்; ஐகாரம் சாரியை எனினுமாம். கொல்—அசைநிலை. (கச)

**கணிதப் பேய்கள் கனவு கண்டுரைத்தல்**

உஉசு. உங்கள் குறியும் வடகலிங்கத் துள்ள குறியு முமக்கழகே
நங்கள் கணிதப் பேய்கூறு நனவுங் கனவுஞ் சொல்லுவாம்.

ப - ரை :—உங்கள் குறியும் - உங்களுடைய குறிகளும், வடக்கு கலிங்கத்து - வடக்கிலுள்ள கலிங்க நாட்டில், உள்ள குறியும் - நிகழ்ந் துள்ள குறிகளும், உமக்கு அழகே - உங்களுக்குத் தக்கனவே யாகும்,

நங்கள் கணிதம் பேய் - நமது சோதிடப் பேய்கள், கூறும் - சொல்லிய, நனவும் - விழிப்பிற் கண்ட நிகழ்ச்சிகளையும், கனவும் - கனவிற் கண்ட நிகழ்ச்சிகளையும், சொல்லுவாம் - (உங்களுக்கு) சொல்லுவோம்.

வி - ரை :—உங்களுக்கு நல்ல நிமித்தங்கள் பல புலப்படுவதன்றி, நமது சோதிடப் பேய்கள் சொன்னவற்றையுங் கேளுங்களெனத் தேவி கூறினளென்க. உங்கள் குறி என்றது—பேய்களினிடத்தில் நிகழ்ந்த குறிகளை; அவற்றை உகசு-ம் தாழிசையிற் காண்க. வட கலிங்கம்—ஏழனுருபும் பயனுமுடன் தொக்க தொகை; உம்மைகள் நான்கும் எண்ணுப் பொருளில் வந்தன. ()

தேவி பரணிப் போர் மூளுமெனல்

உ௨எ. நிருபரணி வென்ற வக ளங்கன் ‡ மத
யானைநிக ளங்களொடு நிற்ப னவதற்
கொருபரணி யுண்டெனவு ரைத்தனவு
ரைப்படியு மக்கிதுகி டைக்கு மெனவே.

ப - ரை :—நிருபர் அணி - (பகை) வேந்தர்களின் படை வகுப்பை, வென்ற அகளங்கன் - வெற்றி கொண்ட (முதற் குலோத்துங்க) சோழனுடைய, மதம் யானை - மதத்தைப் பொழியும் யானைகள், நிகளங்களொடு - (கால்) விலங்குகளோடு, நிற்பன - (போருக்குத் தயாராய்) நிற்பனவாகும், அதற்கு - அதனால், ஒரு பரணி - ஒரு பரணிப் போர், உண்டு என - (உமக்கு) கிடைக்குமென்று, உரைத்தன - (நம் சோதிடப் பேய்கள்) சொல்லின, உரைப்படி - (அவை சொன்ன) சொல்லின்படி, உமக்கு இது கிடைக்கும் - உங்களுக்கு இந்தப் பரணிப் போர் கிடைக்கும், என - என்று (தேவி) சொல்ல,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் மதயானைகள் போருக்குத் தயாராய் நிற்பதால், பரணிப் போர் கிடைக்குமென நமது சோதிடப் பேய்கள் கூறினவென்பதாம். மதயானை நிகளங்களொடு நிற்பன என்றது கணிதப் பேய்களின் கனவும், ஒரு பரணி யுண்டென வுரைத்தன என்றது அவைகளின் நனவுமாம். பரணிப் போராவது :—ஓரரசன் ஆயிரம் யானைகளைப் போரில் வென்று வெற்றி மாலை புனைதலாம். முதற் குலோத்துங்கன் ஆயிரக்கணக்கான யானைகளையேயன்றி வேறு பல குதிரைகளையும், காலாட்களையும் கொன்று குவிப்பனாதலால், உங்கள் பசி தணியுமாறு உங்களுக்கு நல்ல உணவு கிடைக்குமெனத் தேவி பேய்களுக்குத் தேறுதல் மொழி யுரைத்தன ளென்க.

பா - பே :—‡ மதயானைகணி ணங்களோடு நிற்பனவு. (கசு)

பரணிப்போர் கேட்டுப் பேய்கள் களிப்பெய்தல்

உ௨அ. தடித்தனமெ னத்தலைத டித்தனமெ
னப்பலத னிப்பனைகு னிப்ப வெனவே
நடித்தனந டிப்பவலி யற்றனகொ
டிற்றையுந னைத்தனவு தட்டி னுடனே.

ப - ரை :—தடித்தனம் என - (உடல்) பூரித்தோம் எனவும், தலை தடித்தனம் என - தலை பருத்தோம் எனவும், தனி பல பனை - தனிமையாகிய பல பனைமரங்கள், குனிப்ப என - நடிப்பன போல, நடித்தன - (பேய்கள்) நடனம் புரிந்து, நடிப்ப-மேலும் நடனம் புரிய, வலி அற்றன-வலிவு தொலைந்தனவாய், உதட்டின் உடன் - (தங்கள்) உதடுகளையும்,

கொடிற்றையும் - (உட்புற) கன்னங்களையும், நனைத்தன - (தங்கள் வாயி லிருந்து சுரக்கும் நீரால்) நனைத்தன.

வி - ரை :—பேய்கள் தளர்ச்சி யடையுமளவுங் கூத்தாடின வென்பார், 'நடிப்ப வலியற்றன' என்றார். நீண்டு மெலிந்த உருவமும் கரிய நிறமும் பற்றிப் பனைமரம் பேய்களுக்கு உவமை கூறப்பட்டன. [தா-கஙடு] பரணிப் போரைக் கேட்ட வளவில் பேய்களின் வாயில் நீர் சுரந்த தென்பார், 'உதட்டினுடனே கொடிற்றையு நனைத்தன' என்றார். பேய்க் கூத்தைத் துணங்கை யென்ப. இதனை கூ0கூ-ம் தாழிசையிற் காண்க. தடித்தனம்—உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. குனிப்ப வெனவே—என, உவமவுருபிடைச் சொல்; இதிலுள்ள ஏகாரம் அசை; உதட்டினுடன்—உடன், எண்ணுப் பொருளில் வந்தது. நடித்தன, அற்றன—முற்றெச்சங்கள். இதில் உவமையணி யுள்ளமை காண்க. இதுவும் அடுத்த செய்யுளும் தேவி மொழிந்ததைக் கேட்டுப் பேய்கள் களிப்பெய்திக் கூத்தாடினமையை யுணர்த்தும். (கஎ)

இதுவுமது

உஉகூ. *விலக்குகவி லக்குகவி ளைத்தனவெ
னக்களிவி ளைத்தனவி ளைத்த னவிலா
அலக்குகவ ‡லக்குகவ டிக்கடிசி
ரித்தனவ யர்த்தனப சித்த பசியே.

ப - ரை :—விளைத்தன - (பசியின் கொடுமையால் நீங்கள்) விளைத்த கலகத்தை, விலக்குக விலக்குக - முற்றும் தவிர்வீராக, என - என்று (பேய்கள் ஒன்றோடொன்று) சொல்லிக்கொண்டு, களி விளைத்தன - களிப்பை யடைந்தன, இளைத்தன - மெலிந்தனவாகிய, விலா அலக்கு உக அலக்கு உக - (அவைகளின்) விலா வெலும்புகளெல்லாம் முறிந்து போகும்படி, அடிக்கடி சிரித்தன——, பசித்த பசி - (தாம்) பசித்த பசியை, அயர்த்தன - (அவை) மறந்தன.

வி - ரை :—'விலா அலக்கு உகச் சிரித்தன' என்றது—உணவு கிடைத்து மெனத் தேவி கூறியதைக் கேட்ட பேய்கள் அளவற்ற மகிழ்ச்சி யடைந்து பெருநகை புரிந்தன வென்பதாம். 'விலவறச் சிரித்திட்டேனே' [திருமா-கூச] என்றார் தொண்டரடிப்பொடி யாழ்வாரும். பா-பே :—* விலக்குக விளைத்தன, ‡ அலக்குகவ டிக்கடிசி ரித்தன வயர்த்தனப சித்தபசி யற்ற பசியே. (கஅ)

இதுவுமது

உகூ0. ஆடியிரைத் தெழுகணங்க ளணங்கேயிக் கலிங்கக்கூழ்
கூடியிரைத் †துண்டொழியெங் கூடாரப் போதுமோ.

ப - ரை :—இரைத்து - பேரொலி செய்து, ஆடி - கூத்தாடி, எழு கணங்கள் - (களிப்பால் துள்ளி) எழுந்த பேய்க் கூட்டங்கள், அணங்கே - தேவியே, கலிங்கம் இ கூழ் - கலிங்கப் போரில் கிடைக்கும் இந்த வுணவு, கூடி - (நாங்கள் எல்லோரும்) ஒன்று சேர்ந்து, இரைத்து - ஆரவாரஞ் செய்து, உண்டு - புசிக்க, ஒழி எம் கூடு - (பசியால்) அழியும் எங்கள் வயிறு, ஆர போதுமோ - நிரம்பப் போதுமோ, (என்று கேட்க),

வி - ரை :—கூழ்—உணவு; 'பகடுநடந்தகூழ் பல்லாரோடுண்க' [நாலடி-உ] எனவும், 'கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர் [புறநா-எ0] எனவும் வருமாறு காண்க. கலிங்கம் இடவாகு பெயராய்க் கலிங்கப் போரையும், கூடு முதலாகு பெயராய் வயிற்றையு முணர்த்தின. போதுமோ—ஓகாரம் வினாவின் கண் வந்தது. பா - பே :—† உண்டொழியும். (கக)

**தேவி கலிங்கப்போரின் கொடுமை கூறல்**

உங்க. போதும்போ தாதென*வே புடைப்படல மிடவேண்டா
ஓதஞ்சூ ழிலங்கைப்போர்க் கொட்டிரட்டி கலிங்கப்போர்.

ப - ரை :—போதும் போதாது என - (கலிங்கப் போரில் கிடைக்கும் உணவு) போதுமோ போதாதோ என்று, புடைப் படலம் இட வேண்டா - (என்) அருகிலிருந்து கேட்க வேண்டா, ஓதம் சூழ் - கடலால் சூழப்பட்ட, இலங்கை போர்க்கு - இலங்கையில் நடந்த (இராமாயண) போரை விட, கலிங்கம் போர் - கலிங்க நாட்டில் நிகழும் போரானது, ஒட்டி ரட்டி - ஒன்றுக்கு இரண்டு மடங்கு அதிகமாம்.

வி - ரை :—புடை—அருகு; 'பூதகணம் புடை நெருங்கும்' [பெரிய பு-திருவாரூர் - சசு] என்றமை காண்க. புடைப்படல்—அருகில் பொருந்தல்; பேய்களின் தொந்தரவைப் பொறுக்க முடியாமையால், 'போதும் போதா தென............வேண்டா' எனத் தேவி கடிந்து கூறின ளென்க. புடை—பக்க மெனினுமாம். போரின் கொடுமையை விளக்குவோர், 'ராமரா வணரு மென் னவே' எனவும், 'இராவணன் படுபோர்க் களமெனக் கிடந்த விந்தவெங் களத் திடை' எனவும், [வில்லிபா-எ-ம் போர்-சு, கச-ம் போர்-உகடு] இராமாயணப் போரை உவமை கூறுதலுண்மையால், 'இலங்கைப் போர்க் கொட்டிரட்டி கலிங்கப் போர்' என்றார். போதும் போதாது—இவற்றில் ஐயப் பொருளை யுணர்த்தும் ஓகாரங்கள் விகாரத்தால் தொக்கன; படலம்—அம் சாரியை. ஒட்டிரட்டி—இது ஒற்றிரட்டி என்றதன் மரூஉ.

பா - பே :—* நீர் புறப்படலம்.

(உகக) அம்மை, அவனே யென்ன (உகஉ) (பேய்கள்) பிறந்து கெட்டேம் (உகங) ஓடிப் போதும் (உகச) உய்ய மாட்டேம் (உகடு) தந்து வைத்தாய் (உகசு) பசிக்கொன் றில்லேம் (உகஎ) ஓடப் பாராய் (உகஅ) நெற்று யற்றேம் (உகக) இன்றே சாதும் (உஉo) என்று, உரை செய் போதத்து, அப்பேய் (உஉக) இறைஞ்சி, கேண்மோ (உஉஉ) கால வரும் (உஉங) போல் கமழும் (உஉச) நாற வரும் (உஉடு) என உரை முடித்தது, அணங்கு (உஉசு) சொல்லுவாம் (உஉஎ) கிடைக்குமென (உஉடு) எதிர் விளம்பினள் (உஉஅ) (அதைக் கேட்ட பேய்கள்) நனைத்தன (உஉக) சிரித்தன, பசி யயர்த்தன (உஙo) (அதன் பின்பு) கணங்கள் போதுமோ (என்ன) (உஙக) (தேவி) வேண்டா, ஒட்டிரட்டி கலிங்கப் போர் (உஙஉ) (இனி) கேண்மின் என முடிக்க. (உo)

பேய் முறைப்பாடு முற்றிற்று.

---

# கo. அவதாரம்



**அவதாரம்** :—இதன் பொருள் பிறத்த லென்பதாம். இது தேவர்களின் பிறப்பையும் மக்களில் உயர்ந்தோர் பிறப்பையு முணர்த்துவதோர் மரபு மொழியாம். திருமாலின் அவதாரமாகக் கருதப்படும் முதற் குலோத்துங்கன் பிறப்பு, வளர்ப்பு, நூல் கற்றல், படை பயிறல், முடி புனைதல் முதலியவற்றைக் காளி கூளிக்குக் கூறி வருகையில், கலிங்க நாட்டிலிருந்து விரைந்தோடி வந்த தோர் பேய், அங்கு நிகழும் போரினைத்

தேவிக்குரைக்க, அதைக் கேட்ட மற்றப் பேய்கள் பெருமகிழ்ச்சி யெய்திக் கூத்தாடின வென்னுஞ் செய்தி இதில் கூறப்படும்.

**திருமாலே குலோத்துங்கனுய்த் தோன்றின னெனல்**

உ௩உ. அன்றிலங்கை பொருதழித்த வவனேயப்
பாரதப்போர் முடித்துப் பின்னை
வென்றிலங்கு கதிராழி விசயதரன்
எனவுதித்தான் விளம்பக் கேண்மின்.

ப - ரை :—அன்று - முன்பொரு காலத்தில், இலங்கை பொருது - இலங்கையில் (கொடியவர்களாகிய இராவணன் முதலிய அரக்கர்களுடன்) போர் புரிந்து, அழித்த - (அந்த இலங்கையையும் அரக்கர்களையும்) நாசம் செய்த, அவனே - (இராமனுகிய) அந்தத் திருமாலே, அ பாரதம் போர் முடித்து - அந்தப் பாரதப் போரையும் நிறைவேற்றி, பின்னை - (அதன்) பின்பு, வென்று - (தன் பகைவரை) வென்று, இலங்கு - விளங்குகின்ற, கதிர் ஆழி - ஒளியை வீசும் சக்கராயுதத்தையுடைய, விசயதரன் என - விசயதரன் என்னும் முதற் குலோத்துங்க சோழனுக, உதித்தான் - (இவ்வுலகத்தில்) பிறந்தான், விளம்ப - (அவன் வரலாற்றை) சொல்ல, கேண்மின் - (பேய்களே) கேளுங்கள்.

வி - ரை :—இராமபிரானுகவும் கண்ணனுகவும் அவதரித்த திருமாலே முதற் குலோத்துங்கனுய்த் தோன்றின னென்பதாம். [தா-கஅச] அரசர்கள் திருமாலின் அமிச முடையவராதலால், இவ்வாறு கூறினர். இதனை, 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே யென்னும்' [திருவாய்-ச-ச-அ] எனப் பெரியார் பணித்தமையானும், 'மாயோ னன்ன, வுரைசால் சிறப்பின் புகழ்சால் மாற', [புறநா-௫௭] எனவும், 'மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன், பொன்னந் திகிரிப் பொருப்படையான் என்பரால்' [சிலப்-கஎ-உள்ளி-உ] எனவும், 'பூமாது கேள்வன் புகழ்த்தஞ்சை வாணன்' [தஞ்சைவா-௩] எனவும், தமிழறிஞர் கூறியுள்ளமையானு முணர்க. திருமால் தீயவரைக் கடிந்து நிலமகள் துன்பந் துடைத்தமை கருதி 'பாரதப் போர் முடித்து' என்றார். பாரதப் போர்—இதில் இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. அவனே—ஏகாரம் பிரிநிலை; அப்பாரதம்—அகரம், பண்டறி சுட்டு; கேண்மின்—ஏவற் பன்மை வினைமுற்று. இதுமுதல் முதற் குலோத்துங்கன் பிறப்பு, வளர்ப்பு, வெற்றிமேம்பாடு முதலியவற்றைத் தேவி பேய்களுக் குணர்த்தத் தொடங்கின ளென்க. இதுமுதல் மூன்று செய்யுட்கள் திருமாலே முதற் குலோத்துங்கனுய்த் தோன்றினன் என்பதை யுணர்த்தும். (க)

**திருமாலே கண்ணனுகத் தோன்றினமை**

உ௩௩ தேவரெலாங் குறையிரப்பத் தேவகிதன்
திருவயிற்றில் வசுதே வற்கு
மூவுலகுந் தொழநெடுமான் முன்னொருநாள்
அவதாரஞ் செய்த பின்னை.

ப - ரை :—முன் ஒரு நாள் - முன்பு ஒரு காலத்தில், தேவர் எல்லாம் - தேவர்கள் எல்லோரும், குறை இரப்ப - (தங்கள்) குறைகளைச் சொல்லி வேண்டுதலால், நெடு மால் - (யாவரினும்) சிறந்த திருமால், மூ உலகும் - மூன்றுலகத்தி லுள்ளவர்களும், தொழ - (தன்னை) வணங்கும்படி, தேவகி தன் திருவயிற்றில் - தேவகியினுடைய அழகிய

வயிற்றில், வசுதேவன் கு - வசுதேவனென்னும் மன்னனுக்கு, அவதாரம் செய்த பின்னை - (மகனாகப்) பிறந்த பின்பு,

வி - ரை :—தேவர்களின் வேண்டுகோளுக் கிணங்கித் திருமால் கண்ணனாகத் தோன்றின னென்பதாம். உலகங்களை யெல்லாந் தன்னகத் தடக்கிய திருமாலைத் தேவகி தன் வயிற்றில் தாங்கினமையால், அவள் வயிற்றை, 'திருவயிறு' என்றார். 'ஓதரிய பெருலகும் பேருலகத் துற்றபல வுயிர்கள் யாவும், நீதறநின் னகட்டி னிடை யொடுக்கியசீர் வேங்கடவா, மாதரார் தேவகிதன் வயிற்றெவ்வா றடங் கினையால்' [திருவேங்-செய்-கோவை-நூசு] என்றமை காண்க. மூவுலகும்— உம்மை முற்றுப் பொருளது. (உ)

முதற் குலோத்துங்கன் வரலாறு

உநுச. இருண்முழுது மகற்றும்விது குலத்தோன் றேவி
இகல்விளங்கு தபனகுலத் திராச ராசன்
அருடிருவின் றிருவயிற்றில் வந்து தோன்றி
ஆலிலையி னவதரித்தா னவனே மீள.

ப - ரை :—ஆல் இலையின் அவதரித்தான் - ஆலிலையில் (பள்ளி கொள்ள) தோன்றினவனாகிய, அவனே - அந்தக் கண்ணபிரானே, மீள - மீண்டும், இருள் முழுதும் - (உலகத்திலுள்ள) இருள் எல்லா வற்றையும், அகற்றும் - நீக்கும், விது குலத்தோன் தேவி - சந்திர குலத்தரசனாகிய இராச ராசனுக்கு மனைவியும், இகல் விளங்கும் - வெற்றியால் விளங்கும், தபனன் குலத்து - சூரிய குலத்திற் பிறந்த, இராசராசன் - அரசர்க்கரசனாகிய கங்கைகொண்ட சோழனுடைய, அருள் - அருளைப் பெற்ற, திருவின் - திருமகள் போன்ற (அவன் மகளு மாகிய) அம்மங்கை தேவியின், திருவயிற்றின் - அழகிய வயிற்றில், வந்து தோன்றி - (மகனாக) வந்து பிறந்து,

வி - ரை :—உநுஉ, உநுசு-ம் தாழிசைகளில் ஆசிரியர் திருமாலே முதற் குலோத்துங்கனெனக் கூறி இதில் அவன் பெற்றோரை யுணர்த்தினர். விதுகுலத் தோன்—இவன் சந்திரகுலத்தைச் சார்ந்த சளுக்கிய மரபினனாகிய இராசராசன் என்பவன். இவனை இராசராச நரேந்திரன் எனவும் இயம்புவர். தேவி—இவன் மனைவியாகிய அம்மங்கைதேவி என்பவள். தபனகுலத் திராச ராசன்—இவன் சூரியகுலத் தோன்றலாகிய முதல் இராசேந்திர சோழன் என்பவன். இவனைக் கங்கை கொண்ட சோழன் எனவும் விளம்புவர். அருள் திரு—கங்கைகொண்ட சோழன் மகள். இதுவும் அம்மங்கை தேவியைக் குறிக்கும். சளுக்கிய வேந்த னாகிய இராசராசன் மனைவியும் சூரியகுலத் தரசனாகிய கங்கை கொண்ட சோழன் மகளுமாகிய அம்மங்கை தேவி வயிற்றில் முதற் குலோத்துங்கன் பிறந்தன னென்பதாம். இனி இவன் பிறப்பின் வரலாற்றைக் கவனிப்பாம்.

முதலிராச ராசன் [தா-உ0க] தன் புதல்வனாகிய முதலிராசேந்திர சோழனை வேங்கிநாட்டின்மேல் படையெடுத்துச் செல்லுமாறு பணித்தான். அவன் அவ்வாறு சென்றகாலை, கீழைச் சளுக்கிய வேந்தனாகிய விமலாதித்தன் என்பவன் வேங்கி நாட்டை யாண்டு வந்தான். இராசேந்திரன் விமலாதித்தனை வென்று அவன் நாட்டைத் தனக்குரிமை யாக்கிக் கொண்டதன்றி, அவனையுஞ் சிறைப்பிடித்துச் சோழநாட்டை யடைந்தான். சில்லாண்டு சென்ற பின், முதலிராச ராசன் விமலாதித்தனைச் சிறைவீடு செய்து தன் மகள் குந்தவையை அம்மன்னவனுக்கு மணமியற்றித் தந்ததன்றி அவன் நாட்டையும் அவனுக்கு வழங்கினன்\$. விமலாதித்தன் கி. பி. க0கரு முதல் க0உஉ வரை ஆட்சி புரிந்து

வந்தான். அவன் உயிர் துறந்த பின் அவன் புதல்வனாகிய இராசராசன் என்பவன் மணிமுடி புனைந்து கொண்டான். பின்பு இராசேந்திரன் தன்னுடன் பிறந்தாள் புதல்வனாகிய அம்மன்னவனுக்குத் தன் மகள் அம்மங்கைதேவியைக் கடிமணமியற்றினான். இவ்விருவரும் வேங்கிநாட்டில் உயிரும் உடலும் போல் வாழ்ந்து வந்தனர். சில்லாண்டு கழிந்தபின், அம்மங்கைதேவி கருவுற்றனள். பின்பு அவள் கங்கைகொண்ட சோழபுரத்திலுள்ள தன் தாய் வீட்டை யணுகி அங்கே கி. பி. க0சரு-ம், ஆண்டில் முதற் குலோத்துங்கனைப் பயந்தனள். இவன்* தந்தையாகிய இராசராச நரேந்திரன் கி. பி. க0சுஉ-ம், ஆண்டில் விண்ணுலகெய்தினன். [மு. கு. சோ-பக்-கச, எ] குலோத்துங்க மன்னனுக்குக் குந்தவை என்னும் ஓர் உடன்பிறந்தாளும், எழுவர் மக்களு மிருந்தனர். இவன் சைவ சமயத்தில் பற்றுடையவன். ஆயினும், ஏனைய மதத்தினர்க்குத் தீங்கியற்றியவன் அல்லன். இவன் வைணவமதாசாரியராகிய ஸ்ரீராமாநுஜாசாரியார் இடத்தில் மட்டும் சிறிது குற்றமியற்றினான். இவன் கி. பி. க0எ0 முதல் ககஉஅ வரை ஆட்சி புரிந்தான். [சோழவமி-பக்-உகூ-ருரு].

திருமால் ஆலிலையில் அவதரித்தமை:—உலகமெல்லாம் பெருவெள்ளத்தால் அழியும் ஊழியின் முடிவில், திருமால் உலகங்களையும் உலகத்திலுள்ள உயிர்களையுங் காக்கக் கருதி, அவற்றை யெல்லாம் தம் வயிற்றிலடக்கி அந்நீர்ப் பெருக்கில் ஓராலிலையின்மேல் இளங் குழந்தையாய்க் கண்வளர்ந்தருள்வா ரென்பதாம். 'ஆலமா மரத்தி னிலைமேலொரு பாலகனாய், ஞாலமேழு முண்டான்' [அமலனா-கூ] எனப் பெரியார் பணித்தமை காண்க. 'ஆலிலையின் திருவயிறு' என்றியைத்துப் பொருள் கோடலுமாம். (ரு)

**முதற் குலோத்துங்கன் பிறப்பின் பெருமை**

உருரு. வந்தருளி யவதாரஞ் செய்தலுமே
$மண் ணுலகு மறைக ளுங்கும்
அந்தரநீங் கினவென்ன வந்தரதுந்
துமிமுழங்கி ‡யெழுந்த தாங்கே.

ப - ரை:—வந்தருளி - (அவ்வாறு பூமியில்) வந்து, அவதாரம் செய்தலும் - (திருமால் முதற் குலோத்துங்கனாக) பிறந்த வளவில், மண் உலகும் - பூலோகத்திலுள்ளவர்களும், நான்கு மறைகளும் - நான்கு வேதங்களும், அந்தரம் நீங்கின என்ன - கேட்டினின்று நீங்கினரென்று, அந்தரம் - தேவலோகத்தில், துந்துமி - துந்துமி யென்னும் வாத்தியம், முழங்கி எழுந்தது - ஒலித்தெழுந்தது.

வி - ரை:—முதற்குலோத்துங்கன் பிறந்ததும், தேவர்கள் துந்துமி வாத்தியம் முழங்கின ரென்பதாம். மண்ணுலகத்தார்க்கு வருங் கேடாவது:—அவர்கள் பசி, பிணி, பகையால் துன்புறல்; நான்மறைகளுக்கு வருங் கேடாவது:—அவைகளை ஓதுவாரின்றித் தவிர்தல்; முதற் குலோத்துங்கன் பிறத்தலால் இவ்விருவகைத் துன்பங்களு மொழிந்தன வென்பதாம். மண்ணுலகேயன்றி விண்ணுலகுங் களிப்படைந்தமை தோன்ற 'அந்தர துந்துமி முழங்கி யெழுந்தது' என்றார். துந்துமி—தேவர்கள் களிப்பால் முழக்கும் ஒருவகை மங்கல வாத்தியம்; இது அநுகரணசத்தத்தாற் பிறந்த பெயரென்ப. அநுகரண சத்தமாவது:-இங்கே தும்தும்

---

$ இம்மணம் கி. பி. க00கூ-ல், நிகழ்ந்ததாம். விமலாதித்தன் கி. பி. க0கக முதல் க0உஉ வரை ஆட்சிபுரிந்தனனெனவுங் கூறுப. [H.I.S.I. பக்-ருகூ, ருஎ].

* இவன் கி. பி. க0சுரு-ல், உயிர் துறந்தன னெனவு மொழிப. [H. I. S. I. பக் - ருருஅ].

என்னு மோசை. உலகும் என்பதிலுள்ள உம்மை எண்ணுப்பொருளிலும், நான்கும் என்பதிலுள்ள உம்மை எண்ணுப் பொருளோடு முற்றுப் பொருளிலும் வந்தன. ஆங்கே, ஆங்கு—ஏ—இரண்டும் அசைநிலைகள். (உநுங) செய்த பின்னை (உநுச) அவனே மீள, வந்து தோன்றி (உநுரு) அவதாரஞ் செய்தலும், முழங்கி யெழுந்தது எனக் கூட்டுக. பா - பே:—$ மண் முழுதும், ‡ அதிர்ந்த தாங்கே. (ச)

பேரனைப் பாட்டியார் கண்டு மகிழ்ந்தமை

உநுசு. அலர்மழைபோன் மழைபொழிய வதுகண்டு
கங்கைகொண்ட சோழன் றேவி
குலமகடன் குலமகனைக் கோகனத
மலர்க்கையா னெடுத்துக் கொண்டே,

ப - ரை:—மழை - மழையானது, அலர் மழைபோல் பொழிய - மலர் மழை போல் பொழிய, கங்கைகொண்ட சோழன் தேவி - கங்கை கொண்ட சோழனுக்கு மனைவியானவள், அது கண்டு - அந்த நன்னிமித்தத்தைப் பார்த்து, குலம் மகள் தன் - (தன்) சிறந்த புதல்வியாகிய அம்மங்கை தேவியினுடைய, குலம் மகனை - சிறந்த புதல்வனாகிய முதற் குலோத்துங்கனை, கோகனதம் மலர் - தாமரை மலர் போன்ற, கையான் எடுத்துக்கொண்டு——,

வி - ரை:—இவ்விரு தாழிசைகளிலுங் கூறிய நன்னிமித்தங்களுக்கேற்ப, 'நான்மறையு, நிலங்கி ளர்ந்தகான் தளிர்த்தவா னலர்மழை நிறைந்த, அலர்ந்த தந்தர துந்துமி' [அரிசமய-பராங்குச-உங] என்றார் கீழையூர்-சடகோபதாசரவர்களும். கோகனதம்—சக்கரவாளப் பறவைகளைக் களிப்பிப்பது; கோக = சக்கரவாளம்; நதம் = களிப்பிப்பது. (ரு)

பாட்டியார் கூற்று

உநுஎ. *அவனிபர்க்குப் புரந்தரனு மடையாளம்
அவயவத்தி †னடைவே நோக்கி
இவனெமக்கு மகனாகி யிரவிகுலம்
$பாரிக்கத் தகுவ னென்றே.

ப - ரை:—அவனிபர்க்கு - அரசர்களுக்கு, புரந்தரன் ஆம் - இந்திரன் (போல் சிறந்த அரசன்) ஆகும், அவயவத்தின் அடையாளம் - (அக்குழந்தையின்) அவயவங்களின் அடையாளங்களை, அடைவே நோக்கி - முற்றும் பார்த்து, இவன் - இந்தக் குழந்தை, எமக்கு மகன் ஆகி - எங்களுக்கு மகனாய், இரவி குலம் - சூரிய குலத்தை, பாரிக்க தகுவன் என்று - வளர்க்கத் தக்கவன் ஆவானென்று,

வி - ரை:—அவனிபர்—இராசர்; புரந்தரன்—இந்திரன்; 'அவனிபர்க்குப் புரந்தரன்' இராசேந்திரன் என்பதாம். முதற் குலோத்துங்கனுக்கு இராசேந்திரன் என்னும் பெயருண்மையால், இவ்வாறு கூறினர். சாமுத்திரிகா லட்சணத்திற்கேற்ப, அவன் நெற்றி, கை, கால் முதலிய வுறுப்புக்கள் அமைந்திருந்தன வென்பார், 'அவயவத்தி னடையாளம்' என்றார். கங்கைகொண்ட சோழன் சூரியகுலத் தரசனுகையாலும் அவன் மைந்தர்கட்குப் புத்திரப்பேறின்மையாலும், அவன் மனைவி தன் மகள் வயிற்றுப் புதல்வனாகிய குலோத்துங்கனைத் தன் கையிலேந்தி 'இவனெமக்கு......பாரிக்கத் தகுவன்' எனக் களிப்பெய்தினளென்க. புரந்தரன்—பகைவர் நகரங்களை அழிப்பவன்; மகன்—இளம்பருவமுடையவன்; 'மகவுங் குழவு மிளமைப் பொருள்' [தொல்கா-சொல்-நுoரு] என்றமை காண்க.

முதற் குலோத்துங்கன் வேங்கி நாட்டை யாண்டபோது விஷ்ணுவர்த்தனன் என்னும் பேர் பெற்றிருந்தான் ; பின்பு இராசேந்திரன் என்னும் பேரை எய்தினன். இவன் சோணாட்டின் அரசுகட்டிலி லமர்ந்த ஐந்தாண்டுகட்குப் பின் அதாவது, கி. பி. கoஎரு-ம் ஆண்டு முதல் இவன் முதற் குலோத்துங்கன் என்னும் பேரைப் பூண்டான். அது முதல் அப்பேரே இவனுக்கு நிலைபெறுவதாயிற்று [மு. கு. சோ-பக்-ஙo].

பா - பே :—* அவனிபர்க்குப் புத்திரனும், † அடைய, $ பாலிக்க. (சு)

இருகுலத்தோரும் களிப்புற்றமை

உருஅ. திங்களினி ளங்குழவி செம்மலிவ னென்றுஞ்
செய்யபரி திக்குழவி யையனிவ னென்றுந்
தங்களின்ம கிழ்ந்திருகு லத்தரசர் தாமுந்
தனித்தனியு வப்பதொர்த வப்பயனு மொத்தே.

ப - ரை :—செம்மல் இவன் - செம்மையாகிய குணங்களையுடைய இந்தக் குழந்தை, திங்களின் - சந்திர வமிசத்தில் பிறந்த, இளம் குழவி என்றும் - இளங்குழந்தை யென்று சொல்லியும், ஐயன் இவன் - உயர்ந்தோனாகிய இந்தக் குழந்தை, செய்ய பரிதி - சிவந்த சூரிய வமிசத்திற் பிறந்த, குழவி என்றும் - குழந்தை என்று சொல்லியும், இரு குலத்து அரசர் தாமும் - (சூரிய குலம், சந்திர குலமென்னும்) இரண்டு குலத்தரசர்களும், தனி தனி ——, தங்களில் மகிழ்ந்து - தமக்குள் களிப்படைந்து, உவப்பது - களிப்புத் தருவதாகிய, ஓர் தவம் - ஒப்பற்ற தவத்தின், பயனும் ஒத்து - பயனையும் போன்று,

வி - ரை :— முதற் குலோத்துங்கன் தந்தை சந்திர வமிசத்தினனாதலால் அதனை முற்கூறினர் [தா - கஉங]. 'எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்கா, பண்புடை மக்கட் பெறின்' [திருக்கு-சுஉ] என்பவாகலின், 'தவப்பயனு மொத்து' என்றார். திங்கள், பரிதி—இவ்விரண்டும் ஆகுபெயர்களாய்க் குலத்தை யுணர்த்தின. (எ)

நடை பயின்றமை

உருகூ. சினப்புலிவ ளர்ப்பதொர்சி றுப்புலியு மொத்தே
திசைக்களிற ணைப்பதொர்த னிக்களிறு மொத்தே
அனைத்தறமு மொக்கவடி வைக்கவடி வைத்தே
அறத்தொடு*ம றத்துறைந டக்கநடை கற்றே.

ப - ரை :—சினம் புலி - கோபத்தையுடைய புலியானது, வளர்ப்பது - வளர்ப்பதாகிய, ஓர் சிறு புலியும் ஒத்து - ஒப்பற்ற புலிக்குட்டியைப் போலவும், திசை களிறு - திக்கு யானையானது, அணைப்பது - தழுவி வளர்ப்பதாகிய, ஓர் தனி (சிறு) களிறும் ஒத்து - மிகவும் ஒப்பற்ற யானையின் ஆண் கன்றைப் போலவும், அறம் அனைத்தும் - தருமங்களெல்லாம், ஒக்க அடி வைக்க - (தன்னோடு) ஒன்றாக (தம்) பாதங்களை எடுத்து வைக்கும்படி, அடி வைத்து - (முதற் குலோத்துங்கன் தன்) பாதங்களை எடுத்து வைத்து, அறத்தொடு - (அந்த) தருமங்களும், மறம் துறை - வீரச் செயல்களின் வகைகளும், நடக்க - நடைபெறும்படி, நடை கற்று - (அவன்) நடத்தலைப் பயின்று,

வி - ரை:—வீரத்திற்குப் புலிக் குட்டியும், கம்பீரத் தோற்றத்திற்கு யானைக் கன்றும் முதற் குலோத்துங்கனுக் குவமையாம். 'அனைத்தறமும்......

நடை கற்று' என்றதனுல், அரசர்களுக்குரிய செங்கோல் முறையும் பராக்கிரமச் செயல்களும் இவனுல் உயர்வடையு மென்பதாம். சிறு என்பதைக் களிறுக்குங் கூட்டுக. ஏகாரம் நான்கும் ஈற்றசை. இச்செய்யுளில் உவமையணி யுள்ளமை காண்க. பா - பே :—* மனுத் துறை. (அ)

ஐம்படைத்தாலி அணிந்தமை

உசO. பண்டுவசு தேவன்மக ளுகிநில மாதின்
*படர்களையு மாயனிவ னென்றுதெளி வெய்தத்
தண்டுதனு வாள்பணில நேமியெனு நாமத்
தன்படைக ளானதிரு வைம்படைத ரித்தே.

ப - ரை :—பண்டு - முன்பு, வசுதேவன் மகன் ஆகி - வசுதேவனுக்கு மகனுகப் பிறந்து, நிலம் மாதின் - பூமி தேவியின், படர் களையும் - துன்பங்களைப் போக்கும், மாயன் - திருமாலாகிய கண்ணபிரான், இவன் என்று - இந்த முதற் குலோத்துங்கனே யென்று, தெளிவு எய்த - (யாவரும்) தெளிவடையும்படி, தண்டு - தடியும், தனு - வில்லும், வாள் - வாளாயுதமும், பணிலம் - சங்கும், நேமி என்னும் - சக்கராயுதமு மென்னும், நாமம் - பெயரையுடைய, தன் படைகள் ஆன - தன்னுடைய ஆயுதங்களாகிய, திரு ஐம் படை தரித்து - அழகிய ஐம்படைத் தாலியை யணிந்து,

வி-ரை :—முதற் குலோத்துங்கன் ஐம்படைத்தாலி யணிந்தன னென்பதாம். வசுதேவனுக்கு மகனென்றது—கண்ணபிரானை; 'பூபாரந் தீர்க்கப் புரிந்தாய் புயல் வண்ணு' [வில்லிபா-கிருட்டிணன் தூது-ருச] என்றபடி, முன்பு கண்ணன் நிலமகள் துயரைப் போக்கினது போல் இவனும் அவள் துயரைப் போக்குவா னென்பார், 'படர்களையு மாயனிவன்' என்ருர். ஐம்படைத் தாலியாவது :— திருமாலின் சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்னும் ஐந்து படைகளின் வடிவங்களைப் பொன்னுற்செய்து குழந்தைகளின் கழுத்தில் கட்டும் ஒருவகை ஆபரணமாம். இவ்வாறு அணிதல் பண்டைய வழக்கமாம். காத்தற் கடவுளாகிய திருமாலின் ஆயுதங்கள் பேய் முதலியவற்றை யணுகவிடாமல் குழந்தைகளை இனிது காக்கு மென்ப. ஐம்படைத் தாலியை இளங்குழந்தைகளுக் கணிதலை, 'தாலி யைம்படைத் தழுவு மார்பிடை' [கம்பரா-நாட்டுப்-ருஅ] எனவும், 'அழகிய வைம்படையு மாரமுங் கொண்டு' [பெரியாழ்-க-ரு-ரு] எனவும், 'ஐம்படைச் சதங்கை சாத்தி' [பெரியபு-தடுத்தாட்-ச] எனவும், 'அமளித் துஞ்சு மைம்படைத் தாலி............புதல்வர்' [மணிமே-எ-ருசு] எனவும் சான்ருேர் கூறியவற்ரு லறிக. பஞ்சாயுதங்களில் சக்கரத்தைச் சுதர்சனம் எனவும், சங்கைப் பாஞ்ச சன்னியம் எனவும், வில்லைச் சார்ங்கம் எனவும், வாளை நாந்தகம் எனவும், கதையைக் கௌமோதகீ யெனவும் வழங்குவர். (கூ)

பா - பே :—* பரங்கடியும்.

மழலைச்சொற்கள் மொழிந்தமை

உசக. தாயர்தரு பான்முலைசு ரக்கவரு நாளே
தானுமுல கத்தவர்த மக்கருள்சு ரந்தே
$தூயமனு வுஞ்சுருதி யும்பொருள்வி ளங்கிச்
சொற்கடெரி யத்தனது சொற்கடெரி வித்தே.

ப - ரை :—தாயர் தரு - தாய்மார் தருகின்ற, முலை பால் - கொங்கைகளிலிருந்து வரும் பாலானது, சுரக்க - (மிகுதியாய்) பெருக, வரும் நாள் - (அதனைப் பருகி) வரும் இளம் பருவத்திலேயே, தானும் - முதற் குலோத்துங்கனும், உலகத்தவர் தமக்கு - உலகத்திலுள்ளவர்களுக்கு,

அருள் சுரந்து - கருணை சொரிந்து, தூய மனுவும் - பரிசுத்தமாகிய மனு தர்ம சாத்திரத்திலும், சுருதியும் - வேதங்களிலுமுள்ள, சொற்கள் பொருள் - சொற்களின் பொருள்கள், விளங்கி தெரிய - விளங்கித் தோன்றும்படி, தனது சொற்கள் - தனது (மழலை) சொற்களால், தெரிவித்து - (அவைகளை) உணர்த்தி,

வி - ரை :—மனு நீதியும், வேதங்களும் முதற் குலோத்துங்கனுல் சீறப் பெய்து மென்றவாறும். 'விளையும் பயிர் முளையில் தெரியும்' என்றபடி இளமையிலேயே அருளுக்குரிய குறிகள் அவன்பால் திகழ்ந்தன வென்பார், 'தாயர்தரு ............அருள் சுரந்து' என்றார். 'தாயர்' என்றது இங்குச் செவிலித் தாய்மாரை. ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓலுறுத்துவாள், நொடி பயிற்றுவாள், கைத்தாய் என்னும் ஐவகைத் தாய்மாராலும் [சீவகசி-௩௬௩ உரை] முதற் குலோத்துங்கன் பாலூட்டிப் பாராட்டப் பட்டுவந்தா னெனினுமாம்.

பா - பே :—$ தூய மறையும். (௧0)

முந்நூலணிதல்

உசஉ. திருமார்பின் மலர்மடந்தை திருக்கழுத்தின்
மங்கலநா ணென்ன முந்நூற்
பெருமார்பின் வந்தொளிரப் பிறப்பிரண்டா
வதுபிறந்து சிறந்த பின்னர்.

ப - ரை :—திரு மார்பின் - (திருமாலின்) அழகிய (வல) மார்பிலுள்ள, மலர் மடந்தை - செந்தாமரை மலரில் வசிக்கும் திருமகளின், திரு கழுத்தின் - அழகிய கழுத்திலிருக்கும், மங்கலம் நாண் என்ன - தாலிக் கயிறு போல, பெரு மார்பின் - (முதற் குலோத்துங்கனுடைய) அகன்ற மார்பில், முந்நூல் வந்து ஒளிர - முப்புரி நூல் வந்து விளங்கும்படி, இரண்டாவது பிறப்பு பிறந்து ——, சிறந்த பின்னர் - மேன்மை யடைந்த பின்பு,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் பூணூல் அணிந்தன னென்பதாம். 'பூவிற்குத் தாமரையே' [திருவள்-மா-௩௬] எனவும், 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' [நால்வர் நா-மா-௪0] எனவும் ஆன்றோர் கூறியுள்ளமையால், 'மலர்' என்றது இங்கு எல்லா மலர்களினுஞ் சிறந்த செந்தாமரையைக் குறித்தது. மலர் மகளின் கழுத்திலுள்ள மங்கல நாண் அழிவின்றிச் சிறந்து விளங்குதல் போல், இவன் பூணூலுஞ் சிறந்து விளங்கல் வேண்டி அந்த மங்கல நாணை உவமை கூறினர். தாய் வயிற்றிலிருந்து பிறக்கும் முதற் பிறப்புடன் பூணூல் பூணுதல் இரண்டாவது பிறப்பாகக் கருதப்படுதலால், 'பிறப்பிரண்டா வது பிறந்து' என்றார். இதனல் பூணூலணியும் வேதியர், க்ஷத்திரியர், வைசியர் என்னும் இவர்களை துவிஜாள் என வழங்குவர். [தா-௫௧0) மலர் மடந்தை—ஏழனுருபும் பயனு முடன்தொக்க தொகை ; என்ன—உவம உருபிடைச்சொல். இச்செய்யுள் உவமை யணியாம். (௧௧)

வேதங்கற்றல்

உசங. போதங்கொண் மாணுருவாய்ப் புவியிரந்த
அஞ்ஞான்று புகன்று *சென்ற
வேதங்க ணன்கினையும் வேதியர்பால்
கேட்டருளி மீண்டு கற்றே.

ப - ரை :—போதம் கொள் - ஞானமமைந்த, மாண் உரு ஆய் - பிரமசாரி வடிவமாய், புவி - (மூன்றடி) நிலத்தை, இரந்த - (திருமால்

மாவலியினிடமிருந்து) யாசித்துப் பெற்ற, அ ஞான்று - அக்காலத்தில், புகன்று சென்ற - சொல்லிச் சென்ற, வேதங்கள் நான்கினையும் - நான்கு வேதங்களையும், வேதியர் பால் - பிராமணர்களிடத்தில், கேட்டருளி - (பாடம் சொல்ல) கேட்டு, மீண்டு கற்று - மறுபடியும் (அவ்வேதங்களை) கற்று,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் வேதங்களைப் பயின்றனன் என்பதாம். 'அஞ்ஞான்று புகன்று சென்ற வேதங்கள்' என்றமைக் கேற்ப, 'முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை, கற்பதோர் நாவன்' [கம்பரா-வேள்வி-உ] என்றார் கம்பரும். மாணி—பிரமசாரி, 'மறையோன்பின் மாணியாய்' [சிலப்-கூ-உக] என்றமை காண்க. இஃதிங்கே மாண் என நின்றது.

திருமால் புவியிரந்த வரலாறு :—மாவலி யென்பான் தேவேந்திரன் பதவியைக் கைக்கொள்ளக் கருதி வேள்வியொன் றியற்றினன். அதுகாலை இந்திரன் முதலிய தேவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி, திருமால் வாமனனாய் மாவலி பால் சென்று மூவடிமண் இரந்து ஓரடியால் மண்ணுலகையும் மற்றோ ரடியால் விண்ணுலகையும் அளந்து மூன்றாம் அடியை அவன் தலையில் வைத்து அழுத்தி அவனைப் பாதாளத்திற் கிறைவ னாக்கினன் என்பதாம். 'தவமலி மாவலி தலை யணி தாளினில், அவனிவை யெவ்வண மளந்தனை யறைகுதி, உவமையில் வேங்கட வோங்கலி னுறைகுவோய்' [திருவேங்-செ-கோ-சஅ] என்றமை காண்க. பா - பே :—* கொண்ட. (கஉ)

உடை வாள் ஏந்தல்

உசச. நிறைவாழ்வைப் பெறனமக்கு மணித்தென்று
நிலப்பாவை களிப்ப விந்தத்
துறைவாளைப் புயத்திருத்தி யுடைவாளைத்
திருவரையி னொளிர வைத்தே.

ப - ரை :—நிலம் பாவை - பூமி தேவி, நிறை வாழ்வை - (ஒருவிதக் குறைவுமில்லாத) நிறைந்த வாழ்வை, பெறல் - அடைதல், நமக்கும் அணித்து - நமக்கும் (காலம்) அருகிலிருக்கிறது, என்று களிப்ப-என்று நினைத்து மகிழ்ச்சி யடையும்படி, விந்தத்து உறை வாளை - விந்த மலையில் வசிப்பவளாகிய வீர மகளை, புயத்து இருத்தி - (தன்) தோளில் வைத்து, உடை வாளை - உடையிலணியும் வாளாயுதத்தை, திரு அரையின் - அழகிய இடுப்பில், ஒளிர வைத்து - விளங்கும்படி அணிந்து,

வி - ரை :—இவன் படைக்கலம் பயின்றபின், அறத்தைக் காத்து மறத்தைக் கடிந்து தன் பொறை தவிர்ப்பா னெனக் கருதி நிலப்பாவை களித்தன ளென்க. 'விந்தத் துறைவாளைப் புயத்திருத்தி' என்றதனால், இவன் சிறந்த வீரனென்பது விளங்கும். நமக்கும்—ஏனைய உயிர்கட்கே யன்றி நமக்கும் என்னும் பொருள் பயந்து நிற்றலால், இதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மையாம். அரை—எண்ணலளவை யாகு பெயர். (கங)

யானையேற்றங் கற்றல்

உசரு. ஈரிரும ருப்புடைய வாரணமு கைத்தே
இந்திரனை திர்ந்தவரை வென்றுவரு மேயான்
ஓரிரும ருப்புடைய வாரணமு கைத்தே
ஒன்னலரை வெல்வனென வன்னதுப யின்றே.

ப - ரை :—இந்திரன் - தேவேந்திரன், ஈர் இரு மருப்பு உடைய - நான்கு தந்தங்களையுடைய, வாரணம் - (ஐராவதம் என்னும்) யானையை, உகைத்து - செலுத்தி, எதிர்ந்தவரை - (தன்னை) எதிர்க்கும் அரக்கரை, வென்று வரும் - வெற்றி பெற்று வருவான், (அதுபோல) யான்——; ஓர் இரு மருப்பு உடைய - ஒப்பற்ற இரண்டு தந்தங்களையுடைய, வாரணம் உகைத்து - யானையைச் செலுத்தி, ஒன்னலரை - (என்) பகைவரை, வெல்வன் என - வெல்லுவேன் என்று, அன்னது - (யானை மேலேறும்) அக்கல்வியை, பயின்று - கற்று,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் யானையேற்றங் கற்ற னென்பதாம். இந்திரனுடைய யானைக்குப் பக்கத்திற் கிரண்டாக நான்கு தந்தங்களுண் டென்க. இதனை, 'கோம்போத் தனநா லொளிகோள் வயிரக், கம்பக் கரி நின்றதுகண் டனமால்' [கம்பரா-சரபங்கர்-உகூ] எனவும், 'நாற்கோட்டு வெண் ணிறத்த குஞ்சரம்' [திருவிளை-வெள்ளையானை-கடு] எனவும் வருமாற்று னறிக. இதில் இந்திரனைவிட முதற் குலோத்துங்கன் சிறந்தவ னென்னும் பொருள் தோன்றுமாறு காண்க. எதிர்ந்தவர்—வினையாலணையும் பெயர்; ஒன்னலர்— இது ஒன்றலர் என்பதன் மரூஉ. மனம் ஒன்றுபடாதவ ரென்பதாம். இது முதல் நான்கு தாழிசைகள் முதற் குலோத்துங்கன் யானை யேற்றம், குதிரை யேற்றம், படைப் பயிற்சி முதலியவற்றில் தேர்ச்சி பெற்றமையை யுணர்த்தும். (கச)

குதிரை யேற்றங் கற்றல்

உசகூ. †இற்றைவரை யுஞ்செலவ ருக்கனொரு $நாள்போல்
ஏழ்பரியு கைத்திருள கற்றிவரு மேயான்
ஒற்றைவய மானடவி யித்தரைவ ளாகத்
துற்றவிரு டீர்ப்பனென மற்றதுப யின்றே.

ப - ரை :—செலவு அருக்கன் - (ஆகாயத்தில்) செல்லுதலையுடைய சூரியன், இற்றை வரையும் - இன்று வரையிலும், ஒரு நாள் போல் - ஒரே வகையாய், ஏழ் பரி உகைத்து - (தன்) ஏழு குதிரைகளைச் செலுத்தி, இருள் அகற்றி வரும் - (உலகிலுள்ள) இருளைப் போக்கி வருவான், (அதுபோல) யான்——, வயம் ஒற்றை மான் நடவி - வெற்றியையுடைய ஒரு குதிரையைச் செலுத்தி, இ தரை வளாகத்து - இந்தப் பூமியாகிய விடத்தில், உற்ற இருள் தீர்ப்பன் - பொருந்திய (கலி) இருளைப் போக்கு வேன், என அது பயின்று - என்று அந்தக் குதிரை யேற்றத்தைக் கற்று,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் குதிரை யேற்றங் கற்றன னென்பதாம். சூரியன் தேர் ஏழு குதிரைகளுடைய தென்பதை, 'பச்சைமா, ஏழ மேறப்போ யாறு மேறினுர்' [கம்பரா-கையடை-உங] எனவும், 'வெய்ய வேழ்பரித் தேர்வி பாகரன்' [வில்லி-பா-ந-ம் போர்-நo] எனவும் வருமாற்று னறிக. இதில் சூரியனைவிட முதற் குலோத்துங்கனைச் சிறப்பித்துள்ளமை காண்க. பரி— (பாரத்தை) சுமப்பது; குதிரைக்குக் காரணக் குறி; இன்று+ஐ=இற்றை; ஒன்று+ஐ=ஒற்றை; மெல்லொற்று வல்லொற் றாகி ஐகாரச் சாரியை பெற்று நின்றன. [நன்-கஅடு] மான்—இதிலுள்ள னகர மெய் சாரியை [நன்-உசஅ]. மற்று—அசை. இவ்விரு செய்யுட்களிலும் எடுத்துக் காட்டுவமை யணியும், வேற்றுமை யணியும் உள்ளமை காண்க.

பா - பே :—† இற்றையளவும், $ தேர்மேல். (கரு)

படை பயிலல்

உசஎ. சக்கரமு தற்படையொ ரைந்துமுத னாளே
தன்னுடைய வானவத னாலவைந மக்குத்
திக்குவிச யத்தின்வரு மென்றவைப யிற்றிச்
செங்கைமலர் நொந்திலசு மந்திலத னக்கே.

ப - ரை :—சக்கரம் முதல் - சக்கராயுதம் முதலாகிய, ஓர் ஐந்து படையும் - ஒப்பற்ற ஐந்தாயுதங்களும், முதல் நாளே - முதலிலிருந்தே, தன்னுடைய ஆன அதனால் - தனக்கே உரியனவா யிருத்தலால், அவை - அந்த ஐந்தாயுதங்களும், நமக்கு——, திக்கு விசயத்தின் - திக்குவிசயம் செய்யுங் காலத்தில், வரும் என்று - (தாமாகவே உதவி செய்ய) வரு மென்று நினைத்து, அவை பயிற்றி - அவைகளைப் பயிலுதலால், தனக்கு - (அந்த) முதற் குலோத்துங்கனுக்கு, செம் கை மலர் - சிவந்த கைக ளாகிய தாமரை மலர்கள், நொந்தில - நோகவுமில்லை, சுமந்தில - (அவை களை) சுமக்கவுமில்லை (என்ன),

வி - ரை :—முதற் குலோத்துங்கன் போர்க் கருவிகளை மிகவும் எளிதில் பயின்றனனென்பதாம். திருமாலே முதற் குலோத்துங்கனாக அவதரித்தார் என்பது ஆசிரியர் கருத்தாகலின், 'சக்கர முதற்படை......தன்னுடைய வான' என்றார். 'நமக்கு..........வரும்' என்றது முதற் குலோத்துங்கன் கருத்தாம். ஐந்தாயுதங்களின் விரிவை உசo-ம் தாழிசை யுரையிற் காண்க. முதல் நாள் - தான் பிறப்பதற்கு முன்பே என்பதாம். திக்கு விசயமாவது :—ஓரரசன் பல திசைகளுக்குச் சென்று ஆங்காங்குள்ள அரசர்களோடு போர் புரிந்து அவர்களை வெல்லுதலாம். 'செங்கைமலர் நொந்தில சுமந்தில' என்றது அவன் பலவகைப் போர்க் கருவிகளை மிகவும் எளிதில் பயின்றமையை விளக்கினது. ஐந்தும்— உம்மை முற்றுப் பொருளது; திக்கு விசயம்—திசைகளில் பெறும் வெற்றி எனப் பொருள் படுதலால், ஏழனுருபும் பயனு முடன் தொக்க தொகையாம். கை + மலர் = கைம்மலர்; [நன்-கஙஅ] சந்தவின்பப் பொருட்டு வலி யியல்பாய் நின்றது. இஃது உருவக வணியாம். (கசு)

பலவகைக் கல்விகளில் வல்லனாதல்

உசஅ. உரைசெய்பல கல்விகளி னுரிமைபல
சொல்லுவதே னுவமையுரை செய்யி னுலகத்
தரசருள ரல்லரென *வவைபுகழ
மல்குகலை யவையவைகள் வல்ல பிறகே.

ப - ரை :—உரை செய் - (சிறப்பித்து) சொல்லப்பட்ட, பல கல்வி களின் - பலவகையாகிய (நூல்) கல்விகளில், உரிமை - (அவனுக்குள்ள) உரிமையை, பல சொல்லுவது என் - பலவகையாகச் சொல்லுவதால் யாது பயன், உவமை உரை செய்யின் - (அவன் கற்ற கல்விக்கு) ஒப்புச் சொல்லத் தொடங்கினால், உலகத்து - இவ்வுலகத்தில், அரசர் உளர் அல்லர் - (அவனுக்கு ஒப்பாகிய) அரசர் (ஒருவரும்) இலர், என - என்று (யாவரும்) சொல்லவும், அவை புகழ - சபையோர் புகழவும், மல்கு கலை - மிக்க கல்வியாகிய, அவை அவைகள் - அவ்வவற்றில், வல்ல பிறகு - (அவன்) வல்லவனான பின்பு,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் பலவகைக் கல்விகளைக் கற்றுத் தேர்ந்தனனென்பதாம். 'பல கல்வி' என்றது, அவன் பலவகை நூலாராய்ச்சி யோடு வைத்தியம், சோதிடம், சங்கீதம் முதலியவற்றையும் பயின்றமை

குறிக்கும். 'உலகத் தரசருள ரல்லர்' என்றதனால், அம்மன்னவன் பலவகைக் கல்விகளில் தனக்குத் தானே நிகராவா னென்பது விளங்கும். யானை யேற்றம், குதிரை யேற்றம், படைப் பயிற்சி முதலியவற்றை யெல்லாங் கருதி 'அவை யவை' என்றார். 'அவை புகழ' இதில் அவை என்றது அவ்வக்கல்வித் துறைகளைக் கற்று வல்ல குழுவினரை யென்க. அவ்வக் கல்விகள் புகழும்படி யெனினுமாம். இதில் ஒரு பொருளையே உபமானமாகவும் உபமேயமாகவுங் கூறியிருத்தலால், இஃதியைபின்மை யணியாம். (அநந்வயா லங்காரம்.)

பா - பே:—* வானவரு மல்லரென வவைப யின்ற பிறகே. (கஎ)

இளவரசு எய்தினமை

உசகூ. இசையுடனெ டுத்தகொடி யபயனவ
னிக்கிவனை யிளவரசில் வைத்த பிறகே
திசையரச ருக்குரிய திருவினைமு
கப்பதொரு திருவுளம டுத்த ருளியே.

ப - ரை:—இசையுடன் - (பல அரசர்களை வென்ற) புகழினால், எடுத்த கொடி - உயர்த்திப் பிடித்த (புலி) கொடியையுடைய, அபயன் - (வீரராசேந்திர) சோழன், அவனிக்கு - பூமியை யாள்வதற்கு, இவனை - இந்த முதற் குலோத்துங்கனை, இள அரசில் - இளவரச பட்டத்தில், வைத்த பிறகு - வைத்த பின்பு, திசை அரசருக்கு—(அந்தந்த) திக்குகளிலுள்ள அரசர்களுக்கு, உரிய திருவினை - உரிய செல்வங்களை, முகப்பது - கவர்வதாகிய, ஒரு திரு உள்ளம் - ஒப்பற்ற மேலாகிய எண்ணமானது, அடுத்தருளி - (முதற் குலோத்துங்கனுக்கு) உண்டாகி,

வி - ரை:—முதற் குலோத்துங்கன் இளவரசனானவுடன், திக்கு விசயஞ் செய்யக் கருதின னென்பதாம். இளவரசில் வைத்தலாவது:—ஓரரசன் தனக்குப் பின் பட்டத்திற்குரியவன் இன்னானெனத் தான் விரும்பும் ஒருவனுக்கு மகுடம் புனைதலாம். கங்கைகொண்ட சோழனுக்கு அம்மங்கை தேவியைத் தவிர, வேறு நால்வர் புதல்வர்கள் இருந்தனர். அவர்கள் இராசாதிராசன், இராசேந்திர தேவன், இராசமகேந்திரன், வீரராசேந்திரன் என்பவர்களாம். இவர்கள் வரலாற்றை உ0௩-ம் தாழிசை முதல் உ0கூ-ம் தாழிசையளவுமுள்ள நான்கு தாழிசைகளில் காண்க. வீரராசேந்திரனுக்கு அதிராசேந்திரன் என்னும் புதல்வனொருவன் இருந்தான். அவன் வீரராசேந்திரன் பட்டத்து மனைவியின் வயிற்றி லுதித்தவன் அல்லன். அன்றியும், அவனுக்குப் போதிய அறிவும் ஆற்றலும் இல்லை. அதனால் வீரராசேந்திரன் தன் உடன்பிறந்த அம்மங்கை தேவியின் புதல்வனாகிய முதற் குலோத்துங்கனைச் சோணாட்டிற்கு இளவரசனாக்கினான். [மு. கு. சோ - பக் - உக, உஉ.] அதிராசேந்திரன் வரலாற்றை உகூச-ம் தாழிசையிற் காண்க. (கஅ)

திக்கு விசயம் செய்தமை

உரு0. வளர்வதொர்ப தத்தினிடை மதகரிமு
கத்தினிடை வளையுகிர்ம டுத்து விளையா
டிளவரியெ னப்பகைஞ ரெதிர்முனைக
ளைக்கிழிய வெறிபடைபி டித்த ருளியே.

ப - ரை:—வளர்வது - (நாளுக்கு நாள்) வளர்வதாகிய, ஓர் பதத்தின் இடை - ஒப்பற்ற இளம் பருவத்தில், மதம் கரி முகத்தின் இடை - மதத்தைப் பொழியும் யானைகளின் மத்தகத்தில், வளை உகிர் மடுத்து - வளைவாகிய (தன்) நகங்களைச் செலுத்தி, விளையாடு - (அந்த யானைகளோடு)

விளையாடுகிற, இளம் அரி என - சிங்கக் குட்டி போல, எதிர் பகைஞர் - (தன்னை) எதிர்க்கும் பகைவருடைய, முனைகளை - போர்த் தொழில்களை, கிழிய - அழிக்க, எறி படை - (பகைவர் மேல்) எறியும் ஆயுதங்களை, பிடித்தருளி - (முதற் குலோத்துங்கன்) பிடித்துக்கொண்டு,

வி - ரை :—இளஞ்சிங்கம் விளையாட்டாகவே யானையைக் கோல்லுதல் போல், முதற் குலோத்துங்கனும் மிகவும் எளிதில் தன் பகைவரை அழிப்பா னென்பதாம். இளஞ்சிங்கம் முதற் குலோத்துங்கனுக்கும், மதயானைகள் பகை வேந்தருக்கும் உவமையாம். முனை—போர்; 'முனையகன் பெரும்பாழாக' [பதிற்று - உடு - செய்] எனவும், 'பொருதார் முனைகெடுத்த வில்லார்க்கு' [புறப். வெ. மா - ௩ - க] எனவும் வருமாறு காண்க. முனை—படையெனினுமாம். இடை—இரண்டும் ஏழனுருபுகள். இது முதல் ஆறு தாழிசைகள் முதற் குலோத் துங்கன் திக்கு விசயஞ் செய்தமையை யுணர்த்தும். (கக)

வடவரசரை வென்றமை

உருக. குடதிசைபு கக்கடவு குரகதர
தத்திரவி குறுகலுமெ றிக்கு மிருள்போல்
வடதிசைமு கத்தரசர் வருகதமு
கத்தனது குரகதமு கைத்த ருளியே.

ப - ரை :—குடக்கு திசை - மேற்குத் திசையில், புக - செல்லும்படி, கடவு - செலுத்தப்படுகின்ற, குரகதம் - குதிரைகளைப் பூட்டிய, ரதத்து இரவி - தேரையுடைய சூரியன், குறுகலும் - (கிழக்குத் திசையில்) சேர்தலும், எறிக்கும் இருள் போல் - (அவனால்) அழிக்கப்படும் இருளைப் போல், வடக்கு திசை முகத்து - வடக்குத் திக்கிலுள்ள, அரசர் வரு கதம் - அரசர்பால் தோன்றும் வீரம், உக - அழியும்படி, தனது குரகதம் - (முதற் குலோத்துங்கன்) தனது குதிரைச் சேனையை, உகைத்து அருளி - செலுத்தி,

வி - ரை :—சூரியன் கீழ்த்திசையில் தோன்றி மேற்றிசை நோக்கிச் செல்லுங் கால் இருள் அழிதல் போல், இவன் தென் திசையிலிருந்து வடதிசை நோக்கிச் சென்ற வளவில், இவன் பகைவர் வீரமும் அழிந்த தென்பதாம். சூரியன் முதற் குலோத்துங்கனுக்கும், இருள் பகை வேந்தருக்கு முவமை. இஃதுவமை யணியாம். குரகதம்—குளம்பால் விரைந்தோடுவ தென்பதாம்; குரம்—குளம்பு, கதம்—விரைந்தோடுவது. குடக்கு + திசை = குடதிசை; வடக்கு + திசை = வடதிசை [நன் - கஅசு]. (உ0)

வயிராகரம் வெல்லல்

உருஉ. புரமெரிம டுத்தபொழு ததுவிதுவெ
னத்திகிரி புகையெருகு விப்ப வயிரா
கரமெரிம டுத்தரசர் கரமெதிர்கு
விப்பதொரு கடவரைத னைக்க டவியே.

ப - ரை :—புரம் - (பகை வேந்தர்) ஊர்களை, எரி மடுத்த பொழுது - (முதற் குலோத்துங்கன்) நெருப்பால் கொளுத்திய காலத்தில், வயிரா கரம் - வயிராகரமென்னும் ஊரையும், எரி மடுத்து - நெருப்பால் கொளுத்துதலால், திகிரி - வட்ட வடிவமாகிய, புகை எரி குவிப்ப - புகையும் நெருப்பும் ஒன்று சேரவும், அது இது - (அதனால்) ஒரு பொருள் மற்றொரு பொருள், என - என்று (கண்டோர் மயங்கி) சொல்லவும், அரசர் எதிர் - (பகை) அரசர் (தனக்கு) எதிரில், கரப்

குவிப்பது - (தங்கள்) கைகளைக் கூப்பி வணங்குவிப்பதாகிய, ஒரு கடம் வரை தனை - ஒப்பற்ற மதத்தைப் பொழியும் மலை போன்ற யானையை, கடவி - (முதற் குலோத்துங்கன்) செலுத்தி,

வி - ரை:—முதற் குலோத்துங்கன் வயிராகரத்தையும் வேறு பல ஊர்களையும் நெருப்பு மூட்டி அழித்தன னென்பதாம். பகைவர் ஊர்களை நெருப்பிட்டுக் கொளுத்தல் பண்டைய வழக்கமாம். 'எம நன்னு டோள்ளெரி யூட்டினை, நாம நல்லமர் செய்ய, ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே' [புறநா - கசு] என்னு மடிகளின் கருத்தை இச்செய்யுள் ஒருவாறு தழுவி யுள்ளமை காண்க. 'அழலடைந்த மன்றத் தலந்தயரா நின்ருர்' [புறப். வெ. மா - சஉ] என்றமையு மிங்குக் கவனிக்க. புரம் எரி மடுத்த பொழுது—(சிவபிரான்) திரிபுர தகனஞ் செய்த காலத்தில் தோன்றிய, அது இது—அந்த நெருப்பே இந்த நெருப்பு, என-என்று (கண்டோர்) சொல்ல, திகிரி—(தன்) கட்டளையால் எனப் பொருள் கோடலுமாம். முதற் குலோத்துங்கன் வயிராகரம் வென்றமையை கசஎ-ம் தாழிசையிற் காண்க. பகைவர் ஊரை எரி மூட்டி யழித்தலை உழபுலவஞ்சி என்ப [தா - நஎ0]. (உக)

களங் கொண்டமை

உடுரு. குளமுதிர மெத்தியதொர் குரைகடல்க
டுப்பவெதிர் குறுகலர்கள் விட்ட குதிரைத்
*தளமுதிர வெட்டியொரு செருமுதிர
ஒட்டினர்கள் தலைமலைகு வித்த ருளியே.

ப - ரை:—குளம் உதிர - குளத்திலுள்ள நீர் சிதையும்படி, மெத்தியது - மோதுவதாகிய, குரை ஒர் கடல் கடுப்ப - ஒலிக்கும் ஒப்பற்ற கடல் நீரைப் போல், குறுகலர்கள் - பகை வேந்தர்கள், எதிர் விட்ட - (தன் சேனைக்கு) எதிரில் ஏவிய, குதிரை தளம் - குதிரைப் படையை, உதிர வெட்டி - அழியும்படி வெட்டி, ஒரு செரு முதிர - ஒப்பற்ற போர் மிகும்படி, ஒட்டினர்கள் - (போரில்) சபதங் கூறி வந்த வீரர்களின், தலை மலை குவித்தருளி - தலைகளை மலைபோல் குவியலாகச் சேர்த்து,

வி - ரை:—குளம் பகையரசர் படைக்கும், கடல் முதற் குலோத்துங்கன் படைக்கு முவமை; கடல் குளத்தைச் சிதைத்தலாவது:—கடல் நீர் குளத்து நீரின் இனிய தன்மையைக் கெடுத்து அதனை உவர் நீராக்குதலாம். அதுபோல் முதற் குலோத்துங்கன் தன் பகை வேந்தரை வென்று போர்க் களத்தைத் தனக்குரிமையாக்கிக் கொண்டன னென்பதாம். [தா - சசு] குறுகலர்—நெருங்குத லில்லாதவர். ஒட்டினர்—(ஒருவரை ஒருவர் கொல்வதாக) சபதங்கூறுவோர்; ஒட்டு—சபதம்; 'ஒட்டியா ரெல்லா முணரார்' [புறப். வெ. மா. ஒழிபு - க0] எனவும்; 'ஒட்டி னூர்இமைப் போதினி லோடியே, தட்டினூர்' [வில்லி - பா - க - போர் - நச] எனவும் வருமாறு காண்க. தலை மலை—தலைகளாகிய மலைகள் எனினுமாம்; கடுப்ப—உவமவுருபிடைச் சொல்; குளம், கடல்—இடவாகு பெயர்கள்; ஒட்டினர்கள்—வினையாலணையும் பெயர். இச்செய்யுள் உவமையணியாம்.

பா - பே:—* தளமுறிய. (உஉ)

சக்கரக்கோட்டம் வெல்லல்

உடுச. மனுக்கோட்ட மழித்தபிரான்
வளவர்பிரான் திருப்புருவத்
தனுக்கோட்ட நமன்கோட்டம்
பட்டதுசக் கரக்கோட்டம்.

ப - ரை :—மனு கோட்டம் - மனிதர்களின் மாறுபாட்டை, அழித்த பிரான் - போக்கிய தலைவனும், வளவர் பிரான் - சோழநாட்டி னுள்ளவர் களுக்கு அரசனுமாகிய முதற் குலோத்துங்கன், திரு புருவம் - அழகிய (தன்) புருவமாகிய, தனு கோட்ட - வில்லை வளைக்க, சக்கரக் கோட்டம் - சக்கரக் கோட்டத்திலுள்ள பகை வீரர்கள், நமன் கோட்டம் - யம னுடைய ஊரில், பட்டது - (போய்) சேர்ந்தனர்.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் கோபித்துப் போர் செய்த வளவில், சக்கரக் கோட்டத்திலுள்ள வீரர் மடிந்தொழிந்தன ரென்பதாம். மனுக்கோட்ட மழித்தலாவது :—மக்கள் தீத்தொழில் புரிந்து தீய வழியிலொழுகாமல் அவர் களைப் பாதுகாத்தலாம். 'புருவத் தனுக்கோட்ட' என்றது கோபக் குறியை யுணர்த்தினது. இதற்கு, புருவங்களையும் (கையில் பிடித்த)வில்லையும் வளைக்க வெனினுமமையும். புருவத் தனு—முற்கூறிய பொருளில் பண்புத் தொகையும் பிற்கூறிய பொருளில் உம்மைத் தொகையுமாம். சக்கரக் கோட்டம்—இடவாகு பெயர்; இது அஃறிணைப் பெயராதலால், 'பட்டது' என்னும் அஃறிணை வினை யைக் கொண்டு முடிந்தது. இவ்வாறு வருதலைச் சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமா மென்ப. சக்கரக் கோட்டப்போர்ச் செய்தியை ௧௪௭, ௩அ௪-ம் தாழிசைகளிற் காண்க. இச் செய்யுள் திரிபு என்னுஞ் சொல் லணியாம். பா - பே :—‡ தவிர்த்த.

(௨௩௬) சோழன் தேவி, எடுத்துக்கொண்டு (௨௩௭) தருவனென்று (௨௩௮) பயனு மொத்து (௨௩௯) நடைகற்று (௨௪௦) படைதரித்து (௨௪௧) தெரிவித்து (௨௪௨) சிறந்த பின்னர் (௨௪௩) மீண்டு கற்று (௨௪௪) ஒளிர வைத்து (௨௪௫) பயின்று (௨௪௬) பயின்று (௨௪௭) பயிற்றி, சுமந்தில (என்ன) (௨௪௮) வல்ல பிறகு (௨௪௯) அடுத்தருளி (௨௫௦) பிடித்தருளி (௨௫௧) உகைத்தருளி (௨௫௨) கடவி (௨௫௩) குவித்தருளி (௨௫௪) தனுக் கோட்ட, சக்கரக் கோட்டம், நமன் கோட்டம் பட்டது எனக் கூட்டுக. (௨௫௩)

**விளக்கமும் பகைவர் அழிவும்**

௨௫௫. சரிக ளந்தொறுந் தங்கள்ச யமகள்
தன்னை மன்னப யன்கைப்பி டித்தலும்
பரிக ளுங்களி றுந்தன ராசியும்
†பாரி போகங்கொ டுத்தனர் பார்த்திபர்.

ப - ரை :—சரி களம் தொறும் - (படைகள்) பின் வாங்கி யோடும் போர்க் களங்களி லெல்லாம், தங்கள் - (அந்தந்த) அரசர்களுடைய, சயம் மகள் தன்னை - வெற்றி மகளை, மன் - அரசனாகிய, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழன், கை பிடித்தலும் - மணம் புரிந்து கொண்டதும், பார்த்திபர் - (தோல்வியடைந்த) அரசர்கள், பரிகளும் - (தங்கள்) குதிரை களும், களிறும் - யானைகளும், தனம் ராசியும் - பொருட் குவியல்களு மாகிய, பாரி போகம் கொடுத்தனர் - சீதனப் பொருளை (முதற் குலோத் துங்கனுக்கு) கொடுத்தார்கள்.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் தன் பகை வேந்தரை வென்று அவர்கள் செல்வ மகளாய் அவர்கள்பால் வளர்ந்து வந்த வீரமகளை மணம் புணர்ந்ததும், அவர் தம் மகளுக்குச் சீதனப் பொருள் கொடுப்பார் போல யானை, குதிரை முதலிய பலவகைப் பொருள்களை அவனுக்கு வழங்கின ரென்பதாம். பாரி போகம் = பாரி — மனைவி; போகம்—இன்பம் நுகர்தற்குரிய பொருள்கள் அதாவது :—தந்தையானவன் தன் மகளை ஒருவனுக்கு மணஞ்செய்து கொடுத்த பின், அவள் பொருட்டு அவள் கணவனுக்குக் கொடுக்கும் பலவகைப் பொருள்

களாம். இதுவே சீதனப் பொருள்கள் எனப்படும். பாரி போகம்—பெருஞ் செல்வ மெனினுமாம். வயிராகரம், சக்கரக்கோட்டம் என்னும் ஊர்களுக் கரசர்களையும் மற்றும் பல வேந்தரையும் வென்றமை கருதி, 'பார்த்திபர்' எனப் பன்மையாற் கூறினர். தொறும்—பன்மைப் பொருளுணர்த்துவ தோரிடைச் சொல்; மன்—பண்பாகு பெயர்; அசை நிலை யெனினுமாம். இதில் முதற் குலோத்துங்கன் வெற்றியை வேறு வகையாய்க் கூறியிருத்தலால், இது பிறிதினவிற்சி யணியாம். (ப்ரயாயோக்தா லங்காரம்).

பா - பே:—† பாரி பொ்கம். (உச)

இதுவுமது

உடுசு. *பொருத ராதிபர் கண்கள்சி வந்தில
போரி லோடிய கால்கள்சி வந்தன
விருத ராசப யங்கரன் செங்கையில்
வேல்சி வந்தது கீர்த்திவெ ளுத்ததே.

ப - ரை:—பொரு - (முதற் குலோத்துங்கனோடு) போர் புரிந்த, தராதிபர் - அரசர்களின், கண்கள் சிவந்தில - கண்கள் சிவக்கவில்லை, போரில் - சண்டையில், ஓடிய - (தோற்று) ஓடிப் போன, கால்கள் சிவந்தன———, விருதராச பயங்கரன் - வெற்றிச் சின்னங்களையுடைய அரசர்களுக்குப் பயத்தை யுண்டாக்குபவனாகிய முதற் குலோத்துங்க னுடைய, செம் கையில் - சிவந்த கையிலுள்ள, வேல் சிவந்தது - வேலா யுதம் சிவந்தது, கீர்த்தி வெளுத்தது - (அவன்) புகழ் வெண்ணிறமாய்ப் பரவினது.

வி - ரை:—'தராதிபர் கண்கள் சிவந்தில' என்றது பகைவேந்தர் தமது வீரமிழந்தன ரென்பதாம். 'செம்பு காட்டிய கண்ணிணை பாலெனத் தெளிந்தீர்' [கம்பரா-கரன்வதை-கசடு] என்றார் கம்பரும். 'வேல் சிவந்தது' என்றதனால், முதற் குலோத்துங்கன் பல படைகளை யழித்தமையும், 'கீர்த்தி வெளுத்தது' [தா - கச] என்றதனால், அவன் புகழ் எங்கும் பரவினமையும் விளங்கும். தராதிபர் = தரா + அதிபர்; தீர்க்க சந்தி; பூமிக்குத் தலைவர்; அரசரென்பதாம். 'விருதராச பயங்கரன்' என்றார் முன்னும் [தா - கசஎ]. இவன் இப்பெயர் பெற்ற காரணத்தை கஙூ-ம் தாழிசை யுரையா லறிக. சிவந்தில, சிவந்தன, சிவந்தது, வெளுத்தது—இவை முரண் தொடைகள்.

பா - பே:—* பொருந ராதிபர். (உடு)

வீரராசேந்திரன் இறந்தமை

உடுஎ. மாவுகைத் தொருதனி யபய னிப்படி
வடதிசை மேற்செல மன்னர் மன்னவன்
தேவருக் கரசனாய் விசும்பின் மேற்செலத்
தென்றிசைக் குப்‡புகுந் தன்மை செப்புவாம்.

ப - ரை:—ஒரு தனி அபயன் - ஒப்பற்ற (முதற் குலோத்துங்க) சோழன், இப்படி - இவ்விதமாய், மா உகைத்து - (தன்) குதிரையைச் செலுத்தி, வடக்கு திசைமேல் செல - வடக்குத் திக்கில் (போர் மேல்) செல்ல, மன்னர் மன்னவன் - அரசர்கட் கரசனாகிய வீரராசேந்திரன், தேவருக்கு அரசனாய் - தேவர்களுக்குத் தலைவனாய், விசும்பின் மேல் செல்ல - தேவலோகத்திற்குப் போக, தென் திசைக்கு - தெற்குத் திக்கிலுள்ள சோழ நாட்டில், புகும் தன்மை - நடந்தவற்றை, செப்புவாம் - (இனி) சொல்லுவோம்.

வி-ரை:—முதற் குலோத்துங்கன் வடநாட்டிற் போர் புரியுங்கால், வீரராசேந்திரன் சோழநாட்டில் உயிர் துறந்தான் என்பதாம். வடதிசை என்றது இந்தியாவின் வடக்கிலுள்ள மத்திய மாகாணத்தைச்சேர்ந்த வயிராகரம், சக்கரக்கோட்டம் என்னும் ஊர்களையாம். முதற் குலோத்துங்கன் அங்குப் போர் புரிந்துகொண்டிருந்தபோது, 'வீரராசேந்திரன் விண்ணுலகடைந்தான்' என இவ்வாசிரியர் கூறுமாற்றானும் 'அப்பார்த்திபன் கி. பி. கoஎo-ம், ஆண்டில் உயிர் துறந்தான்' [H. I. S. I. - பக் - அஉ] என்றமையானும், வயிராகரப் போரும், சக்கரக்கோட்டப் போரும் அவ்வாண்டிலேயே நிகழ்ந்திருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. இப்போரின் விரிவை கசஎ-ம் தாழிசையிற் காண்க. 'தென்றிசைக்குப் புகுந்தன்மை' என்றது சோழ நாட்டில் நிகழ்ந்த தீங்குகளையாம். அவற்றை அடியில் வரும் மூன்று தாழிசைகளாலறிக. திசைக்கு—உருபு மயக்கம், செல—இரண்டனுள் முந்தினது நிகழ்காலத்தையும், பிந்தினது இறந்த காலத்தையும் உணர்த்தின. ஒருதனி—ஒரு பொருட் பன்மொழி; இச்செய்யுளில் பிறிதினவிற்சியணி யுள்ளமை காண்க. பா - பே:—$ புகுந்தது. (உகு)

**சோழநாட்டில் நடந்த தீங்குகள்**

உடுஅ. மறையவர் வேள்விகுன்றி மனுநெறி யனைத்து மாறித்
துறைகளோ ராறு மாறிச் சுருதியு முழக்க மோய்ந்தே.

ப - ரை:—மறையவர் - பிராமணர்களின், வேள்வி குன்றி - யாகத் தொழில்கள் குறைந்து, மனு நெறி அனைத்தும் - மனுநீதி முழுதும், மாறி - மாறுபாடடைந்து, ஓர் ஆறு துறைகளும் மாறி - ஒப்பற்ற ஆறு சாஸ்திரங்களின் முறையும் வேறுபாடடைந்து, சுருதியும் - வேதங்களும், முழக்கம் ஒய்ந்து - (ஓதுவாரின்மையால் அவைகளின்) ஒலி அடங்கி,

வி - ரை:—யாகங்களும் மனு நீதியும் சாத்திர வொழுக்கங்களும் வேதமோதுதலுஞ் சீரழிந்தன வென்பதாம். வேள்வி—இதில் வேள் பகுதி, வேள்—விருப்பம்; விரும்பியவற்றைத் தரவல்ல தென்பதாம். துறை—நூல்; ஆறு துறைகளாவன—சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சாந்தோபிசிதம், சோதிடம் என்பன. வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூருவ மீமாஞ்சை, உத்தர மீமாஞ்சை யெனவுங் கூறுப. (உஎ)

**இதுவுமது**

உடுகூ. சாதிக ளொன்றோ டொன்று தலைதடுமாறி யாரும்
ஓதிய நெறியி னில்லா தொழுக்கமு ‡ யறந்து போயே.

ப - ரை:—சாதிகள் - (பலவகை) சாதியினர், ஒன்றோடு ஒன்று - ஒருவருடன் மற்றொருவர், தலைதடுமாறி - கலந்து, யாரும் - ஒருவரும், ஓதிய நெறியில் - (நூல்களில்) சொல்லப்பட்ட நல் வழியில், நில்லாது - நிற்காமல், ஒழுக்கமும் - (தங்கள்) நன்னடக்கைகளையும், மறந்து போய்——,

வி - ரை:—பலவகைச் சாதியினர் ஒருவரோடொருவர் கலந்ததன்றி, அவர்கள் நல்லொழுக்கங்களுங் குன்றலாயின வென்பதாம். சாதிகள்—பண்பாகு பெயர்; 'சாதிகள்' என்னும் அஃறிணைப் பெயருக்கேற்ப, 'ஒன்றோடொன்று' என்றார். யாரும் என்பதிலுள்ள உம்மை முற்றுப் பொருளிலும் ஒழுக்கமும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளிலும் வந்தன. போயே—ஏகாரம் அசை. பா - பே:—‡ மறைந்து போயே. (உஅ)

**இதுவுமது**

உகூo. ஒருவரை யொருவர் கைம்மிக் கும்பர்தங் கோயில் சோம்பி
அரிவையர் *கற்பின் மாறி யரண்களு மழிய வாங்கே.

ப - ரை :—ஆங்கு - அந்தச் சோழ நாட்டில், ஒருவரை ஒருவர் - ஒருவரை மற்றொருவர், கைம்மிக்கு - அதிகரித்தும், உம்பர் தம் கோயில்- கடவுள் கோயில்கள், சோம்பி - (பூசையின்றி) சோர்வடைந்தும், அரிவையர் - பெண்கள், கற்பின் மாறி - (தங்கள்) கற்பின் நிலையிலிருந்து நீங்கியும், அரண்களும் - (எளியவர்களுக்குரிய) பாதுகாப்புக்களும், அழிய - கெட்டுப் போக,

வி - ரை :—இம் மூன்று தாழிசைகளிலும் சோழ நாட்டில் நிகழ்ந்த பல வகைத் தீங்குகள் கூறப்பட்டன. ஒருவரை யொருவர் கைம்மிகல் - எளியோரை வலியோரும், வறியோரைச் செல்வரும் நலிதல்; உம்பர் கோயில் சோம்புதலாவது :—கடவுள் ஆலயங்களில் பூசை, விழா முதலியனவின்றிப் பாழடைதல்; அரிவையர் கற்புக்குச் செங்கோலின்றியமையாத தென்பதை 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் காவ லின்றெனி னின்றாம்' [மணிமே-உஉ-உ0அ, க] எனவும், 'பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந்து ..........அரசுகோல் கோடினொன்றன்' [சீவகசி-உருடு] எனவும் கூறியவற்றானறிக. கற்பு—பெற்றோராலும், மாமன், மாமி முதலிய பெரியோர்களாலும் கற்பிக்கப்படும் நல்லொழுக்கம். அரண் என்பதற்கு நீரரண், நிலவரண், காட்டரண், மலையரண் என்னும் நால்வகை யரண்க ளெனினுமாம். இவ்வரண்களைத் தக்கவாறு காக்கும் வேந்தனின்மையால், அவை யழிவெய்தின வென்க. உம்பர்—மேலிடம்; இஃதிடவாகு பெயராய் மேலிடத்திலுள்ள தேவர்களைக் குறித்தது. அரண்களும்—உம்மை இறந்தது தழுவியது. பா - பே :—* கற்புச் சோம்பி. (உக)

முதற் குலோத்துங்கன் சோழநாடு அடைந்தமை

உசுக. கலியிருள் பரந்த காலைக் கலியிருள் கரக்கத் தோன்றும்
ஒலிகட லருக்க னென்ன உலகுய்ய வந்து தோன்றி.

ப - ரை :—கலி இருள் - மிகுதியாகிய இருள், பரந்த காலை - பரவிய போது, கலி இருள் - (அந்த) மிகுதியாகிய இருளானது, கரக்க - மறையும்படி, ஒலி கடல் - (அலைகளால்) முழங்குங் கடலில், தோன்றும்-உதிக்கும், அருக்கன் என்ன - சூரியனைப் போல, உலகு உய்ய - (சோழ) நாட்டிலுள்ளவர் பிழைக்கும்படி, வந்து தோன்றி - (முதற் குலோத்துங்கன் அங்கு) வந்து தோன்றி,

வி - ரை :—சோழநாடு முற்கூறியவாறு சீர் குலைந்திருந்த போது, முதற் குலோத்துங்கன் அங்கு வந்து சேர்ந்தன னென்பதாம். கலி—வறுமை யெனினுமாம். சூரியன் அம்மன்னவனுக்கும், கலியிருள் நாட்டின் சீர்கேட்டிற்கு முவமை. சூரியன் இருளை யகற்றி ஒளியைப் பரப்புதல் போல் அவன் நாட்டின் சீர்கேட்டை யொழித்து அதனை நன்னிலையில் நிறுத்தின னென்பதாம். [தா-அ] உலகு—இங்கு நாடு என்னும் பொருளில் வந்தது. 'திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து' [புறநா-உ] என்றமை காண்க. இருள்—இரண்டும் எழுவாய்; என்ன—உவம வுருபிடைச் சொல்: உலகு—இடவாகு பெயர்; ஒலி கடல்—வினைத் தொகை. இச்செய்யுள் உவமையணியாம். (௩0)

நாட்டை நன்னிலையில் நிறுத்தினமை

உசுஉ. காப்பெலா முடைய தானே படைப்பதுங் கடனுக் கொண்டு
கொப்பெலாங் குலங்தோர் தம்மைக் குறியிலே நிறுத்தி வைத்தே.

ப - ரை :—காப்பு எலாம் - (உலகத்திலுள்ள உயிர்களை) காக்குந் தொழில்கள் எல்லாவற்றையும், உடைய - (தனக்கே உரிமையாக)

உடைய, தானே - முதற் குலோத்துங்கனே, படைப்பதும் - (அழிந்து போன நல்லொழுக்கங்களை மீண்டும்) உண்டாக்குவதையும், கடன் ஆ(க) கொண்டு - தன் கடமையாகக் கருதி, கோப்பு எல்லாம் - சீரெல்லாம், குலைந்தோர் தம்மை - அழிந்தவர்களை, குறியிலே - நல்லொழுக்கங்களில், நிறுத்தி வைத்து - (முன்போல்) நிலை நிறுத்தி,

வி - ரை :—சீர் கேடடைந்த சோழ நாட்டை முதற் குலோத்துங்கன் சீர் பெற வைத்தா னென்பதாம். காத்தற் கடவுளாகிய திருமாலே முதற் குலோத் துங்கனாய்த் தோன்றியுள்ளானென்பது ஆசிரியர் கருத்தாகலின், 'காப்பெலா முடைய தானே' எனவும், சீர்கேடுற்ற நாட்டைச் சீர்பெற வைத்தமையால், 'படைப்பதுங் கடனாக்கொண்டு' எனவுங் கூறினர். முன்பு, 'சாதிகளொன்றோ டொன்று..........மறந்து போயே' [தா - உருசு] என்றதனால், முதற் குலோத் துங்கன் அவர்களைக் குறியிலே நிறுத்தின னென்க. காப்பு, கோப்பு—தொழி லாகு பெயர்கள். எலாம்—இடைக்குறை; இதில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (ருக)

திரு வபிடேகம்

உசுரு. விரிபுனல் வேலை நான்கும் வேதங்க ணான்கு மார்ப்பத்
திரிபுவ னங்கள் வாழ்த்தத் திருவபி டேகஞ் செய்தே.

ப - ரை :—விரி புனல் - பரவிய நீரையுடைய, நான்கு வேலையும் - நான்கு கடல்களும், நான்கு வேதங்களும் ——, ஆர்ப்ப - முழங்கவும், திரி புவனங்கள் - மூன்றுலகத்தி லுள்ளவர்களும், வாழ்த்த-வாழ்த்தவும், திரு அபிடேகம் செய்து - (முதற் குலோத்துங்கன்) மேன்மையாகிய மங்கல நீராடி,

வி - ரை :—(முதற் குலோத்துங்கன் தன் நாட்டைச் சீர்திருத்திய பின்) முடி புனைந்து கொள்ளக் கருதி மங்கல நீராடின னென்பதாம். அரசர்கள் முடி புனையுமுன் பல புண்ணிய நதிகளின் நீரைக் கொணர்வித்து அதில் நீராடல் மரபு. இதனையே பட்டாபிஷேக மென்பர். 'எங்கணு யகனை வெவ்வே றெதி ரபி டேகஞ் செய்தார்' [கம்பரா - திருமுடி சூட்டு - ருரு] என்றார் கம்பரும். 'வேதங்கணான்கு மார்ப்ப' என்றது மறையவர் வேத மோதினமையை. முன்பு, 'சுருதியு முழக்க மோய்ந்து' [தா-உருஅ] என்றமையால், 'இங்கு வேதங்கணான்கு மார்ப்ப' என்றார். நான்கு வேதம், நான்கு கடல் (தா-ரு, சு]. (ருஉ)

முடி புனைதல்

உசுச. அறைகழ லரச ரப்பொழு தடிமிசை யறுகெ டுத்திட
மறையவர் முடியெ டுத்தனர் மனுநெறி தலையெ டுக்கவே.

ப - ரை :—அ பொழுது - (குலோத்துங்கன் மங்கல நீராடி முடித்த) அச்சமயத்தில், அறை கழல் அரசர் - ஒலிக்கும் வீரகண்டை யணிந்த அரசர்கள், அடி மிசை - (அவன்) பாதங்களில், அறுகு - அறுகம் புல்லை, எடுத்து இட - (மலரும் நெல்லுங் கலந்து) எடுத்து வைக்கவும், மனு நெறி - மனு நீதி, தலை எடுக்க - சிறந்து விளங்கவும், மறையவர் - பிரா மணர், முடி எடுத்தனர் - கிரீடத்தை எடுத்து (அவன் தலையில்) அணிந் தார்கள்.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் மகுடம் புனைந்து கொண்டான் என்ப தாம். அறு கெடுத்திடல்-இஃதோர் மங்கலச் செயலாம். 'அலர் கொடி யறுகும் நெல்லும் வீசி' [சிலப் - சு - கஉச] எனவும், 'நீரொடு சொரிந்த வீரித ழலரி பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க' [அகநா-அசு] என்வும் ஆன்றோர் கூறி

யுள்ளமை காண்க. இச் செய்யுளில் அறுகு கூறினமையால், அதன் உபலக்கணத்தால் அலரும் நெல்லுங் கொள்க. அரசர்கட்கு மறையவர் முடி தரித்தலை, 'வசிட்டனே புனைந்தான் மௌலி' [கம்பரா-முடிசூட்-௩அ] என்றதனாலறிக. முன்பு, 'மனுநெறி யனைத்து மாறி' [தா-உ௩அ] என்றதனால் இங்கு, 'மனுநெறி தலையெடுக்க' என்றார்.

முதற் குலோத்துங்கன் திக்கு விசயஞ் செய்து வருங்கால் [தா-உ௰௭] சோழநாட்டை யாண்டு வந்த வீரராசேந்திரன் கி. பி. க0எ0-ம், ஆண்டில் வானுலகடைந்தான். பின்பு அந் நாட்டில் பெருங் குழப்ப முண்டாயிற்று. மேலைச் சளுக்கிய வேந்தனும் வீரராசேந்திரன் மருகனுமாகிய ஆறாம் விக்கிரமாதித்தன் இச்செய்திகளைக் கேள்வியுற்றான். உடனே அவன் சோணாட்டையெய்தி அங்கு நிகழ்ந்த குழப்பத்தை யடக்கினான். பின்பு அவ்விறையவன் தன் மைத்துனனும் வீரராசேந்திரன் புதல்வனுமாகிய அதிராசேந்திரனைச் சோழநாட்டிற்கு வேந்தனாக்கித் தன்னாட்டிற்குத் திரும்பினான். மீண்டும் அந்நாட்டில் மிகப் பெரிய குழப்ப முண்டாயிற்று. அக் குழப்பத்தில் அதிராசேந்திரன் கொலையுண்டான். இவன் கி. பி. க0எ0-ம், ஆண்டு மார்ச்சு மாதம் க௩-ம் நாளுக்கும் மேற்படி யாண்டு ஜூன் மாதம் கூ-ம் நாளுக்கும் இடையில் சுமார் மூன்று மாதமளவும் ஆட்சி புரிந்தானென்ப. முதற் குலோத்துங்க வேந்தன் அதிராசேந்திரனோடு போர்புரிந்து அவனைக் கொன்று சோழநாட்டைக் கவர்ந்ததாகவுங் கூறுவர். இவ் வேந்தன் கி. பி. க0எ0-ம், ஆண்டு ஜூன் மாதம் கூ-ம் நாள் முடி புனைந்து கொண்டான். பின்பு அம்மன்னவன் கி. பி. கககஅ-ம் ஆண்டு ஜூன் மாதம் உகூ-ம் நாள் வரை ஆட்சி புரிந்தான். [H. I. S. I. பக்-அஉ, அ௩, ௩௬க, ௩௬உ.] வீரராசேந்திரன் கி. பி. க0எ0-ம், ஆண்டில் உயிர் துறந்தபோது, முதற் குலோத்துங்கன் வடதிசையிலுள்ள வயிராகரம், சக்கரக்கோட்டம் என்னும் இடங்களில் போர்புரிந்துகொண்டிருந்தான் [தா-உ௰உ, உ௰ச] என்றமையால், இப்போர்களும் அவ்வாண்டிலேயே நிகழ்ந்தன வென்பது நன்கு விளங்கும்.

அதிராசேந்திரன் கொலையுண்டமையும், முதற் குலோத்துங்கன் சோழநாட்டைக் கைப்பற்றினமையும் ஆறாம் விக்கிரமாதித்தன் செவிக்கெட்டின. பின்பு அம்மன்னவன் குலோத்துங்கனை வெல்லச் சோழநாட்டின்மேல் படையெடுத்துச் செல்லக் கருதிப் போர்க்கு வேண்டியவைகளை ஆயத்தஞ் செய்யத் தொடங்கினான். ஆனால், ஆறாம் விக்கிரமாதித்தன் தமையனாகிய இரண்டாம் சோமேசுவரன் தன் தம்பியின்பால் நெடுங்காலமாய் உட்பகைமை கொண்டிருந்தான். இதனை முதற் குலோத்துங்கன் கேள்வியுற்று அவ் விறையவனை யணுகித் தனக்குதவி புரியுமாறு பிறரெவரு மறியாமல் மறைவாய்க் கேட்டுக் கொள்ள, அவன் அவ்வாறே இசைந்தான். சில்லாண்டு சென்றபின், ஆறாம் விக்கிரமாதித்தன் சோழநாட்டின் மேல் படையெடுத்துச் சென்றான். அது காலை, சோமேசுவரன் தன் பின்னோனுக் குதவி புரிபவன்போல் நடித்துத் தன் படைகளைத் திரட்டிக்கொண்டு சோழ நாட்டை யடைந்தான். இருதிறத்துச் சேனைகளும் போர்புரியத் தொடங்கின. உடனே சோமேசுவரன் முதற் குலோத்துங்கனோடு சேர்ந்துகொண்டு ஆறாம் விக்கிரமாதித்தனை எதிர்க்கத் தொடங்கினான். ஆயினும் அவன் சோழர் படையை முறியடித்துத் தன் முன்னோனாகிய சோமேசுவரனைச் சிறைப்பிடித்துச் சென்றனனென்ப. இப் போரில் முதற் குலோத்துங்கனே வெற்றி பெற்றனனெனவும், அவன் ஆறாம் விக்கிரமாதித்தனைத் துங்கபத்திரை நதி வரையில் துரத்தியடித்தனனெனவும் கூறுவதுமுண்டு. இப்போர் கி. பி. க0எச-ம், ஆண்டில் நிகழ்ந்ததாம் [H. I. S. I. பக் - அ௫; மு. கு. சோ - பக் - ௩எ].

(உடுஅ) ஓய்ந்து (உடுகூ) மறந்து போய் (உகூ0) அழிய (உகூக) வந்து தோன்றி (உகூஉ) நிறுத்தி வைத்து (உகூங) அபிடேகஞ் செய்து (உகூச) தலை யெடுக்க..........முடி யெடுத்தனர் என முடிக்க. (ஙங)

அறத்தை நிலைநாட்டல்

உகூடு. நிரைமணி பலகு யிற்றிய நெடுமுடி மிசைவி திப்படி
சொரிபுன லிடைமு ளைத்தன துறைகளி னறம னைத்துமே.

ப - ரை :—நிரை மணி - வரிசையாகிய இரத்தினங்கள், பல குயிற்றிய - பலவற்றைப் பதித்த, நெடு முடி மிசை - பெரிய கிரீடத்தின் மேல், விதிப்படி - (வேதங்களின்) முறைப்படி, சொரி புனல் இடை - (பெரியோர்) சொரிந்த மங்கல நீரில், அறம் துறைகள் அனைத்தும் - தருமமார்க்கங்களெல்லாம், முளைத்தன - தோன்றலாயின.

வி - ரை :—'அறமனைத்தும் முளைத்தன' என்றதனால், முன்பு அவை அழி வெய்திக் கிடந்தன வென்பது விளங்கும். நெடு முடியாகிய வயலில் சொரிந்த நீரால் அறத்துறைகளாகிய விதைகளனைத்தும் முளைத்தன வென்க. எல்லா வறங்களும் முதற் குலோத்துங்கனால் மேன்மை யடைந்தனவென இச்செய்யுளில் கூறியவாறும். இதில் உருவகவணி யமைந்துள்ளமை காண்க. துறைகளின்— இதிலுள்ள இன் சாரியை. (ஙச)

குலோத்துங்கன் ஆட்சி சிறப்புறல்

உகூசு. பொதுவற வுலகு கைக்கொடு புலிவளர் கொடியெ டுத்தலும்
அதுமுதற் கொடியெ டுத்தன அமரர்கள் முழவெ டுக்கவே.

ப - ரை :—உலகு - இவ்வுலகத்தை, பொது அற - (பிறர்க்குரிய) பொதுத் தன்மை நீங்க, கை கொடு - (முதற் குலோத்துங்கன் தனக்கே உரிமையாய்) கைப்பற்றிக் கொண்டு, வளர் - (மேலும் மேலும்) மேன்மை யடையும், புலி கொடி எடுத்தலும் - (தன்) புலிக்கொடியை எடுத்து நிறுத்தினதும், அது முதல்——, அமரர்கள் - தேவர்களுக்கு, முழவு எடுக்க - (பலவகை) வாத்தியங்கள் ஒலிக்கும்படி, கொடி எடுத்தன - (விழாவிற்குரிய) கொடிகள் எடுத்து நிறுத்தப்பட்டன.

வி - ரை :—'பொதுவற' என்றது இந்நில வுலகம் ஏனைய வரசர்க்குப் பொதுவாயின்றித் தனக்கே உரிமையாக்கிக் கொள்ளல்; 'வையம் பொதுக் கடிந்து' [பெரியபு - மநுநீதி - ஙங] எனவும், 'உலகம் யாவையும் பொதுவறத் திகிரியை யுருட்டி' [கம்பரா - அகலிகை - சச] எனவும் வருமாறு காண்க. அமரர்—மரணமில்லாதவர்; அமரர்கள் கொடி யெடுத்தல்—தேவர்கள் திரு விழாவின் பொருட்டுத் துவசாரோகணஞ் செய்தல்; முன்பு, 'உம்பர்தங் கோயில் சோம்பி' [தா - உகூ0] என்றதனால், இங்கு, 'அமரர்கள் முழவெடுக்க' என்றார். கொடு—இது கொண்டு என்பதன் தொகுத்தல்; புலி—இருமடி யாகு பெயர். (ஙடு)

இதுவுமது

உகூஎ. குவிகைகொ டரசர் சுற்றிய குரைகழ லபயன் முத்தணி
கவிகையி னிலவெ றித்தது கலியெனு மிருளொ ளித்ததே.

ப - ரை :—குவி கை கொடு - கூப்பி வணங்கும் கைகளோடு, அரசர் சுற்றிய - (பல தேயத்து) அரசர்களால் சூழப்பட்ட, குரை கழல் - ஒலிக் கின்ற வீரகண்டையை யணிந்த, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழ னுடைய, முத்து அணி - முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட,

கவிகையின் - வெண்கொற்றக் குடையின், நிலவு எறித்தது - ஒளி வீசி விளங்கினது, கலி எனும் - (குடி மக்களின்) துன்பங்களாகிய, இருள் ஒளித்தது - இருளானது மறைந்தது.

வி - ரை :—'கலியெனு மிருள் ஒளித்தது' என்றதனால், அவன் குடிகள் பசியும் பிணியும் பகையும் நீங்கி, இனிது வாழ்ந்தன ரென்பதாம். முத்து— காரணவாகு பெயர். கலி யெனு மிருள்—இது உருவகவணியாம். (ருசு)

இதுவுமது

உசுஅ. அர னுறை யும்படி மலைக ளடைய விளங்கின வனையோன்
ஒருதனி வெண்குடை யுலகி லொளிகொ ணலந்தரு நிழலில்.

ப - ரை :—உலகில் - (இந்த) உலகத்தில், அனையோன் - அந்த முதற் குலோத்துங்கனுடைய, ஒரு தனி - மிகவும் ஒப்பற்ற, வெண் குடை - வெண்கொற்றக் குடையினது, ஒளி கொள் - ஒளியைப் பொருந்திய, நலம் தரு - (குடிகளுக்கு) நன்மையைத் தருகின்ற, நிழலில்- நிழலினால், மலைகள் அடைய - மலைகள் எல்லாம், அரன் உறையும்படி - சிவபெருமான் வசிக்கும்படி, விளங்கின - (வெள்ளி மலைபோல்) விளங்கின.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் வெண்குடை நிழல் படுதலால், மலைக ளெல்லாம் வெள்ளி மலைபோல் விளங்கின வென்பதாம். அடைய—இதில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (ருஎ)

இதுவுமது

உசுக. அரிதுயி லும்படி கடல்க ளடைய விளங்கின கவினின்
ஒருகரு வெங்கலி கழுவி யுலவுபெ ரும்புகழ் நிலவில்.

ப - ரை :—ஒரு கரு-ஒப்பற்ற கரிய, வெம் கலி கழுவி - (குடிகளின்) கொடிய துன்பங்களாகிய இருளைப் போக்கி, உலவு - விளங்குகின்ற, பெரும் புகழ் நிலவில் - (முதற் குலோத்துங்கனுடைய) பெரிய புகழாகிய நிலா ஒளியால், கடல்கள் அடைய - கடல்கள் எல்லாம், அரி துயிலும்படி- திருமால் தூங்கும்படி, கவினின் விளங்கின - அழகால் விளங்கின.

வி - ரை :—முதற் குலோத்துங்கனுடைய புகழொளியால், கடல்களெல் லாம் திருப்பாற் கடலைப் போல் விளங்கின வென்பதாம். நிலாவொளி யிருளை யகற்றுவது போல், இவன் புகழொளி குடிகளின் துன்பத்தைப் போக்கின தென்க. இதனால், இவன் தன் குடிகளுக்கு வேண்டிய நன்மைகள் செய்து புகழ்பெற்றா னென்பது விளங்கும். புகழை நிலவென்றமைக் கேற்ப, கலியை இருளென்னுமை ஏகதேச உருவகவணியாம்.

இவன் செய்த நன்மைகளில் சில வருமாறு :—குடி மக்களுக்குத் தன் முன் னோர் விதித்திருந்த சுங்கவரியை இவ்வரசன் விலக்கினான். இதனால், குடிகள் களிப்படைந்ததன்றி, இவனுக்குச் சுங்கந் தவிர்த்த சோழன் என்னும் பேர் உண்டாயிற்று. நில வருவாயில் ஆறிலொரு கடமை வாங்கி வந்தான். கரிகாற் சோழனைப்போல் பல ஏரிகளையும் கால்வாய்களையும் வெட்டிப் பயிர்த்தொழிலை விருத்தி செய்தான். இதனால் இவனுக்குக் கரிகாற் சோழன் என்னும் பேர் உண்டாயிற்று [தா-௫கூச]. சைவ வைணவக் கோயில்களுக்கு இறையிலி நிலங் கள் (மானியம்) வழங்கினான். [மு. கு.-பக்-சo; சோழவமி-பக்-ருஉ]. (ருஅ)

இதுவுமது

உஎo. நிழலில டைந்தன திசைக ணெறியில டைந்தன மறைகள்
கழலில டைந்தன ருதியர் கடலில டைந்தனர் செழியர்

ப - ரை :—திசைகள் - (எட்டு) திக்குகளும், நிழலில் அடைந்தன - (முதற் குலோத்துங்கன் குடை) நிழலில் சேர்ந்தன, மறைகள் - (நான்கு) வேதங்களும், நெறியில் அடைந்தன - (முன்போல் நல்ல) வழியில் சேர்ந்தன, உதியர் - சேரமன்னர்கள், கழலில் அடைந்தனர் - (அவன்) பாதங்களில் (அடைக்கலமாக) சேர்ந்தனர், செழியர் - பாண்டியர்கள், கடலில் அடைந்தனர் - கடலிலுள்ள தீவுகளில் (சென்று) மறைந்தனர்.

வி - ரை :—எல்லாத் திக்குகளும் அவன் ஆட்சிக் கடங்கின தென்பார், 'நிழலி லடைந்தன திசைகள்' என்றார். சேரர் அடைந்துய்ந்தமையும் பாண்டியர் ஒடி யுய்ந்தமையும் கசுஎ-ம் தாழிசையாலு மறியலாம். இவ்வரலாற்றை நஅக, நஅந-ம் தாழிசைகளிற் காண்க. கழல், கடல்—ஆகு பெயர்கள். (நகக)

**இதுவுமது**

உஎக. கருணையொ டுந்தன துபய கரமுத வும்பொருண் மழையின்
அரணிய மந்திர வனல்க ளவையுத வும்பெரு மழையே.

ப - ரை :—கருணையொடு - அருளோடு, தனது - முதற் குலோத்துங்கனுடைய, உபய கரம் - இரண்டு கைகளும், உதவும் - (தன்னை இரப்பவர்கட்கு) கொடுக்கும், பொருள் மழையின் - பொருளாகிய மழை போல், அரணியம் - காடுகளில், மந்திரம் - மந்திரங்களால் செய்யப்படும், அனல்கள் அவை - (யாக) நெருப்புக்களாகிய அவை, பெரு மழை உதவும் - பெரு மழை பெய்விக்கும்.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் கொடையைப் போல் (பருவந் தவறாமல்) பெருமழை பெய்யு மென்பதாம். முனிவர்கள் வேள்வித் தீயால் மழை வளஞ் சுரக்கு மென்பதை, 'மழைவளந் தரூஉ மழலோம் பாளன்' [மணிமே - ஙு - நசு] என்றதனுலும், இந்நூலின் கக, ருசo-ம் தாழிசைகளாலு முணர்க. 'அரணிய மந்திரவனல்' என்பதற்குத் தீக்கடை கோலால் உண்டாக்கப்பட்டு, மந்திரங்களால் செய்யப்படும் வேள்வித்தீ எனினுமாம். அரணி—தீக்கடைகோல். இப் பொருளில் அரணியம் என்பதிலுள்ள அம்—சாரியை; முற்கூறிய பொருளில் ஆரணியமென்பது அரணியமெனக் குறுகினது. (சo)

**இதுவுமது**

உஎஉ. பரிசில் ‡சு மந்தன கவிகள் பகடுசு மந்தன திறைகள்
$அரசுசு மந்தன விறைக ளவனிசு மந்தன புயமும்.

ப - ரை :—கவிகள் - கவிவாணர்கள், பரிசில் - (முதற் குலோத்துங்கன் தரும்) வெகுமதிகளை, சுமந்தன - சுமந்து செல்லலாயினர், திறைகள் - (அரசர் செலுத்தும்) பகுதிப் பொருள்களை, பகடு சுமந்தன- எருதுகள் சுமந்து வரலாயின, இறைகள் - அரசர்கள், அரசு சுமந்தன - அரசாட்சியைச் சுமக்கலாயினர், புயமும் - (முதற் குலோத்துங்கன்) தோள்களும், அவனி சுமந்தன - உலகத்தைச் சுமக்கலாயின.

வி - ரை :—அரசரனைவரும் முதற் குலோத்துங்கன் ஆட்சிக்குட்பட்டவ ராகையால் 'இறைகள் அரசு சுமந்தன' எனவும், அவன் உலகத்திற் கிறைவ னுதலால், 'அவனி சுமந்தன புயமும்' எனவும் கூறினர். பகடு—யானைக ளெனினுமாம். கவிகள், இறைகள்—பண்பாகு பெயர்கள். இவை பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் சுமந்தன என்னும் அஃறிணை முடிபேற்றன. இச்செய்யுள் சொற்பொருட் பின்வருநிலை யணியாம். (உபயாவ்ருத்தி தீபகம்).

பா-பே :— ‡ சுமந்தனர் கவிஞர், $ அரசர் சுமந்தனர் கழல்கள். (சக)

**இதுவுமது**

உஎங. விரித்த வாளுகிர்வி ழித்த ழற்புலியை
மீது வைக்கவிம யத்தினைத்
திரித்த கோலில்வளை வுண்டு *நீதிபுரி
செய்ய கோலில்வளை வில்லையே.

ப - ரை :—விரித்த - விரிக்கப்பட்ட, வாள் உகிர் - ஒளி பொருந்திய நகங்களையும், தழல் விழி - நெருப்புப் போன்ற கண்களையுமுடைய, புலியை - புலிக் கொடியை, மீது வைக்க - மேலே பதிக்க, இமயத்தினை - இமய மலையை, திரித்த கோலில் - திருப்பிய (செண்டாகிய) கோலில், வளைவு உண்டு——, நீதி புரி - நீதியைச் செலுத்தும், செய்ய கோலில் (முதற் குலோத்துங்கனுடைய) செங்கோலில், வளைவு இல்லை——,

வி - ரை :—இமயமலையில் புலிக்கொடி பதித்த இவன் முன்னோனாகிய கரிகாலன் செய்கை [தா - ௧௭அ - ௩௧அ] இவன் மேலேற்றிக் கூறப்பட்டது. செண்டாகிய கோல் வளைவுள்ள ஒருவகைக் கருவியாதலால், 'திரித்த கோலில் வளைவுண்டு' என்றார். 'செய்ய கோலில் வளைவில்லை' என்றது அவன் நீதி தவறாமல் ஆட்சி புரிந்தா னென்பதாம். பா - பே :—* நீதிபுனை. (௬௨)

**இதுவுமது**

உஎச. கதங்க ளிற்பொருதி றைஞ்சி டாவரசர்
கால்க ளிற்றளையு நூல்களின்
பதங்க ளிற்றலையு மன்றி வேறொருப
தங்க ளிற்றளைக ளில்லையே.

ப - ரை :—கதங்களின் - மிக்க கோபத்தோடு, பொருது - (முதற் குலோத்துங்கனுடன்) போர் புரிந்து, இறைஞ்சிடா - (அவனை) வணங்காத, அரசர் கால்களில்-அரசர்களுடைய கால்களில், தலையும் - (பூட்டிய) விலங்குகளும், நூல்களின் பதங்களில் - செய்யுட்களின் சொற்களிலுள்ள, தளையும் அன்றி - (வெண்டளை, ஆசிரியத் தளை முதலிய) தளைகளும் அல்லாமல், வேறு ஒரு பதங்களில் - வேறோர் இடங்களில், தளைகள் இல்லை - (சிறை செய்தல் முதலிய) பிணிப்புக்கள் இல்லையாம்.

வி - ரை :—பகை வேந்தர்களின் கால்களின் தளைகளும் செய்யுட்களின் யாப்புத் தளைகளு மன்றி, வேறு எவ்விதத் தளைகளு மின்றென்பதாம். கதங்கள் என்னும் பன்மை கோபத்தின் மிகுதியை யுணர்த்தினது. நூல்களின் பதங்களில் தளைகளாவன :—நேரொன் றாசிரியத்தளை, நிரையொன் றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை யென்னு மேழாம். தளை மூன்றிற்கும் விலங்கு, நின்ற சீரி னீற்றசையோடு வருஞ்சீரின் முதலசை ஒன்றியும் ஒன்றாமலும் வருவது, பிணிப்பு என முறையே பொருள் கொள்க; பதம்—சொற்கள், இடம்; 'வேறொரு பதங்களில்' என்றதற்குப் பிறர் கால்களில் எனினுமாம். 'பதங்களில் தளைக ளில்லை' என்றதனால், அந்நாட்டு மக்கள் ஒருவிதக் குற்றமும் புரியாமல் நல் லொழுக்க முடையவரா யிருந்தன ரென்பதாம். நூலென்றது காரியவாகு பெயராய்ச் செய்யுளை யுணர்த்தினது. ஒரு பதங்கள்—என்றது ஒருமையிற் பன்மைவந்த பால்வழுவமைதி. (௬௩)

இதுவுமது

உஎரு. மென்க லாபமட வார்கள் சிறடிமி
சைச்சி லம்பொலிவி ளைப்பதோர்
இன்க லாம்விளைவ தன்றி யெங்குமோரி
கல்க லாம்விளைவ தில்லையே.

ப-ரை:—மென் கலாபம் - இனிய மயில் போன்ற, மடவார்கள் - இளம் பெண்களினுடைய, சிறு அடி மிசை - சிறிய பாதங்களில், சிலம்பு ஒலி - (அணிந்த சிலம்புகளின் ஓசை, விளைப்பது - (அந்நாட்டில்) உண்டாக்குவதனால், ஓர் இன் கலாம் - ஒப்பற்ற இனிய மாறுபாடு, விளைவது அன்றி - உண்டாவதல்லாமல், ஓர் இகல் கலாம் - ஒருவகைப் பகைமையாகிய (உள் நாட்டு) கலகங்கள், எங்கும் - (அந்த நாட்டில்) ஓரிடத்தும், விளைவது இல்லை - உண்டாவதில்லை.

வி-ரை:—சிலம்புகள் உண்டாக்கும் மாறுபாடாவது :—அந்நாட்டு மக்கள் ஒருவிதக் குறைவும் எவ்விதப் பகையுமின்றி அமைதியாயிருக்க, அவை அவ்வாறிராமல் ஒலி செய்தலாம். அவ்வாறவை ஒலிக்குங் காலத்தும் செவிக்கின்பம் பயத்தலால், 'இன்கலாம்' என்றார். 'அஞ்சிலம்பே வாய்விட்டரற்றுவன' [நளவெ-சுயம்வர-கரு] என்றார் புகழேந்தியாரும். கலாம்—மாறுபாடு; 'கண்ணிய வீணை வாட்போர் கலாமின்று காண்டும்' [சீவகசி-சுஉ0] என்றமை காண்க. முன்பு சீர்கேடுற்ற நாடு [தாழி-உருஅ, உருக, உசு0] இவன் ஆட்சியில் பசியும் பகையும் நீங்கி மேன்மை யடைந்தமையால், 'இகல் கலாம் விளைவதில்லை' என்றார். கலாபம்—அரையிலணியும் ஓர் வகை யாபரண மெனினுமாம். 'எண்கோவை மேகலை காஞ்சி யெழுகோவை, பண்கொள் கலாபம் பதினாறு' [சிலப்-ச-ந0, அடியார்க்கு நல்லார் மேற்கோள்] என்றதனால், கலாபத்தின் தன்மை யறிக. இகல் கலாம் - என்றதற்குப் பகைமையாகிய மாறுபாடு எனினுமாம். இம்மூன்று செய்யுட்களிலும் ஓரிடத்துள்ள பொருள் பிறிதோரிடத்தில்லையென ஒழித்தலால், இவை ஒழித்துக் காட்டணியாம். [ப்ரஸங்காலங்காரம்]. (சச)

முதற் குலோத்துங்கன் பொழுது போக்கல்

உஎசு. வருசெருவொன் றின்மையினான் மற்போருஞ்
சொற்புலவோர் வாதப் போரும்
இருசிறைவா ரணப்போரு மிகன்மதவா
ரணப்போரு மினைய கண்டே.

ப-ரை:—வரு செரு - (தான்) செய்யத்தக்க போர், ஒன்று இன்மையினால் - யாதொன்றும் இல்லாமையால், மல் போரும் - (வீரர்கள் புரியும்) மல் யுத்தமும், சொல் - (சிறப்பித்து) சொல்லப்பட்ட, புலவோர் - வித்வான்களின், வாதம் போரும் - வாக்கு வாதப் போரும், இரு சிறை - இரண்டு சிறகுகளையுடைய, வாரணம் போரும் - கோழிகளின் சண்டையும், இகல் - வலிமையுடைய, மதம் வாரணம் போரும் - மதத்தைப் பொழியும் யானைகளின் சண்டையுமாகிய, இனைய கண்டு - இவை போன்றவற்றைப் பார்த்து,

வி-ரை:—'வரு செருவொன் றின்மையினால்' என்றதனால், முதற்குலோத்துங்கன் தன் பகைவேந்தரனைவரையும் வென்று தனக்குக் கீழ்ப்படுத்திக் கொண்டமை விளங்கும். மற்போர் :—ஒருவகை ஆயுதமுமின்றிக் கையால் செய்யும் போர். தற்காலத்தில் இதனைக் குஸ்தி, குத்துச் சண்டை யென்பர்

புலவோர் சொல் வாதப்போர் என்றியைத்து வித்துவான்களின் சொற்களாகிய வாதப் போர் எனினுமாம்; புலவோர்-அறிவுடையோர், புலம்—அறிவு; வாரணம்—இது சங்கு, கோழி, கடல், யானை யென்னும் பல பொருளை யுணர்த்துமேனும், 'இரு சிறை வாரணம்' என்றதனால் கோழியையும், 'மத வாரணம்' என்றதனால் யானையையு முணர்த்தினது [நன்-ருகூ0]. 'புகர்முக வாரண நெடுங்கூ விளிப்ப, பொறிமயிர் வாரணங் குறுங்கூ விளிப்ப, [மணிமே - எ - ககரு, கககூ] எனவும், 'முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய, புறஞ்செவி வாரணம் புக்கனர்' [சிலப். க0-உசஎ-உசஅ] எனவும் வருமாறு காண்க. இனைய என்றதனால் கடாப்போர், சிவற்போர் முதலியவற்றையுங் கொள்க. ஒன்று—இதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. இனைய்—குறிப்பு வினையாலணையும் பெயர். உம்மைகள் நான்கும் எண்ணின்கண் வந்தன. (சரு)

இதுவுமது

உஎஎ. கலையினொடுங் கலைவாணர் கவியினொடும்
இசையினொடுங் காதன் மாதர்
முலையினொடு மனுநீதி முறையினொடு
மறையினொடும் பொழுது போக்கி.

ப-ரை:—கலையினொடும் - (ஆறு) சாஸ்திரங்களின் ஆராய்ச்சியாலும், கலை வாணர் - நூல்களை யுணர்ந்த புலவர்களினுடைய, கவியினொடும் - பாடல்களின் ஆராய்ச்சியாலும், இசையினொடும்-சங்கீதத்தின் ஆராய்ச்சியாலும், காதல் மாதர் -(தனது) அன்பிற்குரிய பெண்களின், முலையினொடும்- கொங்கைகளி னின்பத்தாலும், மனு நீதி - மனு நீதியிற் சொல்லப்பட்ட, முறையினொடும் - நீதிகளின் ஆராய்ச்சியாலும், மறையினொடும் - வேதங்களின் பயிற்சியாலும், பொழுது போக்கி - (தன்) காலத்தைக் கழித்து,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் சாஸ்திர ஆராய்ச்சி முதலியவற்றால் உல்லாசமாய்ப் பொழுது போக்கின னென்பதாம் ஒடு உருபுகளை ஆலுருபுகளாகத் திரித்துப் பொருள் கொள்க. 'ஊசியோடு குயின்ற தூசும் பட்டும்' [நன் - உசுஎ; இராமாநு - உரை மேற்கோள்] என்பதிற் காண்க மறை—முதனிலைத் தொழிற் பெயர்; இது தொழிலாகுபெயராய் வேதங்களை யுணர்த்தினது. தன்கண் பல விஷயங்களை மறைத்துக்கொண்டிருப்ப தென்பதாம். இவ்விரு தாழிசைகளிலும் உவகைச் சுவை யுள்ளமை காண்க. (சசு)

பரி வேட்டையாட நினைத்தல்

உஎஅ. காலாற்றண் டலையுழக்குங் காவிரியின்
கரைமருங்கு வேட்டை யாடிப்
பாலாற்றங் கரைமருங்கு பரிவேட்டை
ஆடுதற்குப் பயண மென்றே.

ப - ரை :—தண்டலை - சோலைகளை, காலால் - (தன்) கால்வாய்களால், உழக்கும் - சிதைக்கும், காவிரியின் - காவேரியாற்றின், கரை மருங்கு - கரைக்கு அருகில், வேட்டை ஆடி——, பாலாறு அம் கரை மருங்கு - (பின்பு) பாலாற்றங் கரைக்கு அருகில், பரி வேட்டை ஆடுதற்கு - குதிரைமேலேறி வேட்டை ஆடுவதற்கு, பயணம் என்று - பிரயாணம் செய்வோமென்று சொல்லி,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் காவிரியாற்றங் கரையில் வேட்டையாடின பின் பாலாற்றங் கரையில் வேட்டையாடக் கருதினு னென்பதாம். காவிரி நதி மேற்குத் தொடர்ச்சி மலையை யடுத்த குடகில் தோன்றி மைசூர்

நாட்டிலும், கோயமுத்தூர், சேலம், திருச்சி, தஞ்சை என்னும் ஜில்லாக்களிலும் பாய்ந்து வங்காளக் குடாக்கடலில் விழுகிறது. இதன் நீளம் சுமார் ௪௮௦ மைலாம். பாலாற்றைப்பற்றி ௩௬௭-ம் தாழிசையிற் காண்க. தண்டலை யுழக்கலாவது:— காவிரியாற்றின் கால்வாய்கள் நீர்ப்பெருக்கால் சோலையிலுள்ள மரஞ் செடிகளை வேரோடு பெயர்த்து ஈர்த்துக்கொண்டோடுதலாம். தண்டலை = தண் + தலை, குளிர்ச்சியாகிய விடத்தை யுடையது; பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பாலாற்றங் கரை—இதில் அம் சாரியை, அழகெனினுமாம். பரி வேட்டை—ஏழனுருபும் பயனு முடன்தொக்க தொகை. (௪௭)

வேட்டையாடப் படைத் திரளல்

௨௭௯. முரசறைகென் றருளுதலு முழுதுலகும்
ஒருநகருட் புகுந்த தொப்பத்
திரைசெய்கட லொலியடங்கத் *திசைநான்கிற்
படைநான்குந் திரண்ட வாங்கே.

ப - ரை:—முரசு - முரச வாத்தியத்தை, அறைக - அடிப்பீராக, என்று அருளுதலும் - என்று (குலோத்துங்கன்) கட்டளையிட்டதும், ஆங்கு - அப்பொழுது, உலகு முழுதும் - உலகத்திலுள்ளவர்கள் எல்லாரும், ஒரு நகருள் - (சோழபுரமாகிய) ஒப்பற்ற நகரத்தில், புகுந்தது ஒப்ப - புகுந்தாற் போல, திரை செய் - அலைகளை வீசுகின்ற, கடல் ஒலி அடங்க - கடலோசை அடங்கும்படி, நான்கு திசையின் - நான்கு திக்குகளிலிருந்து, நான்கு படையும் - நால்வகைச் சேனைகளும், திரண்ட - (பேரிரைச்சலோடு) ஒன்று சேர்ந்தன.

வி - ரை:—படை நான்காவன:—யானைப் படை, குதிரைப் படை, தேர்ப் படை, காலாட்படை என்பனவாம்; யானைகள் பிளிறு மோலியும், தேர்கள் விரைந்தோடு மோசையும், குதிரைகள் கனைத்து மார்ப்பும், காலாட்களின் வீர முழக்கமும் கடலோலியினு மிக்கிருந்தன வென்பார், 'திரைசெய் கடலொலி யடங்க' என்றார். 'முழுதுலகும் ஒரு நகருட் புகுந்தது' என்றது நால்வகைப் படைகளின் மிகுதியைக் குறித்தது. அறைகென்று - அறைக என்று, நிலைமொழியில் அகரம் தொக்கு நின்றது. அருளுதலும்—உம் விகுதி பெற்ற இறந்த கால வினையெச்சம். முழுதுலகும், படை நான்கும், இவற்றிலுள்ள உம்மைகள் முற்றுப் பொருளன. திரண்ட—அஃறிணைப் பலவின் படர்க்கை வினைமுற்று. இதில் உவமையணி யிருத்தல் காண்க. பா - பே:—* திரை நான்கில்.

(௨௭௬) இனைய கண்டு (௨௭௭) பொழுது போக்கி (௨௭௮) பயணமென்று (௨௭௯) அருளுதலும், திரண்ட என முடிக்க. (௪௮)

வேட்டையாடப் புறப்படல்

௨௮௦. அழகின்மே லழகுபெற வணியனைத்தும்
அணிந்தருளிக் கணித நூலிற்
பழகினர் தெரிந்துரைத்த பழுதறுநாட்
பழுதற்ற பொழுதத் தாங்கே.

ப - ரை:—அழகின் மேல் - (இயற்கையாகிய தனது உடல்) அழகால், அழகு பெற - (அணிகள்) அழகு பெற்று விளங்கும்படி, அனைத்து அணியும் - எல்லா ஆபரணங்களையும், அணிந்தருளி - (முதற் குலோத்துங்கன்) அணிந்துகொண்டு, கணிதம் நூலில் - சோதிட நூலில்,

பழகினர்-பழகின சோதிட அறிஞர்கள், தெரிந்து உரைத்த - (ஆராய்ந்து) அறிந்து சொல்லிய, பழுது அறு நாள் - குற்றமற்ற நல்ல நாளில், பழுது அற்ற - ஒருவிதக் குற்றமுமில்லாத, பொழுதத்து - (நல்ல) வேளையில்,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் தன்னை அலங்காரம் செய்துகொண்டு நல்ல வேளையில் வேட்டையாடப் புறப்படலானான் என்பதாம். அழகினால் அணிகள் அழகு பெறுதலை 'அழகெனு மணியுமோ ரழகு பெற்றவே' [கம்பரா-மிதிலைக்கா-கூச] எனவும், 'பூணுக் கழகளிக்கும் பொற்கொடியை' [நளவெ-சுயம்-கருக] எனவும் வருமாற்றானறிக. பொழுதத்து—இதிலுள்ள அத்து—சாரியை; ஆங்கு—ஏ—அசைகள். (சக)

இதுவுமது

உ௪க. அனக தானதரு மங்கண்மறை மன்னர் பெறவே
அபய தானமப யம்புகுது மன்னர் பெறவே
கனக தானமுறை நின்றுகவி வாணர் பெறவே
கரட தானமத வாரணமு மன்று பெறவே.

ப - ரை :—அன்று - (முதற் குலோத்துங்கன் வேட்டைக்குப் புறப்பட்ட) அப்போது, மறை மன்னர் - வேதத்தை யோதும் பிராமணர்கள், அனக தானம் - பாவமில்லாத தானங்களையும், தருமங்கள் - (ஏனையோர்) தருமங்களையும், பெற - பெற்றுக்கொள்ளவும், அபயம் - அபயம் என்று, புகுது மன்னர் - (தன்னிடம் அடைக்கலம்) புகும் அரசர்கள், அபயம் தானம் - அபயமாகிய தானத்தை, பெற - பெற்றுக்கொள்ளவும், கவி வாணர் - கவிகளைப் பாடும் புலவர்கள், முறை நின்று - (தத்தந் தகுதிக் கேற்ப) முறையில் நின்று, கனக தானம்-பொற் குவியலாகிய தானத்தை, பெற - பெற்றுக்கொள்ளவும், மதம் வாரணமும் - மதத்தைப் பொழியும் யானைகளும், கரடம் - மதச்சுவடுகளிலிருந்து பெருகும், தானம் - மத நீரை, பெற - அடையவும்,

வி - ரை :—அனக தானம் என்றது உத்தம தானத்தை; 'அறத்தி னாற்றிய வரும்பெரும் பொருளை, புறத்துறை குற்றமூன் றறுத்தநற் றவர்க்கு, கொள் கெனப் பணிந்து குறையிரந் தவர்வயின், உள்ளமுவந் தீத லுத்தம தானம்' என்றதனால், உத்தம தானத் தியல்பை யுணர்க. முதற் குலோத்துங்கன் ஆட்சிக்கு முன், தக்க உணவின்றி மெலிந்து கிடந்த யானைகள் இப்போது தக்க உணவு பெற்று மதஞ் சொரியலாயின வென்பார், 'கரட தானம்........: அன்று பெற' என்றார். கைம்மாறு கருதாமல் எல்லா வுரிமையோடும் பிறர்க்குப் பொருள்களை வழங்கல் தானமாம்; அவை கோதானம், பூதானம் முதலியன. பலர்க்கும் பயன்படும்படி பொதுவாய்ச் செய்யும் நற் காரியங்கள் அனைத்தும் தருமமாம்; அவை தரும சத்திரம், தரும பாடசாலை, தரும வைத்தியசாலை முதலியவற்றை யேற்படுத்தலாம். அபயம் = அ + பயம்; பயமின்மை யென்பதாம். அதாவது, அஞ்சிவந் தடுத்தோரை அஞ்சேலென ஆதரித்தலாம். (ருo)

யானை யேறிச் செல்லல்

உ௪உ. மற்ற வெங்கடக ளிற்றினுத யக்கி ரியின்மேன்
மதிக வித்திடவு தித்திடும ருக்க னெனவே
கொற்ற வெண்குடைக விப்பமிசைகொண்டு கவரிக்
குலம திப்புடைக வித்தநில வொத்து வரவே.

ப - ரை :—உதய கிரியின் மேல் - உதய மலையின் மேல், மதி கவித்திட - சந்திரன் போர்த்துக் கொண்டிருக்க, உதித்திடும் - (காலையில்) தோன்றும், அருக்கன் என - இளஞ் சூரியனைப் போல், மற்ற - வேறாகிய, கடம் வெம் களிற்றின் மிசை - மதத்தைப் பொழியும் கொடிய யானையின் மேல், கொண்டு - (முதற் குலோத்துங்கன்) ஏறிக்கொண்டு, கொற்றம் - வெற்றியையுடைய, வெண் குடை - வெண்மையாகிய குடையானது, (மிசை) கவிப்ப - (தன் மேலே) கவித்துக் கொண்டிருக்க, கவரி குலம் - வெண்சாமரைக் கூட்டங்களானவை, மதி புடை - சந்திரனுடைய (இரண்டு) பக்கங்களில், கவித்த - கவித்துக்கொண் டிருக்கின்ற, நிலவு ஒத்து வர - நிலாவொளியை ஒத்துத் தோன்றவும்,

வி - ரை :—உதய கிரியில் தோன்றும் இளஞ் சூரியனைப்போல், முதற் குலோத்துங்கன் யானைமேல் வீற்றிருந்தான்; அச்சூரியன்மேல் சந்திரன் கவித்திருப்பது போல், அவன்மேல் வெண்குடை கவித்திருந்தது; சந்திரன் பக்கங்களில் நிலாவொளி சூழ்ந்திருத்தல் போல், அவனுக்கிருபாலும் கவரிகள் அசைந்தன வென்பதாம். 'நீல மால்வரை தவழ்தரு கதிர்நிலாக் கற்றை, போல வேயிரு புடையினுஞ் சாமரை புரள, கோல மாமதி குறைவற நிறைந்தொளி குலாவ, மேல்நி வந்தென வெள்ளியந் தனிக்குடை விளங்க' [கம்பரா-அகலிகை-கக] எனக் கம்பரும் சாமரைக்கு நிலா வொளியையும் குடைக்குச் சந்திரனையும் உவமை கூறியுள்ளமை காண்க. பட்டத்துக் களிறுதல் கருதி, 'மற்ற' எனப் பிரித்துக் கூறினர். உதயகிரி யானைக்கும், இளஞ் சூரியன் முதற் குலோத் துங்கனுக்கும், சந்திரன் வெண் குடைக்கும், நிலாவொளி வெண் சாமரைக்கும் உவமையாம். இச்செய்யுள் இல்பொரு ளுவமை யணியாம். (௫௧)

பல்லிய முழங்கச் செல்லல்

உ௮௫. ஒருவ லம்புரித ழங்கொலிமு ழங்கி யெழவே
உடன்மு ழங்குபணி லம்பலமு ழங்கி யெழவே
பருவம் வந்துபல கொண்டல்கண் *முழங்கி யெழவே
பலவி தங்களொடு பல்லியமு ழங்கி யெழவே.

ப - ரை :—ஒரு வலம்புரி - ஒப்பற்ற வலம்புரிச் சங்குகள், தழங்கு ஒலி - ஒலிக்கும் ஓசை, முழங்கி எழ - ஆரவாரித்தெழவும், உடன் - (அந்த வலம்புரிச் சங்குகள்) உடன், முழங்கு - ஒலிக்கின்ற, பல பணிலம்- (வேறு) பல சங்குகளின் ஒலி, முழங்கி எழ - ஆரவாரித்தெழவும், பருவம் வந்து - கார்காலம் வந்ததால், பல கொண்டல்கள் - பல மேகங்கள், முழங்கி எழ - ஆரவாரித் தெழுவது போல, பல் இயம் - பலவகையாகிய வாத்தியங்கள், பல விதங்களொடு - பல வகையாய், முழங்கி எழ - ஆரவாரித் தெழவும்,

வி - ரை :—வலம்புரி சிறந்த சங்காதல் கருதி, 'ஒரு வலம்புரி' எனப்பட்டது. அதனை, 'இப்பியா யிரமே சூழ்ந்த திடம்புரி யென்று கூறும், ஒப்பில்சங் காயி ரஞ்சூழ் வலம் புரியென் றோதும்' [சூடாம-௩-௭௬] என்றதனு லறிக. பல்லியமாவன :—தோற் கருவி, துளைக் கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்பன. போல வென்னுஞ் சொல் இசை யெச்சமாய் வருவித் துரைக்கப்பட்டது. இச்செய்யுள் சொற்பொருட் பின்வருநிலை யணியாம்.

பா - பே :—* முழங்கு மெனவே. (௫௨)

பலவகை ஒலி முழக்கங்கள்

உ௮௪. மன்னர் †சீர்சயமி குத்திடைவி டாத வொலியும்
மறைவ லாளர்மறை நாள்வயின்வ ழாதவொலியும்
இன்ன மாகடன்மு ழங்கியெழு கின்ற வொலியென்
றிம்ப ரும்பரறி யாதபரி செங்கு மிகவே.

ப - ரை:—நாள் வயின் - (முதற் குலோத்துங்கன் வேட்டைக்குப் புறப்பட்ட நல்ல) நாளில், மன்னர் - (பல தேயத்து) அரசர்களின், சீர் சயம் - சிறப்பாகிய சய வென்னும், இடை விடாத - இடையில் நீங்காத, மிகுத்த ஒலியும் - அதிகரித்த ஓசையும், மறை வலாளர் - வேதங்களில் வல்லவராகிய பிராமணர்களால் ஓதப்படும், மறை - (நான்கு) வேதங்களினுடைய, வழாத ஒலியும் - குற்றமில்லாத ஓசையும், இன்ன மா கடல் - இன்ன பெரிய சமுத்திரத்தில், முழங்கி எழுகின்ற - ஆரவாரித்து எழுகின்ற, ஒலி என்று - ஓசை யென்று, இம்பர் - இந்த உலகத்திலுள்ளவர்களும், உம்பர் - தேவலோகத்திலுள்ளவர்களும், அறியாத பரிசு-அறியாத விதமாய், எங்கும் மிக - எல்லா விடங்களிலும் அதிகமாகவும்,

வி - ரை:—'இன்ன மா கடல்......ஒலி' என்றது, நாற்றிசைக் கடல்களில் இன்ன கடலொலி யென்பதாம்; இது ஒலியின் மிகுதியைக் குறித்தது. மா கடல்—கரிய கடலெனினுமாம்; மா—கருமை. ஒலியும் என்பதிலுள்ள உம்மைகள் எண்ணுப் பொருளிலும், எங்கும் என்பதிலுள்ள உம்மை முற்றுப் பொருளிலும் வந்தன. மிகுத்த என்னும் பெயரெச்சத்திலுள்ள அகரந் தொக்கு நின்றது. சயம் மிகுத்து—சய வென்னும் ஒலி மிகுந்து என வினை யெச்சமாய்ப் பொருள் கோடலுமாம். இம்பரும்பர்—உம்மைத் தொகை.

பா - பே:—† சீர்செய மிகுந்தடை. (௫௩)

ஏழிசை வல்லபி உடனிருந்தமை

உ௮௫. வாழி சோழகுல சேகரன்வ குத்த விசையின்
மதுர வாரியென லாகுமிசை மாத ரிதெனு
‡ ஏழு பாருலகொ டேழிசைவ ளர்க்க வுரியாள்$
யானை மீதுபிரி யாதுடனி ருந்து வரவே.

ப - ரை:—சோழர் குல சேகரன் - சோழ வமிசத்திற்கு மகுடம் போன்றவனாகிய முதற் குலோத்துங்கன், வாழி - வாழ்க (என்று), வகுத்த - (அவன்) ஏற்படுத்திய, இசையின் - இராகங்களை, மதுரம் வாரி- இனிமையாகிய வெள்ளம், எனல் ஆகும் - என்று பாடத் தகும், இசை மாது - இராகங்களில் வல்லவளும், பார் - பூமியிலுள்ள, ஏழு உலகொடு - ஏழு வகையாகிய தீவுகளிலுள்ளவர்களையும், ஏழ் இசை - ஏழு வகையாகிய இராகங்களையும், வளர்க்க உரியாள் - வளர்க்கத் தக்கவளுமாகிய ஏழிசை வல்லபி, அரிது எனு - (அவனை விட்டுத் தனித்திருத்தல்) அருமையாகுமென்று, யானை மீது - (அவன் ஏறி யிருந்த) யானையின் மேல், பிரியாது - (அவனை விட்டு) நீங்காமல், உடன் இருந்து வர - (அவனோடு) ஒன்றாக உட்கார்ந்து வரவும்,

$ 'உரியாள்' என்பது திரு. மு. இராகவையங்கார் அவர்கள் கொண்ட பாடமாம். இதனை ஆராய்ச்சித் தொகுதி ௪௧௮-ம் பக்கத்திற் காண்க.

வி - ரை :—'சோழ குலசேகரன் வகுத்த இசை' என்றதனால், இவன் இசையில் வல்லவனென்பது விளங்கும். சேகரம்—மகுடம். குலசேகரன்—(தன்) குலத்திற்கு மகுடம்போல் உயர்ந்தவன் என்பதாம். 'தான் வகுத்தன தன்னெதிர் பாடியே' [தா-௩௨௪] என்பர் பின்னும். ஏழிசை வல்லபியும் தன் பெயருக் கேற்ப, இனிய இசைபாட வல்லவ ளென்பதும் இச்செய்யுளால் விளங்குகிறது. ஏழிசையாவன :—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. இவற்றிற்கு முறையே உரிய எழுத்துக்கள் ஸ, ரி, க, ம, ப, த, நி என்பன. ஏழ நீவுகளை சகூக-ம் தாழிசையிற் காண்க. உலகு—இடவாகுபெயர். பா-பே :—‡ ஏழு பாருலகி னேழிசைகள் சூழவருவார். (௫௪)

**தியாகவல்லி சென்றமை**

உ௮௬. பொன்னின் மாலைமலர் மாலைபணி மாறியுடனே
புவனி காவலர்க டேவியர்கள் †சூழ்பி டிவரச்
சென்னி யாணையுட ளுணையைந டத்து முரிமைத்
தியாக வல்லிநிறை செல்வியுடன் *மல்கி வரவே.

ப - ரை :—புவனி காவலர்கள் - பூமியை யாளும் அரசர்களின், தேவியர்கள் - மனைவியர்கள், பொன்னின் மாலை - பொன்னாலாகிய மாலைகளையும், மலர் மாலை - மலர்களால் தொடுத்த மாலைகளையும், பணி மாறி - (திருத்தும்) தொழில் புரிந்து, சூழ் - சூழ்ந்துள்ள, பிடி - பெண் யானைகளின் மேல், உடன் வர - (தன்) உடன் வரும்படி, சென்னி - (முதற் குலோத்துங்க) சோழனுடைய, ஆணை உடன் - கட்டளையோடு, ஆணையை நடத்தும் - (தன்) கட்டளையையும் செலுத்தும், உரிமை - உரிமையையுடைய, தியாகவல்லி - தியாகவல்லியென்னும், நிறை செல்வி - நிறைந்த செல்வமுடையவள், உடன் மல்கி வர - (முதற் குலோத்துங்கன்) உடன் நெருங்கி வரவும்,

வி - ரை :—முதற் குலோத்துங்கனைப் பல வேந்தர்கள் சூழ்ந்து வந்தது போல் அவன் பட்டத்து மனைவியாகிய தியாகவல்லியை அவ்வேந்தர் மனைவியர் சூழ்ந்து வந்தன ரென்க. இம் மன்னவனுக்கு மூவர் மனைவியரிருந்தனர். அவர்களில், இவன் மாமன் மகளாகிய மதுராந்தகி யென்பவள் மூத்த மனைவியும் தியாகவல்லி என்பவள் இரண்டாம் மனைவியும், ஏழிசை வல்லபி யென்பவள் மூன்றும் மனைவியு மாவார். மதுராந்தகிக்குப் பின் தியாகவல்லி பட்டத்து மனைவியானாள். ஏழிசை வல்லபி கடைசிவரை சாதாரண மனைவியாகவே இருந்தாள் [சோழவம்-பக்-௨௯]. மதுராந்தகியைப்பற்றி இந்நூலில் யாதொன்றுஞ் சொல்லப்படாமையால், அவள் கலிங்கப் போருக்கு முன்பே உயிர்துறந் திருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. (௫௫)

பா - பே :—† சூழ்புடை வர, * நல்கி வரவே.

**மகளிரும் மன்னரும் சூழ்ந்திருத்தல்**

உ௮௭. பிடியின் மேல்வருபி டிக்குலம நேக மெனவே
பெய்வ ளைக்கைமட மாதர்பிடி மீதின் வரவே
முடியின் மேன்முடிநி ரைத்துவரு கின்ற தெனவே
முறைசெய் மன்னவர்கள் பொற்குடை †கவித்துவரவே.

ப - ரை :—பிடியின் மேல் - பெண் யானைகளின் மேல், வரு - (ஏறி) வருகின்ற, அநேகம் பிடி - பல பெண் யானைகளின், குலம் என - கூட்டம் போல, வளை பெய் கை - வளையல்களை யணிந்த கைகளையுடைய, மடம் மாதர் - (அரசர்களின்) இளம் பெண்கள், பிடி மீதின் வர - பெண் யானை

களின் மேல் (ஏறி) வரவும், முடியின் மேல் - (அரசர்களின்) மகுடங் களின் மேல், முடி - (வேறு) மகுடம், நிரைத்து - வரிசையாய், வருகின்றது என - வருகின்றது போல, முறை செய் - நீதியைச் செலுத்தும், மன்னவர்கள் - அரசர்கள், பொன் குடை - அழகிய குடைகளை, கவித்து வர - (மேலே) கவித்துக்கொண்டு வரவும்,

. வி - ரை :—பெண் யானைகளின் மேல் பெண் யானைகள் வருவது போல, மகளிர் பெண் யானைகளின்மேலேறி வந்தனர்: மகுடங்களின்மேல் மகுடங்கள் வருவது போல், அரசர்கள் தங்கள் மகுடங்களின்மேல் குடைகளைப் பிடித்து வந்தன ரென்பதாம். பிடி—இதன் ஆண்பால் களிறு: பெய் வளை—வினைத் தொகை; என—உவம உருபிடைச்சொல், ஏகாரம் நான்கும் ஈற்றசைகள்.

பா - பே :—† விரித்து வரவே. (ருசு)

முதற் குலோத்துங்கனோடு மன்னரும் படைகளும்

உஅஅ. யானை மீதுவரும் யானையும நேக மெனவே
அடுக ளிற்றின்மிசை கொண்டரச நேகம்வரவே
சேனை மீதுமொரு சேனைவரு கின்ற தெனவே
தெளிப டைக்கலனி லாவொளிப டைத்துவரவே.

ப - ரை :—யானை மீது - ஆண் யானைகளின் மேல், வரும் - (ஏறி) வரும், அநேகம் யானையும் என - (வேறு) பல ஆண் யானைகளைப்போல், அடு களிற்றின் மிசை - (பகைவரை) கொல்லும் ஆண் யானைகளின்மேல், கொண்டு - (ஏறி) கொண்டு, அநேகம் அரசு வர - பல அரசர்கள் வரவும், சேனை மீதும் - சேனைகளின் மேலும், ஒரு சேனை - (வேறு) ஒரு சேனை, வருகின்றது என - வருகின்றது போல, தெளி - ஒளியை வீசும், படைக் கலன் -(பலவகை) ஆயுதங்கள், நிலா ஒளி-சந்திரனைப் போன்ற ஒளியை, படைத்து வர - உண்டாக்கி வரவும்,

வி - ரை :—ஆண் யானைகளின்மேல் ஆண் யானைகள் வருதல் போல், அரசர்கள் ஆண் யானைகளின்மேல் ஏறி வந்தனர்: சேனைகளின் மேல் சேனைகள் வருவதுபோல் (வீரர்களின் கைகளில்) பலவகைப் படைகள் ஒளிவீசி விளங்கின வென்பதாம். ஆயுதங்களின் மிகுதியைக் கருதி, 'சேனை மீது மொரு சேனை வருகின்றதென' என்றார். அவை கூர் மழுங்காமல் நன்கு தீட்டி நெய் பூசப்பட்டுள்ளமையால் ஒளி வீசலாயின வென்க. தெளி—ஒளி, இதனை 'தெளி வளர் வான் சிறை' [திருக்கோ-கசு] என்றதனு லறிக. 'தெளி படைக்கலன்' சந்தவின்பப் பொருட்டு வலியியல்பாயிற்று. அரசு—பண்பாகு பெயர். படைக் கலன்—மொழியிறுதிப் போலி. நிலா வொளி—உவமைத் தொகை. (ருஎ)

முரசொலியும் கொடி நிரையும்

உஅசு. முகிலின் மேன்முகின்மு ழங்கிவரு கின்ற தெனவே
மூரி யானைகளின் மேன்முரச திர்ந்து வரவே
துகிலின் மேல்வருது கிற்குலமு மொக்கு மெனவே
தோகை நீள்கொடிகண் மேன்முகிலொ டுங்கி வரவே.

ப - ரை :—முகிலின் மேல் - மேகங்களின் மேல், முகில் - (வேறு) மேகங்கள், முழங்கி - பேரொலி செய்து கொண்டு, வருகின்றது என - வருகின்றது போல, மூரி யானைகளின் மேல் - பெரிய யானைகளின் மேல், முரசு அதிர்ந்து வர - முரச வாத்தியங்களின் ஒலி முழங்கி வரவும்,

துகிலின் மேல் - துகிற் கொடிகளின் மேல், வரு துகில் - வருகின்ற (வேறு) துகிற் கொடிகளின், குலமும் - கூட்டத்தையும், ஒக்கும் என - ஒப்பாகு மென்று சொல்லும்படி, தோகை - ஆடையாலாகிய, நீள் கொடிகள் மேல்-நீண்ட கொடிகளின்மேல், முகில் - மேகங்கள், தொடங்கி வர - தொடர்ந்து வரவும்,

வி - ரை :—மேகங்களின் மேல் மேகங்கள் முழங்கி வருதல் போல், யானைகளின்மேல் முரசங்கள் முழங்கலாயின; துகிற்கொடிகளின் மேல் துகிற் கொடிகள் வருதல் போல், அவைகளின் மேல், மேகங்கள் தொடரலாயின வென்பதாம். முகிலொலியை முரச வொலிக் குவமை கூறுதலை, 'முழங்கின முகிலென முரசமே' [தக்கயா-ருஙo] என்றதனுலறிக. 'கொடிகண் மேன் முகி ளுடங்கிவர' என்றதற் கேற்ப, 'கொடியோடு தொடக்கிய கொண்மூவெல்லாம்' [அதிகாயன் வதை-உங] என்ருர் கம்பரும். தோகை—முன்ருனை; இது சினையாகு பெயராய்க் கொடிச்சீலையை யுணர்த்தினது. (ருஅ)

மகளிர் தேரிற் செல்லல்

உகூo. தேரின் மீதுவரு தேர்களுமநேக மெனவே
செம்பொன் மேகலைநி தம்பநிரை தேரின் வரவே
பாரின் மீதுமொரு பாருளது போலு மெனவே
படல தூளியுநிமெ ழுந்திடையின் மூடி வரவே.

ப - ரை :—தேரின் மீது வரு - தேர்களின் மேல் (ஏறி) வருகின்ற, அநேகம் தேர்கள் என - பல தேர்களைப் போல, செம் பொன் - செம் பொன்னுலாகிய, மேகலை நிதம்பம் - மேகலை யென்னும் ஆபரணத்தை யணிந்த நிதம்பங்கள், நிரை தேரின் வர - வரிசையாகிய தேர்களின் வரவும், பாரின் மீதும் - (இந்த) பூமியின் மேலும், ஒரு பார் - (வேறு) ஒரு பூமி, உளது என - உண்டு என்று (கண்டோர்) சொல்லும்படி, படலம் தூளியும் - கூட்டமாகிய புழுதியும், எழுந்து - (மேலே) கிளம்பி, இடையில் - (ஆகாயத்துக்கும் பூமிக்கும்) நடுவில், மூடி வர - (ஒரு பொரு ளும் புலப்படாமல்) போர்த்து வரவும்,

வி - ரை :—தேர்களின் மேல் தேர்கள் வருவது போல், மகளிர் நிதம்பங் கள் தேர்களின் மேல்வரலாயின. பூமியின்மேல் பூமி யிருத்தல்போல், புழுதி யெங்கும் நிரம்பின தென்பதாம். உஅஎ-ம் தாழிசையில் மகளிர் பிடிமேற் சேறலையும், இங்குத் தேர்மேற் சேறலையும் ஆசிரியர் கூறியிருத்தலால், அவர்கள் குதிரை மேற் சேறலையும் உபலக்கணத்தாற் கொள்க. மேகலை—இது முப்பத் திரண்டு வடத்தினுற் செய்த விரிசிகை யென்னும் மேகலையாம். இதனைத் துகிலுக்குள் அணிதலு முண்டு. 'பிறங்கிய முத்தரை முப்பத் திருகாழ், நிறங் கிளர் பூந்துகி னீர்மையி னுடீஇ' [சிலப்-சு-அஎ-அஅ] என்றமையும் அதன் உரையும் இங்குக் கவனிக்க. 'அல்குலிற் பரந்த மேகலை' [உண்டாட்டுப்-ருo] என்ருர் கம்பரும். சேனைகள் சென்ற விரைவால் எழுந்த தூளி எங்கும் போர்த்த தென்பர். 'பாரின் மீது......மூடிவர' என்ருர். போலும்—ஒப்பில் போலி. இந்நான்கு செய்யுட்களும் இல்பொருளுவமை யணியாம்.

பா - பே :—§ எழுந்தடைய. (ருகூ)

சேனைகள் செல்லுங் காட்சி

உகூக. யானை மேலிளம் பிடியின் மேனிரைத்
திடைய ருதுபோ மெறிக டற்கிணை

சேனை மாகடற் கபய னிம்முறைச்
சேது பந்தனஞ் செய்த தொக்கவே.

ப - ரை :—யானை மேல் - ஆண் யானைகளின் மேலும், இளம் பிடியின் மேல் - இளமையாகிய பெண் யானைகளின் மேலும், நிரைத்து - வரிசையாய், இடை அறுது - இடையில் நீங்காமல், போம் - செல்லும், எறி கடற்கு - (அலைகளை) வீசும் கடலுக்கு, இணை சேனை - ஒப்பாகிய சேனைகளானவை, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழன், இ முறை- இந்த அவதாரத்திலும், மா கடற்கு - பெரிய கடலில், சேது பந்தனம் செய்தது - அணை கட்டினதற்கு, ஒக்க - ஒப்பாகவும்,

வி - ரை :—யானைகளின் மேல் சேனைகள் இடையறாமல் செல்லுங் காட்சி, முதற் குலோத்துங்கன் கடலில் அணைகட்டுதலை ஒத்திருந்த தென்பதாம். 'இம் முறை' என்பதில் இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. இராமவதாரத்திலே யன்றி, இந்த அவதாரத்திலு மெனப் பொருள் படுதலைக் காண்க. ஸ்ரீராமபிரானே குலோத்துங்க சோழனாய்த் தோன்றினனென்பதை உகஉ-ம் தாழிசையா லறிக. இராவணன் சீதாதேவியை இலங்கைக்குக் கவர்ந்து சென்ற பின்னர், இராமர் கடலில் அணைக்கட்டி இலங்கைக்குச் சென்று இராவணனைக் கொன்று அவ்வம்மையை மீட்டா ரென்னுஞ் செய்தி யாவரும் நன்றறிந்ததாம். [தா-கசு-சகச] இச்செய்யுள் உவமையணியாம். (சு0)

**நீலமணி பல்லக்குகளுக்கு யமுனையும், முத்துக் குடைகட்கு கங்கையும் உவமை**

உகஉ. நீல மாமணிச் சிவிகை வெள்ளமு
நித்தி லக்குலக் கவிகை வெள்ளமுங்
காலி னுன்வரும் யமுனை வெள்ளமுங்
கங்கை வெள்ளமுங் காண்மி னென்னவே.

ப - ரை :—மா நீலம் மணி - உயர்ந்த நீலரத்தினங்களைப் பதித்த, சிவிகை வெள்ளமும் - பல்லக்குகளின் கூட்டங்கள், காலினால் வரும் - காலால் (நடந்து) வரும், யமுனை வெள்ளமும் - யமுனை நதியையும், குலம் நித்திலம் - உயர்ந்த முத்துக்களைப் பதித்த, கவிகை வெள்ளமும் - குடைகளின் கூட்டங்கள், கங்கை வெள்ளமும் - கங்கை நதியையும், காண்மின் - (ஒத்திருத்தலை) பாருங்கள், என்ன - என்று (கண்டோர்) சொல்லவும்,

வி - ரை :—நீலமணிப் பல்லக்குகளும், வெண்முத்துக் குடைகளும் வரும் காட்சி முறையே யமுனை நதியும் கங்கை நதியும் காலால் நடந்து வருவதை யொத்திருந்த தென்பதாம். யமுனை நீர் கருமையும், கங்கை நீர் வெண்மையு முடைமை பற்றி இவ்வாறு கூறினர். இதனை, 'மங்கை வார்குழற் கற்றமை ழைக்குலம், தங்கு நீரிடைத் தாழ்ந்துரு ழைப்பன, கங்கை யாற்றொடுங் காளிந்தி தன்னொடும், பொங்கு நீர்ச்சுழி போவன போன்றவே' [கம்பரா-கங்கை-உங] என்றதனு லறிக. கங்கை நதியைப்பற்றி கஎக-ம் தாழிசையிற் காண்க. யமுனை என்பது கங்கையின் உபநதிகளில் ஒன்றாகும். சிவிகை, கவிகைகளின் மிகுதி பற்றி 'வெள்ளம்' என்றார். இதில் முறை நிரனிறை யமைந்துள்ளமை காண்க. உம்மைகள் நான்கும் எண்ணுப் பொருளில் வந்தன. இச்செய்யுளில் உவமை யணியு மிருத்தலை யறிக. (சுக)

புலிக்கொடி சிறந்து விளங்கல்

உசுரு. கெண்டை மாசுண முவணம் வாரணங்
கேழ லாளிமா மேழி கோழிவிற்
கொண்ட வாயிரங் கொடிநு டங்கவே
குழுறு வெம்புலிக் †கொடிகு லாவவே.

ப - ரை :—கெண்டை - கெண்டை மீனும், மாசுணம் - பாம்பும், உவணம் - கருடனும், வாரணம் - யானையும், கேழல் - பன்றியும், ஆளி - சிங்கமும், மா மேழி - சிறந்த கலப்பையும், கோழி - கோழியும், வில் - வில்லும், கொண்ட - (இவற்றின் வடிவங்களைத் தம்மிடம்) கொண்ட, ஆயிரம் கொடி - பல கொடிகள், நுடங்க - துவளவும், குழுறு - உறுமுகின்ற, வெம் புலி கொடி - (சோழனுடைய) கொடிய புலிக்கொடி, குலாவ - (மற்றக் கொடிகளெல்லாவற்றிலும் சிறந்து) விளங்கவும்,

வி - ரை:—கெண்டை, மாசுணம் முதலிய கொடிக ளெல்லாவற்றிலும் சோழன் புலிக்கொடி சிறந்து விளங்கின தென்பதாம். [தா - கஅ, கoஉ] உயிர்கள் உணவுபெற மேழி கருவியா யிருத்தலால், அதனை 'மாமேழி' எனவும், தன்போல் வீரத்திற் சிறந்த முதற் குலோத்துங்கனை யடைந்து புலிக்கொடி மகிழ்ச்சி யடைந்தமை தோன்ற அதனை 'குழுறு வெம்புலிக் கொடி' எனவும் சிறப்பித்துக் கூறினர். கெண்டை, மாசுணம் முதலியன ஆகு பெயர்கள். இவைகளி னிறுதியில் எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன.

பா - பே :—† கொடியி லங்கவே. (சுஉ)

மகளிர் குலோத்துங்கனைக் காணத் திரளல்

உசுச. தொடைகள் கந்தரம் புடைகொள் கொங்கைகண்
சோதி வாண்முகங் கோதை யோதிமென்
நடைகண் மென்சொலென் றடைய வொப்பிலா
நகைம ணிக்கொடித் தொகைப ரக்கவே.

ப - ரை :—தொடைகள் - தொடைகளும், கந்தரம் - கழுத்துக்களும், புடைகொள் - (மார்பாகிய) இடத்திற் பொருந்திய, கொங்கை - தனங்களும், கண் - கண்களுடைய, சோதி வாள் முகம் - மிகவும் ஒளி பொருந்திய முகங்களும், கோதை ஓதி - மலர்மாலை யணிந்த கூந்தல்களும், மென் நடைகள் - (கண்களுக்கு) இனிய நடைகளும், மென் சொல் - (காதுகளுக்கு) இனிய சொற்களும், என்ற - என்று சொல்லப்பட்ட, அடைய - (இவை) எல்லாவற்றிலும், ஒப்பு இலா - (தமக்கு) சமானமில்லாத, நகை - புன்சிரிப்பையுடைய, மணி கொடி - அழகிய பூங்கொடி போன்ற பெண்களின், தொகை - கூட்டம், பரக்க - பரவவும்,

வி-ரை :—அழகிய பூங்கொடிபோன்ற மகளிர் பலர் முதற் குலோத்துங்கன் செல்லும் வழியில் கூடின ரென்பதாம். அவர்கள் கூடினமை அவன் செலவைக் கண்டு களித்தற் கென்க. கந்தரம்=கம்+தரம்; கம்—தலையை, தரம்—தரித்திருப்பது; கழுத்தானது தலையைத் தாங்கி யிருத்தலால், அதற்கு இப்பெயர் வந்ததாம். 'மென் நடைகள்' என்றதனல், மகளிர் பலர் நடந்து வந்தமையும் 'மென்சொல்' என்றதனல், அவர்கள் பலவற்றைப் பேசி வந்தமையும் விளங்கும். 'புடைகொள்' என்பதற்குப் பக்கங்களைக் கவர்ந்து கொண்ட எனவும், 'நகை' யென்பதற்கு ஒளியையுடைய எனவும் பொருள் கூறினும் பொருந்தும். மென்மை இரண்டும் இங்கே இனிமை யென்னும் பொருளில் வந்தன. அடைய

—எல்லாம்; இதனை 'உலகுடைய உண்டனையே' [சிலப் - கஎ - முன்னிலை - உ] எனவும், 'அடையவன் றம்பர்பதி குடிபுகப் பொருது' [வில்லிபா-கஎ-ம் போர்-அஅ] எனவும் வருமாற்றா னறிக. சோதி வாள்—ஒரு பொருட் பன்மொழி; தொடைகள் முதலியவற்றுள் எண்ணும்மைகள் தொக்கன. (கஙரு)

இதுவுமது

உகூரு. எங்குமுள மென்கதலி யெங்குமுள
தண்கமுக மெங்குமுள பொங்கு மிளநீர்
எங்குமுள பைங்குமிழ்க ளெங்குமுள
*செங்குமுத மெங்குமுள செங்க யல்களே.

ப - ரை :—மென் கதலி - மெல்லிய வாழை போன்ற (பெண்களின்) தொடைகள், எங்கும் உள - எல்லாவிடங்களிலும் இருக்கின்றன, தண் கமுகம் - குளிர்ச்சியாகிய பாக்கு மரம் போன்ற (அவர்கள்) கழுத்துக்கள், எங்கும் உள——, பொங்கும் இளநீர் - பூரிக்கும் இளநீர் போன்ற கொங்கைகள், எங்கும் உள——, பை குமிழ்கள் - பசுமையாகிய குமிழம் பூப்போன்ற மூக்குகள், எங்கும் உள——, செம் குமுதம் - செவ்வாம்பல் மலர் போன்ற இதழ்கள், எங்கும் உள——, செம் கயல்கள் - செம்மை யாகிய கெண்டை மீன் போன்ற கண்கள், எங்கும் உள——,

வி - ரை :—சோழ நாட்டிலுள்ள வளமுள்ள பொருள்களாகிய கதலி, கமுகு முதலியன முதற் குலோத்துங்கனைக் காணவந்த மகளிர்பால் திகழ்ந்தன வென்பதாம். 'வாழைத் தண்டே போன்ற குறங்கிணை' [மணிமே-உ0-சுக] என்றதனால், வாழை தொடைகளுக்கும், 'மங்கை தன் கழுத்தை நோக்கி வளரிலங் கமுகும் வாரிச் சங்கமு நினைதி' [கம்பரா-நாடவி-சச] என்றதனால் கமுகு கழுத்திற்கும், 'கொங்கை யிளநீரால்' [நளவெ-சுயம்-சச] என்றதனால் கொங்கை இளநீருக்கும், 'குமிழ்ழக் கிவைகாண்' [மணிமே-உ0-சஅ] என்றதனால் குமிழம்பூ மூக்கிற்கும், 'பைங்குமுதப் போதும்.........வண்ண வாயது குறியு மஃதே' [கம்பரா-நாடவி-சக] என்றதனால் குமுத மலர் இதழ்களுக்கும், 'பொருகயற்கண் செவியுறப் போந்தகன்று' [சீவகசி-ககூஎ] என்றதனால்; கயல் மீன்கள் கண்களுக்கு உவமையாமாறறிக. எங்கும் இதிலுள்ள உம்மை முற்றுப் பொருளில் வந்தது. பா - பே :—* செங்கமலம். (கஙச)

இதுவுமது

உகூசு. ஆறலைத ரங்கமுள வன்னநடை
தாமுமுள வாலைகமழ் பாகு முளவாய்
வேறுமொரு பொன்னிவள நாடுசய
துங்கன்முன்வி தித்ததுவு மொக்கு மெனவே.

ப - ரை :—சயதுங்கன் முன் - முதற் குலோத்துங்கனுக்கு எதிரில், ஆறு அலை - நதிகளில் அசைகின்ற, தரங்கம் உள - அலைகள் போன்ற (பெண்களின்) வயிற்று மடிப்புக்கள் இருக்கின்றன, அன்னம் நடை தாமும் - அன்னங்களின் நடை போன்ற நடையும், உள - இருக்கின்றன, ஆலை - (கரும்பு) ஆலைகளின், கமழ் பாகும் - மணம் வீசுகின்ற வெல்லப் பாகு போன்ற இனிய சொற்களும், உள ஆய் - உண்டாயிருத்தலால், பொன்னி - காவிரி நதியையுடைய, வளம் - வளப்பமாகிய, வேறு ஒரு நாடும் - வேறு ஒரு சோழநாட்டையும், விதித்ததுவும் - (முதற் குலோத் துங்கன்) ஏற்படுத்தினதையும், ஒக்கும் என - ஒத்திருக்கும் என்று (கண் டோர்) சொல்லவும்,

வி-ரை:—முன் செய்யுளிற் கூறிய கதலி, கமுகு முதலியனவும், இச் செய்யுளிலுள்ள தரங்கம், அன்னநடை, பாகு என்பனவும், முதற் குலோத்துங் கனைக் காண வந்த மகளிர் பால் திகழுந் தோற்றம் வேறெரு சோழ நாட்டை ஒத்திருந்த தென்பதாம். கதலி, கமுகு முதலியனவும், தரங்கம், அன்னம், பாகு என்பனவும் சோழநாட்டிலுள்ள அவ்வப் பொருள்களையும், மகளிர் உறுப்பு முதலியவற்றையுங் குறித்தன. இவை அவ்வப்பொருள்களைக் குறிக்குங்கால் இயற்பெயரும் மகளிர் உறுப்பு முதலியவற்றைக் குறிக்குங்கால், ஆகுபெயருமாம். சயதுங்கன்—[தா-அ, உகக, ௫சங.] (சுரு)

### வேழ நிரையின் காட்சி

உகூஎ. வேழநிரை வென்றுமலை யெங்குமிடை
 கின்றவயில் வென்றியப யன்ற னருளால்
வாழவப யம்புகுது சேரனொடு
 கூடமலை நாடடைய வந்த தெனவே.

ப-ரை:—எங்கும்-எல்லா விடங்களிலும், வேழம் நிரை-யானை களின் வரிசைகளை, வென்று-வெற்றிகொண்டு, மலை மிடைகின்ற-மலைகள் நெருங்கி யிருப்பவை, (எவ்வாறிருந்தன வெனில்) அயில்-வேலாயுதத்தைப் பிடித்த, வென்றி அபயன் தன்-வெற்றியையுடைய (முதற் குலோத்துங்க) சோழனுடைய, அருளால்-கருணையால், வாழ-(நல்வாழ்வு பெற்று) வாழ, அபயம் புகுது-அடைக்கலம் புகுந்த, சேரனொடு-சேர வேந்தனோடு, கூட-ஒன்றாக, மலை நாடு அடைய-மலைநாடு முழுவதும், வந்தது என-வந்தாற்போலவும்,

வி-ரை:—முதற் குலோத்துங்கன் செல்லும் வழியிலுள்ள மலைகளின் காட்சி சேர வேந்தனோடு அவன் மலைநாடும் அம்மன்னவனிடம் தஞ்சம் புகுந்ததை ஒத்திருந்த தென்பதாம். 'சேரனொடு..........வந்தது' என்றது, சேரநாட்டில் மலைகள் மிகுதியா யிருத்தலாலும், அதற்கு மலைநாடு என்னும் பெயருண்மை யானு மென்க. சேரன் அடைக்கல மடைந்தமையை [தா-கசு-ந அஉ-௫ஙo] காண்க. புகுது சேரன்—வினைத்தொகை; புகுது—து; சாரியை; மிடைகின்ற—அஃறிணைப் பலவின்பால் வினையாலணையும் பெயர். (சுசு)

### இதுவுமது

உகூஅ. அக்கிரிகு லங்கள் விடு மங்குலியின்
 நுண்டிவலை யச்செழிய ரஞ்சி விடுமத்
திக்கிலுள நித்திலமு கந்துகொடு
 வீசியொரு தென்றல்வரு கின்ற தெனவே.

ப-ரை:—அ கிரி குலங்கள்-அந்த மலைபோன்ற யானைக் கூட்டங்கள், அங்குலியின் விடும்-(தங்கள்) துதிக்கைகளின் நுனியிலுள்ள உறுப்பிலிருந்து சொரியும், நுண் திவலை-சிறிய நீர்த்துளிகளானவை, அ செழியர்-அந்தப் பாண்டியர்கள், அஞ்சி விடும்-(முதற் குலோத் துங்கனுக்கு) பயந்து (போரில் தோற்று) ஓடிவிடும், அ திக்கில் உள-அந்த (தென்) திசையிலுள்ள, நித்திலம் முகந்து கொடு-முத்துக்களை வாரிக்கொண்டு, ஒரு தென்றல்-ஒப்பற்ற தென்றற் காற்று, வீசி வருகின்றது என-வீசி வருகின்றது போலவும்,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் செல்லும் வழியில் யானைகள் தங்கள் துதிக்கைகளால் நீர்த்துளிகளைச் சொரியுங் காட்சி பாண்டி நாட்டிலுள்ள முத்துக்களைத் தென்றற் காற்று வாரி யிறைப்பதை யொத்திருந்த தென்பதாம். வழிநெடுக எழுந்த புழுதி தணிய யானைகள் நீரை வாரி யிறைத்தன வென்க. அங்குலி—யானைத் துதிக்கையின் நுனியிலுள்ள விரல்போன்ற சிறிய உறுப்பு; நுண் திவலை —சிறிய மதநீர்த் துளிக ளெனினுமாம். இம்மூன்று செய்யுட்களும் நூற்றுறிப்பேற்ற வணியாம். (சுஎ)

குலோத்துங்கன் நடராசரை வணங்கல்

உகூகூ. தென்றிசையி னின்றுவட திக்கின்முகம்
வைத்தருளி முக்கணுடை வெள்ளி மலையோன்
மன்றினட மாடியருள் கொண்டுவிடை
கொண்டதிகை மாநகருள் விட்ட ருளியே.

ப - ரை :—தென் திசையின் நின்று - (முதற் குலோத்துங்கன்) தெற்குத் திக்கிலிருந்து, வடக்கு திக்கின் - வடக்குத் திக்கில், முகம் வைத்தருளி - புறப்பட்டுச் சென்று, முக்கண் உடை - மூன்று கண்களை யுடைய, வெள்ளி மலையோன் - கைலாய மலையை யுடையவரும், மன்றில் நடம் ஆடி - பொன்னம்பலத்தில் நடனம் புரிந்தவருமாகிய நடராஜ மூர்த்தியினுடைய, அருள் கொண்டு - திருவருளைப் பெற்று, விடை கொண்டு - (அங்கிருந்து நீங்க அவர்) உத்தரவையும் பெற்றுக்கொண்டு, அதிகை மா நகர் உள் - திருவதிகை யென்னும் சிறந்த நகரத்தில், விட்டருளி - (சிலநாள் தன் சேனைகளை) விட்டுத் தங்கி,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் நடராஜ மூர்த்தியை வணங்கித் திரு வதிகை யென்னும் பதியை யடைந்தன னென்பதாம். 'வட திக்கின் முகம் வைத்து' என்றது தெற்கிலுள்ள காவேரியாற்றை விட்டு வடக்கிலுள்ள பாலாற்றை நோக்கிப் புறப்பட்டமையாம். விட்டருளி—தங்கி; இஃதிப் பொருள் தருதலை 'நாகநன் காவினு ணயந்துவிட் டார்களே' [சீவகசி-கக௦டு] என்றதனு லறிக. நடமாடி—இதில் இகர விகுதி ஆண்பாலில் வந்தது. உடை—இக் குறிப்புப் பெயரெச்சத்தில் அகரம்—தொக்கு நின்றது. நகருள், உள்—ஏழ னுருபு. (சுஅ)

காஞ்சி அணுகல்

ஙா௦௦. விட்டவதி கைப்பதியி னின்று பய
ணம்பயணம் விட்டுவிளை யாடி யபயன்
வட்டமதி யொத்தகுடை மன்னர்தொழ
நண்ணினன்வ ளங்கெழுவு கச்சி நகரே.

ப - ரை :—அபயன் - (குலோத்துங்க) சோழன், விட்ட - விட்டு நீங்கிய, அதிகை பதியின் நின்று - திருவதிகைப் பதியிலிருந்து, பயணம் - பிரயாணமாய், பயணம் விட்டு - (இடை யிடையே) பிரயாணத்தில் தங்கி, விளையாடி - (ஆங்காங்கு) வேடிக்கைகளில் பொழுது போக்கி, வட்டம் மதி ஒத்த - வட்டமாகிய முழு நிலாவைப் போன்ற, குடை மன்னர் - குடையை யுடைய அரசர்கள், தொழ - (தன்னை எதிர் கொண்டு) வணங் கும்படி, வளம் கெழுவு - (பலவகை) வளப்பங்கள் பொருந்திய, கச்சி நகர் - காஞ்சீபுரத்தை, நண்ணினன் - (போய்) சேர்ந்தான்.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் அதிகைப் பதியினின்று நீங்கிக் காஞ்சிபுரத்தை யடைந்தன னென்பதாம். 'தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சி, திருவேகம் பன்செம்பொன் கோயில் பாடி' [திருவாச - திருப்பொற்சு - ௪] எனவும், 'மண்மகளார்க் கலங்கார மென்ன மன்னும், மதிட்கச்சி நகர்கண்டு மகிழ்ந்திட்டானே' [தேசிகப் பி-சு - ௧௦] எனவும், ஆன்றோரால் புகழப் பட்டுள்ளமையால், காஞ்சிபுரத்தை, 'வளங்கெழுவு கச்சி' என்றார். நீர்வளம், நிலவளம், செல்வம் முதலியன மலிந்த கச்சியெனினுமாம். முதலிலுள்ள பயணம் என்பதில் ஆய் என்பது இசையெச்சமாய் வருவித் துரைக்கப்பட்டது. 'விளையாடி' என்றதனால், புனல் விளையாட்டு, பூக் கொய்தல், உண்டாட்டு முதலியவற்றையுங் கொள்க. இதில் உவமையணி யிருத்தல் காண்க. இதுகாறுந் தேவியின் கூற்றும்.

(உஅ௦) பொழுதத்து (உஅ௧) பெற (உஅ௨) வர (உஅ௩) எழ (உஅ௪) மிக (உஅ௫) இருந்துவர (உஅ௬) மல்கிவர (உஅ௭) கவித்துவர (உஅ௮) படைத்துவர (உஅ௯) தொடங்கி வர (உ௯௦) மூடி வர (உ௯௧) ஒக்க (உ௯௨) என்ன (உ௯௩) குலாவ (உ௯௪) பரக்க (உ௯௫) எங்கும் உள, செய்கயல்கள் (உ௯௬)ஒக்குமென (உ௯௭) வந்ததென (உ௯௮) வருகின்றதென (உ௯௯) தென் திசையினின்று, வைத்தருளி, விடைகொண்டு, விட்டருளி, (௩௦௦) கச்சிநகர் நண்ணினன் என முடிக்க.

**கலிங்கப்பேய் தேவியை யணுகல்**

௩௦௧. என்னுமித னன்மொழியெ டுத்திறைவி
சொல்லுவதன் முன்னமிகல் கண்ட தொருபேய்
தன்னுடைய காறனது பிற்படம
னத்துவகை தள்ளிவர வோடி வரவே.

ப - ரை :—என்னும் - என்று சொல்லும், இதன் நல் மொழி - மிகவும் இனிய (குலோத்துங்கன்) வரலாற்றை, இறைவி - காளிதேவி, எடுத்து சொல்லுவதன் முன்னம் - எடுத்துச் சொல்லி முடிப்பதற்கு முன்பே, இகல் கண்டது - (கலிங்க நாட்டில் நிகழும்) போரைக் கண்டதாகிய, ஒரு பேய் - ஒரு பேயானது, தன்னுடைய கால் - தன்னுடைய கால்களானவை, தனது பின் பட - தனது பின்புறத்தில் படவும், மனத்து - (அதன்) மனத்தில் தோன்றிய, உவகை - சந்தோஷமானது, தள்ளிவர - (அதை முன்னே) தள்ளிக்கொண்டு வரவும், ஓடி வர (தேவியினிடம்) ஓடி வந்து,

வி - ரை :—இதன்—இதம் என்பதன் போலி ; மொழி—காரணவாகு பெயராய்ச் சரித்திரத்தை யுணர்த்திற்று. 'இதன் நல் மொழி' இந்த வரலாற்றின் இனிய சொற்களை யெனினுமாம். 'கால் தனது பிற்பட' என்றது அப்பேய் ஓடி வந்த விரைவை யுணர்த்தினது. தேவி முதற் குலோத்துங்கன் வரலாற்றைச் சொல்லி வருகையில், கலிங்கத்தில் போர் மூண்டமை கலிங்கப் பேயின் கூற்றல் விளங்கும். (௭௦)

**கலிங்கப்பேயின் கூற்று**

௩௦௨. கலிங்கர் குருதி குருதி கலிங்க மடைய வடைய
மெலிந்த வுடல்க டடிமின் மெலிந்த வுடல்க டடிமின்.

ப - ரை :—கலிங்கர் குருதி குருதி - கலிங்க வீரர்களின் இரத்தம் இரத்தம், கலிங்கம் அடைய அடைய - (பேய்களே) கலிங்கப் போர்க்களம் அடைவீராக அடைவீராக, மெலிந்த உடல்கள் - (பசியால்) இளைத்த (உங்கள்) உடம்புகளை, தடிமின் - பருகச் செய்யுங்கள், மெலிந்த உடல்கள் தடிமின்——,

வி - ரை :—அடுக்குகள் முறையே மகிழ்ச்சியும் விரைவும் பற்றி வந்தன. அடைய—வியங்கோள் வினைமுற்று, தடிமின்—ஏவற்பன்மை வினைமுற்று. இது முதல் ஐந்து செய்யுட்கள் கலிங்கப்பேயின் கூற்றும். (எக)

இதுவுமது

௩௦௫. உணங்கல் வயிறு குளிர வுவந்து $ பருக பருக
கணங்க ளெழுக வெழுக கணங்க ளெழுக வெழுக.

ப - ரை :—உணங்கல் வயிறு - (நெடுநாள் பசியால்) காய்ந்த வயிறுகள், குளிர - குளிரும்படி, உவந்து- களிப்படைந்து, பருக பருக - (கலிங்க வீரர்களின் இரத்தத்தை) குடிப்பீராக குடிப்பீராக, கணங்கள் - (பேய்களின்) கூட்டங்களே, எழுக எழுக - (உடனே) புறப்படுவீராக புறப்படுவீராக, கணங்கள் எழுக எழுக——,

வி - ரை :—இச்செய்யுளிலுள்ள அடுக்குகளும் முன் செய்யுளிற் போல, மகிழ்ச்சியும் விரைவும் பற்றி வந்தனவேயாம். கணங்கள்—அண்மை விளி; குளிர—அகரவீற்று வினை எச்சம்; இங்கு எதிர்காலத்தை யுணர்த்தினது. பருக பருக, எழுக எழுக—வியங்கோள் வினைமுற்றுக்கள்.

பா - பே :—$ பருக பருக. (எஉ)

இதுவுமது

௩௦௬. என்செயப் பாவி காளிங் கிருப்பதங் ‡ கிருப்ப முன்னே
வன்சிறைக் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப் போன.

ப- ரை :—பாவிகாள் - பாவம் செய்த பேய்களே, இங்கு - (பாலை நில மாகிய) இவ்விடத்தில், என் செய - என்ன காரியம் செய்வதற்கு, இருப்பது - (நீங்கள் தங்கி) இருப்பதாம், வன் சிறை - வலிய இறக்கைகளை யுடைய, கழுகும் பாறும் - கழுகுகளும் பருந்துகளும், அங்கு இருப்ப - (கலிங்கப் போர்க்களமாகிய) அவ்விடத்தில் இருத்தலால், முன்னே - (அவை) முன்பே, வயிறுகள் பீறி - (இறந்துபட்ட கலிங்க வீரர்களின்) வயிறுகளைக் கிழித்து, போன - (அவற்றிலுள்ள குடல், ஈரல் முதலிய வற்றை கொண்டு) போயின.

வி - ரை :—கிடைத்தற்கரிய உணவு கிடைத்தும், அதனையுண்ண விரையாமல், பேய்கள் பசியால் வருந்திக் கிடந்தமையால் உண்டாகிய வெறுப்பின் மிகுதியால், கலிங்க நாட்டுப்பேய் மற்றப் பேய்களை 'பாவிகாள்' என விளித்தது. இருப்ப—காரணப்பொருளில் வந்த வினையெச்சம். போன—அஃறிணைப் பலவின் படர்க்கை வினை முற்று. பா - பே:—‡ அதற்கு முன்னே. (எ௩)

இதுவுமது

௩௦௭. வயிறுக ளென்னிற் போதா *வாய்களோ போதா பண்டை
எயிறுக ளென்னிற் போதா வென்னினு மீண்டப் போதும்.

ப - ரை :—வயிறுகள் என்னில் - (கலிங்க நாட்டிலுள்ள பிணங்களைப் புசிக்க நம்) வயிறுகளோ என்றால், போதா-போதமாட்டா, வாய்களோ போதா - (நமது) வாய்களும் போதமாட்டா, பண்டை எயிறுகள் என்னில் - பழமையாகிய பற்களோ என்றால், போதா - (அவற்றை மென்று விழுங்க) போதமாட்டா, என்னினும் - என்றாலும், ஈண்ட போதும் - (நாம் அங்கு) விரையச் செல்வோம்.

வி - ரை :—யானை, குதிரை, காலாள் முதலிய பிணங்களின் எலும்புகளைக் கடிக்கப்போதிய வலிவற்ற பற்களேன்பது கருதி 'பண்டையெயிறுகள்' எனக் கலிங்கப் பேய் கூறின தென்க. ஈண்டுதல்—விரைதல்; ஈண்டு செலற்

கொண்மூ' [புறநா - கசுக] என்றமை காண்க. போதா—அஃறிணைப் பலவின் படர்க்கை எதிர்மறை வினைமுற்று; ஈண்ட—அகர ஈற்று வினையெச்சம். போதும்—தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. பா-பே:—*வாய்களும்.()

இதுவுமது

௩0௬. சிரமலை விழுங்கச் செந்நீர்த் திரைகடல் பருக லாகப்
பிரமனை வேண்டிப் பின்னும் பெரும்பசி பெறவும் வேண்டும்.

ப - ரை:—சிரம் மலை - தலைகளாகிய மலைகள், விழுங்க - விழுங்கவும், செம் நீர் - உதிரமாகிய, திரை கடல் - (அலைகளால்) அலையுங்கடலை, பருகல் ஆக - குடிக்கவும், பிரமனை வேண்டி - பிரமதேவனை (வரம்) வேண்டி, பின்னும் - (இப்போ திருப்பதை விட) இன்னும் அதிகமாய், பெரும் பசி - மிக்க பசியை, பெறவும் வேண்டும் - (நாம்) அடைதலும் வேண்டும்.

வி- ரை:—கலிங்க நாட்டுப் போர்க்களத்திலுள்ள தலைகளாகிய மலைகளை விழுங்கவும், இரத்தமாகிய கடலைப் பருகவும் பிரமனை வேண்டி இன்னும் மிக்க பசி பெறவேண்டு மென்பதாம். சிரமலை, செந்நீர்த்திரைகள்—உருவகவணிகள் திரை கடல்—வினைத்தொகை. (எரு)

பேய்களின் மகிழ்ச்சி

௩0எ. என்ற வோசை தஞ்செ விக்கி சைத்த லுந்த சைப்பிணந்
தின்ற போற்ப ருத்து மெய்சி ரித்து மேல்வி ழுந்துமே.

ப - ரை:—என்ற ஓசை - (கலிங்கப்பேய்) என்று சொல்லிய ஓசையானது, தம் செவிக்கு இசைத்தலும் - தங்கள் காதுகளில் படுதலும், தசை பிணம் - மாமிசத்தையுடைய பிணங்களை, தின்ற போல் - (மற்றப் பேய்கள்) தின்றவற்றைப் போல், மெய் பருத்து - (தமது) உடல் பூரித்து, சிரித்து - (களிப்பால்) நகைத்து, மேல் விழுந்தும் - (ஒன்றன்) மேல் (மற்றொன்று) விழுந்து,

வி - ரை:—கலிங்கப் பேய் சொன்னதைக் கேட்டு மற்றப் பேய்கள் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தன வென்பதாம். செவிக்கு—உருபு மயக்கம்; தசை—சதை என்பதன் போலி; தின்ற—பலவின் படர்க்கை வினையாலணையும் பெயர்; விழுந்துமே—இதிள்ள உம், ஏ—இரண்டு அசைநிலைகள். இது முதல் நான்கு செய்யுட்கள் பேய்களின் மகிழ்ச்சியை யுணர்த்தும். (எசு)

இதுவுமது

௩0அ. ஓகை சொன்ன பேயின் வாயை யோடி $முத்தமுண்ணுமே
சாகை சொன்ன பேய்க ளைத்த கர்க்க பற்க ளென்னுமே.

ப - ரை:—ஓடி - (மற்றப் பேய்கள் விரைந்து) ஓடி, ஓகை சொன்ன - சந்தோஷச் செய்தியைத் தெரிவித்த, பேயின் வாயை - (கலிங்கநாட்டு) பேயின் வாயை, முத்தம் உண்ணும் - முத்தமிடும், சாகை சொன்ன - (முன்பு) சாதலைத் தெரிவித்த, பேய்களை - பேய்களினுடைய, பற்கள் தகர்க்க - பற்களை உடைப்பீராக, என்னும் - என்று சொல்லும்.

வி - ரை:—சாதலைத் தெரிவித்தலாவது:—பேய்களில் சில இனி நாம் உணவின்றி இறந்துபோவ துண்மையென்று சொன்னமை. ஓகை—இது உவகை யென்பதன் மரூஉவாம். வாயை—உருபு மயக்கமாய்க்கொண்டு வாயில் எனினுமாம். தகர்க்க—வியங்கோள் வினைமுற்று.

பா - பே:—$ முத்தமிட்டுமே. (எஎ)

இதுவுமது

௩௦௯. பிள்ளை வீழ வீழ வும்பெ ருந்து ணங்கை கொட்டுமே
வள்ளை பாடி யாடி யோடி வாவெனுவ் ழைக்குமே.

ப - ரை:—பிள்ளை - (சில பேய்கள் தங்கள் கையிலுள்ள) பிள்ளைகள், வீழ வீழவும் - (நிலத்தில்) விழுந்து விடும்படி, பெரும் துணங்கை கொட்டும் - பெரிய துணங்கைக் கூத்தாடி (தங்கள் கைகளை) தட்டும், வள்ளை பாடி - (பின்பு) வள்ளைப் பாட்டைப் பாடி, ஆடி ஓடி - ஆடியும் ஓடியும், வா எனு அழைக்கும் - (மற்றப் பேய்களைத் தம்மோடு விளையாட) வா என்று கூப்பிடும்.

வி - ரை :—துணங்கை—ஒருவகைக் கூத்து. இதனைப் பேய்க் கூத்தெனவும், சிங்கிக் கூத்தெனவும் கூறுவர். 'நிணந்தின் வாயள் துணங்கை தூங்க' [திரு முருகு - ருசு] என்னு மடிக்கு, 'பழுப்புடை யிருகை முடக்கியடிக்க' துடக்கிய நடையது துணங்கை யாகும்' என நச்சினர்க்கினியர் கூறியதனல், துணங்கைக் கூத்தினிலக்கண முணர்க. 'குழிகட்பேய் துணங்கை யெறிந்து' [காரைக்கா - மூத்ததிரு உ] எனவும், 'பிணம்பிறங் கழுவத்துத் துணங்கையாடி' [பதிற்று-ரு, கஉ] எனவும், 'பிணப்பறைக்குரலுவந்து வந்து சில பேய்துணங்கை யிடுதோறும்' [தக்கயா - ருங] எனவும் வருவனவற்ருல் பேய்க் கூத்தைத் துணங்கை யென்னுமா றறிக. 'துணங்கையே விழாப்பேய்க் கூத்தாம்' [சூடாமணி கரவெ-கஉ] என்றமையும் இங்குக் கவனிக்க. மகளிரு மைந்தரும் ஆடுங் கூத்தையுந் துணங்கை யென்ப. 'இலங்குவளை மடமங்கையர், துணங்கை யஞ்சீர்த் தழூஉ மறப்ப' [மதுரைக்கா-கருசு, கசு0] எனவும், 'மகளிர் தழீஇய துணங்கை யானும்' [குறுந்-௩க] எனவும், வருமாற்ருன் மகளிரும், 'துணங்கை யாடிய வலம்படு கோமான்' [பதிற்று - ருஎ] எனவும், 'குறும்பைர் தொடியன், விழவயர் துணங்கை தழூஉவகஞ் செல்ல' [நற்றி - ரு0] எனவும், 'தணந்ததன் தலையுநீ தளிரிய லவரொடு, துணங்கையாய்' [கலி - சுசு] எனவும் வருமாற்ருன் மைந்தரும் துணங்கைக் கூத்தாடுமா றறிக. வள்ளை - உலக்கைப் பாட்டு; அதாவது மகளிர் நெல் முதலியவற்றைக் குற்றும்போது தளர்ச்சி தோன்ருதிருக்கத் தமது தலைவர்களைச் சிறப்பித்துப் பாடும் ஒருவகைப் பாட்டாம். 'திணைகுறு மகளிர் இசைபடு வள்ளையும்' [மலைபடுக - ௩சஉ] எனவும், 'வெதிர் நெற்குறுவாநாம், வள்ளையகவுவம் வா, [கலி-சஉ] எனவும், 'மனையளகு வள்ளைக் குறங்கும் வடாநாட' [திருவள்மா-ரு] எனவும் வருமாறு காண்க. இவ் வள்ளைப் பாட்டைக் களிப்பின் மிகுதியால் பேய்கள் பாடின வென்க. சிலப்பதிகாரத்தில் வாழ்த்துக் காதையின் இறுதியிலுள்ள வள்ளைப் பாட்டுக்களையுங் கவனிக்க. ()

இதுவுமது

௩௦௦. ‡ எனுவு ரைத்த தேவி வாழி வாழி என்று வாழ்த்தியே
கனுவு ரைத்த பேயி னைக்க ழுத்தி னிற்கொ டாடுமே.

ப - ரை:—எனு உரைத்த - என்று (முதற் குலோத்துங்கன் வரலாற்றை முன்பு) சொல்லிய, தேவி வாழி வாழி - காளிதேவி வாழ்க வாழ்க, என்று வாழ்த்தி - என்று (அந்தத் தேவியை) வாழ்த்தி, கனு உரைத்த பேயினை - (முன்பு தான் கண்ட) கனவைச் சொல்லிய கணிதப் பேய்களை, கழுத்தினில் கொடு - கழுத்தில் கட்டிக் கொண்டு, ஆடும் - (களிப்பின் மிகுதியால் பேய்கள் துள்ளி) விளையாடும்

வி - ரை :—கணிதப்பேய்கள் கனவுகண்டு சொன்னபடி கலிங்கப்போர் மூண்டமையால் மற்றப் பேய்கள் களிப்படைந்து அவைகளின் கழுத்தைக்

கட்டிக்கொண்டும் விளையாடின வென்க. பேய்கள் கண்ட கனவை உஉ௬—உஉஎ-ம் தாழிசைகளில் காண்க. 'கழுத்தினிற் கொடு' என்பதற்குக் கழுத்தில் தூக்கிக்கொண்டு எனினுமாம். வாழி வாழி—அடுக்குகள் மகிழ்ச்சியின் பொருட்டாம். வாழ்த்தியே—ஏகாரம் அசை, பேயினை—இன் சாரியை. பா - பே :—‡ மனுவுடுத்த. (எகூ)

**கலிங்கப் பேயைத் தேவி போர்நிலை வினவல்**

௩கக. ஆடிவரு பேய்களின லந்தலைத
விர்த்தடுப றந்தலைய றிந்த தனினின்
றோடிவரு பேயையிக லுள்ளபடி
சொல்கெனவு ரைத்தனளு ரைத்த ருளவே.

ப - ரை :—ஆடி வரு - கூத்தாடி வரும், பேய்களின் அலந்தலை - பேய்களின் (களிப்பினாலாகிய) மயக்கத்தை, தவிர்த்து - ஒழித்து, அடு பறந்தலை - (பகைவரை) கொல்லும் போர்க்களச் செய்தியை, அறிந்து - தெரிந்துகொண்டு, அதனின் நின்று - அப் போர்க்களத்திலிருந்து, ஓடி வரு பேயை - (தன்னிடம்) ஓடி வந்த பேயை, உள்ளபடி - நடந்தது நடந்தபடியே, இகல் சொல்க - போரைத் தெரிவிப்பாயாக, என உரைத்தனள் - என்று (தேவி) கேட்டாள், உரைத்தருள - (அவ்வாறு அவள்) கேட்ட வளவில்,

வி - ரை :—தேவியானவள் பேய்களின் கூத்தைத் தவிர்த்துக் கலிங்கப் பேயைப் பார்த்து அந்நாட்டில் நிகழ்ந்த போரை உள்ளபடி சொல்வாயாக வென வினவினளென்பதாம். சொல்கென—நிலைமொழியில் அகரம் தொக்கு நின்றது.

(௩0க) ஒரு பேய்...ஓடி வர (௩0உ) அடைய...தடிமின் (௩0௩) பருக... எழுக (௩0ச) பீறிப்போன (௩0ரு) ஈண்டப்போதும் (௩0௬) பெறவும் வேண்டும் (௩0எ) என்றவோசை...இசைத்தலும்... மேல் விழுந்து (௩0அ) முத்த முண்ணும்...தகர்க்கவென்னும் (௩0கூ) கொட்டும்...அழைக்கும் (௩க0) வாழ்த்தி ...ஆடும் (௩கக) (பின்பு தேவி) தவிர்த்து......உரைத்தனள் என முடிக்க. (அ0)

அவதாரம் முற்றிற்று.

---

# கக. காளிக்குக் கூளி கூறியது

**காளிக்குக் கூளி கூறியது** :—இது மூன்று சொல் இரண்டு சந்தியாலாகிய சொற்றொடர். இதில் முந்தியது நான்கன் விரியும், பிந்தியது எழுவாய்த் தொடருமாம். காளி தேவிக்கு (கலிங்க நாட்டிலிருந்து வந்த) பேய் சொல்லிய செய்தியை யுணர்த்தும் பாடல்களின் பகுதியென்பது இதன் பொருளாம்.

முதற் குலோத்துங்கன் வேட்டையாடிக் காஞ்சிபுரத்தில் தங்கியிருக்குங்கால், வேந்தர் பலர் தங்கள் திறைகளைச் செலுத்தி அவனை வணங்கினர். ஆனால், கலிங்க வேந்தன் மட்டும் தன் பகுதிப் பொருளைச் செலுத்த வரவில்லை. அதனால் அக்காவலன் கடுஞ்சின மெய்திக் கலிங்க வேந்தனைப் பற்றிக் கொணருமாறு தனது படைத்தலைவனாகிய கருணாகரத்

தொண்டமானுக்குக் கட்டளையிட்டான். உடனே அவன் நால்வகைச் சேனைகளோடு பல ஆறுகளைக் கடந்து சென்று கலிங்க நாட்டில் தீ மூட்டி அங்குள்ள பொருள்களைச் சூறையிடலானான். இச் செய்தியை யறிந்த கலிங்க மன்னன் தன்னமைச்சர் சொற்களையும் மதியாமல், போர் புரியத் தொடங்கினன் என்பதைக் கலிங்கப் பேய் தேவிக்குக் கூறுவது போல், ஆசிரியர் இதில் விரித்துரைக்கிறார். இதில் அமைந்துள்ள திருவோலக்கச் சிறப்பு, அமைச்சர் அறவுரை, நால்வகைப் படைகளின் வருணனை முதலியன படித்து இன்புறற் பாலனவாம்.

#### கலிங்கப்போர் கொடுமை

௩௧௨. மாவா யிரமும் படக்கலிங்கர்
    மடிந்த களப்போ ருரைப்போர்க்கு
நாவா யிரமுங் கேட்போர்க்கு
    நாளா யிரமும் வேண்டுமால்.

ப - ரை :—ஆயிரம் மாவும் - ஆயிரம் யானைகளும், பட - இறந்து படும்படி, கலிங்கர் மடிந்த - கலிங்க வீரர்கள் இறந்தொழிந்த, களம் போர் - களத்தில் நிகழ்ந்த போரை, உரைப்போர்க்கு - சொல்ல விரும்புவோருக்கு, ஆயிரம் நாவும் - ஆயிரம் நாக்குகளும், கேட்போர்க்கு - (அப்போரை) கேட்க விரும்புவோருக்கு, ஆயிரம் நாளும் - ஆயிரம் நாட்களும், வேண்டும் - தேவையாம்.

வி - ரை :—'ஆனை யாயிர மமரிடை வென்ற, மானவ னுக்கு வகுப்பது பரணி' [இலக் - வி - அ௩அ] என்பவாகலின், 'மாவாயிரமும் பட' என்றார். 'உரைப்போர்க்கு நாவாயிரமும்' என்றமைக்கேற்ப, 'பங்கே ருகத்தோன் பல கோடி நாத்தந் திலனே எண்ணுதற்கு' [வில்லிபா-கூ-ம் போர்-௩௰] எனவும், 'நண்ணலா வெங்க ளுத னற்புக ழுரைக்கி னன்று, எண்ணிலா யிரங்கள் வேண்டும்' [திருவாதவூ-புத்தரை வாதில்-௬அ] எனவும் வருமாறு காண்க. 'களப்போ ருரைப்போர்க்கு......வேண்டும்' என்றமையால், ஒரு நாவையுடைய தன்னால் சிறிது நேரத்தில், அப்போரின் கொடுமையைப் புகல வியலாதெனப் பேய் கூறியவாறும். (௧)

#### இதுவுமது

௩௧௩. ஒருவர்க் கொருவாய் கொண்டுரைக்க
    ஒண்ணா தேனு முண்டாகுஞ்
செருவைச் சிறியேன் விண்ணப்பஞ்
    செய்யச் சிறிது கேட்டருளே.

ப - ரை :—ஒரு வாய் கொண்டு - ஒரு வாயால், உரைக்க - (கலிங்கப் போரை) சொல்ல, ஒருவர்க்கு ஒண்ணாது எனும் - ஒருவராலும் முடியாதாலும், உண்டாகும் செருவை - (கலிங்கத்தில்) நிகழும் போரை, சிறியேன் - (அறிவில்) சிறியேனாகிய நான், சிறிது விண்ணப்பம் செய்ய - சிறிதளவு சொல்ல, கேட்டருள் - (தேவியே) கேட்பாயாக.

வி - ரை :—முன்பு 'நாவாயிரமும் வேண்டும்' என்றமையால், இங்கு 'ஒருவாய் கொண்டுரைக்க ஒண்ணாது' என அப்பேய் கூறினதென்க. கற்று வல்ல புலவராலும் புகலுதற்கரிய அப்போரின் சிறப்பைச் சிற்றறிவினையுடைய தன்னால் முற்றுஞ் சொல்ல முடியாமை பற்றி, 'சிறியேன்' எனவும், தேவியின் பெருமையும் தன் பணிவுந் தோன்ற 'விண்ணப்பம் செய்ய' எனவும் அப்பேய்

மொழிந்ததாம். சிறிது கேட்டருள் எனினுமாம். ஒண்ணாது, எனும்—இவை முறையே ஒன்றுது, எனினும் என்பவற்றின் மரூஉக்கள். சிறியேன்—குறிப்பு வினையாலணையும் பெயர். (உ)

காஞ்சி நகரின் மேன்மை

ரு௧௪. பாரெ லாமுடை யானப யன்கொடைப்
பங்க யக்கர மொப்பெனப் பண்டோர்நாள்
காரெ லாமெழுந் தேழரை நாழிகைக்
காஞ்ச னம்பொழி காஞ்சிய தன்கணே.

ப - ரை :—பார் எலாம் - உலகங்கள் எல்லாவற்றையும், உடையான்- (தனக்கே உரிமையாக) உடையவனாகிய, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழனுடைய, கொடை - (இரப்பவர்க்கு) கொடுத்தலையுடைய, பங்கயம் கரம் - தாமரை மலர் போன்ற கைகளுக்கு, ஒப்பு என - ஒப்பு என்று சொல்லும்படி, பண்டு ஓர் நாள் - முன்பு ஒரு காலத்தில், கார் எலாம் - மேகங்கள் எல்லாம், எழுந்து - (ஆகாயத்தில் திரண்டு) எழுந்து, ஏழரை நாழிகை - ஏழரை நாழிகை யளவும், காஞ்சனம் பொழி - பொன் மாரி பொழிந்த, காஞ்சி அதன்கண் - காஞ்சி புரத்தில்,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் கொடைக்கு நிகராய் மேகங்களெல்லாம் ஏழரை நாழிகை வரையில் பொன்மாரி பொழிந்த காஞ்சிபுரத்தி லென்பதாம். இரண்டரை நாழிகை கொண்டது ஒரு மணியாதலால், ஏழரை நாழிகை மூன்றுமணி நேரமாம். பங்கயம்—சேற்றில் முளைப்பது. பங்கம்—சேறு, ஜம்—முளைப்பது. 'காரெலாம்' என்றது ஆவர்த்தம், சம்வர்த்தம், புஷ்கலா வர்த்தம், துரோணம், காளமேகம், நீலமேகம், சிலாவர்ஷம் என்னும் ஏழு மேகங்களில் பொன்மாரி பொழியும் புஷ்கலா வர்த்தத்தின் திரளை யென்க. இச்செய்யுள் எதிர்நிலையணியாம்.

பொன்மாரி பொழிந்த வரலாறு :—ஒரு காலத்தில் பார்வதி தேவியார் சிவபெருமானாரைக் கணவராகப் பெற்று அவருடன் கூடி மகிழக் கருதிக் காஞ்சிபுரத்தில் தவஞ்செய்யத் தொடங்கினர். அப்போது சிவபெருமானர் அவ்வம்மையாரின் விருப்பத்தை நிறைவேற்றின தன்றி, அப்பதியிலுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் பொன்மயமாக்கக் கருதிப் பொன்மழை பொழிவித்தார். உடனே அங்குள்ள மரஞ்செடி கொடிகளும் பொன்மயமாய் விளங்கின வென்பதாம். 'சுந்தரம் பொலம் பூமழை நிரந்தரஞ் சொரிந்த' [காஞ்சிப்புராணம் தழுவக் குழை - ருகூ0] என்றமை காண்க. (ரு)

## முதற் குலோத்துங்கன் திருவோலக்கச் சிறப்பு

காஞ்சி மாளிகையின் தன்மை

ருகரு. அம்பொன் மேருவ துகொலி துகொலென்
றும்பி ரங்கதிர் வெய்யவ னையுறுஞ்
செம்பொன் மாளிகைத் தென்குட திக்கினிற்
செய்த சித்திர மண்டபந் தன்னிலே.

ப - ரை :—ஆயிரம் கதிர் - ஆயிரம் கிரணங்களையுடைய, வெய்யவன் - சூரியனானவன், அம் பொன் மேரு - அழகிய பொன்னாலாகிய மேரு மலை, அதுகொல் - அதுதானோ, இதுகொல் என்று - இதுதானோ வென்று, ஐயம் உறும் - சந்தேகம் கொள்ளும், செம்பொன் மாளிகை - செம்பொன்னால் கட்டிய அரண்மனையில், தென் குடக்கு திக்கினில்

தென்மேற்குத் திசையில், செய்த - செய்தமைத்த, சித்திரம் மண்டபம் தன்னில் - அலங்கார மண்டபத்தில்,

வி - ரை :—மேருமலை போல் பொன்னால் கட்டிய அரண்மனையில் தென் மேற்குத் திக்கில் அமைந்த அலங்கார மண்டபத்தில் என்பதாம். அது—என்றது மேரு மலையையும், இது—என்றது முதற் குலோத்துங்கன் தங்கியிருந்த மாளிகையையுமாம். மேருமலை பொன்னா லமைத்து வானளாவி இருத்தல் போல் இம் மாளிகையு மிருத்தலால், சூரியன் இவ்விரண்டிற்கு முள்ள வேற்றுமை யறியாது சந்தேகித்தன னென்க. சூரியன் ஆயிரங்கதிர்களுடையவ னென்பதை, 'மாசில், ஆயி ரங்கதிர் ஞாயிறுந் தெருஉம்' [பரிபா-௩-௨௨] எனவும், 'உலையாத வொளிகொண்ட கதிராயி ரத்தோனும்' [வில்லிபா - கஉ - போர்-கூ௩] எனவும், 'ஆயிரமான வெய்யகதி ராறிரண்டு' [தக்கயா-௬௪0] எனவும் வருவதனாலறிக. கொல்—இரண்டும் ஐயப் பொருளன. வெய்யவன் மேருமலைக்கும் பொன்மாளிகைக்குமுள்ள வேற்றுமை யுணராமல், ஐயுற்றமை யால் இஃதையவணியாம். (ஸந்தேகா லங்காரம்) (இதுமுதல் ௩௨அ - ம் - தாழிசையளவும், முதற் குலோத்துங்கன் திருவோலக்கச் சிறப்புக் கூறப்படும். ()

விற்றிருந்த இடச்சிறப்பு

௩கசு. மொய்த்தி லங்கிய தாரகை வானிநீண்
முகட்டெ ழுந்த$மு ழுமதிக் கொப்பென
நெய்த்தி லங்கிய நித்திலப் பந்தரின்
நின்று வெண்குடை யொன்றுநி ழற்றவே.

ப - ரை :—மொய்த்து இலங்கிய-நெருங்கி விளங்குகின்ற, தாரகை - நட்சத்திரங்களையுடைய, நீள் வானின் முகடு - நீண்ட ஆகாயத்தின் உச்சியில், எழுந்த - உதித்த, முழு மதிக்கு ஒப்பு என - முழு நிலாவுக்கு ஒப்பாகும் என்று சொல்லும்படி, நெய்த்து இலங்கிய - நெய்ப்பசை யுடையனவாய் விளங்கிய, நித்திலம் பந்தரின் - முத்துப் பந்தலில், வெண் குடை - வெண்கொற்றக் குடை, ஒன்று நின்று - ஒன்று (நிலை பெற்று) நின்று, நிழற்ற - நிழலைத் தர,

வி - ரை :—தாரகை போன்ற முத்துக்களைப் பதித்த வான்போன்ற பந்த லில் முழுமதிபோன்ற வெண்குடை நிழலில் (முதற் குலோத்துங்கன்) வீற்றிருந் தன னென்பதாம். வான் பந்தருக்கும் தாரகை முத்துக்களுக்கும், முழுமதி வெண் குடைக்கும் உவமையாம். இங்குக் கூறியதற் கேற்ப, மீன் பூத்த விசும்பது போல் தாளங் கோத்து, விரித்தநீ லப்பட்டு விதானந் தோன்ற, வான்பூத்த கலைமதி போல் கவிகை யோங்க' [சீரங்கநாயகர் ஊசல்-௩] என் றமை காண்க. பேரொளி படைத்த புதிய முத்துக்க ளென்பார், நெய்த் திலங்கிய நித்திலம்' என்றார். நித்திலப் பந்தர்—மூன்றனுருபும் பயனும் உடன் தொக்க தொகை.; பந்தர்—பந்தலென்பதன் போலி ; நெய்த்து—நெய்யென் னும் பெயரடியாய்ப் பிறந்த இறந்தகால வினையெச்சம். இச்செய்யுள் உவமை யணியாம். பா - பே :—$ முழுமதிப் பத்தியின். (௫)

மதிக்குடையின் சிறப்பு

௩கள. மேற்க வித்தம திக்குடை யின்புடை
வீசு கின்றவெண் சாமரை *தன்றிருப்
பாற்க டற்றிரை யோரிரண் டாங்கிரு
பாலும் வந்துப ணிசெய்வ போலுமே.

ப - ரை :—மேல் கவித்த - மேலே போர்த்திருக்கின்ற, மதி குடையின் - சந்திரனைப் போன்ற வெண் குடையின், புடை - (இரண்டு)

பக்கங்களிலும், வீசுகின்ற - வீசப்படுகின்ற, வெண் சாமரை - வெண் சாமரைகள், தன் திரு - தனது அழகிய, பால் கடல் - திருப்பாற் கடலினுடைய, ஓர் இரண்டு திரை - ஒப்பற்ற இரண்டு அலைகள், ஆங்கு - அந்த மண்டபத்தில், இரு பாலும் வந்து - (முதற் குலோத்துங்கனுக்கு) இரண்டு பக்கங்களிலும் வந்து, பணி செய்வ போலும் - ஏவல் தொழிலைச் செய்வதை ஒத்திருக்கும்.

வி - ரை :—சந்திரனைப் போல் விளங்குங் குடையின் கீழ் வீசப்படுஞ் சாமரைகள் திருப்பாற் கடலின் இரண்டு அலைகள் முதற் குலோத்துங்கனுக்கு இருபுறமும் வந்து பணி செய்வதை யொத்திருந்தன வென்பதாம். திருமாலே முதற் குலோத்துங்கனாய்த் தோன்றினனென்பது ஆசிரியர் கொள்கையாதலின் [தா-உ௯உ] 'தன் திருப்பாற்கடல்' என்றார். 'தன்' என்றது இங்கே திருமாலாகிய முதற் குலோத்துங்கனை யென்க. மதிக்குடை யென்றது உவமையணியும், 'வெண்சாமரை......பணிசெய்வ போலும்' என்றது இல்பொருளுவமை யணியுமாம். பா - பே :—* தென்றிசை.

(௯கக) (தேவி) உரைத்தருள (௯கஉ) (கலிங்கப்பேய்) வேண்டும் (௯கஙு) கேட்டருள் (௯கச) காஞ்சியதன்கண் (௯கரு) மண்டபந்தன்னில் (௯கசு) குடை நிழற்ற (௯கஎ) திரை......பணி செய்வ போலும் என முடிக்க. (சு)

**சிங்காசனத்தில் இருந்தமை**

௯கஅ. அங்கண் ஞாலம னைத்தும்பு யத்தில்வைத்
தாட கக்கிரி யிற்புலி வைத்தவன்
சிங்க வாசனத் தேறியி ருப்பதோர்
சிங்க வேறெனச் செவ்விசி றக்கவே.

ப - ரை :—அம் கண் ஞாலம் - அழகிய இடமகன்ற உலகங்கள் அனைத்தும் - எல்லாவற்றையும், புயத்தில் வைத்து - (தன்) தோளில் தாங்கி, ஆடகம் கிரியில் - பொன்னாலாகிய மேரு மலையில், புலி வைத்தவன் - (தனது) புலிக்கொடியைப் பதித்தவனாகிய முதற் குலோத்துங்கன், சிங்க ஆசனத்து - சிங்காசனத்தில், ஏறி இருப்பது - ஏறி இருப்பதாகிய, ஓர் சிங்கம் ஏறு என - ஒப்பற்ற ஆண் சிங்கம் போல, செவ்வி சிறக்க - அழகு சிறந்து விளங்கவும்,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் ஆண் சிங்கம்போல் சிங்காசனத்தில் வீற்றிருந்தானென்பதாம். 'ஞாலமனைத்தும் புயத்தில் வைத்து' என்றது, எல்லாவுலகங்களும் இவன் ஆட்சிக் குட்பட்டிருந்தன வென்பதாம். இமய மலையில் புலிக்கொடியைப் பதித்தவன் இவன் முன்னோனாகிய கரிகாலனும். இவ்வரலாற்றை ௧எஅ-ம் தாழிசையிற் காண்க. அவன் செய்கையை, 'ஆடகக் கிரியிற் புலிவைத்தவன்' என இவன் மேலேற்றிக் கூறினார் [தா-உஎ௩]. மேருமலைக்கும் இமயமலைக்கும் வேற்றுமை கருதாது கூறுதல் கவிகளி னியல்பாகலின், 'ஆடகக் கிரியில்' என்றார். இதனை 'பனிமாலிமயப் பொருப்பகஞ் சேர்ந்தபொல்லாக் கருங் காக்கை' [யாப்ப-காரிகை-௩] எனவும், 'கனக மலையருகே போயின காக்கை' [பொன்வண் - க00] எனவும் வருமாற்றானறிக. சிங்க + ஆசனம் = சிங்காசனம், தீர்க்கசந்தி ; இஃதிவ்வாறு புணராமல் தமிழ் விதிப்படி உடன்படுமெய் பெற்றுச் சிங்கவாசனம் எனப் புணர்ந்த தென்க. 'சாளரந் தோறுந் தோன்றுஞ் சந்திர வுதயங் கண்டார்' [பாலகா - மிதிலைக்கா - கச] என்றார் கம்பரும். இதன் ஈற்றடியில் இல்பொருளுவமையணி யுள்ளமை காண்க. (எ)

விற்றிருந்த தன்மை

நஉகக. பணிப்ப ணத்துறை பார்க்கொரு நாயகன்
பல்க லைத்துறை நாவிலி ருந்தவன்
மணிப்ப ணிப்புயத் தேசிங்க வாகனி
வந்து செந்திரு மாதொடி ருக்கவே.

ப - ரை :—பணி பணத்து - ஆதிசேஷன் தலையில், உறை பார்க்கு - பொருந்திய உலகத்திற்கு, ஒரு நாயகன் - ஒப்பற்ற தலைவனும், பல் கலை துறை - பலவகையாகிய நூல்களின் வகைகள், நாவில் இருந்தவன் - (தன்) நாவில் தங்கப்பெற்றவனுமாகிய முதற் குலோத்துங்கனுடைய, மணி பணி - இரத்தினங்களைப் பதித்த ஆபரணங்களை யணிந்த, புயத்தே- தோள்களில், சிங்க வாகனி - சிங்கவாகனத்தையுடைய வீரமகள், செம் திரு மாதொடு - செம்மையாகிய குணங்களையுடைய திருமகளோடு, வந்து இருக்க - வந்து குடிகொண்டிருக்கவும்,

வி - ரை :—'ஒரு நாயகன்' என்றது ஏக சக்ராதிபதி யென்பதாம். 'ஒரு நாயகமா யோட வுலகுட னுண்டவர்' [திருவாய்-ச-க-க] என்றார் பெரியாரும். 'சிங்கவாகனி.........இருக்க' என்றமைக் கேற்ப, 'விற்படை வெற்றி மடந்தையு மிக்க மலர்திரு வும்பயில், மற்புய வெற்றியன்' [திருவாதவூ-மந்திரி-உக] என்றார் பிறரும். பணம்—படம்; இது சினையாகு பெயராய்த் தலையை யுணர்த்தினது. பார்—பருமை என்றதன் விகாரம்; இது பண்பாகு பெயராய்ப் பூமியை யுணர்த்தினது. இருந்தவன்—வினையாலணையும் பெயர். (அ)

தேவியருடனிருந்தமை

நஉ0. தருமட ங்கமு கந்துத னம்பொழி
தன்பு யம்பிரி யாச்சயப் பாவையுந்
திருமட ந்தையும் போற்பெரும் புண்ணியஞ்
செய்த தேவியர் சேவித்தி ருக்கவே.

ப - ரை :—தரு மடங்க - கற்பக விருட்சம் (நாணித் தலை) கவிழும் படி, தனம் - பொருளை, முகந்து பொழி - (இரவலர்க்கு) வாரிப் பொழியும், தன் புயம் பிரியா - (கைகளையுடைய) தனது தோள்களை விட்டு நீங்காத, சயம் பாவையும் - வீர மகளும், திரு மடந்தையும் போல்- இலக்குமி தேவியும் போல, பெரும் புண்ணியம் செய்த - அதிக புண்ணிய காரியங்களைச் செய்த, தேவியர் - மனைவிமார்கள், சேவித்து - (அவனை) வணங்கி, இருக்க - (அவனருகில் உட்கார்ந்து) இருக்கவும்,

வி - ரை :—கொடைக்குக் கற்பக விருட்சத்தை உவமை கூறுதலியல்பு. 'தருவெனப் பார்மேல் தருசந் திரன்சுவர்க்கி' [நளவெ - கலிதொடர்-க0க] எனவும் 'தருகிகர் கரத்தாய்' [குசேலோ-குசேலர் மேல்கடல்-க0ரு] எனவும் வருமாறு காண்க. தேவியரென்றது தியாகவல்லி, ஏழிசைவல்லபி யென்பாரை; அவர்களில் மூத்தவளும் பட்டத்து மனைவியுமாகிய தியாகவல்லி யென்பவள் முதற் குலோத்துங்கனுக்கு வலப்புறத்தும் இளையவளாகிய ஏழிசை வல்லபி அம்மன்னவனுக்கு இடப்புறத்தும் வீற்றிருந்தன ரென்க. அவர்கள் அவனுக்கு மனைவியாய் வந்து வாய்த்தமை, அவர்கள் முற்பிறப்பிற் செய்த பெரும் புண்ணியத்தின் பயனே யாமென்பது ஈற்றடியின் கருத்தாம். வீர மகளும், திருமகளும் அவனை விட்டு நீங்காம லிருப்பதுபோல், அவர்களும் அவனை விட்டு நீங்காம லுறைவா ரென்க. (க)

நாட்டியப் பெண்கள் சூழ்ந்திருந்தமை

௩உக. நாட காதிநி ருத்தம னைத்தினு
நால்வ கைப்பெரும் பண்ணினு மெண்ணிய
ஆடல் பாடல ரம்பைய ரொக்குமவ்
†வணுக்கி மாரும நேகரி ருக்கவே.

ப - ரை :—நிருத்தம் ஆதி - நிருத்தம் முதலாகிய, நாடகம் அனைத்தினும் - நாடகங்கள் எல்லாவற்றினும், நால் வகை பெரும் பண்ணினும் - நான்கு வகையாகிய சிறந்த பாடல்களிலும், எண்ணிய - (தாம்) நினைத்த, ஆடல் பாடல் - ஆடல்களையும் பாடல்களையு மியற்றும், அரம்பையர் ஒக்கும் - தெய்வப் பெண்களை யொத்திருக்கும், அ அணுக்கிமாரும் - அருகிலிருந்து குற்றேவல் செய்யும் அழகிய பெண்களும், அநேகர் இருக்க - பலர் இருக்கவும்,

வி - ரை :—ஆடல் பாடல்களில் வல்ல நாட்டியப் பெண்கள் பலர் அலங்கார மண்டபத்தில் வீற்றிருந்தன ரென்பதாம். ஆதி என்றது இங்கே நாட்டியம், தாண்டவங்களை; 'நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து, காட்டினளாதலின்' [சிலப்-௩-௧௫௮, ௧௫௯] என்னு மடிகளுக்கு; "தாண்டவம், நிருத்தம், நாட்டிய மென்னும் மூன்று கூறுபாட்டினும் நாட்டிய மென்றது புறநடத்தை யாகலின், அதனை நூற்களிற் சொன்ன முறையை வழுவாமல் அவிநயித்துப் பாவகந் தோன்ற விலக்குறுப்புப் பதினாலின் நெறி வழுவாமல் ஆடிக் காட்டினா ளாதலா னென்றவாறு" என்று வரைந்திருக்கும் உரையை இங்குக் கவனிக்க. நால் வகைப் பண்ணாவன :—பாலைப் பண், குறிஞ்சிப் பண், மருதப் பண், செவ்வழிப் பண் என்பன. 'நாடி நாற்பெரும் பண்ணு நயப்புற' [கம்பரா-ஊர் தேடு-௧௭௮] எனவும், 'நாற்பெரும் பண்ணு மதினெழு திறனும்' [வீரசோ-௧௩௬-ம்-செய்-மேற்கோள்] எனவும் வருமாறு காண்க. அ—அழகு; இவ்விரு செய்யுட்களிலும் உவமையணி யுள்ளமை அறிக. பா - பே :—† அணங்கு மாரும். (௫0)

சூதகர், மாதகர், மங்கலப் பாடகர் புகழ்ந்தமை

௩உஉ. சூதர் மாகத ராதிய மாந்தருந்
துய்ய மங்கலப் பாடகர் தாமுநின்
பாத மாதர ராயவர் கட்கெலாம்
பைம்பொன் மௌலியெ னப்*புகழ் பாடவே.

ப - ரை :—சூதர் - (முதற் குலோத்துங்கன் புகழை) நின்றேத்துவோரும், மாகதர் - இருந்தேத்துவோரும், ஆதிய மாந்தரும் - முதலாகிய மக்களும், துய்ய - பரிசுத்தமாகிய, மங்கலம் பாடகர் தாமும் - மங்கலமாகிய பாடல்களைப் பாடுவோர்களும், ராயவர்கட்கு எல்லாம் - அரசர்களுக்கெல்லாம், நின் பாதம் - உன் பாதங்களே, ஆதாரம் - ஆதாரமும், பை பொன் மௌலி - பசும் பொன்னாலாகிய கிரீடமுமாம், என புகழ் பாட - என்று (அவன்) புகழைப் பாடவும்,

வி - ரை :—சூதர், மாகதர், மங்கலப் பாடகர் முதலானோர் முதற் குலோத்துங்கனைப் புகழ்ந்து பாடலாயின ரென்க. ஆதிய மாந்தரென்றது—இங்கே வைதாளிகர், வந்தியர் என்பாரை; 'மாகதப் புலவரும் வைதா ளிகரும், சூதரு நல்வலந் தோன்ற வாழ்த்த' [சிலப்-உ௬-எச, எ௫] எனவும், 'சூத ரேத்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப' [மதுரைக்கா-௬௭0-௭௧] எனவும், 'பரசுவந்தியர் முன் சூதர் மாகத ரொருபால்' [பெரியபு-திருவாரூர்-உ] எனவும் வருமாறு காண்க. பா - பே :—* கழல் போற்றவே. (௫௧)

### இசைவல்லார் வணக்கம்

௩௨௩. வீணை யாழ்குழ றண்ணுமை வல்லவர்
வேறு வேறிவை நூறுவி தம்படக்
காண லாம்வகை கண்டன நீயினிக்
காண்டல் வேண்டுமெ னக்கழல் போற்றவே.

ப - ரை:—வீணை - வீணைத் தொழிலிலும், யாழ் - யாழ்த் தொழிலிலும், குழல் - வேய்ங்குழல் தொழிலிலும், தண்ணுமை - மத்தளத் தொழிலிலும், வல்லவர் - வல்லவர்களாகிய இசைப் புலவர்கள், இவை - (எங்கள் தொழில்களாகிய) இவை, வேறு வேறு - வெவ்வேறாய், நூறு விதம் பட - பலவகைப் படும்படி, காணல் ஆம் வகை - (தாங்கள்) காணுதற்குத் தகுதியாகிய வகையில், கண்டனம் - (நாங்கள் இசை கூட்டி) அமைத்தோம், இனி நீ காண்டல் வேண்டும் - இனி நீங்கள் (இவற்றை) காணுதல் வேண்டும், என கழல் போற்ற - என்று (முதற் குலோத்துங்கன்) பாதங்களை வணங்கவும்,

வி - ரை:—வீணை முதலிய தொழில்களில் வல்லவர் தங்கள் அரிய வித்தையைக் காணும்படி முதற் குலோத்துங்கனை வணங்கின ரென்பதாம். வீணை, யாழ் எனப் பொதுபடக் கூறினமையால், வீணைகளின் வகையாகிய வேதவீணை, பிரமவீணை, உருத்திர வீணை, கந்தருவ வீணை, மகதி வீணை முதலியவற்றையும், யாழ்களின் வகையாகிய பேரி யாழ், மகர யாழ், சகோட யாழ், செங்கோட்டி யாழ் என்பவற்றையுங் கொள்க. இவைகளில் வீணையும் யாழும் நரப்புக் கருவியும், குழல் தொளைக் கருவியும், தண்ணுமை உத்தமத் தோற் கருவியுமாம். வீணை முதலிய நான்கினும் எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன. (௧௨)

### முதற் குலோத்துங்கன் இசை நூலின் வல்லமை

௩௨௪. தாள முஞ்செல வும்பிழை யாவகை
தான்வ குத்தன தன்னெதிர் பாடியே
காள முங்களி றும்பெறும் பாணர்தங்
கல்வி யிற்பிழை கண்டனன் கேட்கவே.

ப - ரை:—தான் வகுத்தன - முதற் குலோத்துங்கன் ஏற்படுத்தினவாகிய, தாளமும் - தாளவொற்றும், செலவும் - ஆளத்தியால் நிரம்பப் பாடுதலும், பிழையா வகை - (சிறிதும்) தவறாத முறையில், தன் எதிர் பாடி - அவனுக்கு எதிரில் பாடி, காளமும் - ஊது கொம்புகளையும், களிறும் - யானைகளையும், பெறும் - (பரிசாக) பெற்றுக்கொள்ளும், பாணர் தம் - இசை பாடுவோருடைய, கல்வியில் - வித்தையில், பிழை கண்டனன்-குற்றத்தைக் கண்டு, கேட்க - (அவன் அவர்களை) கேட்கவும்,

வி - ரை:—இசை பாடும் புலவர்கள் பாடலில் முதற் குலோத்துங்கன் குற்றங் கண்டன னென்பதாம் 'தான்' என்றது, அக்கொற்றவனை யென்க. 'தான் வகுத்தன' என்றதற் கேற்ப, 'சோழகுல சேகரன் வகுத்த விசையின் மதுரவாரி' [தா-உ௮௫] என்றார் முன்னும்; இதனால், இவன் இசை நூலில் வல்லவனெனத் தெரிகிறது. 'தாளமுஞ் செலவும் பிழையாவகை' என்றதனால், பாணர் நன்கு பாடின ரென்பதும், 'பிழை கண்டனன் கேட்க' என்றதனால், அவர்கள் பாடிய பாடல்களில் அம்மன்னவனைத் தவிர வேறெவராலுங் குற்றங் காண வியலவில்லை யென்பதும் விளங்கும். ஐவகைக் கருவிகளில் நரப்புக்

கருவி, தோலைக் கருவி, தோற் கருவிகளை முன் செய்யுளில் கூறி, இதில் 'தாளம்' என்றதனுல் கஞ்சக் கருவியையும், 'பாடி' என்றதனுல் மிடற்றுக் கருவியையுங் கூறினர். பண்டைய வேந்தர்கள் புலவர்களுக்கும் பாணர்களுக்கும் பொன், பரி, களிறு முதலியவற்றேடு காளத்தையும் பரிசு வழங்கலியல்பு; 'கூழைத்தண் டமிழுக்கேன் கொடியுங்கா ளமுமே' [தனிப்பா-க-ஒட்டக்-புகழேந்-௩] என வருமாறு காண்க. உம்மைகள் நான்கும் எண்ணின்கண் வந்தன. கண்டனன்—முற்றெச்சம். (க௩)

குலோத்துங்கனுக்கு வேந்தர் தொண்டாற்றல்

௩௨௫. வெங்க ளிற்றிலி ழிந்தபின் வந்தடி
வீழ்ந்த மன்னவர் வெந்நிடு முன்னிடு
தங்கள் பொற்குடை சாமர மென்றிவை
தாங்க டங்கரத் தாற்பணி மாறவே.

ப - ரை :—வெம் களிற்றில் - கொடிய யானைகளின் மேலிருந்து, இழிந்த பின் - இறங்கிய பின், வந்து - (அலங்கார மண்டபத்தில்) வந்து, அடி வீழ்ந்த - (முதற் குலோத்துங்கன்) பாதங்களில் விழுந்து வணங்கிய, மன்னவர் - அரசர்கள், வெந் இடு முன் - (போரில் அவனுக்கு) முதுகு காட்டி யோடு முன்பு, இடு - விட்டுப்போன, தங்கள் பொன் குடை - தங்கள் அழகிய குடைகளும், சாமரம் - சாமரங்களும், என்ற இவை - என்று சொல்லப்பட்ட இவைகளை, தாங்கள் - அவர்களே, தம் கரத்தால் - தங்கள் கைகளால், பணி மாற - (பிடித்து) குற்றேவல் புரியவும்,

வி - ரை :—அரசர் பலர் முன்பு முதற் குலோத்துங்கனேடு போராடி இழந்த தங்கள் வெண் கொற்றக் குடை, சாமரை முதலியவைகளைப் பிடித்து அவனுக்குக் குற்றேவல் புரிந்தன ரென்பதாம். வெந்நிடல்—முதுகுகாட்டி யோடல்; வெந்—முதுகு; இது வெரிந் எனவும் வரும். (கச)

மன்னர் மனைவியர் தொண்டாற்றல்

௩௨௬. தென்ன ராதிந ராதிப ரானவர்
தேவி மார்கடன் சேடிய ராகவே
மன்ன ராதிபன் வானவ ராதிபன்
வந்தி ருந்தன *னென்னவி ருக்கவே.

ப - ரை :—தென்னர் ஆதி - பாண்டியர் முதலாகிய, நராதிபர் ஆனவர் - அரசர்களின், தேவிமார்கள் - மனைவிமார்கள், தன் சேடியர் ஆக - தனது பணிப் பெண்களாக, மன்னன் ஆதிபன் - அரசர்களுக் கெல்லாந் தலைவனுகிய முதற் குலோத்துங்கன், வானவர் ஆதிபன் - தேவர்களுக் கெல்லாந் தலைவனுகிய தேவேந்திரன், வந்து இருந்தனன் - (தேவ சபையில்) வந்து உட்கார்ந்தான், என்ன - என்று (கண்டோர்) சொல்லும்படி, இருக்க - (அவன் தன் சிங்காசனத்தில்) உட்கார்ந் திருக்கவும்,

வி - ரை :—தேவமாதர் பலர் குற்றேவல் புரியத் தேவேந்திரன் தேவ சபையில் வீற்றிருத்தல்போல், மன்னர் மனைவியர் பலர் குற்றேவல்புரிய முதற் குலோத்துங்கன் அலங்கார மண்டபத்தில் வீற்றிருந்தன னென்பதாம். இதனுல், தமிழ் வேந்தர்கள் தம்பகைவரை வென்றபின், அவர்தம் மனைவியரைத் தமக்குப் பணிப்பெண்களாக அமைத்துக்கொண்டிருந்தரெனத் தெரிகிறது. [தா - ச0, சுக] அரசர்களின் செல்வச் சிறப்பைக் கருதி அவர்களுக்கு இந்திரனை உவமை கூறுதலியல்பு. 'இந்திர திருவனைக் காண்குது மென்றே' [சிலப்-உசு-கூச] எனவும்,

'இந்திர திருவற் குய்த்தார்' [சீவகசி-கஉகூச] எனவும், 'இந்திர திருவன் செல்ல வெழுந்தன' எனவும், 'இந்திர திருவன் றன்னை யெதிர்கொள்வா னெழுந்து வந்தான்' [கம்பரா-எழுச்சி-எக; எதிர்கோள்-ச] எனவும், இந்திரதிருவன் சென் றினி தேறலும்' [மணிமே-ககூ-ககசு] எனவும் வருமாற்றானறிக. இதில் உவமை யணி யுள்ளமை காண்க. பா - பே :—* ஒக்கவி ருக்கவே. (கரு)

அமைச்சருடன் இருந்தமை

நஉஎ. மண்ட லீகரு மாநில வேந்தரும்
வந்து ணங்குக டைத்தலை வண்டைமன்
தொண்டை மான்முதன் மந்திரப் பாரகர்
சூழ்ந்து தன்கழல் சூடியி ருக்கவே.

ப - ரை :—மண்டலீகரும் - சிற்றரசர்களும், நிலம் - பூமியையாளும், மா வேந்தரும் - பேரரசர்களும், வந்து - (முதற் குலோத்துங்கனைக் காண) வந்து, உணங்கு - (அவன் வரவை நாடி) வருந்தும், கடைத்தலை - தலை வாசலில், வண்டை மன் - வண்டை என்னும் நகரத்திற்குத் தலைவனாகிய, தொண்டைமான் முதல் - கருணாகரத் தொண்டைமான் முதலாகிய, மந்திரம் பாரகர் - ஆலோசனையில் வல்ல மந்திரிமார்கள், தன் கழல் சூடி - முதற் குலோத்துங்கன் பாதங்களை (தங்கள் முடியில்) அணிந்து, சூழ்ந்து இருக்க - (அவனை) சுற்றி வீற்றிருக்கவும்,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் சிங்காதனத்தில் வீற்றிருந்தபோது கருணாகரத் தொண்டைமான் முதலிய மந்திரிகள் அவனைச் சூழ்ந்திருந்தன ரென்பதாம். மண்டலீகர் என்பது அரசர்களைக் குறிக்குமாயினும், 'மாநில வேந்தரும்' என அடுத்து வருதலால், அஃதிங்குச் சிற்றரசரைக் குறித்த தென்க. சிற்றரசரும் பேரரசரும் நாள்தோறுந் தத்தங் காரியங்களை நாடி அவ்விறையவன் தலைவாசலில் ஒருங்கு கூடி அவன் வரவை எதிர் நோக்கி வருந்துவரென்பார், 'வந்துணங்கு கடைத்தலை' என்றார். மந்திர பாரகர்—ஆலோசனையில் கரைகண்டவர்; வண்டைமன்—இதனைத் தாழிசை நசசக-ல் காண்க. நககரு-ம் தாழிசை முதல் இதுகாறும் கூறியவை முதற் குலோத்துங்கன் திருவோலக்கச் சிறப்பாம். (கசு)

சிற்றரசர் உள் சென்றமை

நஉஅ. முறையி டத்திரு மந்திர வோலையாண்
முன்வ ணங்கிமு ழுவதும் வேந்தர்தந்
திறையி டப்புற நின்றன ரென்றலுஞ்
$செய்கை நோக்கிவந் தெய்தியி ருக்கவே.

ப - ரை :—முறை இட - (அரசர்கள்) முறையிட்டுக் கொள்ள, திரு மந்திர ஓலை ஆள் - திரு மந்திர வோலைக்காரன், முன் வணங்கி - (முதற் குலோத்துங்கன்) எதிரில் (நின்று) வணங்கி, வேந்தர் - அரசர்கள், தம் திறை முழுவதும் இட - தங்கள் கப்பம் முற்றும் செலுத்துவதற்கு, புறம் நின்றனர் - வெளியில் நிற்கின்றார், என்றலும் - என்று சொல்லுதலும், செய்கை - (அம்மன்னவன்) உடன்பாட்டை, நோக்கி - (ஓலையாள் மூல மாய் அரசர்) அறிந்து, வந்து எய்தி - (அவர்கள் அனைவரும்) வந்து சேர்ந்து, இருக்க - (நெருங்கி) இருக்கவும்,

வி - ரை:—முதற் குலோத்துங்கன் கருத்தைத் திருமந்திர வோலைக்காரன் அரசர்களுக் குணர்த்த, அவர்கள் தங்கள் திறையைச் செலுத்த உள்ளே சென்றன ரென்பதாம். மந்திர வோலையாள்:—இவன் அரசன் ஆணையின்படி அவன் கட்டளைகளை யெழுதி அவற்றை நிறைவேற்றுபவன்; மந்திரவோலை யெழுதுவோரை மந்திரக் கணக்க ரெனவுங் கூறுவர். இதனை, 'காவிதி மந்திரக் கணக்கர் தம்மொடு,' [சிலப்-உஉ-கூ] என்றதனு லறிக. செய்கை - உடன்பாடு, 'அருமறை நாவலாதி சைவனூரன் செய்கை' [பெரியபு-தடுத்தாட்-ருகூ] என வருமாறு காண்க. பா-பே:—$ செய்த நோக்கில்வர் தெய்தி நெருக்கவே. (கஎ)

சபையில் பல தேயத்தரசர்கள் ஒருங்கு கூடினமை

ஙஉகூ. தென்னவர் வில்லவர் கூபகர்
சாபகர் சேதிபர் யாதவரே
கன்னடர் பல்லவர் கைதவர்
காடவர் காரிபர் கோசலரே.

ப - ரை:—தென்னவர் - தென்திசையிலுள்ள அரசர்களும், வில்லவர் - சேரர்களும், கூபகர் - கூபகர்களும், சாபகர் - சாபகர்களும், சேதிபர் - சேதிபர்களும், யாதவர் - யாதவர்களும், கன்னடர் - கன்னடர்களும், பல்லவர் - பல்லவர்களும், கைதவர் - பாண்டியர்களும், காடவர் - காடவர்களும், காரிபர் - காரிபர்களும், கோசலர் - கோசலர்களும்,

வி - ரை:—இச்செய்யுளில் கூறியது அவ்வந்நாட்டு அரசர்களை யென்க. சேரர் விற்கொடி யுடையவராதலால், வில்லவரெனப்பட்டார்; யாதவரே— இதிலுள்ள ஏகாரம் எண்ணின்கண் வந்தது. இதனைத் தென்னவர் முதலியவற் றிற்குங் கூட்டுக. 'எண்ணே கார மிடையிட்டுக் கொளினும், எண்ணுக் குறித் தியலு மென்மனார் புலவர்' [தொல்கா-இடை-சo] என்பது விதி. இறுதியி லுள்ள ஏகாரம் ஈற்றசை. இதுமுதல் நான்கு செய்யுட்கள் முதற் குலோத்துங்கன் சபையில் பல தேயத்தரசர்கள் ஒருங்கு கூடினமையை யுணர்த்தும். (கஅ)

இதுவுமது

ஙஙo. சங்கர் * க ராளர்க விந்தர் து
மிந்தர்க டம்பர்து ளும்பர்களே
வங்கரி லாடர்ம ராடர்வி
ராடர்ம யிந்தர்ச யிந்தர்களே.

ஙஙக. சிங்களர் வங்களர் சேகுணர்
சேவணர் $ செய்யவ ரையணரே
கொங்கணர் கொங்கர்கு லிங்கர் † ச
வுந்தியர் குச்சரர் கச்சியரே.

ஙஙஉ. வத்தவர் மத்திரர் மாளுவர்
மாகதர் மச்சர்மி லேச்சர்களே
குத்தர் ‡ கு ணத்தர்வ டக்கர்து
ருக்கர்கு ருக்கர்வி யத்தர்களே.

வி - ரை:—இம் மூன்று செய்யுட்களிலும் கூறியது முன் செய்யுளைப் போல், அவ்வந்நாட்டு வேந்தரையே யாமென்க. வடக்கர் என்றது வடநாட்டி லுள்ள ஆரிய வேந்தரையாம். ஒவ்வொரு செய்யுளிலும் பன்னிரண்டரசர் வீதம் இந்நான்கு செய்யுட்களிலும் நாற்பத்தெட்டு வேந்தரைக் கூறியுள்ளமை காண்க. ஐம்பத்தாறு தேயத் தரசர்களில் சோழநாட் டிறைவணங்கிய முதற்

குலோத்துங்கனையும் இங்கு வாராதொழிந்த கலிங்கநாட்டிறைவனாகிய அனந்த பத்மனையும், ௩௩அ-ம் தாழிசையில் கூறும் கடகவேந்தனையும் கூட்டின் ஐம்பத் தொருவராம். ஏனைய வேந்தரைவரும் எக்காரணம் பற்றியோ வாரா தொழிந் தனர் போலும். இந்நான்கு செய்யுட்களிலும் அடைமொழி யொன்றுமின்றிப் பல தேயத்தரசர்களைக் கூறியிருத்தல்போல், 'கொங்கர் போசலர் போசர் சிங்களர் குகுத ராரியர் துளுவரும், கங்கர் சோனகர் யவனர் சீனர்க லிங்க தத்தர் தெலுங்கரும், வங்கர் கோசலர் தமிழர் குண்டல ரொட்டர் மாளவர் மகதரும், இங்கு மங்கும ணிந்து நின்றனர்' [வில்லிபா-க-ம்-போர் ௩௫; ஷை பாரதம் படையெழுச்சி-௬, கக: க௫-ம்-போர்-௩௬; கம்பரா-உலாவி-சஎ, சஅ, சக] எனவும், 'கொங்கணர்க லிங்கரொடு கொங்கர்துளு நாடர், சிங்களர்க ளொட்டியர் தெலுங்கரொடு சீனர், தங்குதிறல் மாளவர்ம ராடர்தமி லொன்றாய், எங்கணுமி டைந்தவர்க ளெண்ணமுடி வில்லார்' [திருவாதவூ-மந்திரி-௩௩] எனவும் பிறரும் கூறினர். இச்செய்யுட்களிலுள்ள ஏகாரங்கட்கும் ௩௨௬-ம் செய்யுளிற் கூறிய விதியையே கொள்க. பா - பே :—* கடாரர், $ சீயணர், † அவந்தியர், ‡ திகத்தர் விடக்கர். (கக, ௨0, ௨க)

### பல தேயத்தரசர் வணங்கல்

௩௩௩. எந்நக ரங்களு நாடுமெ
மக்கருள் செய்தனை யெம்மையிடச்
சொன்ன † த னங்கள்கொ ணர்ந்தன
மென்றடி சூடுக ரங்களொடே.

ப - ரை —எ நகரங்களும் - எல்லா நகரங்களையும், நாடும் - (எல்லா) நாடுகளையும், எமக்கு அருள் செய்தனை - எங்களுக்குக் கருணையோடு தந்தருளினாய், எம்மை இட சொன்ன - எங்களைச் செலுத்தும்படி (நீங்கள்) கட்டளையிட்ட, தனங்கள் - பகுதிப் பொருள்களை, கொணர்ந்தனம் - கொண்டு வந்தோம், என்று - என்று சொல்லி, அடி சூடு கரங்களொடு - (முதற் குலோத்துங்கன்) பாதங்களில் குவித்த கைகளோடு,

வி-ரை :—பல தேயத்தரசர்கள் முதற் குலோத்துங்கனை வணங்கிப் பகுதிப் பொருள் செலுத்தத் தொடங்கின ரென்பதாம். எந்நகரங்களும்—இதிலுள்ள உம்மை முற்றுப் பொருளை யுணர்த்துதலால், எகரவினா எஞ்சாமைப் பொருட் டாம். நகரங்களும், நாடும்—உம்மைகள் எண்ணுப்பொருளன. கொணர்ந்தனம்— தன்மைப் பன்மை இறந்தகால வினைமுற்று. அடி சூடு—ஏழன் தொகை.

பா - பே :—† கரங்கள். (௨௨)

### திறை செலுத்தல்

௩௩௪. ஆர மிவையிவை பொற்கல மானை யிவையிவை யொட்டகம்
ஆட லயமிவை மற்றிவை யாதி முடியொடு பெட்டகம்
ஈர முடையன நித்தில மேறு நவமணி கட்டிய
ஏக வடமிவை மற்றிவை யாதும் விலையில்ப தக்கமே.

ப - ரை :—இவை ஆரம் - இவை (இரத்தின) மாலைகளாம், இவை பொன் கலம் - இவை பொன்னாலாகிய ஆபரணங்களாம், இவை ஆனை——, இவை ஒட்டகம்——, இவை ஆடல் அபயம் - இவை வலிய குதிரைகளாம், இவை ஆதி - இவை முதலானவை, முடியொடு பெட்டகம் - கிரீடங்களும் (பொன்) பெட்டிகளுமாம், (இவை) ஈரம் உடையன - (இவை) குளிர்ச்சியுடையனவாகிய, நித்திலம் - முத்து மாலைகளாம், இவை ஏறு நவ மணி - இவை உயர்வாகிய ஒன்பது வகை

இரத்தினங்களையும், கட்டிய - பதித்த ஏக வடம் - ஏக வடமென்னும் ஆபரணங்களாம், இவை யாதும் - இவை சிறிதும், விலை இல் பதக்கம் - விலை மதிக்க முடியாத பதக்கங்களாம்.

வி - ரை :—அரசர் பலர் இரத்தினமாலை, பொன்னுபரணம், யானை, ஒட்டகம், குதிரை முதலியவற்றைத் திறைப்பொருளாகச் செலுத்தத் தொடங்கின ரென்ப தாம். ஆரமென்பதற்குப் பொன்னரி மாலைகள் அல்லது சந்தனக் கட்டைக ளெனினும் பொருந்தும். ஆடலயம்—(பகைவரை) கொல்லும் குதிரை, அல்லது வெற்றியையுடைய குதிரை யெனினுமாம். விலையுயர்ந்த புதிய முத்துக்களாலான மாலையாதலால், 'ஈரமுடையன நித்திலம்' எனப்பட்டது. நவமணிகளாவன :—கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைரம், வைடூரியம் என்பன. 'ஏக வடம்' என்பது ஒற்றைச் சரத்தாலாகிய ஒருவகை மாலையெனத் தெரிகிறது. ஆடல்—அட லென்பதன் நீட்டல்; நித்திலம்—சினையாகுபெயர்; காரணவாகு பெயரெனினுமாம். மற்று—இரண்டும் அசைகள்; இவை யாதும்—பன்மை ஒருமை மயக்கமெனக் கொண்டு இவையெல்லா மெனினுமாம். இதுமுதல் மூன்று செய்யுட்கள் அரசர் திறை செலுத்துதலை யுணர்த்தும். (உங)

இதுவுமது

௩௩௫. இவையு மிவையுமணித்திர ளினைய விவைகன கக்குவை
இருளும் வெயிலுமெ றித்திட விலகு மணிமக ரக்குழை
உவையு முவையுமி லக்கண முடைய பிடியிவை †யுட்பக
டுயர்செய் கொடியிவை மற்றிவை யுரிமை யரிவையர்
[பட்டமே.

ப - ரை :—இவையும் இவையும் - இந்தப் பொருள்கள் எல்லாம், மணி திரள் - இரத்தினக் குவியல்களாம், இனைய இவை - இத்தன்மையான இவைகள், கனகம் குவை - பொற்குவியல்களும், இருளும் வெயிலும் - இருளையும் ஒளியையும், எறித்திட - (ஒரே காலத்தில்) வீசும்படி, இலகு - விளங்குகின்றன, மணி - இரத்தினங்களைப் பதித்த, மகரம் குழை - சுறு மீன் வடிவம் போன்ற காதணிகளுமாம், உவையும் உவையும்——, இலக்கணம் உடைய - (சிறந்த) இலட்சணங்களையுடைய, பிடி - பெண் யானைகளாம், இவை உள் பகடு - இவை (உயர்ந்த விலை) மதிக்கத்தக்க ஆண் யானைகளாம், இவை உயர்செய் கொடி - இவை உயர்த்திப் பிடிக்குங் கொடிகளாம், இவை உரிமை அரிவையர் - இவை அரசர் மனைவியராகிய பெண்களின், பட்டம் - நெற்றிப் பட்டங்களாம்.

வி - ரை :—மணித் திரள், பொற்குவியல் முதலியவற்றை அரசர் திறை யாகச் செலுத்தின ரென்பதாம். நீலமணியும் மாணிக்கக் கற்களு மிழைத்த மகர குண்டலங்களாகையால், அவை ஒரே காலத்தில் இருளும் வெயிலு மெறித்தன வென்க. 'அரவு யிர்த்தசெம் மணியு மாரமு மணிகோ ளிந்திர நீலமும்,........ சுடர் விரிதலால், இரவு முண்டிள நிலவு முண்டெறி வெயிலு முண்டொரு பொழுதிலே' [அரிச்ச-இந்திரகா-எ] என்றமை காண்க. யானைகளைத் திறை யாகச் செலுத்தும் வேந்தர் பலராகலின், ௩௩௪-ம் தாழிசையில் மொழிந்த தையே மீண்டும் மொழிந்தார்; பகடு—எருதுக ளெனினுமாம். உரிமை—அரசர் மனைவியர்; 'உரிமைமுன் போக்கி யல்லால்' எனவும், 'தாதலர் தாம மார்பன் உரிமையுந்தானும்' [சீவகசி-உஎ௨-உகூசங] எனவும், 'அரச னுரிமையோ டப் பொழில் புகுந்து' [மணிமே-உ௫-க] எனவும், 'அரசனு முரிமையு மாடுங் காவற் சோலை' [சிலப்-க௦-௩க-உரை] எனவும் வருமாறு காண்க. பா-பே:—† புட்பகம்.

**இதுவுமது**

௩௩௬. ஏறி யருளவ டுக்குமிந் நூறு களிறுமி வற்றெதிர்
ஏனை யரசரொ ருத்தரோ ரானை யிடுவரெ னிற்புவி
மாறி யருளவ வர்க்கிடை யாமு மிசைவமெ னப்பல
மான வரசர்த னித்தனி வாழ்வு கருதியு ரைப்பரே.

ப - ரை :—இ நூறு களிறும் - இந்த நூறு யானைகளும், ஏறி அருள அடுக்கும் - ஏறத் தகுதியுடையனவாம், ஏனை அரசர் - மற்ற அரசர்களில், ஒருத்தர் - (யாரேனும்) ஒருவர், இவற்று எதிர் - இவைகளுக்கு ஒப்பாய், ஓர் யானை - ஒரு யானையை, இடுவர் எனின் - கொடுப்பாரானால், புவி மாறி - எமது அரசாட்சியை விற்றும், அவர்க்கு இடை அருள - அவர்க்குச் சமமாய்க் கொடுக்க, யாமும் இசைவம் என - நாங்களும் இணங்குவோ மென்று, மானம் - பெருமையையுடைய, பல அரசர்——, வாழ்வு கருதி - (தங்கள் நல்) வாழ்வை (பெற) விரும்பி, தனி தனி உரைப்பர் - தனித் தனியாய்ச் சொல்வார்கள்.

**வி - ரை :—யாம் கொடுக்கும் யானைக்குச் சமமாய் வேறு யாரேனும் அதனைக் கொடுத்தால், எமது அரசாட்சியை விற்றயினும் யாம் பதிலுக்குப் பதில் கொடுப்போமென அரசர் மொழிந்தன** ரென்பதாம். யானைகளை மிகுதியாயுடைய வரசர் யானைகளைப்பற்றி மொழிந்தது போலவே, குதிரை, ஒட்டகம் முதலியவற்றையுடைய ஏனைய வேந்தரும் அவ்வாறே மொழிந்தமை உபலக்கணத்தாற் கொள்க. அவர்கள் முதற் குலோத்துங்கன் அருள் பெற விரும்பி அவ்வாறு மொழிந்தமையால், 'வாழ்வு கருதி யுரைப்பர்' என்றார். மாறல்—விற்றல்; இதனை, 'சீறடிச் சிலம்பி னொன்றுகொண் டியான்போய், மாறி வருவன்' [சிலப்-கசு, கூ, கூ] எனவும், 'விற்றற்பேர் பகர்தல் கூறல் விலைநொடை மாற லேந்தாம்' [சூடாம-கூ-சுச] எனவும் வருமாற்றா னறிக.

[௩க௮] புலி வைத்தவன்.........செவ்வி சிறக்க (௩கக) இருக்க (௩௨0) இருக்க (௩௨க) இருக்க (௩௨௨) பாட (௩௨௩) போற்ற (௩௨ச) கேட்க (௩௨௫) பணிமாற (௩௨௬) என்ன விருக்க (௩௨௭) சூடியிருக்க (௩௨௮) எய்தியிருக்க ௩௨௯) கோசலர் (௩௩0) சயிந்தர் (௩௩க) கச்சியர் (௩௩௨) வியத்தர் (௩௩௩) சூடு கரங்களொடு (௩௩ச) இவை...........பதக்கம் (௩௩௫) இவை........ பட்டம் (௩௩௬) எனப் பல மானவரசர்........உரைப்பர் என முடிக்க. (௨௫)

**முதற் குலோத்துங்கன் வினவியது**

௩௩௭. அரச ரஞ்சலென வடியி ரண்டுமவர்
முடியின் வைத்தருளி யரசர்மற்
றுரைசெ யுந்திறைக ளொழிய நின்றவரும்
உளர்கொ லென்றருளு பொழுதிலே.

ப - ரை :—அரசர் - அரசர்களே, அஞ்சல் - (நீங்கள் சிறிதும்) பயப்படாதீர்கள், என - என்று (முதற் குலோத்துங்கன்) சொல்லி, அடி இரண்டும் - (தனது) இரண்டு பாதங்களையும், அவர் முடியின் வைத்தருளி - அவர்கள் தலையில் வைத்து, அரசர் - (அதன் பின்பு) அரசர்களில், உரை செயும் - சொல்லப்படும், திறைகள் - பகுதிப் பொருளை, ஒழிய நின்றவரும் - செலுத்தாதவர்களும், உளர் கொல் - இருக்கின்றனரோ, என்று அருளு பொழுதில் - என்று கேட்ட சமயத்தில்,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் தன்னை யடைந்த அரசர்களனைவர்க்கும் ஆதரவளித்துத் திறைப் பொருளைச் செலுத்தாதவர்கள் யாரேனு முண்டோ வென வினவின னென்பதாம். அரசர்—அண்மைவிளி யாதலி னியல்பாயிற்று; அஞ்சல்—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று, உளர் கொல்—கொல் ஐயப் பொருளில் வந்த இடைச்சொல். (உ௬)

மந்திரக் கணக்கர் விடை

௩௩அ. *கடகர் தந்திறைகொ டடைய வந்தரசர்
கழல்வ ணங்கினர்க ளிவருடன்
வடக லிங்கர்பதி யவனி ரண்டுவிசை
வருகி லன்றிறைகொ டெனலுமே.

ப - ரை :—கடகர் - கடகநாட்டு வேந்தரும், அரசர் அடைய - (ஏனைய) அரசர்கள் எல்லாரும், தம் திறை கொடு வந்து - தங்கள் பகுதிப் பொருளைக் கொண்டு வந்து, கழல் வணங்கினர்கள் - (உமது) பாதங்களை வணங்கினார்கள், வடக்கு கலிங்கர் பதி - (ஆனால்) வடக்கிலுள்ள கலிங்க நாட்டுக்குத் தலைவனாகிய, அவன்-அந்த அரசன், இவருடன்-இந்த அரசர்களோடு, திறை கொடு - (தனது) பகுதிப் பொருளை எடுத்துக்கொண்டு, இரண்டு விசை வருகிலன் - இரண்டு முறை வரவில்லை, எனலும் - என்று (மந்திரக் கணக்கர்) சொல்லுதலும்,

வி - ரை :—கடக வேந்தரைத் தனியாய்க் கூறினமையால், இவர்கள் அக்காலத் தரசர் அனைவரினுஞ் சிறப்புற்று விளங்கினர் போலும். 'கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்' [சிலப்-உ௫-க௫௬] என்றதனால், கலிங்கர்களும் புகழ்பெற்ற பழைய மன்னரெனத் தெரிகிறது. 'கலிங்கர்கோன் சோமதத்தன் கௌசிகன் காம்பி லீசன்' [வில்லிபா-படையெ-க௮] என்றமையுங் காண்க. கழல்—தானியாகு பெயர். பா - பே :—* கடவ தந்திறை. (உ௭)

முதற் குலோத்துங்கன் முறுவல்

௩௩௯. உறுவ தென்கொலென †நிலைகு லைந்தரசர்
உயிர்ந டுங்கவொளிர் பவளவாய்
முறுவல் கொண்டபொரு ளறிகி லஞ்சிறிது
முனிவு கொண்டதிலை வதனமே.

ப - ரை :—அரசர் - (அரச சபையிலுள்ள) அரசர்கள், உறுவது என் கொல் - (இனி) விளையுந் தீங்கு யாதோ, என நிலை குலைந்து - என்று (தத்தம்) நிலைமை யழிந்து, உயிர் நடுங்க - உயிர் நடுங்குகையில், வதனம் - (முதற் குலோத்துங்கன்) முகமானது, சிறிதும் முனிவு கொண்டது இலை - சிறிதளவும் கோபம் கொள்ளவில்லை, ஒளிர் பவளம் வாய் - (ஆனால்) விளங்கும் பவளம் போல் சிவந்த வாயானது, முறுவல் கொண்ட பொருள் - புன்னகைகொண்ட தன்மையை, அறிகிலம் - (நாம் சிறிதும்) அறியோம்.

வி - ரை :—அரசர் நடுங்கி நிற்கையில், முதற் குலோத்துங்கன் புன்னகை புரிந்தன னென்பதாம். 'முறுவல்' என்றது இங்கே எள்ளல் நகையை; இதனை 'வீரத்தெழுந்த வெகுளி நகையும் எள்ளல் நகையென்றே அடக்க வேண்டும் ஈண்டென்பது' [தொல்கா-மெய்ப்பா-௪] என நச்சினார்க்கினியர் மொழிந் தமையா னறிக. இச்செய்யுள் இழிவுச் சுவையாம். 'தாமரைச் செங்கண் தழனிறங் கொள்ள, கோமக னதுதலும்' [சிலப்-உ௮-கக0-ககக] எனவும், 'உரைத்த வாசகங் கேட்டலு முலகெலா முலையச் சிரித்து' [கம்பரா-கரன்

வதை-எச] எனவும், 'வெண்ணகை வேதண்டு நக்குக் கட்டியங்காரன் சொன் ஞன்' [சீவகசி-உஅடு] எனவும் வருமாறு காண்க. உறுவது—ஒன்றன் படர்க்கை வினையாலணையும் பெயர். சிறிதும்—உம்மை இழிவு சிறப்பு.

பா - பே:—† உடல் குலைந்து. (உஅ)

**முதற் குலோத்துங்கன் ஆணை**

நூசo. எளிய னென்றிடினும் வலிய குன்றரணம்
இடிய நம்படைஞர் கடிதுசென்
றளிய லம்புமத மலைகள் கொண்டணைமின்
அவனை யுங்கொணர்மி னெனலுமே.

ப - ரை:—எளியன் என்றிடினும் - (கலிங்க வேந்தன்) வலியில்லா தவனு யிருந்தாலும், குன்று அரணம் - (அவன்) மலையரண்கள், வலிய - (மிகவும்) வன்மையுடையனவாம், இடிய - (அவை) இடியும்படி, நம் படைஞர் - நமது படை வீரர்களாகிய நீங்கள், கடிது சென்று - விரைவாய்ப் போய், அளி அலம்பு - (மதநீரையுண்டு) வண்டுகள் ஆரவாரஞ் செய்யும், மதம் மலைகள் கொண்டு - மதத்தைப் பொழியும் மலைபோன்ற யானைகளைக் கைப்பற்றிக் கொண்டு, அணைமின் - வந்து சேருங்கள், அவனையும் - அந்தக் கலிங்க வேந்தனையும், கொணர்மின் - (இங்கு) கொண்டு வாருங்கள், எனலும் - என்று (முதற் குலோத்துங்கன்) சொல்லுதலும்,

வி - ரை:—'மணிநீரு மண்ணு மலையு மணிநிழல், காடு முடைய தரண்' [திருக்கு-எசஉ] என்றபடி, நால்வகை யரண்களில் இயற்கையாகிய மலையரணுடைய நாடாதலால், 'வலிய குன்றரணம்' எனப்பட்டது. 'கானரணு மலையரணுங் கடலரணுஞ் சூழ்கிடந்த கலிங்கர் பூமி' [தா-நுஎசு] என்பதையுங் காண்க. வலிய—பலவின் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. படைஞர்—அண்மை விளியாய்க் கொள்ளுதலுமாம். மதமலை—இரண்டனுருபும் பயனுமுடன் தொக்க தொகை; அடையடுத்த உவமையாகு பெயர்; அவனையும்—உம்மை, இறந்தது தழுவியது; படைஞர், ஞ்—பெயரிடை நிலை; கடிது—குறிப்பு முற்றெச்சம். (உகூ)

**வண்டை மன்னன் போருக் கெழுந்தமை**

நூசக. இறைமொ ழிந்தளவி லெழுக லிங்கமவை
எறிவ னென்றுகழ றொழுதனன்
மறைமொ ழிந்தபடி மரபின் வந்தகுல
திலகன் வண்டைநக ரரசனே.

ப - ரை:—இறை மொழிந்த அளவில் - (முதற் குலோத்துங்க) வேந்தன் (அவ்வாறு) சொன்ன உடனே, மறை மொழிந்தபடி - வேதங்களில் சொல்லியபடியே, மரபின் வந்த - பழமையாய் வந்த, குலம் திலகன் - (தனது) குலத்திற்குத் திலகம் போன்றவனும், வண்டைநகர் அரசன் - வண்டை என்னும் நகரத்திற்கு அரசனுமாகிய கருணாகரத் தொண்டைமான், எழு கலிங்கம் அவை - ஏழு பிரிவுகளையுடைய கலிங்க நாட்டை, எறிவன் என்று - (நானே) அழிப்பேனென்று, கழல் தொழுதனன் - (முதற் குலோத்துங்கன்) பாதங்களை வணங்கினன்.

வி - ரை: எழு கலிங்கம்:—ஏழு பிரிவுகளையுடைய கலிங்க நாடு; இதனை அக்காலத்தில் ஆண்டு வந்தவன் அனந்த பத்மன் என்னும் மன்னவனும். 'எழு கலிங்கம்' என்றதனால் அவன் தன்னாட்டை யேழு பிரிவுகளாக்கி, ஒவ்வொரு

பிரிவிற்கும் ஒவ்வோர் தலைவனை யமைத்து ஆட்சி செய்து வந்தானெனத் தெரிகிறது. முன் செய்யுளில் 'அணைமின், கொணர்மின்' என முதற் குலோத் துங்கன் பொதுப்படக் கூறினமையால், படைத் தலைவனுகிய கருணாகா னெழுந்து, 'நானே சென்று கலிங்க வேந்தனை வென்று மீள்வேன்' என அவ் விறைவனைத் தொழுதனனென்பதாம். வண்டை யென்பது வண்டாழஞ்சேரி யென்பதன் மரூஉ வெனவும், அது கும்பகோணத் தாலுக்காவின் தென்கிழக் கில் திருச்சேறைக்கும் திருநறையூருக்கும் நடுவில் இருக்கிற தெனவும் கூறுவர்.

**கருணாகரன் விடை பெறல்**

௩சஉ. அடைய வத்திசைப் பகை†து கைப்பனென்
றாசை கொண்டடற் றொண்டைமான்
விடையெ னக்கெனப் புலியு யர்த்தவன்
விடைகொ டுக்கவப் பொழுதிலே.

ப - ரை:—அடல் தொண்டைமான் - வலிமையையுடைய கருணாகரத் தொண்டைமான், ஆசை கொண்டு - (போர் புரிய) விரும்பி, அ திசை - அந்த (வட) திசையிலுள்ள, பகை அடைய துகைப்பன் - பகைவரை முற்றும் அழிப்பேன், என்று - என்று சொல்லி, எனக்கு விடை என - எனக்கு உத்தரவு (தருக) என்று கேட்க, புலி உயர்ந்தவன் - புலிக் கொடியை உயர்த்திப் பிடித்தவனாகிய முதற் குலோத்துங்கன், விடை கொடுக்க - (அவன் விரும்பியபடியே) உத்தரவு கொடுக்க, அ பொழுதில் - அச்சமயத்தில், (உடனே என்றபடி)

வி - ரை:—கலிங்க நாட்டை வெல்லுமாறு முதற் குலோத்துங்கன் கருணா கரத் தொண்டைமானுக்கு விடையளித்தன னென்பதாம். அத்திசை யென்றது இங்கு வடதிசையை யுணர்த்தினது. பகை—பண்பாகுபெயர்; தொண்டை மான்—இது சிறப்புப் பெயர். இதனை முன் மொழி கெட்ட பின்மொழி நிலையல் என்க. வடநூலார் இதனை நாமைகதேச நாமகிரகணம் என்பர். 'அப்பொழு திலே' என்றது ௩௫அ-ம் தாழிசையிலுள்ள 'எழுந்தது சேனை' என்றதனோ டியையும். பா-பே:—†துமிப்ப னென்று. (௩க)

**நால்வகைப் படைகளும் போருக்குத் திரளுதல்**

௩சஙு. ‡கடல்க லக்கல்கொல் மலையி டித்தல்கொல்
*கடுவி டப்பொறிப் பணபணிப்
§பிடரொ டித்தல்கொல் படைநி னைப்பெனப்
பிரள யத்தினிற் றிரளவே.

ப - ரை:—படை நினைப்பு - (இந்த) சேனைகளின் கருத்து, கடல் கலக்கல் கொல் - கடல்களைக் கலக்கவோ, மலை இடித்தல் கொல் - மலைகளை இடித்தெறியவோ, கடு விடம் - கொடிய விஷத்தையும், பொறி பணம் - புள்ளிகளைக் கொண்ட படத்தையு முடைய, பணி பிடர் - ஆதிசேஷனது கழுத்தை, ஒடித்தல் கொல் - முறிக்கவோ, என - என்று (கண்டோர்) சொல்லும்படி, பிரளயத்தினில் - வெள்ளம் போல், திரள - (நால்வகைச் சேனைகளும் ஒன்ருய்) திரண்டெழுதலால்,

வி - ரை:—கலிங்க வேந்தனோடு போர்புரியச் சேனைகள் திரண்டெழுந் தமையைக் கண்டோர், பலவற்றை நினைத்து அதிசயித்தன ரென்பதாம். இங்குக் கூறியுள்ளமைக் கேற்ப, 'மலையகழ்க் குவனே கடறூர்க் குவனே' [பட்டினப்- உகக] எனவும், 'ஆலுங்கட றூர்த்தன்மலை யகழ்த லிவை வல்லார்' [சீவகசி-

உகசுடு] எனவும், 'மேருவைப் பறிக்க வேண்டின்.........நீரினைக் கலக்க வேண்டின்' [கம்பரா—சடாயு உயிர்—சுஉ] எனவும் வருமாறு காண்க. நால்வகைச் சேனைகளுந் திரண் டெழுந்ததனலாகிய பாரத்தை ஆதிசேஷன் சுமக்கலாற்றுமை கருதி 'பணிப்பிட ரொடித்தல் சொல்' என்றார். 'உரகர் பைத்தலையணி மணிக்கண மடையவும், பொடிப டப்பட வுடன டப்பன' [வில்லிபா-அணிவகு-சு] என்றமையும் இங்குக் கவனிக்க. கொல்—மூன்றும் ஐயப் பொருளன; இது முதல் கூருஎ-ம் தாழிசையளவும் நால்வகைப் படைகளும் போர்க்குத் திரளுதலைக் கூறுகிறர். இதில் உவமையணி யுள்ளமை காண்க.

பா-பே:—‡ கடல்க லக்கவோ மலையி டிக்கவோ, * கடலிடை, $ பிடரொடிக்கவோ. (கூஉ)

சேனையின் முரசொலி

கூசச. வளைக லிப்பவு முரசொ லிப்பவு
மரமி ரட்டவும் வயிரமாத்
தொளையி சைப்பவுந் திசையி பச்செவித்
தொளைய டைத்தலைத் தொடரவே.

ப-ரை:—வளை கலிப்பவும் - சங்குகள் ஒலித்தலாலும், முரசு ஒலிப்பவும் - முரசு வாத்தியங்கள் முழங்குதலாலும், மரம் இரட்டவும் - சாமரைகள் வீசுவதனாலும், மா தொளை - அழகிய தொளைகளை யுடைய, வயிர் இசைப்பவும் - ஊது கொம்புகள் ஒலித்தலாலும், திசை இபம் - (எட்டு) திக்குகளிலுமுள்ள யானைகளின், செவி தொளை - காதுகளிலுள்ள தொளைகளை, அடைத்தலை தொடர - (செவிடு படும்படி) அடைத்தலைத் தொடங்கவும்,

வி-ரை:—பலவகை வாத்தியங்கள் முழங்கச் சேனைகள் போர்க்குத் திரண்டன வென்பதாம். திசைக் கரிகளின் செவிகள் செவிடு பட்டனவென்றதற்கேற்ப, 'தெழிபட்ட திக்கயத்தின் செவிதீய' [திருவிளையா-பு-யானையெய்-உக] என்றார் பரஞ்சோதி முனிவரும். மரம்—சாமரம் என்றதன் முதற் குறை; வயிரம்—இதில் அம் சாரியை; எட்டுத்திசை யானைகளை அ-ம் தாழிசையிற் காண்க. இதில் கலிப்ப, ஒலிப்ப, இசைப்ப என்னுஞ் சொற்கள் வேறுபட்டுப் பொருள் ஒன்றாக வருதலால், இது பொருட்பின் வருநிலை யணியாம். ஏது வணி, உயர்வு நவிற்சி யணிகளும் இதில் விரவி வந்தமையால், இது சேர்வை யணியாம். (சங்கீரணவ லங்காரம்.) (கூகூ)

குடை கொடி பரவியமை

கூசடு. குடைநி ரைத்தலிற் றழைநெ ருக்கலிற்
கொடிவி ரித்தலிற் குளிர்ச துக்கமொத்
திடைநி ரைத்தலிற் பகல்க ரப்பவுய்த்
திருநி லப்பரப் பிருள்ப ரக்கவே.

ப-ரை:—பரப்பு இரு நிலம் - விசாலமாகிய பெரிய பூமியில், குடை நிரைத்தலின் - குடைகள் வரிசையா யமைந்திருத்தலாலும், தழை நெருக்கலின் - பீலிக் குடைகள் நெருங்கி யிருத்தலாலும், கொடி விரித்தலின் - துகிற் கொடிகள் பரவி யிருத்தலாலும், குளிர் சதுக்கம் ஒத்து - குளிர்ந்த நாற்சந்தியைப் போல, இடை நிரைத்தலின் - (அவை) எல்லாவிடங்களிலும் வரிசையா யமைந்திருத்தலாலும், பகல் கரப்ப - சூரியன் ஒளி மறையும்படி, உய்த்து - (அதனை) செலுத்துதலால், இருள் பரக்க - இருள் (எங்கும்) பரவவும்,

வி - ரை:—குடைகள், கொடிகள் முதலியன சூரிய வொளியை மறைத்து எங்கும் இருள் பரப்பின வென்பதாம். 'கோடிதழை கவிகை......மிடைதலி னுலகெலாம் வெயிலி ழப்பவே' [கம்பரா-கரன்வதை-சஅ] எனவும், 'வெயிற் கொடி விழுங்கிய துகிற்கொடிப் பந்தர்' [சிலப்-உசு-கசுஉ] எனவும் வருமாறு காண்க. சதுக்கம்—நான்கு தெருக்கள் கூடுமிடம்; 'பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்' [சிலப்-ரு-கங்ச] எனவும், 'பூத சதுக்கமும் பூமலர்ச் சோலையும்' [மணிமே-உ0-உக] எனவும், சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்' [திருமுருகாற்-உஉரு] எனவும், 'மட்டுவார் மாலை வேய்ந்து சதுக்கங்கண் மலிந்த சும்மை' [சீவகசி-ககஉ] எனவும் வருமாறு காண்க. சதுக்கத்தை உவமை கூறினமையால், அங்குக் குடை, தழை முதலியன நிறைந்திருக்குமெனத் தெரிகிறது. இடை—இடம்; இடையிடையே எனினுமாம். ஒத்து—எச்சத்திரிபு. இச் செய்யுளில் உவமையணி, ஏதுவணி, உயர்வு நவிற்சியணி என்னும் மூன்றணிகளும் விரவி வந்தமையால், இதுவும் சேர்வை யணியாம். (சங்கீரணவ லங்காரம்.)

இதுவுமது

ஙசசு. அலகில் கட்டழற் கனல்வி ரித்தலால்
அரிய பொற்பணிக் ‡கலனெ றித்தலால்
இலகு கைப்படை கனல்வி ரித்தலால்
இருள்க ரக்கவே யொளிப ரக்கவே.

ப - ரை:—அலகு இல் - அளவில்லாத, கண் - (வீரர்களின்) கண்கள், தழல் கனல் - நெருப்பின் அனலை, விரித்தலால் - பரப்புவதனாலும், அரிய பொன் - சிறந்த பொன்னாலாகிய, பணி கலன் - வேலைப்பாட்டையுடைய ஆபரணங்கள், எறித்தலால் - (ஒளி) வீசுவதனாலும், இலகு - விளங்குகின்ற, கை படை - (அவர்கள்) கையிலுள்ள ஆயுதங்கள், கனல் விரித்தலால் - (ஒன்றோடொன்று உராய்ந்து) நெருப்புப் பொறிகளைச் சொரிவதனாலும், இருள் கரக்க - (அங்குள்ள) இருள் மறையவும், ஒளி பரக்க - வெளிச்சம் பரவவும்,

வி - ரை:—வீரர்களின் சினத்தீ, அவர்களணிந்த ஆபரணங்களின் ஒளி முதலியன இருளை யொழித்து ஒளியைப் பரப்பின வென்பதாம். முன் செய்யுளில் இருள் பரவினமை கூறி இச்செய்யுளில் அவ்விருளகன்றமை கூறினார். இவ்விரு தாழிசைகளும், 'குடையொடு களிறுந் தொங்கல் குழாங்களுங் கொடியின் காடும், இடையிடை மயங்கி யெங்கும் வெளிகரந் திருளைச் செய்ய, படைகளு முடியும் பூணும் படர்வெயில் பரப்பிச் செல்ல, இடையொரு கணத்தினுள்ளே யிரவுண்டு பகலு முண்டே' [கம்பரா-எழுச்சிப்-ருசு] என்னுஞ் செய்யுளின் கருத்தை ஒத்திருத்தலைக் காண்க. இதில் ஏதுவணியும், உயர்வுநவிற்சியணியும் இருத்தலை யறிக. பா - பே:—‡ கலனி மைத்தலால். (ஙரு)

இதுவுமது

ஙசஎ. அகில வெற்புமின் றானை யானவோ
அடைய மாருதம் புரவி யானவோ
முகில னைத்துமத் தேர்க ளானவோ
மூரி வேலைபோர் வீர ரானவோ.

ப - ரை:—இன்று - இப்போது, அகில வெற்பும் - எல்லா மலைகளும், ஆனை ஆனவோ - யானைகள் ஆயினவோ, மாருதம் அடைய - காற்று முழுதும், புரவி ஆனவோ - குதிரைகள் ஆயினவோ, முகில் அனைத்தும் - மேகங்கள் எல்லாம், அ தேர்கள் ஆனவோ——, மூரி வேலை - பெரிய கடல், போர் வீரர் ஆனவோ——, -

வி-ரை :—மலைகளே யானைகளாகவும், காற்றே குதிரைகளாகவும், மேகங்களே தேர்களாகவும், கடலே போர் வீரராகவும் அமைந்தனவோ வென்பதாம். பெரிய உருவமும் வன்மையும் பற்றி மலைகளை யானைகளாகவும், மிக்க விரைவு பற்றிக் காற்றையும் மேகத்தையும் முறையே குதிரைகளாகவும் தேர்களாகவும், அளவின்றிப் பரவிக் கிடப்பதுபற்றிக் கடலை வீரர்களாகவும் கூறினர். ஓகாரம் நான்கும் வியப்பின்கண் வந்தன. இச்செய்யுள் வியப்புச்சுவையாம். ()

இதுவுமது

நுசஅ. பார்சி றுத்தலிற் படைபெ ருத்ததோ
படைபெ ருத்தலிற் பார்சி றுத்ததோ
நேர்செ றுத்தவர்க் கரிது நிற்பிடம்
நெடுவி சும்பலா லிடமு மில்லையே.

ப-ரை :—பார் - (இந்த) பூமி, சிறுத்தலின் - சிறிதாயிருத்தலால், படை - முதற் குலோத்துங்கன் சேனை, பெருத்ததோ - பெரிதாயினதோ, படை - (அவன்) சேனை, பெருத்தலின் - அதிகமா யிருத்தலால், பார் - (இந்த) பூமி, சிறுத்ததோ - சிறிதாயினதோ, நேர் செறுத்தவர்க்கு - நேரில் கோபித்துப் போர்புரியும் வீரர்களுக்கு, நிற்பு இடம் - (நிலத்தில்) நிற்பதற் குரியவிடம், அரிது - இல்லையாம், நெடு விசும்பு அலால் - (அதனால்) பெரிய ஆகாயத்தைத் தவிர, இடமும் இல்லை - (அவர்களுக்கு வேறு) இடமும் இல்லையாம்,

வி-ரை :—முதற் குலோத்துங்கன் சேனைக்கு இவ்வுலகில் இடம் போதாதென்பதாம். 'சென்ற தானையும், பார்செலற்கரிதென விசும்பிற் பாய்ந்ததால்' [கம்பரா-கும்பகரு-கOநு] என்றார் கம்பரும். 'பார் சிறுத்தலின் ...... சிறுத்ததோ' என்றது படைகளின் மிகுதியைக் குறித்தது. அதனால், இது 'கூறியது கூறல்' என்னுங் குற்றமன்றென்க. அன்றியும், நால்வகைப் படைகளின் மிகுதியைக் கண்ட சிலர், 'பார் சிறுத்தலிற் படை பெருத்ததோ' எனவும், வேறு சிலர், 'படை பெருத்தலிற் பார் சிறுத்ததோ' எனவுங் கூறி வியந்தன ரெனினுமாம். பெருத்ததோ—சிறுத்ததோ—ஓகாரங்களிரண்டும் வியப்புப் பொருளில் வந்தன. நிற்பு—தொழிற் பெயர்; அரிது—இன்மை யென்னும் பொருளில் வந்தது. இதில் உயர்வு நவிற்சி யணியும், வியப்புச் சுவையும் உள்ளமை காண்க. (நுஎ)

சேனையின் பொறுமை யின்மை

நுசகூ. எனவெ டுத்துரைத் ததிச யித்து நின்
றினைய மண்ணுளோ ரனைய விண்ணுளோர்
மனந டுக்குறப் †பொறைம றத்தலான்
மாதி ரங்களிற் சாது ரங்கமே.

ப-ரை :—இனைய மண் உளோர் - இந்தப் பூலோகத்திலுள்ளவர்களும், அனைய விண் உளோர் - அந்தத் தேவலோகத்தி லுள்ளவர்களும், என எடுத்து உரைத்து - என்று (இவ்வாறு) எடுத்துச்சொல்லி, அதிசயித்து நின்று - ஆச்சரியமடைந்து நின்று, மனம் நடுக்கு உற - மனதில் நடுக்கமடைய, மாதிரங்களின் - (எல்லா) திசைகளிலு முள்ள, சாதுரங்கம் - நால்வகைச் சேனைகளும், பொறை மறத்தலான் - (போரை விரும்பித் தமது) பொறுமையை யிழத்தலால்,

வி-ரை :—மனிதர்களும் தேவர்களும் அதிசயித்து நடுங்கும்படி நால்வகைச் சேனைகளும் திரண்டன வென்பதாம். 'எனவெடுத் துரைத்து' என்றது

௩௪எ, ௩௪அ-ம் தாழிசைகளில் கூறியுள்ளவற்றை யென்க. மண்ணுளோர், விண்ணுளோர்-இவைகளில் எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன. சாதுரங்கம்—சதுரங்கம் என்பதின் நீட்டல்; சதுர் + அங்கம்; நால்வகைச் சேனைகள்; அவை யானைப் படை, தேர்ப் படை, குதிரைப் படை, காலாட் படை யென்பன. இவற்றை வடநூலார் ரத கஜ துரக பதாதி யென்ப.

பா - பே:—† புறம றைத்தலான். (௩௪அ)

யானைப் படைகளின் சிறப்பு

௩௫௦. கடல்க ளைச்சொரி மலையுள வெனவிரு
கடதட த்திடை பொழிமத முடையன
*கனல்வி ளைப்பன முகிலுள வெனவிழி
கனல்சி னத்தன கரியொடு பரிகளின்
உடல்பி ளப்பன பிறைசில வுளவென
உயர்ம ருப்பின வுலகுகள் குலைதர
உருமி டிப்பன வடவன லுளவென
†ஒலிமு கிற்கட கரிகளு மிடையவே.

ப - ரை:—கடல்களை சொரி - கடல்களின் நீரைச் சொரிகின்ற, மலை உள - மலைகள் (பல) இருக்கின்றன, என - என்று - (கண்டோர்) சொல்லும்படி, தட இரு கடத்திடை - விசாலமாகிய இரண்டு கன்னங்களிலும், பொழி மதம் உடையன - பொழிகின்ற மதத்தை யுடையனவும், கனல் விளைப்பன - நெருப்பை உண்டாக்குவனவாகிய, முகில் உள என - மேகங்கள் உண்டென்று சொல்லும்படி, விழி கனல் - கண்களிலிருந்து தீப்பொறிகளைச் சொரியும், சினத்தன - கோபத்தை யுடையனவும், கரி (உடல்) ஒடு - (போரில் தம்மை எதிர்க்கும்) யானைகளின் உடம்புகளையும், பரிகளின் உடல் - குதிரைகளின் உடம்புகளையும், பிளப்பன - பிளந்தெறிவனவாகிய, சில பிறை உள என - இரண்டு பிறைச் சந்திரர் உண்டென்று சொல்லும்படி, உயர் மருப்பின - சிறந்த தந்தங்களை யுடையனவும், உலகுகள் குலைதர - உலகங்களிலுள்ள உயிர்களெல்லாம் நடுங்க, உரும் - இடியும், வடவனல் - வடவா முகாக்கினியும், உள என - (தம்மிடம்) உண்டென்று சொல்லும்படி, இடிப்பன - பேரொலி செய்வனவுமாகிய, ஒலி முகில் - முழங்கும் மேகங்களைப் போன்ற, கடம் கரிகளும் - மதத்தைப் பொழியும் யானைகளும், மிடைய - நெருங்கிச் செல்லவும்,

வி - ரை:—மதத்தைப் பொழியுங் கன்னங்களையும், சினத்தீ யுமிழுங் கண்களையும், தம்மை எதிர்க்கும் யானைகளையும், குதிரைகளையும் பிளந்தெறியும் இரண்டு பிறைச் சந்திரரைப் போன்ற தந்தங்களையும், உலகமெல்லாம் நடுங்கும்படி முழங்குதலையு முடையனவாகிய மதயானைகள் பல நெருங்கிச் சென்றன வென்பதாம். 'உடல்' என்பதைக் கரிக்குங் கூட்டுக. சில—இரண்டு; 'மந்த மேசில நூபு ராரவம்' [தக்கயா-௩௩] என்றமை காண்க; வடவா முகாக்கினி—பெண் குதிரையின் முகம்போன்ற வடிவமமைந்த ஒருவகை நெருப்பு; இது கடலின் நடுவிலுள்ள தென்பர். வடவா—வடவை, பெண் குதிரை; இது முதல் நான்கு தாழிசைகளில் நால்வகைச் சேனைகளின் சிறப்பைக் கூறுகிறார். இதில் யானைப் படைகளின் சிறப்புக் கூறப்பட்டது. இதில் இல்பொருளுவமை யணியுள்ளமை காண்க.

பா - பே:—* கனல்வி ழிப்பன, † ஒலிமு ழக்கின. (௩௫௧)

குதிரைப் படைகளின் சிறப்பு

௫௬௧. முனைக ளொட்டினர் முடியினை யிடறுவ
 முடியின் முத்தினை விளைபுக ழெனநில
முதுகில் வித்துவ நிலமுறு துகளற
 முகின்மி திப்பன முகில்விடு துளியொடு
கனைக டற்றிரை நிரையென விரைவொடு
 கடலி டத்தினை வலமிடம் வருவன
கடலி டத்திறு மிடியென வடியிடு
 கவன மிக்கன கதழ்பரி கடுகவே.

ப - ரை:—முனைகள் - போர்க்களங்களில், ஒட்டினர் - (தம் பகைவரை வெல்வதாய்) சபதம் செய்யும் அரசர்களின்; முடியினை இடறுவ - தலைகளை (காலால்) மோதி யழிப்பனவும், முடியில் முத்தினை - (அவர்கள்) கிரீடங்களிலுள்ள முத்துக்களை, விளை புகழ் என - (மேலும் மேலும்) வளரும் (தம்) புகழைப் போல, நிலம் முதுகில் - நிலத்தின் மேற் பரப்பில், வித்துவ - (உதிர்ந்து) பரப்புவனவும், நிலம் உறு துகள் அற - பூமியில் பொருந்திய புழுதி நீங்கும்படி, முகில் மிதிப்பன - (மேலே தாவி) மேகங்களை மிதிப்பனவும், முகில்விடு - (அந்த) மேகங்கள் பொழியும், துளியொடு - நீர்த்துளியுடன், கனை கடல் - ஒலிக்கும் கடலின், திரை நிரை என - அலைகளின் வரிசைகளைப் போல, கடல் இடத்தினை - கடலால் சூழப்பட்ட உலகத்தை, விரைவொடு - (மிகவும்) வேகமாய், வலம் இடம் வருவன - வலமும் இடமுமாய்ச் சுற்றி வருவனவும், கடல் இடத்து - கடலில், இறும் இடி என - சேரும் இடியைப் போல, அடி இடு - (தம்) கால்களை (நிலத்தில்) வைக்கும், கவனம் மிக்கன - நடையிற் சிறந்தனவுமாகிய, கதழ் பரி கடுக - விரைவினையுடைய குதிரைகள் வேகமாய்ச் செல்லவும்,

வி - ரை:—பகையரசர் தலைகளை மிதித்து அழிப்பனவும், அவர்கள் தலையிலுள்ள முத்துக்களைத் தம் புகழைப் போல் நிலத்தில் பரப்புவனவும், பூமியிலுள்ள புழுதி நீங்கும்படி மேகங்களை மிதிப்பனவும், அலைகளின் வரிசையைப் போல்உலகத்தைச் சுற்றி வருவனவும், சிறந்த நடையினை யுடையனவுமாகிய குதிரைகள் பல விரைந்து சென்றன வென்பதாம். அவை பகை வேந்தர் முடியிலுள்ள முத்துக்களை யுதிர்த்தல் தம் புகழைப் பரப்புதலை யொத்திருந்த தென்க. வானமளாவ மேலே பாயுங் குதிரைக ளென்பார், 'முகில் மிதிப்பன' என்றார். [தா-௫௫] 'முகிற்றலை, கிழிய வைப்பன குரவி தத்தன புரவியே' [வில்லிபா-அணிவ-அ] என்றமை காண்க. கடலினலைகளைக் குதிரைகளுக்கு உவமை கூறுதலை, 'தாளு லாவு பங்க யத்த ரங்க முந்து ரங்கமா' [கம்பரா-நகரப்-கக] எனவும், 'ஒலியவார் திரையினன்ன வொழுங்கின யோகமாக்கள்' [திருவிளை-திருமணப்-கக] எனவும் வருமாற்றானறிக. கடலில் விழுமிடி மிக்க வெளிதில் நீரைப் பிளந்து ஊடுருவிச் செல்லுதல் போல், கடுவேகமா யோடுங் குதிரைகளின் கால்கள் நிலத்தைப் பிளந்தன வென்க. நிலமுதுகு—இலக்கணை. இதில் ஆசிரியர் குதிரைப்படைகளின் சிறப்பைக் கூறினர். இதில் உவமையணியும், உயர்வு நவிற்சியணியும் உள்ளமை காண்க. (௪0)

தேர்ப்படைகளின் சிறப்பு

௫௬௨. இருநி லத்திட ருடைபடு முருளன
 இருபு டைச்சிற குடையன முனைபெறின்

எதிர்ப றப்பன விடுநுக மொடுகடி
 திவுளி முற்படி னிதுபரி பவமெனும்
ஒருநி னைப்பினை யுடையன வினையன
 உயர்செய் மொட்டொடு *மலரென நிறுவிய
ஒழிதர ச்செரு வுறுபுன லுமிழ்வன
 உலக ளப்பன விரதமு மருவியே.

ப - ரை:—இரு நிலம் - பெரிய நிலத்திலுள்ள, திடர் உடைபடும் - மலைகள் (எல்லாம்) உடைந்து போகும், உருளன - சக்கரங்களை யுடையன வும், இருபுடை - இரண்டு பக்கங்களிலும், சிறகு உடையன - சிறகுகளை யுடையனவாய், முனை பெறின்-போரைப் பெற்றால், எதிர் பறப்பன - (பின் வாங்காமல்) எதிராய்ப் பறப்பனவும், இடு நுகம் ஒடு - (தம்மில்) பூட்டிய நுகத்தடிகளோடு, இவுளி கடிது முன் படின் - குதிரைகள் விரைவாய் (போருக்கு) முற்பட்டால், இது பரிபவம் எனும் - இது (தமக்கு) அவமான மென்று நினைக்கும், ஒரு நினைப்பினை உடையன - ஒப்பற்ற எண்ணத்தை யுடையனவும், உயர்செய் மொட்டு ஒடு - சிறப்புப் பொருந்திய மொட்டுக்களும், மலர் என - (தாமரை) மலர்களும் போல, நிறுவிய - ஏற்படுத்தப்பட்ட உறுப்புக்களை யுடையனவும், வினையன - (பலவகை) வேலைப்பாடுக ளுடையனவாய், செரு ஒழிதர - (பகைவர்) போர்த்தொழி லொழியும்படி, உறுபுனல் உமிழ்வன - மிகுதியாகிய நீரைச் சொரிவனவும், உலகு அளப்பன - உலகங்களை அளப்பனவு மாகிய, இரதமும் மருவி - தேர்களும் நெருங்கிச் செல்லவும்,

வி - ரை:—மலைகளை யுடைக்கும் உருள்களை யுடையனவும் [மலைகல்வி-Tanks] இருபுறச் சிறகுகளை யுடையனவாய்ப் போரில் எதிர் பறப்பனவும் [ஆகாய விமானம்-Aeroplanes] பலவகை வேலைப்பாடுகளைப் பொருந்திப் பகைவர் போர்த்தொழிலொழியும்படி நீரை மிகுதியாய்ச் சொரிவனவுமாகிய பல பெரிய தேர்கள் சென்றன வென்பதாம். திடரென்பதற்கு மேடெனப் பொருள் கூறினுமாம். மலைகல்விகளும், ஆகாயவிமானங்களும் தமிழ் வேந்தர் காலத்திலேயே இருந்தனவென இச்செய்யுளால் தெரிகிறது. கடிது—குறிப்பு முற்றெச்சம்; நிறுவிய—அஃறிணைப் பலவின் படர்க்கை வினையாலணையும் பெயர். 'இவுளி முற்படின் ......... உடையன' என்றது மரபு வழுவமைதி. மருவி—எச்சத் திரிபு. இதில் தேர்ப்படைகளின் சிறப்பைக் கூறியுள்ளமை காண்க.

பா - பே:—*நறுமலர். (உக)

காலாட் படைகளின் சிறப்பு

௩௫௩. அலகில் வெற்றியு முரிமையு மிவையென
 அவய வத்தினி லெழுதிய வறிகுறி
அவையெ னப்பல வடுநிரை யுடையவர்
 அடிபு றக்கிடி லமரர்த முலகொடிவ்
வுலகு கைப்படு மெனினும தொழிபவர்
 உடன மக்கொரு சுமையென முனிபவர்
உயிரை விற்றுறு புகழ்கொள வுழல்பவர்
 ஒருவ ரொப்பவர் படைஞர்கண் மிடையவே.

ப - ரை :—அலகு இல் - அளவில்லாத, வெற்றியும் - வெற்றிக் குறிகளும், உரிமையும் - (அவரவர்க்கு) உரிய கடமைகளும், இவைஎன - இவை என்று (கண்டோர்) சொல்லவும், அவயவத்தினில் - (தங்கள் தங்கள்) அவயவங்களில், எழுதிய அறிகுறி-பதித்த அடையாளங்கள், அவை என-அவை என்று சொல்லவும், நிரை - வரிசையாகிய, பல வடு உடையவர் - பல (விழுப்புண்களின்) தழும்புகளை யுடையவர்களும், அடி புறக்கு இடில்-(போரில் முன் வைத்த) காலைப் பின் வைப்பதால், அமரர் தம் உலகொடு-தேவலோகமும், இ உலகு - இந்த உலகமும், கை படும் எனினும் - (தமக்கு எளிதில்) கிடைப்பதானாலும், அது ஒழிபவர் - அவ்வாறு புரிதலைத் தவிர்பவரும், உடல் - (நிலையில்லாத இந்த) உடம்பு, நமக்கு ஒரு சுமை என - நமக்கு ஒருபாரமென்று, முனிபவர் - (அதனை) வெறுப்பவரும், உயிரை விற்று - (தங்கள்) உயிரைக் கொடுத்தாயினும், உறு புகழ் கொள - (நிலையாக) பொருந்திய புகழைத் தேடிக்கொள்ள, உழல்பவர் - முயல்பவரும், ஒருவர் ஒப்பவர் - (ஒருவருக்கு) ஒருவர் சமானமானவருமாகிய, படைஞர்கள் மிடைய - படைவீரர்கள் (பலர்) நெருங்கிச் செல்லவும்,

வி - ரை :—பலவகை விருதுகளைப் பெற்றவர்களும் விழுப்புண்களையுடையவர்களும் போரில் புறங் கொடாதவர்களும் புகழையே நாடுபவர்களுமாகிய வீரர் பலர் திரண்டு சென்றன ரென்பதாம். வெற்றி யென்றது—வெற்றிச் சின்னங்களை ; அவை அரசனால் வழங்கப்பட்ட யானை, குதிரை, சிறுநாடு முதலியன [புறப்-வெ-மா-கஉஅ]. 'உரிமை' யென்றது அவரவர் தத்தம் நிலைமைக் கேற்பச் செய்யவேண்டிய கடமைகளை ; வடுநிரை யாவன :—(வீரர்கள் முன்பு பல போர்களில் சென்று புண்பட்ட) தழும்புகளின் வரிசை ; அவை விழுப்புண் எனப்படும். அப்புண்கள் புறங்கொடாத வீரர்களின் மார்பிலும் முகத்திலும் படுவன வாதலால், [தா-டுOஉ] 'அவயவத்தினில்......வடுநிரை யுடையவர்' என்றார் [புறப்-வெ.-மா.-உகூ.] அளவிறந்த பெரும்பயன் கிடைப்பினும், போரில் முன்வைத்த காலைப் பின் வையாதவரென்பார், 'அடி புறக்கிடில்......ஒழிபவர்' என்றார். 'அடியொதுங்கிப் பிற்பெயராப் படையோர்க்கு' [மதுரைக்கா-ௐஎ, ௐஅ] என்றார் பிறரும். தம் முயிரினும் புகழையே பெரிதும் நாடும் வீரரென்பதும், ஒருவர்க் கொருவர் பின் வாங்குபவரல்ல ரென்பதும் இறுதியில் கூறியவாறாம். விற்று—இதில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. உறுபுகழ்—வினைத்தொகை ; மிகுதியாகிய புகழெனின், உரிச்சொற்றொடராம். இச்செய்யுள் காலாட்படைகளின் சிறப்பைக் கூறித்தது. (சஉ)

**வீரர் ஆரவாரம்**

ௐருச. விழித்த †விழிதனி விழித்த விருதர்கள்
விடைத்து *வெடுவெடு சிரித்தவாய்
தெழித்த பொழுதுட றிமிர்க்க விமையவர்
திகைக்கண் மதகரி திகைக்கவே.

ப - ரை :—விழித்த தனி விழி - (கோபித்து) பார்க்கும் ஒப்பற்ற கண்களோடு, விழித்த - விளங்கிய, விருதர்கள் - வீரர்கள், விடைத்து-கோபித்து, வெடு வெடு சிரித்தவாய் - வெடு வெடு வென்று சிரித்த வாயால், தெழித்த பொழுது-பேராரவாரஞ் செய்த பொழுது, இமையவர்

உடல் திமிர்க்க - தேவர்கள் உடல் நடுங்கவும், திகை கண் - (எட்டு) திசைகளிலுமுள்ள, மதம் கரி திகைக்க - மதத்தைப் பொழியும் யானை கள் திகைப் படையவும்,

வி - ரை :—தேவர்கள் நடுங்கவும் திசையானைகள் திகைக்கவும் வீரர்கள் ஆரவாரஞ்செய்தன ரென்பதாம்; அவர்கள் ஆரவாரம் புரிந்தமை போர் கிடைத்த தென்னுங் களிப்பின் மிகுதியா லென்க. விழித்தல்—விளங்கல்; 'வான்கண் விழியா வைகறை யாமம்' [சிலப்-க0-க] என்றமை காண்க. 'வெடுவெடு சிரித்த' என்றது கோப நகையினை; 'மால்வரை பனிப்ப வேடிபட நகைத்து' [ஆரியப்-இரணியனை-அச] எனவும், 'வெடுவெடேன்ன நக்கு' [காரைக் கா-மூத்த-உ] எனவும், வருமாறு காண்க. வீரர் ஆரவாரத்தால் தேவரும் திசையானைகளும் நடுங்குதலை, 'ஆர்த்தார் நெடுவான நடுங்க......வேர்த்தாரது கண்டுவெசும் புறு வோர்' எனவும், 'திகைக்கண் வேழ நெடுங்களிச் செருக்கு நீங்க' [கம்பரா-அதி காயன்-உஉ; சம்புமாலி-கரு] எனவும் கம்பர் கூறினமையாலு முணர்க.

பா - பே :—† விழிகனல், * விடுவிடு சிரித்த. (சரு)

குதிரைகள் வானளாவப் பரவுதல்

நடுடு. உகத்தின் முடிவினி லுகைத்த கனைகடல்
உவட்டி யெனமுகின் முகட்டின்மேல்
நகைத்த விடுபரி முகக்க ணுரைசுர
நதிக்க ணுரையென மிதக்கவே.

ப - ரை :—உகத்தின் முடிவினில் - யுகங்களின் முடிவில், உகைத்த - பொங்கி எழுந்த, கனை கடல் - ஒலிக்குங் கடலலைகள், உவட்டி என - (மேக மண்டலமளவும்) பெருகி யெழுந்தாற்போல,முகில் முகட்டின்மேல்-மேகங் களி னுச்சியில், நகைத்த - (பாய்ந்து) விளங்கிய, பரி முகம் கண்-குதிரை களின் வாயில், விடு நுரை - வெளிப்படும் நுரைகள், சுரநதி கண்-ஆகாய கங்கையின், நுரை என - நுரை போல, மிதக்க - மிதந்து தோன்றவும்,

வி-ரை :—யுகமுடிவில் கடலலைகள் கிளர்ந்தெழுந்தாற்போல், மேகங்களி னுச்சியில் தோன்றுங் குதிரைகளின் வாயிலிருந்து வெளிப்படும் நுரை ஆகாய கங்கையின் நுரைபோல் தோன்று மென்பதாம். கடலலைகள் குதிரைகளுக் கும், ஆகாய கங்கையின் நுரை அவைகளின் வாயிலிருந்து வெளிப்படும் நுரைக்கு முவமை. குதிரைகள் மேகமண்டலத்தில் பாய்ந்து தோன்றுதலால், ஆகாய கங்கையின் நுரையை உவமை கூறினர். 'முகில் முகட்டின்...பரி' என்றதற் கேற்ப 'நிலமுறு துகளற முகில் மிதிப்பன' [தா-நடுக] என்றார் முன்னும். 'உகத்தின் முடிந்த நாளலையோ டொலித்தெழு சங்க வேலையென.........வாசி களே' [வில்விபா-கஉ-ம்—போர்-உ0] எனவும், 'பாரிற் றேர்செவின் பழிபெரி துடைத்தென நாணி, சோரும் வார்புயற் றுளங்கவிண் புகுவன துரகம், [சீவகசி-உகச0] எனவும் பிற அறிஞர் கூறி யுள்ளமையுங் காண்க. கடல், முகம்—ஆகுபெயர்கள்; உவட்டியென—உவட்டினுலென்ன என்பதன் தொகுத் தல். இச்செய்யுள் உவமையணியாம். (சச)

யானைகளின் தன்மை

நடுசு. கழப்பில் வெளில்சுளி கதத்தி லிருகவுள்
கலித்த கடமிடி பொறுத்தபோர்க்
குழப்பி வருமுகின் முழக்கி லலைகடல்
குளிக்கு *முகில்களு மிடக்கவே.

ப - ரை :—இரு கவுள் கலித்த - இரண்டு கன்னங்களிலும் தோன்றிய, கடகம் - மதநீரோடு, கதத்தில் - கோபத்தால், வெளில் சுளி - கட்டுத்

தூணை முறித்தும், இடி பொறுத்த போர் - இடியோசைபோல் ஒலி பொருந்திய போரில், குழப்பி வரு - (பகைவரை) கலக்கியும் வருகின்ற, கழப்பு இல் - கள்ளத்தன மில்லாத, முகில் முழக்கின் - மேகம் போன்ற யானைகளின் ஒலியால், அலை கடல் குளிக்கும் - (அலைகளால்) அசையும் கடலில் (நீருண்ண) படியும், முகில்களும் - மேகங்களும், இடக்க - (அஞ்சி) பின் வாங்கவும்,

வி - ரை :—யானைகள் பிளிறுதலினால், கடல் நீரை யுண்ணும் மேகங்கள் அஞ்சி நிலை குலைந்தன வென்பதாம். வெளில் சுளிவரு கழப்பில் முகிலென்க. 'சுளி வரு முகில்' என்றது 'வரிப்புனை பந்து' [திருமுருகு-சஅ] என்பது போல நின்றது. முகில் இரண்டனுள் முந்தினது உவமையாகு பெயராம்.

பா - பே :—* முகில்களு மிடிக்கவே. (சுகு)

**தேர்ப்படைகளின் செயல்**

நடுஎ. கடுத்த விசையிருள் கொடுத்த வுலகொரு
கணத்தில் வலம்வரு கணிப்பிறேர்
எடுத்த கொடிதிசை யிபத்தின் மதமிசை
இருக்கு மளிகளை யெழுப்பவே.

ப - ரை :—உலகு ஒரு கணத்தில் - உலகங்களை ஒரு நொடியில், வலம் வரு - சுற்றி வருகின்ற, கடுத்த விசை - மிக்க வேகத்தையுடைய, இருள் கொடுத்த - இருளை உண்டாக்குகிற, கணிப்பு இல்தேர் - அளவில்லாத தேர்களில், எடுத்த கொடி - உயர்த்திய கொடிச் சீரைகள், திசை இபத்தின் மதம் மிசை - (எட்டு) திக்கு யானைகளின் மதநீரில், இருக்கும் அளிகளை - இருக்கும் வண்டுகளை, எழுப்ப - எழுப்பவும்,

வி - ரை :—மிகவும் விரைந்தோடும் தேர்களில் கட்டிய கொடிச் சீரைகள் திசையானைகளின் மதநீரை யுண்ணும் வண்டுகளை யெழுப்பின வென்பதாம். பல பெரிய தேர்கள் ஒன்று திரண்டமையால், அவற்றின் நிழல் இருளை யுண்டாக்கின தென்க. தேர்களிலுள்ள கொடிச் சீரைகள் அசைதலாலும் தேர்கள் பேரொலி புரிதலாலும் வண்டுகள் அஞ்சி யெழுந்தனவாம். இந் நான்கு செய்யுட்களும் உயர்வு நவிற்சியணியாம். (சுசு)

**சோழர்படை விரைந்து செல்லுதலான் நிகழ்ந்த நிகழ்ச்சி**

நடுஅ. எழுந்தது சேனை யெழலு மிரிந்தது பாரின் முதுகு
விழுந்தன*கானு மலையும் வெறுந்தரை யானதிசைகள்.

ப - ரை :—சேனை - (நால்வகை) சேனையும், எழுந்தது - (போர்க்கு) புறப்பட்டது, எழலும் - (அவ்வாறு) புறப்படுதலும், பாரின் முதுகு இரிந்தது - நிலத்தின் முதுகு முறிந்தது, கானும் மலையும் விழுந்தன - காடுகளும் மலைகளும் (நிலை குலைந்து) விழுந்தன, திசைகள் வெறும் தரை ஆன - திக்குகள் (எல்லாம்) வெறுநில மாயின.

வி - ரை :—நால்வகைச் சேனைகளும் போர்க்குத்திரண்டெழுந்தனவென்பதாம். முன் செய்யுட்களில் நால்வகைப் படைகளும் தனித்தனி திரண்டு வந்தமை கூறி, இதில் அவை போர்க்குப் புறப்பட்டமை கூறினர். அச்சேனைகளின் பாரத்தைப் பொறுக்கலாற்றாமை கருதி, 'பாரின் முதுகு இரிந்தது' எனவும், அச்சேனைகள் செல்லும் வேகத்தைக் கருதி, 'கானு மலையும் விழுந்தன' எனவுங் கூறினர். பகைவர் நாட்டைக் கைப்பற்றக் கருதிச் சேனைகள் திரண்டெழுதலை வஞ்சியரவம் என்ப. 'வள்வார் முரசமொடு வயக்களிறு முழங்க, ஒள்வாட்டானை யுருத்தெழுந் தன்று' [புறப்-வெ-மா-நஎ] என்றமை காண்க. இது முதல் நான்கு

செய்யுட்கள் சேனைகள் விரைந்து செல்லுதலால் நிகழ்ந்த நிகழ்ச்சியை யுணர்த்தும். பா - பே :—* கான மடைய.

(ஙஙஎ) அருளுபொழுதில் (ஙஙஅ) எனலும் (ஙஙகூ) முனிவுகொண்டதிலை, பொருளறிகிலம் (ஙச0) (பின்பு) அணைமின், கொணர்மின் எனலும் (ஙசக) வண்டை நகரரசன், கழல் தொழுதனன் (ஙசஉ) (பின்பு) விடை கொடுக்க, அப்பொழுதிலே (ஙசங) திரள (ஙசச) தொடர (ஙசரு) இருள் பரக்க (ஙசகூ) ஒளி பரக்க (ஙசஎ) ஆனவோ (ஙசஅ) இடமு மில்லை (ஙசகூ) என வெடுத் துரைத்து, மனநடுக்குற, சாதுரங்கம், மறத்தலான் (ஙரு0) உளவென, கரிகளு மிடைய (ஙருக) பரிகடுக (ஙருஉ) இரதமு மருவி (ஙருங) படைஞர்கண் மிடைய (ஙருச) மதகரிதிகைக்க (ஙருரு) நுரையென மிதக்க (ஙருகூ) முகில்களு மிடக்க (ஙருஎ) அளிகளை யெழுப்ப (ஙருஅ) எழுந்தது சேனை என வினை முடிவுசெய்க.

இதுவுமது

ஙருகூ. அதிர்ந்தன நாலு திசைக ளடங்கின வேழு கடல்கள்
பிதிர்ந்தன மூரி மலைகள் பிறந்தது தூளி படலம்.

ப - ரை :—நாலு திசைகள் - நான்கு திக்குகளி லுள்ளவர்களும், அதிர்ந்தன - நடுக்க மடைந்தனர், ஏழு கடல்கள் - ஏழுகடல்களும், அடங்கின - (ஒலி) அடங்கின, மூரி மலைகள் - பெரிய மலைகள், பிதிர்ந்தன - பிளவு பட்டன, தூளி படலம் பிறந்தது - புழுதியின் கூட்டம் (மிகுதியாய்) உண்டாயிற்று.

வி - ரை :—சேனைகள் விரைந்து செல்லுதலால், புழுதி கிளம்பின தென்ப தாம். திசைகள்—இடவாகுபெயர். ஏழ கடல்களை ஙகூரு-ம்,தாழிசையிற் காண்க.

இதுவுமது

ஙகூ0. நிலந்தரு தூளி பருகி நிறைந்தது வானின் வயிறு
வலந்தரு மேக நிரைகள் வறந்தன நீர்கள் சுவறி.

ப - ரை :—நிலம் தரு - பூமியிலிருந்து உண்டாகிய, தூளி பருகி - புழுதியை விழுங்குதலால், வானின் வயிறு - ஆகாயத்தின் வயிறு, நிறைந்தது - நிரம்பினது, வலம் தரு - வலிமை பொருந்திய, மேகம் நிரைகள் - மேகங்களின் கூட்டங்கள், நீர்கள் சுவறி - (தம்மிடமுள்ள) நீரெல்லாம் வற்றி, வறந்தன - வறண்டு போயின.

வி - ரை :—சேனைகள் செல்லும்போது கிளம்பிய புழுதியால் ஆகாயம் மறைந்ததன்றி, மேகங்களிலுள்ள நீரும் வறண்டு போயின தென்பதாம். 'நிலந் தரு........வயிறு' என்றது—மரபு வழுவமைதியாம். வலம்—வலிமை; 'வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த' [புறநா-உச] என்றதனாலறிக. மேகத்துக்கு வலி யாவது:—உலகத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாம். வானின் வயிறு—என்றது இலக்கணை. (சகூ)

இதுவுமது

ஙகூக. தயங்கொளி யோடை வரைக டருங்கட தாரை மழையின்
அயங்களின் வாயி னுரையி னடங்கின தூளி யடைய.

ப - ரை :—தயங்கு ஒளி - விளங்கும் ஒளியையுடைய, ஓடை - நெற்றிப்பட்ட மணிந்த, வரைகள் - மலைபோன்ற யானைகள், தரும் கடம் - சொரிகின்ற மதநீராகிய, தாரை மழையின் - மழைநீராலும், அயங்களின் - குதிரைகளின், வாயின் நுரையின் - வாயிலிருந்து வரும் நுரையாலும் தூளி அடைய அடங்கின - புழுதி முற்றும் தணிந்தன.

வி - ரை :—யானைகளின் மதநீராலும் குதிரைகளின் வாய் நுரையாலும் அப்புழுதி தணிந்த தென்பதாம். முன் செய்யுளில் சேனைகள் செல்லும் விரை

வால் புழுதி கிளம்பினமை மொழிந்து, இச்செய்யுளில் அப்புழுதி அடங்கினமை கூறினர். ஓடை வரை—அடையடுத்த உவமையாகு பெயர். இந்நான்கு செய்யுட்களும் உயர்வு நவிற்சி யணியாம். (டு")

படைகள் தங்கல்

௩சுஉ. எழுதூ ளியடங் கநடந் துதயத்
தேகுந் திசைகண் டதுமீ ளவிழும்
பொழுதே கலொழிந் துகடற் படையெப்
பொழுதுந் தவிரா துவழிக் கொளவே.

ப - ரை:—கடல் படை - கடல் போன்ற சேனைகள், உதயத்து - (சூரியன் தோன்றும்) காலை வேளையில், ஏகும் திசை கண்டு - (தாம்) செல்லும் திசையை அறிந்து, எழு தூளி - (மேலே) கிளம்பும் புழுதி, அடங்க நடந்து——, அது மீள விழும் பொழுது - அந்தச் சூரியன் மீண்டும் மறையும் (மாலை) காலத்தில், ஏகல் ஒழிந்து - (அவை) செல்லுதல் தவிர்ந்து, எ பொழுதும் தவிராது - (பகலில்) ஒரு நாளும் தவறாமல், வழி கொள - பிரயாணஞ் செய்ய,

வி - ரை:—சேனைகள் இரவில் தங்கிப் பகலில் நடந்து சென்றன வென்பதாம். சேனைகள் இளைப்பாறி உறங்கும் பொருட்டு இரவில் தங்கின வென்க. 'எழுதூளி யடங்க நடந்து' என்றதனல், சேனைகளால் கிளம்பிய புழுதி அச்சேனைகளாலே தணிந்த தென்பதாம். கடற் படை—உவமைத் தொகை. எப்பொழுதும்—உம்மை முற்றுப் பொருளை யுணர்த்தினது. (டுக)

கருணகரன் யானைமேல் சென்றமை

௩சு௩. *தண்ணா ரின்மலர்த் திரடோ ளபயன்
தானே வியசே னைதனக் கடையக்
கண்ணா கியசோ ழனசக் கரமாங்
கருணா கரன்வா ரணமேற் கொளவே.

ப - ரை:—தண் ஆரின் மலர் - குளிர்ச்சியாகிய ஆத்திமலர் மாலையை யணிந்த, திரள் தோள் - திரண்ட தோள்களையுடைய, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழன், ஏவிய சேனை தனக்கு - (போருக்கு) கட்டளையிட்டனுப்பிய சேனைகளுக்கு, அடைய கண் ஆகிய - முற்றும் கண் போன்றவனும், சோழன் சக்கரம் ஆம் - சோழ வேந்தனுடைய சக்கராயுதம் போன்றவனுமாகிய கருணகரத் தொண்டைமான், வாரணம் மேல் கொள - யானைமே லேறிச் செல்லவும்,

வி - ரை:—முதற் குலோத்துங்கன் படைத்தலைவனகிய கருணகரன் யானை மேலேறிச் சென்றனனென்பதாம். படைத்தலைவன் படைகளுக்கு இன்றியமையாத சிறப்புடைமை பற்றிக் கருணகரனைக் கண் எனவும், திருமாலே முதற் குலோத்துங்கனய்த் தோன்றி யுள்ளான் என்றமையால், அவனைச் சக்கரம் எனவுங் கூறினர் [தா-௩அஎ]. திருமாலின் சக்கரம் அவர் பகைவர்களை எளிதில் அழித்தல் போல், இவனும் முதற் குலோத்துங்கன் பகைவரை எளிதில் அழிக்கு வல்லவனென்க. ஆரின்மலர்—ஆறன்தொகை; இன்-சாரியை; மலர்—காரணவாகு பெயராய் மாலையை யுணர்த்தினது; சினையாகு பெயரெனினுமாம். சோழன சக்கரம்—ஆறன் விரி; இதில் பன்மைக்குரிய அகரவுருபு சிறுபான்மை ஒருமைக்கண் வந்தது. கண்—சக்கரம்—உவமையாகு பெயர்கள்.

பா - பே:—*தண்ணர் மலர்சேர். (டுஉ)

கருணாகரன் தமையன் செலவு

௩௪௪. தொண்டை யர்க்கரசு முன்வ ருஞ்சுரவி
துங்க †வெள்விடையு யர்த்தகோன்
வண்டை யர்க்கரசு பல்ல வர்க்கரசு
மால்க ளிற்றின்மிசை கொள்ளவே.

ப - ரை :—தொண்டையர்க்கு அரசு - தொண்டை நாட்டிலுள்ள வர்க்கு அரசனும், வண்டையர்க்கு அரசு - வண்டை யென்னும் நகரத்தி லுள்ளவர்க்கு மன்னனுமாகிய கருணாகரனுக்கு, முன் வரும் - முன்னே பிறந்த, சுரவி - காமதேனுவின் வழியில் வந்த, துங்கம் - பரிசுத்தமாகிய, வெள் விடை - வெண்மையாகிய எருத்துக்கொடியை, உயர்த்த கோன் - உயர்த்திப் பிடித்த வேந்தனாகிய, பல்லவர்க்கு அரசு - (பல்லவ நாட்டி லுள்ளவர்க்கு அரசனாகிய) பல்லவ வேந்தன், மால் களிற்றின் மிசை கொள்ள - பெரிய யானையின் மேலேறிச் செல்லவும்,

வி-ரை :—கருணாகரன் தமையனாகிய பல்லவ வேந்தன் யானைமே லேறிச் சென்றனனென்பதாம். கருணாகரனுக்குப் பல்லவ வேந்தன் தமையனென் பதும், ௩௬௩ம் தாழிசையில் கருணாகரனைப் படைத்தலைவனென்றமையால், இவன் உதவிப் படைத்தலைவ னென்பதும் இதனால் விளங்குகிறது. எருத்துக் கொடி பல்லவர்க்குரிய தென்பதை, 'விடைவேல் கொடி வேற்படை முன் னுயர்த்த பண்புடைப் பல்லவர் கோன்' [திவ்வி-பி-பெரியதிரு-உ-க, ௬] எனப் பெரியார் கூறியதனாலறிக. மால்—மேகமெனினுமாம்.

பா-பே :—† வேள்கொடி, வெள்கொடி. (௩௩)

வானகோவரையன் முடிகொண்ட சோழன் செலவு

௩௪௫. வாசி கொண்டரசர் வார ணங்கவர
§வாண கோவரையன் வாண்முகத்
தூசி கொண்டுமுடி கொண்ட சோழனொரு
சூழி வேழமிசை கொள்ளவே.

ப - ரை :—வாணகோவரையன் - வாணகோவரையன் என்பவன், வாசி கொண்ட - பெருமையை யுடைய, அரசர் - (பகை) அரசர்களின், வாரணம் கவர - யானைகளைக் கைப்பற்ற, வாள்முகம் - ஒளி பொருந்திய முகத்தையுடைய, தூசி கொண்டு - குதிரை மேலேறிச் செல்லவும், முடி கொண்ட சோழன் - முடிகொண்ட சோழன் என்பவன், ஒரு - ஒப்பற்ற, சூழி - முகப்போர்வையையுடைய, வேழம் மிசை கொள்ள யானை மேலேறிச் செல்லவும்,

வி-ரை :—வாணகோவரையன், முடிகொண்ட சோழன் என்னுமிருவரும் முறையே குதிரைமேலும் யானைமேலும் ஏறிச் சென்றன ரென்பதாம். இவ் விருவரும் பல்லவ வேந்தனைப்போல் உதவிப் படைத் தலைவரேயாம். 'அரசர் வாரணங் கவர' என்றதனால், இவர்களும் சிறந்த வீரர்கள் என்பது விளங்கும். தூசி—குதிரை; இதனை, 'துரகதம் வாசி யுன்னி தூசிகந் தருவம் கற்கி' [சூடாம-விலங்குப்பெ-க0] என்றமையாலறிக. இச்செய்யுளை 'வாண கோவரை யன், முடிகொண்ட சோழன், வாண்முகத் தூசி கொண்டு, ஒரு சூழி வேழமிசை கொள்ள' என்றியைத்து, வாணகோவரையனும் முடிகொண்ட சோழனும் ஒளி பொருந்திய தோற்றத்தையுடைய கொடிப் படையைத் தம் மோடு திரட்டிக்கொண்டு களிறுகளின் மேலேறிச் செல்ல வெனினுமாம் கொண்டரசர்—பெயரெச்சத்தின் ஈறு கெட்டது. தூசிகொண்டு—முற்கூறிய

பொருளில் எச்சத்திரிபு. பா-பே:—$ வாணர் கோவரையன் வாண்முகத் தூசு கொண்டு. (நிசு)

பல்லவவேந்தன் வண்டைவேந்தன் போர்மேல் செல்லல்

நசுகூ. *மறித்தோடி யெவ்வரசுஞ் சரிய வென்று
வருமனுக்கைப் பல்லவர்கோன் §வண்டை வேந்தன்
‡எறித்தோடை யிலங்குநடைக் களிற்றின் மேற்கொண்
டிரைவேட்ட பெருப்புலிபோ லிகன்மேற் செல்ல.

ப-ரை:—எ அரசும் - (தம்மோடு போர் புரியும்) எல்லா அரசர்களும், ஓடி சரிய - ஓடிப் பின் வாங்கும்படி, மறித்து - (அவர்களைத் தம் மேல் வர விடாமல்) தடுத்து, வென்று வரும் - வெற்றி பெற்று (திரும்பி) வரும், அனுக்கை - (முதற் குலோத்துங்கன்) கட்டளையைச் செலுத்தும், பல்லவர்கோன் - பல்லவ நாட்டிலுள்ளவர்களுக்குத் தலைவனாகிய பல்லவ. வேந்தனும், வண்டை வேந்தன் - வண்டை நகரத்திற்கு அரசனாகிய கருணாகரனும், எறித்து - ஒளிவீசி, இலங்கு ஓடை - விளங்கும் நெற்றிப் பட்டத்தையும், நடை - சிறந்த நடையையு முடைய, களிற்றின் மேல் கொண்டு - ஆண் யானைகளின் மேல் ஏறிக்கொண்டு, இரைவேட்ட - (பசியைப் பொறாமல்) இரையை விரும்பிப் புறப்பட்ட, பெரும் புலி போல் - பெரிய புலியைப் போல், இகல் மேல் செல்ல - (கலிங்கநாட்டின் மேல்) போருக்குச் செல்லவும்,

வி-ரை:—முன் செய்யுட்களில் கருணாகரனையும் பல்லவ வேந்தனையும் தனித் தனியாகவும், இச் செய்யுளில் அவ் விருவரையும் சேர்த்து மியம்பினர்.

$ 'வளவர் வேந்தன்' எனப் பாடங்கொண்டு (கருணாகரனுடன் முதற் குலோத்துங்கன் புதல்வனாகிய) விக்கிரம சோழனும் கலிங்கப் போருக்குச் சென்றனனெனவுங் கூறுவர். இவன் கி. பி. கககஅ-ல், பட்டம் புனைந்து கொண்டான். இவன் சுமார் கஅ-வருடம் ஆட்சி புரிந்தான். இவன் தெலுங்க வீமன் என்னும் வேந்தனை வென்றான். இவன் தான் அரசாளுகையில் கலிங்க நாட்டின்மேல் படையெடுத்துச் செல்லவில்லை. இவன் வைணவ மதத்தில் மிகுந்த பற்றுடையவன். இவன் திருவரங்கத்தில் தன் பேரால் இரண்டு தெருக்களை யேற்படுத்தினான். அவைகளில் ஒன்று திருவிக்கிரமன் திருவீதி எனவும், மற்றொன்று அகளங்கன் திருவீதி எனவும் வழங்கப்படும் [சொழவமி-பக். நரு, நசு]. கலிங்க நாட்டை விக்கிரம சோழன் வென்றமையை, 'போர்த் தொழிலால், ஏனைக் கலிங்கங்க ளேழினையும் போய்க் கொண்ட தானைத் தியாக சமுத்திரமே' [விக்கிர-உலா-சுகூ0-சுஉ] எனவும், 'கலிங்கப், பெரும்பரணி கொண்ட பெருமான்' [குலோத்-உலா-ருரு-ருசு] எனவும், 'கலிங்கப் பரணி புனைந்த பரிதி...விக்கிரம சோழன்' [இராச-உலா-சுந-சுசு] எனவும், மூவருலாக்கள் மொழியு மாற்றானறிக. 'கலிங்க மிரியக் கனமலை நடாத்தி' எனவும், 'தெலுங்க வீமன் விலங்கன்மிசை யேறவும், கலிங்க பூமியைக் கனலெரி பருகவும், ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கி' எனவும், இவன் மெய்க்கீர்த்தியில் விளம்பியுள்ளமையால், இவன் தன்னிளமையின் தனித்துப் போர்புரிந்து கலிங்க நாட்டின் தென் பகுதியை யாண்ட தெலுங்க வீமனை வென்றனனென்பது விளங்கும். இம்மன்னவன் கி. பி. க0கூசு-ல், தெலுங்க வீமனுடன் போர் புரிந்து அவனை வென்றனனென்ப. [மு-கு-சோ-பக்-சுந] ஆனால், வட கலிங்கப் போர் கி. பி. கககக அல்லது கககஉ-ல், நிகழ்ந்ததென்பது ஈண்டு கவனிக்கத் தக்கதாம். இதனை நஎரு-ம் தாழிசையுரையிற் காண்க.

பல்லவ வேந்தனும் சிறந்த வீரனென இச்செய்யுளால் தெரிகிறது. 'இரை வேட்ட பெரும் புலி' என்றதனுல், படைத்தலைவர்கள் வீரமும், அவர்கள் வலிதிற் போரை விரும்பிச் சென்றமையும் பசித்த புலி தவறுமல் தன் உணவைப் பெற்று மீளுதல் போல், இவர்களும் கலிங்கநாட்டை வென்று மீள்வரென் பதும் நன்கு விளங்கும். நடை-தொழிற் பெயர்; நட—பகுதி-இச்செய்யுளி னிறுதியில் உவமையணி யுள்ளமை காண்க.

பா-பே:—*மறிந்தோடி, ‡ எறிந்தோடி யிலங்கோடை. (௫௫)

பல ஆறுகளைக் கடத்தல்

௩௬எ. †பாலா றுகுசைத் தலைபொன் முகரிப்
பழவா றுபடர்ந் தெழுகொல் லியெனு
நாலா றுமகன் றொருபெண் ணையெனு
நதியா றுகடந் துநடந் துடனே.

ப-ரை:—பாலாறு - பாலாற்றையும், குசைத்தலை - குசைத் தலை நதியையும், பொன் முகரி-பொன் முகரி யென்னும், பழமை ஆறு-பழமை யாகிய நதியையும், படர்ந்து எழு - (நீர்ப் பெருக்கால்) பரவி யெழுகின்ற, கொல்லி எனும் - கொல்லி என்கிற, நால் ஆறும் - (ஆகிய) நான்கு நதிகளையும், அகன்று - (குலோத்துங்கன் சேனைகள்) நீங்கி, ஒரு பெண்ணை எனும் - ஒப்பற்ற வடபெண்ணை என்னும், நதி ஆறும் - நதியின் வழியையும், கடந்து-தாண்டி, உடனே நடந்து-உடனே(அப்பால்) நடந்து போய்,

வி-ரை:—பாலாறு, குசைத்தலை, பொன் முகரி, கொல்லி, வட பெண்ணை யென்னும் நதிகளைச் சேனைகள் கடந்து சென்றன வென்பதாம். இவைகளில் †பாலாறு மைசூர் பீடபூமிக்கருகில் தோன்றி வட ஆற்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களின் வழியா யோடி வங்காளக் குடாக்கடலில் கலக்கிறது. இது சுமார் உ௩0 மைல் நீளமுடையது. குசைத்தலை நதி வட ஆற்காட்டிலுள்ள காவேரிப் பாக்கத்தில் உற்பத்தியாகிச் செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள திருவள்ளூர், பொன்னேரித் தாலுக்காக்களில் பாய்ந்து வங்காளக் குடாக்கடலில் விழுகிறது. இதனைக் குசஸ்தலி யெனவும் வழங்குவர் பொன்முகரி நதி சீகாளத்தியில் பாய்வதாம். இதனைச் சுவர்ணமுகி யெனவும் வழங்குவதுண்டு. வடபெண்ணை நதி மைசூர் பீட பூமியில் தோன்றி அனந்தபுரம், கடப்பை, நெல்லூர் ஜில்லாக்களின் வழியாயோடி வங்காளக் குடாக் கடலில் கலக்கிறது. இதனை உத்தரபினகினி எனவும் வழங்குவர். இதன் நீளம் சுமார் ௩௫0 மைல். ()

இதுவுமது

௩௬அ. வயலா று*புகுந் துமணிப் புனல்வாய்
மண்ணா றுவளங் கெழு$குன் றியெனும்
பெயலா றுபரந் துநிறைந் துவரும்
பேரா றுமிழிந் ததுபிற் படவே.

ப-ரை:—வயல் ஆறு - வயல்களின் வழியே, புகுந்து - புகுந்து சென்று, மணி புனல் வாய் - முத்துப் போன்ற நீர் பொருந்திய, மண்ணாறு - மண்ணாறு என்னும் நதியும், வளம் கெழு - வளப்பம் பொருந்

† பாலாறு தற்போது காஞ்சிபுரத்திற்குத் தெற்கே ஓடுகிறது. ஆனல் கலிங்கப் போர் நிகழ்ந்த காலத்தில், அது காஞ்சிபுரத்திற்கு வடக்கில் ஓடிக் கொண்டிருந்ததென இத்தாழிசையால் தெரிகிறது. பெண்ணை நதி யெனப் பொதுவாய்க் கூறியிருப்பினும், அஃதிங்கே வட பெண்ணையைக் குறித்தமை, அது காஞ்சிபுரத்திற்கு வடக்கே ஓடுவதனு லென்க.

திய, குன்றி எனும் - குன்றி யென்னும், பெயல் ஆறு - மழை நீரால் பெருகும் நதியும், நிறைந்து - (நீர்) நிரம்பி, பரந்து வரும் - பரவி வருகின்ற, பேர் ஆறும் - பெரிய கிருஷ்ணா நதியும், பின் பட - பின்னாகும்படி, இழிந்தது - (சேனை) கடந்து சென்றது.

வி - ரை :—சேனைகள் மண்ணாறு முதலியவற்றைக் கடந்து சென்றன வென்பதாம். மண்ணாறு :—இது நெல்லூர் ஜில்லாவில் பாய்வதாம். தெளிவாகிய நீரையுடைய நதி யென்பார், 'மணிப்புனல் வாய் மண்ணாறு' எனவும், மழை நீரால் பெருகுவ தெனினும், தன் வளத்தில் குன்றாத தென்பார், 'வளங் கெழு குன்றியெனும் பெயலாறு' எனவுங் கூறினர். பேராறு என்றது இங்கே கிருஷ்ணா நதியைக் குறித்தது. இந்நதி மேற்குத்தொடர்ச்சி மலையில் தோன்றி ஐதராபாத்திலும், கிருஷ்ணா, குண்டூர் ஜில்லாக்களிலும் ஓடி வங்காளக் குடாக் கடலில் கலக்கிறது. இது சுமார் அ00 மைல் நீளமுடையது. மணிப்புனல்—உவமைத் தொகை. பா - பே:—* கடந்து, $ குண்டி.

(ருசுஉ) கடற்படை, ஒழிந்து, வழிக்கொள (ருசுரு) மேற்கொள (ருசுச) மிசைகொள்ள (ருசுடு) மிசைகொள்ள (ருசுசு) மேற்செல்ல (ருசுஎ) உடனே நடந்து (ருசுஅ) பிற்பட இழிந்தது என முடிக்க. (ருஎ)

**இதுவுமது**

ருசுகூ. கோதா வரிநதி மேலா றொடுகுளிர்
†பம்பா நதியொடு சந்தப்பேர்
ஓதா வருநதி யொருகோ தமையுடன்
ஒலிநீர் மலிதுறை பிறகாக.

ப - ரை :—கோதாவரி நதி - கோதாவரி நதியாகிய, மேல் ஆறொடு - உயர்வாகிய நதியும், குளிர் பம்பா நதியொடு - குளிர்ச்சியாகிய பம்பா நதியும், சந்தம் பேர் - காயத்திரி யென்னும் பேரால், ஓதா வரு நதி - சொல்லப்பட்டு வரும் நதியும், ஒரு கோதமையுடன் - ஒப்பற்ற கௌதமி நதியும், ஒலி நீர் - ஒலிக்கும் நீர், மலி துறை - நிறைந்த விடமாகிய கோடி பலி யென்னும் பதியும், பிறகு ஆக - பின்னாகும்படி,

வி - ரை :—கோதாவரி, பம்பை முதலிய நதிகள் பிற்படச் சேனைகள் சென்றன வென்பதாம். 'சான்றோர், கவியெனக் கிடந்த கோதாவரி' [கம்பரா- சூர்ப்ப - க] யாகலின், 'கோதாவரி நதி மேலாறு' என்றார். மேலாறு - மேற்குக் கோதாவரி யெனினுமாம். இதனைப் பச்சிம கோதாவரி யென்பர் வடநூலார். கோதாவரி நதி மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி ஐதராபாத்திலும் கோதாவரி ஜில்லாவிலும் பாய்ந்து வங்காளக் குடாக்கடலில் கலக்கிறது. இதன் நீளம் சுமார் கூ00 மைல்களாம். காயத்திரி சந்தங்களில் ஒன்றாதலின், 'சந்தப்பேர் ஓதாவரு நதி' என்றார். கோடிபலி யென்னும் தலம் கௌதமிக்கு வட கரையிலுள்ள தென்பர். அதனைத் தற்போது கோடி பல்லி யென வழங்குவர். ஒடு—எண்ணின் கண் வந்த இடைச்சொல்; ஓதா—செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினை யெச்சம்; இஃதிங்குச் செயப் பாட்டு வினைப்பொருளில் வந்தது. பா - பே:—† கம்பா நதி. (ருஅ)

**சோழவீரர் தீ மூட்டிச் சூறை யிடல்**

ருஎ0. கடையிற் புடைபெயர் *கடலொத் தமரர்க
லங்கும் பரிசுக லிங்கம்புக்
கடையப் படரெரி கொளுவிப் பதிகளை
அழியச் சூறைகொள் பொழுதத்தே.

ப - ரை :—கடையில் - (யுகத்தின்) முடிவில், புடைபெயர் - (தன்) நிலைமாறி வரும், கடல் ஒத்து - கடலைப்போ லெதிர்த்து, அமரர் கலங்கும் பரிசு - தேவர்களும் கலங்கும்படி, கலிங்கம் புக்கு - (அந்தச் சேனைகள்) கலிங்க நாட்டில் புகுந்து, பதிகளை - (அங்குள்ள) ஊர்களை, படர் எரி கொளுவி - பரவும் நெருப்பால் கொளுத்தி, அடைய அழிய - (அவை) முற்றும் அழியும்படி, சூறை கொள் பொழுதத்து - கொள்ளை யடிக்குங் காலத்தில்,

வி - ரை :—கடல் கரைகடந்து பெருகி வந்தால், அதனைத் தடுக்கும் வகையில்லாதது போல், ஊர்களை யழித்து வருஞ் சேனையைத் தடுப்பவரின்மை கருதி, 'கடையிற் புடைபெயர் கடல்' என்றார். சேனைகளின் மிகுதிபற்றிக் கூறிய தெனினுமாம். 'புடைபெயர்' என்பதற்கு (நான்கு) பக்கங்களிலும் பெயர்ந்து வரும் எனினுமாம். ஊர்களை யெரிமடுத்தலும் சூறையிடலும் பகைவரைப் போருக்கழைக்குஞ் செயலாம். இவ்வாறு புரிதல் பண்டைய வழக்காம். 'வாடுக விறைவநின் கண்ணி யொன்னார், நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே' எனவும், 'பெருந்தண்பணை பாழாக, ஏமநன்னாட் டொள்ளெரி யூட்டினை' [புறநா-௬-௧௬] எனவும், 'அடையார்நாட், டோடெரியுள் வைகின வூர்' [புறப்-வெ. மா-௪௯] எனவும் வருவதனால் பகைவர் புலத்தைத் தீயிட் டெரிக்குமாறும், 'பிறர் நாடு கொள்ளுங் காலையவர்நாட், டிறங்கு கதிர்க் கழனிநின் னிளையருங் கவர்க' [புறநா - ௫௭] எனவும், 'களமர் கதிர்மணி.........கண்ணார் சிலையார் கவர்ந்தார்' [புறப்-வெ-மா-௫0] எனவும் வருவதனால் பகைவரூரைக் கொள்ளை கொள்ளுமாறு முணர்க. பகைப் புலத்தைத் தீயிட்டெரித்தல் உழபுல வஞ்சியும் [தா-௬௫, உ௫உ] அவரூரைச் சூறையிடுதல் மழபுல வஞ்சியுமாம். [புறப்-வெ-மா-௪௬-௫0]. அமரர்—இதில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

பா - பே :—* கடலொத் தரசர்.

**கலிங்கர் நடுக்கம்**

௩௭௧. கங்கா நதியொரு புறமா கப்படை
கடல்போல் வந்தது கடல்வந்தால்
எங்கே புகலிட மெங்கே யினியரண்
§ யாரே யதிபதி யிங்கென்றே.

ப - ரை :—கங்காநதி——, ஒரு புறம் ஆக - ஒப்பற்ற (வடக்கு) பக்கத்திலிருக்க, படை - (பகையரசன்) சேனை, கடல்போல் வந்தது——, கடல் வந்தால் - கடல் போன்ற சேனை (நம்மை எதிர்த்து) வந்தால், புகல் இடம் எங்கே - (நாம் உயிர் பிழைக்க) புகுதற்குரிய விடம் எங்கே, இனி அரண் எங்கே - இனிப் பாதுகாப்பு எங்கே, இங்கு அதிபதி யார் - இங்கே அரசன் யார், என்று - என்று (குடிமக்கள்) சொல்லி,

வி - ரை :—சேனைகள் கலிங்க நாட்டில் புகுந்து தீமூட்டுதலையும், சூறையிடுதலையுங் கண்டு குடிகள் கலங்கின ரென்பதாம். கங்கை நதி இமயமலையின் தென் பகுதியில் பிறந்து உத்தரப்பிரதேசத்தின் வழியாயோடி வங்காளக் குடாக் கடலில் கலக்கிறது. இதன் நீளம் சுமார் ௧௫௬0 மைல்களாம். சேனையைக் கடலுக்குவமை கூறுதலை, 'விரிகடல் வியன்றானையொடு' [மதுரைக்கா - ௧அ0] எனவும், 'தெவ்வர் தேஎத்துக் கடற்படை குளிப்ப மண்டி' [புறநா-௬] எனவும், 'வந்தது சேனை வெள்ளம்' [கம்பரா-கரன்வதை-௫௬] எனவும், 'கரைகாண வரிதான கடலோத்த பெருஞ்சேனை' [வில்லிபா-நிரைமீட்சி-௬] எனவும் வருவதனாலறிக. ௩௬௬-ம் செய்யுளில் 'கோதமை பிறகாக' எனவும், இங்கு 'கங்காநதி ஒரு

புறமாக' எனவும் கூறி யிருத்தலால், கலிங்கநாடு கோதமைக்கு வடக்கிலுள்ள கங்கை வரை முன்பு பரவியிருந்த தென்பது விளங்கும். தம்மைத் துன்புறுத்துஞ் சேனையைத் தடுக்க வியலாமையால், 'எங்கே புகலிடம் எங்கே யரண்' எனவும், குடிகளுக்கு நேருந் தீங்கைத் தடுப்பது அரசன் கடமையா யிருந்தும், அவன் அவ்வாறு விரைந்து செய்யாமையால், 'யாரே யதிபதி யிங்கு' எனவும் குடிகள் வருந்தின ரென்பதாம். 'எங்கே' இரண்டும் இன்மைப் பொருளில் வந்தன. இவ்விரு செய்யுட்களிலும் உவமையணி யுள்ளமை காண்க. இது முதல் நான்கு செய்யுட்கள் கலிங்க நாட்டுக் குடிகள் பெரிதும் நடுங்கி முறையிடுதலை யுணர்த்தும்.

பா - பே:—$ யாதோ விதுவிது விதியென்றே. (௬0)

சோழவீரர் மதில்களையும் சோலைகளையு மழித்தல்

௩௭௨. இடிகின் றனமதி லெரிகின் றனபதி
எழுகின் றனபுகை பொழிலெல்லாம்
மடிகின் றனகுடி கெடுகின் றனமினி
வளைகின் றன*பகை பகையென்றே

ப - ரை:—மதில் இடிகின்றன - மதில்கள் இடிக்கப் படுகின்றன, பதி எரிகின்றன - ஊர்கள் எரிக்கப் படுகின்றன, புகை எழுகின்றன - (அவை எரிக்கப்படுவதனால்) புகை கிளம்புகின்றன, பொழில் எல்லாம் - சோலைகளெல்லாம், மடிகின்றன - அழிக்கப் படுகின்றன, குடி கெடுகின்றனம் - குடிமக்களாகிய நாங்கள் துன்பமடைகின்றோம், இனி - இப்போது, பகை படை - பகைவர் சேனைகள், வளைகின்றன - (நமது நாட்டை) சூழ்கின்றன, என்று - என்று (குடிமக்கள்) சொல்லி,

வி - ரை:—பகைவர் படையால் தமக்கு நேர்ந்த பலவகைத் தீங்குகளைக் கருதிக் குடிகள் வருந்தின ரென்பதாம். பகைவர் மதிலை யழித்தலை, 'பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்' எனவும், பொழிலை யழித்தலை, 'ஊர்தொறுங் கடிமரந் துளங்கிய காவும், காவுதொறுங் கடிமரந் தடியு மோசை' [புறநா - ௬௫, உ௩, ௩௬] எனவும் வருவதனாலறிக. இடிகின்றன, எரிகின்றன, மடிகின்றன— செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினைகள்; குடி கெடுகின்றனம்— இடவழுவமைதி. பா - பே:—* படை படையென்றே. (௬௧)

கலிங்கக் குடிகள் முறையீடு

௩௭௩. உலகுக் கொருமுத லபயற் கிடுதிறை
உரைதப் பியதெம தரசேயெம்
பலகற் பனைகளை நினைவுற் றிலைவரு
படைமற் றவன்விடு படையென்றே.

ப - ரை:—எமது அரசே - (எங்கள்) அரசனே, உலகுக்கு ஒரு முதல் - உலகங்களுக்கு ஒப்பற்ற தலைவனாகிய, அபயன் கு - (முதற் குலோத்துங்க) சோழனுக்கு, திறை - பகுதிப் பொருளை, இடு உரை - செலுத்துவதாகச் சொன்ன சொல், தப்பியது - தவறி விட்டது, எம் பல கற்பனைகளை - எமது பலவகையாகிய சொற்களை, நினைவு உற்றிலை - (நீ சிறிதும்) ஆலோசிக்கவில்லை, வரு படை - (நம்மை எதிர்த்து) வந்த சேனை, அவன் விடு படை - அவன் ஏவிய சேனையேயாம், என்று-என்று சொல்லி,

வி - ரை:—முதற் குலோத்துங்கனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பொருளைச் செலுத்தாமையால், அவன் ஏவிய சேனையே நமது நாட்டில் வந்து

புகுந்தனவெனக் குடிகள் அரசனிடம் முறையிட்டன ரென்பதாம். கற்பனை—கற்பித்துச் சொல்லுவது; அதாவது - முதற் குலோத்துங்கனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பொருளைச் செலுத்தாவிடின், அதனால் வருங் கேடுகளை நன்கு விளங்க எடுத்துரைத்தலாம். முதல்—பண்பாகு பெயர். (சுஉ)

இதுவுமது

ஙஎச. உரையிற் குழறியு முடலிற் பதறியும்
ஒருவர்க் கொருவர்முன் முறையிட்டே
அரையிற் றுகில்விழ வடையச் சனபதி
அடியிற் புகவிழு பொழுதத்தே.

ப - ரை:—அடைய - (குடிமக்கள்) எல்லாரும், ஒருவர்க்கு ஒருவர் - ஒருவரினும் ஒருவர், உரையின் குழறியும் - சொற்கள் தடுமாறவும், உடலின் பதறியும் - உடல் நடுங்கவும், அரையில் துகில் விழ - இடுப்பி லணிந்த ஆடை (அவிழ்ந்து) விழவும், சனபதி முன் முறை இட்டு - அரசனெதிரில் (போய்த் தங்கள்) குறைகளைச் சொல்லி, அடியில் - (அவன்) பாதங்களில், புக விழு பொழுதத்து - (அடைக்கலமாய்) புகும் படி விழுந்த காலத்தில்,

வி - ரை:—குடிமக்கள் மிக்க நடுக்கத்துடன் விரைந்தோடி அரசனிடம் முறையிட்டன ரென்பதாம். 'அரையில் துகில்விழ' என்றது, அவர்களஞ்சியோடிய விரைவைக் குறித்தது. உரையின், உடலின்—இன் அல்வழிச் சாரியைகள்; சனபதி—சனங்களுக்குத் தலைவன், அரசனென்பது; இங்கே அனந்த பத்மனும். குழறி, பதறி—எச்சத் திரிபுகள்; இந்நான்கு தாழிசைகளிலும் அச்சச்சுவை செறிந்துள்ளமை காண்க. (சுரு)

அனந்தபத்மன் சீற்றமுரை

ஙஎரு. அந்தரமொன் றறியாத வடகலிங்கர்
* குலவேந்த னனந்த பன்மன்
வெந்தறுகண் வெகுளியினால் வெய்துயிர்த்துக்
கைபுடைத்து வியர்த்து நோக்கி.

ப - ரை:—அந்தரம் - (தனக்கு வரும்) தீங்கை, ஒன்று அறியாத - சிறிதும் (ஆராய்ந்து) அறியாத, வடக்கு கலிங்கர் - வடக்கிலுள்ள கலிங்க நாட்டி லுள்ளவர்களுக்கு, குலம் வேந்தன் - சிறந்த அரசனாகிய, அனந்த பன்மன் - அனந்தபத்மன் என்பவன், தறுகண் - அஞ்சாமையையுடைய, வெம் வெகுளியினால் - கொடிய கோபத்தால், வெய்து உயிர்த்து - வெப்ப மாய்ப் பெருமூச்சு விட்டு, கை புடைத்து - கைகளைக் கொட்டி, வியர்த்து நோக்கி - (உடம்பில்) வேர்வை யுண்டாகும்படி பார்த்து,

வி - ரை:—குடிகள் மொழிந்ததைக் கேட்ட அனந்த பத்மன் அளவற்ற கோபங்கொண்டன னென்பதாம். வெய்துயிர்த்தலும் கைபுடைத்தலும் உடல் வியர்த்தலும் சினக்குறிப்பாம். இதனை 'நுண்முத்த மேற்றியாங்கு மெய்யெலாம் வியர்த்து நொய்தின், வண்முத்த நிரைகொ ணெற்றி வார்முரிப் புருவ மாக்கி, கண்ணெரி தவழ வண்கை மணிநகு கடகமெற்றா, வெண்ணகை வெதண்டு நக்குக் கட்டியங் காரன் சொன்னான்' [சீவகசி - உருஅ] எனவும், 'அரக்க னன்னவை கேட்டலு மழலெழ வுயிர்த்து, கரத்தி னேடுகை புடைத்து' [உத்தரகா - வரை யெடுத்த-கங] எனவும் வருமாற்றானறிக. ஒன்று—இதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; வியர்த்து—எச்சத் திரிபு. இதில் உருத்திரம் என்னும் வெகுளிச்சுவை யுள்ளமை காண்க.

தேவேந்திர வர்ம இராசராசன் என்பவன் முதற் குலோத்துங்கன் புதல்வியாகிய இராசசுந்தரி என்பவளை மணம் புரிந்துகொண்டான். அப் பெண்மணி வயிற்றில் அனந்தபத்மன் உதித்தான். இவனை அனந்தவர்ம சோடகங்கன் எனவுங் கூறுவர். இதனால் அனந்தபத்மன் முதற் குலோத்துங்கனுக்குப் பேரனுமாதறிக. இம் மன்னவன் கி. பி. க0எஅ-ம், ஆண்டு பிப்ரவரி மாதம் கள-ம், நாள் கலிங்கநாட்டிற் கிறைவனானன். இவன் கி. பி. க0எஅ-ம், ஆண்டு முதல் ககசஉ அல்லது ககசசு வரை செங்கோல் செலுத்தினான். கலிங்கப் போர் கி. பி. கககக அல்லது ககக உ-ல் நிகழ்ந்ததாம். [H. I. S. I-பக்-அஎ, கூங, நடுஅ.]

பா - பே:—* குலவேந்த ரதிபன் வீரம். (கூசு)

இதுவுமது

நஎசு. வண்டினுக்குந் திசையானை மதங்கொடுக்கு
மலர்க்கவிகை யபயற் கன்றித்
தண்டினுக்கு மெளியனோ வெனவெகுண்டு
தடம்புயங்கள் குலுங்க நக்கே.

ப - ரை:—திசை யானை மதம் - (எட்டு) திக்கு யானைகளின் மத நீரை, வண்டினுக்கும் கொடுக்கும் - வண்டுகளுக்கும் (உண்ண) கொடுக்கும், மலர் கவிகை - பரவுதலையுடைய குடையையுடைய, அபயன் கு அன்றி - (முதற் குலோத்துங்க) சோழனுக்கு அல்லாமல், தண்டினுக்கும் - (அவன்) சேனைகளுக்கும், எளியனோ - (நான்) வலியற்றவனோ, என வெகுண்டு - என்று கோபித்து, தட புயங்கள் - (தனது) பெரிய தோள்கள், குலுங்க நக்கு - குலுங்கும்படி சிரித்து,

வி - ரை:—முதற் குலோத்துங்கனுக் கன்றி, அவன் சேனைகளுக்கும் நான் பின்வாங்குவேனோ என அனந்தபத்மன் மொழிந்தனனென்பதாம். இதனால் அவன் தன் பாட்டனாகிய அம் மன்னவன் பேராற்றலை நன்கு மதித்தமை விளங்கும். 'வண்டினுக்குந் திசையானை மதங் கொடுக்கு மலர்க் கவிகை' என்றதனால், முதற் குலோத்துங்கனாட்சி புரியுங்கால், அவன் நாடு எல்லாத் திசைகளிலும் பரவியிருந்தமை விளங்கும். திசையானை:—இதனை க0-ம், தாழிசையிற் காண்க. வண்டினுக்கும்—இதிலுள்ள உம்மை யிறந்தது தழுவியது; தன்னை யடைந்தவர்க்கு வேண்டியவற்றை வேண்டியவாறு வழங்குதலன்றி, வண்டுகளுக்கும் மத நீரை வழங்குவோனென்பதாம். இழிவு சிறப்பும்மை யெனினுமாம், எளியனோ—ஓகாரம் எதிர்மறை. இதிலும் வேதுளிச்சுவை யுள்ளமை காண்க. (கூடு)

இதுவுமது

நஎஎ. கானரணு மலையரணுங் கடலரணுஞ்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி
தானரண முடைத்தென்று கருதாது
வருவதுமத் தண்டு போலும்.

ப - ரை:—கான் அரணும் - காடுகளின் பாதுகாப்பும், மலை அரணும் - மலைகளின் பாதுகாப்பும், கடல் அரணும் - கடலின் பாதுகாப்பும், சூழ் கிடந்த - சூழ விருக்கின்ற, கலிங்கர் பூமி - கலிங்கரது நாடு, அரணம் உடைத்து என்று - (தக்க) பாதுகாப்பை யுடையது என்று, கருதாது - (சிறிதும்) நினையாமல், அ தண்டும் - (முதற் குலோத்துங்கனுடைய) அந்தச் சேனையும், வருவது போலும் - (நம்மை எதிர்க்க) வருகின்றது போலும்,

வி - ரை:—தக்க அரண்க ளமைந்துள்ள கலிங்கநாட்டை யெளிதில் வெல்லக் கருதி அச்சேனை வருகிறது போலும் என அனந்த பத்மன் இகழ்ந்தன னென்பதாம். கடலர ணென்றது கலிங்கத்திற்குக் கிழக்கிலுள்ள வங்காளக் குடாக் கடலை யென்க. காட்டரண், மலையரண், கடலரண் என மூவகை யரண்களை மொழிந்தமையால், உபலக்கணத்தால் நிலவரணுங் கொள்க. [தா - ருசுO] உடைத்து—ஒன்றன் படர்க்கைக் குறிப்பு முற்று. உம்மைகள் மூன்றும் எண்ணுப் பொருளன. இச் செய்யுள் இழிவுச் சுவையாம். (சுசு)

எங்கராயன் கூற்று

ருஎஅ. என்று கூறலு †மெங்க ராயனுன்
*ஒன்று கூறுவன் கேளென்று ணர்த்துவான்.

ப - ரை:—என்று கூறலும் - என்று (அனந்த பத்மன்) சொல்லுதலும், எங்கராயன் - எங்கராயன் என்பவன், நான் ஒன்று கூறுவன் - நான் ஒரு விஷயம் சொல்கிறேன், கேள் என்று - (அரசே நீ அதை) கேள் என்று, உணர்த்துவான் - (அதனை) அறிவிக்கத் தொடங்கினான்.

வி - ரை:—அனந்த பத்மன் சொன்னதைக் கேட்டு அவன் அமைச்சனாகிய எங்கராயன் சொல்லத் தொடங்கின னென்பதாம். எங்கராயன் அனந்த பத்மன் படைத்தலைவனுமாம். எங்கராயன் நான்—இடவழுவமைதி.

பா - பே:—† மானவன் மந்திரி, யானவன் காரியம்; * ஒன்று கூறுகே னென்று ரைக்குமால்.

(ருசுசு) பிறகாக (ருஎO) புக்கு, கொளுவி, சூறைகொள் பொழுதத்து (ருஎக) வந்தது, என்று (ருஎஉ) பகை, படை என்று (ருஎரு) விடுபடை என்று (ருஎச) விழு பொழுதத்து (ருஎரு) நோக்கி (ருஎசு) நக்கு (ருஎஎ) தண்டு போலும் (ருஎஅ) என்று கூறலும், உணர்த்துவான் என முடிக்க. (சுஎ)

எங்கராயன் அறவுரை

ருஎசு. அரசர் சீறுவ ரேனும டியவர்
உரைசெ யாதொழி யார்களு றுதியே.

ப - ரை:—அரசர் சீறுவர் எனும் - அரசர்கள் கோபங்கொண்டாலும், அடியவர் - (அவர்) அடியவராகிய அமைச்சர் முதலானோர், உறுதி - (அரசர்களுக்கு) நன்மை விளைக்கும் சொற்களை, உரை செயாது ஒழியார்கள் - சொல்லாமல் தவிரார்கள் (சொல்வாரென்பது).

வி - ரை:—அரசன் கோபித்தாலும், அமைச்சர் முதலானோர் அவனுக்கு நன்மை பயக்கும் மொழிகளைக் கூறுவரென்பதாம். 'அறிகொன் றறியானெனினு முறுதி, உழையிருந்தான் கூறல் கடன்' [திருக்கு - சுருஅ] எனவும், 'தம்முயிர்க் குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும், வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்' [கம்பரா - மந்திரப் - கூ] எனவும் அறிஞர் கூறினமையை இங்குக் கவனிக்க. எனும்—எனினும் என்பதன் மரூஉ; உம்மை எதிர்மறை. உரைசெயா தொழியார்—இரண்டு எதிர்மறைச் சொற்கள் ஓர் உடன்பாட்டுப் பொருளில் வந்தன. (சுஅ)

இதுவுமது

ருஅO. ஏனை வேந்தையெ றியச்ச யதரன்
தானை யல்லது §தான்வர வேண்டுமோ.

ப - ரை:—ஏனை வேந்தை-(தன்னை அடைந்தவரை யொழிந்த) மற்ற அரசர்களை, எறிய - அழிக்க, சயதரன் தானை அல்லது - முதற் குலோத்துங்கன் சேனையே யல்லாமல், தான் - (அந்த முதற் குலோத்துங்கன்) தானே, வரவேண்டுமோ-இங்கு வரவேண்டுமோ (வேண்டாவென்பதாம்).

வி - ரை :—முதற் குலோத்துங்கன் சேனையே எல்லா அரசர்களையும் அழிக்க வல்லதாதலால், அவன் வரவேண்டுவ தின்றென்பதாம். வேந்து-பண்பாகு பெயர்; வேண்டுமோ—ஓகாரம் எதிர்மறை. இதுமுதல் ஒன்பது தாழிசைகள் முதற்குலோத் துங்கன் சேனையின் சிறப்பை எங்கராயன் தன் வேந்தனுக் கெடுத்தியம்புதலை யுணர்த்தும். பா - பே :—§ தானவன். (சுகூ)

இதுவுமது

ருஅக. ‡விட்ட தண்டினின் மீனவ ரைவருங்
கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலுநீ.

ப-ரை:—விட்ட தண்டினின்-(முதற் குலோத்துங்கன்) ஏவிய சேனையால், மீனவர் ஐவரும் - பாண்டியர் ஐந்து பேரும், கெட்ட கேட்டினை - (போரில்) அழிந்த அழிவை, நீ கேட்டிலை போலும்-நீ கேட்கவில்லையோ,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் படையால் பாண்டிய ரழிந்தமையை நீ கேள்விப் பட்டதில்லையோ வென்பதாம். அவ் விறையவன் தென்னாட்டை வெல்லக் கருதிப் பாண்டியரை எதிர்த்தான். அக்காலத்தில் பாண்டிநாடு ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பிரிவையும் ஒவ்வோரரசன் ஆண்டு வந்தான். அவர்களனைவரும் ஒன்று சேர்ந்து அம்மன்னவனை எதிர்த்தனர். அவன் அவர்களனைவரையும் வென்று அவர்கள் நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டான். பின்பு அவன் தன் வெற்றிக் கறிகுறியாகக் கன்னியாகுமரி, கோட்டாறு முதலிய விடங்களில் வெற்றித் தூண்களை நாட்டினான் [மு - கு - பக் - உரு]. அப் போரில் ஒரு பாண்டியன் உயிர் துறந்தான். [சோழவமி - பக் - ௩க]. இப்போர் கி. பி. கoஅ௩-ல் நிகழ்ந்ததாம் [H. I. S. I. பக்-அஅ]. 'பஞ்சவர் ஐவரும் பொருத போர்க்களத் தஞ்சி; வெரிநளித் தோடி' என்னும் இவன் மெய்க் கீர்த்தியையும் இங்குக் கவனிக்க [தா-கசு, கரு, கoஎ, கருரு, ருஅஅ]. மீனவர்—மீன் கொடியை யுடைய பாண்டியர்; ஐவரும்—உம்மை முற்றுப் பொருளது.

பா - பே :—‡ விட்ட தண்டெழ. (எo)

இதுவுமது

ருஅஉ. போரின் மேற்றண்டெ டுக்கப்பு றக்கிடுஞ்
சேரர் வார்த்தைசெ விப்பட்ட தில்லையோ.

ப - ரை :—போரின் - போர் செய்யும் பொருட்டு, மேல் - (சேர வேந்தர்) மேல், தண்டு எடுக்க - (முதற் குலோத்துங்கன் தன்) படைகளைத் திரட்டிச் செல்கையிலேயே, புறக்கிடும் - முதுகு காட்டி யோடிய, சேரர் வார்த்தை - சேர வேந்தர்களின் செய்தி, செவி பட்டது இல்லையோ - (உன்) காதுகளில் விழவில்லையோ,

வி - ரை :—முதற் குலோத்துங்கன் தன் படைகளைத் திரட்டிச் சென்றவளவில், சேரர் அஞ்சியோடின ரென்பதாம். இல்லையோ—ஓகாரம் வினாப்பொருளை யுணர்த்தினது. சேரர் இரிந்தமையை, 'மீனவர் நிலைகெட வல்லவர் குலைதர' என்னும் இவன் மெய்க்கீர்த்தியாலு முணர்க [தா-கச, ககூ, ருஅஅ].

இதுவுமது

ருஅ௩. வேலை கொண்டுவி ழிஞம ழித்ததுஞ்
சாலை கொண்டதுந் தண்டு*கொண் டேயன்றோ.

ப - ரை :—வேலை கொண்டு - கடற்கரையைக் கைப்பற்றிக்கொண்டு, விழிஞம் அழித்ததும் - விழிஞ மென்னும் ஊரை யழித்ததும், சாலை கொண்டதும் - காந்தளூர்ச் சாலையைக் கைப்பற்றினதும், தண்டு கொண்டே அன்றோ - (அவன் தன்) சேனையைக் கொண்டல்லவோ (சேனையைக் கொண்டேயாம்).

வி - ரை :—முதற் குலோத்துங்கன் விழிஞத்தையும் காந்தளூர்ச் சாலையையும் தன் படைகளைக் கொண்டே கைப்பற்றின னென்பதாம். இவைகளில் விழிஞம் திருவனந்தபுரத்திற்குத் தெற்கில் பத்து மைல் தூரத்திலுள்ளது. காந்தளூர்ச் சாலையும் மேற்படி ஊரைச் சார்ந்ததேயாம். இவ்விரண்டும் அக்காலத்தில் மேற்குக் கடலில் (அராபிக்கடல்) சேரவேந்தர் மரக்கலங்கள் தங்கும் துறை முகங்களாய் விளங்கின.

முதற் குலோத்துங்கன் பாண்டிய நாட்டை வென்றபின், சேரவேந்தரை எதிர்த்து மலை நாடு என்னும் மலையாளத்தையும் விழிஞத்தையும் கைப்பற்றினான். அது காலை அம்மன்னவனை மிக்க ஆண்மையுடன் எதிர்த்து நின்ற மலை நாட்டு மறவர் பலர் உயிரிழந்தனர். பின்பு அவன் காந்தளூர்ச் சாலையில் சேரர் மரக் கலங்களை இருமுறை சிதைத்துத் தன்னாட்டை யடைந்தான் [சோழவமி-பக்-நுக; மூ-கு-சோ-பக்-சஉ-சந]. இப்போர் கி. பி. க0அந-ல், நிகழ்ந்ததாம் [H. I. S. I.-பக்-அஅ]. 'விழிஞத் தொன்னூர், மன்னயர் வெய்தவை வேல்கொண்ட வேந்தன்' [பாண்-கோ-ககடு] என்றதனால், பாண்டியரும் ஒரு காலத்தில் விழிஞத்தை வென்றன ரெனத் தெரிகிறது. பா - பே :—* கொண்டதல்லவோ. (எஉ)

இதுவுமது

நுஅச. மாறு பட்டெழு தண்டெழ வத்தவர்
ஏறு பட்டது மிம்முறை †யேயன்றே.

ப - ரை :—மாறுபட்டு எழு - (முதற் குலோத்துங்கனோடு) பகைத் தெழுந்த, வத்தவர் ஏறு - வத்தவநாட் டரசனாகிய தாராவர்ஷன் என் பவன், தண்டு எழ - (முதற் குலோத்துங்கன்) சேனைகள் (போர்க்கு) புறப்பட்ட வளவில், பட்டதும் - (அந்தச் சேனைகளோடு போர் புரிந்து துன்பம்) அடைந்ததும், இ முறையே அன்றே-இவ்விதமாகவே யன்றோ,

வி-ரை :—முதற் குலோத்துங்கன் சேனையால் வத்தவநாட் டரசனும் துன்புற் றன னென்பதாம். வத்தவர்—வத்ஸவ தேசத்தார். வத்தவரேறு—இவன் மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த சக்கரக் கோட்டத்திலுள்ள வத்தவ நாட்டையாண்ட தாராவர்ஷன் என்னும் வேந்தனும். இவன் வரலாற்றை கசஎ-ம், தாழிசையிற் காண்க [தா-உநிச]. 'இம் முறையே' என்றது உன்னைப் போலவே அவ்வேந்தன் சிறிதும் ஆராயாமல் போர் புரிந்து துன்பமெய்தினன்; ஆதலால், நான் சொல் வதை நீ நன்கு கவனிக்க வேண்டுமெனக் குறிப்பாய் மொழிந்தன னென்க.

பா - பே :—† அல்லவோ. (எங)

இதுவுமது

நுஅரு. தளத்தொ டும்பொரு தண்டெழப் பண்டொர்நாள்
அளத்தி பட்டத றிந்திலை யையநீ.

ப - ரை :—ஐய - அரசே, பண்டு ஓர் நாள் - முன்பு ஒரு நாள், தளத்தொடு - அணிவகுப்புக்களுடன், பொரு தண்டு - போர் புரியும் (முதற் குலோத்துங்கன்) சேனை, எழ - (போர்க்கு) புறப்படுதலும், அளத்தி - அளத்தி யென்னும் ஊரிலுள்ளார், பட்டது - பட்ட துன் பத்தை, நீ அறிந்திலை போலும் - நீ அறிய வில்லையோ,

வி - ரை :—அளத்தி யென்னு மூரிலுள்ளார் முதற் குலோத்துங்கன் படை யால் பட்ட பாட்டை நீ அறியவில்லை போலும்; அறிந்திருந்தால், அம் மன்னவ னோடு போர் தொடங்கக் கருதா யென்பதாம். எழ—காரணப் பொருளில் வந்த செயவெனெச்சம்; அளத்தி—இடவாகு பெயர்; பட்டது—வினையாலணையும் பெயர்.

முதற் குலோத்துங்கன் கி. பி. ௧0௮௧-ம், ஆண்டில் வடதிசை நோக்கிச் சென்று ஆறாம் விக்கிரமாதித்தனுக்குப் பின் பிறந்தவனும், அம்மன்னவனுக்குப் பிரதிநிதியாய் வனவாசியை ஆண்டு வந்தவனுமாகிய நான்காம் சயசிங்கனை வென்று அந்நாட்டைத் தனக்குரிமையாக்கிக் கொண்டான். விக்கிரமாதித்தன் இச்செய்தி யறிந்ததும், ஒரு பெரும் படையைத் திரட்டி வந்து முதற் குலோத்துங்கனை எதிர்த்தான். இவ்விருவரும் கோலார் ஜில்லாவிலுள்ள நங்கிலி யென்னு மிடத்தில் பெரும் பூசல் புரிந்தனர். அப்போரில் ஆறாம் விக்கிரமாதித்தன் தோல்வி யுற்றான். அதனால் குலோத்துங்கன் அம்மன்னவனை மணலூர் வழியாய்த் துங்கபத்திரை நதிக்கப்பால் துரத்திச்சென்றான். மீண்டும் அவன் மைசூர் நாட்டைச் சார்ந்த அளத்திப் போரில் தோல்வி யடைந்தான். இப்போரில் குந்தளர் நகரமாகிய கலியாணபுரத்தைக் குலோத்துங்கன் கைப்பற்றினான். [சோழவமி-பக்-௩௧; மு-கு-சோ-பக்-௩௮, ௩௯]. இவ்வரலாற்றை ௧0௩, ௫௬௪-ம், தாழிசைகளிலும் காண்க. (௭௪)

**இதுவுமது**

௩௮௬. $கண்ட நாயகர் காக்குந விலையிற்
‡கொண்ட தாயிரங் குஞ்சர மல்லவோ.

ப-ரை:—கண்டம் நாயகர் - சிறு நாடுகளுக்குத் தலைவர்களாகிய சிற்றரசர்கள், காக்கும் - காக்கின்ற, நவிலையில் - நவிலை யென்னு மூரில், கொண்டது - (முதற் குலோத்துங்கன் படை) கைப்பற்றிக் கொண்டது, ஆயிரம் குஞ்சரம் அல்லவோ - ஆயிரம் யானைகளல்லவோ,

வி-ரை:—சளுக்கிய சிற்றரசர்கள் காத்து வந்த நவிலையை முதற் குலோத்துங்கன் படைகள் வென்று ஆயிரம் யானைகளைக் கைப்பற்றின வென்பதாம். இதனால் நவிலை பல சிற்றரசர்களுக்குப் பொதுவான தெனத் தெரிகிறது. கண்டம்—துண்டு; இங்கே சிறு நாடுகளைக் குறித்தது. குஞ்சரம்—புதர்களில் புணர்வது.

முதற் குலோத்துங்கன் விக்கிரமாதித்தனையும் அவன் தம்பி சயசிங்கனையும் வென்ற பின், நவிலையில் பல சிற்றரசர்களையும் வென்று ஆயிரக்கணக்கான யானைகளைக் கவர்ந்து கொண்டான். [மு-கு-பக்-௨௫; சோழவமி-பக்-௩௧] நவிலை மைசூர் இராச்சியத்தைச் சேர்ந்த தென்பர். நவிலைப்போர் கி. பி. ௧0௮௩-ல், நிகழ்ந்ததாம் [H. I. S. I. பக்-௮௮]. பகைவர் யானைகளைக் கைப்பற்றுதலை யானை கைக்கோள் என்ப. 'மாறு கொண்டார் மதிலழிய, ஏறுந் தோட்டியு மெறிந்துகொண் டன்று' [புறப்-வெ-மா-௧௧௮] என்றமை காண்க.

யா-பே:—$ தண்ட நாயகர், ‡ கொண்ட வாயிரம். (௭௫)

**இதுவுமது**

௩௮௭. உழந்து தாமுடை மண்டலந் தண்டினால்
இழந்த வேந்தரெ னையரென் றெண்ணுகேன்.

ப-ரை:—தாம் உழந்து உடை - தாம் வருந்திப் பெற்ற, மண்தலம் - பூமியை, தண்டினால் - (முதற் குலோத்துங்கன்) படையால், இழந்த வேந்தர் - இழந்துபோன அரசர்கள், எனையர் என்று - எத்தனை பேரென்று, எண்ணுகேன் - கணக்கிட்டுச் சொல்வேன், (கணக்கிட் முடியா தென்பதாம்.)

வி-ரை:—முதற் குலோத்துங்கன் படையால் அளவற்ற மன்னர்கள் தங்கள் நாட்டை யிழந்தன ரென்பதாம். முன்பு, 'தண்டினுக்கு மெளியனோ' [தா-௩௭௬] எனக் கலிங்க வேந்தன் முதற் குலோத்துங்கன் சேனையை எள்ளி யுரைத்தமையால், எங்கராயன் அச்சேனையின் சிறப்பைத் தன் வேந்தனுக்கெடுத்

தியம்பின னென்க. எனையர்—என—பகுதி; இது எத்தனை யென்பதன் மரூஉ. எண்ணுகேன்—தன்மை ஒருமை வினைமுற்று. (எக)

இதுவுமது

ஙஅஅ. கண்டு காணுன்*பு யவலி நீயுமத்
தண்டு கொண்டவன் சக்கரம் வந்ததே.

ப - ரை :—அ தண்டு கொண்டு - (பல போர்களில் வெற்றி பெற்ற) அந்தச் சேனையைத் திரட்டிக்கொண்டு, அவன் சக்கரம் - அந்த முதற் குலோத்துங்கனுடைய சக்கரம் போன்றவனாகிய கருணாகரன், வந்தது - வந்துவிட்டான், கண்டு - (அவனோடு போர்) செய்து, உன் புயம் வலி - உன் தோள் வன்மையை, நீயும் காண் - நீயும் தெரிந்துகொள்வாயாக.

வி - ரை :—(என் சொல்லில் உனக்கு ஐயமிருப்பின்) நீ கருணாகரனோடு போர் புரிந்து உன் ஆற்றலைத் தெரிந்துகொள் என்றனனென்பதாம். முதற் குலோத்துங்கனை இவ்வாசிரியர் திருமாலெனக் கூறுதலால், அவன் படைத் தலைவனாகிய கருணாகரனைச் சக்கரமென்றார். [தா-ஙகூங] சக்கரம்—உவமையாகு பெயர்; இது அஃறிணைப் பெயராதலால், வந்தது என்னும் அஃறிணை முடி பேற்றது. நீயும்-உம்மை இறந்தது தழுவியது. பா-பே:—* படைவலி. (எஎ)

இதுவுமது

ஙஅகூ. இன்று சீறினு நாளையச் சேனைமுன்
நின்ற போழ்தினி லென்னைநி னைத்தியால்.

ப - ரை:—இன்று சீறினும் - (நீ என் சொல்லை யேற்றுக்கொள்ளாமல்) இப்போது கோபித்தாலும், நாளை - நாளைத்தினம், அ சேனை முன் - அந்தச் சேனைகளுக்கு எதிரில், நின்ற போழ்தினில் - (போர் புரிய) நின்ற சமயத்தில், என்னை நினைத்தி - (நான் சொன்னவற்றைக்கருதி) என்னை நினைப்பாய்.

வி - ரை :—இப்போது நீ என்னைக் கோபித்தாலும், நான் சொன்ன வற்றின் உண்மை பின்பு வெளிப்படுமென்பதாம். எங்கராயன் மொழிந்த நீதி மொழிகளுக் கிணங்காமல், அனந்தபத்மன் கடுஞ்சின மெய்தினன். அக்குறிப்பை யறிந்து, 'கண்டு காணுன் புயவலி' எனவும், 'நாளை ......என்னை நினைத்தி' எனவும் எங்கராயன் கூறினனென்க. 'மந்திரிக் கழகு வரும்பொரு ளுரைத்தல்' [வெற்றிவே-அ] எனவும், 'ஒட்டார்க் கழிவுறுங்கால், பணிவுசெய்தேனுங் காத்தன்முத் தொழிலும் பண்புடை யமைச்சர்தந் தொழிலே' [விநாயகபு-அர சியற்கை-க0கூ] எனவும், 'அறிகொன் றறியா னெனினு முறுதி உழையிருந்தான் கூறல் கடன்' [திருக்கு-சுஙஅ] எனவுங் கூறுப வாகலின், அறிவு மாற்றலு மமைந்த எங்கராயன் இவ்வளவுங் கூறின னென்க. (எஅ)

அனந்தபத்மன் கூற்று

ஙகூ0. என்றிவையு ரைத்தலுமெ னக்கெதிரு
ரைக்கவிமை யோர்களுந டுங்குவர்†புயக்
குன்றிவைசெ ருத்தொழில்பெ றுதுநெடு
நாண்மெலிவு கொண்டபடி கண்டு மிலையோ.

ப - ரை :—என்ற இவை உரைத்தலும் - என்ற இந்தச் சொற்களை (எங்கராயன்) சொல்லுதலும், எனக்கு எதிர் உரைக்க - எனக்கு எதிர் வார்த்தைகள் சொல்ல, இமையோர்களும் நடுங்குவர் - தேவர்களும் பயப் படுவார்கள், புயம் குன்று இவை - (என்) தோள் மலைகளாகிய இவை, நெடு நாள் - பல நாட்களாய், செரு தொழில் பெறுது - போர்த் தொழிலைப்

பெறுமல், மெலிவு கொண்டபடி - மெலிந்திருக்கும் வகையை, கண்டும் இலேயோ - (நீ) காணவில்லையோ.

வி - ரை :—என் தோள்கள் பல நாளாய்ப் போரின்றி மெலிந்திருப்பதை நீ காணவில்லையோ என அனந்த பத்மன் தன் அமைச்சனை நோக்கிக் கூறின னென்பதாம். 'இமையோர்களும் நடுங்குவர்' என்றதனால், நீ நடுங்காமற் கூறி ஞய் என்றன னென்க. 'புயக்குன்றிவை........கண்டு மிலையோ' என்றதனால், போரின்மேல் அவனுக்குள்ள விருப்பமும் அவனுண்மையும் நன்கு விளங்கும். என்றிவை—என்ற+இவை; நிலை மொழியில் அகரம் தொக்கது. இமையோர் களும்-உம்மை உயர்வு சிறப்பு; புயக்குன்று-உருவகவணி; இல்லையோ—ஓகாரம் வினவின்கண் வந்தது. இதுமுதல் ஐந்து செய்யுட்கள் அனந்தபத்மன் கூற்றும். பா - பே:—†வரக்குன்று. (எக)

**இதுவுமது**

நசுக. பிழைக்கவுரை செய்தனைபி ழைத்தனையெ
னக்குறுதி பேசுவது வாசி கெடவோ
முழைக்க§ணிள வாளரிமு கத்தெளிதெ
னக்களிறு முட்டியெதிர் கிட்டி வருமோ.

ப - ரை :—பிழைக்க - தவறு உண்டாகும்படி, உரை செய்தனை - பேசினுய், பிழைத்தனை - (அவ்வாறு பேசிய நீ உயிர்) பிழைத்தாய், எனக்கு உறுதி பேசுவது -(அரசனுகிய) எனக்கு (நீ) நன்மை சொல்வது, வாசி கெடவோ - (என்) பெருமை அழியும்படியோ, களிறு - யானை யானது, முழை கண் - குகையிலுள்ள, வாள் இளம் அரி - வாள் போன்ற (கொடிய) இளஞ் சிங்கக் குட்டியின், முகத்து எதிர் கிட்டி - முகத்துக்கு எதிரில் நெருங்கி, எளிது என - (அதனை வெல்லுதல்) சுலபமானது என்று நினைத்து, முட்டி வருமோ - தாக்க வருமோ (வராது).

வி - ரை :—'என் வலி யறியாமல் என்னை நீ அவமதித்துப் பேசினுய்; இனி அவ்வாறு பேசாதே' யென அரசன் தன் அமைச்சனுக்கு எச்சரிக்கை செய்தன னென்பதாம். வாள்—ஒளியெனினுமாம். எளிது—ஒன்றன் படர்க்கை குறிப்பு வினைமுற்று; கெடவோ—ஒகாரம் வினு; வருமோ—இதிலுள்ள ஓகாரம் எதிர்மறை. முட்டி—முட்ட என்பதன் திரிபு. முழை கலிங்க நாட்டிற் கும், இளஞ்சீயம் அனந்தபத்மனுக்கும், களிறு முதற்குலோத்துங்கன் படைக்கும் உவமையாம். முழையிலுள்ள இளஞ்சீயம் தன்னை யெதிர்த்து வரும் வலிய யானையை யெளிதி லழிப்பதுபோல், நான் என் நாட்டில் வந்த முதற் குலோத் துங்கன் படையை மிகவும் எளிதில் அழிப்பேனென அனந்தபத்மன் மொழிந்தன னென்க. இதில் உபமானங்கூறி உபமேயம் பெற வைத்தமையால், இது பிறிது மொழிதலணியாம். பா - பே :—§ வயவாளரி. (அ0)

**இதுவுமது**

நசுஉ. என்னுடைய தோள்வலியு மென்னுடைய
வாள்வலியும் யாதுமறி யாது பிறர்போல்
நின்னுடைய பேதைமையி னுலுரைசெய்
தாயிதுநி னைப்பளவில் வெல்ல வரிதோ.

ப - ரை :—என்னுடைய தோள் வலியும் - என்னுடைய தோள்களின் வல்லமையையும், என்னுடைய வாள் வலியும் - என்னுடைய வாளின் வல்லமையையும், யாதும் அறியாது - சிறிதும் அறியாமல், நின்னுடைய

பேதைமையினால் - உன்னுடைய அறியாமையினால், பிறர் போல் - வேறு சாதாரண மனிதரைப் போல், உரை செய்தாய் - (நீ இவ்வாறு) சொன்னாய், நினைப்பு அளவில் - ஆலோசித்துப் பார்க்கு மளவில், இது - (பகைவரது) இந்தச் சேனையை, வெல்ல அரிதோ - வெல்லுதல் அரிய காரியமோ, (அரிய காரிய மன்றென்பதாம்.)

வி - ரை :—என் வலி யறியாமல் நீ இவ்வாறு மொழிந்தனை யாயினும், நான் பகைவரை யெளிதில் வெல்வேனென அரசன் மொழிந்தன னென்பதாம். நீ அமைச்சனாயிருந்தும், உண்மை யுணராமல் உரைக்கத் தகாத மொழிகளை யுரைத்தனை யென்பான், 'பிறர்போல்' என்றான். 'நினைப்பளவில்' என்றதற்கு நினைக்கும் நேரத்தில் (மிக்க விரைவில்) எனினுமாம். யாதும்—உண்மை இழிவின்கண் வந்தது. அரிதோ—ஓகாரம் எதிர்மறை. (அக)

**கலிங்கவேந்தன் தன் சேனைகளுக்குப் போர் புரியக் கட்டளையிடல்**

நகூந. வேழமிர தம்புரவி வெம்படைஞர்
என்றினைய *நம்படைவி ரைந்து கடுகச்
சோழகுல துங்கன்†விட வந்துவிடு
தண்டினெதிர் சென்றமர்தொ டங்குகெனவே.

ப - ரை :—வேழம் - யானைகளும், இரதம் - தேர்களும், புரவி - குதிரைகளும், வெம் படைஞர் - கொடிய படை வீரர்களும், என்ற இனைய - என்று சொல்லப்பட்ட இந்த நால்வகையனவாகிய, நம் படை - நம்முடைய சேனைகள், கடுக விரைந்து - மிகவும் விரைவாய்ச் சென்று, சோழர் குலம் துங்கன் - சோழர் குலத்தில் சிறந்தவனாகிய முதற் குலோத்துங்கன், விட - (நம்மேல்) ஏவ, வந்து விடு தண்டின் - வந்துவிட்ட சேனைகளுக்கு, எதிர் சென்று - எதிரில் போய், அமர் தொடங்குக என - போர் தொடங்குவதாக எனவும்,

வி - ரை :—நமது நால் வகைச் சேனைகளும் சென்று போர் தொடுங்குக வென அனந்த பத்மன் கட்டளையிட்டன னென்பதாம். விரைந்து கடுக—ஒரு பொருட் பன்மொழி; என்றினைய, தொடங்குகென—நிலைமொழி யீற்றில் அகரந் தொக்கது. இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் கலிங்க வேந்தன் தன் சேனைகளுக்குப் போர் புரியுமாறு கட்டளையிடுதலை யுணர்த்தும்.

பா - பே :—*நம்படைஞர் சென்று கடுகெ, † விடுதண்டி னெதிர் சென்றமர் தொடங்குக தொடங்கு கெனவே. (அஉ)

**இதுவுமது**

நகூச. பண்ணுகவ யக்களிறு பண்ணுகவ
யப்புரவி பண்ணுகக ணிப்பில் பலதேர்
நண்ணுகப டைச்செருநர் நண்ணுகசெ
ருக்களநு மக்கிகல்கி டைத்த தெனவே.

ப - ரை :—வயம் களிறு - வெற்றியையுடைய யானைகளை, பண்ணுக - அலங்காரம் செய்க, வயம் புரவி - வெற்றியையுடைய குதிரைகளை, பண்ணுக——, கணிப்பு இல் - அளவில்லாத, பல தேர் பண்ணுக——, நமக்கு இகல் கிடைத்தது - நமக்குப் போர்த்தொழில் கிடைத்தது, படை செருநர் - (ஆதலால் நம்) படை வீரர்கள், செரு களம் - போர்க்களத்தில், நண்ணுக நண்ணுக - (விரைவாய்ப் போய்) சேர்க சேர்க, என - எனவும் (அனந்தபத்மன்) சொல்ல,

வி - ரை :—நால்வகைச் சேனைகளும் போர்க் கோலத்துடன் போர்க்களஞ் செல்கவென அனந்தபத்மன் கட்டளையிட்டன னென்பதாம். 'காற்படையுங் களிறுங்கலி மாவொடு, தூற்படு தேரு நொடிப்பினிற் பண்ணி, நாற்படையுந் தொகுத்தான்' [சீவகசி-௨௨0௧] என்றார் திருத்தக்க தேவரும். 'நமக்கிகல் கிடைத்தது' என்றதனால், அனந்தபத்மனுக்குப் போரின்கண்ணுள்ள களிப்பும் அவனுண்மையும் நன்கு விளங்கும் 'பண்ணுக' என்றது போர்க் கோலத்தை; வய + களிறு எனப் பிரித்து வலிய யானைக ளெனினுமாம். 'வயவலி யாகும்' [தொல்கா-சொல்-௩௬௩] என்றமை காண்க. வயக்களிறு—இது முற் கூறிய பொருளில் இரண்டனுருபும் பொருளு முடன் தொக்க தொகை; இப்பொருளில் உரிச்சொற்றொடர்; பண்ணுக, நண்ணுக — வியங்கோள் வினைமுற்றுக்கள்; இவ்வைந்து செய்யுட்களிலும் வீரச்சுவை யுள்ளமை காண்க. இச்செய்யுள் சொற்பொருட்பின் வருநிலை யணியாம். (அ௩)

கலிங்கப் படையின் பேரொலி

௩௯௫. கலிங்கமவை யேழினுமெ ழுந்ததொரு
பேரொலிக றங்குகட லேழு முடனே
மலங்கி*யெழு பேரொலியெ னத்திசைதி
கைப்புறவ ருந்தொனி‡யெ ழுந்த பொழுதே.

ப - ரை :—உடனே - (அனந்தபத்மன் கட்டளையிட்ட) உடனே, கலிங்கம் அவை ஏழினும் - ஏழு பிரிவையுடைய கலிங்கநாடு முழுதும், எழுந்தது ஒரு பேர் ஒலி - உண்டானதாகிய ஒப்பற்ற பேரிரைச்சலானது, கறங்கு ஏழு கடலும் - ஒலிக்கின்ற ஏழு கடல்களும், மலங்கி எழு - கலங்கி எழுவதினா லுண்டாகும், பேர் ஒலி என - பேரிரைச்சல் போல, திசை திகைப்பு உற - (எட்டு) திக்குகளிலுள்ளவர்களும் பிரமிக்கும்படி, வரும் தொனி - (கலிங்க நாட்டுச் சேனைகள் திரண்டு) வரும் ஓசை, எழுந்த பொழுது - உண்டான காலத்தில்,

வி - ரை :—(அனந்தபத்மன் கட்டளை யிட்டதும்) கலிங்கப் படைகள் திரண்டெழுந்ததனால் உண்டாகிய பேரொலி கடலொலியை ஒத்திருந்த தென்பதாம். ஏழு கடல்களாவன:—உப்புக் கடல், நன்னீர்க் கடல், பாற் கடல், தயிர்க் கடல், நெய்க் கடல், கருப்பஞ்சாற்றுக் கடல், தேன் கடல் என்பன. ஏழு பிரிவை யுடைய கலிங்க நாட்டின் ஒலிக்கு ஏழு கடலொலியை உவமை கூறியிருத்தல் பாராட்டற் பாலதாம். 'ஏழு கலிங்கங்களை' ௩௪௧-ம், தாழிசையிற் காண்க. உம்மைக ளிரண்டும் முற்றுப் பொருளில் வந்தன. என—உவம உருபிடைச் சொல். பா - பே :—* எழு மேழிசை, ‡ எழுந்த தெனவே. (அ௪)

நால்வகைச் சேனைகள் போருக்குப் புறப்படல்

௩௯௬. தொளைமுக மதமலை யதிர்வன
தொடுகடல் பருகிய முகிலெனவே
வளைமுக நுரையுக வருபரி
கடலிடை மறி‡திரை யெனவெழவே.

ப - ரை :—தொடு கடல் - (சகர சக்கரவர்த்தியின் புதல்வர்களால்) தோண்டப்பட்ட கடல் நீரை, பருகிய முகில் என - குடித்த மேகங்களின் இடி முழக்கம் போல, அதிர்வன - முழங்குவனவாகிய, தொளை முகம் - தொளையைப் பொருந்திய துதிக்கையையுடைய, மதம் மலை - மதத்தைப் பொழியும் மலைபோன்ற யானைகளும், வளை முகம் - வளைவாகிய வாயிவிருந்து, நுரை உக - நுரைகள் சிந்தும்படி, கடல் இடை - கடலில்,

மறி திரை என - சுருண்டு விழும் அலைகளைப் போல, வரு பரி - வருகின்ற குதிரைகளும், எழ - (போருக்கு) புறப்படவும்,

வி - ரை ;—மேக முழக்கம் போல் முழங்கும் யானைகளும் கடலலை போல் வருங் குதிரைகளும் போர்க்குப் புறப்பட்டன வென்பதாம். 'உருமொத்த முழக்கிற் செங்கண் வெள்ளெயிற் றோடை நெற்றி, பருமித்த கிரியிற் செல்லும் வேழமும்' [கம்பரா-சம்புமாலி-ச] எனக் கம்பரும் யானை முழக்கத்திற்கு இடி யொலியை உவமை கூறி யிருத்தலைக் காண்க. கடலலை குதிரைகளுக் குவமை யாதலை ருகிக-ம், தாழிசையிற் காண்க. முகம், கடல், முகில்—ஆகு பெயர்கள். இதுமுதல் எட்டுத் தாழிசைகள் கலிங்க நாட்டு நால்வகைச் சேனைகளும் போர்க்குப் புறப்பட்டுச் செல்லுதலையுணர்த்தும். பா-பே:—ஜ் நிரை யெனவே.

இதுவுமது

ருகூஎ. இடையிடை யரசர்க ளிடுகுடை
கவரிக ளிவைகட னுரையெனவே
மிடைகொடி பிறழ்வன மறிகடல்
அடையவு மிளிர்வன கயலெனவே.

ப - ரை :—இடை இடை - (சேனைகளுக்கு) நடுவில், அரசர்கள்——, இடு குடை - அணிந்த குடைகளும், கவரிகள் இவை - (அவர்களுக்கு வீசப்படும்) வெண் சாமரைகளுமாகிய இவைகள், கடல் நுரை என - (அச் சேனையாகிய) கடலின் நுரையைப் போலவும், பிறழ்வன - (காற்றால்) அசைவனவாகிய, மிடை கொடி - நெருங்கிய துகிற் கொடிகள், மறி கடல் அடையவும் - (அலைகள்) சுருண்டு விழும் (அச்சேனை) கடல் முழுதும், மிளிர்வன கயல் என - புரள்வனவாகிய கெண்டை மீன்களைப் போலவும்,

வி - ரை :—சேனையாகிய கடலில் அரசர்களின் வெண் கொற்றக் குடை களும் வெண்சாமரைகளும் நுரையைப்போலவும், கொடிச் சீரைகள் கெண்டை மீன்களைப்போலவும் தோன்றின வென்பதாம். கவரிகளுக்கும் வெண் குடை களுக்கும் கடல் நுரையும், கொடிச் சீரைகளுக்கு மீன்களும் உவமையாதலை, 'கவரிவெண் குடையெனு நுரைய' [கம்பரா - கான்வதை - கஉ0] எனவும், 'வெங்கலங்கற் கடுங்குருதி வெள்ளத்துக் கொடியாடை மிதக்குந் தோற்றம்' 'செங்கலங்கற் புதுப்புனலில் விளையாடித் திரிகின்ற சேல்கள் போலும்' [வில்லிபா-க-ம் போர்-எக] எனவும் வருவதனு லறிக. (அசு)

இதுவுமது

ருகூஅ. அலகினெ டலகுகள் கலகல
வெனுமொலி * யலைதிரை யொலியெனவே
உலகுகள் பருகுவ தொருகடல்
இதுவென வுடலிய படையெழவே.

ப - ரை :—அலகினொடு அலகுகள் - (வேல், வாள் முதலிய) ஆயுதங்க ளோடு ஆயுதங்களின், கலகல எனும் ஒலி - கலகல என்னும் ஓசை, அலை திரை - (காற்றால்) அசையும் (கடல்) அலைகளின், ஒலி என - ஒலி என்று சொல்லவும், உலகுகள் பருகுவது - உலகங்களை யெல்லாம் அழிப்பதாகிய, ஒரு கடல் - (யுகத்தின் முடிவில் பொங்கி வரும்) ஒப்பற்ற கடல், இது என - இதுவேயாம் என்று சொல்லவும், உடலிய படை - (பகைவர்மேல்) கோபித்தெழுந்த சேனைகள், எழ - (போர்க்கு) புறப்பட,

வி - ரை :—ஊழிக்கடல் பேரொலியுடன் உலகை யழிக்கப் புறப்படுவது போல், கலிங்க நாட்டுச் சேனைகள் போர்க்குப் புறப்பட்டன வென்பதாம். சேனைகள் நெருங்கிச் சென்றமையால், ஆயுதங்கள் ஒன்றோடொன்று தாக்கிக் கலகல வென்னும் ஒலியை உண்டாக்கின வென்க. கடலொலி ஆயுதங்களின் ஒலிக்கும் கடல் சேனைக்கும் உவமை. கலகல—இரட்டைக்கிளவி; உடலிய—இறந்தகாலப் பெயரெச்சம்; உடல் என்னும் வினையடியாய்ப் பிறந்தது.

பா - பே :—* அறை திரை. (௮௭)

இதுவுமது

௩௯௯. விசைபெற விடுபரி யிரதமு
மறிகடன் மிசைவிடு கலமெனவே
இசைபெற வுயிரையு மிகழ்தரும்
இளையவ ரெறிசுற வினமெனவே.

ப - ரை :—விசை பெற விடு - வேகமாய்ச் செலுத்தப்படுகின்ற, பரி இரதம் - குதிரைகளைப் பூட்டிய தேர்கள், மறி கடல் மிசை - (அலைகள்) சுருண்டு விழுங் கடலில், விடு கலம் எனவும் - செலுத்தும் மரக்கலங்கள் போலவும், இசை பெற - (போரில்) புகழைப் பெறும் பொருட்டு, உயிரையும் இகழ் தரும் - (தங்கள்) உயிரையும் வெறுக்கும், இளையவர் - வீரர்கள், எறி சுறவு - கொல்லும் சுறா மீன்களின், இனம் எனவும் - கூட்டம் போலவும்,

வி - ரை :—தேர்கள் கடலிற் செல்லும் மரக்கலத்தையும், வீரர்கள் கடலி லுள்ள சுறமீன்களையு மொத்தன ரென்பதாம். 'கங்கமொடு காகமிடை யக் கடலி னூடும், வங்கமென லாயதொரு தேர்' [கம்பரா-கரன்வதை-௧௭0] என்றதனால், மரக்கலம் தேருக்கும், 'எறிசுற விளையவர்' எனவும், 'கோட்டு மீன் குழாத்தின் மள்ளர்' [சீவகசி-௧௬௭௯-௨௩௨டு] எனவும் வருவதனால், சுறா மீன்கள் வீரர்களுக்கும் உவமையாமாறறிக. இரதமும்—இதிலுள்ள உம்மை என என்பவற்றோடு கூட்டப்பட்டது. உயிரையும்—உம்மை உயர்வு சிறப்பு. இந்நான்கு தாழிசைகளிலும் உவமையணி யுள்ளமை காண்க. (௮௮)

கலிங்கர் படை விரைந்து சென்றமையால் நிகழ்ந்த நிகழ்ச்சி

௪00. விடவிகண் மொடுமொடு விசைபட
முறிபட வெறிபட நெறிபடவே
அடவிகள் பொடிபட வருவிகள்
அனல்பட வருவரை துகள்படவே.

ப - ரை :—விடவிகள் - (அச்சேனைகள் செல்லும் விரைவினால்) மரங்கள், மொடு மொடு - மொடு மொடு என்னும் ஓசையோடு, விசைபட முறிபட - வேகமாய் முறிந்து, எறிபட - அழியவும், அடவிகள் - காடுகள், பொடிபட - தூளாகவும், அருவிகள் - ஆறுகள், அனல்பட - நெருப்பின் தன்மை யடையவும், அரு வரை - சிறந்த மலைகள், துகள்பட - புழுதி யாகவும், நெறிபட - (அதனால் அவை செல்வதற்கு) வழி உண்டாகவும்,

வி - ரை :—அச்சேனைகள் செல்லும் விரைவினால் மரங்கள் முதலியன அழிவெய்தின வென்பதாம். அருவிகள் அனல் படலாவது - அவைகளிலுள்ள நீரெல்லாஞ் சுவறிப் போய், அவை வெப்பங் கொள்ளுதலாம். மொடுமொடு—ஒலிக்குறிப்பு; இரட்டைக்கிளவி. இச்செய்யுள் உயர்வு நவிற்சியணியாம். (௮௯)

இதுவுமது

சூ0க. அறைகழ லிளையவர் முறுகிய
சினவழ லதுவட வனலெனவே
முறைமுறை முரசுகண் மொகுமொகு
வதிர்வன முதிர்கட லதிர்வெனவே.

ப - ரை :—அறை கழல் - ஒலிக்கின்ற வீரகண்டையை யணிந்த, இளையவர் - வீரர்களின், முறுகிய சினம் அழல் அது - மிக்க கோபமாகிய தீ, வட அனல் என - வடவைத் தீப் போலவும், முறை முறை - முறையாய், மொகு மொகு அதிர்வன - மொகு மொகு என்று ஒலிப்பனவாகிய, முரசுகள் - முரச வாத்தியங்களின் ஒலி, முதிர் கடல் - (உலகை) சூழ்ந்த கடலினது, அதிர்வு என - ஒலி போலவும்,

வி - ரை :—வீரர்களின் கோபத்தீ வடவைத் தீயையும், முரசு வாத்தியங்களின் ஒலி கடலொலியையும் ஒத்திருந்தன வென்பதாம். 'திண் முரசு, அறையுமாக்கடல் காரென வார்த்தன' [சீவகசி-உககூஅ] எனக் கடலொலியை முரசொலிக்கு உவமை கூறியிருத்தல் காண்க. மொகு மொகு—ஒலிக்குறிப்பு; இரட்டைக் கிளவி [தா-ககசு]. முதிர்தல்—சூழ்தல்; அழலது—அது பகுதிப் பொருள் விகுதி; என—இரண்டும் உவம உருபிடைச் சொற்கள். சினவழல்—உருவகவணி; இதில் உவமையணியும் உள்ளமை காண்க. (கூ0)

இதுவுமது

சூ0உ. ஒருவர்த முடலினி லொருவர்தம்
உடல்புக வுறுவதோர் படியுகவே
வெருவர மிடைபடை நடுவொரு
வெளியற விழியிட வரிதெனவே.

ப - ரை :—மிடை படை நடு - நெருங்கிய சேனைகளின் நடுவில், ஒரு வெளி அற - சிறிதும் வெற்றிடமில்லாமல், ஒருவர் தம் உடலினில் - (போர் வீரர்களின்) ஒருவருடைய உடம்பில், ஒருவர் தம் உடல் புக - (வேறு) ஒருவர் உடம்புநெருங்கவும், உறுவது ஓர் படி - பொருந்தியுள்ளதாகிய ஒப்பற்ற உலகம், உக - அழியவும், வெருவர - (அச்சேனையைக் கண்டோர்) நடுங்கவும், விழி இட - கண்களால் பார்க்க, அரிது என - முடியாது என்று சொல்லவும்,

வி - ரை :—அளவற்ற சேனைகள் நெருங்கிச் சென்றன வென்பதாம் 'உடலினில்...உடல்புக', 'நடுவொரு வெளியற' என்றமை படைகளின் மிகுதியாலாகிய நெருக்கத்தினை யென்க. ஒரு வெளி—இதில் ஒரு என்றது சிறிது என்னும் பொருளில் வந்தது. (கூக)

இதுவுமது

சூ0ங. வெளியரி தெனவெதிர் மிடைபடை
மனுபரன் விடுபடை யதனெதிரே
எளிதென விரைபெறு புலியென
வலியிநெ டெடுமெடு மெடுமெனவே.

ப - ரை :—வெளி அரிது - வெற்றிடம் இல்லை, என - என்று (கண்டோர்) சொல்லும்படி, எதிர் மிடை படை - எதிர்த்து நெருங்கி (கலிங்க நாட்டு) சேனைகள், மனுபரன் - (குலோத்துங்க சோழ) வேந்தன் விடு படை அதன் எதிர் - ஏவிய சேனைகளுக்கு எதிரில், எளிது என

(அச்சேனையை வெல்லுதல்) சுலபமானதென்று நினைத்து, இரை பெறு புலி என - (தனது) உணவைப் பெற்ற புலியைப் போல, வலியினொடு - (மிக்க) வலிமையோடு, எடும் எடும் எடும் என - (போர்) தொடங்குங்கள் தொடங்குங்கள் தொடங்குங்கள் என்று சொல்ல,

வி - ரை :—கலிங்க வீரர்கள் சோழவேந்தன் படையை யணுகிப் போர் தொடங்க முயன்றன ரென்பதாம். 'இரை பெறு புலி' என்றதனால் கலிங்கர்களின் வீரம் விளங்குகிறது. சோழவீரர் போரை விரும்பி வந்தமையால், 'இரைவேட்ட பெரும்புலி' [தா-௩௬௬] எனவும், கலிங்கவீரர் போரைப் பெற்றமையால் 'இரைபெறு புலி' எனவும் கூறியுள்ளமை களிப்பு மூட்டத் தக்கதாம். இருதிறத்து வீரர்களும் புலிகளை ஒப்பவரெனினும், அவர்கள் சோழவீரர்களைப் பெரும்புலிக்கும் கலிங்க வீரர்களைப் புலிக்கும் உவமை கூறியுள்ளமையால், சோழவீரர் கலிங்க வீரர்களினும் வலியவரென்பது விளங்கும். எதிர்மிடை படை, எதிர்—வினை யெச்சப் பொருளில் வந்தது. 'வரிப்புனை பந்து' [திருமுருகு - ௬௮] என்றமை காண்க. மனுபரன்—மனு = மனிதர்களில், பரன் = உயர்ந்தோன்; இங்கே சோழவரசன். எளிது—குறிப்பு வினைமுற்று; எடும் எடும் எடும்—அடுக்கு விரைவின்கண் வந்தது. (கஉ)

காளிக்குக் கூளி கூறியது முற்றிற்று.

---

# கஉ. போர் பாடியது

**போர் பாடியது :**—இஃதிரண்டன் தொகை; போரைப் பாடியதை யுணர்த்துஞ் செய்யுட்களின் பகுதி யென்பது இதன் பொருளாம். முதற் குலோத்துங்கன் படைத் தலைவனாகிய கருணாகரன் தலைமையின் கீழ் சோழ வீரரும், அனந்தபத்மன் தலைமையின் கீழ் கலிங்க வீரரும் போர் புரிந்தமையை இதில் அறியலாம். கலிங்க வேந்தனாகிய அனந்தபத்மனே முன்னின்று போரை நடத்தினமையால் [தா - சச௮] அவன் படைத்தலைவன் பேரை ஆசிரியர் இங்குக் கூறாதொழிந்தனர். அப்போரில் கருணாகரன் கலிங்கரை வென்று அளவிறந்த யானைகளையும் பொருட் குவியல்களையும் கவர்ந்து சென்று முதற் குலோத்துங்கனை வணங்கிப் பலவகைப் பரிசுகளைப் பெற்றன னென்ப. இப்பகுதியும் காளிக்குக் கூளி கூறியதேயாம். இதில் ஆசிரியர் வீரச் சுவையை நன்கு விளக்கியிருத்தல் கவனிக்கற்பாலதாம்.

**போர் ஆரம்பம்**

சoச. எடுமெடு மெடுமென வெடுத்ததோர்
இகலொலி கடலொலி யிகக்கவே
விடுவிடு வி‡டுபரி கரிக்குழாம்
விடும்விடு மெனுமொலி மிகைக்கவே.

ப - ரை :—எடும் எடும் எடும் - (போர்) தொடங்குங்கள் தொடங்குங்கள் தொடங்குங்கள், என எடுத்தது - என்று உரத்துக் கூவுவதாகிய, ஓர் இகல் ஒலி - ஒப்பற்ற போரின் ஓசையானது, கடல் ஒலி இகக்க -

கடலோசையை வெல்லவும், பரி (குழாம்) - குதிரைப் படைகளை, விடு விடு விடு -(பகைவர்மேல்) ஏவு ஏவு ஏவு, கரி குழாம் - யானைப்படைகளை, விடும் விடும் - ஏவுங்கள் ஏவுங்கள், எனும் ஒலி - என்று (வீரர்கள்) சொல்லும் ஓசை, மிகைக்க - மிகுதியாய் உண்டாகவும்,

வி - ரை :—இருதிறத்து வீரர்களும் குதிரைப்படை, யானைப்படைகளை யேவிப் போர் புரியத் தொடங்கின ரென்பதாம். 'எடு மெடு மெடும்', 'விடும் விடும்' என்றது வீரர் பலர் ஒன்று கூடிக் கூவினமையும்; 'விடு விடு' என்றது அவர்கள் தனித் தனி மொழிந்தமையுமாம். பரி—பாரத்தைச் சுமப்பது; கரி—துதிக்கையையுடையது. குழாம் என்பதைப் பரிக்குங் கூட்டுக. அடுக்குகள் மூன்றும் விரைவின்கண் வந்தன. இச்செய்யுள் அந்தாதித் தொடையாம். (க)
பா - பே :—‡ அடுகரி பரி.

இதுவுமது

ச0ரு. வெருவர வரிசிலை தெறித்தநாண்
விசைபடு திசைமுகம் வெடிக்கவே
செருவிடை *யவரவர் தெழித்ததோர்
தெழியுல குகள்செவி டெடுக்கவே.

ப - ரை :—வெருவர - (யாவரும்) அஞ்சும்படி, வரி சிலை - கட்டமைந்த வில்லிலிருந்து, விசை தெறித்த நாண் - வேகத்தோடு துள்ளி யெழுந்த நாணோசையால், படு திசை முகம் - பொருந்திய திக்குகளாகிய இடங்கள், வெடிக்க - பிளக்கவும், செரு இடை - போர்க் களத்தில், அவர் அவர் - அந்தந்த வீரர்கள், தெழித்தது - ஆரவாரித்ததாகிய, ஓர் தெழி - ஒப்பற்ற முழக்கத்தால், உலகுகள் செவிடு எடுக்க - உலகங்களி லுள்ளவர்கள் செவிடு படவும்,

வி - ரை :—நாணோசையால் திசைகள் பிளந்தன; வீரர்களின் ஆரவாரத்தால் உலகங்கள் செவிடுபட்டன வென்பதாம். வீரர்கள் தெழித்தமை போரில் அவர்களுக்குள்ள பேராவலாலும் பேராண்மையாலு மென்க. 'வெடிக்கின்றன திசையாவையும் விழுகின்றன விடிவந், திடிக்கின்றன சிறுநாணொலி' [கம்பரா-நிகும்பலை-க0கூ] என்றார் கம்பரும். இச்செய்யுள் உயர்வு நவிற்சியணியாம். (உ)
பா - பே :—* இளையவர்.

இரு படைகளும் எதிர்த்தல்

ச0சா. எறிகட லொடுகடல் கிடைத்தபோல்
இருபடை களுமெதிர் கிடைக்கவே
மறிதிரை யொடுதிரை மலைத்தபோல்
வருபரி யொடுபரி மலைக்கவே.

ப - ரை :—எறி கடலொடு - (அலைகள்) வீசுங் கடலுடன், கடல் கிடைத்த போல் - (மற்றொரு) கடல் எதிர்த்தாற் போல், இரு படைகளும் - இரண்டு சேனைகளும், எதிர் கிடைக்க - (ஒன்றை யொன்று) நேரில் எதிர்க்கவும், மறி திரையொடு - (கடலில்) சுருண்டு விழும் அலைகளுடன், திரை மலைத்த போல் - அலைகள் போர் புரிதலைப்போல், வரு பரியொடு - (போரில் சீறி) வருங் குதிரைகளுடன், பரி மலைக்க - குதிரைகள் போர் புரியவும்,

வி - ரை :—கடலோடு கடல் எதிர்ப்பதுபோல் சேனைகளோடு சேனைகளும், அலைகளோடு அலைகள் எதிர்ப்பதுபோல் குதிரைகளோடு குதிரைகளும்

எதிர்த்துப் போர் புரிந்தன வென்பதாம். இரு படை யென்றது—சோழர் படை, கலிங்கர் படைகளை; கிடைத்தல்—எதிர்த்தல்; 'கிட்டலே யெதிர்த லாகும் கிடைத்தலு மதன்பேர் தானே' [சூடாமணி-கூ-சஎ] என்றமை காண்க. 'கடலொடு கடல் கிடைத்தபோல்' என்றதற் கேற்ப, 'கடலிரண் டெதிர்ந்ததோர் காலமொத்ததே' [சீவகசி-உஉஉ௬] எனவும், 'இருதிரைப் பெருங்கட லிரண்டு, திக்கினும், பொருதொழில் வேட்டவந் தார்த்துப் பொங்கின' [கம்பரா-நாக பாசப்-௬௬] எனவும் வருமாறு காண்க. அலைகள் குதிரைகளுக் குவமையாதலை ௬௫௧-ம் தாழிசையிற் காண்க. (௬)

யானைப் படையும் தேர்ப்படையும் பொருதமை

சா௦எ. கனவரை யொடுவரை முனைத்தபோற்
கடகரி யொடுகரி முனைக்கவே
இனமுகின் முகிலொடு மெதிர்த்தபோல்
‡இரதமொ டிரதமு மெதிர்க்கவே.

ப-ரை:—கனம் வரையொடு - பெரிய மலைகளோடு, வரை முனைத்த போல் - மலைகள் போர் புரிவது போல், கடம் கரியொடு - மதத்தைச் சொரியும் யானைகளோடு, கரி முனைக்க - யானைகள் போர் புரியவும், முகிலொடு - மேகங்களோடு, முகில் இனம் - மேகக் கூட்டங்கள், எதிர்த்த போல் - எதிர்த்துப் போர் புரிவதுபோல், இரதமொடு இரதமும் - தேர்களோடு தேர்களும், எதிர்க்க - எதிர்த்துப் போர் புரியவும்,

வி-ரை:—யானைகளோடு யானைகளும் தேர்களோடு தேர்களும் போர் புரியலாயின வென்பதாம். இங்கு இரதம் என்றது ஆகுபெயராய் அதன்மே லுள்ள வீரர்களைக் குறித்தது. 'சென்று தேர்களுந் தேர்களுஞ் சேர்ந்தன, வென்றி வேழமும் வேழ மூர்ந்தன' [வில்லிபா-முதற்போர்-உ௦] என்றமை இங்குக் கவனிக்க. மலைகள் யானைகளுக்கும் மேகங்கள் தேர்களுக்கும் உவமை யாதலை, 'பருமித்த கிரியிற் றேன்றும் வேழமும் பதுமத் தண்ணல், நிருமித்த வெழிலி முற்றிற் றென்னலா நிலைய நேமி.........தடந்தேர் சுற்ற' [கம்பரா-சம்புமாலி-ச] என்றதனு லறிக. இவ்விரண்டு செய்யுட்களும் இல்பொருளுவமை யணியாம். பா-பே:—‡ இரதமு மிரதமும். (ச)

வீரர்களும் அரசர்களும் மலைந்தமை

சா௦அ. பொருபுலி புலியொடு சிலைத்தபோற்
பொருபட ரொடுபடர் சிலைக்கவே
அரியினொ டரியின மடர்ப்பபோல்
அரசரு மரசரு மடர்க்கவே.

ப-ரை:—பொரு புலி - (யானை முதலிய விலங்குகளை) தாக்கும் புலிகள், புலி யொடு சிலைத்த போல் - (வேறு) புலிகளோடு ஆரவாரித்துப் போர் புரிவது போல், பொரு படரொடு - போர் புரியும் வீரர்களோடு, படர் சிலைக்க - வீரர்கள் ஆரவாரித்துப் போர் புரியவும், அரியினொடு - சிங்கங்களோடு, அரி இனம் - சிங்கங்களின் கூட்டம், அடர்ப்ப போல் - போர் புரிவது போல், அரசரும் அரசரும் - அரசர்களோடு அரசர் களும், அடர்க்க - (ஒருவரை யொருவர் எதிர்த்து) போர் புரியவும்,

வி-ரை:—வீரர்களோடு வீரர்களும் அரசர்களோடு அரசர்களும் போர் புரிந்தன ரென்பதாம். 'தானையோர், போர்முகப் புலிக்கடல் புகுந்த தொத்ததே' [சீவகசி-உஉகஅ] எனவும், 'எற்றினப் புலியே றென்ன வியந்தெழு பதாதி

யீட்டம்' [கம்பரா-சம்புமாலி-டு] எனவும் வருவதனுல் வீரர்கள் புலிக் குவமையா மாறறிக. வீரர்களினும் அரசர் சிறந்தவராகலின், அவர்களுக்குச் சிங்கம் உவமை கூறப்பட்டது. இதுகாறும் நால்வகைச் சேனைகளும் போர் தொடங்கி னமை கூறினர். "தோலாதட லோடுசீறின துரகத்தோடு துரகம், மேலா ளோடு மேலாள்வரி வில்லாளோடு வில்லாள், ஏலாமுடி யரசோடா சிரதத்துட னிரதம், காலாளோடு காலாண்மத கரிமாவோடு கரிமா' [வில்லிபா-டு-ம் போர்-கஅ] என வருவதையும் இங்குக் கவனிக்க. இச்செய்யுள் உவமை யணியாம். (டு)

போரின் கொடுமை

சoசு விளைகனல் விழிகளின் முளைக்கவே
†மினலொளி கனலிடை யெறிக்கவே
வளைசிலை யுருமென விடிக்கவே
வடிகணை நெடுமழை *படைக்கவே.

ப - ரை:—விழிகளின் - (வீரர்களின்) கண்களிலிருந்து, விளை கனல் - முதிர்ந்த (கோபமாகிய) நெருப்பு, முளைக்க - தோன்றவும், கனல் இடை - (அந்தக் கோபமாகிய) நெருப்பில், மினல் ஒளி எறிக்க - மின்னல் போன்ற ஒளி வீசவும், வளை சிலை - (வீரர்கள் கையிலுள்ள) வளைந்த விற்களின் ஒலி, உரும் என - இடியோசைபோல், இடிக்க - ஒலிக்கவும், வடி கணை - (அவ்வில்லிலிருந்து) கூர்மையாகிய அம்புக ளென்னும், நெடு மழை - மிக்க மழை, படைக்க - உண்டாகவும்,

வி - ரை:—இருதிறத்து வீரர்களும் மிக்க கோபத்துடன் தங்கள் வில்லை வளைத்துக் கூரிய கணைகளை மழைபோல் சொரிந்தனரென்பதாம். விளைதல்—முதிர்தல்; 'வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவல்' [புறநா-கஉ0] எனவும், 'புன்புல மயக்கத்து விளைந்தன தினையே' [ஐங்கு-உசு0] எனவும் வருமாறு காண்க. இதன் முதலடி இருதிறத்து வீரர்களின் சினக்குறிப்பின் மிகுதியை யுணர்த்தினது. வடிகணை—உரிச்சொற்றொடர்; வடித்த கணையெனின், வினைத் தொகையாம். வடித்தல்—உலைக்களத்தில் பழுக்கக் காய்ச்சிக் கூர்மையாக்கல். இதில் உவமையணியும், உருவகவணியும் உள்ளமை காண்க.

பா - பே:—† வெயிலொளி, * சிறக்கவே. (சு)

குருதியாற்றியல்பு

சகo. குருதியி னதிவெளி பரக்கவே
$குடையின நுரையென மிதக்கவே
கரிதுணி படுமுட லடுக்கியே
கரையென விருபுடை கிடக்கவே.

ப - ரை:—வெளி - வெளி யிடங்களில், குருதியின் நதி - இரத்த மாகிய ஆறு, பரக்க - பரவவும், குடை இனம் - வெண் குடைகளின் கூட்டங்கள், நுரை என - (வெண்மையாகிய) நுரை போல, மிதக்க - (அந்தக் குருதி ஆற்றில்) மிதந்து தோன்றவும், துணி படும் - (வீரர்க ளால் இரண்டு) துண்டுகளாக வெட்டப்படும், கரி உடல் - யானைகளின் உடம்புகள், இரு புடை - (அந்த நதியின்) இரண்டு பக்கங்களிலும், கரை என - கரை போல், அடுக்கி கிடக்க - (ஒன்றன்மே லொன்ருய்) அடுக்கிக் கிடக்கவும்,

வி - ரை:—போர்க்களத்தில் பெருகிய குருதியாற்றில் வெண் குடைகள் நுரைபோல் மிதந்தன; யானையி னுடல்கள் அந்த ஆற்றின் கரைபோல் இரு

மருங்குங் கிடந்தன வென்பதாம். அளவிறந்த யானைகள் கொலையுண்டு ஒன்றன்மே லொன்றாய் விழுந்து கிடந்தன வென்பார், 'கரிதுணி படுமுடலடுக்கி' என்றார். யானைகளின் உடல்களைக் கூறினதனால், குதிரைகள், காலாட்களி னுடல்களையும் உபலக்கணத்தால் கொள்க. 'எண்ணிறந்த குருதிநதி யிருமருங்குங் கரிபரியாள் கரைகளாக' [வில்லிபா-க-ம் போர்-எ௨] என்றார் பிற அறிஞரும்; நுரை குடைக் குவமையாதலை, 'பேனம்வெண் குடைய வாய குருதிப் பேராறு' [கம்பரா-பிரமாத்திர-கசடு] என்றதனு லறிக. குருதியின் நதி—இன் அல்வழிச் சாரியை; இச்செய்யுளிலும் உருவகவணியும் உவமையணியும் இருத்தலறிக. பா - பே :—* குடர்நிரை. (எ)

யானைப் போர்

சகக. மருப்பொடு மருப்பெதிர் பொருப்பிவை
எனப்பொரு மதக்கரி மருப்பி னிடையே
நெருப்பொடு நெருப்பெதிர் சுடர்ப்பொறி
தெறித்தெழ நிழற்கொடி தழற்க துவவே.

ப - ரை :—இவை பொருப்பு என - இவைகள் மலைகளே என்று (கண்டோர்) சொல்லும்படி, மருப்பொடு மருப்பு - கொம்புகளோடு கொம்புகளால், எதிர் பொரு - (ஒன்றை யொன்று) எதிர்த்துப் போர் புரிகின்ற, மதம் கரி - மதத்தைப் பொழியும் யானைகளின், மருப்பின் இடையே - கொம்புகளில் தோன்றும், நெருப்பொடு நெருப்பு - நெருப் போடு நெருப்பிலிருந்து, எதிர் - உண்டாகும், சுடர் பொறி - ஒளியை யுடைய தீப் பொறிகள், தெறித்து எழ - துள்ளி (மேலே) எழுதலால், நிழல் கொடி - நிழலைத் தருங் கொடிச் சீலைகளில், தழல் கதுவ - (அத் தீப் பொறிகளால்) நெருப்புப் பிடித்துக் கொள்ளவும்,

வி - ரை :—மலைகள் போர் புரிவதுபோல் யானைகள் ஒன்றை யொன்று தங் கொம்புகளால் தாக்கிப் போர் புரியுங்கால், அக் கொம்புகளிலிருந்து தோன்றிய நெருப்புப் பொறிகளால் துகிற் கொடிகளில் தீப்பற்றலாயின தென்பதாம். 'கொந்தழல் பிறப்பத் தாக்கிக் கோடுகண் மிடைந்த தீயால், வெந்தன விலையி லாத சாமரை' [சீவகசி-உஉகுச] என வருமாறு காண்க. இதன் முதலடி இல்பொருளுவமையணியாம். (அ)

இதுவுமது

சகஉ. நிழற்கொடி தழற்கது வலிற்கடி
தொளித்தவை நினைப்பவர் நினைப்ப தன்முனே
†அழற்படு புகைக்கொடி யெடுத்தன
புதுக்கொடி யனைத்தினு நிரைத்த தெனவே.

ப - ரை :—தழல் கதுவலின் - தீப் பிடித்தலால், கடிது ஒளித்த - விரைவாய் (எரிந்து) மறைந்த, நிழல் கொடி அவை - நிழலைத் தருங் கொடிகளாகிய அவற்றை, நினைப்பவர் - (அதிசயித்து) எண்ணுபவர், நினைப்பதன் முனே - (அவ்வாறு) எண்ணுவதற்கு முன்பே, புது கொடி - புதிய கொடிகள், அனைத்தினும் - எல்லா விடங்களிலும், நிரைத்தது என - வரிசையாய் அமைத்தது போல, அழல் - (கொடிகள் எரிந்த) நெருப்பில், படு புகை கொடி - பொருந்திய புகையாகிய கொடிகள், எடுத்தன - உயர்ந்து நின்றன.

வி - ரை :—(யானைக் கோடுகளிலிருந்து தோன்றிய) தீப் பொறிகளால் எரிந்த துகிற் கொடிகளுக்குப் பதில், அத் துகிற் கொடிகளி லிருந்தெழுந்த

புகையாகிய புதிய கொடிகள் எங்கும் நிரம்பின வென்பதாம். தீப்பற்றினதும் மிக்க விரைவில் புதிய புகைக் கொடிகள் தோன்றின வென்பார், 'நினைப்பவர் நினைப்பதன் முனே' என்றார். புகைக் கொடி—புகையின் ஒழுங்கு எனினுமாம். அனைத்தினும் என்றது, தேர்—யானை முதலியவைகளின்மேல் விளங்குங் கொடிகளை; இதிலுள்ள உம்மை முற்றுப்பொருளது; ஒளித்த என்னும் பெயரெச்சத்தி னீறு தொக்கது. இதில் அந்தாதித் தொடையும் உவமை யணியும் உள்ளமை காண்க. பா - பே :—† அழற்கடு புகை.

(௩௯0) என்றிவை யுரைத்தலும், கண்டிலையோ (௩௯௧) இட்டி வருமோ (௩௯௨) வெல்ல வரிதோ (௩௯௩) தொடங்குகென (௩௯௪) கிடைத்தது, நண்ணுகவென (௩௯௫) எழுந்தபொழுது (௩௯௬) எழ (௩௯௭) இவை நுரையென, கயலென (௩௯௮) படையெழ (௩௯௯) இனமென (௪00) துகள்பட (௪0௧) அதிர்வென (௪0௨) அரிதென (௪0௩) எடுமெடுமென (௪0௪) ஒலி மிகைக்க (௪0௫) செவிடெடுக்க (௪0௬) மலைக்க (௪0௭) எதிர்க்க (௪0௮) அடர்க்க (௪0௯) படைக்க (௪௧0) கிடக்க (௪௧௧) கதுவ (௪௧௨) நிரைத்தனென.........எடுத்தன என முடிக்க. (௯)

**இதுவுமது**

௪௧௩. இடத்திடை வலத்திடை யிருத்திய
துணைக்கர நிகர்த்தன *வடுத்த கரியின்
கடத்தெழு மதத்திடை மடுத்தன
சிறப்பொடு கறுத்தன வவற்றி னெயிறே.

ப - ரை :—அடுத்த கரியின் - (போர் புரிதற்கு ஒன்றோடொன்று) நெருங்கிய யானைகளின், கடத்து எழு - மதச் சுவடுகளிலிருந்து பெருகும், மதத்திடை - மதநீரில், மடுத்தன - பதிந்து, சிறப்பொடு கறுத்தன - மிகுதியாய்க் கரிய நிறம் படைத்திருப்பனவாகிய, அவற்றின் எயிறு - அவைகளின் கொம்புகள், இடத்திடை வலத்திடை - (அந்த யானைகளின்) இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும், இருத்திய - அமைத்த, துணை கரம் - இரண்டு துதிக்கைகளை, நிகர்த்தன - ஒத்திருந்தன.

வி - ரை :—ஒன்றோடொன்று போர் புரியும் யானைகளின் இரண்டு கொம்புகளும் மதநீரில் மூழ்கிக் கறுத்தலால், அவை கரிய துதிக்கைகளைப் போல் தோன்றின வென்பதாம். இதனால், மூன்று துதிக்கைகளையுடைய யானைகளைப்போல், அவை காணப்பட்டன வென்க. யானை மதங் கரிய நிறமுடைய தாதலால், அதில் பதிந்த கோடுகள் கறுத்தன வென்க [தா-௧௨௯]. சிறத்தல்—மிகுதல்; 'அற்புளஞ் சிறந்தாங் கருண்மொழி யளைஇ' [சிலப்-௧௬-௭௭]. எனவும், 'தேரொடு தேர்தமுட் சிறந்து சேர்ந்தவே' [சீவகசி-௨௨௧௯] எனவும் வருமாறு காண்க. மடுத்தன-முற்றெச்சம். பா - பே :—* எதிர்த்த. (௧0)

**இதுவுமது**

௪௧௪. எயிறுக ளுடையபொ ருப்பை §வலத்திடை
எதிரெதி ரிருபணை யிட்டுமு றுக்கிய
கயிறுக ளிவையென வக்கர டக்கரி
கரமொடு கரமெதிர் தெற்றிவ லிக்கவே.

ப - ரை :—எயிறுகள் உடைய பொருப்பை - கொம்புகளையுடைய மலைபோன்ற யானைகளை, எதிர் எதிர் இட்டு - எதிரெதிராக நிறுத்தி, இரு பணை இடை - (அவைகளின்) இரண்டு கொம்புகளுக்கு நடுவில்,

வலத்து முறுக்கிய - வலிவால் திரித்த, கயிறுகள் இவை என - கயிறுகள் இவை என்று (கண்டோர்) சொல்லும்படி, கரடம் அ கரி - மதச் சுவடு களையுடைய அந்த யானைகள், கரமொடு கரம் - (ஒன்றின்) துதிக்கையில் (மற்றொன்றின்) துதிக்கையை, தெற்றி வலிக்க - பின்னி இழுக்க,

வி - ரை :—போர் புரியும் யானைகள் தங்கள் துதிக்கைகளை மாட்டி வலித்தல், வலிய கயிறுகளைத் திரித்தல் போலிருந்த தென்பதாம். உடைய - குறிப்புப் பெயரெச்சம்; ௪௧௧, ௪௧௩, ௪௧௪ - இம் மூன்று தாழிசைகளிலும் யானைகளின் போரைப் பற்றிக் கூறியுள்ளமை காண்க. இச்செய்யுள் அந்தாதித் தொடையாம். இவ்விரு செய்யுட்களும் இல்பொருளுவமை யணியாம்.

பா - பே :—\$ வலித்திடை. (௧௧)

குதிரைப் போர்

௪௧௫. முடுகிய பவனப தத்திலு கக்கடை
முடிவினி லுலகமு ணச்சுடர் விட்டெழு
கடுகிய வடவன லத்தினை வைத்தது
களமுறு துரகக ணத்தின்மு கத்திலே.

ப - ரை :—முடுகிய - விரைந்து வீசுகின்ற, பவனம் பதத்தில் - காற்றின் முயற்சியால், உகம் கடை முடிவினில் - யுகங்களின் கடைசியாகிய முடிவு காலத்தில், உலகம் உண - உலகங்களை யழிக்க, சுடர் விட்டு எழு - ஒளி வீசி யெழுகின்ற, கடுகிய வட அனலத்தினை - கொடிய வடவா முகாக்கினியை, களம் உறு - போர்க் களத்தில் பொருந்திய, துரகம் கணத்தின் முகத்தில் - குதிரைக் கூட்டங்களின் முகங்களில், வைத்தது - (அமைத்து) வைத்தது போன்றதாகிய,

வி - ரை :—போர்க் களத்திலுள்ள குதிரைக ளெல்லாம் வடவா முகாக் கினியை ஒத்திருந்தன வென்பதாம். ஊழித் தீ உலகங்களை யெல்லாம் எளிதில் அழித்தல் போல், அக் குதிரைகளும் பகைவர் படைத்திரளை எளிதில் அழிக்க வல்லன வென்க. பவனம் என்றது ஊழிக் காற்றையாம்; உகக் கடை முடிவினில் என்றதைப் பவனத்திற்குங் கூட்டுக. இஃதிடைநிலை விளக்கணியாம். (-)

படைவீரர் பெருமிதம்

௪௧௬. களமுறு துரகக ணத்தின்மு கத்தெதிர்
கறுவலர் சிலர்கல வித்தலை நித்தில
இளமுலை யெதிர்பொரு மப்பொழு திப்பொழு
தெனவெதிர் கரியின்ம ருப்பின்மு னிற்பரே.

ப - ரை :—களம் உறு - போர்க் களத்தில் பொருந்திய, துரகம் கணத்தின் - குதிரைக் கூட்டங்களின், முகத்து எதிர் - முகத்துக்கு எதிரில், சிலர் - சில வீரர்கள், கறு இலர் - (போர் புரிய) கோபங் கொள்ளாதவராய், கலவி தலை - (தம் மனைவியரோடு) கூடுங் காலத்தில், நித்திலம் இளம் முலை - முத்து மாலைகளை யணிந்த இளமையாகிய (அப் பெண்களின்) கொங்கைகள், எதிர் பொரும் - (தம்முடைய மார்புக்கு) எதிரில் தாக்கும், அ பொழுது - அந்த (கலவி) காலம், இ பொழுது என - இந்தக் காலமே யாகுமென்று, எதிர் - (தம்மை) எதிர்க்கும், கரியின் மருப்பின் முன் - யானைகளின் கொம்புகளுக்கு எதிரில், நிற்பர் - (போர் புரிய மிக்க மகிழ்ச்சியுடன்) நிற்பார்கள்.

வி - ரை :—வீரர்களில் சிலர் குதிரைகளோடு போர் புரிய விரும்பாதவராய் யானைகளை யெதிர்த்துப் போர் புரிந்து, அவைகளின் கோடுகள் தம் மார்பில் பதிதலைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி யெய்துவ ரென்பதாம். 'கலைக் கோட்ட வகலல்குல் கனங்குழையார் கதிர்மணிப்பூண், முலைக்கோட்டா லுழப் பட்ட மொய்ம்மலர்த்தா ரகன்மார்பர், மலைக்கோட்ட வெழில்வேழந் தவநூறி மதயானை, கொலைக்கோட்டா லுழப்பட்டுக் குருதியுட் குளித்தனரே' [சீவகசி-உஉ௬௪] என வருமாறு காண்க. யானைக் கோடுகள் இளமங்கையர் கொங்கை கட் குவமையாதலால், 'இளமுலை......மருப்பு' என்றார். யானைகள் தங் கோட்டால் தம்மை எதிர்க்கும் பிராணிகளைத் தாக்கி வருத்துதல் போல, இளமங்கையரும் செம்மாந் தெழுந்த தம் அழகிய கொங்கைகளால் தங் கணவர்க்குக் காம நோயை மிகுவித்து வருத்துவ ரென்க. 'கோடஞ்சுங் கோதையர்கள் கொங்கை' [திருவேங்-மாலை-அ0] என்றார் ஐயங்காரும். கறுவிலர் – முற்றெச்சம்; நித்திலம்—ஆகுபெயர். (சகசு) தெற்றி வலிக்க (சகரு) முகத்தில் வைத்தாகிய (சகசு) தூரககண மென்க. (க௩)

வாள் வீரர் சிறப்பு

சகஎ. எதிர்பொரு கரியின்ம ருப்பையு ரத்தினில்
இறவெறி படையினி றுத்துமி றைத்தெழு
சதுரர்கண் மணியக லத்தும ருப்பவை
சயமகள் களபமு லைக்குறி யொத்ததே.

ப - ரை :—எதிர் பொரு - (தம்மை) எதிரில் மோதிய, கரியின் மருப்பை - யானைகளின் கொம்புகளை, எறி படையின் - (பகைவர்களை) வெட்டும் வாளாயுதங்களால், உரத்தினில் இற - (தம்முடைய) மார்பில் ஒடியும்படி, இறுத்து - முறித்து, மிறைத்து எழு - (அந்த யானைகளை) கொன்று (களிப்புடன்) எழுகின்ற, சதுரர்கள் - வலிய வீரர்களின், மணி அகலத்து - அழகிய மார்பில் பதிந்த, மருப்பு அவை - கொம்புகளாகிய அவை, சயம் மகள் - (அவர்களை இறுகத் தழுவிய) வீரமகளின், களபம்- சந்தனக் குழம்பைப் பூசிய, முலை குறி - முலையின் சுவட்டை, ஒத்தது - ஒத்திருந்தது.

வி - ரை :—வீரர்களின் மார்பில் பதிந்து வெட்டுண்ட யானைக் கோம்புகள் சந்தனக் குழம்பு பூசிய வீரமகளின் கொங்கைச் சுவட்டை யொத்திருந்தன வென்பதாம் படை—இப் பொதுப்பெயர் இங்கு வாளை யுணர்த்தினது. மிறை—கொலை; இதனை 'மிறைபுரிவே லொப்பெனினு மேலா' [மாறனலங்- பொருளணி-கஅ௫] என்றதனு லறிக. மிறைத்தல்-ஆரவாரித்த லெனினுமாம், 'விண்ணி ணுயகிதன், யாக சாலைதொறு மீள வுஞ்சிலர் மிறைப்பரே' [சிலப்-௫-அஅ-ம் அடி மேற்கோள்] என்றதை காண்க. 'மருப்பை......யிறுத்து' என்க. வீரர்களின் வெற்றியின் சிறப்பைக் கண்டு வீரமகள் அவர்களைத் தழுவினளென் பார், 'மருப்பவை...ஒத்தது' என்றார். மணி யகலம்—இரத்தின மாலைகளையணிந்த மார்பெனினுமாம். இச்செய்யுளில் வாள் வீரர் சிறப்புக் கூறப்பட்டது. (கசு)

குதிரை வீரர் சிறப்பு

சகஅ. சயமகள் களபமு லைக்கணி யத்தகு
தனிவட மிவையென மத்தக முத்தினை
அயமெதிர் கடவிம தக்கரி வெட்டினர்
அலைபடை நிரைகள்க ளத்துநி ரைக்கவே.

ப - ரை :—அலை படை நிரைகள் - கடல் போன்ற சேனையின் வரிசைகள், களத்து நிரைக்க - போர்க்களத்தில் வரிசையாய் (இறந்து)

கிடக்கும்படி, அயம் எதிர் கடவி - (குதிரை வீரர்கள் தங்கள்) குதிரைகளை எதிரில் செலுத்தி, சயம் மகள் - வீரமகளின், களபம் முலைக்கு அணிய தகு - சந்தனக் குழம்பைப் பூசிய கொங்கைகளில் அணியத் தகுந்த, தனி வடம் - ஒப்பற்ற முத்து மாலைகள், இவை என - இவை என்று சொல்லும்படி, மதம் கரி - மதத்தைப் பொழியும் யானைகளின், முத்து மத்தகத்தினை வெட்டினர் - முத்துக்களைச் சொரியும் தலைகளை வெட்டினார்கள்.

வி - ரை:—குதிரை வீரர்கள் பல படைகளை யழித்துப் பின்பு பல யானைகளையும் வெட்டிச் சாய்த்தன ரென்பதாம். யானைகளை வெட்டுங்கால், அவைகளின் மத்தகங்களிலிருந்து வரிசையா யுதிரும் முத்துக்கள் வீரமகளுக்கு அணியத்தக்க முத்து மாலைகளை யொத்தன வென்க. யானையின் தலையில் முத்துக்க ளுண்டென்பதை, 'வெங்க ளிற்றின் மத்த கத்தின் வீழு முத்து' எனவும், 'போதக மத்தக முத்து' [தா-சஉ அ-௫சச] எனவும் இவ்வாசிரியர் கூறு மாற்றா னறிக. 'முத்தார் மருப்பினிடை வளைத்த முரண்கொள் யானை' [சீவகசி-உகூ௫௩] எனவும் 'கதக்களி றெட்டும் பட்ட களந்தொறுங் கும்பஞ் சாய்த்த...... மணிமுத்து' [தக்கயா-எ௫கூ] எனவும் பிறர் மொழிந்தவற்றையும் இங்குக் கவனிக்க. 'மத்தக முத்தினை'—இதனை முத்து மத்தகத்தினை என உருபு பிரித்துக் கூட்டுக. அலை படை—உவமைத் தொகை; சந்தவின்பப்பொருட்டு வலி யியல்பாயிற்று; (போரில் நிலை தளர்ந்து) அலையும் படையென வினைத் தொகையாய்க் கொள்ளினுமாம். இதில் குதிரை வீரர்களின் சிறப்புக் கூறப் பட்டது. சசகூ-ம் தாழிசை முதல் இம்மூன்று தாழிசைகளிலும் வீரச்சுவை யுள்ளமை காண்க. (க௰)

**வில் வீரர் சிறப்பு**

சசக௧. அலைபடை நிரைகணி ரைத்தசெ ருக்களம்
‡ அமர்புரி களமென வொப்பில விற்படை
தலைபொர வெரியநெ ருப்பினின் மற்றது
தழல்படு கழைவன மொக்கினு மொக்குமே.

ப - ரை:—அலை படை - கடல் போன்ற சேனைகளின், நிரைகள் - அணிகள், நிரைத்த - வரிசையா யமைந்த, செரு களம் - போர்க் களத்தில், ஒப்பு இல - ஒப்பில்லாதனவாகிய, வில் படை - வில்லிலிருந்து வரும் (சிறந்த) கணைகள், தலை பொர - (சேனைகளின்) தலைகளில் தாக்க, நெருப்பினின் எரிய - (அத்தலைகள்) நெருப்பால் எரிதலால், அது - அந்தப் போர்க்களம், அமர் புரி - விருப்பத்தால் செய்யப்படும், களம் என - யாகசாலையையும், தழல் படு - தீப்பிடித்த, கழை வனம் (என) - மூங்கில் காட்டையும், ஒக்கினும் ஒக்கும் - ஒருவாறு ஒத்திருக்கும்.

வி - ரை:—வில் வீரர்களின் கணைகளால் தீப்பிடித் தெரியும் அந்தப் போர்க்களமானது யாக சாலையையும் எரியும் மூங்கில் காட்டையும் ஒருவாறு ஒக்கு மென்பதாம். இதனால், அப் போர்க்கள முழுதும் தீயின் மயமாய் இருந்த தென்பது விளங்கும். 'ஒக்கினும் ஒக்கும்' என்றதனால் யாகசாலைகளையும், தீயால் எரியும் மூங்கில் காடுகளையும் விடத் தலைகள் பற்றி யெரியும் நெருப்பு மிக்கிருந்த தென்பதாம். அமர்—விருப்பம்; 'வளையணி முன்கை வாலெயிற் றமர் நகை' [ஐங்-கசஅ] என்னுமா றறிக. என—எண்ணுப் பொருளில் வந்தது. நெருப்பினின்—இன் உருபு ஐந்தாம் வேற்றுமை யேதுப் பொருளதாம்.
பா - பே:—‡ அழல்புரி. (க௧)

இதுவுமது

சஉ௦. கழல்படு கழைவன மெப்படி யப்படி
சடசட தமரமெ ழப்பக ழிப்படை
அழல்படு *புகையொடி ழிச்சிய கைச்சிலை
$அடுசிலை பகழிதொ டுத்துவ லிப்பரே.

ப - ரை :—கழல் படு - நெருப்புப் பற்றிய, கழை வனம் - மூங்கில் காட்டில், சடசட தமரம் - சடசட வென்னு மொலி, எப்படி அப்படி எழ - எதுபோ லுண்டாகுமோ அதுபோல் உண்டாக, இழிச்சிய - (கீழே) இறக்கிப் பிடித்த, கை சிலை - கையிலுள்ள வில்லில், புகையொடு - புகையும், அழல் படு - நெருப்பும் பொருந்திய, அடு சிலை - (பகைவரை) கொல்லும் ஆரவாரத்தையுடைய, பகழி படை - அம்புகளை, தொடுத்து - பிணைத்து, பகழி வலிப்பர் - (வில் வீரர்கள்) அம்பின் குதையை வலிப்பார்கள்.

வி - ரை :—தீப்பற்றி யெரியும் மூங்கில் காட்டில் பேரொலி யுண்டாதல் போல், வீரர்கள் கணைகளைத் தொடுத்தலால் பேரொலி யுண்டாயிற் றென்பதாம். மூங்கில் காடு பற்றி யெரியுங்கால், அம் மூங்கில்களிலுள்ள கணுக்கள் வெடித்தலால் பேரொலி யுண்டா மென்க. பகழி—அம்பு, குதை; சிலை—வில், ஆரவாரம். சடசட—ஒலிக்குறிப்பு; இரட்டைக்கிளவி; 'சடசட ஒலிப்ப' [கம்பரா-கரன்-௫௧] என வருமாறு காண்க. பகழிப் படை—இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இவ்வாறு செய்யுட்களும் உவமையணியாம்.

பா - பே :—* புகைபொழி யப்பொழி யச்சிலர், $ அதனெடு. (௧௭)

இதுமவுது

சஉக. அடுசிலை பகழிதொ டுத்துவி டப்புகும்
அளவினி லயமெதிர் விட்டவர் வெட்டின
உடல்சில விருதுணி பட்டன பட்டபின்
ஒருதுணி கருதுமி லக்கைய ழிக்குமே.

ப - ரை :—சிலை - (வீரர்கள் தங்கள்) வில்லில், அடு பகழி தொடுத்து - (பகைவரை) கொல்லுங் கணைகளைப் பிணைத்து, விட புகும் அளவினில் - ஏவத் தொடங்கும் சமயத்தில், அயம் எதிர் விட்டவர் - (தங்கள்) குதிரைகளை (அவர்களுக்கு) எதிரில் செலுத்திய (குதிரை) வீரர்கள், வெட்டின - (வில் வீரர்களை) வெட்டினவாகிய, உடல் சில - (அவர்கள்) உடம்புகளில் சில, இரு துணி பட்டன - இரண்டு துண்டுகளாயின, பட்ட பின் - (அவ்வாறு) ஆன பின்பும், ஒரு துணி - (அவைகளில்) ஒரு துண்டு, கருதும் இலக்கை - (தாம் கொல்ல) எண்ணிய (தங்கள்) பகைவரை, அழிக்கும் - கொல்லும்.

வி - ரை :—சில வில் வீரர்கள் கணைகளைத் தொடுக்குஞ் சமயத்தில், குதிரை வீரர்கள் விரைந்து வந்து அவர்களை வெட்டினர். உடனே வெட்டுண்ட உடலின் ஒரு பகுதி, தான் கருதிய பகைவரைக் கொன்ற தென்பதாம். 'பற்றி னின்றொரு வன்படை வாளெதிர், உற்ற வன்தலை சிந்திட வோச்சினன், அற்ற தன்தலை கொண்டவ னுந்தனை, செற்ற வன்தலை சிந்திட வீசினன்' [வில்லிபா-௪-ம் போர்-௯௧] என்றமை இங்குக் கவனிக்க. (௧௮)

இதுவுமது

சஉஉ. ஒருதுணி கருதுமி லக்கை†ய ழித்தன
உருவிய பிறைமுக வப்பக ழித்தலை

அரிதரி திதுவென னப்பரி யுய்ப்பவர்
அடியொடு முடிகடு ணித்துவி ழுத்துமே.

ப - ரை :—ஒரு துணி - (வெட்டுண்ட வில் வீரர்களின்) ஒரு துண்டு, கருதும் இலக்கை - (தாம்) கருதிய பகைவரை, அழித்தன - கொன்ற, உருவிய - (அவர்கள் வில்லிலிருந்து) உருவிச் சென்ற, அ பிறை முகம் பகழி த்லை - அந்த அர்த்த சந்திரக் கணைகளின் நுனி, இதுவும் அரிது அரிது - இச்செய்கையும் மிகவும் அரிது, என - என்று (யாவரும்) சொல்லும்படி, பரி உய்ப்பவர் - குதிரைகளை (தம்மேல்) செலுத்தும் வீரர்களின், அடியொடு முடிகள் - கால்களையும் தலைகளையும், துணித்து விழுத்தும் - துண்டுகளாக்கி (நிலத்தில்) தள்ளும்.

வி - ரை :—வில் வீரர்களின் உடல் துண்டுகள் தாம் கருதிய பகைவரை யழித்ததன்றி, அவர்கள் வில்லிலிருந்து வெளிப்பட்ட கணைகள் தம்மை வெட்டிய குதிரை வீரர்களைத் துணித்து வீழ்த்தின வென்பதாம். இதனைக் கண்ட வீரர் பலர் அளவிறந்த அதிசயமடைந்து வில் வீரர் செயலை அரிதரிதென வியந்தன ரென்க. இந்நான்கு செய்யுட்களிலும் வில் வீரரைச் சிறப்பித்துள்ளமை காண்க. இதுவும்—உம்மை யிறந்தது தழுவியது; அடியொடு—ஒடு எண்ணுப் பொருளில் வந்தது. ஒரு துணி......அழித்தன—ஒருமையிற் பன்மை வந்த பால் வழுவமைதி. பா - பே :—† அழித்தெழ. (௧௯)

குதிரைவீரர் சிறப்பு

௨௩௩. அடியொடு முடிசடு ணித்துவி ழப்புகும்
அளவரி தொடை*சம ரத்தொட ணைத்தனர்
நெடியன சிலசர மப்படி பெற்றவர்
†நிறைசர நிமிரவி டத்துணி யுற்றவே.

ப - ரை:—அடியொடு முடிகள் - (குதிரை வீரர்களின்) கால்களையும் தலைகளையும், துணித்து - வெட்டுதலால், விழ புகும் அளவு - (அவை) விழத் தொடங்குஞ் சமயத்தில், அரி தொடை - (தங்கள் தலைகளையும் கால்களையும்) அறுக்குங் கணைகளை, சமரத்தொடு - போரில், அணைத்தனர் - (அந்தக் குதிரை வீரர்கள் தங்கள் கைகளால்) சேர்த்துப் பிடித்தார்கள், நெடியன - நீண்டனவாகிய, சில சரம் - சில கணைகளை, அப்படி பெற்றவர் - அவ்வாறு பெற்ற (அந்த) வீரர்கள், நிறை சரம் - (கூர்மை) நிறைந்த (அந்த) கணைகளை, நிமிர விட - உயர விடுதலால், துணி உற்ற - (பல வாள் வீரர்களின் உடல்கள்) துண்டுகளாயின.

வி - ரை :—காலுந் தலையும் வெட்டுண்ட குதிரை வீரர்கள் தம்மேல் பாய்ந்த கணைகளைப் பிடித்துத் தம் பகைவராகிய வாள் வீரரை யழித்தன ரென்பதாம். இதில் குதிரை வீரர்களைச் சிறப்பித்துள்ளமை காண்க. துணித்து — எச்சத்திரிபு; அரி தொடை — வினைத்தொகை; தொடை — தொடு + ஐ; (வில்லில் பூட்டி) தொடுக்கப்படுவது.

பா - பே :—* அல்லத்தொடு, † நிறைசய நிமிர. (௨௰)

வாள் வீரர் சிறப்பு

௨௩௪. நிறைசர நிமிரவி டத்துணி யுற்றவர்
நெறியினை யொடியெறி கிற்பவ ரொத்தெதிர்
அறைகழல் விருதர்செ ருக்கற வெட்டலின்
அவருட லிருவகிர் பட்டன முட்டவே.

ப - ரை :—நிறை சரம் - (குதிரை வீரர்கள் கூர்மை) நிறைந்த கணைகளை, நிமிர விட - உயர விடுதலால், துணி உற்றவர் - (அக்கணைகளால் உடல்) துண்டுபட்ட (வாள்) வீரர்கள், நெறியினை - வழியிலுள்ள, ஓடி எறிகிற்பவர் ஒத்து - காட்டுப் புதர்களை அழிப்பவரைப் போல், எதிர் - (தமக்கு) எதிரிலுள்ள, அறை கழல் விருதர் - ஒலிக்கின்ற வீரகண்டையை பணிந்த வீரர்களின், செருக்கு அற - (போரிலுள்ள) களிப்பு நீங்கும்படி, வெட்டலின் - (அவர்களை வாளால்) வெட்டுதலால், அவர் உடல் முட்ட - அந்த வீரர்களின் உடல்கள் முழுதும், இரு வகிர் பட்டன - இரண்டு பிளவுகளாயின.

வி - ரை :—குதிரை வீரர்களால் அழிவெய்திய வாள் வீரர்கள் புதர்களை யழிப்பவரைப்போல், தமக் கெதிர்ப்பட்ட பகைவர்களைக் கொன்றன ரென்பதாம். 'எதிர்......விருதர்' தம்மை யெதிர்த்த வீரர்களை யெனினுமாம். 'ஓடி யெறி கிற்பவ ரொத்து' என்றதனால், அவர்கள் பல பகைவரை எளிதில் கொன்றமை விளக்கும். இந்தத் தாழிசையில் வாள் வீரரைச் சிறப்பித்துள்ளமை காண்க. ௪௨௧-ம் தாழிசை முதல் இதுகாறும் கூறியவற்றுள் வீரச்சுவை செறிந்துள்ளமை காண்க. இவையனைத்தும் அந்தாதித் தொடையாம். (௨௧)

கலிங்க வீரர் செயல்

௪௨௫. விடுத்த வீர ராயு தங்கண் *மேல்வி ழாம லேநிரைத்
தெடுத்த வேலி போற்க லிங்கர் வட்ட ணங்க ளிட்டவே.

ப - ரை:—வீரர் விடுத்த ஆயுதங்கள் - (சோழ) வீரர்கள் வழங்கிய ஆயுதங்கள், மேல் விழாமல் - (தம்) மேல் விழாமல், நிரைத்து எடுத்த - ஒழுங்காயமைத்த, வேலி போல் - மதிலைப்போல், கலிங்கர் வட்டணங்கள் - கலிங்க வீரர்களின் கேடகங்கள், இட்ட - (வரிசையாய்) அமைந்தனவாம்.

வி - ரை :—சோழ வீரர் வழங்கிய படைகள் தம்மேல் விழாமல், கலிங்க வீரர் தங் கேடகங்களால் அவற்றைத் தடுத்தன ரென்பதாம். மதில் பகைவரை உள்ளே விடாமல் தடுத்தல் போல், கேடகங்கள் பகைவர் வழங்கும் படைகளைத் தடுத்தலால், அவற்றிற்கு மதிலை உவமை கூறினார்.

பா - பே :—* மேல் விழாமல் யந்திரத்து. (௨௨)

கேடகங்கள் துளைபட்டமை

௪௨௬. இட்ட வட்ட ணங்கண் மேலெ றிந்த வேறி றந்தவாய்
வட்ட மிட்ட நீண்ம திற்கு †வைத்த பூழை யொக்குமே.

ப - ரை :—இட்ட வட்டணங்கள் மேல் - (கலிங்க வீரர்கள்) பிடித்த கேடகங்களில், எறிந்த வேல் - (சோழவீரர்) எறிந்த வேலாயுதங்களால், திறந்த வாய் - திறப்புண்ட இடங்கள், வட்டம் இட்ட - வட்டமாக அமைந்த, நீள் மதிற்கு - நீண்ட மதிலில், வைத்த பூழை ஒக்கும் - அமைத்த (சிறிய வாசல்) தொளையை ஒத்திருக்கும்.

வி - ரை :—வேலெறிதலால் கேடகங்களி லுண்டாகிய தொளைகள் மதில்களி லமைத்த சிறிய வாசல் தொளைகளை யொத்திருந்தன வென்பதாம். முன் செய்யுளில் கலிங்கர் வட்டணங்களை மதிலுக்குவமை கூறினமையால், இச் செய்யுளில் அவ்வட்டணங்களி லமைந்த தொளைகளை 'நீண் மதிற்கு வைத்த பூழை' என்றார். வாய்—இடம்; 'வாய்கா வாது பரந்து பட்ட' [புறநா-௨௨] எனவும், 'உளப்பட்ட வாயெல்லாம்' [புறப்-வெ-மா-௩௭] எனவும் வருமாறு காண்க. (௨௩)

வாளாயுதமும் உலக்கையும் கொண்டு போரிட்டமை

௪௨௭. கலக்க மற்ற வீரர் வாள்க லந்த சூரர் கைத்தலத்
துலக்கை யுச்சி தைத்த போ துழுங்க லப்பை யொக்குமே.

ப - ரை :—கலக்கம் அற்ற - (போரில் சிறிதும்) கலங்குதலில்லாத, வீரர் வாள்-வீரர்களின் வாளாயுதங்கள், கலந்த சூரர் - (தம்மை எதிர்த்து) நெருங்கிய வீரர்களின், கை தலத்து - கையிலுள்ள, உலக்கை உச்சி - உலக்கைகளின் நுனியில், தைத்த போது - அழுந்தினபோது, உழும் கலப்பை ஒக்கும் - (அந்த உலக்கைகள் உழவர்கள் நிலத்தை) உழும் கலப்பைகளை ஒத்திருக்கும்.

வி - ரை :—இருதிறத்து வீரர்களும் நெருங்கிப் போர் புரியுங்கால், வாளாயுதங்கள் பதிந்த உலக்கைகள் கலப்பைகளை ஒத்திருந்தன வென்பதாம். இதனால் சில வீரர்கள் வாளால் வெட்ட, வேறு சிலர் அவ் வெட்டைத் தங் கையிலுள்ள உலக்கைகளால் தடுத்தமை விளங்கும். தம்முயிரைத் துரும்பென மதிப்பவராகலின், 'கலக்க மற்ற வீரர்' என்றார். (௨௪)

யானைத் துதிக்கைகள் சக்கரங்களை ஒத்தல்

௪௨௮. மத்த யானை யின்க ரஞ்சு ருண்டு வீழ வன்சரந்
தைத்த போழ்தி னக்க ரங்கள் சக்க ரங்க ளொக்குமே.

ப - ரை :—மத்தம் - செருக்கையுடைய, யானையின் கரம் - யானைகளின் துதிக்கைகள், சுருண்டு வீழ - சுருண்டு விழும்படி, வன் சரம் - (வீரர்களின்) வலிய கணைகள், தைத்த போழ்தின் - (அந்தத் துதிக்கைகளில்) அழுந்தின சமயத்தில், அ கரங்கள் - அந்தத் துதிக்கைகள், சக்கரங்கள் ஒக்கும் - சக்கரங்களுக்கு ஒப்பாகும்.

வி - ரை :—சில வீரர்களின் கணைகளால் அறுப்புண்டு சுருண்டு விழுந் துதிக்கைகள் சக்கரங்களை யொக்கு மென்பதாம். நீண்ட துதிக்கைகள் சுருண்டு வீழ்தலால், அவை வட்ட வடிவமாகிய சக்கரத்திற் குவமையாயின வென்க. மத்தம்—களிப்பெனினுமாம். (௨௫)

யானை முத்து நெற்பொரி யொத்தல்

௪௨௯. ‡வெங்க ளிற்றின் மத்த கத்தின் வீழு முத்து வீரமா
மங்கை யர்க்கு மங்க லப்பொ ரிச்சொ ரிந்த தொக்குமே.

ப - ரை :—வெம் களிற்றின் - கொடிய யானைகளின், மத்தகத்தின் - தலைகளிலிருந்து, வீழும் முத்து - உதிரும் முத்துக்கள், மா வீரம் மங்கையர்க்கு - சிறந்த வீர மகளுக்கு, மங்கலம் - விவாகச் சடங்கில், பொரி சொரிந்தது ஒக்கும் - பொரிகளைச் சொரிந்ததற்கு ஒப்பாகும்.

வி - ரை :—சில வீரர்களால் வெட்டுண்ட யானைகளின் தலைகளிலிருந்து உதிரும் முத்துக்கள் வீரமகளின் விவாகத்திற் சொரிந்த நெற் பொரிகளை ஒத்திருந்தன வென்பதாம். விவாகச் சடங்கில் வேள்வியியற்றி அதில் நெற்பொரி சொரிதலுண்மையால், இவ்வாறு கூறப்பட்டது. யானைகளின் மத்தகத்தில் முத்துக்க ளுண்டென்பதை ௪௧௮-ம், தாழிசை யுரையிற் காண்க. வெண்ணிறம் பற்றி முத்துக்கள் நெற்பொரிகளுக் குவமையாயின. களிற்றின்—இன் - சாரியை; மத்தகத்தின்—இன் - ஐந்தாம் வேற்றுமை நீக்கப் பொருள்.
பா - பே :—‡ வென்கை வெற்பின். (௨௬)

கேடகங்களுடன் வீரர் வீழ்ந்த நிலை

௪௩௦. மறிந்த கேட கங்கி டப்ப மைந்தர் துஞ்சி *வைகுவோர்
பறிந்த தேரி னேமி யோடு பார்கி டப்ப தொக்குமே.

ப - ரை :—மறிந்த - கீழ் மேலான, கேடகம் கிடப்ப - கேடகங்கள் தமக்கருகில்) கிடக்கும்படி, மைந்தர் துஞ்சி - வீரர்கள் இறந்து, வைகுவோர் - (நிலத்தில் விழுந்து) கிடப்பவர், தேரின் பறிந்த - தேரிலிருந்து நீங்கிய, நேமியோடு - சக்கரத்தோடு, பார் கிடப்பது ஒக்கும் - (தேரின்) பார் கிடப்பதை யொத்திருக்கும்.

வி - ரை :—உயிர் துறந்த வீரர்கள் கேடகங்களோடு நிலத்தில் விழுந்து கிடந்தல், தேர் உருளைகளோடு அவைகளின் பார் விழுந்து கிடந்தலை யொத்தது மென்பதாம். பார்—தேரின் ஒருவகை யுறுப்பு; வண்டிப் பார் போன்றது. 'கால் பார் கோத்து' [புறநா-௧௮௫] என்றமை காண்க. பார் மைந்தர்க்கும் நேமி கேடகத்திற்கும் உவமை. துஞ்சி—மங்கல வழக்கு. பா - பே :—* வைகிவோர்.

தண்டாயுதம் மழுவாயுத மொத்தல்

௬௩௧. களித்த வீரர் விட்ட நேமி கண்டு வீசு தண்டிடைக்
குளித்த போழ்து கைப்பி டித்த கூர்ம ழுக்க ளொக்குமே.

ப - ரை :—களித்த வீரர் - (போரில்) மகிழ்ச்சி கொண்ட வீரர்கள், விட்ட நேமி கண்டு - ஏவிய சக்கராயுதங்களைப் பார்த்து, வீசு தண்டு இடை - (அவற்றின்மேல் மற்ற வீரர்கள்) மோதி யடித்த தண்டாயுதங்களில், குளித்த போழ்து - (அந்தச் சக்கரங்கள்) பதிந்த காலத்தில், கை பிடித்த - (அவர்கள் தங்கள்) கைகளில் பிடித்த, கூர் மழுக்கள் ஒக்கும் - கூர்மையாகிய மழுவாயுதங்களை (அவை) ஒத்திருக்கும்.

வி - ரை :—சில வீரர்கள் ஏவிய சக்கராயுதங்கள் நம் பகை வீரர்களின் தண்டாயுதங்களில் பதிந்தபோது, அந்தத் தண்டாயுதங்கள் மழுவாயுதங்கள் போல் தோன்றின வென்பதாம்; மழு—கோடரி; 'களித்த வீரர்' என்றது, 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொள் திண்டோள்' [கம்பரா-பூக்கொய்-௧௮] என்றபடி, போரில் ஆர்வமும் ஊக்கமு முடையவ ரென்பதாம். ()

துணங்கைக் கூத்து மகளிர்க்கும் மைந்தர்க்கும் உரித்தெனல்

௬௩௨. கவந்த மாட முன்பு தங்க ளிப்பொ டாடு பேயினம்
நிவந்த வாட லாட்டு விக்கு நித்த கார ரொக்குமே.

ப - ரை :—தம் முன்பு - தமக்கு முன்பு, கவந்தம் ஆட - (தலையற்ற) உடற் குறைகள் துள்ளியாட, களிப்பொடு - சந்தோஷத்தோடு, ஆடு பேய் இனம் - (அவைகளுக்குப் பின்) கூத்தாடும் பேய்க் கூட்டங்கள், நிவந்த ஆடல் - (அக்குறை யுடல்களாகிய பதுமைகளை) உயர்ந்த கூத்தாட்டத்தை, ஆட்டுவிக்கும் - ஆடும்படி செய்யும், நித்தகாரர் ஒக்கும் - ஆட்டக்காரரை ஒத்திருக்கும்.

வி - ரை :—துள்ளித் துள்ளிக் குதிக்கும் தலையற்ற உடற்குறைகளின் பின், களிப்பால் விளையாடும் பேய்கள் அவற்றைக் கூத்தாட்டுவிப்போரை ஒத்திருந்தன வென்பதாம். பேய்கள் தம் பசி தணியப் பிணங்களை யுண்டமையால், அவை களிப்பெய்திக் கூத்தாடின வென்க. 'கோடுஞ்சிலை யம்பிற்றலை யரியுண்டன குறைநின், றாடுந்தொறு முடனாடுவ வலகைக்குல மொருசார்' [வில்லிபா-௰-ம் போர்-௧௯] என வருமாறறிக. பேய்க் கூத்தைத் துணங்கை யென்பர்; இதனைச் சிங்கிக் கூத்தெனவுங் கூறுவர். இதன் விரிவை ௩௯-ம் தாழிசையிற் காண்க. ௪௨௪-ம் தாழிசை முதல் இதுகாறுங் கூறிய ஒன்பது தாழிசைகளிலும் உவமையணி யிருத்தல் காண்க. (௨௧)

ஓட்டகம் யானை குதிரை திரியு நிலை

௬௩௩. ஓட்ட கங்கள் யானை வாளு யர்த்த மாவை றிந்தபோர்
விட்ட கன்று போகி லாது மீள்வ போலு மீளுமே.

ப - ரை :—ஒட்டகங்கள் யானை - ஒட்டகங்களும் யானைகளும், வால் உயர்த்த மா - வாலை (மேலே) தூக்கிய குதிரைகளும், அழிந்த போர் விட்டு - (முன்பு தாம்) தோற்ற போர்த் தொழிலை விட்டு, அகன்று போகிலாது - நீங்கிப் போகாமல், மீள்வ போலும் - (மீண்டும் போருக்கு) திரும்பி வருவனபோல், மீளும் - திரும்பி வரும்.

வி - ரை :—ஒட்டகம் முதலிய விலங்குகள் போர்க் களத்தை விட்டுப் போகாமல் திரிதல், அவை மீண்டும் போர் புரியக் கருதினமை போக்கு மென்பதாம். ஒட்டகம் முதலியவற்றை யூர்வோர் முன்பே கொலையுண்டமையால், அவை தாம் விரும்பியபடி திரியலாயின வென்க. போர்க்களத்தி லிறந்துபட்ட வீரர்களையும் விலங்குகளையுங் கண்டு அவை போக்கின்றித் திகைத்துத் திரிந்தன வெனினுமாம். போலும்—உம்மை அசைநிலை; இச்செய்யுள் தற்குறிப்பேற்ற வணியாம். பா - பே :—* விழித்த போர். (௬௦)

யானைக்கூட்டம் மேகங்களை யொக்கும்

௪௬௪. பிறங்கு சோரி வாரி யிற்பி ளிற்றி வீழ்க ளிற்றினங்
கறங்கு வேலை நீரு ணக்க விழ்ந்த மேக மொக்குமே.

ப - ரை :—பிறங்கு சோரி வாரியில் - மிக்க இரத்தமாகிய வெள்ளத்தில், பிளிற்றி வீழ் - (கொலையுண்டு) வீறிட்டு விழுந்த, களிறு இனம் - யானைக் கூட்டங்கள், கறங்கு வேலை - ஒலிக்கின்ற கடலிலுள்ள, நீர் உண - நீரைப் பருக, கவிழ்ந்த மேகம் ஒக்கும் - (அந்தக் கடலில்) படிந்த மேகங்களுக்கு ஒப்பாகும்.

வி - ரை :—இரத்த வெள்ளத்தில் கொலையுண்டு விழுந்த யானைக் கூட்டங்கள் கடலில் படியும் மேகங்களை யொக்கு மென்பதாம். கடல் இரத்த வெள்ளத்திற்கும் மேகங்கள் யானைகளுக்கும் உவமை. (௬௧)

வீரர் துருத்தியாட்களை யொத்தல்

௪௬௫. வாளில் வெட்டி வாரணக்கை தோளி லிட்ட மைந்தர்தாம்
தோளி லிட்டு நீர்வி டுந்து ருத்தி யாள ரொப்பரே.

ப - ரை :—வாரணம் கை - யானைகளின் துதிக்கைகளை, வாளில் வெட்டி - வாளால் வெட்டி, தோளில் இட்ட (அவைகளைத் தங்கள்) தோள்களில் வைத்துக்கொண்ட, மைந்தர் தாம் - வீரர்கள், தோளில் இட்டு - (துருத்திகளை) தோள்களில் வைத்து, நீர் விடும் - நீரைச் சொரியும், துருத்தியாளர் ஒப்பர் - துருத்தியாட்களுக்கு ஒப்பாவார்.

வி - ரை :—யானைகளின் துதிக்கைகளை வெட்டி அவைகளைத் தோளில் வைத்துக்கொண்ட வீரர்கள் துருத்தி யாட்களுக்கு ஒப்பாவ ரென்பதாம். 'தூங்குகைக் குரிய வானைத் தடவரை யருவிச் சோரி, வாங்குகைத் துருத்தி கொண்டம் மிடாக்களிற் சொரிய வாரீர்' [தக்கயா-௭௩.௬] என யானைத் துதிக்கைகளைத் துருத்தியாகக் கூறியிருத்தல் காண்க. வீரர் துருத்தியாளர்க்கும் யானைத் துதிக்கை துருத்திக்கும், துதிக்கையிலிருந்து ஒழுகும் குருதி நீர்க்கும் உவமை. துருத்தி—நீரைச் சொரியும் ஒருவகைக் கருவி; வாளில்—உருபு மயக்கம். இவ்விரு செய்யுட்களும் உவமை யணியாம். (௬௨)

வில் வீரர் வீரம்

௪௬௬. நேர்முனையிற் றொடுத்த பகழிகள்
நேர்வளைவிற் சுழற்று மளவினின்
மார்பிடையிற் குளித்த பகழியை
வார்சிலையிற் றொடுத்து விடுவரே.

ப - ரை :—நேர் முனையில் - (ஒருவரோ டொருவர்) எதிர்த்த போரில், தொடுத்த பகழிகள் நேர் - (சில வீரர்கள்) ஏவிய கணைகளுக்கு எதிராய், வளை வில் சுழற்றும் அளவினில் - (வேறு சில வீரர் தங்கள்) வளைந்த வில்லைச் சுழற்றின போதினும், மார்பு இடையின் - (தங்கள்) மார்பில், குளித்த பகழியை - பதிந்த கணைகளை, வீரர் சிலையில் - (அந்த வீரர் தங்கள்) நீண்ட வில்லில், தொடுத்து விடுவர் - தொடுத்து விடுவார்கள்.

வி - ரை :—கையில் கணையற்ற சில வீரர்கள் தங்கள் மார்பில் தைத்த கணைகளைப் பறித்துத் தம் பகைவர்மேல் தொடுப்ப ரென்பதாம். அவர்கள் கையிலிருந்த கணைகள் முன்பே செலவாய் விட்டமையால், தம்மேல் வந்த கணைகளைத் தடுக்க, அவர்கள் தங்கள் வில்லைச் சுழற்றின ரென்க. மார்பில் தைத்த படையைப் பிடுங்கிப் பகைவர்மேல் வழங்குதலை 'நூழிலாட்டு' என்பர். 'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும்' [திருக்கு-௭௭௪] எனவும், கையில் வாளிதொலைந்தபின் காய்ந்துதம், மெய்யில் வாளிகள் வாங்கிவில் வாங்கினர்' [வில்லிபா-க-ம் போர்-௨௭] எனவும் வருமாறு காண்க. நூழிலாட்டின் தன்மையை, 'களங்கொழுமிய படையிரிய, உளங்கிழித்த வேல் பறித்தோச்சின்று' [புறப்-வெ-மா-௧௬௨] என்றதனு லறிக.

பா - பே :—நீ பிடித்த பகழிகள். (௬௬)

பரி வீரர் ஆண்மை

௩௬௭. அசையவுரத் தழுத்தி யிவுளியை
அடுசவளத் தெடுத்த பொழுதவை
விசையமகட் கெடுத்த கொடியென
விருதர்களத் தெடுத்து வருவரே.

ப - ரை :—விருதர் - (சில) வீரர்கள், அடு சவளத்து - (பகைவரை) கொல்லும் ஈட்டியை, இவுளியை உரத்து - குதிரைகளின் மார்பில், அசைய அழுத்தி - (அவை) வருந்தும்படி பதித்து, எடுத்த பொழுது - (அந்த ஈட்டியை மேலே தூக்கி) எடுத்த காலத்தில், விசையம் மகட்கு - வெற்றி மகளுக்கு, எடுத்த கொடி - உயர்த்திப் பிடித்த கொடிகள், அவை என - அவை என்று (கண்டோர்) சொல்லும்படி, களத்து எடுத்து வருவர் - போர்க்களத்தில் (அந்தக் குதிரைகளை) எடுத்து வருவார்கள்.

வி - ரை :—சில வீரர்கள் தங்கள் ஈட்டிகளைக் குதிரைகளின் மார்பி லழுந்தி, வீரமங்கைக்குப் பிடித்தும் கொடிபோல், அவைகளைத் தூக்கி வருவ ரென்பதாம். சவளம்—ஒருவகைக் கருவி ; இவை சிறு சவளம், பெருஞ் சவள மென இருவகைப்படு மென்ப; இங்கே பெருஞ் சவளமாம். விசையம்—விசய மென்பதன் போலி. சவளமானது கொடிக் கழைக்கும் குதிரை கொடிச் சீரைக்கும் உவமையாதலால் இச்செய்யுள் உவமை யணியாம். (௬௭)

தொடை யறுப்புண்ட வீரர் செய்கை

௩௬௮. இருதொடையற் றிருக்கு மறவர்கள்
எதிர்பொருகைக் களிற்றின் ‡வலிகெட
ஒருதொடையைச் சுழற்றி யெறிவர்கள்
ஒருதொடையிட் டுவைப்ப ரெறியவே.

ப - ரை :—இரு தொடை அற்று - இரண்டு தொடைகளும் (அறுப் புண்டு) நீங்கி, இருக்கும் மறவர்கள் - (நிலத்தில் விழுந்து) இருக்கின்ற வீரர்கள், எதிர் பொரு - (தம்மை) எதிர்த்துத் தாக்கும், கை களிற்றின் -

றுதிக்கையையுடைய யானைகளின், 'வலி கெட - வலிமை யழியும்படி, ஒரு தொடையை—, சுழற்றி எறிவர்கள் - (அவைகளின் மேல்) சுழற்றி எறிவார்கள், ஏறிய - (மீண்டும்) எறியும் பொருட்டு, ஒரு தொடை - மற்றொரு தொடையை, இட்டு வைப்பர் - வைத்து வைப்பார்கள்,

வி - ரை :—தொடை யறுப்புண்ட வீரர் சிலர் தம்மை யெதிர்ந்து வரும் யானைகளின் மேல் அத்தொடைகளை வீசி எறிவ ரென்பதாம். தொடைகள் நீங்கியும் அவர்கள் ஆண்மை நீங்கவில்லை யென்க. எதிர் பொரு—நேரில் தாக்கும் எனினுமாம். பா - பே :—[+] விசை கெட. (௩௮)

வாட்போர்

௪௩௯. இருவருரத் திறுற்ற சுரிகையின்
எதிரெதிர்புக் கிழைக்கு மளவினில்
ஒருவரெனக் கிடைத்த பொழுதினில்
உபயபலத் தெடுத்த தரவமே.

ப - ரை :—எதிர் எதிர் புக்கு - நேருக்கு நேராய்ப் புகுந்து, இழைக்கும் அளவினில் - (வாள் வீரர்கள் போர்) புரியுங் காலத்தில், இருவர் உரத்தின் - இரு திறத்தினர் மார்பினும், உற்ற சுரிகையின் - பதிந்த வாள்களால், ஒருவர் என - ஒருவர் போலவே, கிடைத்த பொழுதினில் - (அவ்விருவரும் நிலத்தில்) கிடந்த காலத்தில், உபய பலத்து - இரு படைகளினும், அரவம் எடுத்தது - (மற்ற வீரர்களின்) பேரொலி எழுந்தது.

**வி - ரை :**—வாட்போர் புரிந்த இருதிறத்துப் படை வீரரும் ஒரே காலத்தில் மடிந்து வீழ்ந்தன ரென்பதாம். 'எதிரெதிர் புக்கு' என்றதனால், வாள் வீரர் வஞ்சகச் செயலின்றி நேருக்கு நேராய் நின்று போர் புரிந்தமை விளங்கும். அவ்வாறு போரியற்றிய வீரர்களின் ஆண்மையை இருதிறத்துப் படை மள்ளரும் புகழ்ந்து ஆரவாரஞ் செய்தன ரென்பார், 'உபயபலத் தெடுத்த தரவம்' என்றார். 'உபயபலம்' என்றது சோழர் படை, கலிங்கர் படைகளை யென்க. இருவரும் பொருது வீழ்தலை இருவருந் தபுநிலை என்ப. 'பொருபடை களத்தவிய இரு வேந்தரு மிகலவிந்தன்று' [புறப்-வெ-மா-௩௩-௮] என்றமையும், 'இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்' [தொல்கா-புறத்-௧௭] என்னும் சூத்திரத்தினிற்றில், 'இனித் தலைவரே யன்றிப் பிறரும் அவ்வாறு பொரினும் அப்பாற் படுத்துக' என நச்சினார்க்கினியர் கூறியுள்ளமையும் இங்குக் கவனிக்க. (௩௯)

வீரர் யானை வீரரோடு மலைந்தமை

௪௪௦. பொருநர்கள் சிலர்தமு ரத்தி னிற்கவிழ்
புகர்முக மிசையடி யிட்ட திற்பகை
விருதரை யரிவர்சி ரத்தை யச்சிரம்
*விழுபொழு தறையெனு மக்க ளிற்றையே.

ப - ரை :—பொருநர்கள் சிலர் - போர் வீரர்களில் சிலர், தம் உரத்தினில் கவிழ் - தமது மார்பில் (தாக்குவதற்கு) குனிந்த, புகர் முகம் மிசை - யானைகளின் மேல், அடி இட்டு - (தங்கள்) கால்களை வைத்தேறி, அதின் - அந்த யானைகளின் மீதுள்ள, பகை விருதரை - பகை வீரர்களின், சிரத்தை அரிவர் - தலைகளை அறுப்பார்கள், அ சிரம் - அந்தத் தலைகளானவை, விழு பொழுது - (நிலத்தில்) விழும்போது,

அ களிற்றை - (தாம் இருந்த) அந்த யானைகளை, அறை எனும் - (பகை வீரர்களை) தாக்கிக் கொல் என்று சொல்லும்.

வி - ரை :—சில வீரர்கள் தம்மைத் தாக்க வந்த யானைகளின் மேலேறி, அவைகளின்மேலுள்ள தங்கள் பகைவர் தலைகளை வெட்ட, அந்தலைகள் தங்கள் யானைகளை நோக்கித் தம் பகைவரைக் கொல்லுமாறு கூறின வென்க. புகர் முகம்—புள்ளிகளையுடைய முகத்தை யுடையது. 'விருதரைச் சிரத்தை யரிவர்' என்றது 'யானையைக் கோட்டைக் குறைத்தான்' [தொல்கா-சொல்-அஅ-சேனாவ] என்பதுபோல வந்தது.

பா - பே :—* விழுபொழு திடையெனு மக்களி னத்தையே. (கூஎ)

**ஆயுதமற்றோர் பரியோடு பொருதமை**

சசக. விடுபடை பெறுகிலர் மற்றி னிச்சிலர்
விரைபரி விழவெறி தற்கு முற்பட
அடுகரி நுதற்பட விட்ட கைப்படை
அதனையோர் நொடிவரை யிற்ப றிப்பரே.

ப - ரை :—இனி மற்று சிலர் - இனி வேறு சில வீரர்கள், விரை பரி - வேகமா யோடுங் குதிரைகளை, விழ எறிதற்கு - (நிலத்தில்) விழும்படி கொல்வதற்கு, விடு படை பெறுகிலர் - (அவைகளின் மேல்) விடும் ஆயுதங்களைப பெறாதவராய், முன் பட - முன்பு சாகும்படி, அடு கரி நுதல் - (பகைவரை) கொல்லும் யானைகளின் நெற்றியில், பட விட்ட - அழுந்தும்படி விட்ட, கை படை அதனை - (தங்கள்) கையாயுதங்களை, ஓர் நொடி வரையில் - ஒரு நொடிப் போதில், பறிப்பர் - பிடுங்குவார்கள்.

வி - ரை :—ஆயுதமில்லாத வீரர் சிலர் முன்பு யானைமேலெறிந்த தங்கள் ஆயுதங்களைக் குதிரைமே லெறியப் பறிப்ப ரென்பதாம். பெறுகிலர்—முற்றெச்சம். படையதனை—அது பகுதிப்பொருள் விகுதி; அன்—சாரியை. (கூஅ)

**வீரர் போரில் அஞ்சினரைக் கண்டு நாணல்**

சசஉ. அமர்புரி தமதக லத்தி டைக்கவிழ்
அடுகரி நுதலில டிப்ப ரிக்களி
றெமதென விருகண்வி ழிக்க வுட்கினர்
எனவிடு கிலர்படை ஞர்க்கு வெட்கியே.

ப - ரை :—அமர் புரி - போரைப் புரிகின்ற, தமது அகலத்து இடை - தமது மார்பில், கவிழ் - (தாக்குதற்கு) குனிந்த, அடு கரி - கொல்லும் யானைகளின், நுதலில் அடிப்பர் - முகத்தில் (தண்டாயுதத்தால் சிலர்) அடிப்பார்கள், இ களிறு - (அவ்வாறு அடிக்குங்கால் அந்த யானைமே லிருப்பவர்) இந்த யானைகள், எமது என - எம்முடையவை என்று சொல்லி, இரு கண் விழிக்க - (தங்கள்) இரண்டு கண்களைத் திறந்து பார்க்கவும், உட்கினர் என - பயந்தார்களென்று, படைஞர்க்கு - (தம் போன்ற) படை வீரர்களுக்கு, வெட்கி - வெட்கங்கொண்டு, விடுகிலர் - (அவர்கள்மேல் ஆயுதங்களை) விட்டாரல்லர்.

வி - ரை :—சில வீரர்கள் போரி லஞ்சிக கண்ணிமைத்தவர்களைக் கண்டு, அவர்கள்மேல் படை வழங்க நாணின ரென்பதாம். யானைகளைப் புடைத்த வளவில், அவைகளின்மேலுள்ள வீரர்கள் கண்மூடிக் கொண்டதனால் அவர்கள் அச்சத்தின் மிகுதியும், 'இக்களிறு எமது' என்றதனால், அவர்கள் குறையிரந்

தமையும் விளங்கும். 'எந்தறன் கண்கள் வெய்ய விமைத்திட வெறித லோம்பி, நாந்தக வுழவ ஞணி நக்குநீ யஞ்சல் கண்டாய், காய்ந்திலேன்' [சீவகசி-௨௨௫௮] என்றமை இங்குக் கவனிக்க. இது வஞ்சித் தழிஞ்சியின்பாற்படும். இதனை "அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சா, கழிதறு கண்மை காதலித் துரைத் தன்று' [புறப்-வெ-மா-௫] என்றதனு லறிக. விழிக்க—இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ௪௨௯-ம், தாழிசை முதல் இத்தாழிசை வரையில் வீரச்சுவை செறிந்துள்ளமை காண்க. (௩௧)

கருணாகரன் போரில் முனைதல்

௪௪௩. அலகில் செருமுதிர் பொழுது வண்டையர்
அரச னரசர்க ளுதன் மந்திரி
உலகு புகழ்கரு ணுக ரன்றன
தொருகை யிருபணை வேழ முந்தவே.

ப - ரை:—அலகு இல் - அளவில்லாத, செரு முதிர் பொழுது - போர் மிகுந்த காலத்தில், வண்டையர் அரசன் - வண்டை நகரிலுள்ளவர் களுக்கு அரசனும், அரசர்கள் நாதன் - அரசர்களுக்குத் தலைவனாகிய முதற் குலோத்துங்கனுக்கு, மந்திரி - மந்திரியுமாகிய, உலகு புகழ் கருணாகரன் - உலகத்தாரால் புகழப்படும் கருணாகரத் தொண்டைமான், தனது——, ஒரு கை - ஒரு துதிக்கையையும், இரு பணை - இரண்டு கொம்புகளையுமுடைய, வேழம் உந்த - யானையை (போரில்) செலுத்த,

வி - ரை:—கருணாகரன் போரில் முனைந்து தன் யானையைப் பகைவர்மேல் செலுத்தினனென்பதாம். ஒருகை யிருபணை—முரண் தொடை. (௪0)

இருவகைப் படைகளும் வெற்றி காண போர் புரிந்தன

௪௪௪. உபய பலமும்வி டாது வெஞ்சமம்
உடலு பொழுதினில் வாகை முன்கொள
அபயன் விடுபடை யேழ்க லிங்கமும்
அடைய வொருமுக மாகி முந்தவே.

ப - ரை:—உபய பலமும்-இரண்டு சேனைகளும், விடாது - (ஊக்கம்) தளராமல், வெம் சமம் - கொடிய போரை, உடலு பொழுதினில் - கோபித்துச் செய்யுங் காலத்தில், அபயன் விடு படை - (முதற் குலோத் துங்க) சோழன் அனுப்பிய சேனைகளும், ஏழ் கலிங்கமும் - ஏழு பிரிவு களையுடைய கலிங்க நாட்டுச் சேனைகளும், வாகை - வெற்றி மாலையை, முன் கொள - (தாம் தாம்) முதலில் (புனைந்து) கொள்ள, அடைய ஒரு முகம் ஆகி-எல்லாம் ஒன்றாகத் திரண்டு, முந்த-முற்பட்டுப் போர் செய்ய,

வி - ரை:—கருணாகரன் முனைந்து தன் யானையைக் கடாவவே, கலிங்கர் களும் போரில் முனைந்தன ரென்பதாம். 'உபய பலமும்......உடலு பொழு தினில்' என்றதனால், இதுகாறும் இருவகைச் சேனைகளும் வெற்றியுந் தோல்வியு மின்றிச் சமமாய்ப் போர் புரிந்தமை விளங்கும். வாகை—வாகை யென்னு மலராலாகிய மாலை; இதனை வெற்றியுற்றோ ரணிவது பண்டைய வழக்காம். இதனை, 'இலைபுனை வாகை சூடியிகன் மலைந்து, அலைகடல் தானை யரசட்டார்த் தன்று' [புறப்-வெ-மா-௧௫] என்றதனு லறிக. இவ்வெற்றி மாலையைப் புனைய இருதிறத்து வீரர்களும் முற்பட்டுப் போர் புரியலாயின ரென்பதாம். கலிங்கம்—இடவாகு பெயர்; உடலு—உகரஞ் சாரியை. (௪௧)

யானை, குதிரை, தேர் அழிந்தமை

சசரு. அணிக ளொருமுக மாக வுந்தின
அமர ரமரது காண முந்தினர்
துணிகள் படமத மாமு றிந்தன
துரக நிரையொடு தேர்மு றிந்தவே.

ப - ரை :—அணிகள் - (இருதிறத்து) படை வகுப்புக்களும், ஒரு முகம் ஆக - ஒன்று சேரும்படி, உந்தின - செலுத்தப்பட்டன, அமர் அது காண - அந்தப் போரைப் பார்க்க, அமரர் முந்தினர் - தேவர்களும் முற்பட்டு வந்தார்கள், மதம் மா - மதத்தைப் பொழியும் யானைகள், துணிகள் பட - (பல) துண்டுகளாகும்படி, முறிந்தன - வெட்டுண்டன, துரகம் நிரையொடு - குதிரைக் கூட்டங்களும், தேர் (நிரையொடு) - தேர்க்கூட்டங்களும், முறிந்த - சிதைந்து போயின.

வி - ரை :—இருபுறச் சேனையிலும் அளவற்ற யானைகளும் தேர்களும் குதிரைகளும் அழிந்தன வென்பதாம். 'அமர ரமரது காண முந்தினர்' என்றது போரின் கொடுமையை விளக்கினது. உந்தின—செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. அமரர்—இதில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. நிரையொடு—ஒடு எண்ணிடைச்சொல்.

(சசங) வேழ முந்த (சசச) ஆகி முந்த (சசரு) உந்தின, முறிந்த என முடிக்க. (சஉ)

காலாட்படையின் அழிவு

சசசு. விருத ரிருதுணி பார்நி றைந்தன
†விடர்க டலைமலை யாய்நெ ளிந்தன
குருதி குரைகடல் §போற்ப ரந்தன
குடர்கள் குருதியின் மேன்மி தந்தவே.

ப - ரை :—விருதர் - (பல) வீரர்களின், இரு துணி - (உடலின்) இரண்டு துண்டுகள், பார் நிறைந்தன - பூமியில் நிரம்பின, விடர்கள் தலை - (வேறு பல) வீரர்களின் தலைகள், மலை ஆய் நெளிந்தன - மலைகள் போல் உருண்டன, குருதி - (அவர்கள்) இரத்தம், குரை கடல் போல் - ஒலிக்குங் கடலைப்போல், பரந்தன - (எங்கும்) பரவின, குருதியின் மேல் - (அந்த) இரத்த வெள்ளத்தில், குடர்கள் மிதந்த - (வீரர்களின்) குடல்கள் மிதக்கலாயின.

வி - ரை :—முன் தாழிசையில் யானை, தேர், குதிரைகள் அழிந்தமை கூறி, இதில் காலாட் படையின் அழிவைக் கூறினர். 'அலைமி தந்தன குருதி யின் பெருங்கட லரக்கர், தலைமி தந்தன' [கம்பரா-கரன்வதை-அச) என்றார் கம்பரும். மலையாய், ஆய்—உவம வுருபிடைச் சொல்.

பா-பே:—† உடல் கடலைமலை வான் வளர்ந்தன, § போற் பொலிந்தன. (சங)

போரின் கொடுமை

சசஎ. கரிகள் கருவிக ளோடு சிந்தின
கழுகு ‡நரியொடு காக முண்டன
திரைக டிசைமலை யோட டர்ந்தன
திமில் குமிலமெ ல்லாம்வி ளைந்தவே.

ப - ரை :—கரிகள் - யானைகள், கருவிகளோடு - (தங்கள்) கூட்டங்களோடு, சிந்தின - (உயிர்) நீங்கின, கழுகு நரியொடு காகம் - கழுகுகளும் நரிகளும் காகங்களும், உண்டன - (போரில் மடிந்த பிராணிகளின் உடலை)

புசித்தன, திரைகள் - (குருதியின்) அலைகள், திசை மலையோடு - (எட்டு) திக்குகளிலுமுள்ள மலைகளுடன், அடர்ந்தன - (சென்று) நெருங்கின, திமிலம் குமிலம் எலாம் - (பலவகை) பேரொலிகளெல்லாம், விளைந்த - உண்டாயின.

வி - ரை :—சருவி—கூட்டம்; இதனை, 'கருவி வானந் தலைஇ யாங்கு' [புறநா-கடுசு] எனவும், 'கருவி வானந் துளிசொரிந் தாங்கு' [பெரும்பா-உச] எனவும் வருமாற்றா னறிக. திமில குமிலம்—ஒருபொருட் பன்மொழி போர் வீரரார்ப்பு, சாகும் நிலையிலுள்ள உயிர்களின் துன்பொலி, நரி, கழுகு முதலிய பிராணிகளின் ஓசை முதலியவற்றைக் கருதி, 'திமில குமிலம்' என்றார். திசை மலைகளை உ0௩-ம், தாழிசையிற் காண்க. பா - பே :—‡ நிரையொடு. (சச)

கலிங்கவேந்தன் ஒதுங்கியமை

சசஅ. புரசை மதமலை யாயி ரங்கொடு
பொருவ மெனவரு மேழ்க லிங்கர்தம்
அரச னுரைசெய்த வண்மை யுங்கெட
அமரி லெதிர்விழி யாதொ துங்கியே.

ப - ரை :—புரசை - (கழுத்திற் கட்டிய) கயிற்றையுடைய, ஆயிரம் மதம் மலை கொடு - ஆயிரம் மத யானைகளைக்கொண்டு, பொருவம் - (நாம் கருணாகரனோடு) போர் செய்வோம், என வரும் - என்று வந்த, ஏழ கலிங்கர் தம் அரசன் - ஏழு பிரிவுகளையுடைய கலிங்கநாட்டி லுள்ளவர் களுக்கு அரசனாகிய அனந்த பத்மன், உரை செய்த - (தான் முன்பு) சொல்லிய, ஆண்மையும் கெட - (தனது) வீரம் அழியும்படி, அமரில் எதிர் விழியாது - போரில் (கருணாகரனுக்கு) எதிரில் விழித்து நில்லாமல், ஒதுங்கி - மறைந்து,

வி - ரை :—அனந்தபத்மன் போரில் தோற்றோடினான் என்பதாம். அனந்த பத்மன் மொழிந்த வண்மை யுரைகளை ௩கூ0-ம், தாழிசை முதல் ௩கூ௩-ம் தாழிசை வரையில் காண்க. 'விழியாது ஒதுங்கி' என்றதனால், போரில் அனந்த பத்மன் எய்திய அச்சமு நாணமும் விளங்கும். மத மலை—அடையடுத்த உவமையாகு பெயர்.

கலிங்கப்போர் கி. பி. ககககக அல்லது கககஉ-ல், நிகழ்ந்ததாம். அனந்த பத்மன் கி. பி. க0எஅ முதல் ககசஉ அல்லது ககசசு வரை ஆட்சி புரிந்தான். [H. I. S. I. பக்-கூ, ௩டுஅ] என்றமையால், இவன் கலிங்கப் போருக்குப் பின், தன் பாட்டனாகிய முதற் குலோத்துங்கன் அருளால் மீண்டும் அரசுரிமை யெய்திப் பல்லாண்டுகளளவும் செங்கோல் செலுத்தினா னென்பது விளங்கும். இவன் வரலாற்றை ௩உஎடு-ம், தாழிசையிற் காண்க. (சகு)

அனந்தபத்மன் போரினின்று மறைவு

சசகூ. அறியு முழைகளி லோபது ங்கிய
தரிய பிலனிடை யோம றைந்தது
செறியு மடவியி லோக ரந்தது
தெரிய வரியதெ னுவ டங்கவே.

ப - ரை :—பதுங்கியது - (கலிங்க வேந்தன்) ஒளிந்து கொண்டது, அறியும் முழைகளிலோ - (அவன் முன்பே) அறிந்திருக்கும் குகை களிலோ, மறைந்தது - (அவன்) மறைந்து கொண்டது, அரிய பிலன் இடையோ - (பிறர் காண) முடியாத கீழறைகளிலோ, கரந்தது - (அவன்) ஒளிந்து கொண்டது, செறியும் அடவியிலோ - (மரங்கள்) அடர்ந்த

காடுகளிலோ, தெரிய - (இதனை) தெரிந்து சொல்ல, அரியது என - முடியாது என்று, அடங்க - (அவன் அவைகளில் ஒன்றில்) பதுங்கி இருக்க,

வி - ரை :—கலிங்க வேந்தன் மறைந்த விடம் கண்டறிய முடியவில்லையென்பதாம். பிலம்—கீழறை ; 'பிலங் கீழறை' [சூடாம-ரு-கச] என்றமை காண்க. பிலன்—இது பிலம் என்பதன் போலி. ஓகாரம் மூன்றும் ஐயப் பொருளில் வந்தன. (சகூ)

கலிங்கவீரர் நடுக்கம்

சரு0. எதுகொ லிதுவிது மாயை யொன்றுகொல்
எரிகொன் மறலிகொ லூழி யின்கடை
அதுகொ லெனவல று*வி ழுந்தனர்
அலதி குலதியொ டேழ்க லிங்கரே.

ப - ரை :—இது - (சோழ வீரர் புரியும்) இப்போர், மாயை ஒன்று கொல் - ஒரு மாய வித்தையோ, எரி கொல் - (நாற்புறமும் சூழ்ந்து எரிக்கும்) நெருப்போ, மறலி கொல் - (உயிர்களை யழிக்கும்) யமனோ, ஊழியின் கடை அது கொல் - யுகத்தின் முடிவோ, இது எது கொல் - இது யாதோ என - என்று சொல்லி, ஏழ் கலிங்கர் - ஏழு பிரிவுகளையுடைய கலிங்க நாட்டிலுள்ளவர்கள், அலதி குலதியொடு - மிக்க நடுக்கத்துடன், அலறு விழுந்தனர் - கதறி விழுந்தார்கள்.

வி - ரை :—கலிங்க வீரர் பெரிதும் நடுங்கின ரென்பதாம். அரசனே அஞ்சிப் பதுங்கிக் கொண்டமையாலும் கலிங்க வீரர் பலர் அழிவெய்தினமையாலும், எஞ்சியுள்ள வீரர் நடுங்கின ரென்க. சோழவீரர் புரியும் போரின் வன்மையை வியந்து, 'இது மாயைகோல்' எனவும், அவர்கள் விடுங் கூரிய கணைகள் எங்குஞ் சூழ்ந்து எரித்தலால், 'எரிகோல்' எனவும், அவர்கள் கலிங்க வீரர் உயிரை மிக்க எளிதில் கவர்தலால், 'மறலிகோல்' எனவும், போர்க்களமுழுதும் பிணக் குவியல் மலிந்து கிடந்தமையால், 'ஊழியின் கடைகோல்' எனவும், இன்னதுதா னெனத் துணிந்துரைக்க வியலாமையால், 'இது எது கோல்' எனவு மொழிந்து கலிங்க வீரர் பெரிதும் வெருவலாயினர். கொல்—இவை யனைத்தும் ஐயப்பொருளில் வந்தன. பா-பே:—*இரிந்தனர் அலதிகலதி.

(சசஅ) அரசன், ஒதுங்கி (சசகூ) அடங்க (சரு0) ஏழ் கலிங்கர், அலறு விழுந்தனர் என முடிக்க. (சஎ)

கலிங்கவீரர் தோற்றோடல்

சருக. வழிவர் சிலர்கடல் பாய்வர் வெங்கரி
மறைவர் சிலர்வழி தேடி வன்பிலம்
இழிவர் சிலர்சிலர் தூறு மண்டுவர்
இருவ ரொருவழி ‡போக லின்றியே.

ப - ரை :—இருவர் ஒரு வழி - (கலிங்க வீரர்களில்) இருவர் ஒரே வழியில், போகல் இன்றி - போகாமல், சிலர் வழிவர் - சிலர் ஓடுவார்கள், கடல் பாய்வர் - (சிலர்) கடலில் தாவிக் குதிப்பார்கள், சிலர் வெம் கரி மறைவர் - சிலர் கொடிய யானைகளின் வயிற்றில் (புகுந்து) மறைவார்கள், சிலர் வழி தேடி - சிலர் (தாம் செல்லும்) வழிகளைத் தேடி, வன் பிலம் இழிவர் - (அவ்வழிகளில் மேலும் செல்ல அஞ்சி) வலிய குகைகளில் இறங்குவார்கள், சிலர் தூறு மண்டுவர் - சிலர் புதர்களில் நெருங்கிப் பதுங்குவார்கள்.

வி - ரை :—கலிங்க வீரரனைவரும் தோற்றேடின ரென்பதாம். வெங்கரியின் மறைதலாவது :—'கடகரி வயிற்றில், புண்டிறந்தமா முழையிடை வாளொடும் புகுவார்' [கம்பரா-கர்ன்வ-கச0] என்றபடி, பிளவுண்டு கிடக்கும் யானைகளின் வயிறுகளில் நுழைந்து மறைதலாம். கரிகளின் பிணக் குவியலில் மறைந்தன ரெனினுமாம். 'இருவ ரொருவழி போகவின்றி' என்றதனல், கலிங்க வீரர்கள் கொண்ட அச்சத்தின் மிகுதியும் அவர்கள் நாற்றிசையுஞ் சிதறியோடினமையும் விளங்கும். 'இருவரொரு நீணெறி யியங்கலர்' [வில்லிபா—மணிமான்-சசு] என்றமையு மிங்குக் கவனிக்க. கரி—முதலாகு பெயர்.

பா - பே :—‡ போதலின்றி. (சஅ)

இதுவுமது

சருஉ. ஒருவ ரொருவரி னோட முந்தினர்
உடலி னிழலினை யோட வஞ்சினர்
‡ அருவர் வருவரெ னவி றைஞ்சினர்
அபய மபயமெ னாந டுங்கியே.

ப - ரை :—ஒருவரின் ஒருவர் - (கலிங்க வீரர்கள்) ஒருவரை விட மற்றொருவர், ஓட முந்தினர் - (தப்பி) ஓட முந்தினவராய், உடலின் நிழலினை - (தம்மைத் தொடர்ந்து வரும் தம்முடைய) உடம்பின் நிழலையே, வருவர் அருவர் என - (தம்மைத் தொடர்ந்து) வருவோர் தமிழரென்று நினைத்து, ஓட அஞ்சினர் - ஓடுதற்குப் பயந்தவராய், அபயம் அபயம் என - (உங்களுக்கு) அபயம் அபயம் என்று, நடுங்கி இறைஞ்சினர் - பயந்து வணங்கினர்கள்.

வி - ரை :—கலிங்க வீரர் தம்முடைய நிழலையே தம் பகைவரெனக் கருதி நடுங்கின ரென்பதாம். இதனல் அவர்கள் அளவற்ற அச்சமடைந்தன ரென்பது விளங்கும். அருவரென்பது தமிழரைக் குறிக்கு மெனவும், அது தற்போது அரவரெனத் திரிந்ததெனவுங் கூறுவர். ஒருவரின்—இன்- ஐந்தாம் வேற்றுமை எல்லைப் பொருள்; முந்தினர், அஞ்சினர்—முற்றெச்சங்கள்.

பா - பே :—‡ அருவரருவரெ னவிரந்தனர். (சகூ)

முழைகளில் மறைதல்

சருரு. மழைக ளதிர்வன போலு டன்றன
வளவன் விடுபடை வேழ மென்றிருண்
முழைக ளுழைவர்கள் போரி லின்றுநம்
முதுகு செயுமுப கார மென்பரே.

ப - ரை :—வளவன் விடு - (முதற் குலோத்துங்க) சோழன் ஏவிய, படை வேழம் - சேனையிலுள்ள யானைகள், மழைகள் அதிர்வன போல் - மேகங்கள முழங்குவன போல், உடன்றன என்று - (வீறிட்டு) கோபித்தெழுந்தன வென்று சொல்லி, இருள் முழைகள் - இருளையுடைய குகைகளில், நுழைவர்கள் - (கலிங்க வீரர்) புகுவார்கள், போரில் - (அவ்வாறு நுழைபவர் இந்த) போரில், இன்று - இப்போது, நம் முதுகு - நம்முடைய முதுகுகள், செயும் உபகாரம் - செய்த உதவியாம், என்பர் - என்று சொல்வார்கள்.

வி - ரை :—கலிங்க வீரர்கள் முதற் குலோத்துங்கன் யானைப்படைக் கஞ்சிக் குகைகளில் புகுந்து கொண்டன ரென்பதாம். 'முதுகு செயும் உபகாரம்' என்றது, முதுகு காட்டி யோடினமையால் அவர்கள் உயிர் பிழைத்தன ரென்பதாம். இந்நான்கு தாழிசைகளிலும் அச்சச்சுவை யுள்ளமை காண்க.

கலிங்கர் தாம் பிழைத்தன்மையை இயல்பாய்க் கூறாமல், 'முதுகுசெயு முபகாரம்' என வேறு வகையாய்க் கூறினமையால், இது பிறிதினவிற்சியணியாம். இதில் உவமையணியும் உள்ளமை காண்க. (௵)

இதுவுமது

சஙச. *ஒருக லிங்கமொ ருவன ழித்தநாள்
ஒருக லிங்கமொ ருவரு டுத்ததே.

ப - ரை :—ஒருவன் - ஒப்பற்ற வீரனாகிய கருணாகரன், ஒரு கலிங்கம் - ஒப்பற்ற கலிங்க நாட்டை, அழித்த நாள் - அழித்த காலத்தில், ஒருவர் உடுத்தது - (கலிங்க வீரர்) ஒவ்வொருவரும் அணிந்தது, ஒரு கலிங்கம் - ஒரே ஆடையாம்.,

வி - ரை :—கலிங்கர் மேலாடை வீழ்ந்ததையுங் கவனியாது உயிர் பிழைக்க வோடினரென்பதாம். இத்தாழிசையில் யமகம் என்னும் சொல்லணி யுள்ளமை காண்க. இதில் கலிங்கர் தோற்றோடினமையை வேறு வகையாய்க் கூறி யிருத்தலால், இதுவும் பிறிதினவிற்சியணியாம்.

பா - பே :—* எழுகலிங்கமி றைவன். (௬௧)

சோழவீரர் யானை குதிரைகளைக் கவர்தல்

சஙரு. அப்படிக் கலிங்க ரோட †வடர்த்தெறி சேனை வீரர்
கைப்படு களிறு மாவுங் கணித்துரைப் பவர்கள் யாரே.

ப - ரை :—கலிங்கர் - கலிங்க வீரர்கள், அப்படி ஓட் - அவ்வாறு ஓடும்படி, அடர்த்து எறி - (அவர்களை) நெருக்கிக் கொன்ற, சேனை வீரர் - (கருணாகரன்) படை வீரர்களின், கை படு - கையிலகப்பட்ட, களிறும் - யானைகளையும், மாவும் - குதிரைகளையும், கணித்து உரைப்பவர்கள் யார் - அளவிட்டுச் சொல்பவர்கள் யார், (ஒருவருமிலர் என்பதாம்.)

வி - ரை :—சோழ வீரர்கள் அளவற்ற யானைகளையும் குதிரைகளையுங் கவர்ந்தனரென்பதாம். பா - பே :—† அடர்த்தெழு. (௬௨)

கைப்பட்ட களிறுகளின் நிலை

சஙசு. புண்டரு குருதி பாயப் பொழிதரு கடமும் பாய
வண்டொடும் பருந்தி னோடும் வளைப்புண்ட களிற நேகம்.

ப - ரை :—புண் தரு - புண்களிலிருந்து வருகின்ற, குருதி பாய - இரத்தம் பெருகவும், பொழி தரு - (கன்னங்களிலிருந்து) பொழிகின்ற, கடமும் பாய - மதநீர் பெருகவும், வண்டொடும் - வண்டுகளோடும், பருந்தினோடும் - பருந்துகளோடும், வளைப்புண்ட - சூழ்ந்து பிடிக்கப் பட்ட, களிறு அநேகம் - யானைகள் பலவாம்.

வி - ரை :—சோழ வீரர் பின்னும் பல யானைகளைக் கவர்ந்தனரென்பதாம். 'புண்டரு குருதி' என்றது, வாள், வேல், அம்பு முதலியவைகளால் உண்டான புண்களிலிருந்து பெருகும் உதிரத்தை; வண்டுகள் யானைகளின் மத நீரையும், பருந்துகள் அவைகளின் குருதியையும் பருகத் தொக்கன வென்க. (௬௩)

இதுவுமது

சஙஎ. ஓட்டறப் பட்ட போரி §லூர்பவர் தம்மை வீசிக்
கட்டறுத் தவர்போ னின்று கட்டுண்ட களிற நேகம்.

ப - ரை :—ஓட்டு அற - படை வகுப்புக் குலையும்படி, பட்ட போரில் - (கலிங்க வீரர்) இறந்து பட்ட போர்க்களத்தில், ஊர்பவர் தம்மை வீசி - (தம்மை) செலுத்தும் பாகர்களை வீசியெறிந்து, கட்டு

அறுத்தவர் போல் - பந்தங்களை யொழித்த யோகிகளைப்போல், நின்று - (தாமிருந்த விடத்தை விட்டுப் பெயராமல்) நின்று, கட்டுண்ட - (சோழ வீரர்களால்) பிணிக்கப்பட்ட, களிறு அநேகம் - யானைகள் பலவாம்.

வி - ரை :—இனிப் போர் புரிவதால் பயனில்லை யெனக் கருதிய யானைகளைப் போர் புரியுமாறு பாகர்கள் செலுத்தினமையால், அவை அவர்களை வீசிக் கொன்றன வென்க. மத மயக்கத்தால் அவ்வாறு புரிந்தன வெனினுமாம். யோகிகள் தமது மனத்தை ஒரே வழியிற் செலுத்தித் தாமிருக்கு மிடம் விட்டுப் பெயராமலிருத்தல் போல், யானைகளும் செயலற்று நின்றன வென்க. இதில் உவமையணி யிருத்தல் காண்க. பா - பே :—§ உகைப்பவர். (௫௪)

இதுவுமது

சருஅ. வரைசில புலிக ளோடு வந்துகட் டுண்ட வேபோல்
அரைசருந் தாமுங் கட்டுண் டகப்பட்ட களிற நேகம்.

ப - ரை :—சில புலிகளோடு - சில புலிகளுடன், வரை வந்து - மலைகளானவை வந்து, கட்டுண்டவே போல் - கட்டப்பட்டு அகப்பட்டவை போல, அரைசரும் தாமும் - அரசர்களும் தாமுமாய், கட்டுண்டு - கட்டப்பட்டு, அகப்பட்ட களிறு அநேகம் - கிடைக்கப்பெற்ற யானைகள் பலவாம்.

வி - ரை :—புலிகள் அரசர்களுக்கும் மலைகள் யானைகளுக்கும் உவமை; 'அசலமே யனைய திக்கிலானை' [தக்கயா-௭௩௫] எனவும், 'மலையொத் ததிருங் கடகளிறும்' [வில்லிபா-௩-ம், போர்-௧௩] எனவும், 'பொருப்புறழ் களிறும்' [உத்தரகா-திக்குவிச-௧௧௩] எனவும் வருவதனுல் மலைகள் யானைகளுக் குவமையாமாறறிக. 'தாமும்' என்றது இங்கு யானைகளை. சருரு-ம் தாழிசை முதல் இந்நான்கு தாழிசைகளிலும் கருணாகரன் அளவற்ற யானைகளைக் கவர்ந்தமை கூறினர். அரைசு—இது அரசு என்பதன் போலி இச்செய்யுள் இல்பொரு ளுவமையணியாம். இந்நான்கு செய்யுட்களும் யானை கைக்கோளாம் [தா - ௩அசு]. (௫௫)

சோழவீரர் பலவகைப் பொருள்கள் கவர்தல்

சருக. நடைவ யப்பரி யிரத மொட்டகம்
*நவநி திக்குல மகளிரென்
றடைவ வப்பொழு தவர்கள் கைக்கொளும்
அவைக ணிப்பது மருமையே.

ப - ரை :—அ பொழுது - (கருணாகரன் வெற்றி பெற்ற) அச்சமயத்தில், அவர்கள் - (அவன்) படை வீரர்கள், நடை - (மல்லகதி, மயூரகதி முதலிய) நடையினையும், வயம் பரி - வெற்றியையுமுடைய குதிரைகளையும், இரதம் - தேர்களையும், ஒட்டகம் - ஒட்டகங்களையும், நவநிதி - ஒன்பது வகையாகிய பொருட் குவியல்களையும், குலம் மகளிர் - உயர்குலப் பெண்களையும், என்ற அடைவ-என்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும், கை கொளும் அவை - (அவர்கள்) கைப்பற்றிய அவற்றை, கணிப்பதும் அருமை - அளவிட்டுச் சொல்லுவதும் முடியாததாம்.

வி - ரை :—கலிங்க நாட்டிலுள்ள பலவகைப் பொருள்களைச் சோழ வீரர் கவர்ந்தன ரென்பதாம். நவ நிதிகளாவன :—கச்சநிதி, கற்பநிதி, சங்கநிதி நந்தநிதி, நீலநிதி, பதுமநிதி, மகாநிதி, மகாபதுமநிதி, முகுந்தநிதி என்பன. இவை தேவலோகத்தி லுள்ளனவாம். கருணாகரன் கலிங்க நாட்டிலுள்ள

விலையுயர்ந்த பொருள்கள் பலவற்றைக் கவர்ந்தா னென்பது இதன் கருத்தாம். தலமகளிரைக் கைப்பற்றலை சo—ந-உகூ-ம், தாழிசைகளில் காண்க. என்றடைய — நிலைமொழியில் அகரந் தொக்கு நின்றது. அடைய—வினையாலணையும் பெயர். 'நடை வயப்பரி......குலமகளிர்......அவை' என்றது திணை விரவி மிகுதிபற்றி அஃறிணை முடிபேற்றது [நன்-ஙஎஅ]. பா-பே:—* நவநிதிக் குவை.

**கருணாகரன் கட்டளை**

சசு0. இவைக வர்ந்தபி னெழுக லிங்கர்தம்
இறையை யுங்கொடு பெயர்துமென்
றவனி ருந்துழி யறிக வென்றனன்
அபயன் மந்திரி முதல்வனே.

ப - ரை :—அபயன் - (முதற் குலோத்துங்க) சோழனுடைய, மந்திரி முதல்வன் - மந்திரிகளில் முதன்மையானவனாகிய கருணாகரன், இவை கவர்ந்த பின் - (குதிரை, தேர் முதலிய) இவைகளைக் கைப்பற்றின பின், எழு கலிங்கர் தம் இறையையும் - ஏழு பிரிவுகளையுடைய கலிங்க நாட்டிலுள்ளவர்களுக்கு அரசனாகிய அனந்த பத்மனையும், கொடு பெயர்தும் என்று - பிடித்துக்கொண்டு செல்வோமென்று கருதி, அவன் இருந்த உழி - அவனிருக்கு மிடத்தை, அறிக என்றனன் - அறிவீராக என்று (ஒற்றர்களுக்கு) கட்டளையிட்டான்.

வி - ரை :—அனந்த பத்மனைப் பிடித்துச் செல்லக் கருதிக் கருணாகரன் அவனிருக்கு மிடத்தைக் கண்டறியுமாறு ஒற்றர்களுக்குக் கட்டளை யிட்டனனென்பதாம். 'மதமலைகள் கொண்டணைமின், அவனையுங் கொணர்மின்' [தா-ஙசo] என முதற் குலோத்துங்கன் கட்டளை யிட்டமையால், கருணாகரன் முதலில் யானைகளைக் கைப்பற்றிய பின், அனந்த பத்மனையுந் தேடி வருமாறு ஒற்றர்களுக் குரைத்தன னென்க. (நஎ)

**ஒற்றர் அனந்தபத்மனைத் தேடினமை**

சசுக. உரைகள் பிற்படு மளவி லொற்றர்கள்
ஒலிக டற்படை கடிதுபோய்
வரைக ளிற்புடை தடவி யப்படி
வனமி லைப்புரை தடவியே.

ப - ரை :—உரைகள் பின் படும் அளவில் - (கருணாகரன் சொன்ன) சொற்கள் பின்னாகுமாறு, ஒலி கடல் - ஒலிக்குங் கடல் போன்ற, ஒற்றர்கள் படை - வேவுகாரர்களின் கூட்டம், கடிது போய் - விரைந்து போய், வரைகளின் புடை தடவி - மலைகளின் பக்கங்களில் தேடி, அப்படி - அதுபோலவே, வனம் - காடுகளினும், இலைப்புரை தடவி - சிறிதிடமும் விடாமல் (எங்கும்) தேடி,

வி - ரை :—கருணாகரன் கட்டளை யிட்டதும், பல ஒற்றர்கள் மலைகளிலும் காடுகளிலும் கலிங்க வேந்தனைத் தேடிச் சென்றன ரென்பதாம். 'உரைகள் பிற்படு மளவில்' என்றது கருணாகரன் சொல்லி முடிக்கு முன்பே யென்க; மிக்க விரைவா யென்றபடி. 'இலைப்புரை தடவி' என்றதற் கேற்ப, 'ஈட்டமும் வேறு மாகி யிலைப்புரைக் கிளைத்திட் டோமே' [சீவகசி-கஎசக] என்றமை இங்குக் கவனிக்க. ஒற்றர்—தனித்துச் செல்வோர்; இது ஒன்று என்னும் எண்ணினடியாய்ப் பிறந்த பெயர்; ஒன்று + அர்; நிலைமொழியிலுள்ள உகரங் கெட்டு மெல்லொற்று வல்லொற்றாகத் திரிந்தது. கடற்படை—உவமைத் தொகை; கடிது—குறிப்பு முற்றெச்சம். இதில் காரிய முன்னும் காரணம்

பின்னும் நிகழ்ந்தனவாய்க் கூறியிருத்தலால், இது மிகையுயர்வு நவிற்சி யணியாம். (அத்யாந்தாதிசயோக்தி யலங்காரம்.) (௫அ)

**ஒற்றர் கூற்று**

சசஉ. சுவடு பெற்றில மவனை மற்றொரு
சுவடு பெற்றன மொருமலைக்
குவடு பற்றிய தவன டற்படை
* அதுகு ணிப்பரி தெனவுமே.

ப - ரை:—அவனை சுவடு - அந்தக் கலிங்க வேந்தனுடைய (இருப்பிடத்தின்) அடையாளத்தை, பெற்றிலம் - (நாம்) காணப்பெறவில்லை, மற்று ஒரு சுவடு - (ஆனால்) வேறோர் அடையாளத்தை, பெற்றனம் - (நாம் காண) பெற்றோம், (அது யாதெனில்) அவன் அடல் படை - அவனுடைய வலிய சேனை, ஒரு மலை குவடு - ஒரு மலையின் சிகரத்தை, பற்றியது - தொடர்ந்து நின்றது, அது குணிப்பு அரிது - அந்தப் படையை அளவிட்டுச் சொல்லுதல் முடியாது, எனவும் - என்று (ஒற்றர்களில் சிலர்) சொல்லுதலும்,

வி - ரை:—கலிங்க வேந்தனிருக்குமிடம் தெரியாவிடினும், அவன் சேனைகள் ஒரு மலையைக் காத்து நிற்கின்றன வென ஒற்றர்கள் பேசிக்கொண்டனரென்பதாம். பா - பே:—* கொணர்க வப்பரி செனவுமே. (௫௯)

**கலிங்கவேந்தன் மறைந்திருந்த மலையை யணுகல்**

சசந. எக்குவடு மெக்கடலு மெந்தக் காடும்
இனிக்கலிங்கர்க் கரணுவ தின்றே நாளும்
அக்குவடு மக்கடலும் § வளைந்து வெய்யோன்
அத்தமனக் குவடணையு மளவிற் சென்றே.

ப - ரை:—இனி கலிங்கர்க்கு - இனிமேல் கலிங்க வீரர்களுக்கு, எ குவடும் - எந்த மலைகளும், எ கடலும் - எந்தத் தீவுகளும், எந்த காடும் - எந்தக் காடுகளும், அரண் ஆவது இன்று - பாதுகாப்பாகாது, (என்று ஒற்றர்கள் சொல்லி) அ குவடும் - (அவர்கள் மறைந்திருக்கும்) அந்த மலைகளையும், அ கடலும் - அந்தத் தீவுகளையும், நாளும் வளைந்து - பகல் முழுதும் சுற்றித் தேடி, வெய்யோன் - சூரியன், அத்தமனம் குவடு - அத்தமன மலையை, அணையும் அளவில் - சேரும் சமயத்தில், சென்று - (கலிங்க வேந்தன் மறைந்திருக்கும் அம்மலைக்கு) போய்,

வி - ரை:—ஒற்றர்கள் அனைவரும் கலிங்க வேந்தனைப் பல மலைகளிலும், தீவுகளிலும் காடுகளிலும் தேடிச் சென்று பின்பு அவ் வேந்தன் ஒளிந்திருக்கும் மலையை மாலைப்போதில் அணுகினரென்பதாம். போரில் புறங்காட்டி யோடிய கலிங்கர்கள் பதுங்கி யிருந்தவிடந் தெரியாமையால், ஒற்றர்கள் பல மலைகளையும் தீவுகளையுந் தேடிச் சென்றன ரென்க. கடல்—இடவாகு பெயராய்க் கடலிலுள்ள தீவுகளை யுணர்த்தினது. குவடு—சினையாகு பெயர்.

பா - பே:—§ அனைத்தும் வெய்யோன். (௬0)

**ஒற்றர் அத்தமன மலையைக் காத்தல்**

சசச. தோலாத களிற்றபயன் வேட்டைப் பன்றி
தொழுவடைத்துத் தொழுவதனைக் காப்பார்போல
வேலாலும் வில்லாலும் வேலி கோலி
வெற்பதனை விடியளவுங் காத்து நின்றே.

ப - ரை :—தோலாத - (போரில்) தோல்வி யடையாத, களிறு அபயன் - யானைப் படையையுடைய (முதற் குலோத்துங்க) சோழன், வேட்டை பன்றி - வேட்டையிற் பிடித்த (பெரிய) பன்றியை, தொழு அடைத்து - தொழுவத்தில் அடைத்து, தொழு அதனை - (அந்த) தொழுவத்தை, காப்பார் போல - (மிகவும் கருத்தாய்) காப்பவரைப் போல், வேலாலும் வில்லாலும் - (ஒற்றர்கள் தங்கள்) வேல்களினாலும் விற்களினாலும், வேலி கோலி - வேலியை வளைத்து, வெற்பு அதனை - (கலிங்க வேந்தன் பதுங்கியிருந்த) அந்த மலையை, விடி அளவும் - பொழுது விடியும் வரையிலும், காத்து நின்று - பாதுகாத்து நின்று,

வி - ரை :—கலிங்க வேந்தன் ஒளிந்திருந்த மலையை ஒற்றர்கள் பொழுது புலரு மளவும் மிகவுங் கருத்தாய்க் காத்திருந்த ரென்பதாம். பன்றி கலிங்க வேந்தனுக்கும் தொழுவம் மலைக்கும் உவமை. பன்றியைக் கலிங்க வேந்தனுக் குவமை கூறினமையால், இவ்வாசிரியர்க்குத் தம்மிறைவனிடத்துள்ள பற்றும், அவன் பகைவரிடத்துள்ள வெறுப்பும் நன்கு விளங்கும். 'அபயன்........ காப்பார் போல' என்றதனால், ஒற்றர்கள் அம்மலையை மிகவுங் கருத்தாய்க் காத்தமை புலப்படுகிறது. 'வேலாலும் வில்லாலும் வேலி கோலி' என்றதற் கேற்ப, 'வேலி யிட்ட தவர்க ளிட்ட வில்லும் வாளும் வேலுமே' [திருவரங்கலம்-ருகூ] என்றார் ஐயங்காரும். இச்செய்யுள் உவமை யணியாம். (சுக்)

**கலிங்கவீரர் அழிவு**

சுகரு. செம்மலையா யொளிபடைத்த தியாதோ வென்றுஞ்
செங்கதிரோ னுதயஞ்செய் துதய மென்னும்
அம்மலையோ விம்மலையு மென்னத் தெவ்வர்
அழிகுருதி நதிபரக்க வறுக்கும் போழ்தில்.

ப - ரை :—இ மலையும் - (கலிங்க வேந்தன் பதுங்கி இருக்கும்) இந்த மலையும், செம் மலை ஆய் - செந்நிறமுள்ள மலையாய், ஒளி படைத்தது - ஒளியைப் பெற்றது, யாதோ - யாது காரணமோ, செம் கதிரோன் - சிவந்த கிரணங்களையுடைய சூரியன், என்றும் - எந்நாளும், உதயம் செய்து - (காலையில்) தோன்றுதலால், உதயம் என்னும் - உதயமலை யென்று சொல்லப்படும், அ மலையோ - அந்த மலைதானோ, என்ன - என்று (கண்டோர்) சொல்லும்படி, தெவ்வர் - பகைவர்களின், அழி குருதி நதி - மிக்க இரத்தமாகிய நதி, பரக்க - (அம்மலையின் நாற்புறமும்) பரவும்படி, அறுக்கும் போழ்தில் - (கலிங்க வீரரைச் சோழ வீரர்கள்) அழிக்குங் காலத்தில்,

வி - ரை :—அனந்தபத்மன் மறைந்திருந்த மலையைக் காத்திருந்த கலிங்க வீரர்களில் பலரைச் சோழ வீரர்கள் கொன்றதனால், இறந்துபட்ட வீரர்களின் உதிரத்தால் அம்மலை சிவந்து தோன்றின தென்பதாம். அழி குருதி—மிக்க இரத்தம்; 'அற்றா ரழிபசி தீர்த்தல்' [திருக்கு-உஉரு] என்றமை காண்க. கலிங்க வீரர்களின் உதிரத்தால் சிவந்த மலையை, 'என்றுஞ் செங்கதிரோன்......இம் மலையும்' என்றது ஐய வணியாம்.

கலிங்க வேந்தனைப் பற்றிய செய்தி யொன்றும் இங்கு விளங்கவில்லை. அதனால் அவன் சோழவீரர் கைக்கு அகப்படாமல் எப்படியோ தப்பியோடி யிருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. சுஎக-ம், தாழிசையில் கருணாகரன் கலிங்கவேந்தனுடைய 'கடகரியும் தவிதனமுங் கவர்ந்து' சோழனை வணங்கினதாய்

ஆசிரியர் கூறினரே யொழிய, கலிங்க வேந்தனைச் சிறைப் பிடித்துச் சென்றதாய்க் கூறினாரல்லர். ஆனால், கலிங்க வேந்தனைக் கருணாகரன் சிறைப் பிடித்துச் சென்றதாய் மூதந் குலோத்துங்கன் என்னு நாலும் கலிங்கத்துப் பரணி கதா சங்கிரகமும் கூறும்.

கலிங்கப் போர் கி. பி. ககககு அல்லது கககஉ-ல், நிகழ்ந்ததாம். அனந்த பத்மன் கி. பி. க0எஅ-முதல் ககசஉ அல்லது ககசகூ வரை ஆட்சி புரிந்தான் என்றமையால் [H. I. S. I. பக்-கூரு, ருடுஅ] கலிங்கப் போருக்குப் பின்பும் இவன் தன்னரசை யெய்திப் பல்லாண்டளவும் செங்கோல் செலுத்தினமை விளங்கும். இவன் வரலாற்றை ருஎடு-ம், தாழிசையிற் காண்க. (கூஉ)

**கலிங்கவீரர் சமணர் கோலங் கொள்ளல்**

சகூச. வரைக்கலிங்கர் தமைச்சேர மாசை யேற்றி
வன்றூறு பறித்தமயிர்க் குறையும் வாங்கி
அரைக்கலிங்க முரிப்புண்ட கலிங்க ரெல்லாம்
அமணரெனப் பிழைத்தாரு மநேக ராங்கே.

ப-ரை:—வரை கலிங்கர் தமை - மலைகளையுடைய கலிங்க நாட்டி லுள்ளவர்களுக்கு, சேர மாசை ஏற்றி - முற்றும் பழிப்பை யுண்டாக்கி, வன் தூறு பறித்த - வலிய புதர்களால் பறிக்கப்பட்ட, குறை மயிரும் வாங்கி - (மயிர்கள் போக) மிகுதியாகிய மயிர்களையும் பறித்து, அரை கலிங்கம் - இடுப்பிலுள்ள ஆடையும், உரிப்புண்ட - களையப்பட்ட, கலிங்கர் எல்லாம் - கலிங்க வீரர்கள் எல்லாரும், அமணர் என - (தாங்கள்) சமணர்கள் என்று சொல்லி, பிழைத்தாரும் - (உயிர்) பிழைத் தவர்களும், ஆங்கு அநேகர் - அந்த மலையருகில் பல பேராம்.

வி-ரை:—கலிங்க வீரர்களில் பலர் சமணவேடம் பூண்டு உயிர் பிழைத்தன ரென்பதாம். கலிங்க வீரர்களின் செய்கை அந்நாட்டி லுள்ளார்க்கு நீங்காத பெரும் பழியை யுண்டாக்கிற் றென்பார், 'சேரமாசை யேற்றி' என்றார். இத் தொடருக்கு (தமது உடல்) முழுதும் மாசைப் பூசி யெனினுமாம். 'கலிங்கர்தமை வரைச்சேர மாசையேற்றி' என்றியைத்து, கலிங்க வீரர்களை (மற்ற) மலைகளில் போய்ச் சேரும்படி (சோழவீரர் அவர்களுக்கு) பழிப்பை யுண்டாக்குதலால் எனினும் பொருந்தும். கலிங்க வீரர் உயிர் பிழைக்கப் புதர் களில் நுழைந்து ஓடும்போது அவர்கள் தலைமயிரும் அவர்கள் அணிந்திருந்த ஆடையும் புதர்களிலுள்ள முட்களில் சிக்குண்டு பறிக்கப் பட்டமையால், 'வன் தூறு பறித்த மயிர்' எனவும், 'உரிப்புண்ட கலிங்கர்' எனவுங் கூறினர். 'மயிர்க் குறை' என்றது புதர்களி லகப்பட்ட மயிர் போக மிகுந்த மயிரை; சமணர் தலை மயிர் பறித்தலை, 'இடிக்குரற் சிங்கம் பொங்கிமேல், சுரிந்ததன் னுளைமயிர் துறப்ப தொத்தனன்' [சீவகசி-ரு0ரு0] எனவும், 'தட்டை யிடுக்கித் தலையைப் பறித்துச் சமணே நின்றுண்ணும் பிட்டர்' [திருஞானசம்-தேவா-க-கூகூ-க0] எனவும், 'உற்றதலை மயிர் பறித்து' [குசேலோ-குசேலர் தந்நகர்-கஉடு] எனவும் வருமாற்று ணறிக. கலிங்க வீரர்கள் தங்கள் சிகைகளையும் ஆடைகளையு மிழந்துவிட்டமையால், அவர்கள் தம்மைச் சமணர்கள் எனக் கூறிப் பிழைக்க லாயின ரென்க. பிழைத்தாரும்—உம்மை இழிவின்கண் வந்தது. ஆங்கு, ஏ—அசை யெனினுமாம்.

(சகூக) கடற்படை போய்......தடவி (சகூஉ) அரிதெனவும் (சகூரு) இன்று (என்று) சென்று (சகூச) வேலி கோலி, காத்து நின்று (சகூடு) அறுக்கும் போழ்தில் (சகூசு) பிழைத்தாரும் அநேகர் எனக் கூட்டுக. (கூரு)

அந்தணர் கோலங் கொள்ளல்

சசஎ. வேடத்தாற் குறையாது முந்நூ லாக
வெஞ்சிலைநாண் மடித்திட்டு விதியாற் கங்கை
ஆடப்போந் தகப்பட்டேங் *கரந்தோ மென்றே
அரிதனைவிட் டுயிர்பிழைத்தா ரநேக ராங்கே.

ப - ரை :—வேடத்தால் குறையாது - (தாம் கொண்ட) வேஷத்தில் குறைவில்லாமல் வெம் சிலை நாண் - கொடிய வில்லின் நாணை, மடித்து - சுருட்டி, முந் நூல் ஆக - முப்புரி நூலாக, இட்டு - (தங்கள் மார்பில்) அணிந்து, விதியால் - முறையால், கங்கை ஆட போந்து - கங்காநதியில் நீராட வந்து, கரந்தோம் - (உங்களைக் கண்டு பயந்து) மறைந்தோம், அகப்பட்டோம் - (அதனால் உங்களிடம்) அகப்பட்டுக் கொண்டோம், என்று - என்று சொல்லி, அரி தனை விட்டு - (தங்கள்) பகைமையை ஒழித்து, ஆங்கு அநேகர் உயிர் பிழைத்தார்——,

வி - ரை :—பல கலிங்க வீரர்கள் வேதியர் வேடந்தாங்கி உயிர் பிழைத்தன ரென்பதாம். 'வேடத்தாற் குறையாது' என்றதனால், வேதியர்களுக்கும் அவர்களுக்கும் சிறிதும் வேற்றுமையின் றென்பதாயிற்று. 'அகப்பட்டேம், கரந்தோம்' என்றமையால், 'சோழ வீரர்களாகிய உங்களைக் கண்டு நாங்கள் பயந்து மறைந்தோம்; அதனால் நீங்கள் ஐயுற்று எங்களைப் பிடித்தீர்கள்; நாங்கள் வேதியர்களே யொழியக் கலிங்க வீரரல்லேம்,' என அவர்களிற் பலர் பொய் யுரைத்து உயிர் பிழைத்தமை விளங்கும்.

பா - பே :—* காத்தோம் பென்றே யவிதாவிட்டு. (சசு)

புத்தருருக் கொள்ளல்

சசஅ. குறியாகக் குருதிகொடி யாடை யாகக்
கொண்டுடுத்துப் போர்த்துத்தங் குஞ்சி முண்டித்
தறியீரோ சாக்கியரை யுடைகண் டாலென்
அப்புறமென் றியம்பிடுவ ரநேக ராங்கே.

ப - ரை :—குருதி கொடி - இரத்தத்தில் தோய்ந்த கொடிச் சீலைகளை, குறியாக - (புத்தருக்கு) அடையாளமாக, ஆடை ஆக உடுத்து கொண்டு - (தங்கள் உடம்பில்) வஸ்திரமாக அணிந்துகொண்டு, போர்த்து - (தங்கள் மேலேயும்) போர்த்து, தம் குஞ்சி - தமது குடுமியை, முண்டித்து - (களைந்து) மொட்டை யடித்து, சாக்கியரை - புத்தர்களாகிய எங்களை, உடை கண்டால் - (எங்கள்) உடைகளைக் கண்ட வளவில், அறியீரோ - (நீங்கள்) தெரிந்துகொள்ளமாட்டீரோ, அப்புறம் என் - அப்புறம் (நாங்கள் சொல்ல வேண்டுவது) என்ன, என்று ஆங்கு அநேகர் - என்று அங்கே பலர், இயம்பிடுவர் - சொல்லிப் பிழைப்பார்கள்.

வி - ரை :—பல கலிங்க வீரர்கள் புத்த ருருக்கொண்டு உயிர் பிழைத்தன ரென்பதாம். 'அப்புறமென்' என்றது, எங்களைக் கண்ட வளவில் நாங்கள் புத்த ரென்பதை நீங்கள் எளிதில் தெரிந்து கொள்வீ ராதலால், நாங்கள் இனிச் சொல்லவேண்டுவ தொன்றுமில்லை யென்றதை யுணர்த்தினது. (சரு)

பாணர் வேடம் பூணல்

சசகூ. சேனைமடி களங்கண்டேந் திகைத்து நின்றேம்
தெலுங்கரே மென்றுசில கலிங்கர் தங்கள்
ஆனைமணி யினைத்தாளம் பிடித்துக் கும்பிட்
டடிப்பாண ரெனப்பிழைத்தா ரநேக ராங்கே.

ப - ரை :—சில கலிங்கர் - சில கலிங்க வீரர்கள், தெலுங்கரேம் - தெலுங்கராகிய நாங்கள், சேனை மடி - சேனைகள் இறந்துபட்ட, களம் கண்டேம் - போர்க்களத்தைப் பார்த்து, திகைத்து நின்றேம் - திகைப் படைந்து நின்றேம், என்று - என்று சொல்லி, தங்கள் ஆனை மணியினை - தங்கள் யானைகளின் மணிகளை, தாளம் பிடித்து - தாளமாகப் பிடித்துக் கொண்டு, கும்பிட்டு - (சோழ வீரர்களை) வணங்கி, அடி பாணர் - (நாங்கள் உங்கள்) அடியில் வாழும் பாணர்கள், என - என்று சொல்லி, ஆங்கு அநேகர் பிழைத்தார்——.

வி - ரை :—பல கலிங்க வீரர்கள் பாணர் வேடம் பூண்டு உய்ந்தன ரென்பதாம். போரில் தோல்வியுற்ற வீரர்கள் பலவித வடிவங்கொண்டு உயிர் பிழைத்தலை 'சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர், பிடிகைப் பீலி பெரு நோன்பாளர், பாடு பாணியர் பல்லியத் தோளினர், ஆடு கூத்தர்' [சிலப் - உரு - உ௨௫ -௨அ] எனவும், 'மீனாய் வேலையை யுற்றார் சிலர்சிலர் பசுவாய் வழி தொறு மேய்வுற்றார், ...னர் கண்ணிள மடவா ராயினர்' [கம்பரா- அட்சகு-சO] எனவும் வருமாற்றா னறிக. பாணர்—பாடல் பாடுவதில் வல்லவர்; அடிப் பாணர்—அடியில் வாழும் பாணர். புத்தர்களில் ஒரு பிரிவினர் துவராடை யுடுத்துக் குஞ்சி முண்டித்தலுண்மையால், 'குறியாக...முண்டித்து' என்றார். 'நின்னடிநிழற் பழகிய வடியுறை' [புறநா-கக௮] என்னுமாறு காண்க. அடிப் பாணர்—எழனுருபும் பயனு முடன்தொக்க தொகை; அடிமையாகிய பாண ரெனப் பண்புத் தொகையாய்க் கொள்ளினுமாம். கண்டேம்—முற்றெச்சம்; தெலுங்கரேம்—தன்மைப் பன்மைக் குறிப்பு வினையா லணையும் பெயர். (சுகூ)

கலிங்க வீரர் முற்றும் அழிந்தமை

சஎ௦. இவர்கண்மே லினியொருவர் பிழைத்தா ரில்லை
எழுகலிங்கத் தோவியர்க ளெழுதி வைத்த
சுவர்கண்மே லுடலன்றி யுடல்க ளெங்குந்
தொடர்ந்துபிடித் தறுத்தார்முன் னடைய வாங்கே.

ப - ரை :—எழு கலிங்கத்து - ஏழு பிரிவையுடைய கலிங்க நாட்டில், ஓவியர்கள் - சித்திரம் எழுதுவோர்கள், சுவர்கள் மேல் - சுவர்களில், எழுதி வைத்த——, உடல் அன்றி - (சித்திரமாகிய) உடம்புகளைத் தவிர, உடல்கள் - (கலிங்க வீரர்களின்) உடம்புகளை, எங்கும் - எல்லா விடங் களிலும், தொடர்ந்து பிடித்து - (சோழ வீரர்கள் பின்) தொடர்ந்து ஓடிப் பிடித்து, முன் - முன்பே, ஆங்கு அடைய அறுத்தார் - அந்த நாட்டில் முற்றும் அறுத்தொழித்தார்கள், இவர்கள் மேல் - (அதனால் வேற்றுருக் கொண்ட) இவர்களைத் தவிர, இனி ஒருவர் - பின்பு ஒரு வரும், பிழைத்தார் இல்லை - உயிர் பிழைத்தவரல்லர்.

வி - ரை :—கலிங்க நாட்டுச் சுவர்களிலுள்ள சித்திர உடல்களை யன்றி, ஏனைய வீரர்களின் உடல்களை யெல்லாம் சோழ வீரர்கள் அழித்தொழித்தன ரென்பதாம். ஒருவர்—இதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. எங்கும்-உம்மை முற்றுப் பொருளது. (சுஎ)

கருணாகரன் குலோத்துங்கனை வணங்கல்

சஎக. கடற்கலிங்க மெறிந்துசயத் தம்ப நாட்டிக்
கடகரியுங் † குவிதனமுங் கவர்ந்து தெய்வச்
§ சுடர்ப்படைவா ளபயனடி யருளி னேடுஞ்
சூடினான் வண்டையர்கோன் தொண்டை மானே.

ப - ரை :—வண்டையர் கோன் - வண்டைநகரி லுள்ளவர்களுக்கு அரசனாகிய, தொண்டைமான் - கருணாகரத் தொண்டைமான், கடல் கலிங்கம் எறிந்து - கடலை யடுத்த கலிங்க நாட்டை அழித்து, சயம் தம்பம் நாட்டி - வெற்றித் தூண்களை நிலைநிறுத்தி, கடம் கரியும் - மதத் தைப் பொழியும் யானைகளையும், குவி தனமும் - (அங்கு) குவிந்து கிடக்கும் செல்வங்களையும், கவர்ந்து - அபகரித்துக்கொண்டு, சுடர் வாள் படை - ஒளியை வீசும் வாளாயுதத்தையுடைய, தெய்வம் அபயன் அடி - தெய்வத்தன்மையையுடைய (முதற் குலோத்துங்க) சோழன் பாதங்களை, அருளினோடும் சூடினன் - (அவன்) அருளால் (தன் தலையில்) அணிந்தான்.

வி - ரை :—கருணாகரன் கலிங்க நாட்டை வென்ற பின், அங்குள்ள பல வகைப் பொருள்களைக் கவர்ந்து கொண்டு முதற் குலோத்துங்கனிடம் வந்து அவனை வணங்கினா னென்பதாம். கலிங்க நாடு வங்காள விரிகுடாவை அடுத் துள்ளமையால், 'கடற் கலிங்கம்' என்றார் சயத்தம்பம்—[தா-கo, உoரு].

பா - பே :—† வயமாவுந் தனமுங் கொண்டு, § சுடர்க் கதிர்வாள். (கூஅ)

போர் பாடியது முற்றிற்று.

---

# கரு. களம் பாடியது

**களம் பாடியது :**—இது களத்தைப் பாடியது என விரிதலால், இரண்டன் தொகையாம். களத்தைப் பாடியதை யுணர்த்தும் செய்யுட் களின் பகுதி யென்பது இதன் பொருளாம். இதில் கருணாகரன் கலிங்கரோடு புரிந்த போர்க்களத்தின் செய்தியை ஆசிரியர் வருணித்துக் கூறுகிறார். கலிங்கப் பேய் கலிங்க நாட்டுப் போரினைச் சொல்லி முடித்து, 'தேவியே, அப் போர்க்களத்தைக் காண்டல் வேண்டும்' என அவ்வம்மை யைத் தொழுதது. உடனே அவ்வம்மை தன் பேய்க் கூட்டத்தோடு சென்று, அக்களத்தின் காட்சியை அவைகளுக்குக் காட்டின பின், அவைகளைப் பார்த்து, 'இனி நீங்கள் கூழ் சமைத்துப் பருகுங்கள்' எனக் கட்டளை யிட்டனள். உடனே அப்பேய்கள் அவ்வாறே கூழ் சமைத் துண்டு முதற் குலோத்துங்கனை வாழ்த்தின செய்தியையும் இதில் ஆசிரியர் கூறுமாறு காண்க.

**போர்க்களச் சிறப்பு**

சஎஉ. தேவாசுர ராமாயண மாபாரத முளவென்
றோவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே.

ப - ரை :—தேவ அசுரம் - (பதினெட்டாண்டு நிகழ்ந்த) தேவர்கள் அசுரர்களின் போரும், ராமாயணம் - (பதினெட்டு மாதம் நிகழ்ந்த) இராமாயணப் போரும், மா பாரதம் - (பதினெட்டு நாள் நடந்த) பெரிய பாரதப் போரும், உள - (சிறப்புப் பெற்று) இருக்கின்றன, என்ற - என்று (யாவராலும்) சொல்லப்பட்ட, ஓவா உரை - ஒழியாத சொற்கள், ஓயும் படி - நீங்கும்படி, பொரு - (கருணாகரன்) போர் புரிந்த, அ களம் - அந்தப் போர்க்களமானது, உளது - (சிறப்படைந்து) இருக்கிறது.

வி - ரை :—மூவகைப் போரினும் கருணாகரன் புரிந்த போர் சிறப்புடைய தென்பதாம். தேவாசுரப் போரையும் இராமாயணப் போரையும் கடும்போர்களுக்கு உவமை கூறுதலை, 'சுராசுர ரெதிர்ந்துபொரு பூசலெனவே [வில்லிபா - அணி வகுப்பு - ௩௦] எனவும், 'கருதாவ ரக்கன்கொ டுந்தானை யிறைவன்க டுந்தானையென், றிருதானை யும்போல வெதிருற்ற' [ஷை ௫-ம் போர் - ௩] எனவும் முறையே வருமாற்றா னறிக. தேவாசுரப் போர் பதினெட்டாண்டும், இராமாயணப்போர் பதினெட்டு மாதமும், பாரதப்போர் பதினெட்டு நாளும் நிகழ்ந்தன வென்பதை, 'செயிர்த்தொழில் முதியோன் செய்தொழில் பெருக, உயிர்த்தொகை யுண்ட வொன்பதிற் றிரட்டியென், றியாண்டு மதியு நாளுங் கடிகையும்' [சிலப் - உ௭ - ௭ - ௯] என்னும் அடிகளாலும் அவற்றின் குறிப்புரையாலு மறிக. 'எண்கொண்ட ஞாட்பின்' [சிவகசி- உ௩௫௩] என்னுஞ் செய்யுளுக்கு 'தேவாசுரம், ராமாயணம், மாபாரதம் என்கின்ற போரில்' என நச்சினார்க்கினியர் உரை வரைந்திருத்தலும் இங்குக் கவனிக்கத்தக்கது. தேவாசுரம், ராமாயணம், மாபாரதம் என்னும் மூன்றும் ஆகு பெயர்களாய்ப் போரை யுணர்த்தின. என்ற வென்னும் பெயரெச்சம் ஈறு தொக்கு நின்றது. (௧)

கலிங்கப்பேய் களங்காண தேவியை வேண்டல்

௪௭௩. காலக்கள மதுகண்டரு ளிறைவீகடி தெனவே
ஆலக்கள முடையான்மகி ழமுதக்கள மணுகி.

ப - ரை:—இறைவீ-தேவியே, காலன் களம் - யமனது படுகளமாகிய, அது - அந்தப் போர்க்களத்தை, கடிது கண்டருள் - விரைவாய் (வந்து) காண்பாயாக, என-என்று (கலிங்கப்பேய்) சொல்லி முடிக்க, ஆலம் களம் உடையான் - விஷத்தைத் தன் கழுத்தில் உடையவராகிய சிவபெருமானார், மகிழ் அமுது - (கண்டு) களிக்கும் அமுதம் போன்றவராகிய அவ்வம்மையார், அ களம் அணுகிய - அந்தப் போர்க்களத்தையடைந்து,

வி - ரை :—கருணாகரன் புரிந்த போர்க்களத்திலுள்ள பிணங்களின் மிகுதி பற்றி அதனைக் 'காலக் களம்' என்றார். 'ஆலக்கள முடையான் மகிழமுது' என்றதனால், சிவபெருமானார் விடத்தை யுண்டதனால் நேர்ந்த துன்பம் அவ்வம்மையால் நீங்கி அவருக்கு இன்பம் உண்டாயிற் றென்பதாம். கலன் + களம் = காலக்களம்; உயர்திணைப் பெயரின் ஈறு கெட்டு வலி மிக்கது [நன்-௧௫௯] இச்செய்யுள் திரிபாம். மகிழமுது —வினைத்தொகை ; அமுது— உவமையாகு பெயர். (உ)

தேவி செருக்களங் கண்டு வியத்தல்

௪௭௪. என்னேயொரு செருவெங்கள மெனவேயதி சயமுற்
றந்நேரிழை யலகைக்கண மவைகண்டிட மொழியும்.

ப - ரை :—அ நேர் இழை - செவ்வையாகிய ஆபரணங்களை யணிந்த அந்தத் தேவி, ஒரு வெம் செரு களம் - ஒப்பற்ற கொடிய போர்க்களம், என்னே என - (இருந்தபடி) என்ன வென்று, அதிசயம் உற்று - ஆச்சரிய மடைந்து, அலகை கணம் அவை - (அவ்வம்மையோடு சென்ற) பேய்க் கூட்டங்களாகிய அவை, கண்டிட - காணும்படி, மொழியும் - (அந்தப் போர்க்களத்தின் சிறப்பை) சொல்லத் தொடங்கினாள்.

வி - ரை :—வீரமகளாகிய காளிதேவியும் போர்க்களத்தைக் கண்டு அதிசயித்தனள் என்றது போரின் சிறப்பை விளக்குகிறது. நேரிழை—பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. மொழியும்—இச் செய்யு

மென்னும் வாய்பாட்டு வினைமுற்று இங்கே பெண்பாலை யுணர்த்தினது. (சஎங) அணுகி (சஎச) மொழியும் எனக. (ரு)



போர்க்களச் சிறப்புரைத்தல்

சஎரு. உடலின்மேற் பலகாயஞ் சொரிந்து பின்கால்
உடன்பதைப்ப வுதிரத்தே யொழுகும் யானை
கடலின்மேற் கலந்தொடரப் பின்னே செல்லுங்
கலம்போன்று தோன்றுவன காண்மின் காண்மின்.

ப - ரை:—உடலின் மேல் - (தங்கள்) உடம்பிலுள்ள, பல காயம் - பல புண்களிலிருந்து, சொரிந்து - (உதிரத்தை) பொழிந்து, பின் கால் - (தம்) பின் கால்கள், உடன் பதைப்ப - தம்முடன் அசையும்படி, உதிரத்தே ஒழுகும் யானை - இரத்த வெள்ளத்தில் (நீந்தி) செல்லும் யானைகள், கடலின் மேல் - கடலில், பின்னே கலம் தொடர - (தமக்குப்) பின்பு மரக்கலங்கள் தொடரும்படி, செல்லும் - (முன்னே) செல்லும், கலம் போன்று - மரக்கலங்களைப் போல், தோன்றுவன - காணப்படுகின்றவற்றை, காண்மின் காண்மின் - (பேய்களே) பாருங்கள், பாருங்கள்.

வி - ரை:—யானைகள் இரத்த வெள்ளத்தில் ஒன்றன்பின் ஒன்று நீந்திச் செல்லுங் காட்சி, கடலில் மரக்கலங்கள் ஒன்றையொன்று தொடர்ந்து செல்லுதலை ஒத்திருந்த தென்பதாம். மரக்கலங்கள் யானைகளுக் குவமையாதலை, 'மொய்களி றுடைதிரை மரக்கலம்' [சீவகசி-உஉஉரு] என்றதனு லறிக. பதைத்தல்—அசைதல்; இதனை 'மடநடை நாரை, பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி' [ஐங்கு-கஎசு] என்றதனு லறிக. இது முதல் ருOஉ-ம், தாழிசை யளவும் தேவி போர்க்களத்தின் சிறப்பைப் பேய்களுக்கு அறிவித்தலை யுணர்த்தும். (சு)

குதிரைகள் குதிரைத் தறிகளை யொத்தமை

சஎசு. நெடுங்குதிரை மிசைக்கலணை சரியப் பாய்ந்து
நிணச்சேற்றிற் கால்குளிப்ப நிரையே நின்று
படுங்குருதிக் கடும்புனலை யடைக்கப் பாய்ந்த
பலகுதிரைத் தறிபோன்ற பரிசு காண்மின்.

ப - ரை:—நெடும் குதிரை - பெரிய குதிரைகள், மிசை - (தம்) மேலுள்ள, கலணை - தவிசுகள், சரிய - சரிந்து விழவும், நிணம் சேற்றில் - கொழுப்பாகிய சேற்றில், கால் குளிப்ப - (தம்) கால்கள் அழுந்தவும், பாய்ந்து - பாய்தலால், நிரையே நின்று - (தம் கால்களைப் பறிக்க வியலாமல் அவை) வரிசையாய் நின்று, படும் குருதி - ஒலிக்கும் இரத்தமாகிய, கடும் புனலை - மிக்க நீரை, அடைக்க பாய்ந்த - அடைத்து வைக்க அழுந்தி நின்ற, பல குதிரை தறி போன்ற - பல குதிரை மரங்களைப் போன்ற, பரிசு காண்மின் - தன்மையைப் பாருங்கள்.

வி - ரை:—கொழுப்பாகிய சேற்றில் தம்முடைய கால்கள் பதிந்துகிடக்கும் குதிரைகள், உதிரமாகிய நீர் வெள்ளத்தை யடைக்க வமைத்த குதிரை மரங்களை யொத்திருந்தன வென்பதாம். குதிரைத் தறி யென்பது நீரை யடைத்தற்கு நிறுத்தும் ஒருவகை மரமாம். குதிரைகளை உவமை கூறி யிருத்தலாலும், குதிரைத்தறி என்னும் பேராலும் இது குதிரையின் வடிவமுடைய தெனத் தெரிகிறது. படுதல்—ஒலித்தல்; கடுமை—மிகுதி; கடும் புனல்—விரைவாய்ப் பாயும் நீரெனினுமாம். இவ்விரு செய்யுட்களும் எதிர்நிலை யணியாம். (எ)

வீரர் முகமலர்ச்சி

௬எஎ. விருந்தினரும் வறியவரு நெருங்கி யுண்ண
மேன்மேலு முகமலரு மேலோர் போலப்
பருந்தினமுங் கழுகினமுந் தாமே யுண்ணப்
பதுமமுக மலர்ந்தாரைப் பார்மின் பார்மின்.

ப - ரை :—விருந்தினரும் - (தம்மிடம் வந்த) புதிய அதிதிகளும், வறியவரும் - ஏழைகளும், நெருங்கி உண்ண - (தம்மை) அடுத்து (உணவை) உண்ணுதலால், மேல் மேலும் - (அதனைக் கண்டு) மேலும் மேலும், முகம் மலரும் - (களிப்பால்) முகமலர்ச்சி கொள்ளும், மேலோர் போல - பெரியோர்களைப் போல, பருந்து இனமும் - பருந்துகளின் கூட்டங்களும், கழுகு இனமும் - கழுகுகளின் கூட்டங்களும், உண்ண - (தங்கள் குடல், ஈரல் முதலிய உறுப்புக்களைக் கொத்தி) தின்ன, பதுமம் முகம் - தாமரை மலர் போன்ற (தங்கள்) முகம், மலர்ந்தாரை - (களிப்பால்) மலர்ச்சி கொண்ட வீரர்களை, பார்மின் பார்மின் - பாருங்கள், பாருங்கள்.

வி - ரை :—வீரர்கள் போர் புரிந்து களிப்போடு உயிர் துறந்தமையால், அவர்கள் முகமலர்ச்சியுடன் விளங்கின ரென்க. மேலோர் வீரர்களுக்கும், விருந்தினரும் வறியவரும் முறையே பருந்துகளுக்கும் கழுகுகளுக்கும், உணவு வீரர்களின் உறுப்புக்களுக்கும் உவமையாம். தாம்—ஏ, இரண்டும் அசைகள். (௬)

வீரர் உலோபிகட்கு உவமை

௬எஅ. சாமளவும் பிறர்க்குதவா தவரை நச்சிச்
சாருநர்போல் வீரருடற் றரிக்கு மாவி
போமளவு மவரருகே யிருந்து விட்டுப்
போகாத நரிக்குலத்தின் புணர்ச்சி காண்மின்.

ப - ரை :—சாம் அளவும் - (தாங்கள்) சாகும் வரையிலும், பிறர்க்கு - அயலாருக்கு, உதவாதவரை - (சிறிது பொருளும்) உதவி செய்யாத உலோபிகளை, நச்சி - விரும்பி, சாருநர் போல் - (அவர்களை) அடைந் திருக்கும் மூடர்களைப்போல், வீரர் உடல் தரிக்கும் - (கொலையுண்ட) வீரர்களின் உடம்பில் நிலை பெற்றிருக்கும், ஆவி போம் அளவும் - உயிர் நீங்கும் அளவும், அவர் அருகே இருந்து - அந்த வீரர்களின் அருகில் இருந்து, விட்டு போகாத - (அவர்களை) விட்டு நீங்காத, நரி குலத்தின் - நரிக் கூட்டங்களின், புணர்ச்சி காண்மின் - இணக்கத்தைப் பாருங்கள்.

வி - ரை :—உலோபிகள் உயிர் விடுமளவும் தம்மை யடைந்தோர்க்கு ஒன்றுங் கொடாததுபோல, கொலையுண்ட வீரர்களும் தம் முயிர் நீங்குமளவும் நரிகளுக்குத் தம் முறுப்புக்களைக் கொடாராயினா ரென்க. கொலையுண்ட வீரர் களின் உடல் துடித்ததால், நரிகள் அவைகளை யணுக அஞ்சின வென்பதாம். உலோபிகள் வீரர்களுக்கும், பொருள் அவர்கள் உறுப்புக்களுக்கும், மூடர்கள் நரிகளுக்கும் உவமை. புண்பட்ட வீரர்களின் உயிர் நீங்குமளவும் அவர்களைப் பேய் முதலியன அணுகாதிருத்தலைப் பேய்நிலை என்ப. 'செருவேலோன் திற நோக்கி, பிரிவின்றிப் பேயோம் பின்று' [புறப் - வெ - மா - எ௬] என்றமை காண்க. 'எமச் சுற்ற மின்றிப் புண்ணோர், பேஎ யோம்பிய பேஎய்ப் பக்கமும்' [தொல்கா - புறத் - உ௪] என்னு மிடத்து, ஓம்புதலாவது அவன் உயிர் போந் துணையும் ஓரியும் பேயும் நரியும் கடிந்து அவன் தசையைக் கோட லஞ்சிப் பாது காத்தலாம்' என நச்சினார்க்கினியர் உரை வரைந்திருத்தலால், புண்பட்ட மறவரை நரிகள் முதலியன பாதுகாத்தலும் பேய்நிலையே யாமென்க. (எ)

வண்டுகள் விலைமாதரை யொத்தல்

சஎகூ. மாமழைபோற் பொழிகின்ற தான வாரி
மறித்துவிழுங் கடகளிற்றை வெறுத்து வானோர்
பூமழைமேற் பாய்ந்தெழுந்து நிரந்த வண்டு
பொருட்பெண்டிர் போன்றமையுங்காண்மின்காண்மின்.

ப-ரை:—மா மழை போல் - பெரிய மழையைப் போல், பொழிகின்ற - சொரிகின்ற, தானம் வாரி - மதப் பெருக்கை, மறுத்து-ஒழித்து, விழும் - (உயிர் துறந்த நிலத்தில்) விழுந்து கிடக்கும், கடம் களிற்றை - மத யானைகளை, வெறுத்து எழுந்து - வெறுத்து விட்டு (மேலே பறந்து) எழுந்து, வானோர் - தேவர்களின், பூ மழை மேல் பாய்ந்து——, நிரந்த வண்டு - பரவியுள்ள வண்டுகள், பொருள் பெண்டிர் - பொருளை விரும்பும் விலை மகளிரை, போன்றமையும் - ஒத்திருத்தலையும், காண்மின் காண்மின்——.

வி-ரை:—விலைமகளிர் பொருளுள்ள வளவும் ஒருவனைப் பற்றியிருந்து அப்பொருள் தீர்ந்த பின் வேறொருவனைப் பற்றுதல் போல், வண்டுகள் மத நீருள்ள வளவும் யானைகளைப் பற்றியிருந்து அவை உயிர் நீந்த பின் அந்நீர் ஒழியவே, அவை பூ மழை மேல் பாய்ந்தன வென்க. 'நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்' [மணிமே-கஅ-கக-உ0] என்றமை காண்க. தேவர்கள் பூமழை பொழிந்தமை கருணாகரன் வெற்றியைக் கண்ட களிப்பின் மிகுதியா லென்க. நிரத்தல்—பரவல்; 'புரவித்திண்டேர் நிரந்தன விரைந்த பாய்மா' [சீவகசி-கஅருகூ] என்றார் திருத்தக்க தேவரும். பொருட் பெண்டிர் வண்டுகளுக்கும் பொருளுடையான் கடகளிற்றுக்கும் பொருள் மதநீருக்கும் அயலான் பூமழைக்கும் உவமை. (அ)

கொடிச் சீரைகளுடன் விழுந்து கிடக்கும் யானைகள் தன்மை

சஅ0. சாய்ந்துவிழுங் கடகளிற்றி னுடனே சாய்ந்து
தடங்குருதி மிசைப்படியுங் கொடிக டங்கள்
காந்தருடன் கனலமளி யதன்மேல் வைகுங்
கற்புடைமா தரையொத்தல் காண்மின் காண்மின்.

ப-ரை:—தட குருதி மிசை - பெரிய இரத்த வெள்ளத்தில், சாய்ந்து விழும் - சாய்ந்து விழுந்து கிடக்கும், கடம் களிற்றினுடன் - மத யானைகளோடு, சாய்ந்து படியும் - சாய்ந்து படிந்து கிடக்கும், கொடிகள் - கொடிச் சீரைகள், தங்கள் காந்தருடன் - தங்கள் கணவர்களோடு, கனல் அமளி அதன் மேல் - நெருப்பாகிய படுக்கையில், வைகும் - தங்கியிருக்கும், கற்பு உடை மாதரை ஒத்தல் - கற்பொழுக்கம் பூண்ட பெண்களை ஒத்திருத்தலை, காண்மின் காண்மின்——.

வி-ரை:—குருதி வெள்ளத்தில் யானைகள் கொடிச் சீரைகளுடன் விழுந்து கிடக்குங் காட்சி, கனலமளியில் தங் கணவருடன் கற்புடை மகளிர் கிடத்தலை யொத்திருந்த தென்பதாம். கடகளிறு காந்தருக்கும், கொடிச் சீரைகள் கற்புடை மகளிர்க்கும், குருதிநீர் கனலமளிக்கும் உவமை. தடங் குருதி—உரிச்சொற்றொடர்; கனலமளி—உருவகவணி; இந்நான்கு செய்யுட்களும் உவமை யணியாம். (கூ)

களம்புக்க மகளிர் செய்தி

சஅக. தங்கணவ ருடன்றாமும் போக வென்றே
சாதகரைக் கேட்பாரே தடவிப் பார்ப்பார்

எங்கணவர் கிடந்தவிட மெங்கே யென்றென்
றிடாகினியைக் கேட்பாரைக் காண்மின் காண்மின்.

ப - ரை :—தம் கணவர் உடன் - தங்கள் கணவர்களோடு, தாமும் போக என்று - தாமும் போகவேண்டுமென்று நினைத்து, சாதகரை கேட்பார் - (சில பெண்கள்) சாதகரைக் கேட்பவர்களாய், தடவி பார்ப்பார் - (அவர்கள் உடலை) தேடிப் பார்ப்பார்கள், எம் கணவர் - (அவை கிடைக்காமையால்) எங்கள் கணவர் உடல்கள், கிடந்த இடம் - (விழுந்து) கிடக்கும் இடம், எங்கே - எவ்விடம், என்று என்று - என்று பல முறையும், இடாகினியை கேட்பாரை - இடாகினியைக் கேட்கும் பெண்களை, காண்மின் காண்மின்——.

வி - ரை :—களம் புக்க மகளிர் தாம் உயிர் விடுமுன் தங் கணவர் முகங்களை ஒரு முறை காணவேண்டுமென்னும் வேட்கையால், சாதகரையும் இடாகினியையுங் கேட்டு அவற்றைத் தேடித் திரிந்தன ரென்க. அம்மகளிர் கேட்டதற்குச் சாதகர் விடை கூறாமையால், இடாகினியைக் கேட்க லாயினராம். கேட்பார்—முற்றெச்சம். சாதகர், இடாகினி இவற்றை முறையே ககரு, கருரு-ம், தாழிசைகளிற் காண்க. களத்திறப்பட்ட கேள்வரைக் கண்டு மகளிர் வாய்விட்டரற்றுதலை ஆனந்தப் பையுள் என்ப. 'விழுமங் கூர வேய்த்தோ ளரிவை, கொழுநன் வியக் குழைந்துயங் கின்று' [புறப்-வெ-மா-உசுசு] என்றமை காண்க. (சு0)

தலையொடு முடிதல்

சஅஉ. வாய்மடித்துக் கிடந்ததலை மகனை நோக்கி
மணியதரத் தேதேனும் $வடுவுண் டாயோ
நீமடித்துக் கிடந்ததெனப் ‡புலவி கூர்ந்து
நின்றாவி சோர்வாளைக் காண்மின் காண்மின்.

ப - ரை :—வாய் மடித்து - (தன்) உதடுகளை மடித்துக்கொண்டு, கிடந்த - (போர்க் களத்தில் இறந்து) கிடந்த, தலை மகனை நோக்கி - மேன்மையாகிய (தன்) கணவனை (ஒருத்தி) பார்த்து, மணி அதரத்து - பவளம் போன்ற (உன்) உதடுகளில், வடு - (புண்ணின்) தழும்பு, ஏது ஏனும் உண்டாயோ - எதையாவது அடைந்தனையோ, நீ மடித்து - நீ (போரில் பலரை) கொன்று, கிடந்தது என - (இவ்வாறு) விழுந்து கிடப்பதோ வென்று, புலவி கூர்ந்து - வெறுப்பு மிகுந்து, நின்று - (அவனருகில்) நின்று, ஆவி சோர்வாளை - உயிர் விடுவாளை, காண்மின் காண்மின்——.

வி - ரை :—'வாய் மடித்துக் கிடந்த' என்றது இறந்துபட்ட வீரனது சினக் குறிப்பை யுணர்த்தும். களம்புக்க ஒருத்தி தன் கேள்வன் தன்னுடன் ஒன்றும் பேசாமையால், 'வடுவுண்டாயோ' என்றாள். மணியதரம் என்பதற்கு அழகிய உதடுகள் எனவும், ஏதேனும் என்பதற்கு ஏதேனும் ஓர் ஆயுதத்தால் எனவும், ஆவி சோர்வாள் என்பதற்கு உயிர் தளர்வாள் எனவும் பொருள் கூறினுமாம். சிறந்த வீரனாகிய தன் கொழுநன் வெற்றியுடன் மீளாமை கருதி அவன் மனைவி வெறுப்புற்றன ளென்க. மகன்—கணவன்; இஃதிப் பொருள் தருதலை, 'நோதக வுண்டோ நும்மக னார்க்கினி' [சிலப்-கசு-கஎ] எனவும், 'நினக்கிவன் மகனாத் தோன்றி யதூஉம்' [மணிமே-உக-உக] எனவும் வருமாற்றா னறிக. தலைமகன் என்பதற்கு மூத்த புதல்வனெனப் பொருள் கொள்ளினுமாம்.

பா - பே :—$ எவுண்டாயோ, ‡ புலவி கூர. (சுக)

இதுவுமது

சஅங.| தரைமகடன் கொழுநன்ற னுடலந் தன்னைத்
தாங்காமற் றன்னுடலாற் றாங்கி விண்ணாட்
டரமகளி ரவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவியொக்க விடுவாளைக் காண்மின் காண்மின்.

ப - ரை:—தன் கொழுநன் தன் - தன் கணவனுடைய, உடலம் தன்னை - உடம்பை, தரை மகள் - பூமிதேவி, தாங்காமல் - தாங்க விடாமல், தன் உடலால் தாங்கி - தன் மார்பில் அணைத்து, விண் நாட்டு அரமகளிர் - தேவலோகத்திலுள்ள அரம்பையர்கள், அ உயிரை - அந்த (வீரனுடைய) உயிரை, புணரா முன்னம் - தழுவு முன்பே, ஆவி - (தன்) உயிரை, ஒக்க விடுவாளை - (தன் கணவனோடு) ஒருசேர விடுகின்ற ஒருத்தியை, காண்மின் காண்மின்——.

வி - ரை:—ஒருத்தி தன் கணவனைத் தழுவிய வண்ணம் அவனுடனே தன்னுயிரையு மிழந்தா ளென்பதாம். 'நாடினர் நாடியே நனைவருங் கொம்பனார், வாடினர் கணவர்தம் மார்புறத் தழுவியே, வீடினர்' [கம்பரா - அட்சகுமாரன் வதை - சஅ] என்றமை காண்க. தரைமகளும் ஒரு பெண்ணாகலின், அவள் தானும் தன் கணவன் உடலைத் தாங்கலாகாதெனக் கருதி, அவன் மனைவி அவனைத் தன்னுடலால் தாங்கின ளென்க. இதனால் இறந்து பட்ட வீரன் அயல் மனைவியரை விழையாதவன் என்பது விளங்கும். இவ்விரு செய்யுட்களும் போர்க் களத்தில் தங் கணவரொடு மகளிர் உயிர் துறத்தலை யுணர்த்தினமையால், இவற்றை, 'தலையோடு முடிதல்' என்ப. இதனை 'மண்டமருண் மாறு மைந்தின், கொண்டான் றலையோடு கோல்வளை முடிந்தன்று' [புறப் - வெ - மா - எங] என்றதனு லறிக. பா - பே:—ஃ தன்கரத்தால். (கஉ)

தங் கேள்வ ருறுப்புக்களைக் காண விழைதல்

சஅச. பொருதடக்கை வாளெங்கே மணிமார் பெங்கே
போர்முகத்தி லெவர்வரினும் புறங்கொ டாத
பருவயிரத் தோளெங்கே யெங்கே யென்று
பயிரவியைக் கேட்பாளைக் காண்மின் காண்மின்.

ப - ரை:—பொரு - போர் புரியும், வாள் - வாளைப் பிடித்த, தட கை - பெரிய கைகள், எங்கே——, மணி மார்பு - அழகிய மார்பு, எங்கே——, போர் முகத்தில் - போர்க்களத்தில், எவர் வரினும் - எத்தகைய வீரர்கள் (எதிர்த்து) வந்தாலும், புறம் கொடாத - முதுகு காட்டி யோடாத, பரு வயிரம் தோள் - பருத்த (மிக்க) வலிமையையுடைய தோள்கள், எங்கே எங்கே என்று——, பயிரவியை கேட்பாளை காண்மின் காண்மின்——,

வி - ரை:—'கையெங்கே, மார்பெங்கே, தோளெங்கே' என வினவுதலால், அவற்றை நாய் நரிகள் முன்பே யிழுத்துச் சென்றன வென்பதும், தலை யொன் றையே அவள் காணப்பெற் றரற்றின ளென்பதும் விளங்கும். 'தடக்கை வாளெங்கே' என்பதற்குப் பெரிய கையில் பிடித்த வாளாயுத மெங்கே எனினு மாம். கை வாள்—இதனை உம்மைத் தொகையாய்க் கொண்டு கையும் வாளு மெனினுமாம். மணி—இரத்தினமாலை அல்லது முத்துமாலை எனினுமாம். பயிரவி = யோகினி; ஒரு பெண் தெய்வ மென்க. இந்நான்கு செய்யுட்களும் அழுகைச் சுவையாம். இவைகளில் களம்புக்க மகளிர் செய்தி கூறப்பட்டது. மகளிர் போர்க்களஞ் சேறல் பண்டை வழக்கமாம். [புறநா-உஎஅ]. மேலைச் செய்யுட்களைச் சாரவைத்தமையால், இதுவும் மனைவியின் கூற்றேயாம். (கங)

கருங்கொண்டல் செங்கொண்ட லொத்தமை

சஅரு. ஆடற்று ரங்கம்பி டித்தாளை யாளோட
டித்துப்பு டைத்தவ்வி ரும்புண்ணினீர்
ஓடித்தெ றிக்கக்க ருங்கொண்டல் செங்கொண்டல்
ஒக்கின்ற வில்வாறு காண்மின்களோ.

ப - ரை:—ஆடல் துரங்கம் - வலிய (குதிரைகளோடு) குதிரைகளையும், ஆளோடு ஆளை - வீரர்களோடு வீரர்களையும், பிடித்து அடித்து புடைத்த - பிடித்து மோதியடித்த, இரும் அ புண்ணின் நீர் - மிகுதியாகிய அந்த உதிரம், ஓடி தெறிக்க - (ஆகாயத்தில்) ஓடித் தெறித்தலால், கரும் கொண்டல் - கரிய மேகங்கள், செம் கொண்டல் - சிவந்த மேகங்களை, ஒக்கின்ற இ ஆறு - ஒத்திருக்கின்ற இந்த வகையை, காண்மின்கள்——.

வி - ரை:—சில வீரர்கள் வலிய குதிரைகளோடு குதிரைகளையும் வீரர்களோடு வீரர்களையும் பிடித்து மோதி யடிக்கும்போது பெருகிய உதிரம் ஆகாயத்தில் தெறித்தலால், அங்குள்ள கரிய மேகங்கள் சிவந்த மேகங்களாயின வென்பதாம். ஆடல்—அட லென்பதன் நீட்டல்; இரும் புண்ணின் நீர்—பெரிய புண்களி லிருந்து வரும் நீர்; உதிர மென்பதாம். காண்மின்களோ—ஏவற் பன்மை வினைமுற்று, கள் விகுதிமேல் விகுதி, ஓகாரம் அசை. புடைத்த—அகரந் தொகுத்தல். இச்செய்யுளில் உவமையணியும், ஏது வணியும் அமைந்துள்ளமை காண்க. (கச)

கருங்காகம் வெண்காக மொத்தல்

சஅசு. நெருங்காக வச்செங்க ளத்தேத
யங்குந்நி ணப்போர்வை மூடிக்கொளக்
கருங்காகம் வெண்காக மாய்நின்ற
வாமுன்பு காணாத காண்மின்களோ.

ப - ரை:—நெருங்கு - (பிணங்கள்) அடர்ந்த, செம் ஆகவம் களத்தே - சிவந்த போர்க்களத்தில், தயங்கும் - விளங்கும், நிணம் போர்வை - கொழுப்பாகிய போர்வை, மூடி கொள் - மூடிக்கொண்டதனால், கரும் காகம் - கரிய நிறமுள்ள காக்கைகள், வெண் காகம் ஆய் - வெண்ணிறமுள்ள காகங்களாகி, நின்ற ஆ (று) - நின்ற வகையால், முன்பு காணாத - முன்பு (ஒருபோதும்) காணாத காட்சியை, காண்மின்கள்——.

வி - ரை:—அப்போர்க்களத்திலுள்ள கரிய காகங்களின்மேல் கொழுப்பு மூடிக் கொண்டமையால், அவை வெண் காகங்களைப்போல் தோன்றின வென்பதாம். வெண்காகமில்லை யென்பது முன்னோர் துணிபாதலால், 'காணாத காண்மின்' என்றார். 'காக்கை வெளிதென்ப ரென்சொலார்' [நீதிநெறிவி - உச] என்றமை காண்க. குருதியானது பரவியிருத்தலால், 'செங்களம்' எனப்பட்டது. ஆய்—உவம வுருபிடைச்சொல். நின்றவாறு என்பது கடையிற் குறைந்து நின்றது. காணாத—எதிர்மறை வினையாலணையும் பெயர். இதில் உருவகவணியும் ஏதுவணியும் உள்ளமை காண்க. (சரு)

போர்க்களம் தாமரைத் தடாகத்தை யொத்தமை

சஅஎ. ‡மிடையுற்ற தேர்மொட்டு மொட்டொக்க
வெஞ்சோரி நீரொக்க வீழ்தொங்கல்பா
சடையொக்க †வடுசெங்க ளம்பங்க
யப்பொய்கை யாமாறு காண்மின்களோ.

ப - ரை :—மிடை உற்ற - நெருங்கி யிருக்கின்ற, தேர் மொட்டு - தேரின் மொட்டுக்கள், மொட்டு ஒக்க - (தாமரையின்) அரும்புகளைப் போலவும், வெம் சோரி - (புதிய) வெப்பமாகிய உதிரம், நீர் ஒக்க - தண்ணீர் போலவும், வீழ் தொங்கல் - (அறுந்து) வீழ்ந்த பீலிக்குடைகள், *பாசு அடை ஒக்க - பசிய இலைகளைப் போலவும், அடு செம் களம் - (பகைவரை) கொல்லும் சிவந்த போர்க்களமானது, பங்கயம் பொய்கை - தாமரை மலர்களையுடைய தடாகத்தை, ஆம் ஆறு - ஒத்திருக்கும் வகையை, காண்மின்கள் ——.

வி - ரை :—தேர் மொட்டுக்கள் தாமரையின் அரும்புகள் போலவும் உதிரம் நீர் போலவும், பீலிக்குடைகள் இலைகள் போலவும் பொருந்தின போர்க்களமானது தாமரைத் தடாகத்தை ஒத்திருந்த தென்பதாம். 'வாளை பிறழுங் கயங்கடுப்ப வந்தடையார், ஆளமர் வென்றி யடுகளத்து' [புறப்-வெ-மா-கசஎ] எனத் தடாகத்தைப் போர்க்களத்திற் றுவமை கூறியுள்ளமை காண்க. தொங்கல்—மயில் தோகையால் அமைக்கப்பட்ட குடைகள். இச்செய்யுள் உவமையணியாம். பா - பே :—‡ மிடைகின்ற, † அடு வெங்களம். (கசு)

வீரர் கழைக் கூத்தர்களின் மூங்கிலை யொத்தல்

சஅஅ. வெயிற்றாரை வேல்சூழ வுந்தைக்க
மண்மேல்வி ழாவீரர் வேழம்பர்தங்
கயிற்று §லி ழுப்புண்டு சாயாது
நிற்குங்க ழாயொத்தல் காண்மின்களோ.

ப - ரை :—வெயில் தாரை - ஒளியையும் கூர்மையையுமுடைய, வேல் சூழவும் தைக்க - வேலாயுதங்கள் (தங்கள் உடம்பு) முற்றும் தைத்துக் கொள்ள, மண் மேல் விழா - நிலத்தின் மேல் விழாத, வீரர் - (ஆண்மையோடு நின்றிருக்கும்) வீரர்கள், வேழம்பர் தம் - கழைக் கூத்தாடிகளின், கயிற்றால் இழுப்புண்டு - கயிற்றால் இழுத்துக் கட்டப் பட்டு, சாயாது நிற்கும் - சாயாமல் (நிலைபெற்று) நிற்கும், கழாய் ஒத்தல் - மூங்கிலை ஒத்திருத்தலை, காண்மின்கள் ——.

வி - ரை :— கழைக் கூத்தர்களின் கயிற்றால் பிணிப்புண்டு நிற்கும் மூங்கில்கள் போல், வீரர்கள் தம்முடல் முழுதும் வேல்கள் தைக்க நின்றன ரென்பதாம். மூங்கில் வீரர்களுக்கும் இழுத்துக் கட்டப்பட்ட நீண்ட கயிறுகள் வேல்களுக்கு முவமை. கழைக் கூத்தர்—மூங்கில் மேல் நின்று கூத்தாடுவோர்; இவர்களைத் தொம்பர் எனவும், தொம்பரவர் எனவும் கூறுவர்; கழாய்—மூங்கில்; வேல்களாயினும் கணைகளாயினும் தம்முடலில் தைக்க நிலத்து விழாது நிற்றலை வெருவருநிலை என்ப. 'விலங்கமருள் வியலகலம் வில்லுதைத்த கணைகிழிப்ப, நிலந்தீண்டா வகைபொலிந்த நெடுந்தகை நிலையுரைத்தன்று' [புறப் - வெ - மா - கசக] என்றமை காண்க. 'கணையும் வேலுந் துணையுற மொய்த்தலின்' [தொல்கா - புறத் - கசு] என்னுஞ் சூத்திரமும் அதற்கு நச்சினார்க்கினியார் கூறிய வுரையும் ஈண்டுக் கவனிக்கற் பாலனவாம். இச்செய்யுளகத்தும் உவமையணி யுள்ளமை காண்க. பா - பே :—§ இசிப்புண்டு. (கஎ)

செருக்களத்தில் பாறும் பருந்துங் கண்ட காட்சி

சஅகூ. இருப்புக்க வந்தத்தின் மீதேற
லுஞ்சூர ரெஃகம்பு தைக்கவிறகைப்
பரப்பிச்சு ழன்றிங்கொர் பாருட
ஈதோர்ப ருந்தாடல் காண்மின்களோ.

ப - ரை :—கவந்தத்தின் மீது ஏறும் - (இறந்து பட்ட வீரர்களின்) உடற் குறைகளின் மேல் ஏறின வளவில், சூரர் - (அந்த) வீரர்களின், இருப்பு எஃகம் புதைக்க - இரும்பாலாகிய வேலாயுதம் (தன் உடம்பில்) அழுந்துதலால், இங்கு ஓர் பாறு - இங்கே ஒரு கழுகு, இறகை பரப்பி - (தன்) இறகுகளைப் பரப்பிக்கொண்டு, சுழன்று ஆட - சுழன்று அசையும், ஈது ஓர் பருந்து ஆடல் - இதோ ஒரு பருந்தும் (அவ்வாறே) அசைதலை, காண்மின்கள்——.

வி - ரை :—வீரர்களின் உடற் குறைகளைப் பிடுங்கித் தின்ன வந்த பறவைகளின் உடலில் அவர்கள் கையிலுள்ள வேல் முதலிய ஆயுதங்கள் தைத்தலால், அவை துன்புற லாயின வென்பதாம். பாறும் பருந்துஞ் சுழன்றாடல், தம் முடலில் தைத்த வேலைப் பறிக்க வலியின்மையா லென்க. இருப்பு எஃகம்பு தைக்க — இதனை, இரும்பு + எஃகு + அம்பு + தைக்க எனப் பிரித்து இரும்பாலாகிய கூரிய கணைகள் பதிய எனினுமாம். எஃகம்—வாளெனினுமாம். (கஅ)

**படைவீரர் செஞ்சோற்றுக் கடனாற்றல்**

சசூ0. வருஞ்சேனை தஞ்சேனை மேல்வந்து
உறாமே வில்வாள்வீரர் வாழ்நாளுகக்
கருஞ்சேவ கஞ்செய்து செஞ்சோறு
அறச்செய்த கைம்மாறு காண்மின்களோ.

ப - ரை :—வரும் சேனை - (போரில் எதிர்த்து) வரும் (பகைவர்) சேனைகள், தம் சேனை மேல் - தங்கள் சேனைகள் மேல், வந்து உறாமே - வந்து அடையாமல், வில் வாள் வீரர் - வில்லையும் வாளையுமுடைய வீரர்கள், வாழ் நாள் உக - (தங்கள்) வாழ்நாள் அழியும்படி, கரும் சேவகம் செய்து - கொடிய வீரத்தொழில் புரிந்து, செம் சோறு - செம்மையாகிய சோற்றுக் கடன், அற செய்த - நீங்கும்படி (போர்) செய்த, கைம்மாறு - பதில் உதவியை, காண்மின்கள்——.

வி - ரை :—படைத் தலைவர்களில் சிலர் தம் படைகளைக் காக்கக் கருதித் தம் முயிரை யிழந்தன ரென்பதாம். 'வருஞ் சேனை......உறாமே' என்றதனால், படைத்தலைவர் என்பது விளங்கும். செஞ்சோறறச் செய்தலாவது:—செம்மையாகிய சோற்றுக் கடன் கழித்தல்; அதாவது வீரர்கள் அரசன் உணவையுண்பதனால் அவனுக்கு வஞ்சனை புரியாமல் போரில் தங்களுயிரை யளித்துத் தமது கடமையை நிறைவேற்றல். 'செஞ்சோற்றுக் கடனீங்கி' [சீவகசி - உஉ௯0] எனவும், 'செஞ்சோற்றுக் கடனின்றே கழியே னாகில்' [வில்லிபா - கஎ - ம்-போர்-உ0] எனவும் வருமாறு காண்க. இதனை அவிப்பலி யென்ப. 'வெள்வாளமருட் செஞ்சோ றல்ல, துள்ளா மைந்த ருயிர்ப்பலி கொடுத்தன்று' [புறப்-வெ - மா - கஅச] என வருவதனு லறிக. (கக)

**வீரர் தலைகள் வீரமகளின் விளையாட்டுக் கருவிகளை யொத்தல்**

சசூக. யானைப்ப டைச்சூரர் நேரான
போழ்தற்றெ ழுந்தாடு கின்றார்தலை
மானச்ச யப்பாவை விட்டாடும்
அம்மானை வட்டொத்தல் காண்மின்களோ.

ப - ரை :—யானை படை சூரர் - யானைப் படைகளையுடைய வீரர்கள், நேர் ஆன போழ்து - (ஒருவரை ஒருவர்) எதிர்த்துப் போர் புரியுங் காலத்தில், அற்று - (அவர்கள் உடலிலிருந்து) நீங்கி, எழுந்து - (மேலே) கிளம்பி, ஆடுகின்றார் தலை - குதித்தாடுகின்ற வீரர்களின் தலைகள், மானம்

சயம் பாவை - பெருமையையுடைய வீரமகள், அம்மானை - அம்மானை யாட்டத்தில், விட்டு ஆடும் - (மேலே) விட்டு விளையாடும், வட்டு ஒத்தல்- விளையாட்டுக் கருவியை ஒத்திருத்தலை, காண்மின்கள் ——,

வி - ரை:—யானைமேலிருந்து போர் புரியும் வீரர்களின் தலைகள் வெட்டுண்டு துள்ளி விழுதல், வீரமகள் அம்மானை யாட்டத்தில் மேலே விட்டு விளையாடும் விளையாட்டுக் கருவிகளை யொத்திருந்தன வென்பதாம். 'இப்பே ரெழுவர் சிரமேழும்...ஓங்கல்விந்தை, கைப்பே ரெழிற்பைங் கழங்கென்றனர்' [வில்லிபா - அ - ம - போர் - ௩௧] என வருமாறு காண்க. அம்மானை—மகளிர் விளையாடும் ஒருவகை விளையாட்டு [தா-கஙௗ]; இதனைக் கலம்பகங்களிலும் பெண்பாற் பிள்ளைத் தமிழ்களிலுங் காண்க. வட்டு—ஒரு வகை விளையாட்டுக் கருவி. இச்செய்யுள் உவமையணியாம். (௨0)

வீரர் வீரசுவர்க்கம் புகல்

௪௬௨. † எதிர்கொளுஞ் சுரர்விமா னங்களிற் சுரர்களாய்
ஏறுமா னவர்கடா மெண்ணுதற் கருமையிற்
கதிர்விசும் பதனிலே யிதனிலும் பெரியதோர்
காளையம் விளையுமா காண்மினோ காண்மினோ.

ப - ரை:—எதிர் கொளும் - (தம்மை) எதிர்கொண் டழைக்கும், சுரர் விமானங்களில் - தேவர்களின் விமானங்களில், சுரர்கள் ஆய் - தேவர்களாகி, ஏறும் மானவர்கள் தாம் - ஏறிச் செல்லும் வீரர்களை, எண்ணுதற்கு அருமையின் - கணக்கிட்டுச் சொல்ல முடியாமையால், கதிர் விசும்பு அதனிலே - ஒளியையுடைய தேவலோகத்திலும், இதனிலும் - இந்தப் போர்க்களத்தி லிருப்பதைக் காட்டினும், பெரியது - பெரிதாகிய, ஓர் களையம் - ஒப்பற்ற வீரர்களின் கூட்டம், விளையும் ஆ(று) - தோன்றும் வகையை, காண்மினோ காண்மினோ——.

வி - ரை:—அளவற்ற வீரர்கள் விமானங்களிலேறி வீரசுவர்க்கம் புக்கன ரென்பதாம். பொருகளத்து உயிர் துறந்த வீரர்கள் சுவர்க்கம் புகுதலை மறம் பாசி என்ப. இதனை, 'மறப்படை மறவேந்தர், துறக்கத்துச் செலவுரைத் தன்று' [புறப்-வெ-மா-அஎ] என்றதனு லறிக. 'குடையும் வாளும்' [தொல்கா-புறத்-௧௩] என்னுஞ் சூத்திரத்தின் இறுதியடிக்கு, 'எயிலுட் போதலும் புட்போல வுட்பாய்தலும் ஆண்டுப் பட்டோர் துறக்கம் புகுதலும் பிறவும் பாசி மறத்தின் பாற்படும்,' என நச்சினார்க் கினியார் பொருள் வரைந்துள்ளமையும் ஈண்டுக் கவனிக்க.

பா - பே :—† எதிர்கொளுஞ் சுடர்மடந் தையரெனுஞ் சிலர்களாய். (உ௧)

குருதிக் கடல்

௪௬௩. அவரிபஞ் சொரிமதங் கழியெனப் புகமடுத்
தவர்பரித் திரையலைத் தமர்செய்கா லிங்கர்தங்
கவரிவெண் ணுரைநிரைத் தவருடற் குருதியிற்
கடல்பரந் தோடுமா காண்மினோ காண்மினோ.

ப - ரை:—அமர் செய் காலிங்கர் அவர் - போர் புரியும் கலிங்க வீரர்களாகிய அவர்களுடைய, இபம் சொரி மதம் - யானைகள் பொழிந்த மதநீர், கழி என - (கடற்கரை) கால்வாய்களைப் போல், புக மடுத்து - (தன்கண்) புகும்படி கலந்தும், அவர் பரி - அவர் குதிரைகளாகிய, திரை அலைத்து - அலைகளை வீசியும், கவரி வெண் நுரை - (அவர்) சாமர

மாகிய வெள்ளிய நுரைகளை, நிரைத்து - வரிசையா யமைத்தும், அவர் உடல் - அந்தக் கலிங்க வீரர்களின் உடல்களிலிருந்து பெருகும், குருதியின் கடல் - இரத்தமாகிய கடலானது, பரந்து ஓடும் ஆறு - (எங்கும்) பரவி ஓடுந் தன்மையை, காண்மினோ காண்மினோ——.

வி - ரை :—கலிங்க வீரர்களின் குருதியாகிய கடலில் யானைகளின் மத நீர் கால்வாய்கள் போல் கலக்கவும், குதிரைகளாகிய அலைகள் வீசவும், கவரிகளாகிய வெள்ளிய நுரை மிதக்கவும், அக்குருதியாகிய கடலெங்கும் பரவியோடின தென்க. காலிங்கர் தம்—தம் சாரியை; காலிங்கர்—முதல் நீண்டது; குருதியின் கடல்—இன் அல்வழிச் சாரியை; செய்யுளாகலின் சுட்டுப் பெயர் முன் வந்தது [நன் - ௩௯௪]. இச்செய்யுளில் உவமையணியும் உருவகணியும் இருத்தல் காண்க.

குருதிநீர் கடலையும் யானைகள் மலைகளையு மொத்தல்

சசுச. புவிபுரந் தருள்செயுஞ் சயதரன் றொருமுறைப்
புணரிமே லணைபடப் பொருவில்விற் குனிதலிற்
கவிகுலங் கடலிடைச் சொரிபெருங் கிரியெனக்
கரிகளின் பிணமிதிற் காண்மினோ காண்மினோ.

ப - ரை :—ஒரு முறை - (முன்பு) ஒரு காலத்தில், புணரி மேல் - கடலில், அணை பட - அணையை அமைக்க, புவி புரந்து அருள் செயும் - உலகத்தி லுள்ளவர்களைக் காத்து அருள் புரியும், சயதரன் - முதற் குலோத்துங்கனுடைய, பொரு இல் வில் - ஒப்பில்லாத (கோதண்டம் என்னும்) வில்லானது, குனிதலின் - வளைதலினால், கவி குலம் - குரங்குகளின் கூட்டம், கடல் இடை - கடலில், சொரி பெரும் கிரி என - சொரிந்த பெரிய மலைகளைப் போல, கரிகளின் பிணம் - யானைகளின் பிணங்களை, இதில்-இந்த (இரத்த) கடலில், காண்மினோ காண்மினோ——.

வி - ரை :—கலிங்க வீரர்களின் கடல் போன்ற குருதியில் மலைகளைப் போன்ற யானைகளின் பிணங்கள் மிதந்தன வென்பதாம். கடல் குருதி வெள்ளத்திற்கும் மலைகள் யானைகளுக்கு முவமை. இராமபிரான் வில்லை வளைத்துக் கணை தொடுத்த பின்பே வருணன் வழி விட்டமையால், 'வில் குனிதலின்' என்றார். இராமபிரானே விசயதரனாய்த் தோன்றினனென்பது கருதி 'புவி புரந்து......குனிதலின்' என்றார் [தா-உ௩உ]. சயதரன்றொரு முறை—ன் விரித்தல்விகாரம். இச்செய்யுளில் உவமையணி யுள்ளமை யுணர்க. இராமபிரான் சீதாதேவியை இராவணனிடமிருந்து மீட்க இலங்கைக்குச் செல்லுங்கால், குரங்குகளைக்கொண்டு இடைவழியிலுள்ள கடலை யணைத்த செய்தி வெளிப்படை [தா -௯௪]. (உ௩)

கலிங்க விரர் கருணாகரன் போரைப் புகழ்தல்

சசுரு. உற்றவா யம்புதம் பரிசையுங் கருவியும்
உருவிமார் பகலமும் முருவிவீழ் *செறுநர்விற்
கற்றவா வொருவன்விற் கற்றவா வென்றுதங்
கைம்மறித் தவரையுங் காண்மினோ காண்மினோ.

ப - ரை :—வாய் உற்ற அம்பு - (போர்க் களமாகிய) இடத்தில் பொருந்திய (கருணாகரன்) கணைகள், தம் பரிசையும் கருவியும் - (கலிங்கராகிய) தங்கள் கேடகத்தையும் கவசத்தையும், உருவி - ஊடுருவிச்

சென்று, அகலம் மார்பும் உருவி - அகலமாகிய மார்பினையும் ஊடுருவுத லால், வீழ் செறுநர் - (போர்க்களத்தில்) விழும் (கலிங்க) வீரர்கள், ஒருவன் - ஒப்பற்றவனாகிய கருணாகரன், வில் கற்ற ஆ(று) - வில் தொழில் கற்ற விதம் (என்னே), என்று - என்று சொல்லி, தம் கை மறித்தவரையும் - தங்கள் கைகளால் (தம் படை வீரரை) விலக்கு வோரையும், காண்மினோ காண்மினோ——.

வி - ரை :—இறந்து படுங் கலிங்கவீரர் பலர் கருணாகரன் வில் வித்தை யைப் புகழ்ந்து தம் படைவீரரை அவன் மேல் போர்க்குச் செல்ல வொட்டாமல் விலக்கின ரென்பதாம். மார்பகலம்:—ஒருபொருட் பன்மொழி யெனினுமாம்; 'கற்றவா........கற்றவா' என்றது இங்கு வியப்பையுணர்த்தினது. கைம்மறித்த லாவது:— கருணாகரன் விடுங் கூரிய கணைகள் தம் படைஞர் மேல் படாமல் அவர்களை விலக்கின ரெனினும் பொருந்தும். வாய்—விளிம் பெனினுமாம். கற்றவாறு என்பது கற்றவாவெனக் கடையிற் குறைந்து நின்றது. என்னே —இசையெச்சமாய் வருவிக்கப்பட்டது. பா - பே :—* செருவினில். (உ௪)

வீரர் உடல்கள் தெய்வத்தன்மை யெய்தினமை யொத்தல்

சகசு. விண்ணின்மொய்த் தெழுவிமா னங்களிற் சுரர்களாய்
மீதுபோ முயிர்களே யன்றியே யின்றுதங்
கண்ணிமைப் பொழியவே முகமலர்ந் துடல்களுங்
கடவுளோர் போலுமா காண்மினோ காண்மினோ.

ப - ரை :—மொய்த்து - (போர்க்களத்தில்) நெருங்கி, எழு விமானங் களில் - (மேலே) எழுகின்ற தேவ விமானங்களில், சுரர்கள் ஆய்-தேவர்க ளாகி, விண்ணின் மீது - தேவ லோகத்தில், இன்று - இப்போது, போம் உயிர்களே அன்றி - போகும் (வீரர்களின்) உயிர்கள் மாத்திர மல்லாமல், உடல்களும் - (அவர்கள்) உடம்புகளும், முகம் மலர்ந்து - முகமலர்ச்சி கொண்டு, தம் கண் இமைப்பு ஒழிய - தங்கள் கண்கள் இமைத்தலைத் தவிர்தலால், கடவுளோர் போலும் ஆ(று) - தேவர்களை ஒத்திருக்கும் விதத்தை, காண்மினோ காண்மினோ——.

வி - ரை:—வீரர்களின் உயிர்கள் வானுல கடைந்ததன்றி, அவர்கள் உடம்பு களுந் தெய்வத்தன்மை யடைந்தமையை யொத்திருந்தன வென்பதாம். தேவர்கள் கண்ணிமையாதது போல், உயிர் துறந்த வீரர்களின் கண்களும் கண்ணிமைப் பொழிந்தன வென்க. இதனால் அவர்கள் தங்கள் கண் திறந்தவண்ணம் ஆண்மை யோடு முகமலர்ச்சியுற்று விளங்கின ரென்பது தோன்றும். உடல்களும்— உம்மை இறந்தது தழுவியது. இதில் உவமையணி யுள்ளமை யறிக. (உ௫)

வெட்டுண்ட யானைத்தலைகள் சம்மட்டிகளை யொத்தல்

சகஎ. பிறைப்பெ ரும்பணை வேழ முன்னொடு
பின்று ணிந்துத ரைப்படுங்
குறைத்த லைத்துணி கொல்ல னெஃகெறி
கூட மொத்தமை காண்மினோ.

ப - ரை:—பிறை பெரும் பணை - பிறைச் சந்திரனைப் போன்ற பெரிய கொம்புகளையுடைய, வேழம் - (போரில் பட்ட) யானைகள், முன் னொடு (தலையாகிய) முற்பகுதியும், பின் - (உடலாகிய) பிற்பகுதியும், துணிந்து - வெட்டுண்டு, தரை படும் - நிலத்தில் விழுந்து கிடக்கும்,

குறை - (உடல்) குறைந்த, தலை துணி - (தலைகளாகிய) துண்டுகள், கொல்லன் ——, எஃகு எறி - (வாள், வேல் முதலிய) ஆயுதங்களை அடிக்கும், கூடம் ஒத்தமை-சம்மட்டியை ஒத்திருத்தலை, காண்மினோ ——.

விரை:—உடலின் பகுதி வெட்டுண்டு கிடக்கும் யானைகளின் தலைகள் சம்மட்டிகளை யொத்தன வென்பதாம். யானைகளின் தலைகளைச் சம்மட்டிகளாகவும், அவைகளின் துதிக்கைகளைச் சம்மட்டிப் பிடிகளாகவுங் கொள்க. குறைத்தலைத் துணி என்பதற்குத் தலை குறைந்த யானையின் பிணங்களாகிய துண்டுகள் எனின், பொருள் சிறவாமை யுய்த்துணர்க. (உசு)

வீரர் காளமூதுவோரை யொத்தல்

சசஅ. வாயி னிற்புகு வேல்கள் பற்றுவ
லக்கை யோடுநி லத்திடைச்
சாயு மற்றவர் காள மூதிகள்
தம்மை யொத்தமை காண்மினோ.

ப - ரை:—வாயினில் புகு வேல்கள் - (தங்கள்) வாயில் புகுந்த வேலாயுதங்களை, பற்று வலம் கையோடு - (பறிக்க) பிடித்த வலக் கைகளோடு, நிலத்திடை சாயும் மற்று அவர் - நிலத்தில் சாய்ந்து கிடக்கும் அந்த வீரர்கள், காளம் ஊதிகள் தம்மை - ஊது கொம்பை ஊதுகின்றவர்களை, ஒத்தமை - ஒத்திருத்தலை, காண்மினோ ——,

வி - ரை:—தங்கள் வாயிற் புகும் வேல்களைப் பறிக்கும் வீரர்கள் காளம் ஊதுவோரை ஒத்திருந்தா ரென்பதாம். வாயிலுள்ள வேல்கள் காளத்திற்கும் அவ்வேலைப் பறிக்க முயன்ற வீரர்கள் காள மூதுவோர்க்கு முவமை. காளமூதுவோர் காளத்தை வலக்கையாற் பற்றுதல்போல் வீரர்களும் வேலை வலக்கையால் பற்றின ரென்க. (உஎ)

வீரர் மாலுமிகளை யொத்தல்

சசக. படவூன்று நெடுங்குந்த மார்பி னின்று
பறித்ததனை நிலத்தூன்றித் தேர்மே னிற்பார்
படவூன்றி விடுந்தொழிலோ ரென்ன முன்னம்
\$ பசுங்குருதி தோன்றுமால் காண்மின் காண்மின்.

ப - ரை:—படவு ஊன்றி விடும் - படகுகளை (துடுப்புக்களால் நீரில்) அழுத்திவிடும், தொழிலோர் என்ன - தொழிலையுடைய மாலுமிகளைப் போல, பட ஊன்று - அழுந்தத் தைத்த, நெடும் குந்தம் - பெரிய வேலாயுதத்தை, மார்பின் நின்று பறித்து - (தங்கள்) மார்பிலிருந்து பிடுங்கி, அதனை - அந்த வேலாயுதத்தை, நிலத்து ஊன்றி - தரையில் ஊன்றி, தேர் மேல் நிற்பார் முன்னம் - தேரில் நிற்கும் வீரர்களுக்கு எதிரில், பசும் குருதி தோன்றும் - பச்சிரத்தமாகிய நீர் தோன்றும், காண்மின் காண்மின் ——.

வி - ரை:—படகோட்டிகள் துடுப்புக்களை யூன்றிப் படகுகளை ஆற்றில் செலுத்துதல் போல், வீரர்கள் தம் மார்பில் தைத்த வேல்களை யூன்றிக் குருதி யாற்றில் தேர்மேல் நின்றன ரென்பதாம். படகோட்டிகள் வீரர்களுக்கும், படகுகள் தேர்களுக்கும், துடுப்புக்கள் குந்தங்களுக்கும், பசுங்குருதி யாறுக்கு முவமை. என்ன—உவம வுருபிடைச் சொல்; முன்னம்—அம் சாரியை; தோன்றுமால்—ஆல்-அசை. இம் மூன்று செய்யுட்களும் உவமை யணியாம்.

பா - பே:—\$ பைங்குருதி நீர்தோன்றும். (உஅ)

நிணமெனக் கௌவிச் சென்ற பருந்தின் நிலை

ருoo. வாயகலம் பரத்தமொடு நிணங்கொண் டோட
மற்றதனை வள்ளுகிரின் பருந்து ‡ கோணல்
வாயகலம் பரத்தினிடைக் §கௌவி வல்வாய்
வகிர்ப்பட்டு நிலம்பட்ட வண்ணங் காண்மின்.

ப - ரை:—வாய் அகல் அம்பு - (கூர்மை) பொருந்திய அகன்ற அம்பை, நிணத்தொடு - கொழுப்புடன், அரத்தம் கொண்டு ஓட - இரத்த வெள்ளம் இழுத்துக்கொண்டு ஓட, அதனை - அந்த அம்பை, வள் உகிரின் பருந்து - கூர்மையாகிய நகங்களையுடைய பருந்து, ‡கோணல் வாய் கௌவி - (தன்னுடைய) வளைந்த அலகால் கௌவிக்கொண்டு (பறந்து), அகல் அம்பரத்தின் இடை - அகன்ற ஆகாயத்தில், வல் வாய் வகிர் பட்டு - வலிய வாய் பிளவுண்டு, நிலம் பட்ட வண்ணம் - பூமியில் விழுந்த விதத்தை, காண்மின்——.

வி - ரை:—அம்புகள் கொழுப்பால் மூடுண்டு கிடத்தலை யறியாமல் பருந்துகள் கௌவிச் சென்றமையால், அந்த அம்புகளின் கூரிய விளிம்புகளால் அவைகளின் வாய் பிளவுண்டன வென்க. அகலம்பு—பண்புத்தொகை, அரத்தமொடு-இதிலுள்ள ஒடு உருபு நிணம் என்பதனோடு கூட்டப்பட்டது. மற்று—அசைநிலை. பா-பே:—‡ கொண்டல், § கௌவி யவ்வாய். (உகூ)

பிணந்தின் பூதத்தின் செலவு

ருoக. சாதுரங்கத் தலைவனைப்போர்க் களத்தில் வந்த
தழைவயிற்றுப் பூதந்தா னருந்தி மிக்க
சாதுரங்கந் தலைசுமந்து கமஞ்சூற் கொண்டு
† தனிப்படுங்கா ரெனவருமத் தன்மை காண்மின்.

ப - ரை:—போர் களத்தில் வந்த - போரைப் புரியும் களத்தில் வந்த, தழை வயிறு பூதம் - பருத்த வயிற்றையுடைய பூதமானது, சாதுரங்கம் தலைவனை - நால்வகைப் படைகளுக்கும் தலைவனாகிய ஒருவனுடலை, அருந்தி - (தன் வயிறு நிரம்ப) புசித்து, மிக்க சாதுரங்கம் - இறந்துபட்ட மிகுதியாகிய குதிரைகளை, தலை சுமந்து - (தன்) தலையில் சுமந்து, கமம் சூல் கொண்டு - நிறைந்த கருக்கொண்டு, தனி படும் - ஒப்பற்ற தன்மை பொருந்தும், கார் என வரும் - மேகம்போல் வருகின்ற, அ தன்மை - அந்தத் தன்மையை, காண்மின்——.

வி - ரை:—பெரிய பெண் பூதமொன்று சிறந்த வீரனுடலைத் தன் வயிறு பருக்க உண்டு இறந்து பட்ட குதிரைகளைச் சுமந்து வருங்காட்சி, சூல் கொண்ட கரிய மேகம் வருதலை ஒத்திருந்த தென்பதாம். சூல்கொண்ட கரிய மேகம் வயிறு பருக்கவுண்ட கரிய பூதத்திற் குவமை; பூதம் உயிர் துறந்த குதிரைகளைச் சுமந்து சென்றமை மேலும் உண்ணுதற் பொருட்டாம். சாதுரங்கம்—இரண்டனுள் முந்தினது சதுரங்கம் என்பதன் நீட்டல்; பண்புத்தொகை. பிந்தினது வினைத்தொகையாம். சதுரங்கம்—இதனை ௩சகூ-ம், தாழிசையிற் காண்க. கமஞ் சூல்—உரிச்சொற் றொடர். இச்செய்யுள் உவமையணியாம்.
பா - பே:—† தனிமேகம் வருமந்த. (௩o)

விழுப்புண்பட்ட யானை வீரர்

ருoஉ. முதுகுவடிப் படியிருக்கு மென்ன நிற்கு
முனைக்களிற்மேறூர் செருக்களத்து முந்து தங்கண்

முதுகுவடுப் படுமென்ற வடுவை யஞ்சி
முன்னம்வடுப் பட்டாரை யின்னங் காண்மின்.

ப - ரை :—முது குவடு - பெரிய மலைகள், இப்படி இருக்கும் - இவ்வாறே யிருக்கும், என்ன நிற்கும் - என்று (கண்டோர்) சொல்லும் படி நிற்கும், முனை களிற்றோர் - போரைப் புரியும் யானைகளையுடைய வீரர்கள், முந்து - (ஒருவரை யொருவர் வெல்ல) முற்படும், செரு களத்து - போர்க்களத்தில், தங்கள் முதுகு வடு படும் - தங்கள் முதுகில் காயம் உண்டாகும், என்ற வடுவை அஞ்சி - என்ற பழிக்குப் பயந்து, முன்னம் - (தங்கள்) முன்புறமாகிய மார்பில், வடு பட்டாரை - காய மடைந்தவர்களை, இன்னம் - இன்னமும், காண்மின்——.

வி - ரை :—யானை வீரர் ஒருவரையொருவர் எதிர்த்து மார்பில் புண்பட்டுக் கிடந்தன ரென்பதாம். 'முதுகுவடு......அஞ்சி' என்றது அவர்கள் ஆண்மையை யுணர்த்தினது. போரில் புறங்கொடாத வீரர்களின் முகத்திலும் மார்பிலும் படும் புண் விழுப்புண் எனப்படும். [தா-ருகூ] இந்நான்கு செய்யுட்களிலும் யமகம் என்னுஞ் சொல்லணியுள்ளமை காண்க. களிற்றோர்—குறிப்பு வினையாலணையும் பெயர். (ருக)

தேவி பேய்களைக் கூழடுமாறு கூறல்

ருoரு. களமடையக் காட்டுதற்கு முடிவ தன்று
கவிழுமதக் கரிசொரியக் குமிழி விட்டுக்
குளமடைபட் டதுபோலுங் குருதி யாடிக்
கூழடுமி னென்றருளக் கும்பிட் டாங்கே.

ப - ரை :—களம் அடைய - போர்க்களம் முழுதும், காட்டுதற்கு - (உங்களுக்கு) காட்டுவதற்கு, முடிவது அன்று - முடியாது, கவிழும் மதம் கரி - இறந்து படும் மதத்தைப் பொழியும் யானைகள், குளம் மடை - குளத்தின் மடையானது, பட்டது போலும் - அழிந்தது போல், குமிழி விட்டு - குமிழிகள் உண்டாக, குருதி சொரிய - இரத்தத்தைச் சொரிதலால், ஆடி - (அதில் நீங்கள் எல்லாரும்) மூழ்கி, கூழ் அடுமின் - கூழைச் சமைத் துண்ணுங்கள், என்று அருள - என்று (தேவி பேய்களுக்கு) கட்டளையிட, ஆங்கு - அப்பொழுது, கும்பிட்டு - (அப்பேய்கள் தேவியை) வணங்கி,

வி - ரை :—தேவி கூழ் சமைத் துண்ணுமாறு பேய்களுக்குப் பணித்தன ளென்பதாம். மடை—நீரோடுங் கால்வாய். 'கரி சொரிய......குருதி' என்றது இரத்தப் பெருக்கை யுணர்த்தினது. மடையழிதலால் அதிலுள்ள நீர் பெருகி வழிதல் போல், போர்க்களத்தில் உதிரம் பெருகிப் பரவி யோடின தென்க. விட்டு — விட என்பதன் திரிபு. அடுமின்—ஏவற் பன்மை வினைமுற்று. இவ்விரண்டு செய்யுட்களிலும் உவமையணி யுள்ளமை காண்க. (ருஉ)

பேய்கள் கூழடுதல்

ருoச. குறுமோ டிநெடு நிணமா லாய்குடை கலதி கூரெயி றீலி
மறிமா டிகுதிர் வயிறீ கூழட வாரீர் கூழட வாரீரே.

ப - ரை :—குறுமை மோடி - குறுகிய வடிவமுடைய மோடி என் பவளே, நெடுமை நிணமாலாய் - நீண்ட வடிவமுடைய நிணமாலை யென் பவளே, குடை கலதி - (உதிர வெள்ளத்தில்) மூழ்கும் கலதி என்பவளே,

கூர் எயிறீ - கூரெயிறி என்பவளே, நீலி - நீலி யென்பவளே, மறிமாடீ - மறிமாடி என்பவளே, குதிர் வயிறி - குதிர் வயிறி என்பவளே, கூழ் அட வாரீர் - கூழ் காய்ச்ச வருவீராக, கூழ் அட வாரீர் ——.

**வி - ரை :**—மோடி, நீலி இவ்விரண்டும் தேவியின் பேர்கள்; இவை பேய்களுக் கிடப்பட்டனவென்க. நிணம் மாலே—கொழுப்பை மாலையாக அணிந்தவள், கலதி—மூதேவி; இடைவிடாமல் தூங்குதல் பற்றி அப்பேய் இப்பெயர் பெற்றது போலும். கூர் எயிறி—கூர்மையாகிய பற்களை யுடையவள்; மறி மாடி—ஆட்டை விழுங்கும் வயிற்றை யுடையவள்; மடி—வயிறு; குதிர் வயிறி—நெற்குதிர் போன்ற வயிற்றை யுடையவள். தேவி கட்டளையின்படி பேய்கள் கூழ் சமைக்கச் சுருதி ஒன்றை யொன்று விளித்தன வென்க. மோடீ, நிணமாலாய் முதலியன சேய்மை விளிகள்; 'கூழட......வாரீர்' இவ்வடுக்கு விரைவின் கண் வந்தது. (கூகூ)

பல் விளக்கல்

௫௦௫. பறிந்த மருப்பின் வெண் கோலாற்
பல்லே விளக்கிக் கொள்ளீரே
மறிந்த களிற்றின் பழுவெலும்பை
வாங்கி நாக்கை வழியீரே.

ப - ரை :—மறிந்த களிற்றின் - மடங்கி (இறந்து) விழுந்த யானைகளினின்று, பறிந்த - நீங்கிய, மருப்பின் - கொம்பாகிய, வெண் கோலால் - வெண்மையாகிய பற்குச்சிகளால், பல்லே விளக்கி கொள்ளீர் - பற்களைத் துலக்கிக் கொள்வீராக, பழு எலும்பை வாங்கி - (அவைகளின்) விலா வெலும்பைப் பறித்து, நாக்கை வழியீர் - நாக்கை வழித்துக்கொள்வீராக.

**வி - ரை :**—யானைக் கோம்புகளால் பற்களை விளக்கி அவைகளின் விலா வெலும்புகளால் நாக்கை வழித்துக் கொள்ளுங்கள் என்பதாம். மருப்பின் வெண் கோல்—இன் அல்வழிச் சாரியை; கொள்ளீர், வழியீர்—இவ்விரண்டு உடன்பாட்டுப் பொருளில் வந்த ஏவற் பன்மை வினைமுற்றுக்கள். மறிந்த களிற்றின்—இடை நிலை விளக்கணி. இது முதல் ௫௦௪-ம், தாழிசையளவும் பேய்கள் ஒன்றேடொன்று பேசிக்கொண்டு பல் விளக்கல், நீராடல் முதலிய தொழில்கள் புரிந்தமையை யுணர்த்தும். (கூச)

எண்ணெய் தேய்த்துக் கொள்ளல்

௫௦௬. வாயம் புகளா முகிர்கொள்ளி வாங்கி யுகிரை வாங்கீரே
பாயுங் களிற்றின் மதத்தயிலம் பாயப் பாய வாரீரே.

ப - ரை :—வாய் அம்புகள் ஆம் - (கூர்மை) பொருந்திய அம்புகளாகிய, உகிர் கொள்ளி வாங்கி - நகங்களைக் களையும் கருவியை எடுத்து, உகிரை வாங்கீர் - (உங்கள்) நகங்களைக் களைவீராக, களிற்றின் பாயும் - யானைகளிலிருந்து பெருகும், மதம் தயிலம் - மத நீராகிய எண்ணெய், பாய பாய - மிகுதியாய்ப் பெருகும்படி, வாரீர் - (உங்கள் தலையில்) வார்த்துத் தேய்த்துக் கொள்வீராக.

**வி-ரை:**—கூரிய அம்புகளால் நகங்களைக்களைந்து, யானை மதநீராகிய எண்ணெயைத் தலையில் தேய்த்துக்கொள்ளுங்கள் என்பதாம். பாயப்பாய—அடுக்கு மிகுதியின்கண் வந்தது. அம்புகளாம் உகிர்க் கொள்ளி; மதத்தயிலம்—உருவக வணிகள். இப்பகுதியிலுள்ள ஏனைய உருவகவணிகளையும் உய்த்துணர்க. (கூரு)

**உதிரத்தில் மூழ்கல்**

௫௦௭. எண்ணெய் போக வெண்மூளை யென்னுங் களியான்
[மயிர் குழப்பிப்
பண்ணை யாகக் குருதிமடுப் பாய்ந்து நீந்தி யாடீரே.

ப - ரை :—எண்ணெய் போக - (தலையிலும் உடம்பிலும் பூசிய யானை மத நீராகிய) எண்ணெய் நீங்கும்படி, வெண் மூளை என்னும் - வெண்மையாகிய மூளை யென்று சொல்லப்படும், களியால் மயிர் குழப்பி - குழைந்த சேற்றை மயிர்க்குத் தடவி, குருதி மடு - உதிரமாகிய தடாகத்தில், பண்ணை ஆக பாய்ந்து - கூட்டமாகப் பாய்ந்து, நீந்தி ஆடீர் - நீந்தி விளையாடுவீராக.

வி - ரை :—யானை மதநீராகிய எண்ணெய் போகும்படி மூளையாகிய குழைந்த சேற்றைத் தேய்த்துக் குருதி வெள்ளத்தில் மூழ்குவீராக வென்பதாம். பேய்கள் உதிர வெள்ளத்தில் மூழ்குதலை, 'கழுது குருதி படிய' [பாண்-கோ-௧௦௩] எனப் பிறர் கூறியதனாலு மறிக. (௩௬)

**இதுவுமது**

௫௦௮. குருதிக் குட்ட மித்தனையுங் *கோலும் வேலுங் குந்தமுமே
கருவிக் கட்டு மாட்டாதீர் கரைக்கே யிருந்து குளியீரே.

ப - ரை :—குருதி குட்டம் - உதிரயாகிய தடாகத்தில், கோலும் வேலும் குந்தமும் - அம்புகளும் வேல்களும் ஈட்டிகளுமாகிய இத்தனை கட்டு கருவியும் - இவ்வளவு மிகுதியாகிய ஆயுதங்களிலும், மாட்டாதீர் - அகப்பட்டுக் கொள்ளாதவராய், கரைக்கே இருந்து - கரையிலிருந்து, குளியீர் - குளிப்பீராக.

வி - ரை :—குருதி வெள்ளத்திலுள்ள ஆயுதங்களில் அகப்பட்டுக் கொள்ளாமல் கரைந்தாய் மூழ்குங்கள் என்பதாம். மாட்டாதீர்—முற்றெச்சம்; கரைக்கு—உருபு மயக்கம். பா - பே :—* கொல்லும் வாளும். (௩௭)

**நிணத்துகில் புனைதல்**

௫௦௯. ஆழ்ந்த குருதி மடுநீந்தி யங்கே $யிளையா திங்கேறி
வீழ்ந்த கலிங்கர் நிணக்கலிங்கம் விரித்து விரித்துப் புனையீரே.

ப - ரை :—ஆழ்ந்த குருதி மடு - (மிகவும்) ஆழ்ந்த இரத்தமாகிய தடாகத்தில், நீந்தி——, அங்கே இளையாது - அங்கே வருந்தாமல், இங்கு ஏறி - இந்தக் கரையில் ஏறி, வீழ்ந்த கலிங்கர் - (போரில்) இறந்து பட்ட கலிங்க வீரர்களின், நிணம் கலிங்கம் - கொழுப்பாகிய ஆடையை, விரித்து விரித்து - நன்றாய் விரித்து, புனையீர் - அணிவீராக.

வி - ரை :—குருதி நீரில் மூழ்கிய பின், கொழுப்பாகிய ஆடையைப் புனைந்து கொள்ளுங்கள் என்பதாம். ௫௦௫-ம் தாழிசை முதல் இதுவரை பேய்கள் பற்களைத் தேய்த்து நகங்களைக் களைந்து எண்ணெய் தேய்த்து மூழ்கி நிணத் துகில் புனைந்து கொண்டமை கூறினர். நிணக் கலிங்கம்—இதனை ௧௭௦-ம், தாழிசையிற் காண்க. பா - பே :—$ இளையா திளைப்பாறி. (௩௮)

**பேய்களணியும் அணி வகைகள்**

௫௧௦. மதங்கொள் கரியின் கோளகையை மணிச்சூ டகமாச்
[† செறியீரே
பதங்கொள் புரவிப் படிதரளப் பொற்பா டகமாப் புனையீரே.

ப - ரை :—மதம் கொள் - மதத்தைப் பொழியும், கரியின் கோளகையை - யானைகளின் கிம்புரிகளை, மணி சூடகம் ஆ(க) - அழகிய

வளையல்களாக, செறியீர் - அணிவீராக, பதம் - அறுகம் புல்லை, கொள் - (உணவாக) கொள்ளும், புரவி படி - குதிரைகளின் அங்க வடிகளை, தாளம் - முத்துக்களைப் பதித்த, பொன் பாடகம் ஆ(க) - அழகிய பாடகமாய், புனையீர் - அணிவீராக.

வி - ரை :—யானைகளின் கிம்புரிகளை வளையல்களாகவும், குதிரைகளின் அங்கவடிகளைப் பாடகங்களாகவும் அணியுங்கள் என்பதாம். கோளகை— யானைகளின் தந்தங்களி லணியும் பூண்; இதனைக் கிம்புரி யெனவும் வழங்குவதுண்டு. இது முதல் பேய்களணியும் அணிகளைக் கூறுகிறார்.

பா - பே—† புனையீரே. (கூக)

விடுகம்பி புனைதல்

ருகக. ஈண்டுஞ் செருவிற் படுவீர
றெறியும் பாரா வளையடுக்கி
வேண்டுமளவும் வாய்நெகிழ்த்து
விடுகம் பிகளாப் *புனையீரே.

ப - ரை :—ஈண்டும் செருவில் - (நால்வகைப் படைகளும்) நிறைந்த போர்க்களத்தில், படு வீரர் - இறந்துபட்ட வீரர்கள், எறியும் - (ஒருவர் மேல் ஒருவர் வீசி) எறியும், பாரா வளை அடுக்கி - வளை தடிகளை அடுக்கி, வேண்டும் அளவு - (அவரவர்கட்கு) வேண்டிய வள்வில், வாய் நெகிழ்த்து - (அந்த வளை தடிகளின்) வாயை யகற்றி, விடு கம்பிகள் ஆ(க) - விடு கம்பி என்னும் ஆபரணங்களாக, புனையீர் - அணிவீராக.

வி - ரை :—வளை தடிகளை விடுகம்பிகள் என்னும் ஆபரணங்களாக அணியுங்கள் என்பதாம். பாராவளை—இது பாராவளைய மெனவும் வழங்கப்படும்.

பா - பே :—* கொள்ளீரே. (சo)

காப்பும் இரட்டை வாளியு மணிதல்

ருகஉ. பணைத்த பனைவெங் கரிக்கரத்தாற்
பரிய பருநாண் கட்டீரே
இணைத்த முரசம் வாள்காம்பிட்
டிரட்டை வாளி யேற்றீரே.

ப - ரை :—பணைத்த - பெருத்த, வெம் கரி - கொடிய யானைகளின், பனை கரத்தால் - பனைமரம் போன்ற நீண்ட துதிக்கையால், பரிய பரு நாண் - மிகவும் பெரிய (காப்பு) கயிற்றை, கட்டீர் - கட்டிக்கொள்வீராக, இணைத்த முரசம் - (ஒன்றோ டொன்று) சேர்த்த முரசங்களை, வாள் காம்பு இட்டு - வாளாயுதங்களாகிய காம்புகளை அமைத்து, இரட்டை வாளி - இரட்டை வாளி யென்னும் ஆபரணமாக, ஏற்றீர் - ஏற்று அணிவீராக.

வி - ரை :—யானைத் துதிக்கையால் காப்புக் கயிறும், முரசத்தால் இரட்டை வாளியும் அணியுங்கள் என்பதாம். நாண்—பொன்னுண் எனினுமாம். பரிய— பருமை என்னும் பண்படியாய்ப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். (சக)

தோள் வளையும் ஏகாவலியும் புனைதல்

ருகங. பட்ட புரவிக் கவிகுரத்தாற்
பாகு வலயஞ் சாத்தீரே
இட்ட சுரிசங் கெடுத்துக்கோத்
தேகா வலியுஞ் சாத்தீரே.

ப - ரை :—பட்ட புரவி - இறந்துபட்ட குதிரைகளின், கவி குரத்தால் - கவிந்த குளம்புகளால், பாகு வலயம் - தோள் வளைகளை, சாத்தீர் - அணிவீராக, இட்ட - (இறந்தவர் களத்தில்) போட்டு விட்ட, சுரி சங்கு - சுழித்தலையுடைய சங்குகளை, எடுத்து கோத்து——, ஏகா வலியும் - ஒற்றைச்சர முத்து மாலைகளாகவும், சாத்தீர் - அணிவீராக.

வி - ரை :—இறந்த குதிரைகளின் குளம்புகளால் தோள் வளைகளையும் சங்குகளால் ஏகாவலியும் அணிவீராக வென்பதாம். சங்கு என்றது—இறந்துபட்ட வீரர்கள் போர்க்களத்தில் முழக்கின சங்குகளை யென்க. ஏகாவலி-ஏக+ஆவலி தீர்க்க சந்தி ; ஒற்றை வரிசை யென்பதாம். பா-பே :—$ கவிகுளத்தால்.

வன்னசர மணிதல்

ருகச. பொருசின வீரர்தங் கண்மணியும்
‡போதக மத்தக முத்தும்வாங்கி
வரிசைய றிந்து $நரம்பிற்கோத்து
வன்னச ரங்க ளணியீரே.

ப - ரை :—சினம் பொரு - கோபத்தோடு போர் புரிந்த, வீரர்தம் - வீரர்களின், கண் மணியும்——, போதகம் மத்தகம் - யானைகளின் தலைகளிலுள்ள, முத்தும் வாங்கி - முத்துக்களையும் பறித்து, வரிசை அறிந்து - (தக்க) முறை யறிந்து, நரம்பில் கோத்து - (அவைகளை) நரம்புகளில் கோத்து, வன்ன சரங்கள் - வன்ன சரங்கள் என்னும் ஆபரணங்களாக, அணியீர் - அணிவீராக.

வி - ரை :—வீரர் கண்மணிகளையும் யானைத் தலையிலுள்ள முத்துக்களையும் நரம்பிற் கோத்து வன்னசரம் என்னும் ஆபரணமாக அணியுங்கள் என்பதாம். போதக மத்தக முத்து—இதனை சகஅ-ம், தாழிசையிற் காண்க. 'தந்தி வராக மருப்பு......முத்தமீனு மிருபதுமே' [இரத்தி-நரு] என்றமையும் இங்குக் கவனிக்க. உம்மைகள் இரண்டும் எண்ணின்கண் வந்தன.

பா - பே :—‡ புனைபோ தகமத் தகமுத்தும், $ மயிர்க்கோத்து. (சங)

பேய்கள் கூழடத் தொடங்கல்

ருகரு. கொள்ளு மெனைப்பல கோலமென்மேற்
கொண்டிட வேளையு மீதூர
உள்ளும் *புறம்பும் வெதும்புங்காண்
உண்பத னுக்கொருப் படுவீரே.

ப - ரை :—கொள்ளும் - (அணிந்து) கொள்ளும், எனை பல கோலம் - மற்றும் பல அலங்காரங்களையும், மேல் மேல் - மேலும் மேலும், கொண்டிட - (புனைந்து) கொள்ள, வேளையும் மீதூர - காலம் அதிகரித்ததால், உள்ளும் - (பசித்தழல் நமது வயிற்றின்) உட்புறத்தையும், புறம்பும் - (உடலின்) வெளிப்புறத்தையும், வெதும்பும் - வருத்தும், உண்பதனுக்கு - (ஆதலால் இனிக் கூழைச் சமைத்து) உண்ணுவதற்கு, ஒருப்படுவீர் - (நீங்கள் அனைவரும்) இணங்குவீராக.

வி - ரை :—அலங்காரஞ் செய்து கொள்ளுவதால் காலம் நீட்டித்தல் கருதி, இனிக் கூழைச் சமைத்துண்ண முயலுங்கள் எனப் பேய்கள் ஒன்றேடொன்று சொல்லிக் கொண்டன என்பதாம். எனை யென்பது எனையெனக் குறுகி நின்றது. காண்—முன்னிலையசை. பா - பே :—*வெதும்பும் புறம்பேண(து).

அடுக்களை யமைத்தல்

ருகசு. மாகாய மதமலையின் பிணமலைமேல்
வன்கழுகின் சிறகாற் செய்த

ஆகாய மேற்கட்டி யதன்கீழே
அடுக்களைகொண் டடுமி னம்மா.

ப-ரை:—ஆகாயம் - ஆகாயத்தில், வன் கழுகின் - வலிய கழுகு களின், சிறகால் செய்த - சிறகுகளால் அமைந்த, மேல் கட்டி அதன் கீழே - பந்தலின் கீழ், மா காயம் - பெரிய உடம்பையுடைய, மதம் மலையின் - மத யானைகளின், பிணம் மலை மேல் - பிணங்களாகிய மலையின் மேல், அடுக்களை கொண்டு - சமையலறையை அமைத்துக்கொண்டு, அடுமின் - (கூழை) சமையுங்கள்.

வி-ரை:—பறவை நிழற் பந்தலில் யானைப் பிணங்களின் மேல் சமையலறையை அமைத்துக்கொண்டு கூழ் சமையுங்கள் என்பதாம். போர்க்களத்தி லிறந்துபட்ட பிணங்களின் தசை, நிணம் முதலியவற்றை யுண்ணுதற்குப் பறவைகள் வானத்தில் வட்டமிடலாயின வென்க. பறவைகளின் நிழலைப் பந்த லாகக் கூறுதலை, 'பரந்தன பறவைப் பந்தரே' [கம்பரா - அகலிகைப்-நுச] எனவும், 'இட்டகை கால்செறி களமுழு துங்கழு கிட்டன காவணமே' [வில்லிபா-கசு-ம் போர்-சுக] எனவும் வருமாற்றா னறிக. மதமலை—அடையடுத்த உவமையாகு பெயர்; அம்மா—அசை.

பா-பே:—* கீழி னிழற்கொண்டிங் கடுமி னம்மா. (சரு)

அடுப் பமைத்தல்

ருகஎ. பொழிமதத்தா னிலமெழுகிப் பொடிந்துதிர்ந்த
பொடித்தரளப் பிண்டி தீட்டி
அழிமதத்த † மத்தகத்தை யடுப்பாகக்
கடுப்பாக்கொண் டடுமி னம்மா.

ப-ரை:—பொழி மதத்தால் - (யானைகள்) பொழிந்த மத நீரால், நிலம் மெழுகி——, பொடிந்து உதிர்ந்த - பொடியா யுதிர்ந்த, தரளம் பொடி - முத்துத் தூளால், பிண்டி தீட்டி - கோலமிட்டு, அழி மதத்த - அழிந்த மதத்தை யுடையனவாகிய, மத்தகத்தை - யானைத் தலைகளை, அடுப்பு ஆக கொண்டு - அடுப்புக்களாக வமைத்துக்கொண்டு, கடுப்பு ஆ(க) - விரைவாய், அடுமின் - (கூழை) சமையுங்கள்.

வி-ரை:—யானை மதநீரால் நிலத்தை மெழுகி முத்துத் தூளால் கோல மிட்டு யானைத் தலைகளை அடுப்பாக வமைத்துக் கூழைச் சமையுங்கள் என்ப தாம். இறந்துபட்ட யானைகளாதலால், 'அழிமதத்த மத்தகம்' என்றார்.

பா-பே:—† மத்தகங்கள். (சசு)

பானைகளை அடுப்பினி லேற்றல்

ருகஅ. கொற்றவாண் மறவ ரோச்சக் குடரொடு தலையுங் காலும்
அற்றுவீ ழானைப் பானை யடுப்பினி லேற்று மம்மா.

ப-ரை:—கொற்றம் வாள் மறவர் - வெற்றியையுடைய வாளைப் பிடித்த வீரர்கள், ஓச்ச - (போரில் தங்கள் வாளை) வீசுதலால், குடரொடு தலையும் காலும் - குடல்களும் தலைகளும் கால்களும், அற்று வீழ - (வெட் டுண்டு) நீங்கி விழுந்த, ஆனை பானை - ஆனைகளின் வயிறுகளாகிய பானை களை, அடுப்பினில் ஏற்றும் - அடுப்பில் ஏற்றுங்கள்.

வி-ரை:—யானைகளின் வயிறுகளாகிய பானைகளை அடுப்பி லேற்றுங்கள் என்பதாம். 'குடரொடு தலையுங் காலு மற்றுவீழ் யானை' என்றதனால்,

யானையின் வயிறென்பது விளங்கும். யானையின் மத்தகத்தை யடுப்பாகவும் அதன் வயிற்றைப் பானையாகவும் கூறுதலை, 'வான யானைத் தலைகளு மடுப்புக் கொள்ளீர், கடுப்பிலத் தாழி யேற்றீர்' [தக்கயா-எ௩௦] என்றதனு லறிக. ஆனை—யானை யென்பதன் மரூஉ. இது முதலாகு பெயராய் அதன் வயிற்றை யுணர்த்தினது. பா - பே :—§ வாள் வீரர். (௪௭)

தயிரும் புளிதமும் கொணர்தல்

௫௪௯. வெண்டயிருஞ் செந்தயிரும் ‡ விராய்க்கிடந்த
கிழான்போல வீரர் மூளைத்
*தண்டயிரு மிடைவித்த புளிதமுமாத்
தாழிதொறுந் தம்மி னம்மா.

ப - ரை :—வெண் தயிரும் - வெண்மையாகிய தயிரையும், செம் தயிரும் - சிவப்பாகிய தயிரையும், விராய் கிடந்த - கலந்து வைத்த, கிழான் போல - பாண்டங்களைப் போல, மா தாழிதொறும் - பெரிய குடங்க ளெல்லாவற்றிலும், மிடைவித்த - நிரப்புவித்த, வீரர் மூளை - வீரர்களின் மூளையாகிய, தண் தயிரும் - குளிர்ச்சியாகிய தயிரையும், புளிதமும் - இறைச்சியையும், தம்மின் - (அடுப்பிலேற்ற) கொண்டு வாருங்கள்.

வி - ரை :—வீரர்களின் மூளையையும் இறைச்சியையும் நிரப்பின பானைகளை அடுப்பி லேற்றக் கொண்டு வாருங்கள் என்பதாம். வெண்டயிர் மூளைக்கும் செந்தயிர் இறைச்சிக்கும் உவமை; இறைச்சி செந்நிற மாதல் கருதிச் செந் தயிரை உவமை கூறினர். செந் தயிராவது :—பாலைச் சிவக்கக் காய்ச்சித் தோய்த்த தயிராம். இறந்துபட்ட வீரர்களின் மூளைகளாகலின், 'மூளைத் தண் டயிர்' என்றார். இதில் உவமையணியும், உருவகவணியும், நிரனிறைப் பொருள் கோளும் உள்ளமையால் இது சேர்வை யணியாம்.

பா - பே :—‡ விளாய்க்கிடந்த, * தண்டயிரி னுடனீரல். (௪௮)

உலைநீர் சொரிதல்

௫௫௦. கொலையினுட் படுகரிக் குழிசியுட் கூழினுக்
குலையெனக் குதிரையின் னுதிரமே சொரிமினோ.

ப - ரை :—கொலையினுள் - கொலையால், படு - (போரில்) இறந்து பட்ட, கரி குழிசியுள் - யானைகளின் வயிறுகளாகிய பானைகளில், கூழினுக்கு - கூழ் காய்ச்சுவதற்கு, குதிரையின் உதிரம் - குதிரைகளின் இரத்தத்தை, உலை என சொரிமின் - உலை நீராக ஊற்றுங்கள்.

வி - ரை :—யானைகளின் வயிறுகளாகிய பானைகளில் குதிரைகளின் இரத்தத்தை உலைநீராகச் சொரியுங்கள் என்பதாம். கொலையினுள்—உருபு மயக்கம்; கரி முதலாகு பெயராய் அதன் வயிற்றை யுணர்த்தினது. குதிரையின் னுதிரம்—ன் விரித்தல் விகாரம். (௪௯)

வெங்காயமும் உப்பு மிடுதல்

௫௫௧. துள்ளிவெங் களனில்வீழ் துரகவெண் பல்லெனும்
உள்ளியுங் கிள்ளியிட் டுகிரினுப் பிடுமினோ.

ப - ரை :—வெம் களனில் - கொடிய போர்க்களத்தில், துள்ளி வீழ் - சிதறி விழுந்த, துரகம் - குதிரைகளின், வெண் பல் எனும் - வெண்மை யாகிய பற்களாகிய, உள்ளி கிள்ளி இட்டு - வெள்ளுள்ளியைக் கிள்ளிப் போட்டு, உகிரின் உப்பும் - (வீரர்களின்) நகங்களாகிய உப்பையும், இடுமின் - இட்டு (கூழை) சமையுங்கள்.

வி - ரை :—குதிரைகளின் பற்களை வெங்காயமாகவும் வீரர்களின் நகங்களை உப்பாகவும் அக்கூழுக்குப் போடுங்கள் என்பதாம். உகிரின் உப்பு—இன் அல்வழிச் சாரியை. (௫௦)

தீ மூட்டல்

௫௨௨. தனிவிசும் படையினும் படைஞர்கண் டவிர்கிலா
முனிவெனுங் கனலைநீர் மூளவைத் திடுமினே.

ப - ரை :—தனி விசும்பு - ஒப்பற்ற வீர சுவர்க்கத்தை, அடையினும் - சேர்ந்தாலும், படைஞர் கண் - வீரர்களின் கண்களிலிருந்து, தவிர்கிலா - நீங்காத, முனிவு எனும் கனலை - கோபமாகிய நெருப்பை, நீர் மூள வைத்திடுமின் - நீங்கள் மூண்டெரிய வையுங்கள்.

வி - ரை :—இறந்து பட்ட வீரர்களின் கோபமாகிய நெருப்பை மூட்டுங்கள் என்பதாம். 'தனிவிசும் படையினும்' என்றது மங்கல வழக்கு. (௫௧)

விறகுகொண் டெரித்தல்

௫௨௩. குந்தமும் பகழியுங் கோல்களும் வேலுமாம்
இந்தனம் பலவெடுத் திடைமடுத் தெரிமினே.

ப - ரை :—குந்தமும் - ஈட்டிகளும், பகழியும் - அம்புகளும், கோல்களும் - தடிகளும், வேலும் ஆம் - வேல்களுமாகிய, பல இந்தனம் எடுத்து - பல விறகுகளை எடுத்து, இடை மடுத்து எரிமின் - (அடுப்பின்) நடுவில் நிரப்பி எரிய வையுங்கள்.

வி - ரை :—இறந்து பட்ட வீரர்களின் ஈட்டி முதலிய ஆயுதங்களை அடுப்பில் விறகாக நிரப்பி நெருப்பை மூட்டுங்கள் என்பதாம். உம்மைகள் நான்கும் எண்ணின்கண் வந்தன. (௫௨)

பழவரிசி கொணர்தல்

௫௨௪. கல்லைக் கறித்துப் பன்முறிந்து
கவிழ்ந்து வீழ்ந்த *கலிங்கர்தம்
பலலைத் தகர்த்துப் பழவரிசி
ஆகப் பண்ணிக் கொள்வீரே.

ப - ரை :—கல்லை கறித்து - கற்களைக் கடித்து, பல் முறிந்து ——, கவிழ்ந்து வீழ்ந்த - குப்புற விழுந்த, கலிங்கர்தம் - கலிங்க வீரர்களின், பல்லை தகர்த்து - பற்களை உடைத்து, பழமை அரிசி ஆக - பழைய அரிசியாய், பண்ணிக் கொள்வீர் ——.

வி - ரை :—கலிங்க வீரர்களின் பற்களை அரிசியாகக் கொள்ளுங்கள் என்பதாம். கல்லைக் கறித்துப் பல் முறிதலாவது :—கலிங்க வீரர்கள் தம்மினும் வலியவராகிய சோழ வீரர்களுடன் போர் புரிந்து உயிரிழந்தமை; பற்களை அரிசியாகக் கூறுதலை ௩௪௯, ௫௪௫-ம், தாழிசைகளிற் காண்க.

பா - பே :—* கலிங்கர் தங்கள். (௫௩)

அரிசி குற்றும் உரல்

௫௨௫. சுவைக்கு முடிவில் கூழினுக்குச்
சொரியு மரிசி வரியெயிறு
அவைக்கு முரல்க ளெனக்குரல்கள்
அவிந்த முரசங் கொள்வீரே.

ப - ரை :—முடிவில் - (சமைத்த பின்) கடைசியில், சுவைக்கும் சுவை பார்க்கும், கூழினுக்கு-கூழின் பொருட்டு, வரி எயிறு - (வெண்மையாகிய) நிறத்தையுடைய பற்களை, சொரியும் அரிசி ஆ(க) - (உலையில்

சொரியும் அரிசியாகவும், குரல்கள் அவிந்த முரசம் - ஒலியடங்கிய முரசங்களை, அலைக்கும் உரல்கள் என - (அரிசி) குற்றும் உரல்களாகவும், கொள்ளீர் - (நீங்கள்) கொள்வீராக.

வி - ரை :—பற்களை அரிசியாகவும், முரசங்களை உரல்களாகவும் கோள்வீரென்பதாம். 'குரல்கள் அவிந்த முரசம்' என்றதனால், சீர்குலைந்து களத்தில் விழுந்து கிடக்கும் முரசங்கள் என்பது விளங்கும். (ருச)

உலக்கைகளால் அரிசி குற்றல்

ருஉரு. இந்த வுரற்க ணிவ்வரிசி
எல்லாம் பெய்து கொல்யானைத்
தந்த வுலக்கை *தனையோச்சிச்
சலுக்கு முலுக்கெனக் குற்றீரே.

ப - ரை :—இந்த உரல் கண் - (முரசங்களாகிய) இந்த உரல்களில், இ அரிசி எல்லாம் பெய்து - (பற்களாகிய) இந்த அரிசி முழுதும் சொரிந்து, கொல் யானை - (போரில்) கொல்லப்பட்ட யானைகளின், தந்தம் உலக்கை தனை - தந்தமாகிய உலக்கையை, ஓச்சி - எடுத்து, சலுக்கு முலுக்கு என - சலுக்கு முலுக்கு என்னும் ஒலியுண்டாகும்படி, குற்றீர் - குற்றுவீராக.

வி - ரை :—(கலிங்கர் பற்களாகிய) அரிசியை (முரசங்களாகிய) உரல்களில் சொரிந்து யானைக்கோடுகளாகிய உலக்கைகளால் குற்றுங்கள் என்பதாம். யானைக்கோடுகளை உலக்கையாகக் கூறுதலை, 'கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம்' [கலி - சஉ] எனவும், 'வஞ்சி மகளிர் குறுவரே வான் கோட்டால்' [சிலப்-உக-வள்ளி] எனவும், 'யானை வெண்மருப் புலக்கை' [சீவகசி-கடுகூஉ] எனவும், 'வாரணக் கோம்பே யுலக்கையா' [மோகவ-௩௯௪] எனவும் வருமாற்று னறிக. ஓச்சல்—எடுத்தல்; இதனை 'நின் மதனுடை முழவுத்தோ ளோச்சி' [புறநா-ருO] எனக் கூறியதனு லுணர்க.

பா - பே :—*எடுத்தோச்சி. (ருரு)

தேவியைப் பாடி நெற் குற்றல்

ருஉஎ. தணந்த மெலிவு தான்றீரத்
தடித்த வுடல்வெம் பசிதீரப்
பிணந்தரு நாச்சியைப் பாடீரே
பெருந்திரு வாட்டியைப் பாடீரே.

ப - ரை :—தணந்த - (இப்போது நம்மை விட்டு) நீங்கிய, மெலிவு தான் தீர - தளர்ச்சி (முற்றும்) ஒழியவும், தடித்த உடல் - (பிணங்களை உண்பதனால்) பருக்கும் (நம்) வயிற்றின், வெம் பசி தீர - கொடிய பசி தொலையவும், பிணம் தரு நாச்சியை - பிணங்களை (உணவாக) தந்த தேவியை, பாடீர் - பாடுவீராக, பெரும் திருவாட்டியை - பெருஞ் செல்வங்களுக்கெல்லாம் தலைவியாகிய அந்தத் தேவியை, பாடீர் ——.

வி - ரை :—இது முதல் பேய்கள் வள்ளைப் பாட்டைப் பாடந் தொடங்கி முதலில் தமக் கிறைவியாகிய தேவியையும் பின்பு முதற் குலோத்துங் கனையும் வாழ்த்தலுற்றன. வள்ளைப்பாட்டி னியல்பை ௬௦௧-ம், தாழிசையிற் காண்க. யானை, குதிரை, வீரர்களின் பிணக் குவியல்களைக் கண்ட பேய்கள் 'தணந்த........பசிதீர' என மொழிந்து பெருங்களிப் பெய்தின வென்க. உடல்—ஆகுபெயராய் வயிற்றை யுணர்த்தினது. (ருசு)

குலோத்துங்கனைப் பாடி நேர்க்குற்றல்

௫௨௮. கவன நெடும்பரி வீரதரன்
காவிரி நாடுடை யானிருதோள்
அவனி சுமந்தமை பாடீரே
அரவு தவிர்ந்தமை பாடீரே.

ப - ரை :—கவனம் - விரைந்தோடும், நெடும் பரி - பெரிய குதிரைப் படையையுடைய, வீர தரன் - வீரத்தைப் பொருந்தியவனும், காவிரி நாடு உடையான் - காவிரி நதி பாயும் நாட்டை யுடையவனுமாகிய முதற் குலோத்துங்கனுடைய, இரு தோள் - இரண்டு தோள்களும், அவனி சுமந்தமை பாடீர் - இவ்வுலகத்தைத் தாங்கின புகழைப் பாடுவீராக, அரவு தவிர்ந்தமை - (அதனால்) ஆதிசேடன் (சுமை) ஒழிந்தமையை பாடீர் ——.

வி - ரை :—ஆதிசேடன் உலகத்தைச் சுமக்கிறானென்பது நூல் வழக்காம். முதற் குலோத்துங்கன் உலகத்தைச் சுமத்தலாவது:—உலகம் முற்றும் தனக்கே உரிமையாக்கிக் கொள்ளுதல்; அவ்வேந்தன் உலகத்தைச் சுமத்தலால், ஆதிசேடன் பொறை நீங்கின தென்க [தா-௧௨௪, ௫௪௧]. (௫௭)

பகைவர் வென்றமை கூறிக் குற்றுதல்

௫௨௯. மன்னர் புரந்தரன் வாளபயன்
வாரண மிங்கு மதம்படவே
தென்ன ருடைந்தமை பாடீரே
§சேர ருடைந்தமை பாடீரே.

ப - ரை :—மன்னர் புரந்தரன் - அரசர்களில் இந்திரனைப் போன்றவனும், வாள் அபயன் - வாளாயுதத்தை யுடையவனுமாகிய (முதற் குலோத்துங்க) சோழனுடைய, வாரணம் - யானை, இங்கு மதம் பட ——, தென்னர் உடைந்தமை - பாண்டியர் தோற்றமையை, பாடீர் ——, சேரர் உடைந்தமை - சேரர்கள் தோற்றமையையும், பாடீர் ——.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் பட்டத்து யானை மதம் பட்டால், அது தவறாமல் அவன் பகை வேந்தரை யழிக்கு மென்பதாம். அம்மன்னவன் எல்லா வரசரிடமும் திறைப்பொருள் பெற்று இந்திரன்போல செல்வத்திற் சிறந்து விளங்குதலால், 'மன்னர் புரந்தரன்' என்றார். சேரர் உடைந்தமை —இதில் இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது.

பா - பே :—§ சேர ரிரிந்தமை.

சேர பாண்டியர் அழிந்தமை கூறிக் குற்றல்

௫௩0. வணங்கிய சேரர் மணிமுடியும்
வழுதியர் தங்கண் †மணிமுடியும்
பிணங்கிய சேவடி பாடீரே
பெருமான் றிருவடி பாடீரே.

ப - ரை :—வணங்கிய சேரர் - தன்னை வணங்கிய சேரவேந்தருடைய, மணி முடியும் - இரத்தினங்களைப் பதித்த கிரீடங்களும், வழுதியர் தங்கள் - பாண்டியர்களின், மணி முடியும் ——, பிணங்கிய சேவடி - நெருங்கிய சிவந்த பாதங்களின் புகழை, பாடீர் ——, பெருமான் - பெருமையிற் சிறந்தவனாகிய முதற் குலோத்துங்கனுடைய, திரு அடி - அழகிய பாதங்களின் புகழை, பாடீர் ——.

வி - ரை :—சேர பாண்டிய ரழிந்தமையை கக, ௩அக, ௩அக-ம், தாழிசைகளிற் காண்க. பா - பே :—† திருமுடியும். [௩௯]

உத்தர பூமியரை வென்றமை கூறிக் குற்றல்

௩௯௰க. ஒளிறு நெடும்படை வாளபயற்
குத்தர பூமிய ரிட்டதிறைக்
களிறு ‡வரும்படி பாடீரே
கடமத நாறுவ பாடீரே.

ப - ரை :—ஒளிறு - ஒளி வீசி விளங்கும், நெடும் வாள் படை அபயன் கு - நீண்ட வாளாயுதத்தையுடைய (முதற் குலோத்துங்க) சோழனுக்கு, உத்தரம் பூமியர் - வடக்கிலுள்ள பூமியை யாளும் அரசர்கள், இட்ட திறை - செலுத்திய பகுதிப் பொருளைச் சுமந்த, களிறு வரும்படி - யானைகள் வரும் தன்மையை, பாடீர் ——, கடம் - (அந்த) யானைக் கூட்டங்களின், மதம் நாறுவ - மத நாற்றம் வீசுவனவற்றை, பாடீர் - (சிறப்பித்து) பாடுவீராக.

வி - ரை :—'உத்தர பூமியர்' என்றது வடநாட்டு வேந்தரை ; அவர் ஆரிய மன்னரென்க. பா - பே :—‡ வருங்கடல். (௬0)

பண்டித சோழனைக் கூறிக் குற்றல்

௩௯௰உ. பௌவ மடங்க வளைந்தகுடைப்
பண்டித சோழன்‡ மலர்க்கழலில்
தெவ்வர் §பணிந்தமை பாடீரே
†சிலையா டியவலி பாடீரே.

ப - ரை :—பௌவம் அடங்க - கடல்கள் முற்றும், வளைந்த குடை - (தனக்குள் அடங்கும்படி) சூழ்ந்த குடையையுடைய, பண்டித சோழன் - முதற் குலோத்துங்க சோழனுடைய, மலர் கழலில் - தாமரை மலர் போன்ற பாதங்களில், தெவ்வர் பணிந்தமை - பகைவர் (தம்முயிர் பிழைக்க) வணங்கினமையை, பாடீர் ——, சிலை ஆடிய வலி - (தன்) வில்லால் (போர்) செய்த (அவன்) பராக்கிரமத்தை, பாடீர் ——.

வி - ரை :—'பௌவ மடங்க வளைந்த குடை' என்றது நிலவுலகமே யன்றிக் கடல்களும் அவனுடைக் குட்பட்டிருந்தன வென்பதாம். நாற்கடலைக் கவித்த குடை' [தா - ௩௯உ] எனப் பின்னும் வருமாறு காண்க. முதற் குலோத்துங்கனுக்குப் பண்டித சோழன் என்னும் பெயருண்மை இத்தாழிசையால் விளங்குகிறது. பா - பே —‡ மதன் கழலில், § அடைந்தமை, † சிலை வலி வாள்வலி.

உலகம் இன்புற ஆட்சி புரிந்தமை கூறிக் குற்றல்

௩௯௰௩. எற்றைப் பகலினும் வெள்ளணிநாள்
இருநிலப் பாவை §நிழலுற்ற
கொற்றக் குடையினைப் பாடீரே
குலோத்துங்கச் சோழனைப் பாடீரே.

ப - ரை :—வெள்ளணி நாள் - (முதற் குலோத்துங்கன்) பிறந்த நாள் போல், எற்றை பகலிலும் - எந்த நாளிலும், இரு நிலம் பாவை - பெரிய நில மக்களுக்கு, நிழல் உற்ற - நிழலாகப் பொருந்திய, கொற்றம் குடையினை - (அவன்) வெண்கொற்றக் குடையை, பாடீர் ——, குலோத்துங்கச் சோழனை பாடீர் ——.

வி - ரை :—(முதற் குலோத்துங்கன் பிறந்த நாளில் உலகம் மகிழ்ந்தமை போல்) அவன் குடை நிழலில் நிலமகள் என்றுங் களிப்புறுவா ளென்பதாம். வெள்ளணி நாள்—பிறந்த நாள்; இது நாண் மங்கலம் எனப்படும். 'அறந்தரு செங்கோ லருள் வெய்யோன், பிறந்தநாட் சிறப்புரைத் தன்று' [புறப் - வெ - மா-௨௪௨] என்றமை காண்க. குல + உத்துங்கன் = குலோத்துங்கன், குணசந்தி; (தன் புகழால் தான் பிறந்த) குலத்தை உயர்வடையச் செய்வோன் என்பதாம். பா - பே :—$ தனை நிழற்றும். (௬௨)

பல்லவர் தோன்றலைப் பாடிக் குற்றல்

௫௩௪. வண்டை வளம்பதி பாடீரே
மல்லையுங் கச்சியும் பாடீரே
பண்டை மயிலையும் பாடீரே
$ பல்லவர் தோன்றலைப் பாடீரே.

ப - ரை :—வண்டை வளம் பதி - வண்டை யென்னும் வளப்பமாகிய ஊரை, பாடீர் - (சிறப்பித்து) பாடுவீராக, மல்லையும் - மல்லை யென்னும் ஊரையும், கச்சியும்-காஞ்சிபுரத்தையும், பாடீர் ——, பண்டை மயிலையும்- பழமையாகிய மயிலை யென்னும் பதியையும், பாடீர் ——, பல்லவர் தோன்றலை - பல்லவர் மரபில் பிறந்தவனாகிய கருணாகரனை, பாடீர் ——.

வி - ரை :—வண்டை முதலிய ஊர்களையும் கருணாகரனையும் சிறப்பித்துப் பாடுவீராக வென்பதாம். பா - பே :—$ பழநதி யமுனையும். (௬௩)

இதுவுமது

௫௩௫. காட்டிய வேழ வணிவாரிக்
கலிங்கப் பரணிநங் காவலன்மேற்
சூட்டிய தோன்றலைப் பாடீரே
தொண்டையர் வேந்தனைப் பாடீரே.

ப - ரை :—காட்டிய - (போரில் தம் வலிமையை) காட்டிய, வேழம் அணி வாரி - (பகைவர்) யானைகளின் கூட்டங்களை அபகரித்துக்கொண்டு, நம் காவலன் மேல் - நமது அரசனாகிய முதற் குலோத்துங்கன் மேல், கலிங்கம் பரணி சூட்டிய - கலிங்கத்துப் பரணி (என்னும் பாமாலையை) அணிவித்த, தோன்றலை - கருணாகரனை, பாடீர் ——, தொண்டையர் வேந்தனை - தொண்டை நாட்டிலுள்ளவர்களுக்கு அரசனாகிய கருணாகரனை, பாடீர் ——.

வி - ரை :—கலிங்க வெற்றிக்கும், கலிங்கத்துப் பரணியைப் பாடுவித்தற்கும் கருணாகரன் காரணமாயிருந்தமை பற்றி, 'கலிங்கப் பரணி நங் காவலன் மேற் சூட்டிய தோன்றல்' என்றார். கருணாகரன் பகைவர் வேழங்களைக் கவர்ந்தமையை ௫௩௫-ம், செய்யுள் முதல் ௫௩௮-ம், செய்யுளளவும் மொழிந்துள்ளமையா னுணர்க. இந்நூலின் பெயர் இத்தாழிசையில் அமைந்துள்ளமையும், இங்குக் கவனிக்க. இவ்விரு செய்யுட்களிலும் கருணாகரனைச் சிறப்பித்துக் கூறியுள்ளமை காண்க. (௬௪)

முதற் குலோத்துங்கன் புகழைப் பாடிக் குற்றியது

௫௩௬. இடைபார்த்துத் திறைகாட்டி யிறைவிதிருப் புருவத்தின்
கடைபார்த்துத் தலைவணங்குங் கதிர்முடிநா றாயிரமே.

ப - ரை :—இடை பார்த்து - சமயமறிந்து, திறை காட்டி - (முதற் குலோத்துங்கனுக்குத் தங்கள்) பகுதிப்பொருளைச் செலுத்தி, இறைவி - காளிதேவியின், திரு புருவத்தின் கடை பார்த்து - அழகிய (கண்களின்)

கடைப் புருவங்களைப் பார்த்து, தலை வணங்கும் - (தங்கள்) தலையால் வணங்கும், கதிர் முடி - ஒளியை வீசும் கிரீடங்களை யணிந்த அரசர்கள், நூறு ஆயிரம் - மிகப் பலராவார்.

வி - ரை :—பகுதிப் பொருளைச் செலுத்த வரும் வேந்தர் பலர் தம் முறை வரும் வரையில் காத்திருத்தலால் 'இடை பார்த்து' என்றார். 'இறைவீ திருப்புருவத்தின் கடை' என்றது தேவியின் திருவருள் நோக்கினை; திறைப் பொருள் செலுத்த வருவோர் தேவியை வணங்கிச் செல்வரென்க. நூறாயிரம் —இங்கே மிகப்பல எனும் பொருளில் வந்தது [தா - கசுக]. இனி வருஞ் செய்யுட்களிலும் இவ்வாறே கொள்க. முடி—ஆகு பெயர். (சுரு)

பல வேந்தர் வணங்குதலைக் கூறிக் குற்றல்

ருகள. முடிசூடு முடியொன்றே முதலபய னெங்கோமான்
அடிசூடு முடியெண்ணி லாயிரநூ றாயிரமே.

ப - ரை :—முதல் அபயன் - முதற் குலோத்துங்க சோழனாகிய, எம் கோமான் - எமது அரசன், முடி சூடு முடி ஒன்றே - (தன்) தலையி லணியும் கிரீடம் ஒன்றேயாம், அடி சூடு முடி - (ஆனால் அவன்) பாதத் தில் (அரசர் வணங்குதலால்) அணியும் கிரீடங்களை, எண்ணில் - கணக் கிட்டால், ஆயிரம் நூறு ஆயிரம் - மிகப் பலவாம்.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் தன் தலையில் புனையு முடி ஒன்றே யாயினும், அவன் பாதத்தில் புனையு முடிகள் மிகப் பல வென்பதாம். பல வேந்தர்கள் தங்கள் தலையிலுள்ள மகுடங்கள் முதற் குலோத்துங்கன் பாதத்தில் படும்படி அவனை வணங்குவரென இதனால் இயம்பியவாறும் [தா - சடுரு]. 'கோவுடை நெடுமணி மகுட கோடியால், சேவடி யடைந்தபொற் கழலுந் தேயுமால்' [கம்பரா-அரசியல்-அ] என்றார் கம்பரும். எண்ணில்—ஆலோசித் தால் எனினுமாம். (சுசு)

திறையிடா வரசர் ஒளித்தமை கூறிக் குற்றல்

ருகஅ. முடியினால் வழிபட்டு மொழிந்ததிறை யிடாவேந்தர்
அடியினால் † மிதிபட்ட வருவரைநூ றாயிரமே.

ப - ரை :—முடியினால் வழிபட்டு - (தங்கள்) தலையால் வணங்கி, மொழிந்த திறை - (முதற் குலோத்துங்கன்) சொன்ன பகுதிப்பொருளை, இடா வேந்தர் - செலுத்தாத அரசர்களின், அடியினால் - பாதங்களால், மிதி பட்ட - மிதிக்கப்பட்ட, அரு வரை - பெரிய மலைகள், நூறு ஆயிரம்- மிகப் பலவாம்.

வி - ரை :—முதற் குலோத்துங்கனுக்குக் கீழ்ப்படிந்து பகுதிப் பொருளைச் செலுத்தாத அரசர்கள் தங்கள் நாட்டை யிழந்து மலைகளிலோடி யொளிப்ப ரென்பதாம். பா - பே :—† வழிபட்ட. (சுஎ)

மாற்றரசரின் பரிபவங் கூறிக் குற்றல்

ருகசு. தார்வேய்ந்த புயத்தபயன் றன்னமைச்சர் கடைத்தலையிற்
பார்வேந்தர் படுகின்ற பரிபவநூ றாயிரமே.

ப - ரை :—தார் வேய்ந்த - வெற்றி மாலையை யணிந்த, புயத்து அபயன் தன் - தோள்களையுடைய (முதற் குலோத்துங்க) சோழனுடைய, அமைச்சர் கடைத்தலையில் - மந்திரிகளின் தலைவாசலில், பார் வேந்தர் - பூமியை யாளும் அரசர்கள், படுகின்ற பரிபவம்-அடைகின்ற அவமதிப்பு, நூறு ஆயிரம் - மிகப் பலவாம்.

வி - ரை :—போரில் தோல்வியுற்ற மன்னர் சமாதானத்தை நாடியும், பகை வேந்தரை எதிர்க்க வேண்டுவோர் முதற் குலோத்துங்கன் உதவியை விழைந்தும் அவன் அமைச்சர்கள்பால் சென்று அவர்கள் வரவை நாடி நின்று குறையிரத்தலால், 'பரிப்வ நூறுயிரம்' என்றார். பரிபவம்—துன்ப மெனினுமாம்.

மறை வளர்ந்தமை புகன்று குற்றல்

ருசo. தாங்காரப் புயத்தபயன் றண்ணளியாற் புயல்வளர்க்கும்
ஓங்கார மந்திரமு *மொப்பிலநூ றுயிரமே.

ப - ரை :—ஆரம் தாங்கு புயத்து அபயன் - (வெற்றி) மாலையை யணிந்த தோள்களையுடைய (முதற் குலோத்துங்க) சோழன், தண் அளியால் - குளிர்ச்சியாகிய கருணையினால், புயல் வளர்க்கும் - (பருவ) மழை தவறாமல் பெய்விக்கும், ஓங்காரம் மந்திரமும் - பிரணவ மந்திரங் களும், ஒப்பில நூறு ஆயிரம் - ஒப்பில்லாதனவாகிய மிகப் பலவாம்.

வி - ரை :—'விதிமறை யவர்தொழில் விளைகவே, விளைதலின் முகின் மழை பொழிகவே' [தா-கக] என்றபடி, பருவமழை தவறாமல் பொழிவதற்கு மறையவர் வேள்வியும் மந்திரங்களும் இன்றியமையாமையால், அவற்றை வளர்ப்பவ னென்பது கருதி, 'புயல்வளர்க்கு மோங்கார மந்திரம்' என்றார் [தா-உஎக]. ஓங்கார மந்திரம்—ஓம் என்னும் பிரணவ மந்திரம்; ஓங்காரம்—இதில் காரம், சாரியை; இது அ, உ, ம என்னும் மூன்றெழுத்தா லாகிய தோர் மந்திர மெனவும், இவைகளில் அகரம் பகவானையும், உகரம் திருமகளையும், மகரம் உயிர் வர்க்கங்களையு முணர்த்து மெனவுங் கூறுப. இதன் விரிவை முமுக்ஷுப்படி வியாக்கியானத்திற் காண்க. பா - பே :—* உலப்பில. (சுகூ)

பார் ஆண்ட புகழைப் பாடிக் குற்றல்

ருசக. போர்தாங்குங் களிற்றபயன் ‡ புயமிரண்டு மெந்நாளும்
பார்தாங்கப் பரந்தீர்ந்த பணிப்பணநூ றுயிரமே.

ப - ரை :—போர் தாங்கும் - போரைப் புரியும், களிறு அபயன் - யானைப் படையையுடைய (முதற் குலோத்துங்க) சோழனுடைய, இரண்டு புயமும் - இரண்டு தோள்களும், எ நாளும் - எக்காலத்தும், பார் தாங்க - உலகத்தைத் தாங்குதலால், பரம் தீர்ந்த - (அதனால்) சுமை தவிர்ந்த, பணி பணம் நூறு ஆயிரம் - ஆதிசேஷன் தலைகள் மிகப் பலவாம்.

வி - ரை :—முதற் குலோத்துங்கன் உலகத்தைத் தாங்குதலால், ஆதிசேஷன் சுமை நீங்கின தென்பதாம். ஆதிசேஷன் ஆயிரந் தலைகளால் சுமக்கும் பூமியை முதற் குலோத்துங்கன் இரண்டு தோள்களால் தாங்கின னென்க [கஉச, ருஉஅ]. இரண்டும், எந்நாளும்—இவற்றிலுள்ள உம்மைகள் முற்றுப் பொருளன; பணம்—சினையாகு பெயர். பா - பே:— ‡ புயமிரண்டும் பார் தாங்க. (எ0)

திருமாலெனக் கூறிக் குற்றுதல்

ருசஉ. நாற்கடலைக் கவித்தகுடை நரதுங்க னமுதமெழப்
பாற்கடலைக் கடைந்தருளும் ‡ பணைப்புயநூ றுயிரமே.

ப - ரை :—நால் கடலை - நான்கு திசைகளிலுள்ள கடல்களையும், கவித்த குடை - போர்த்த குடையையுடைய, நர துங்கன் - மனிதர்களிற் சிறந்தவனாகிய முதற் குலோத்துங்கன், அமுதம் எழ - அமுதம் தோன்றும் படி, பால் கடலை கடைந்தருளும் - திருப்பாற்கடலைக் கடைந்தருளிய, பணை புயம் - பருத்த தோள்கள், நூறு ஆயிரம் - மிகப் பலவாம்.

வி - ரை :—திருப்பாற் கடலைக் கடைந்தவர் திருமாலே யாயினும், திருமாலே முதற் குலோத்துங்கனுய்த் தோன்றினு ரென்பது ஆசிரியர் கருத்தாத லின் இவ்வாறு கூறினர். நாற்கடலைக் கவித்த குடை, என்றமைக் கேற்ப, 'பௌவ மடங்க வளைந்த குடை' [தா - ருஉ] என்றார் முன்னும். திருப்பாற் கடலைக் கடைந்த வரலாற்றை கஉஉ-ம், தாழிசையிற் காண்க.

பா - பே :— ‡ பணை நெடுந்தோள். (எக)

இதுவுமது

ருசந. தாளிரண்டா லிலவேந்தர் $ தலைதாங்குஞ் சயதுங்கன்
தோளிரண்டால் வாணனைமுன் துணித்ததோ ளாயிரமே.

ப - ரை :—தாள் இரண்டால் - (தன்) இரண்டு பாதங்களால், நிலம் வேந்தர் - பூமியை யாளும் அரசர்களின், தலை தாங்கும் - முடிகளைத் தாங்குகின்ற, சயதுங்கன் - முதற் குலோத்துங்கன், தோள் இரண்டால் - (தன்) இரண்டு கைகளால், வாணனை - வாணுசுரனை, முன் துணித்த தோள் - முன்பு வெட்டிய தோள்கள், ஆயிரம் - மிகப் பலவாம்.

வி - ரை :—முன் செய்யுளில் கூறியது போல், திருமால் செய்கையை இங்கும் இவன்மேலேற்றிக் கூறினர். 'தாளிரண்டால்.........சய துங்கன்' என்றது, தன்னை யடைந்தோரை மிக்க பரிவுடன் பாதுகாப்பவ னென்பதாம். சயதுங்கன் [தா - அ, உகக, உகசு].

கண்ணபிரான் வாணன் தோள் துணித்த வரலாறு :—வாணன் மகளாகிய உஷை யென்பவள் கண்ணபிரான் பேரனுகிய அநிருத்தனைக் களவொழுக் கத்தால் கூடி யின்புற்றிருந்தனள். இதனை யறிந்த வாணன் அவனைச் சிறைப் படுத்தினன். பின்பு கண்ணபிரான் அநிருத்தனை மீட்கக் கருதி வாணனோடு போர் புரிந்து அவன் ஆயிரந் தோள்களையும் வெட்டி யெறிந்தன னென்பதாம். திருமால் வாணன் தோள் துணித்தமையை, 'வாணனை யாயிரந்தோளும் பொழி குருதி, பாயச் சுழற்றிய வாழி வல்லானை' [திருப்பல்-எ] எனவும், 'வாண னுயி ரம்புயங்கள் குருதிநீர், சிந்தி யோட நேமி தொட்ட திருவ ரங்க ராசரே' [திருவரங்-கலம்-ருக] எனவும் வருமாற்று னுணர்க. ருஉஎ-ம், தாழிசை முதல் இதுகாறுங் கூறினவை வள்ளைப் பாடல்களாம். வள்ளைப் பாடல்களின் விரிவை ருOகூ-ம், தாழிசையிற் காண்க. பா - பே— $ தலைகாக்கும். (எஉ)

இதுவுமது

ருசச. சூழிமுகக் களிற்றபயன் தூதுநடந் தருளியநாள்
ஆழிமுதற் படையெடுத்த வணிநெடுந்தோ ளாயிரமே.

ப - ரை :—சூழி - முகப் போர்வை யணிந்த, முகம் களிறு - முகத் தைப் பொருந்திய யானைப் படையையுடைய, அபயன் - (முதற் குலோத் துங்க) சோழன், தூது நடந்தருளிய நாள் - (துரியோதனனிடம்) தூது சென்ற காலத்தில், ஆழி முதல் - சக்கரம் முதலாகிய, படை எடுத்த - ஆயுதங்களைப் பிடித்த, அணி நெடு தோள் - அழகிய பெரிய கைகள், ஆயிரம் - மிகப் பலவாம்.

வி - ரை :—துரியோதனனிடம் தூது சென்றது கண்ணபிரானும். இச் செய்யுளிலும் திருமாலாகிய கண்ணபிரான் செய்கை சோழன்மேலேற்றிக் கூறப்பட்டது. கண்ணபிரான் தூது சென்று துரியோதனன் அவைக்கள மணுகி, அங்குப் பலவகைப் படைக்கலங்களைத் தாங்கினமையை, 'ஆயிரந் தடக்கை, திசைமுகம் பொதியச் செறிந்தன வவைதாம், திண்சிலை குனிப்பன செஞ்சரஞ் தெரிவன, வெங்கணைத் தூணி வீக்குவன வெஞ்சுடர், வாளுறை

கழிப்பன கப்பண மெடுப்பன, அணிச்சுடர் நெடுவா ளொடுவே லடுப்பன [பாரதவெ - உகஉ] என ஆன்றோர் விளம்பினமையானு முணர்க.

கண்ணபிரான் தூது சென்ற வரலாறு:—துரியோதனன், பாண்டவர்களுடன் சவருடி அவர்கள் நாடு நகரங்களைக் கவர்ந்துகொண்டு அவர்களைக் கானகஞ் செல்ல விடுத்தனன். பாண்டவர்கள், துரியோதனன் குறிப்பிட்ட காலத்தைக் காட்டில் கழித்து விட்டுத் தந்நாட்டைத் தமக்கு வழங்குமாறு அக்காவலனைக் கேட்டனர். அக்கொற்றவன் அதற் கிணங்கவில்லை. பின்பு தருமர் கண்ண பிரானுரைத் துரியோதனன்பால் தூதாக விடுத்தனர். பாண்டவ தூதர் அவ்வாறே சென்று அக்கொற்றவன் அவைக்களங் குறுகினர். அது காலை அவ்வேந்தன் வெண்ணெயுண்ட வாயர் ஆருயிரை வௌவக் கருதிப் படுகுழி யொன்றைத் தோண்டுவித்தான். பின்பு அக்காவலன் அதனை நன்கு மறைத்து அதன்மேல் பொய்ப்பீட மொன்றை யமைத்தான். கார் வண்ணர் அதில் வீற் றிருந்ததும், அது மளமளவென்று முறிந்து குழியில் அமிழ்ந்தது. உடனே அவர் பல்லாயிரந் தலைகளுங் கைகளுமுடைய விசுவரூபங்கொண்டு சக்கரம், வில், வாள் முதலிய பலவகைப் படைக்கலங்களை யேந்தி நின்றனர். அதுகாலை பிரமன் முதலிய தேவர் பலர் அவரைப் போற்றினர். பின்பு அவர்தஞ் சீற்றந் தணிந்து தருமரை யணுகித் துரியோதனன் நாடு கொடுக்க விசையாமையை அவருக் குணர்த்தினர். அதன் பின்னர் பாண்டவர், துரியோதனன் முதலான வர்களோடு கடுஞ் சமர் புரிந்து அவர்களை வென்று தங்கள் நாட்டைப் பெற்று இன்புற்றன ரென்பதாம். (எரு)

பேய்கள் அரிசி புடைத்தல்

ருசரு. பல்லரிசி யாவுமிகப் பழவரிசி தாமாகச்
சல்லவட்ட மெனுஞ்சுளகாற் றவிடுபடப் புடையீரே.

ப - ரை:—பல் அரிசி யாவும் - (கலிங்க வீரர்களின்) பற்களாகிய அரிசி யெல்லாம், மிக பழமை அரிசி தாம் - மிகவும் பழைமையாகிய அரிசி, ஆக - ஆகும்படி, சல்லவட்டம் எனும் சுளகால் - சல்லவட்ட மென்னும் முறத்தால், தவிடு பட - (அரிசியிலுள்ள) தவிடு நீங்கும்படி, புடையீர் - (அவற்றை) புடைப்பீராக.

வி - ரை:—பற்களைக் குற்றிப் புடைத்துப் பதஞ் செய்தமையால், அவை பழவரிசி போலாயின வென்க. [தா-கசசு, ருஉச]. சல்லவட்டமெனுஞ் சுளகு—ஒருவகை முறம். (எச)

அரிசிமாவை யளத்தல்

ருசசு. பாணிகளா னிலந்திருத்திப் படைக்கலிங்க ரணிபகழித்
தூணிகளே நாழிகளாத் தூணிமா வளவீரே.

ப - ரை:—பாணிகளால் - கைகளினால், நிலம் திருத்தி - நிலத்தைச் சுத்தம் செய்து, படை கலிங்கர் - ஆயுதங்களைப் பிடித்த கலிங்கவீரர்கள், அணி பகழி தூணிகளே - (தம் முதுகில்) அணிந்த அம்பறாத் தூணி களையே, தூணி நாழிகள் ஆ(க) - தூணி யென்னும் அளவு கருவிகளாக (கொண்டு), மா அளவீர் - (அரிசி) மாவை அளப்பீராக.

வி - ரை:—பேய்கள் பல்லரிசியை மாவாக்கி அளக்கத் தொடங்கின வென்பதாம். தூணி—நாலு மரக்கால் கொண்டது; நாழி—அளவு கருவி. நிலந் திருத்தல் மாவை யளத்தற் கென்க. அணி—அழகெனினுமாம். (எரு)

உலையிற் சொரிதல்

ருசஎ. விரற்புட்டி லவைசிறிய விற்கூடை பெரியனகொண்
டுரற்பட்ட வரிசிமுகந் துலைகடொறுஞ் சொரியீரே.

ப - ரை :—விரல் புட்டில் அவை - கைக் கவசங்களாகிய அவை, சிறிய - (மிகவும்) சிறியனவாம், பெரியன - (ஆகையால்) பெரியனவாகிய, வில் கூடை - அம்பறுத் தூணிகளை, கொண்டு - (கைகளில் பிடித்து) கொண்டு, உரல் பட்ட - உரல்களில் குற்றப்பட்ட, அரிசி முகந்து-அரிசி மாவை அள்ளி, உலைகள் தொறும் - உலைக ளெல்லாவற்றிலும், சொரியீர்-சொரிவீராக.

வி - ரை :—விரற் புட்டில்—வீரர்கள் தங்கள் கைகளிலணியும் ஒருவகைப் போர்வை. விரல்—சினையாகு பெயர். சிறிய, பெரியன—முரண் தொடை. (எசு)

துடுப்பும் அகப்பையும் கொள்ளல்

ருசஅ. களப்பரணிக் கூழ்பொங்கி வழியாமற் கைத்துடுப்பா
அளப்பரிய * குளப்புக்கா லகப்பைகளாக் கொள்ளீரே.

ப - ரை :—களம் - (கலிங்க நாட்டு) போர்க்களத்தில், பரணி கூழ் - பரணி நாளில் சமைத்த கூழானது, பொங்கி வழியாமல் - (மேலே) பொங்கி வழியாதபடி, கை துடுப்பு ஆ(க) - (வீரர்களின்) கைகளைத் துடுப்புக்களாகவும், அளப்பு அரிய - அளவிட்டுச் சொல்ல முடியாத, குளம்பு கால் - (குதிரைகளின்) குளம்புகளையுடைய கால்களை, அகப்பைகள் ஆ(க) - அகப்பைகளாகவும், கொள்ளீர் - கொள்வீராக.

வி - ரை :—பேய்மடையர் களத்தில் இறந்துபட்ட வீரர் கைகளைத் துடுப்பாகக் கொள்ளுதலை, 'தோடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு' [மதுரைக்கா-உசு-உடு] எனவும், 'தோடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன் சோறு' [சிலப்-உகூ-உசஙு] எனவும் வருமாற்று ணறிக. குளப்புக்கா லகப்பை—குளம்பை அகப்பையாகவும், காலை அதன் காம்பாகவுங் கொள்க. போர்க்களத்தில் பேய்கள் பரணி நாளில் கூழ் சமைத்துத் தேவியை வழிபட்டு உண்டு மகிழ்தலால் இத்தகைய நூல்களுக்குப் பரணி யென்னும் பேர் வந்ததென்பது அறிஞர் கருத்தாம். பேய்கள் தாம் சமைத்த கூழைத் தேவிக்குப் படைத்துப் பின்பு அவை உட்கொள்ளுதலை, 'கொடுத்தத னமுதந் தானுங் கொண்டன ளிறைவி' [தக்கயா-எருச] எனவும், 'அடங்க நீயமிர்து செய்க வென்னவருள், ஐயை தானமிர்து செய்யுமே' எனவும், 'அணங்கு தன்றிருவு ளப்பிர சாதமது அடைய வேயிறைய வயிலுவீர்' [அஞ்ஞவ-கூழ்வார்ப்பு-கூஎ] எனவும் வருமாற்று ணறிக. குளம்பு + கால் = குளப்புக் கால்: மெல்லொற்று வல்லொற்றாயிற்று [நன் - கஅச]. பா - பே:—* பரிக்குளம்பை. (எஎ)

கூழை உப்புப் பார்த்தல்

ருசகூ. வைப்புக் காணு நமக்கின்று
வாரீர் கூழை யெல்லீரும்
$ உப்புப் பார்க்க வொருதுள்ளி
உள்ளங் கையிற் கொள்ளீரே.

ப - ரை :—இன்று கூழை - இப்போது (நாம் சமைத்த) கூழை, உப்பு பார்க்க - சுவை பார்க்க, எல்லீரும் வாரீர் - (நீங்கள்) எல்லோரும் வருவீராக, ஒரு துள்ளி - ஒரு துளியை, உள்ளங் கையில் கொள்ளீர் - (உங்கள்) உள்ளங் கைகளிற் கொள்வீராக, நமக்கு வைப்பு காணும் - நமக்கு (இக்கூழ்) புதையற் பொருள் போன்றதாம்.

வி - ரை :—'நமக்கு இன்று வைப்புக் காணும்' என்றியைத்துப் பொருள் கோடலுமாம். 'உப்புப் பார்க்க' என்றது உப்புத் தக்கவளவாய் இருக்கிறதா இல்லையாவென்று சுவை பார்த்தலாம். பேய்கள் இறைவிக்குக் கூழ்

படைத்தலை ஆசிரியர் இங்குக் கூறுதொழிந்த தென்னையெனின், அவை அவ்வம்மையைத் தம் மனத்தால் பாவிப் பின்பு கூழைச் சுவை பார்க்கலாயின வெனக் கருதி யென்க. வைப்பு—தொழிலாகு பெயர்; காணும்—முன்னிலையசை;

பா - பே :—$ உப்புக் காண வொருதுளியை. (எஅ)

கூழைத் துழாவல்

ருரு௦. * அழலைக் கையிற் கொள்ளாமே
அடுப்பை யவித்துக் கைத்துடுப்பாற்
சுழலச் சுழலப் புடையெங்குந்
துழாவித் துழாவிக் கொள்ளீரே.

ப - ரை :—கையில் - (உங்கள்) கைகளில், அழலை கொள்ளாமே - (நெருப்பின்) தணலைப் பற்ற விடாமல், அடுப்பை அவித்து——, கை துடுப்பால் - (வீரர்களின்) கைகளாகிய துடுப்புக்களால், புடை எங்கும் - (கூழ்ப் பானையின்) எல்லாப் பக்கங்களிலும், சுழல சுழல - நன்றாய்ச் சுழலும்படி, துழாவி துழாவி கொள்ளீர் - நன்றாய்க் கிளறுவீராக.

வி - ரை :—கூழைத் துழாவாவிட்டால், அது பானையிற் பிடித்துத் தீய்ந்துபோ மாதலால், 'சுழலச் சுழல........துழாவிக் கொள்ளீர்' எனப் பேய்கள் மொழிந்தன வென்க. சுழலச் சுழல, துழாவித் துழாவி—அடுக்குகள் மிகுதிப் பொருளன. பா - பே :—* அழலங்கையில். (எகூ)

கூழ் இறக்கல்

ருருக. பற்றிப் பாரீ ரினிக்கூழின்
பதமுஞ் சுவையும் பண்டுண்ட
மற்றைக் கூழின் மிகநன்று
$ வாரீ ரிழிச்ச வாரீரே.

ப - ரை :—இனி பற்றி பாரீர் - இனி (இந்தக் கூழை) பிடித்துப் பாருங்கள், கூழின் பதமும் சுவையும் - (இந்த) கூழின் பக்குவமும் இனிமையும், பண்டு உண்ட - முன்பு (நாம்) குடித்த, மற்றை கூழின் - மற்றக் கூழ்களைக் காட்டினும், மிக நன்று - மிகவும் நன்று யிருக்கிறது, இழிச்ச வாரீர் வாரீர் - (இனி அடுப்பிலிருந்து) இறக்க வாருங்கள், வாருங்கள்.

வி - ரை :—'பண்டுண்ட மற்றைக் கூழின் மிக நன்று' என்றது, சக்கரக் கோட்டம் [தா - கசஎ] மதுரை [தா - கசஅ] மணலூர் [தா - ருகூச] முதலிய களங்களில் அட்ட கூழினுங் கலிங்கக் களத்துக் கூழே மிகவும் இனிய தென்பதாம். தேவாசுர, ராமாயண, மாபாரதக் களங்களில் காய்ச்சின கூழினும் மிக நன்று எனினுமாம். உம்மைகள் எண்ணுப் பொருளன.

பா - பே :—$ வாரீர் கூழை. (அ௦)

இதுவுமது

ருருஉ. எடுத்துக் கைகள் வேகாமே
இவுளித் துணியிட் டிருமருங்கும்
அடுத்துப் பிடித்து மெத்தெனவே
அடுப்பி னின்று மிழிச்சீரே.

ப - ரை :—எடுத்து - (கூழ்ப் பானைகளை) எடுத்தலால், கைகள் வேகாமே - (அவற்றின் வெம்மையால்) கைகள் வெந்து போகாமல், இரு மருங்கும் - (அந்தப் பானைகளின்) இரண்டு பக்கங்களிலும், இவுளி துணி இட்டு - குதிரைகளின் மாமிச துண்டமாகிய சீலைகளை வைத்து, அடுத்து

பிடித்து - (இறுக) சேர்த்துப் பிடித்து, மெத்தென - மெல்லென, அடுப்பின் நின்றும் இழிச்சிர் - அடுப்பிலிருந்து இறக்குங்கள்.

வி - ரை:—கூழ் வெந்து பதமானமையால், இனிக் கூழ்ப் பானையைக் குதிரைகளின் இறைச்சியாகிய துணியைப் பிடித்து அடுப்பிலிருந்து மெல்ல இறக்குங்கள் என்பதாம். இவுளி—முதலாகு பெயராய் அதன் மாமிசத்தை யுணர்த்தினது. (அக)

கூழின் மிகுதி

ருருங. ஒருவாய் கொண்டே $ யிதுதொலைய
உண்ண வொண்ணு தென்றென்று
வெருவா நின்றீ ராயிரம்வாய்
‡ வேண்டு மோவிக் கூழுணவே.

ப - ரை :—ஒரு வாய் கொண்டு - (நம்முடைய) ஒரு வாயால், இது தொலைய - இந்தக் கூழ் தொலைந்து போகும்படி, உண்ண ஒண்ணுது - உண்ண முடியாது, என்று என்று - என்று பலவிதமாய்ச் சொல்லி, வெருவா நின்றீர் - (இந்தக் கூழின் மிகுதியைக் கண்டு) பயப்படுகின்றீர், இ கூழ் உண்ண - இந்தக் கூழைக் குடிக்க, ஆயிரம் வாய் வேண்டுமோ- பல வாய்கள் தேவையோ, (தேவையில்லை யென்பதாம்).

வி - ரை :—இக்கூழ் முற்றும் நாமனைவரும் எளிதில் உண்ணலா மென்பதாம். வாய் கொண்டு—கொண்டு மூன்றுவதன் சொல்லுருபு. வேண்டுமோ—ஓகாரம் எதிர்மறை.

பா - பே :—$ இதுதேய, ‡ வேண்டு மிக்கூழ் தானுணவே. (அஉ)

இதுவுமது

ருருச. வெந்த விரும்பிற் புகும்புனல்போல்
வெந்தீப் பசியால் * வெந்தெரியும்
‡ இந்தவிடம்பை நாத்தோய்க்கில்
$ இக்கூ ழெல்லாஞ் சுவறுதோ.

ப - ரை :—வெந்த இரும்பில் - (நெருப்பில் பழுக்க) காய்ந்த இரும்பில், புகும் புனல் போல் - புகுந்து மறையும் தண்ணீர் போல், வெம் தீ பசியால் - கொடிய நெருப்புப் போன்ற பசியால், வெந்து எரியும் - வெந்து எரிகின்ற, விடம்பை - பிளவையுடைய, இந்த நா தோய்க்கில் - (நமது) இந்த நாவை (சிறிது) நனைத்தாலும், இ கூழ் எல்லாம் - இந்தக் கூழ் முழுவதும், சுவறுதோ - (ஒன்றுமின்றி) வறண்டு போகாதோ, (போகு மென்பதாம்).

வி - ரை :—பசித் தழலால் வெந்து கிடக்கும் நம்முடைய நாவைச் சிறிது நனைத்தாலும் இந்தக் கூழெல்லாம் வற்றிப்போ மென்பதாம். 'வெந்த விரும்பிற் புகும்புனல்போல்' என்றமைக் கேற்ப 'தீர விரும்புண்ட நீரது போல' [திருவாய் - க0-க0-ருு] எனத் தமிழ் வேதந் தந்த காரிமாறப் பிரானும், 'இரும்பனன் றுண்ட நீர் போல்' [திருக்குறுந்தா - ரு] எனத் திருமங்கை யாழ்வாரும், 'இரும்புண்ட நீர்' [சடாயு உயிர் - க0ச] எனக் கம்பரும், 'தீர விரும்புண்ட நீராக்கு மாறு' [திருவேங் - அ௩ - ருசு] என ஐயங்காரும் கூறியுள்ளமை காண்க. இச்செய்யுளில் உவமை யணியும், உயர்வு நவிற்சி யணியும் உள்ளமை காண்க. பா - பே —* வெந்துலரும், ‡ இந்த வுடம்பை நாம் தோய்க்கில், $ எல்லாக் கூழும். (அங)

இதுவுமது

டுடு. பண்டு மிகுமோ பரணிக்கூழ்
*பார கத்தி லறியேமோ
உண்டு மிகுமோ நீர்சொன்ன
உபாய மிதுவுஞ் செய்குவமே.

ப - ரை :—பரணி கூழ் - (நாம்) பரணி நாளில் சமைத்த கூழ், பண்டு - (இதற்கு) முன்பு, மிகுமோ - (இதைவிட) சிறந்திருக்குமோ, பார் அகத்தில் - (இந்த) உலகத்தில், அறியேமோ - (இதனை நாம்) அறிய மாட்டோமோ, உண்டும் மிகுமோ - (நாம் இதனை) உண்ட பின்பும் மிகுதியா யிருக்குமோ, நீர் சொன்ன - (அப்படி மிகுதியானல்) நீங்கள் சொன்ன, உபாயம் இதுவும் - உபாயமாகிய இதனையும், செய்குவம் - செய்வோம்.

வி - ரை :—'உபாய மிதுவுஞ் செய்குவம்' என்றது முற்செய்யுளில் கூறியபடி, பேய்கள் தங்கள் நாவைத் தோய்த்தலாம். அறியேமோ—இரண்டு எதிர்மறைகள் சேர்ந்து ஓர் உடன்பாட்டுப் பொருளில் வந்தன. அறிவோம் என்பதாம். பா - பே :—* பாரதத்தில். (அச)

உணவிற்குமுன் நீர் வைத்துக்கொள்ளல்

டுசு. வெம்புங் குருதிப் பேராற்றில்
வேண்டுந் தண்ணீர் வேழத்தின்
கும்பங் களிலே முகந்தெடுத்துக்
குளிர வைத்துக் கொள்ளீரே.

ப - ரை :—வெம்பும் - வெப்பங் கொள்ளும், குருதி பேர் ஆற்றில் - உதிரமாகிய பெரிய நதியில், வேண்டும் தண்ணீர் - (உங்களுக்கு) வேண்டிய வளவு தண்ணீரை, வேழத்தின் கும்பங்களில் - யானைகளின் மத்தகங்களாகிய குடங்களில், முகந்து எடுத்து - மொண்டெடுத்து, குளிர வைத்து கொள்ளீர் - (நீங்கள்) குளிர வைத்துக் கொள்ளுங்கள்.

வி - ரை :—யானைப் படை, குதிரைப் படை, காலாட் படைகளைக் கொன்றதனல் பெருகியோடிய புதிய வுதிரமாகலான், 'வெம்புங் குருதி' எனவும், 'குளிரவைத்துக் கொள்ளீர்' எனவும் பேய்கள் கூறின வென்க. கொள்ளீர்—ஏவற் பன்மை வினைமுற்று; இங்கு உடன்பாட்டுப் பொருளில் வந்தது. (அரு)

உணவு கொள்ள நிலஞ் சமைத்தல்

டுஎ. சோருங் களிற்றின் வாலதியாற்
சுழல வலகிட் டலைகுருதி
நீருந் தெளித்துக் கலம்வைக்க
$நிலமே சமைத்துக் கொள்ளீரே.

ப - ரை :—சோரும் - (உயிர்) அழிந்த, களிற்றின் வாலதியால் - யானைகளின் வால்களால், சுழல அலகிட்டு - சுற்றும் பெருக்கி, அலை குருதி நீரும் தெளித்து - (அலைகளால்) அசையும் உதிரமாகிய தண்ணீரையும் தெளித்து, கலம் வைக்க - உண்கலங்களை வைக்க, நிலம் சமைத்து கொள்ளீர் - இடத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்.

வி - ரை :—இறந்துபட்ட வேழங்களின் வால்களால் பெருக்கிக் குருதி நீர் தெளித்து இடமமைத்துக் கொள்ளுங்கள் என்பதாம். அலை குருதி—வினைத்தொகை. பா - பே :—$ நிலமும். (அசு)

உண்கலம் அமைத்தல்

ருருஅ. போர்மண் டலிகர் கேடகத்தின்
புளகச் சின்னம் பரப்பீரே
பார்மண் டலிகர் தலைமண்டை
பலமண் டைகளாக் கொள்ளீரே.

ப-ரை:—போர் மண்டலிகர் - போரைப் புரியும் அரசர்களின், கேடகத்தின் - கேடகங்களாகிய, புளகம் சின்னம் - சோற்றுத் தட்டுகளை, பரப்பீர் - பரப்பி வையுங்கள், பார் மண்டலிகர் - உலகத்தை யாளும் அரசர்களின், தலை மண்டை - தலை ஓடுகளை, பல மண்டைகள் ஆ(க) - பல உண்கலங்களாக, கொள்ளீர் - கொள்ளுங்கள்.

வி-ரை:—இறந்த அரசர்களின் கேடகங்களையும் மண்டை யோடுகளையும் உண்கலங்களாகக் கொள்ளுங்கள் என்பதாம். மண்டலிகர்—பூமியை யாளு வோர்; புளகம்—சோறு; சின்னம்—தட்டு; மண்டை—ஒருவகைப் பாத்திரம். கேடகத்தின்—இன் அல்வழிச் சாரியை. (அஎ)

இதுவுமது

ருருகூ. அழிந்த கலிங்கர் பொற்பரிசை
அவைபொற் கலமாக் கொள்ளீரே
விழுந்த தவளக் குடைமின்னும்
வெள்ளிக் கலமாக் கொள்ளீரே.

ப-ரை:—அழிந்த கலிங்கர் - (போரில் இறந்து) அழிந்த கலிங்க வீரர்களின், பொன் பரிசை அவை - அழகிய கேடகங்களாகிய அவற்றை, பொன் கலம் ஆ(க) - பொன் பாத்திரங்களாக, கொள்ளீர் - கொள்ளுங் கள், விழுந்த - (சிதைந்து) விழுந்த, தவளம் குடை - வெண்மையாகிய குடைகளை, மின்னும் - ஒளி வீசும், வெள்ளி கலம் ஆ(க) - வெள்ளிப் பாத்திரங்களாக, கொள்ளீர் - கொள்ளுங்கள்.

வி-ரை:—மடிந்து வீழ்ந்த மன்னர்களின் கேடகங்களைப் பொற் பாத்தி ரங்களாகவும், வெண் கொற்றக் குடைகளை வெள்ளிக் கலங்களாகவுங் கொள்ளுங்கள் என்பதாம். பொன் பரிசை—பொன்னாலாகிய கேடக மெனினு மாம். கலம் ஆ—இதில் ககரந் தொகுத்தலாம். (அஅ)

கூழைப் பங்கிடக் கருவி கொள்ளல்

ருகூ0. நிலத்தைச் சமைத்துக் கொள்ளீரே
நெடுங்கைக் களிற்றி னிருசெவியாங்
கலத்திற் கொள்ளக் குறையாத
கலங்கள் பெருக்கிக் கொள்ளீரே.

ப-ரை:—நிலத்தை சமைத்து கொள்ளீர் - (உண்பதற்கு) இடத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள், கலத்தின் - கல மென்னும் அளவு கருவி யினும், கொள்ள குறையாத - (தம்மிடம்) கொள்ளக் குறைவுபடாத, நெடும் கை - நீண்ட துதிக்கைகளையுடைய, களிற்றின் - யானைகளின், இரு செவி ஆம் - இரண்டு காதுகளாகிய, கலங்கள் - பாத்திரங்களை, பெருக்கி கொள்ளீர் - (கூழ் வார்க்க) மிகவும் அதிகமாய்ச் செய்து கொள்ளுங்கள்.

வி-ரை:—ஒவ்வொரு கலங் கூழுக்குத் குறையாமற் கொள்ளும் யானைச் செவிகளாகிய பாத்திரங்களைச் சில பேய் மடையர்கள் கூழ் பங்கிடக்

கொண்டன ரென்க. இரு செவியாங் கலங்களென்க. கலம்—பன்னிரண்டு மரக்கால் கொண்டதோ ரளவு கருவி.

பா - பே :—§ களிற்றின் பிணக் காலாம், கலத்திற் குறையக் கொள்ளாத கலத்தை. (அகூ)

பகல் விளக்கும் பாவாடையும்

ருசுக. கதம்பெற் றார்க்குஞ் செறுநர்விழிக்
கனலு நிணமு மணங்கின்பாற்
பதம்பெற் றார்க்குப் பகல்விளக்கும்
பாவா டையுமாக் கொள்ளீரே.

ப - ரை :—அணங்கின் பால் - தேவியினிடத்தில், பதம் பெற்றார்க்கு - (உயர்) பதவி பெற்றவர் பொருட்டு, கதம் பெற்று - (போரில்) சினமடைந்து, ஆர்க்கும் - ஆரவாரஞ் செய்யும், செறுநர் விழி - வீரர்களின் கண்களிலிருந்து வரும், கனல் பகல் விளக்கு (ஆக) உம் - (கோபமாகிய) நெருப்பைச் சூரியனைப் போன்ற விளக்காகவும், நிணம் பா ஆடை ஆ (க) உம் - (அவர்கள்) கொழுப்பை (நிலத்தில்) பரப்பும் துணியாகவும், கொள்ளிர் - (நீங்கள் அமைத்து) கொள்ளுங்கள்.

வி - ரை :—தேவி யருளால் உயர் பதவி யெய்துவோர்கட்குரிய விழிக் கனலாகிய பகல் விளக்கையும் நிணமாகிய பாவாடையையும் நீங்கள் அமைத்துக் கொள்ளுங்கள் என்பதாம். இதில் நிரனிறைப் பொருள்கோள் அமைந்துள்ளமை காண்க. இச்செய்யுள் திரிபாம். (கூ0)

மடைப் பேய்கள் மற்றப் பேய்களை விளித்தல்

ருசுஉ. பரிசு படவே கலம்பரப்பிப்
பந்தி பந்தி படவுங்கள்
வரிசை ‡ யுடனே யிருந்துண்ண
வாரீர் கூழை வாரீரே.

ப - ரை :—கலம் - உண் கலங்களை, பரிசு பட பரப்பி - (ஒரே) வகையாய்ப் பரப்பி வைத்து, உங்கள் வரிசையுடன் - உங்கள் மேன்மைக்குத் தகுதியாய், பந்தி பந்தி பட - வரிசை வரிசையாய்ப் பொருந்த, இருந்து உண்ண - (ஒன்றாய்) இருந்து உண்ணுதற்கு, வாரீர் - (அனைவரும்) வாருங்கள், கூழை வாரீர் - (இனி) கூழை ஊற்றுங்கள்.

வி - ரை :—'பரிசு பட......உண்ண வாரீர்' என்னு மளவும் கூழைப் பங்கிடத் தொடங்கிய மடைப்பேய்கள் மற்றப் பேய்களை விளித்தவாறாம். 'கூழை வாரீர்' என்றது உண்ணத் தொடங்கிய பேய்களின் கூற்றாம். 'வாரீர்' இரண்டனுள் முந்தியதில் வா—பகுதி; பிந்தியதில் வார்—பகுதி என்க. வாரீர் இரண்டும் ஏவற்பன்மை வினை முற்றுக்கள். 'கூழை யுண்ண வாரீர் வாரீர்' என்றியைத்து மடைப்பேய்கள் மற்றப் பேய்களை விளித்தன வெனினுமாம்.

பா - பே :—‡ வழியே. (கூக)

உணவு படைக்க அகப்பை கொள்ளல்

ருசுங. கங்கா புரியின் மதிற்புறத்துக்
கருதார் சிரம்போய் மிகவீழ
இங்கே தலையின் வேல்பாய்ந்த
இவைமூ ளைகளாக் கொள்ளீரே.

ப - ரை :—கருதார் சிரம் - பகைவர்களின் தலைகள், கங்கா புரியின் - கங்கை கொண்ட சோழ புரத்தின், மதில் புறத்து போய் - மதிலுக்கு

அப்பால் போய், மிக வீழ - மிகவும் விழுதலால், இங்கே - இந்தக் கலிங்கப் போர்க்களத்தில், வேல் பாய்ந்த தலை இவை - வேல்கள் பதிந்த (சில) தலைகளாகிய இவைகளை, மூழைகள் ஆ(க) கொள்ளீர் - அகப்பைக ளாகக் கொள்ளுங்கள்.

வி - ரை :—கங்காபுரி :—இது சோழநாட்டில் கங்கைகொண்ட சோழனால் அமைக்கப்பட்டதோர் நகரமாம் [தா - உ0உ]. அதனால் இதனைக் கங்கை கொண்ட சோழபுரம் எனவும் வழங்குவர். இதுவே சோழர் காலத்தில் சோழநாட்டின் தலைநகரமாய்த் திகழ்ந்தது. 'கருதார் சிரம் மிக வீழ' என்றதனால், சில அவ்வாறு விழாமல் நின்றமையும், பேய்கள் அவற்றை அகப்பைகளாய்க் கொண்டமையும் விளங்கும். தலைகளை அகப்பைகளாகவும் வேல்களை அவைகளின் காம்புகளாகவும் கொள்க. 'கருதார்' என்றது இங்குக் கலிங்க வீரர்களையாம். (கூஉ)

மடைப் பேய்களைத் தேர்ந்தெடுத்தல்

ருகூச. கிடைக்கப் பொருது மணலூரிற்
கிழ்நா ளட்ட பரணிக்கூழ்
படைத்துப் பயின்ற மடைப்பேய்கள்
பந்தி தோறும் வாரீரே.

ப-ரை:—மணலூரில்——, கிடைக்க - (போர்) கிடைக்க, பொருது - (முதற் குலோத்துங்கன்) போர் புரிதலால், கிழ் நாள் - முன்னாளில், பரணி அட்ட கூழ் - பரணி நாளில் சமைத்த கூழை, படைத்து பயின்ற - (எல்லாப் பேய்களுக்கும்) படைத்துப் பழகிய, மடை பேய்கள்-சமையல் தொழிலைச் செய்யும் பேய்களே, பந்தி தோறும் வாரீர் - பந்திகளெல்லா வற்றிற்கும் (கூழை) வாருங்கள்.

வி - ரை :—பரணிக் கூழ் இதனை ருசஅ-ம், தாழிசையிற் காண்க. முதற் குலோத்துங்கன் ஆறும் விக்கிரமாதித்தனுக்குத் தம்பியும், வனவாசிக்குப் பிரதி நிதியுமாகிய சயசிங்கனை வென்று வனவாசியைக் கைப்பற்றினன். அவன் மீண்டும் ஆறும் விக்கிரமாதித்தனோடு போர் புரிந்து மணலூர் வழியாய்த் துங்கபத்திரை நதிக்கப்பால் அவனைத் துரத்தி யடித்தனன் [சோழவமி-பக். ௩0-௩க]. இப்போர் கி. பி. க0அக-ல், நிகழ்ந்ததாம் [தா - க0௩-௩அரு]. (கூ௩)

## மடைப் பேய்கள் மற்றப் பேய்கட்குக் கூழ் ஊற்றினமை

பனவப் பேய்க்குக் கூழளித்தல்

ருகூரு. அவதி யில்லாச் சுவைக்கூழ்கண்
டங்காந் தங்காந் தடிக்கடியும்
பவதி பிட்சாந் தேகியெனும்
பனவப் பேய்க்கு வாரீரே.

ப - ரை :—அவதி இல்லா - அளவில்லாத, சுவை கூழ் கண்டு - சுவையையுடைய கூழைப் பார்த்து, அடிக்கடியும் - பல முறையும், அங்காந்து அங்காந்து - வாயை மிகுதியும் திறந்து, பவதி - அம்மையே, பிட்சாம் தேகி - பிச்சையைக் கொடு, எனும் - என்று கேட்கும், பனவம் பேய்க்கு - பிராமணப் பேய்க்கு, வாரீர் - (கூழை) வாருங்கள்.

வி - ரை :—பிராமணப் பேய்க்குக் கூழை ஊற்றுங்கள் என்பதாம். பிராமணப் பேயாதலால், 'பவதி பிட்சாந் தேகி' என வடமொழியில் வினவின தென்க. பவதி—விளி வேற்றுமை; இதன் முதல் வேற்றுமை பவதீ என்பதாம்.

இது முதல் இளஅ-ம் தாழிசை யளவும் மடைப் பேய்கள் மற்றப் பேய்களுக்குக் கூழ் வார்த்தலை யுணர்த்தும். பா - பே :—டு அட்சாந்தங்கொண்டு. (கூசு)

சமணப் பேய்களுக்குக் கூழ் ஊற்றல்

ருசுசு. உயிரைக் கொல்லாச் சமண்பேய்கள்
ஒருபோழ் துண்ணு மவையுண்ண
மயிரைப் பார்த்து நிணத்துகிலால்
வடித்துக் கூழை வாரீரே.

ப - ரை :—உயிரை கொல்லா - பிற வுயிர்களைக் கொல்லாத, சமண் பேய்கள் - சமணப் பேய்களானவை, ஒரு போழ்து உண்ணும் - (ஒரு நாளில்) ஒரு வேளையே புசிக்கும், அவை உண்ண - அந்தப் பேய்கள் உண்ணும்படி, நிணம் துகிலால் - கொழுப்பாகிய சீலையால், மயிரை வடித்து - (கூழில் கலந்திருக்கும்) மயிரை வடிகட்டி, பார்த்து - (மயிரில் லாமல்) பார்த்து, கூழை வாரீர்——.

வி - ரை :—சமணப் பேய்களுக்குக் கூழை ஊற்றுங்கள் என்பதாம். உண்ணும்—செய்யு மென்னும் வினைமுற்று. (கூரு)

புத்தப் பேய்க்குக் கஞ்சி வார்த்தல்

ருசுஎ. முழுத்தோல் போர்க்கும் புத்தப்பேய்
மூளைக் கூழை நாக்குழறக்
கழுத்தே கிட்ட மணந்திரியாக்
கஞ்சி யாக வாரீரே.

ப - ரை :—முழு தோல் - முழுமையாகிய தோலை, போர்க்கும் - (ஆடையாக) போர்த்துக்கொள்ளும், புத்தப் பேய் - புத்த சமயப் பேய் களின், நா குழற - நாக்குத் தடுமாறவும், கழுத்தே கிட்ட - கழுத்தை நெருங்கவும், மணம் திரியா - (புலால்) நாற்றம் நீங்காத, மூளை கூழை - மூளையாலாகிய கூழை, கஞ்சி ஆக வாரீர் - கஞ்சியாக ஊற்றுங்கள்.

வி - ரை :—புத்தர்களில் ஒரு சாரார் தோலைப் போர்த்துக் கஞ்சி யுண்பவ ராதலால், இவ்வாறு கூறப்பட்டது. 'நாக்குழற, கழுத்துக் கிட்ட' என்றது, வேண்டிய வளவு வயிறு நிரம்பக் கூழ் ஊற்றுதலை யுணர்த்தினது. மூளைக் கூழ்—மூன்றனுருபும் பொருளு முடன்தொக்க தொகை. (கூசு)

பார்வைப் பேய்க்குக் கூழுளித்தல்

ருசுஅ. கொய்த விறைச்சி யுறுப்பனைத்துங்
கொள்ளுங் கூழை வெள்ளாட்டின்
பைத லிறைச்சி தின்றுலர்ந்த
* பார்வைப் பேய்க்கு வாரீரே.

ப - ரை :—வெள்ளாட்டின் - வெள்ளாட்டினுடைய, பைதல் இறைச்சி - இளந்தசையை, தின்று உலர்ந்த - தின்று (அது போதாமையால் உடல்) மெலிந்த, பார்வை பேய்க்கு - மேற் பார்வையிடும் பேய்க்கு, உறுப்பு அனைத்தும் - (போரில் பட்ட யானை, குதிரைகளின்) உறுப்புக்களெல்லா வற்றையும், கொய்த இறைச்சி - அறுத்த இறைச்சியால், கொள்ளும் கூழை வாரீர் - சமைத்துக்கொண்ட கூழை வாருங்கள்.

வி - ரை :—அனைத்தும்—உம்மை முற்றுப் பொருளது. பைதல்—பைது + அல்—எனப் பிரித்துப் பசுமையுடையதா யல்லாத எனப் பொருள் கோடலுமாம். பா - பே :—* பாரப் பேய்க்கு, பார்சிவப் பேய்க்கு. (கூஎ)

குருட்டுப் பேய்க்குக் கூழ் ஊற்றல்

நகூகூ. ஊணா தரிக்குங் கள்ளப்பேய்
ஒளித்துக் கொண்ட ‡ கலந்தடவிக்
காணா தரற்றுங் குருட்டுப்பேய்
கைக்கே கூழை வாரீரே.

ப - ரை :—ஊண் ஆதரிக்கும் - உணவை (மிகுதியும்) விரும்பும், கள்ளம் பேய் - திருட்டுப் பேயானது, ஒளித்து கொண்ட - (திருடி) மறைத்து வைத்துக் கொண்ட, கலம் தடவி - (கூழ்) பாத்திரத்தைத் தடவிப் பார்த்து, காணாது - (அதனை) காணாமல், அரற்றும் - (வாய் விட்டு) கதறியழுகின்ற, குருட்டு பேய் கைக்கு - குருட்டுப் பேயின் கைகளில், கூழை வாரீர் - (மீண்டும்) கூழை ஊற்றுங்கள்.

வி - ரை :—குருட்டுப் பேயின் கூழ் நிறைந்த கலத்தைக் கள்ளப் பேய் களவாடிக்கொண்டமையால், குருட்டுப்பேயின் கையில் கூழ்வார்க்க நேர்ந்ததாம். கைக்கு—உருபு மயக்கம். பா - பே :—‡ கலந்தேடி. (கூஅ)

ஊமைப் பேய்க்குக் கூழ் வார்த்தல்

நஎ0. பையாப் போடு பசிகாட்டிப்
§ பதலை நிறைந்த கூழ்காட்டிக்
கையா லுரைக்கு மூமைப்பேய்
கைக்கே கூழை வாரீரே.

ப - ரை :—பையாப்போடு - துன்பத்தோடு, பசி காட்டி - (தன்) பசியை யுணர்த்தியும், பதலை நிறைந்த - (தன் கையிலுள்ள) பானையில் நிறைந்த, கூழ் காட்டி - கூழைக் காட்டியும், கையால் உரைக்கும் - கைகளால் (தன் கருத்தை) அறிவிக்கும், ஊமை பேய் கைக்கு - ஊமைப் பேயின் கைகளில், கூழை வாரீர்——.

வி - ரை :—கையா லுரைத்தலாவது :—தனக்குக் கிடைத்த கூழ், பானை நிரம்ப விருப்பினும், அது தன் பசிக்குப் போதாதெனத் தன் கைகளால் குறிப்பித்தலாம்; ஊமைப் பேயின் பானையில் கூழ் நிரம்பி விட்டமையால், அது தன் கைகளில் கூழை யேற்று உண்ணத் தொடங்கிற்றென்க.

பா - பே :—§ பானை நிறைந்த. (கூகூ)

சூற்பேய்க்குக் கூழ் அளித்தல்

நஎக. அடைத்த செவிக டிறந்தனவால்
* அடியேற் கென்று கடைவாயைத்
துடைத்து நக்கிச் சுவைகாணுஞ்
‡ சூற்பேய்க் கின்னுஞ் சொரியீரே.

ப - ரை :—அடியேன் கு - அடியவளாகிய எனக்கு, அடைத்த செவிகள் - (பசியின் கொடுமையால்) அடைத்துக் கொண்ட காதுகள், திறந்தன - (அந்தக் காதடைப்பு நீங்கி) திறந்தன, என்று - என்று சொல்லி, கடை வாயை - (தன்) வாயின் கடைப் பகுதியை, நக்கி துடைத்து-(தன் நாவினால்) நக்கித் துடைத்துக்கொண்டு, சுவை காணும்- (முன்பு பருகிய கூழின்) சுவையைப் பார்க்கும், சூல் பேய்க்கு - கருவை யுடைய பேய்க்கு, இன்னும் சொரியீர் - இன்னும் (கூழை) வாருங்கள்.

வி - ரை :—பசியின் கொடுமையால் காதடைத்த வியல்பு. 'செவிகள் திறந்தன' என்றது காதடைப்பு நீங்கினமையை யுணர்த்தினது. 'நக்கிச் சுவை காணும்' என்றதனால், கூழின் சுவை விளங்கும். திறந்தனவால்—

ஆல்—அசை; அடியேற்கு—அடியேன்+கு; இது குறிப்பு வினையாலணையும் பெயர். கடைவாய்—இலக்கணப் போலி.

பா - பே:—* அடியேனென்று, ‡ சூர்ப் பேய்க்கு. (௪00)

இழுதைப் பேய்க்குக் கூழ் வார்த்தல்

௫௭௨. பொல்லா வோட்டைக் கலத்துக்கூழ்
புறத்தே யொழுக மறித்துப்பார்த்
தெல்லாங் கவிழ்த்துத் திகைத்திருக்கும்
இழுதைப் பேய்க்கு வாரீரே.

ப - ரை:—பொல்லா - உதவாத, ஓட்டை கலத்து கூழ் - ஓட்டைப் பாத்திரத்தி லூற்றிய கூழானது, புறத்தே ஒழுக - வெளிப்பக்கம் ஒழுகு தலை, மறித்து பார்த்து - திருப்பிப் பார்த்து, எல்லாம் கவிழ்த்து - (அந்தப் பாத்திரத்திலுள்ள கூழ்) எல்லாவற்றையும் கவிழ்த்துவிட்டு, திகைத்து இருக்கும் - (ஒன்றுஞ் செய்யத் தோன்ருமல்) திகைப்படைந்து இருக்கும், இழுதை பேய்க்கு - மூடத்தன்மையையுடைய பேய்க்கு, வாரீர்——.

வி - ரை:—கூழ் ஒழுகுதற்குக் காரணம் ஓட்டைப் பாத்திர மென்பதையும், அதனைத் திருப்பினல் அதிலுள்ள கூழெல்லாம் போய்விடு மென்பதையும் அறியாமையால், அப்பேயை 'இழுதைப் பேய்' என்றர். ஒழுக—தொழிற் பெயர்ப் பொருளில் வந்தது. இதனைக் காரணப்பொருளில் வந்த வினையெச்ச மாய்க் கொள்ளினுமாம். (௪0௧)

நோக்கப் பேய்க்கும் கூழ் ஊற்றல்

௫௭௩. துதிக்கைத் துணியைப் பல்லின்மேற்
செவ்வே நிறுத்தித் துதிக்கையின்
நுதிக்கே கூழை வாரென்னு
நோக்கப் பேய்க்கு வாரீரே.

ப - ரை:—துதிக்கை துணியை - (போரில் வெட்டுண்ட யானையின்) தும்பிக்கையின் துண்டத்தை, பல்லின் மேல் - (தன்) பற்களில், செவ்வே நிறுத்தி - செவ்வையாய் நிறுத்திக்கொண்டு, துதிக்கையின் நுதிக்கு - (அந்த) தும்பிக்கையின் நுனியில், கூழை வார் என்னும் - கூழை ஊற்று என்று சொல்லும், நோக்கப் பேய்க்கு-நோக்க சாதிப்பேய்க்கு,வாரீர்——.

வி - ரை:—நோக்கப் பேய்க்குப் பாத்திரங் கிடைக்காமையால், அது யானைத் துதிக்கையை வளைத்துத் தன் வாயில் வைத்துக்கொண்டு அதன் நுனியில் ஊற்றும் கூழைப் பருகலாயிற் றென்க. (௪0௨)

கூத்திப் பேய்க்குக் கூழ் அளித்தல்

௫௭௪. தடியான் மடுத்துக் கூழெல்லாந்
தானே பருகித் தன்கணவன்
குடியா னென்று தான்குடிக்குங்
கூத்திப் பேய்க்கு வாரீரே.

ப - ரை:—கூழ் எல்லாம் - (பானைமேல் வழியும்) கூழ் எல்லாவற் றையும், தடியால் மடுத்து - மாமிசத்துண்டத்தால் தடுத்து, தானே பருகி - தான் மாத்திரம் குடித்து, தன் கணவன் - தன் கொழுநன், குடியான் என்று - குடிக்க மாட்டான் என்று சொல்லி, தான் குடிக்கும் - (அவனுக்கு வாங்கின கூழையும்) தானே குடிக்கின்ற, கூத்தி பேய்க்கு வாரீர்——.

வி - ரை :—'தன் கணவன் குடியான்' என்றதனால், கூந்திப் பேய் தன் கணவனுக்கும் கூழ் வாங்கினமை விளங்கும். 'தானே பருகி' என்றது அது தன் கணவனுக்கு மாத்திரமின்றித் தன் குழந்தைகளுக்குங் கொடாமல் தானே குடித்த தென்பதாம். தானே—ஏகாரம் பிரிநிலை. இவ்வாறு தாழிசைகளிலும் நகைச்சுவை செறிந்துள்ளமை காண்க. (௧0௩)

விருந்தாக வந்த பேய்கட்குக் கூழ் ஊற்றல்

௫௭௫. வருகூழ்ப் பரணிக் களங்கண்டு
வந்த பேயை முன்னூட்டி
ஒருகூழ்ப் பரணி நாமிருக்கும்
ஊர்க்கட் பேய்க்கு வாரீரே.

ப - ரை :—களம் - போர்க் களத்தில், பரணி வரு கூழ் கண்டு - பரணி நாளில் (பலர்க்கும்) கிடைக்கும் உணவைப் பார்த்து, வந்த பேயை - (இங்கு விருந்தினராய்) வந்த பேய்களை, முன் ஊட்டி - முதலில் உண்பித்து, நாம் இருக்கும் - நாம் வசிக்கும், ஊர்கண் பேய்க்கு - ஊரி லுள்ள பேய்க்கும், ஒரு கூழ் - ஒப்பற்ற கூழை, பரணி வாரீர் - பாத்தி ரத்தில் ஊற்றுங்கள்.

வி - ரை :—'வந்த பேயை முன்னூட்டி' என்றதனால், பேய்கள் விருந் தினரை உபசரித்தல் விளங்கும். இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி யிருத்தல் காண்க. (௧0௪)

கணிதப் பேய்கட்குக் கூழ் வார்த்தல்

௫௭௬. இரவு கனவு கண்டபேய்க்
கிற்றைக் கன்றி நாளைக்கும்
புரவி யுரித்தோற் பட்டைக்கே
†கூழைப் பொதிந்து வையீரே.

ப - ரை :—இரவு - இரவில், கனவு கண்ட பேய்க்கு - (கலிங்கப் போர் நிகழுமென்று) கனவு கண்டு சொன்ன கணிதப் பேய்களுக்கு, இற்றைக்கு அன்றி - இன்றைக்கு மாத்திரமல்லாமல், நாளைக்கும்——, புரவி உரி தோல் பட்டைக்கு - குதிரைத் தோலாலாகிய தொன்னையில், கூழை பொதிந்து - கூழை நிரப்பி, வையீர் - வைப்பீராக.

வி - ரை :—கணிதப் பேய்கள் கனவுகண் டுரைத்தமையை உ௨௭-ம், தாழிசையிற் காண்க. பட்டை—வழிப்போக்கர் பனையோலை முதலியவற்றால் நீர் பருகச் செய்யும் தொன்னை போன்ற ஒருவகைப் பாத்திரம். பேய்களாத லின், குதிரைத் தோலால் தொன்னை கோலி அதில் கூழை நிரப்பி வைத்தன வென்க. உரித்தோல்—ஒரு பொருட் பன்மொழி. பட்டை—ஆகுபெயராய்த் தொன்னையை யுணர்த்தினது. பா - பே :—† போதக் கூழை வாரீரே. (௧0௫)

கணக்கப் பேய்க்குக் கூழ் வார்த்தல்

௫௭௭. இணக்க மில்லா நமையெல்லாம்
எண்ணிக் கண்டே மென்றுரைக்குங்
கணக்கப் பேய்க்கு மகங்களிக்கக்
கையா லெடுத்து வாரீரே.

ப - ரை :—இணக்கம் இல்லா - (ஒருவரோ டொருவர்) சேர்தலில் லாத, நமை எல்லாம்——, எண்ணி - கணக்கிட்டு, கண்டேம் என்று உரைக்கும் - (சரியாய் இருப்பதை) பார்த்தோம் என்று சொல்லும்,

கனைக்கப் பேய்க்கும்——, அகம் களிக்க - (அதன்) மனத்தில் மகிழ்ச்சி யுண்டாகும்படி, கையால் எடுத்து வாரீர் ——.

வி - ரை :—பேய்கள் பெரும்பாலுந் தனித்து வாழ மியல்புடையன வாத லால், 'இணக்கமில்லா' எனப்பட்டது. ருசுரு-ம், செய்யுள் முதல் இதுகாறும் மடைப் பேய்கள் மற்றப் பேய்களுக்குக் கூழ் ஊற்றினமை கூறினர். (௧0சு)

பேய்கள் உண்ணத் தொடங்கல்

ருஎஅ. மென்குடர் வெள்ளைகு தட்டீரே
* மெல்விர லிஞ்சிய துக்கீரே
முன்கையெ லும்பினை மெல்லீரே
மூளையை வாரிவி ழுங்கீரே.

ப - ரை :—வெள்ளை மெல் குடர் - வெண்மையாகிய மெல்லிய குடல்களை, குதட்டீர் - மெல்லுங்கள், மெல் விரல் இஞ்சி - (வீரர்களின்) மெல்லிய விரல்களாகிய இஞ்சியை, அதுக்கீர் - மெல்லுங்கள், முன் கை எலும்பினை - முன் கைகளிலுள்ள எலும்புகளை, மெல்லீர் - மெல்லுங்கள், மூளையை வாரி விழுங்கீர் - மூளையை அள்ளி விழுங்குங்கள்.

வி - ரை :—உண்ட வுணவு செரித்தற் பொருட்டு மெல் விரல்களை 'இஞ்சி' யாகக் கூறினர். பேய்கள் விரல்களாகிய இஞ்சியைப் பதார்த்தமாய்க் கொண்டன வெனினுமாம். குடல் சிறிது வெண்ணிறமாயிருத்தல் பற்றி, 'மென் குடர் வெள்ளை' என்றார். இது முதல் மூன்று தாழிசைகள் பேய்கள் உண்ணத் தொடங்குதலை யுணர்த்தும். பா - பே:—* மெல்விர லஞ்சி. (௧0எ)

இதுவுமது

ருஎகூ. அள்ளி யருகிருந் துண்ணீரே
அரிந்திடு தாமரை மொட்டென்னும்
உள்ளிக றித்துக்கொண் டுண்ணீரே
ஊதிவ ரன்றிக்கொண் டுண்ணீரே.

ப - ரை :—அருகு இருந்து - (ஒருவர்க் கொருவர்) அருகிலிருந்து, அள்ளி உண்ணீர் - (கூழை) அள்ளிப் புசிப்பீராக, அரிந்திடு - (துண்டு துண்டாக) அரிந்த, தாமரை மொட்டு என்னும் - தாமரை அரும்பாகிய, உள்ளி கறித்து கொண்டு - வெங்காயத்தைக் கடித்துக்கொண்டு, உண் ணீர் - (கூழை) உண்ணுங்கள், ஊதி - (சூடு தணியும்படி வாயால்) ஊதி, வரன்றி கொண்டு - வாரிக்கொண்டு, உண்ணீர் - உண்ணுங்கள்.

வி - ரை :—இதில் தாமரை மொட்டையும் பேய்கள் தாம் பருதுங் கூழ்க்குப் பதார்த்தமாய்க் கொண்டமை காண்க. (௧0அ)

இதுவுமது

ருஅ0. 'தமக்கொரு வாயொடு வாய்மூன்றுந்
தாமினி தாப்படைத் துக்கொண்டு
நமக்கொரு வாய்தந்த நான்முகனார்
நாணும் படிகளித் துண்ணீரே'.

ப - ரை :—தாம் தமக்கு - பிரமதேவர் தமக்காக, ஒரு வாயொடு - (நம்மைப்போல்) ஒரு வாயோடு, மூன்று வாயும் - (மேலும்) மூன்று வாய்களையும், இனிது ஆ - நன்றாக, படைத்துக் கொண்டு - உண்டாக்கிக் கொண்டு, நமக்கு - (பேய்களாகிய) நமக்கு, ஒரு வாய் தந்த - ஒரே வாயைப் படைத்த, நான்முகனார் - (அந்த) பிரமதேவர், நாணும்படி -

வெட்க மடையும்படி, களித்து உண்ணீர் - சந்தோஷமாய்க் (கூழை) உண்ணுங்கள்.

வி - ரை :—தமக்கு நான்கு வாய்களைப் படைத்துக்கொண்டு நமக்கு ஒரே வாயைப் படைத்த பிரமதேவர் மிகவும் வஞ்சகரெனவும், அவரைப்போல் நான்கு வாய்கள் நமக்கு இருப்பின், நாம் இக் கூழை இன்னும் அதிகமாய்ப் பருகலாமெனவுங் கருதி, 'தமக்கொரு......நான்முகனுர்' எனப் பேய்கள் கூறின வென்க. கிடைத்தற்கரிய அமுதினுமினிய இக்கூழை ஒரே வாயைப் படைத்த நாம் உண்ணும் பேறு பெற, மிகவும் வஞ்சகராகிய பிரமதேவர் நான்கு வாய்களைப் பெற்றும், இதனை யுண்ணும் பேறு பெற்றில ரென்பது கருதி அவர், 'நாணும்படி யுண்ணீர்' எனப் பேய்கள் களிப்பின் மிகுதியால் மொழிந்தமை யுணர்க. தாம்—என்றது இங்கே பிரமதேவரை யுணர்த்தினது; அசைச்சொல் எனினுமாம். (க0க)

இதுவுமது

௫அக. ஓடி யுடல்வியர்த் துண்ணீரே
உந்தி பறந்திளைத் துண்ணீரே
ஆடி யசைந்தசைந் துண்ணீரே
$ அற்ற தறவறிந் துண்ணீரே.

ப - ரை :—உடல் வியர்த்து - உடலில் வேர்வை யுண்டாக, ஓடி உண்ணீர் - (களிப்பால்) ஓடி (கூழை) உண்பீராக, இளைத்து - (பட்டினியால் உடல்) இளைத்தலால், உந்தி பறந்து உண்ணீர் - கூட்டங்கூடி விளையாடி உண்ணுங்கள், அசைந்து அசைந்து ஆடி - நன்ருய் உலாவி விளையாடி, உண்ணீர்——, அற அற்றது - (முதலில் உண்ட வுணவு) முற்றும் செரித்ததை, அறிந்து உண்ணீர்——.

வி - ரை :—உந்தி பறத்தல்:—மகளிர் கூட்டங் கூடி விளையாடும் ஒரு வகை விளையாட்டு; இங்கே பேய்களின் விளையாட்டை யுணர்த்தினது. வியர்த்து—எச்சத் திரிபு. பா - பே :—$ அற்ற மறிந்திருந்(து). (கக0)

வாயைக் கழுவல்

௫அஉ. கொதித்த கரியின் கும்பத்துக்
குளிர்ந்த தண்ணீர் தனைமொண்டு
பொதுத்த தொளையாற் புகமடுத்துப்
புசித்த வாயைப் பூசீரே.

ப - ரை :—கொதித்த - (போரில்) கோபங் கொண்ட, கரியின் கும்பத்து - யானைகளின் தலைகளில், பொதுத்த தொளையால் - (கணைகள்) தொளைத்த தொளைகளில், குளிர்ந்த தண்ணீர் தனை——, புக மொண்டு மடுத்து - (நன்ருய்) புகும்படி மொண்டு நிரப்பி, புசித்த வாயை - (கூழ்) உண்ட வாயை, பூசீர் - கழுவுங்கள்.

வி - ரை :—கணைகளால் தொளைப்பட்ட யானைத் தலைகளில் தண்ணீர் மொண்டு வாயைக் கழுவுங்கள் என்பதாம். தண்ணீர் தனை—தன் சாரியை; தொளையால்—உருபு மயக்கம். (ககக)

அடைக்கா யருந்தல்

௫அ௩. பண்ணு மிவுளிச் செவிச்சுருளும்
பரட்டிற் பிளவும் படுகலிங்கர்
கண்ணின் மணியிற் சுண்ணம்புங்
கலந்து மடித்துத் தின்னீரே.

ப - ரை :—பண்ணும் - அலங்கரிக்கப்பட்ட, இவுளி - (போரில் இறந்த) குதிரைகளின், செவி சுருளும் - காதுகளாகிய வெற்றிலையையும், பரட்டின் பிளவும் - (அவைகளின்) கால் பரடாகிய பாக்குத் துண்டுகளையும், படு கலிங்கர் - (போரில் இறந்து) பட்ட கலிங்க வீரர்களின், கண்ணில் - கண்களிலுள்ள, மணியின் சுண்ணும்பும் - (வெண்) மணியாகிய சுண்ணும்பையும், கலந்து - ஒன்று சேர்த்து, மடித்து தின்னீர் ——.

வி - ரை :—போரில் இறந்துபட்ட குதிரைகளின் காதுகளாகிய வெற்றிலையையும், அவைகளின் பரடாகிய பாக்குப் பிளவையும், கலிங்க வீரர்களின் கண்களிலுள்ள வெண் மணியாகிய சுண்ணும்பையும் கலந்து தின்னுங்கள் என்பதாம். (ககஉ)

பேய்களுக்குப் புரையேறல்

ருஅச. பெருக்கத் தின்றீர் தாம்பூலம்
பிழைக்கச் செய்தீர் பிழைப்பீரே
செருக்கும் பேய்காள் பூதத்தின்
சிரத்தின் மயிரை மோவீரே.

ப - ரை :—செருக்கும் பேய்காள் - (உணவையுண்டு) களிக்கும் பேய்களே, தாம்பூலம் பெருக்க தின்றீர் - வெற்றிலையும் பாக்கும் மிகுதியாய்த் தின்று, பிழைக்க செய்தீர் - (புரையேறும்) தவறு உண்டாகும்படி செய்து கொண்டீர்கள், பூதத்தின் சிரத்தின் மயிரை - பூதத்தின் தலையிலுள்ள மயிரை, மோவீர் - மோந்து பாருங்கள், பிழைப்பீர் - (அதனுல் நீங்கள்) பிழைப்பீர்கள்.

வி - ரை :—'பெருக்கத் தின்றீர்' என்றதற்கு உணவை மிகுதியாய்த் தின்றீர் எனவும், 'பிழைப்பீர்' என்றதற்குப் பிழைக்க விரும்பும் பேய்களே எனவும் பொருள் கூறினு மமையும். பேய்கள் பூதத்தின் தலைமயிரை மோந்தால் அவைகளுக்குப் புரையேறின துன்பந் தொலையுமென இதனுல் தெரிகிறது. தின்றீர்—முற்றெச்சம். (ககங)

கூழுண்டபின், களிப்பின் மிகுதியால் கூத்தாடல்

ருஅரு. என்றுக ளித்துக் ‡ குமண்டையிட்டே
ஏப்ப மிட்டுப் பருத்துநின்ற
குன்றுகு னிப்பன போற் * களத்துக்
கும்பிட் டேநட மிட்டனவே.

ப - ரை :—என்று - (பூதத்தின் தலைமயிரை மோவீர்) என்று சொல்லி, களித்து - (பேய்கள்) சந்தோஷமடைந்து, குமண்டை இட்டு - (உணவை மிகுதியாய் உண்டு) தெவிட்டி, ஏப்பம் இட்டு——, பருத்து நின்ற குன்று - பெருத்து நின்ற மலைகள், குனிப்பன போல் - கூத்தாடுதலைப் போல், களத்து - போர்க்களத்தில், கும்பிட்டு - (தேவியை) வணங்கி, நடம் இட்டன - கூத்தாடின.

வி - ரை :—'என்று உகளித்து' எனப் பிரித்து, என்று ஓடித் திரிந்து அல்லது (களிப்பால்) குதித்து எனப் பொருள் கொள்ளினும் அமையும். 'குமண்டையிட்டு, ஏப்பமிட்டு' என்றதனுல் பேய்கள் விலாப்புடைக்க வுண்டு களித்தமை விளங்கும். 'இட்டகு மண்டைய பேய்பிண மிக்கன வென்றுகளித்தனவே' [வில்லிபா-கரு-ம் போர்-ருக] என வருமாறு காண்க. குன்று குனிப்பன போல் நடமிட்டன வென்க. இதில் இல்பொருள் உவமையணி

யுள்ளமை காண்க. இது முதல் ருஅகூ-ம், தாழிசையளவுமுள்ள ஐந்து தாழிசைகள் பேய்கள் கூழுண்டதனலாகிய களிப்பின் மிகுதியால் கூத்தாடத் தொடங்கி தலை யுணர்த்தும். பா - பே :—‡ குணலையிட்டே, * களித்து. (கக௪)

இதுவுமது

ருஅகூ. வாசிகி டக்கக் கலிங்கரோட
மானத னேவிய சேனைவீரர்
† தூசியெ ழுந்தமை பாடிநின்று
தூசியு மிட்டுநின் றாடினவே.

ப - ரை :—வாசி - (தாமேறி வந்த) குதிரைகள், கிடக்க - (போர்க்களத்தில் இறந்து) கிடக்கவும், கலிங்கர் ஓட - கலிங்க வீரர்கள் தோற்றோடவும், மானதன் ஏவிய - முதற் குலோத்துங்கனால் ஏவப்பட்ட, சேனை வீரர் - படை வீரர்களின், தூசி எழுந்தமை - கொடிப்படையெழுந்தமையை, பாடி நின்று - (பேய்கள்) பாடி நின்று, தூசியும் இட்டு நின்று - (தங்கள்) ஆடையையும் எறிந்து நின்று, ஆடின - கூத்தாடின.

வி - ரை :—தூசி யென்றது படை வதுப்பின் முன்னணியை யென்க. களிப்பின் மிகுதியால் ஆடையை மேலே வீசி யெறிந்து விளையாடல் பண்டை வழக்கம் 'தேவர், எல்லாருந் தூசு நீக்கி யேறிட வார்த்த போது' [கம்பரா-இந்திரசித்து வதை-ருகூ] என்றார் கம்பரும் மானதன்-[தா-௩௧-௧அ]. இதில் தூசி என்னுஞ் சொல் வெவ்வேறு பொருளில் வந்தமையால், இது சொற்பின் வருநிலை யணியாம். பா - பே :—† தூசி யெடுத்தமை. (ககரு)

இதுவுமது

ருஅஎ. பொருகை தவிர்ந்து கலிங்கரோடப்
போக புரந்தரன் விட்டதண்டின்
இருகையும் வென்றதொர் வென்றிபாடி
இருகையும் வீசிநின் றாடினவே.

ப - ரை :—போகம் - (பலவகை) செல்வங்களை யனுபவிக்கும், புரந்தரன் - தேவேந்திரனைப் போன்றவனாகிய முதற் குலோத்துங்கன், விட்ட தண்டின் - ஏவிய சேனையால், கலிங்கர் - கலிங்க வீரர்கள், பொருகை தவிர்ந்து - போர் புரிதலை யொழிந்து, இரு கையும் - (அவர்தம்) இரு வகைப் படை வகுப்புக்களும், ஓட - ஓடும்படி, வென்றது - வெற்றி பெற்றதாகிய, ஓர் வென்றி பாடி - (முதற் குலோத்துங்கனது) ஒப்பற்ற வெற்றியைப் புகழ்ந்து பாடி, இரு கையும் வீசி - (தங்கள்) இரண்டு கைகளையும் வீசிக்கொண்டு, நின்று - (போர்க்களத்தை விட்டு அகலாமல்) நின்று, ஆடின - (பேய்கள்) கூத்தாடின.

வி - ரை :—'இரு கை' என்றது முன்னணி பின்னணியை; வலப்புறமிடப்புறமாய் எதிர்த்து வந்த சேனைகளை யெனினுமாம். பொருகை— தொழிற்பெயர். (ககசு)

களிப்பின் மிகுதியால் விளையாடல்

ருஅஅ. வழுதியர் வரைமுழை நுழைவடி விதுவென
மதகரி வயிறுகள் புகநுழை வனசில
எழுதிய சிலையவர் * செறிகடல் விழுமவை
இதுவென வழிகுரு தியின்விழு வனசில.

ப - ரை :—வழுதியர் - (முதற் குலோத்துங்கனுடன் போர் புரிந்து தோல்வி யடைந்த) பாண்டியர்கள், வரை முழை - மலைகளிலுள்ள குகை

களில், நுழை வடிவு - (விரைவாய்) நுழைந்த வடிவம், இது என - இது போன்றதாம் என்று (கண்டோர்) சொல்லும்படி, சில - சில பேய்கள், மதம் கரி வயிறுகள் - மதத்தைப் பொழியும் யானைகளின் வயிறுகளில், புக நுழைவன - புகும்படி நுழைந்து செல்வனவாம், எழுதிய - (துகிலில்) எழுதப்பட்ட, சிலையவர் - விற்கொடியையுடைய சேரர்கள், செறி கடல் - (நீர்) நிறைந்த கடலில், விழும் அவை - விழுகின்ற அந்தத் தொழில்கள், இது என - இவ்வாறே யாகும் என்று (கண்டோர்) சொல்லும்படி, அழி குருதியின் - மிகுதியாகிய இரத்த வெள்ளத்தில், சில் விழுவன - சில பேய்கள் விழுவனவாம்.

வி - ரை:—பாண்டியர் மலைக் குகைகளில் நுழைவது போல் சில பேய்கள் யானைகளின் வயிறுகளில் புகுந்தும், சேரர் கடலில் விழுவது போல் சில பேய்கள் இரத்த வெள்ளத்தில் வீழ்ந்தும் விளையாடின வென்பதாம். மலை யானைக்கும், குகை யானையின் வயிற்றிற்கும், கடல் குருதி வெள்ளத்திற்கும், சேரபாண்டியர் பேய்களுக்கும் உவமை. இச்செய்யுள் உவமையணியாம். அவை இது—பன்மை ஒருமை மயக்கம். பா - பே:—* எறிகடல். (கக௭)

இதுவுமது

௫௮௯. உருவிய சுரிகையொ டுயர்கணை விடுபடை
உருள்வடி விதுவென வுருள்வன சிலசில
வெருவிய † வடுநர்த முடைவடி விதுவென
விரிதலை யதனொடு மறிவன சிலசில.

ப - ரை:—உருவிய - (உறையிலிருந்து) கழித்த, சுரிகையொடு - உடை வாளும், உயர் கணை - சிறந்த அம்புகளும், விடு படை - (பகைவர் மேல்) விடும் (மற்ற) ஆயுதங்களும், உருள் வடிவு - (நிலத்தில்) புரளும் தோற்றம், இது என - இதுவே யாமென்று, சில சில உருள்வன - சில சில பேய்கள் (நிலத்தில் விழுந்து) புரள்வனவாம், வெருவிய - (போரில்) பயந்த, அடுநர் தம் - (கலிங்க) வீரர்களின், உடை வடிவு - தோற்றோடிய வடிவம், இது என - இதுவே யாமென்று, விரி தலை அதனொடு - (மயிர்கள்) விரிந்த தலையோடு, சில சில - சில சில பேய்கள், மறிவன - (விளையாட்டின் களிப்பால்) திரும்பி யோடுவனவாம்.

வி - ரை:—பலவகை ஆயுதங்கள் நிலத்தில் உருள்வதைப் போல் சில பேய்கள் புரண்டன; போருக்குப் பயந்த கலிங்க வீரர்கள் தலைவிரி கோலமாய் ஓடுவதைப் போல் சில பேய்கள் ஓடலாயின வென்க. அவை அவ்வாறு புரிந்தமை கூழ் சமைத்துண்ட களிப்பின் மிகுதியாலாம். அடுநர் தம்—இதில் - ந் பெயரிடை நிலை; தம்—சாரியை; (பகைவரை) கொல்வோர் என்பதாம். உடை வடிவு—வினைத்தொகை. இதுவும் உவமையணியாம். ௫௮௫-ம், தாழிசை முதல் இதுகாறும் பேய்கள் கூழுண்டபின், களிப்பின் மிகுதியால் கூத்தாடினமை கூறப்பட்டது. பா - பே:—† விடவர சுடை. (கக௮)

பேய்கள் முதற் குலோத்துங்கனை வாழ்த்துதல்

௫௯௦. உபய மெனும்பிறப் பாளரேத்த
உரைத்த கலிங்கர் தமைவென்ற
அபய னருளினைப் பாடினவே
அணிசெறி தோளினை வாழ்த்தினவே.

ப - ரை :—உபயம் எனும் பிறப்பாளர் - இரு பிறப்பினர் என்னும் பிராமணர், ஏத்த - புகழும்படி, உரைத்த கலிங்கர் தமை வென்ற - (சிறப்பித்து) சொல்லப்பட்ட கலிங்க வீரர்களை வெற்றி கொண்ட, அபயன் அருளினை - (முதற் குலோத்துங்க) சோழனுடைய கருணையின் திறத்தை, பாடின - (சில பேய்கள்) பாடின, அணி செறி தோளினை - ஆபரணங்கள் நிறைந்த (அவன்) தோள் வன்மையை, வாழ்த்தின——.

வி - ரை :—'உபயமெனும் பிறப்பாளர்' இதனைத் தாழிசை உ௬௨-ல், காண்க. அணி—அழகெனினுமாம்; கலிங்க வெற்றிக்குக் காரணம் கருணாகர னிருப்பினும், தலைமை பற்றி அது முதற் குலோத்துங்கன்மேலேற்றிக் கூறப் பட்டது. இது முதல் ஐந்து தாழிசைகள் பேய்கள் முதல் குலோத்துங்கனை வாழ்த்துதலை யுணர்த்தும். (௧௧௯)

**இதுவுமது**

௫௧௯. திசையிற் பலநர பாலர்முன்னே
$ தெரிந்துரைக் குஞ்சிசு பாலன்வைத
வசையில் வயப்புகழ் வாழ்த்தினவே
மனுகுல தீபனை வாழ்த்தினவே.

ப - ரை :—திசையின் - (எட்டு) திக்குகளிலுமுள்ள நாடுகளை யாளும், பல நர பாலர் முன் - பல அரசர்களுக்கு எதிரில், தெரிந்து உரைக்கும் - (பொய்க் குற்றங்களை) தெரிந்து சொல்லும், சிசுபாலன் வைத - சிசு பாலன் என்பவன் பழித்த, வசை இல் - குற்றமில்லாத, வயம் புகழ் - வெற்றியையுடைய புகழை, வாழ்த்தின——, மனு குலம் தீபனை - மனுவின் குலத்தை விளங்கச் செய்பவனாகிய முதற் குலோத்துங்கனை, வாழ்த்தின——.

வி - ரை :—கண்ணபிரானே முதற் குலோத்துங்கன் என்பது கருதி 'சிசுபாலன் புகழ்' என்றார். சிசுபாலன் கண்ணபிரானை வைதமையை 'பூபால ரவையத்து முற்பூசை பெறுவார்பு றங்கானில் வாழ், கோபாலரோவென் றுருத்தங் கதிர்த்துக்கொ தித்தோதினான்' [வில்லிபா - இராசசூ - ௧௧௪] எனவும், 'நாட்டவோர் குலமு மின்றி நண்ணிய குணமு மின்றி, வேட்டவா றுழுகு கின்றான்' [ஆரியப்-பாகவ-சிசுபாலனைக் கொன்ற-௩௬] எனவும் கூறியவற்றா லறிக. அவன் வைத வசைவு கண்ணபிரானுக்குப் புகழையே பயந்த தென்பார், 'வைத வசையில் வயப்புகழ்' என்றார். குலதீபன்:—இதனை ௬௰ தாழிசையிற் காண்க. திசை —ஆகுபெயராய்த் திசைகளிலுள்ள நாடுகளை யுணர்த்தினது.

கண்ணபிரானைச் சிசுபாலன் வைத வரலாறு:—தருமர் இராசசூயம் என்னும் சிறந்த யாகம் ஒன்று செய்யத் தொடங்கினர். அந்த யாகத்தின் முடிவில், அவர் வியாச முனிவர் கட்டளையின்படி கண்ணபிரானுக்கு முதற் பூசை செலுத்த முயன்றார். அப்போது சிசுபாலன் கடுஞ்சின மெய்திக் கண்ணபிரானை நோக்கி, 'கிருஷ்ணா, பல மன்னர்கள் நிறைந்த இச்சபையில் இடையனாகிய நீ முதற் பூசை பெறுவது தகுமோ?' எனப் பலவாறு இகழ்ந்து பேசினான். அதனால் கண்ணபிரான் வெகுண்டு தனது சக்கராயுதத்தால் அவன் தலையை யறுத்துத் தள்ளினன் என்பதாம். பா - பே :—$ தெழித்துரப்பும். (௧௨0)

**இதுவுமது**

௫௨௦. பொன்னித் துறைவனை வாழ்த்தினவே
பொருநைக் * கரையனை வாழ்த்தினவே

கன்[redacted]ிக் கொழுநனை வாழ்த்தினவே
கங்கை மணாளனை வாழ்த்தினவே.

ப - ரை :—பொன்னி துறைவனை - காவிரிநதித் துறையையுடையவனாகிய முதற் குலோத்துங்கனை, வாழ்த்தின——, பொருநை கரையனை - தாமிரபரணி நதியின் கரையை யுடையவனாகிய முதற் குலோத்துங்கனை, வாழ்த்தின——, கன்னி கொழுநனை - கன்னியா குமரி நதிக்குக் கணவனாகிய முதற் குலோத்துங்கனை, வாழ்த்தின——, கங்கை மணாளனை - கங்காநதிக்குக் கணவனாகிய முதற் குலோத்துங்கனை, வாழ்த்தின——.

வி - ரை :—'கன்னிக் கொழுநன், கங்கை மணாளன்' என்றதனால், முதற் குலோத்துங்கன் தெற்கே கன்னியா குமரி முதல் வடக்கே கங்கை நதி யளவும் அரசாட்சி புரிந்தான் என்பது விளங்கும். நாட்டையாளும் அரசர்களை அந்நாட்டிலுள்ள நதிகளுக்குக் கணவராகக் கூறுதலியல்பாம். 'நின் கணவன், திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன் வாழி காவேரி' [சிலப்-எ-உடு] என்றமை காண்க. பா - பே :—* கணவனை. (கஉக)

இதுவுமது

ருகூங. ஆழிக ளேழுமொ ராழியின்கீழ்
அடிப்பட வந்த வகலிடத்தை
ஊழிதொ றூழியுங் $ காத்தளிக்கும்
உலகுய்ய வந்தானை வாழ்த்தினவே.

ப - ரை :—ஏழு ஆழிகளும் - ஏழு கடல்களும், ஓர் ஆழியின் கீழ் - ஒப்பற்ற (தனது) கட்டளைச் சக்கரத்தின் கீழ், அடிப்பட - அடங்கும்படி, வந்த அகல் இடத்தை - (தனக்கு) கிடைத்த அகன்ற உலகத்தை, ஊழி தொறு ஊழியும் - பல யுகங்கள் தோறும், காத்து - காப்பாற்றி, அளிக்கும் - அருள் செய்யப்படும், உலகு - உலகத்திலுள்ள உயிர்களெல்லாம், உய்ய - கடைத்தேறும்படி, வந்தானை - (இவ்வுலகத்தில்) வந்து பிறந்தவனாகிய முதற் குலோத்துங்கனை, வாழ்த்தின——.

வி - ரை :—உலகமுற்றும் ஏழ கடல்களும் அவனுணைக் சூட்பட்டிருந்தன வென்பதாம். ஏழ கடல்களை ௬௬ரு-ம், தாழிசையிற் காண்க. 'ஊழிதொ றூழி' என்றது பன்னெடுங் காலமாம். உலகுய்ய வந்தான்-இது முதற் குலோத்துங்கன் பெயர்களுள் ஒன்றும்; உலகத்திலுள்ள உயிர்கள் கடைத்தேறும்படி தோன்றினவ னென்பதாம். உலகு-இடவாகு பெயர். பா-பே :—$ காக்கவல்ல. (கஉஉ)

கரிகாலனேடு ஒப்பிட்டு வாழ்த்தினமை

ருகூச. பூப்பது மத்தன் படைத்தமைத்த
புவியை யிரண்டா வதும்படைத்துக்
காப்பது மென்கட னென்றுகாத்த
† கரிகாலச் சோழனை வாழ்த்தினவே.

ப - ரை :—பூ பதுமத்தன் - அழகிய செந்தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமதேவன், படைத்து - (பூமியை) படைத்து, அமைத்த - (உயிர்களை) அமைத்த, புவியை - (இந்த) உலகத்தை, இரண்டாவதும் படைத்து - இரண்டாம் முறையும் படைத்து, காப்பதும் - (உயிர்களை) காப்பாற்றுவதும், என் கடன் என்று - எனது கடமையாம் என்று

நினைத்து, காத்த - (உயிர்களை) காப்பாற்றிய, கரிகாலச் சோழனை - கரிகாலச்சோழனாகிய முதற் குலோத்துங்கனை, வாழ்த்தின——.

வி - ரை :—புவியை யிரண்டாவதும் படைத்தலாவது — மக்கள் இழந்த ஒழுக்கத்தை மீண்டும் உயிர்ப்பித்தல்; இதனை உரு அ-ம், தாழிசை முதல் உஎரு-ம், தாழிசை யளவும் காண்க. கரிகாலச் சோழன் பெருமை யுற்றது போல், [தா-கஎஅ; ககூகூ முதல் ககூகூ வரை] இவனும் பெரும்புகழ் படைத்தமை கருதி அவன் பெயரை இவன் மேலேற்றிக் கூறினர்.

பா - பே :—† கரிகால் வளவனை. (கஉ௩)

வாழ்த்துக் கூறல்

௫கூ௫. யாவ ருங்களிசி றக்க வே * தருமம்
எங்கு மென்றுமுள தாகவே
§ தேவ ரின்னருட ழைக்க வேமுனிவர்
செய்த வப்பயன்வி ளைக்கவே.

ப - ரை :—யாவரும் களி சிறக்க - எல்லோரும் களிப்பால் சிறப்படைக, தருமம் - தருமமானது, எங்கும் - எல்லாவிடங்களிலும், என்றும் உளது ஆக - எப்போதும் நிலைபெற்றிருப்பதாக, தேவர் - தேவர்களின், இன் அருள் தழைக்க - இனிய அருள் பெருகுவதாக, முனிவர் - முனிவர்கள், செய் தவம் பயன் - செய்யும் தவத்தின் பயன், விளைக்க - (உயிர்களுக்கு நன்மை) தருவதாக.

வி - ரை :—யாவரும், எங்கும், என்றும்—உம்மைகள் முற்றுப்பொருளன.
பா - பே :—* எழிலி, § தேவ ரின்னருள்சி றக்கவே யுயிர்கள். (கஉ௪)

இதுவுமது

௫கூகூ. வேத நன்னெறிப ரக்க வேயபயன்
வென்ற வெங்கலிக ரக்கவே
‡ பூத லம்புகழ்ப ரக்க வேபுவிநி
லைக்க வேபுயல்சு ரக்கவே.

ப - ரை :—வேதம் நல் நெறி-வேதங்களில் கூறிய நல்லொழுக்கங்கள், பரக்க - (எங்கும்) பரவுக, அபயன் - (முதற் குலோத்துங்க) சோழன், வென்ற வெம் கலி - வென்ற கொடிய துன்பங்கள், கரக்க - மறைவனவாக, பூதலம் - உலகத்தில், புகழ் பரக்க - புகழ் பரவுவதாக, புவி நிலைக்க - உலகத்திலுள்ள உயிர்கள் நிலைபெறுக, புயல் சுரக்க - (பருவ) மழை (தவறாமல்) பொழிவதாக.

வி - ரை :—வெங்கலி என்றது பசி, பிணி, பகைகளை; புவி—இடவாகு பெயர். பரக்க, கரக்க, சுரக்க—இவை வியங்கோள் வினைமுற்றுக்கள்.

பா - பே :—‡ போத ரும்புகழ். (கஉ௫)

களம் பாடியது முற்றிற்று.



# இந்நூலிற் கண்ட அரும்பத முதலியவற்றின்

# அகராதி

## இந்நூலின் உரையிற் கண்ட தேவர், அரசர் பெயர் முதலியனவும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

[எண் - தாழிசை யெண்]

# தாழிசை முதற்குறிப் பகராதி

[எண்—தாழிசை யெண்]

# தமிழைப் பிழையின்றி யெழுதும் முறை

## (How to write correct Tamil)

### சில பத்திரிகைகளின் கருத்துக்கள்.

### தமிழ் நாடு—12-10-'36.

இலக்கண முழுதும் நன்னூல் மூலம் கற்றறிந்து கொள்வதால் உண்டாகும் தமிழறிவு இச் சிறு நூல் ஒருவர் படித்தறிந்து கொள்வதாலேயே ஏற்படும் என்பதும், பிழையின்றி எதையும் எழுதவும் கூடுமென்பதே நமது அபிப்பிராயமாகும். இது உயர்தரக் கல்விச்சாலை மாணவர்க்கே யன்றி கல்லூரி மாணவர்கட்கும் தமிழ் கற்க விரும்பும் மற்றையோர்க்கும் ஓர் தோன்றாத் துணை யாகு மென்பதில் ஐயமில்லை. * *

---

### விடுதலை—31-10-'36.

இது மாணவர்களுக்கும் ஏனையோருக்கும் உதவியளிக்கக்கூடியது. * * * பிழையறத் தமிழ் எழுத விரும்புவோர்க்கு இது ஒரு உற்ற துணைவனாயிருக்கு மென்பதற்கு ஐயமில்லை.

---

### ஜெயபாரதி—9-11-'36.

* * * * படித்த தமிழர்களாகிய நாம் கூடச் சாதாரணமாகத் தமிழ் எழுதும்போது அடிக்கடி செய்யக்கூடிய பல தவறுகளை எடுத்துக் காட்டி, அவைகளுக்குத் திருத்தங்களை உடனுக்குடனே வெளியிட்டிருக்கிறார் ஆசிரியர். கீழ்க்கண்ட சில உதாரணங்களைக் கொண்டு, "ஒரு பானைச் சோற்றுக்கும்" பதம் பார்த்துக் கொள்ளலாம்.

'சிலவு, எண்ணை, வெண்ணை' - இவைகள் தவறு. இவைகளைச் செலவு, எண்ணெய், வெண்ணெய் என்றெழுதுக. * *

'ஒருவள்' என்பது பிழையாம். இதனை ஒருத்தி என வரைக.

'பேரில்' என்றெழுதுவது பிழையாம். இதனை மேல் எனத் திருத்தி யெழுதுக. * * * 'ஒரு காட்டில் ஒரு சிங்கமும் நரியும் சிநேகமாய் இருந்தது' என்பது தவறு. இதனைச் 'சிங்கமும் நரியும் சிநேகமாய் இருந்தன' எனப் பன்மை வினைமுற்றால் முடிக்க. * * * நமது நிருபர்கள், பத்திரிகை உப யாசிரியர்கள், மாணவர்கள், தமிழ் எழுத்தாளர்கள் முதலியவர்கள் கையில் கட்டாயம் இருக்கவேண்டிய புத்தகங்களில் ஒன்று என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமேயில்லை.

## தினகரன், கொழும்பு, இலங்கை—20-11-'37.

தமிழ் மாணவர்களுக்குப் பல ஆண்டுகளாகக் கல்வி கற்பித்து வந்த அனுபவத்தினால் இந் நூலை இதன் ஆசிரியர் எழுதியிருக்கிறார். * * * மேலும் பிழை உருவங்களை முன்னே காட்டி அவைகளின் திருத்தமாகிய உருவங்களைப் பல இலக்கிய மேற்கோள்களுடன் நன்கு விளக்கி யிருக்கிறார். * * இக்காலத்தில் சகலரும் தமிழில் நாவல்களும் சிறு கதைகளும் எழுதத் தலைப்பட்டு விட்டனர். அவர்கள் இந் நூலைப் படிப்பதால் நல்ல பல னடையலாம்.

---

## வீரகேசரி, கொழும்பு, இலங்கை—25-11-'37.

* * * * இந் நூலில் எழுத்துப் பிழை, சொற் பிழை, சந்திப் பிழை, வாக்கியப் பிழை, ரகர றகர பேதம், நிறுத்துக் குறிகள், வல்லெழுத்துக்கள் மிகு மிடங்கள், வல்லெழுத்துக்கள் மிகா விடங்கள், உரை நடை எழுதும் முறை முதலிய பல விஷயங்கள் எளிய நடையில் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றன. * * * பிழையறத் தமிழ் எழுத விரும்புவோருக்கு இப்புத்தகம் உற்ற துணை யாக இருக்கு மென்பதில் சந்தேகமில்லை. தமிழ் மாணவர்களுக்கும் தமிழ்க் கட்டுரை வரைவோருக்கும் ஏனையோருக்கும் இந்நூல் பெரிதும் பயன்படும்.

---

## செந்தமிழ்ச் செல்வி—(தாது-புரட்டாசி; ௧௦௪-ம் பக்கம்)

* * * * நம் தமிழ் மக்களில் பெரும்பாலார்க்குத் தமிழைப் பிழையின்றி யெழுதத் தெரியாது என்பது யாவரு மறிந்ததே. * * * எங்கே பார்த்தாலும் பிழைகளைத்தான் பார்க்கலாம். இவ்வாறு ஆங்கிலம் எழுதுகிறவர்கள் பிழைகள் போடுவதில்லை. மாணவர்கள் நூல்களைப் படிக்கும்போது சொற்களிற் கருத்தைச் செலுத்துவதில்லை. அதனால், தாம் படித்த சொற்களை எழுதுகிறபோது பிழையின்றி எழுதத் தெரிகின்றார்களில்லை. தமிழ்ச் சொற்களில் றகர ரகர வேறுபாடுகளாலும் லகர ளகர வேறுபாடுகளாலும் பொருளே மாறுபட்டுவிடும். கூடியவரை பிழையில்லாமல் எழுதுவதற்கு ஓராசிரியனும் இந்நூல் உதவும்..

---

நூல்கள் வேண்டுவோர் அடியிற் கண்ட முகவரிக்கு எழுதவும் :—

ஆ. க. பார்த்தசாரதி நாயுடு, M. A.,
"பரணி இல்லம்"
60-A, ஸ்ட்ராஹான்ஸ் ரோடு,
சென்னை - 12,
[தமிழ் நாடு.]

# How to write Correct Tamil

## OPINIONS

MADRAS CHRISTIAN COLLEGE,
Madras, 31st August, 1936.

This little book is an attempt to remove many of tl grammatical errors and blunders that pupils and students generally commit in writing Tamil Prose, and to throw some-light upon Tamil Metrical Compositions and rhetoric, a knowledge of which is necessary not only for the purposes of examination but also for the appreciation of Tamil Poetry. The author who is an earnest and experienced teacher has succeeded in his attempt very well. **The book is sure to be quite useful both to the teachers and the taught. And it has my strong commendation.**

(Sd.) S. D. SARGUNAR, B.A.,
Lecturer in Tamil and Ag. Superintendent
of Vernacular Studies.

---

THE HINDU

18—10—1936

This book strikes the golden mean between pedan grammar on the one hand, and dry-as-dust composition guid on the other. **The author has given practical exercis in Tamil Composition so that students may mast the rules by constantly learning correct forms.** Son times students may also deduce certain grammatical rule from the examples. Sandhi is dealt with at length and useful questions are appended at the end of the book. **The book i bound to be of great use to our High School students.**

K. V. R.